ஶ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

2082

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# பெரிய திருமொழி.

[இரண்டாம் ஸம்புடம்.]

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளால்

எல்லார் தமக்கும் இன்பம் பயக்குமாறு

எளிய நடையில் தெளிய எழுதப்பட்ட

"திவ்யார்த்த தீபிகை" என்னும் உரையுடன்,

சென்னை:

M. R. கோவிந்தஸாமி நாயுடுவால்,

மாடல் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு

வெளியிடப்பட்டது.

விபவஹு.

Registered Copy Right.

1929.

ஸ்ரீமான் உ. வே. (காஞ்சீபுரம்) பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமிகள் அருளிச்செய்த க்ரந்தங்களும் அவற்றின் விலையும்.

---

| | | | |
|---|---|---|---|
| திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி—விரிவுரை ... | 3 | 0 | 0 |
| திருப்பாவை விரிவுரை ... ... ... | 1 | 0 | 0 |
| ஷை காலிகோ பைண்ட் ... ... ... | 1 | 4 | 0 |
| நாச்சியார் திருமொழி விரிவுரை ... ... ... | 1 | 8 | 0 |
| ஷை காலிகோ பைண்ட் ... ... ... | 1 | 12 | 0 |
| பெருமாள் திருமொழி விரிவுரை ... ... ... | 1 | 4 | 0 |
| ஷை காலிகோ பைண்ட் ... ... ... | 1 | 8 | 0 |
| திருச்சந்த விருத்தம் விரிவுரை ... ... ... | 1 | 10 | 0 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு இவற்றின் விரிவுரை ... | 1 | 0 | 0 |
| ஷை ஷை காலிகோ பைண்ட் ... ... ... | 1 | 4 | 0 |
| பெரிய திருமொழி 1, 2, பத்துக்களின் விரிவுரை ... ... | 3 | 0 | 0 |
| முதல் திருவந்தாதி விரிவுரை ... ... .... | 1 | 8 | 0 |
| திருவாசிரியம் பெரிய திருவந்தாதி ... ... ... | 2 | 0 | 0 |
| திருவெழுகூற்றிருக்கையும் மடல்களும் ... ... ... | 2 | 4 | 0 |
| இராமானுச நூற்றந்தாதியின் விரிவுரை ... ... ... | 0 | 12 | 0 |
| ஸ்ரீவசநபூஷண ஸாரம் ... ... ... | 1 | 0 | 0 |
| கூரத்தாழ்வான் வைபவம் ... ... ... | 0 | 4 | 0 |
| சேஷாவதாரச் சிறப்பு ... ... ... | 0 | 2 | 0 |
| முகுந்தமாலையின் தெளிவுரை ... ... ... | 0 | 6 | 0 |
| ஆளவந்தார் ஸ்தோத்ரத்தின் தெளிவுரை ... ... .... | 0 | 12 | 0 |
| ஸ்தோத்ரவ்யாக்யான சோதநம் ... ... ... | 0 | 3 | 0 |
| நமஸ்காரதத்துவம் .. ... ... | 0 | 2 | 0 |
| ப்ரணவாதிகாரதத்துவம் ... ... ... | 0 | 4 | 0 |
| ஸுதர்சந சதகம் மிகத் தெளிவான தமிழுரை ... ... | 1 | 0 | 0 |
| உபந்யாஸரத்நமாலா (க்ரந்தலிபி) ஸம்ஸ்க்ருதபாஷை ... | 0 | 6 | 0 |
| ஸ்ரீவரதராஜஸ்தவம், ஸ்ரீஸ்தவம் விரிவுரை (தெலுங்கு லிபி) ... | 1 | 8 | 0 |
| அதிமாநுஷஸ்தவம் ஷை ஷை ... | 0 | 12 | 0 |
| திருப்பல்லாண்டு விரிவுரை ஷை ... | 0 | 4 | 0 |
| ஆசார்ய ஹ்ருதய மூலம் ஷை ... | 0 | 3 | 0 |
| ரஹஸ்யமூலம் (முமுக்ஷுப்படி முதலியவை 3.) ஷை ... | 0 | 6 | 0 |

[இன்னும் பல புத்தகங்களும் உள்ளன.]



ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருமங்கைமன்னன் திருவாய்மலர்ந்தருளிய

# பெரிய திருமொழி.

[பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய திவ்யார்த்த தீபிகையுடன் கூடியது.]

## மூன்றாம்பத்து—முதல் திருமொழி,

## இருந்தண்மாநிலம்.

அவதாரிகை:—இவ்வாழ்வார் வாடினேன்வாடி யென்று தொடங்கி முதல் திருமொழியிலே, தமக்குத் திருமந்திரம் லபித்தபடியைப்பேசி, அந்தத் திருமந்திரத்தின் அர்த்தத்தையும் கூடவே ஆராய்ச்சி செய்தருளித் திருமந்த்ரார்த்தத்துக்கு எல்லை நிலமான திவ்யதேசங்களிலே சென்று எம்பெருமானை ஸேவிக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றி, திருமந்திரத்தை வெளியிட்டருளின எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடமான ஸ்ரீபதரிகாச்ரமத்தைத்தேடி வடக்கே எழுந்தருளினவளவில் 'திருப்பிரிதி' என்னும் திவ்யதேசம் நேர்பட, இரண்டாந் திருமொழியால் அதனையனுபவித்து, அதன்பிறகு வதரியைவணங்கி அதற்குப்பிறகு ஸ்ரீபதரிகாச்ரமத்தில் ஸந்நிதிகொண்டெழுந்தருளியிருக்கிற ஸ்ரீமந் நாராயண மூர்த்தியைக் கைதொழுது, பிறகு ஸாளக்ராமம் நைமிசாரணியம் சிங்கவேள் குன்றம் திருவேங்கடம்என்னுந் திருப்பதிகளை யாத்திரையடைவே மங்களாசாஸனஞ்செய்து அவ்வளவோடு வடநாட்டுத் திருப்பதிகளின் அநுபவத்தைத் தலைக்கட்டி, அதன்பிறகு இரண்டாம்பத்தின் இரண்டாந்திருமொழி முதலாகத் தொண்டைநாட்டுத் திருப்பதிகள் சிலவற்றை அநுபவிக்கத்தொடங்கி, ஒன்பதாந் திருமொழியோடே அவ்வநுபவத்தைத் தலைக்கட்டி, அதன்பிறகு நடுநாட்டுத் திருப்பதிகளிரண்டையும் மங்களாசாஸநம் செய்யவிரும்பித் திருக்கோவலூர் மங்களாசாஸநத்தோடே கீழ்த்திருமொழி தலைக்கட்டப்பெற்றது. நடுநாட்டுத் திருப்பதிகளிரண்டனுள் மற்றொன்றாகிய திருவஹீந்திரபுரத்தை மங்களாசாஸநஞ் செய்வதாம் இத்திருமொழி. ... .... .... *

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

இருந்தண் மாநிலமேனமதாய் வளைமருப்பினி லகத்தொடுக்கி *
கருந்தண்மாகடல் கண்டுயின்றவனிடம் கமலநன் மலர்த்தேற
லருந்தி * இன்னிசை முரன்றெழுமளிகுலம் பொதுளியம்பொழிலூடே *
செருந்திநாண்மலர் சென்றணைந் துழிதரு திருவயிந்திரபுரமே. (க)

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| இரு தண் மா நிலம் | மிகக் குளிர்ந்த பெரிய பூமியை | நல் கமலம் மலர் தேறல் அருந்தி | நல்ல தாமரைப்பூவின் தேனைக் குடித்து |
| ஏனம் அது ஆய் | வராஹ ரூபியாய் | இன் இசை முரன்று எழும் | இனிய ராகங்களைப் பாடிக்கொண்டு கூத்தாடா நிற்கிற |
| வளை மருப்பு அகத்தினில் | வளைந்த கோரப் பற்களினிடத்தே | அளி குலம் பொதுளி | வண்டுகளின் கூட்டங்கள் நெருங்கி |
| ஒடுக்கி | அடக்கினவனும், | செருந்தி | சுரபுன்னை மரத்தினுடைய |
| கரு தண் மா கடல் கண் துயின்றவன் | கறுத்துக் குளிர்ந்து பெருத்தகடலில் யோக நித்திரை செய்தருள்பவனுமுள்ள எம்பெருமானுக்கு | நாள் மலர் | அப்போதலர்ந்த பூவிலே |
| இடம் | வாழுமிடம் (எது வென்றால்) ;— | சென்று அணைந்து | போய்ச் சேர்ந்து |
| அம் பொழிலூடே | அழகிய சோலைகளினுள்ளே | உழிதரு | ஸஞ்சரிக்கப் பெற்ற |
| | | திரு அயிந்திர புரம் | திருவஹீந்த்ரபுரமாம். |

* * *—முன்னடிகளில் திவ்யதேசத் தெம்பெருமானுடைய சிறப்பும், பின்னடிகளில் திவ்யதேசத்தின் சிறப்பும் சொல்லப்படுகின்றன: மேற்பாசுரங்கள்தோறும் இங்ஙனமே கண்டுகொள்க. மஹாவராஹமாகி மாநிலத்தை மீட்டுக் கொணர்ந்தவனும் திருப்பாற்கடலில் திருக்கண் வளர்ந்தருள்பவனுமான பெருமான் உறையுமிடம் திருவயிந்திரபுரம்; அஃது எப்படிப்பட்டதென்றால்; அங்கே பலபல சோலைகளுண்டு; அவற்றில் திரள்திரளாக வண்டுகள் புகுந்து மதுவைப்பருகிக் களித்து அக்களிப்புக்குப் போக்குவீடாக இனிய இசைகளைப் பாடிக்கொண்டு உலாவாநின்றன; உலாவும்போது செறியப்பூத்த சுரபுன்னை மரங்கள் தென்படவே அவற்றிலும் மதுவைப் பருகச்சென்று சேர்கின்றன; இப்படிப்பட்ட சோலைவாய்ப்பையுடையதாம் அத்திருப்பதி.

1. "உளங்கனிந்திருக்கு மடியவர் தங்களுள்ளத்துள் ஊறிய தேன்" என்னப்பட்ட பகவத்விஷயமாகிற மதுவை விரும்பியும், 2. "போந்ததென்னெஞ்சென்னும் பொன்வண்டு உனதடிப்போதிலொண் சீராந் தெளிதேனுண்டு அமர்ந்திடவேண்டி" என்கிறபடியே ஆசார்ய பாதாரவிந்த ஸேவையாகிற மதுவைப் பருகுதலையே விரதமாக வுடைத்தாகியும், ஊர்த்த்வகதிக்கு ஸாதநமாகிய இரண்டு சிறகுகள்போன்ற கர்மஜ்ஞாநங்களையுடையராகியும் ஸாரக்ராஹிகளாயுமிருக்கின்ற ஸ்ரீவைஷ்ணவர்களை வண்டாகச் சொல்லுவது வழக்கம். அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் பகவத்பாகவத போக்யதைகளை அநுபவித்த ஆநந்தத்திற்குப் போக்குவீடாக 3. "பண்கள் தலைக்கொள்ளப்பாடி" என்கிறபடியே நாரதமுனிவர் திருப்பாணாழ்வார் தம்பிரான்மார் முதலானோரைப்

1. பெரிய திருமொழி 4—3—9. 2. இராமாநுச நூற்றந்தாதி 99.
3. திருவாய்மொழி 3—5—2.

போலே இசைபாடுவ துண்டாகையாலே "இன்னிசை முரன்றேழும்" என்றது பகவத்பாகவத குணாநுபவத்துக்கு வாய்த்த இடங்களே 'பொழில்' எனப்படும். செருந்தி என்று ஒரு வ்ருக்ஷ விசேஷத்தைச்சொல்லி அதன்மலரிலே சென்றணைவதாகச் சொன்னது—1. "தன்னொப்பா ரில்லப்பன் தந்தனன் தனதாள் நிழலே" என்றும் "𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌤𑌰𑍁𑌚𑍍𑌛𑌾𑌯𑌾 = வாஸுதேவ தருச்சாயா" என்றும் சொல்லுகிறபடியே ஸம்ஸாரமாகிற கொடிய வெய்யிலிலே தபிக்கப் பட்டவர்களுக்கு நிழல்தந்து விடாய்தீர்க்கும் நன்மரமாகிய வாஸுதேவனுடைய பாதமாமலரிற்சென்று சேர்ந்திருக்குமிருப்பபைச் சொன்னபடி. ஆக, ஸாரக்ராஹிகளான ஸ்ரீவைஷ்ணவர்கள் கூட்டங்கூட்டமாகத் திரண்டு பகவத் பாகவத குணாநுபவக்களிப்பாலே யாழினிசை வேதத்தியல்களைப் பாடிக்கொண்டு பகவத் பாதாரவிந்த நிரதர்களாய் வாழுமிடம் திருவயிந்திரபுரம் என்றதாயிற்று.

இவ்வகையாகக்கூறும் பொருள் ஸ்வாபதேசார்த்தம் [உள்ளுறை பொருள்] எனப்படும். இவ்வகைப்பொருள்களைத் திருவுள்ளம்பற்றியே அந்யாபதேசமாக வண்டுகளென்றும் தும்பிகளென்றும் கொக்கென்றும் குருகென்றும் லௌகிகப் பொருள்களையிட்டு வருணிப்பதாகச் சில ஆசிரியர்களின் கொள்கை. திருவாய்மொழியில் ஐந்தாம்பத்தில் ஒன்பதாந் திருவாய்மொழியின் முதற்பாட்டாகிய "மானேய் நோக்குநல்லீர்" என்ற பாட்டில் "தேனார் சோலைகள்சூழ்" என்றவிடத்து வியாக்கியானங்களில்—"நித்யப்ராப்யனைக்கொண்டு அங்கேயிருக்கிறவன் ஆச்ரிதர் உகந்ததொரு த்ரவ்யத்தைத் திருமேனியாகக்கொண்டு முகங்கொடுத்துக்கொடு நிற்கிறப்போலே அங்குள்ளாரும் இங்கே போந்து ஸ்தாவரங்களாயும் ஜங்கமங்களாயும் திர்யக்குக்களாயும் அவனை விடமாட்டாதே நிற்கிறபடி ; நித்யரும் முக்தரும் ஸம்ஸாரில் ருசியுடையாரும் உகந்தருளின நிலங்களைப்பற்றியிறே கிடப்பது............உகந்தருளின நிலங்களிலே மெய்யே ப்ரதிபத்தி விளைந்தார்க்கு அங்குள்ளவையெல்லாம் உத்தேச்யமாய்த் தோற்றுமிறே" என்றருளிச்செய்திருக்கக் காண்கையாலே திவ்யதேசங்களைப்பற்றி வாழ்கிற ஸ்தாவர ஜங்கமங்களனைத்தையும் நித்ய முக்தர்களாகக்கொள்ளும் அத்யவஸாயம் நம் ஆழ்வாராசார்யர்கட்குக் குறையற்றிருந்ததாக விளங்காநின்றது. "𑌅𑌕𑍃𑌤𑌸𑌹𑌜𑌦𑌾𑌸𑍍𑌯𑌾𑌃 𑌸𑍂𑌰𑌯𑌃 𑌸𑍍𑌰𑌸𑍍𑌤𑌬𑌨𑍍𑌧𑌾𑌃 𑌵𑌿𑌮𑌲𑌚𑌰𑌮𑌦𑍇𑌹𑌾 𑌇𑌤𑍍𑌥𑌮𑍀 𑌰𑌙𑍍𑌗𑌧𑌾𑌮𑌮𑌹𑌿𑌤𑌮𑌨𑍁𑌜𑌤𑌿𑌰𑍍𑌯𑌕𑍍𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌤𑍍𑌵𑌾𑌃 𑌶𑍍𑌰𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑌾𑌨𑍍𑌨𑍍𑌯𑌤𑌮𑌿𑌤𑌿 𑌹 𑌸𑍍𑌮 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑍇𑌭𑍍𑌯𑍋 𑌨𑌮𑌸𑍍𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 = அக்ருத ஸஹஜதாஸ்யாஸ் ஸூரயஸ் ஸ்ரஸ்தபந்தா: விமலசரமதேஹா இத்யமீ ரங்கதாம—மஹிதமநுஜதிர்யக் ஸ்தாவரத்வா: ச்ரயந்தே ஸாந்நியதமிதி ஹ ஸ்ம ப்ராஹுரேப்யோ நமஸ்ஸ்தாத்." [ஸ்ரீரங்கராஜஸ்தவம்] என்ற பட்டர் ஸ்ரீஸூக்தியும் இவ்வுறுதியை வற்புறுத்தும். ஆகையாலே அஃறிணைப் பொருள்களைப்பற்றி ஆழ்வார்கள் வருணித்து அருளிச்செய்துள்ள விடங்களுக்கு ஸ்வாப தேசார்த்தமென்று வேறொரு

1. திருவாய்மொழி 6—3—9.

பொருள்கூறவேண்டியது அத்யந்த ஆவச்யகமன்றாயினும், உள்ளுறை பொருளென்னுமிப்பொருளும் ஆழ்வார் திருவுள்ளத்தில் ஓடிக்கிடந்ததுண்டென்று கொள்ளலாம். ஆசார்ய ஹ்ருதயத்தில் இரண்டாம் பிரகரணத்தின் பிற்பகுதியிலும் மூன்றாம் பிரகரணத்தின் முற்பகுதியிலும் ஸ்வாபதேசார்த்தங்களுக்கு வழி காட்டப்பட்டிருக்குமாறு காண்க.

ஹிரண்யகசிபுவின் உடன்பிறந்தவனான ஹிரண்யாக்ஷனென்னுங் கொடிய அசுரன் தன் வலிமையாற் பூமியைப் பாயாகச்சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிச் சென்றபோது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மஹா வராஹரூபியாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக்கண்டு பொருது கோட்டினாற் குத்திக்கொன்று, பாதாள லோகத்தைச் சார்ந்திருந்த பூமியைக் கோட்டினாற்குத்தி அங்கு நின்றும் எடுத்துக்கொண்டுவந்து பழையபடி விரித்தருளினன் என்ற வரலாறு முதலடியில் ஸங்க்ரஹிக்கப்பட்டுள்ளது. இப்பொழுது நடக்கிற ச்வேதவாராஹ கல்பத்துக்கு முந்தின பாத்மகல்பத்தைப்பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமந்நாராயணன் ஏகார்ணவமான பிரளய ஜலத்தில் முழுகியிருந்த பூமியை மேலேயெடுக்கநினைத்து மஹா வராஹரூபியாகிக் கோட்டுநுனியாற் பூமியை எடுத்துவந்தனனென்ற வரலாறும் உண்டு. 1. "பாராருலகம் முதுமுந்நீர் பரந்த காலம் வளைமருப்பில், ஏராருருவத்தேனமாய் எடுத்த வாற்றலம்மான்" என்று இவ்வாழ்வார் தாமே மேலே அருளிச்செய்வர்.

"பிரானுன் பெருமை பிறராரறிவார்?, உராயுலகளந்த நான்று—வாரகத், தெயிற்றளவு போதாவாறென்கொலோ எந்தை, யடிக்களவுபோந்தபடி" என்ற பொய்கையார் பாசுரத்தைத் திருவுள்ளத்திற்கொண்டு "வளைமருப்பினிலகத்து ஒடுக்கி" என்றார்போலும்.

கருந்தண்மாகடல் கண்துயின்றவன்="உவர்க்குங் கருங்கடல்நீருள்ளான்" என்கிறபடியே உப்புக்கடலிலும் எம்பெருமான் பள்ளிகொண்டிருப்பதாகச் சொல்லுவதுண்டாகையாலே அதனைச் சொல்லிற்றாகவுமாம்; திருப்பாற்கடலில் துயில்கொள்ளும்படியைச் சொல்லிற்றாகவுமாம்; அப்போது கருங்கடல் என்றது தனது திருமேனியின் நிழலீட்டாலே கறுத்தநிறங்கொண்ட கடல் என்றபடி. "அன்றிக்கே; திருப்பாற்கடல்தான் மஹா வராஹத்தினுடைய குளம்பிலே துகளாய்க்குழம்பித் தன்னிறம் போயிற்றென்னவுமாம்" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தியும் நோக்கத்தக்கது.

தேறல்-தேன். பொதுளுதல்-நெருங்குதல். "பொதுளியம் பொழிலூடே" என்று மேலோடே அந்வயித்து, செறிந்து அழகிய பொழிலூடே என்று பொருள் கொள்ளவுமாம்.

---

1. பெரிய திருமொழி 8—8—3.

'அஹீந்த்ரபுரம்' என்ற வடசொல் அயிந்திரபுரம் என விகாரப்பட்டது. அஹீந்த்ரன்—திருவனந்தாழ்வான்; அவன் பூஜித்ததலமாதல் பற்றி இத்திருப்பதிக்கு இத்திருநாமமாயிற்றென்பர். ... .... .... (க)

மின்னுமாழியங் கையவன் செய்யவளுறைதரு திருமார்பன் *
பன்னுநான்மறைப் பல்பொருளாகிய பரனிடம் வரைச்சாரல் *
பின்னுமாதவிப் பந்தலில்பெடைவரப் பிணியவிழ் கமலத்து *
தென்னவென்று வண்டின்னிசை முரல்தரு திருவயிந்திரபுரமே. (உ)

| | |
|---|---|
| மின்னும் ஆழி | ஜ்வலிக்கின்ற திருவாழியை |
| அம் கையவன் | அழகிய திருக்கையிலே உடையவனும் |
| செய்யவள் உறைதரு திரு மார்வன் | பிராட்டி நித்யவாஸம் பண்ணுகிற திருமார்வை யுடையவனும் |
| பன்னு நால் மறை பல் பொருள் ஆகிய | ஓதப்பட்டு வருகிற நான்கு வேதங்களின் பலவகைப் பொருள்களும் தானேயா யிருப்பவனுமான |
| பரன் | பரம புருஷனுக்கு |
| இடம் | வாழுமிடம் (எதுவென்றால்) |
| வண்டு | வண்டுகளானவை |
| வரை சாரல் | மலைப் பக்கங்களில் |
| பின்னும் | நெருங்கியிருக்கின்ற |
| மாதவி பந்தலில் | குருக்கத்திப் பந்தலில் நின்றும் |
| பெடை | தம் பேடைகள் [பெண் வண்டுகள்] |
| வர | தம்மிடம்வந்து சேர்வதற்காக |
| பிணி அவிழ் கமலத்து | கட்டு அவிழ்கிற தாமரைப்பூவிலே இருந்துகொண்டு |
| தென்ன என்று | தென்ன தெனவென்று |
| இன் இசை முரல்தரு | இனிய இசைகளைப் பாடா நிற்கப்பெற்ற |
| | திரு அயிந்திரபுரம். |

* * *—திருவாழியாழ்வானைத் திருக்கையிலே சலியாதே பிடிக்கவல்லனாகையும் திருமகள் கொழுநனாயிருக்கையும் வேதங்களால் பிரதிபாதிக்கப் படுபவனாயிருக்கையும் பரமபுருஷத்வலக்ஷணங்களாதலால் அவை மூன்றையும் முன்னடிகளில் அருளிச்செய்து, இப்படிப்பட்ட பரம்புருடன் உறையுமிடம் திருவயிந்திரபுரமென்கிறார். கரிய கோலப்பிரானது கையிலே திருவாழி விளங்குவதானது காளமேகத்திலே மின்னல் மின்னிற்றுபோலே யிருக்கையால் 'மின்னு மாழியங்கையவன்' என்றார். "க்ஷாஜௌஷவ ஸ்ஷா... வஷுஉவகூயாரா" என்ற (ஸுதர்சநசதகம்) வர்ணநசமத்காரம் காண்க. திருமார்பிலும் ஒரு மின்னற்கொடி நித்யஸ்ரீயாய் விளங்குகிறதென்கிறார் செய்யவளுறைதரு திருமார்வன் என்று.

பன்னு நான்மறைகளாவன:—ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்பன: இவை வேதவ்யாஸரால் பிரிக்கப்பட்ட பிரிவின் பெயர்களாதலால் அதற்கு முன்னிருந்த தைத்திரியம் பௌடியம் தலவகாரம் சாமம் என்ற நான்கும் என்று கொள்ளுதல் தகும். வேதங்களின் பூர்வபாகமாகிய கருமகாண்டங்களில்

பரப்ரஹ்மத்தின் ப்ரதிபாதநம் இல்லையே; கருமங்களைப்பற்றித்தானே சொல்லி யிருக்கிறது; ஆகையாலே எல்லா வேதங்களுக்கும் எம்பெருமானே பொருளா யிருப்பதாகச் சொல்லலாமோ? என்று நினைக்கவேண்டா; பூர்வகாண்டங்களில் பிரதிபாதிக்கப்படுகிற யஜ்ஞயாகாதி கருமங்களினால் ஆராதிக்கப்படுபவன் எம்பெருமானேயாதலால் ஆராதந ப்ரகாரமுணர்த்தும் முகத்தால் ஆராத்யனை எம்பெருமானைச் சொல்லிற்றாகக் குறையில்லையென்க. ஆனதுபற்றியே "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய: = வேதங்க ளெல்லாவற்றுக்கும் நானே பொருள்" என்று எம்பெருமான்தானே பணித்துவைத்ததும்.

[வரைச்சாரல் இத்யாதி.] 1. "தூவிரிய மலருழக்கித் துணையோடும் பிரியாதே, பூவிரிய மதுநுகரும் பொறிவரிய சிறுவண்டே" என்னுமாபோலே வண்டுகளானவை பேடைகளுடனேகூடித் தாமரைமலரிலே இருந்துகொண்டு மதுபானம் பண்ணுநிற்கையில் தம்பதிகட்குப் பிரணய கலஹம் [ஊடல்] உண்டாகி, பேடையானது ஆண்வண்டை நோக்கி 'இனி நீ ஜீவிக்கும்படி யெல்லாம் நான் காண்கிறேன்' என்று சொல்லிவிட்டுக் கிளம்பிக் குருக்கத்திப் பந்தலிலே சென்று புகுந்தொளித்தது; அதைப்பிரிந்து ஆற்றமாட்டாத ஆண் வண்டானது, தனது அப்பேடை ஊடல்தீர்ந்து ஓடிவருமாறு தன் கஷ்ட நிலைமையை வெளியிடுகிற இன்னிசைப்பாடல்களைத் தாமரை மலரினின்று நிகழ்த்தா நின்றதாம்; இப்படிப்பட்ட பொழில்வாய்ப்புப்பொருந்தியது திரு வயிந்திரபுரம். வண்டானது சாகைகளின் நுனியிலே திரியுமாபோலே வேத சாகைகளின் நுனியிலே [உபநிஷத்துக்களிலே] விளங்குகின்ற எம்பெருமான் பிராட்டியோடே பிரணயகலஹங்கொண்டு செய்யும்படிகளைச் சொல்லிற்றாகக் கொள்க. "பிராட்டியுந்தானுமான சேர்த்தியில் ப்ரணயகலஹம் மாறாதே செல்லுமாபோலேயாயிற்று அங்குத்தைத் திர்யக்குக்களுடைய யாத்ரையும்" என்பது பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செயல்.

மாதவீ—வடசொல்; குருக்கத்தி. .... .... (உ)

வையமேழுமுண் டாலிலைவைகிய மாயவன் * அடியவர்க்கு
மெய்யனாகிய தெய்வநாயகனிடம் மெய்தகு வரைச்சாரல் *
மொய்கொள்மாதவி செண்பகம் முயங்கிய முல்லையங்கொடியாட *
செய்யதாமரைச் செழும்பணை திகழ்தரு திருவயிந்திரபுரமே. (ங)

வையம் ஏழும் உண்டு — (பிரளயகாலத்தில்) எல்லாவுலகங்களையும் திருவயிற்றி னுட்கொண்டு | ஆலிலை வைகிய மயாவன் — ஆலந்தளிரிலே போதுபோக்கின ஆச்சர்யபூதனும்,

1. பெரிய திருமொழி 3—6—1.

அடியவர்க்கு மெய்யன் ஆகிய — தன்னை யடிபணிந்தவர்கட்கு உண்மையாக ஸேவை ஸாதிக்குமவனுமான

தெய்வ நாயகன் இடம் — தெய்வநாயகப் பெருமானுக்கு உறைவிடம்;—

மெய் தகு வரை சாரல் — அப்பெருமானுடைய திருமேனியோடொத்த நிறத்ததான மலையின் அருகில்,

மொய்கொள் மாதவி செண்பகம் — நெருங்கிய குருக்கத்திச் செடிகளோடும் செண்பக மரங்களோடும்

முயங்கிய — தழுவிய

முல்லை அம் கொடி ஆட — அழகிய முல்லைக்கொடிகள் அசையாநிற்கப்பெற்றதும்

செய்ய தாமரை செழு பணை திகழ்தரு — செந்தாமரைப்பூக்கள் செழித்து வளர்கின்ற வயல்கள் விளங்கப்பெற்றதுமான

திரு அயிந்திரபுரம்—.

* * *—பூமிப்பரப்படங்கலும் பிரளயங்கொள்ளாதபடி திருவயிற்றிலே எடுத்துவைத்து ஒரு சிற்றிலைந்தளிரிலே கண்வளர்ந்தருளின ஆச்சர்ய சக்தி யுக்தனான பெருமான், ஆச்ரித ரக்ஷணத்திலே அப்படிப்பட்ட அகடிதகடநா ஸாமர்த்தியத்தை விளங்கச்செய்துகொண்டு வாழுமிடம் திருவயிந்திரபுரம். இத்திருப்பதியிலுள்ள தெய்வநாயகப் பெருமாளுக்கு 'தாஸஸத்ய:' (தாஸ ஸத்யன்) என்றொரு திருநாமமுமுண்டாகையால் 'அடியவர்க்கு மெய்யன்' என்கிறார்.

'தைவம் உண்டு' என்று ஆதரவோடு அங்கீகரியாவிடினும் 'தைவம் உண்டு' என்று ஒருவன் சொன்னால் அதில் ஆக்ஷேபாதிகளாலே பகைமை பாராட்டாதிருக்கும் நிலை அத்வேஷ மெனப்படும்; இதுவே பரமபக்திக்கு முதற்படியாகும். ஒரு வஸ்துவில் ஒருவனுக்கு த்வேஷம் குடிகொண்டிருந்தால் அவன் அவ்வஸ்துவைப்பற்றிச் சிந்திக்கவேமுடியாது; அன்றி 'நேசமுமில்லை, த்வேஷமுமில்லை' என்கிற நிலைமையிலிருந்தால் அவன் நாளடைவில் அவ்வஸ்து விடத்தில் பரமபக்தி பர்யந்தமான அன்பைப் பெற்றுவிடக்கூடும் என்பது அனைவர்க்கும் அநுபவஸித்தமான விஷயம். ஆனதுபற்றியே அத்வேஷ மென்பது பரம ப்ரீதிக்கு முதற்படியாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது: இப்படிப்பட்ட அத்வேஷ முடையாரையும் எம்பெருமான் அடியவராகத் திருவுள்ளம்பற்றி அவர்களுக்குத் தன் ஸ்வரூப ஸ்வபாவங்களை மெய்ம்மையாகக் காட்டித் தந்தருள்வன் என்பது அடியவர்க்கு மெய்யன் என்ற திருநாமத்தின் பொருளாம். இப்படிப்பட்ட எம்பெருமானெழுந்தருளியிருக்குமிடமான திருவயிந்திரபுரம் குருக்கத்திச்செடிகளும் செண்பகமரங்களும் முல்லைச்செடிகளும் தாமரைத்தடாகங்களும் மலியப்பெற்று மலைச்சாரலிலுள்ளதாம். (௩)

மாறுகொண் டுடன்றெதிர்ந்தவல் லவுணன்தன்மார்வக மிருபிளவா *
கூறுகொண்டவன் குலமகற்கின்னருள் கொடுத்தவனிடம் * மிடைந்து
சாறுகொண்டமென் கரும்பிளங்கழைதகை விசும்புற மணிநீழல் *
சேறுகொண்டதண் பழனம தெழில்திகழ் திருவயிந்திரபுரமே. (௪)

| | |
|---|---|
| மாறு கொண்டு | பகைமையைக்கொண்டு |
| உடன்று | கறுவிக்கொண்டு |
| எதிர்ந்த | எதிரிட்டுவந்த |
| வல் அவுணன்தன் | வலிவுள்ள இரணியாசுரனுடைய |
| மார்வகம் இரு பிளவு ஆ | மார்வானது இரண்டு பிளவாம்படி |
| கூறு கொண்டு | பிளந்தொழித்து |
| அவன் குலம் மகற்கு | அவனது சிறந்த மகனை ப்ரஹ்லாதாழ்வானுக்கு |
| இன் அருள் கொடுத்தவன் இடம் | நல்ல க்ருபைபண்ணின பெருமான் வாழுமிடமாவது ;— |
| மிடைந்து | ஒன்றோடொன்று நெருங்கி |
| சாறு கொண்ட | ரஸமயமா யிருக்கிற |
| மெல் கரும்பு இள கழை | மெல்லிய கரும்பின் இளந் தடிகளானவை |
| தகை விசும்பு உற | (தங்களை விம்மி வளரவொட்டாமல்) தடை செய்கின்ற ஆகாசத்தைக் கிட்டி வளர்ந்திருப்பதனால் |
| மணி நீழல் | அழகிய நிழலையுடையதும் |
| சேறு கொண்ட | (கருப்பஞ் சாற்று வெள்ளத்தினால்) சேற்றையுடைத்தாய் |
| தண் | குளிர்ந்த |
| பழனமது எழில் | நீர் நிலங்களின் அழகு |
| திகழ் | விளங்கப் பெற்றதுமான |

திரு அயிந்திரபுரம்—.

* * *—"ஸு~ஹ்ருதம் ஸர்வ பூதாநாம்" = ஸு~ஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்று ஸகல பிராணிகளுக்கும் ஸு~ஹ்ருத்தாயிராநின்ற தன்னோடே எதிரிட்டு வந்த இரணியனுடைய மார்வைப் பிளந்தொழித்து, பாகவத சிகாமணியான ப்ரஹ்லாதாழ்வானுக்கு அருள்செய்த பெருமான் அப்படிப்பட்ட விரோதி நிரஸநவிக்கிரமமும் ஆச்ரித பக்ஷபாதமுமாகிற திருக்குணங்கள் விளங்க வாழுமிடம் திருவயிந்திரபுரம். ஆகாசத்தளவும் ஓங்கி வளர்கின்ற கருப்பஞ்சோலைகளினால் நிழல் விஞ்சியும் அச்சோலைகளினின்றும் வெள்ளமிட்டுப்பெருகின சாறுகளினால் சேறுபெற்றும் இராநின்றதாம் இத்தலம்.

குலமகற்கு=‘குலம்’ என்ற சொல் சிறப்புப்பொருள் பெறும். மகன்+கு; மகற்கு. தகைவிசும்பு=வினைத்தொகை; தகைகின்ற விசும்பு. இது அதிசயோக்தி. .... ... .... (௪)

ஆங்குமாவலி வேள்வியிலிரந்துசென் றகலிடமளந்து * ஆயர்
பூங்கொடிக்கினவிடை பொருதவனிடம் பொன்மலர்திகழ் * வேங்கை
கோங்குசெண்பகக் கொம்பினில்குதிகொடு குரக்கின மிரைத்தோடி *
தேன்கலந்ததண் பலங்கனி நுகர்தரு திருவயிந்திரபுரமே. (௫)

| | |
|---|---|
| மாவலி வேள்வியில் | மஹாபலியின் யாக பூமியிலே |
| சென்று | (மாணியுருவாகிச்) சென்று |
| இரந்து | (மூவடிமண்) யாசித்துப் பெற்று |
| ஆங்கு | அவ்விடத்திலேயே |
| அகல் இடம் அளந்து | பரந்த உலகம் முழுவதையும் அளந்துகொண்டவனும், |
| ஆயர் பூங் கொடிக்கு | அழகிய இடைப்பெண்ணை நப்பின்னைப் பிராட்டிக்காக |
| இனம் விடை | ஓரினமான ஏழு ரிஷபங்களையும் |

பொருதவன் இடம் } போர்செய்து முடித்த பெருமானுறையும் இடமாவது;—
குரங்கு இனம் } குரங்குகளின் கூட்டமானது,
பொன் மலர் திகழ் } பொன்னிறமான மலர்கள் விளங்காநின்ற
வேங்கை கோங்கு செண்பகம் கொம்பினில் } வேங்கைமரம், கோங்குமரம், சண்பக மரம் என்பவற்றின் கொம்புகளிலே
குதிகொடு குதித்தல் செய்துகொண்டும்
இரைத்து } பெரிய ஆரவாரங்கள் செய்துகொண்டும்
ஓடி } இங்குமங்கும் ஓடிக்கொண்டும்
தேன் கலந்த தண் பலங்கனி நுகர்தரு } தேன் மிக்க சிறந்த பலாப்பழங்களை உட்கொள்ளப்பெற்ற
திரு அயிந்திரபுரம்—.

* * *—மஹாபலியின் ஔதார்ய குணத்தைக்கேட்டு அவனுடைய யாக பூமியில் யாசகனுய்ச்சென்று இரந்து, அவனும் தாரைவார்த்து தத்தம் பண்ணினவுடனே விம்மி வளர்ந்து உலகங்களையெல்லாம் அளந்து ஸ்வாதீநப் படுத்திக்கொண்டவனும், க்ருஷ்ணுவதாரத்தில் நப்பின்னைப் பிராட்டியை மணம் புரிந்து கொள்வதற்காக ஏழு ரிஷபங்களையும் அடர்த்தவனுமான பெருமான் உறையுமிடம் திருவயிந்திரபுரம். குரங்குகளின் திரள் ஒரு மரத்தினின்றும் மற்றொரு மரத்திலே தாவித் திரிந்து கீசுகீசென்று பேரொலிகள் செய்வதும், பலாமரத்தைக் கண்டவாறே அதன் மதுரமான கனிகளை உட்கொள்வதுமா யிருக்கப்பெற்ற சோலைகள் சூழ்ந்ததாம் இத்தலம்.

குரங்கு + இனம், குரக்கினம்; குரங்குகளைக்கூறியது சபலரான ஸம்ஸாரி களைக் கூறியவாறும். * நின்றவா நில்லா நெஞ்சினை யுடையராய் ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றுகிற க்ஷுத்ர பலார்த்திகளான ஸம்ஸாரிகளுக்கும் வாநரங்களுக் கும் ஸாம்யம் பொருந்துமன்றே: இப்படிப்பட்ட ஸம்ஸாரிகள் விஷய போகங் களிலே மண்டித் திரியாநிற்கச் செய்தேயும் பலங்கனிபோன்ற பகவத் குணங் களையும் இடையிடையே அநுபவித்து வாழும்படியைக் கூறியவாறு.

வேங்கைமரம், கோங்குமரம், செண்பகமரம் ஆகிய இவற்றின் பூக்கள் பொன்னிறமா யிருக்குமாதலால் 'பொன்மலர் திகழ்' என்றது. இம்மரங்களைச் சொன்னது (ஸ்வாபதேசத்தில்) நெஞ்சைக் கவர்கின்ற விஷயாந்தரங்களைச் சொன்னபடி. "குதிகொடு" என்றதில், குதி-முதனிலைத் தொழிற்பெயர்: "கொம்பேற்றி யிருந்து குதி பயிற்றும்" என்றார் பெரியாழ்வாரும். .... (௫)

கூனுலாவிய மடந்தைதன் கோடுஞ்சோலின்திறத் திளங்கோடியோடும் *
கானுலாவிய கருமுகில் திருநிறத்தவனிடம் கவினரும் *
வானுலாவிய மதிதவழ்மால்வரை மாமதிள் புடைசூழ *
தேனுலாவிய செழும்பொழில் தழுவிய திருவயிந்திரபுரமே. (௬)

| | |
|---|---|
| கூன் உலாவிய மடந்தைதன் | கூனேறின மந்தரையென்னும் ஸ்த்ரீயினுடைய |
| கொடும் சொலின் திறத்து | கொடிய பேச்சுக்காக |
| இள கொடியோடும் | இளங்கொடிபோன்ற பிராட்டியோடுகூட |
| கான் உலாவிய | காட்டுக்கெழுந்தருளின |
| கரு முகில்திரு நிறத்தவன் இடம் | காளமேகம்போன்ற வடிவையுடைய பெருமானுக்கு இடமாவது ;— |
| கவின் ஆரும் | அழகு நிரம்பிய |

| | |
|---|---|
| வான் உலாவிய மதி | ஆகாசத்தில் ஸஞ்சரிக்கின்ற சந்திரன் |
| தவழ் | தவழப்பெற்ற |
| மால் வரை | பெரியமலையும் |
| மா மதிள் | பெரியமதிளும் |
| புடை சூழ | பக்கங்களில் சூழ்ந்திருக்கப் பெற்றதும் |
| தேன் உலாவிய செழு பொழில் தழுவிய | வண்டுகள் ஸஞ்சரிக்கிற அழகிய சோலைகளால் சூழப்பட்டதுமான |

திரு அயிந்திரபுரம்—.

* * *—கைகேயியானவள் மந்தரை யென்னுங் கூனியி னுபதேசத்தால் மனங்கலங்கித் தசரத சக்ரவர்த்தியினிடம் வரம் வேண்ட, அதனால் தயரதன் காட்டுக்குப் போகச்சொன்ன இவ்வரலாற்றில் எல்லாவற்றுக்கும் மூலகாரணம் மந்தரையே யாதலால் “ கூனுலாவிய மடந்தைதன் கொடுஞ்சொலின் திறத்து ” என்றார். ‘இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்வதாகப் பெருமுயற்சி நடைபெறுகின்றது’ என்று முதன் முதலாக மந்தரை சொல்லக்கேட்ட கைகேயியானவள் பெருமகிழ்ச்சி கொண்டு உடனே தன் ஆபரணங்களி லொன்றை யெடுத்து அவளுக்குப் பரிசளித்து ‘இப்படிப்பட்ட ஸந்தோஷ ஸமாசாரத்தைக் கர்ணாம்ருதமாகத் தெரிவித்தவுனக்குத் தக்க கைம்மாறு நான் என்ன செய்யவல்லேன் !’ என்றும், ‘பரதனுக்கானு லென்ன, இராமனுக்கானு லென்ன ; இரண்டும் எனக்கு ப்ரியமே’ என்றும் சொன்னாள் ; அப்படிப்பட்ட கைகேயியே பிறகு “ ஸஷெ ஜீவிதவஸ்யாணோஸெ யதி ஹிஷிவ்யெத—இராமனுக்கு முடிசூட்டுவதாயின் என்னுயிர் மாய்ந்துவிடும்” என்று கதறும்படியாக மதிகலங்கப் பெற்றதெல்லாம் கூனியினாலாகையால் நன்கு சொல்லலாமிறே. பெரியாழ்வாரும் “கொங்கைவன் கூனி சொற்கொண்டு—வன்கானடை” என்றார். பட்டாபிஷேகத்துக்குக் கட்டின காப்பே வநவாஸத்துக்குக் கட்டின காப்பாம்படி புறப்பட்டுக் கானகமே சென்ற விடத்திலும் “வநவாஸோ மஹோதயః” என்று ஸந்தோஷமே விஞ்சித் திருமேனி புகர்பெற்றிருந்ததனால் “கானுலாவிய கருமுகில் திருநிறத்தவன்” என்றார். பெருமாள் பிராட்டியுடனே காட்டி லெழுந்தருளின போது மின்னலுறைந்த மாமுகில் நடந்து செல்லுகின்ற தென்னலாம் படியிருந்தமையும் அறிக.

சந்திர மண்டலத்தளவும் ஓங்கின மலைகளாலும் மதில்களாலும் பொழில்களாலும் சூழப்பெற்றதாம் இத்தலம். “ மால்வரை மாமதிள் ” என்றதை உம்மைத் தொகையாகக் கொள்ளாமல் உவமைத்தொகையாகக் கொண்டு, பெரிய மலைபோன்ற மதிள்களாற் சூழப்பெற்றதென்றலுமொன்று. ... (சு)

மின்னினுண்ணிடை மடக்கொடிகாரணம் விலங்கலின்மிசை யிலங்கை
மன்னன் * நீண்முடிபொடிசெய்த மைந்தனதிடம் மணிவரைநீழல் *
அன்னமாமல ரரவிந்தத்தமளியில் பெடையோடு மினிதமர *
செந்நெலார் கவரிக்குலை வீசுதண் திருவயிந்திரபுரமே. (எ)

| | |
|---|---|
| மின்னின் நுண் இடை | மின்போல் ஸூக்ஷ்மமான இடையை யுடையளும் |
| மடம் | மடமைக்குணம் வாய்ந்தவளும் |
| கொடி காரணம் | கொடி போன்றவளுமான பிராட்டிக்காக, |
| விலங்கலின் மிசை இலங்கை | ஸுவேலமலையின்மீது அமைக்கப்பட்டிருந்த [ஸுரக்ஷிதமான] லங்காபுரிக்கு |
| மன்னன் | அரசனான இராவணனுடைய |
| நீள் முடி | பெரிய முடிகள் பத்தையும் |
| பொடி செய்த | பொடி படுத்தின |
| மைந்தனது இடம் | மிடுக்கையுடைய பெருமானுக்கு இடமாவது ;— |
| மணி வரை நீழல் | அழகிய மலையின் நிழலிலே |
| அன்னம் | ஹம்ஸங்களானவை |
| மா அரவிந்தம் மலர் அமளியில் | பெரிய தாமரைப் பூவாகிய படுக்கையில் |
| பெடையொடும் | தங்கள் பேடைகளுடனே |
| இனிது | இனிதாக |
| அமர | பொருந்தி வாழ்வதற்குப் பாங்காக |
| செந்நெல் ஆர் குலை கவரி வீசு | செந்நெல் நிறைந்த குலை சாமரம் வீசப் பெற்ற |
| தண் திரு அயிந்திரபுரம்—. | |

* * *—கீழ்ப்பாட்டில் "கானுலாவிய" என்று காட்டுக் கெழுந்தருளின மாத்திரத்தைப் பேசினார்; ராவண ஸம்ஹார பர்யந்தமான காரியத்தைப் பேசுகிறாரிதில். **மின்னின்நுண்ணிடை**=மின்னல் போன்று ஸூக்ஷ்மமான இடையை யுடையவள் என்றும், மின்னலைக் காட்டிலும் ஸூக்ஷ்மமான இடையை யுடையவள் என்றும் பொருளாம். பிராட்டியின் தேஹ குணங்களுக்கெல்லாம் உபலக்ஷணமாக இந்த விசேஷணமும், ஆத்ம குணங்களுக்கெல்லாம் உபலக்ஷணமாக **மடம்** என்ற விசேஷணமும் இடப்பட்டது. கொடிபோன்ற பிராட்டியைக் **கொடி** யென்றே சொன்னது முற்றுவமை. கொடியானது ஒரு கொள்கொம்போடே சேர்ந்தே ஸத்தை பெற்றிருக்குமாபோலே இராமபிரானோடு கூடியே ஸத்தைபெற்றிருக்க வேண்டியவளான பிராட்டியையன்றோ ராக்ஷஸப் பாவி பிரித்தா னென்கிறார். "மடக்கொடி **காரணம்**" என்றது-பிராட்டியை மீட்டுக் கொள்ளும் நிமித்தமாக என்றபடி. பிராட்டியைக் கொள்ளைகொண்டு போனானென்ற காரணத்தினா லென்றுமாம்.

**விலங்கலின்மிசையிலங்கை**='விலங்கல்' என்று மலைக்குப் பெயர்; ஸுவேல பர்வதத்தின் மேலே த்ரிகூடத்தின் மீது இலங்காபுரி அமைக்கப்பட்டிருந்த தென்ப. அப்படிப்பட்ட இலங்கைக்கு அரசனாகையாலே 'நமக்கு ஒருவராலும் ஒருநாளும் அழிவில்லை' என்று மார்புநெறித்துக் கிடந்தவனுடைய முடிகள் பத்தையும் நீறுக்கின பெருமிடுக்கன் நித்யவாஸம் பண்ணுமிடம் திருவயிந்திரபுரம்.

[மணிவரைநீழலித்யாதி.] இத்தலம் மலைசூழ்ந்ததாதலால் அம்மலையி னருகே செந்நெற் கழனிகளிலே தாமரைத் தடாகங்களுள்ளன; அங்குள்ள தாமரை மலர்களிலே அன்னப் பறவைகள் துணையோடும் பிரியாதே ரமிக்க, அதற்குப் பாங்காகச் சாமரம் வீசுமாபோலே செந்நெற்கதிர்கள் இனிது வீசு கின்றனவாம்.

அன்னமானது, நீரும்பாலும் கலந்திருந்தால் அவற்றைப் பிரித்தெடுப்பது போல சாஸ்த்ரங்களில் ஸாரமாயும் அஸாரமாயு முள்ளவற்றைப் பகுத்தறிய வல்லவர்களாயும், "அன்னமதா யிருந்து அங்கு அறநூலுரைத்த" என்கிற படியே ஹம்ஸரூபியாய் எம்பெருமான் சாஸ்த்ரங்களை யுபதேசித்தாப்போலே சிஷ்யர்களுக்கு சாஸ்த்ரங்களைக் கற்பிப்பவர்களாயும், "நஜ்ஜாதிரதிம் ஹம்ஸ: கஊாஹிஸக்ஷ-ஜாம்ஹஸி = அன்னம் ஒருபோதும் சேற்றுநீரில் பொருந்தாது" என்கிறபடியே அன்னம் சேற்றில் பொருந்தாதாப் போலே "பிறப்பாம் பொல் லாவருவினை மாய வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்து—அழுந்தார்" என்கிறபடியே ஸம்ஸாரமாகிற பெருஞ் சேற்றிலே பொருந்தாதவர்களாயு மிருக்கிற கூரத்தாழ் வான் போல்வாரான மஹான்களை அன்னமென்கிறது ஸ்வாபதேசத்தில். "பெடையோடும்" என்கையாலே க்ருஹஸ்தாச்ரமத்திலிருந்துகொண்டே பகவத் பாகவத விஷயங்களில் ப்ராவண்யமுற்றிருக்கும்படியைச் சொல்லுகிறது. "அரவிந்தத்தமளி" என்றது எம்பெருமானுடையவும் ஆசார்யனுடையவும் பாதாரவிந்தங்களைச் சொன்னபடி. "செந்நெலார்கவரிக்குலைவீசு" என்றது— இப்படிப்பட்ட மஹான்களுக்கு நல்ல சிஷ்யர்கள் வாய்த்து அவர்கள் சாமரம் பணிமாறுதல் முதலிய கைங்கரியங்களைச் செய்து உஜ்ஜீவிக்கும்படியைச் சொன்னவாறு.

கவரி—"சாமரீ" என்ற வடசொல்லின் விகாரம். ... .... (எ)

விரைகமழ்ந்தமென் கருங்குழல்காரணம் வில்லிறுத் தடல்மழைக்கு *
நிரைகலங்கிட வரைகுடையெடுத்தவன் நிலவியவிடம் தடமார் *
வரைவளந்திகழ் மதகரிமருப்பொடு மலைவள ரகிலுந்தி *
திரைகொணர்ந்தணை செழுநதி வயல்புகு திருவயிந்திரபுரமே. (அ)

விரை கமழ்ந்த மென் கருங் குழல் காரணம் { பரிமளம் வீசுகின்ற மெல்லிய கறுத்த கூந்தலையுடையளான பிராட்டிக்காக

வில் இறுத்து வில்லை முறித்தவனும்,

அடல் மழைக்கு நிரை கலங்கிட { அஸஹ்யமான பெருமழை வந்தபோது ஆநிரைகள் பரிதபித்து நிற்க

வரை குடை எடுத்தவன் { கோவர்த்தனமலையைக் குடையாக வெடுத்துக் காத்தவன்

நிலவிய இடம் { மகிழ்ந்து உறையும் இடமாவது;—

தடம் ஆர் வரை வளம் திகழ் மதகரி { தடாகங்கள் நிறைந்த மலைக்கு அழகுசெய்து விளங்குகின்ற மதயானைகளினுடைய

| | | | |
|---|---|---|---|
| மருப்பொடு | தந்தங்களையும் | அணை | சேருகிற |
| மலை வளர் அகில் | மலையில் வளர்கின்ற அகில் மரங்களையும் | செழு நதி | அழகிய ஆறு |
| திரை | அலைகளினாலே | வயல் புகு | கழனிகளில் பாயப்பெற்ற |
| உந்தி கொணர்ந்து | தள்ளிக்கொண்டு வந்து | | திரு அயிந்திரபுரம்—. |

* * *—தெய்வநாயகன் பக்கலிலே ஸ்ரீராமனுக்குரிய பராக்ரமமும் ஸ்ரீக்ருஷ்ணனுக்குரிய ஸௌசீல்யமும் விளங்காநின்றமையால் அவ்விரண்டு அவதாரங்களின் சேஷ்டிதங்களைச் சேர்த்து அநுபவிக்கிறார். முன்னொருகாலத்தில், தேவசில்பியான விச்வகர்மாவினால் நிருமிக்கப்பட்ட சிறந்த இரண்டு விற்களுள் ஒன்றைச் சிவபெருமானும் மற்றொன்றைத் திருமாலும் எடுத்துக்கொண்டார்கள். பின்பொரு காலத்தில் அவ்விற்களுள் சிறந்தது இன்னதென்பதை அறிய விரும்பிய தேவர்களின் வேண்டுகோளால் பிரமன் ருத்ரனுக்கும் விஷ்ணுவுக்கும் போரை மூட்டிவிட, அங்ஙனமே அவர்கள் அவ்விற்களைக் கொண்டு பொருகையில், சிவபிரானது வில் சிறிது முறிபட்டது; அவ்வாறு முறிபட்ட வில்லைச் சிவபிரான் ஜநககுலத்துத் தேவராதனென்னும் அரசனிடம் கொடுத்திட, அது வம்சபரம்பரையாய் ஜநக மஹாராஜனளவும் வந்தது. இதுநிற்க: முறிபடாத மற்றொரு வலிய வில்லை விஷ்ணுவானவர் ரிசீகமுனிவனிடம் கொடுத்துச் செல்ல அது அவன் குமாரனான ஜமதக்நியினிடத்தும் அவன் குமாரனான பரசுராமனிடத்தும் பரம்பரையாய் வந்தது. முற்கூறிய சிவதநுஸ்ஸை ஸீதைக்குக் கந்யாசுல்கமாக ஜநகன் வைத்திருந்தான்; இராமபிரான் அந்தவில்லை முறித்துத் தன் பேராற்றலை விளங்கச்செய்து பிராட்டியை மணந்துகொண்டது ப்ரஸித்தம்.

அடல் மழைக்கு நிரைகலங்கிட வரைகுடை யெடுத்தது க்ருஷ்ணாவதாரத்தில். திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்களெல்லாரும் கண்ணபிரானுடைய அற்புத சரிதைகளைக்கண்டு 'இவனே நம் குலக்கொழுந்து, இவன் சொற்படி நடப்பதே நமது கடமை' என்று உறுதி கொண்டிருந்தார்கள்: இருக்கையில் சரத்காலம் வந்தது; அப்போது, இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவது போல் இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பலபல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜைப் பொருள்களையும் அமைப்பதைக் கண்டு கண்ணபிரான் 'ஓ பெரியோர்களே! இவை எதுக்காக?' என்றான்; அதற்கு அவர்கள் 'அப்பா! தேவேந்திரனுடைய அநுக்ரஹத்தினால் காலங்களில் தகுதியாக மழைபெய்து அதனால் பசுக்களும் நாமும் ஸுகமேவாழ்கிறோம்; இனி எப்போதும் அந்த இந்திரன் நம்மை இப்படியே ரக்ஷிக்கவேணுமென்கைக்காக அவனுக்கு வருஷத்துக்கு ஒருமுறை பொங்கலிடுவதுண்டு; அதற்காக இவை யெல்லாம் சேர்த்து வைத்தோம்' என்றனர். கண்ணன் அதுகேட்டு 'நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கிறோமோ அதற்கன்றோ பூஜை செய்ய வேண்டும்; இக்கோவர்த்தன மலையன்றோ பசுக்களுக்குப் புல்லுந் தண்ணீருங் கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்ன ப்ரயோஜநமுண்டு? இதை யெல்லாம் நீங்கள் இந்த மலைக்கே பலியிடுங்கள்' என்ன; இடையர்கள் அப்படியே செய்யத்துணிந்து மலைக்கே பலியிட்ட வளவில்,

கண்ணபிரான் தான் அம்மலையில் ஆவேசித்து அவற்றை யெல்லாம்தானே அமுது செய்திட்டான். பின்பு பூஜையிழந்த இந்திரன் சீற்றமுற்றுத் தன் பரிஜனங்களான மேகங்களையழைத்து 'இடைக்குலத்துக்குப் பெருந்தீங்கு விளையும்படி விடாமழை பெய்யுங்கள்' என்று சொல்லிக் கட்டளையிடவே, அம்மேகங்கள் அப்படியே வந்து ஏழுநாள் விடாமழை பெய்ய, இடையரும் பசுக்களு மெல்லாம் கதறிக்கதறிக் கண்ணனையே சரணமடைய, கண்ணபிரான் அபயமளித்து அந்தமலையைப் பிடுங்கிக் குடையாகத் தூக்கித் தாங்கி, கோகுலத்தைச் சேர்ந்த ஸகல பிராணிகளையும் அதன்கீழ் அழைத்துக்கொண்டு சிறிதும் அபாயமின்றிக் காப்பாற்றியருளினன். ஏழுநாள் இடைவிடாது கல்மாரி பெய்தும் யாருக்கும் எவ்விதமான பாதையும் நேரிடாமையைக் கண்ட இந்திரன் பாரத்பரனை ஸ்ரீக்ருஷ்ணபகவானுடைய மஹிமைக்கு வியந்து கீழிறங்கிவந்து பணிந்து அபராதக்ஷாமணம் பண்ணிக்கொண்டு போய்ச்சேர்ந்தான்.

[தடமார்வரைவள மித்யாதி.] ஆறுகள் பெரு வெள்ளமாய்ப் பெருகும் போது யானைத் தந்தங்களையும் அகில் மரங்களையும் மற்றும் பலபல மணிமாணிக்கங்களையும் கொழித்துக்கொண்டு வருகிற வழக்கமாகையாலும் அங்ஙனே கவிகளும் கவிபாடுகிற வழக்கமாகையாலும், இங்கே கருடநதி ப்ரவஹிக்கும் படியை வருணிக்கிறாராயிற்று. .... .... .... (அ)

வேல்கொள்கைத்தலத் தரசர்வெம்போரினில் விசயனுக்காய் * மணித்தேர்
கோல்கொள்கைத்தலத் தெந்தைபெம்மானிடம் குலவுதண் வரைச்சாரல் *
கால்கொள்கண்கொடிக் கையெழக்கமுகிளம் பாளைகள் கமழ்சாரல் *
சேல்கள்பாய்தரு செழுநதி வயல்புகு திருவயிந்திரபுரமே. (௯)

| | |
|---|---|
| கைத்தலத்து | கையிலே |
| வேல் கொள் | வேலாயுதத்தையுடையரான |
| அரசர் | (துரியோதனன் முதலிய) அரசர்களினுடைய |
| வெம் போரினில் | கடோமான பாரத யுத்தத்தில் |
| விசயனுக்கு ஆய் | அர்ஜுநனுக்குத் துணையாகி |
| மணி தேர் | (அவனுடைய) அழகிய தேரிலே |
| கைத்தலத்து கோல் கொள் | கையில் கோல்பிடித்து நின்ற |
| எந்தை பெம் மான் இடம் | எம்பெருமானுக்கு இடமாவது:— |
| குலவு தண் வரை சாரல் | கொண்டாடத்தக்க குளிர்ந்த மலைச்சாரலில், |
| கால் | வெற்றிலைக் கால்கள் |
| கண் கொள் | கணுக்கள்தோறும் கிளைக்கின்ற |
| கொடி | (வெற்றிலைக்) கொடிகள் |
| கையெழ | மிகுதியாக வளரப் பெற்றதும் |
| கமுகு இளம் பாளைகள் கமழ் சாரல் | பாக்கு மரங்களின் இளங் குருத்துகள் வாஸனை வீசப்பெற்ற சுற்றுப் பிரதேசங்களை யுடையதும் |
| சேல்கள் பாய்தரு செழு நதி வயல் புகு | மீன்கள் துள்ளி விளையாடுகிற அழகிய ஆறானது கழனிகளிலே பெருகப் பெற்றதுமான |

திரு அயிந்திரபுரமே—.

* * *—மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலரும் எதிரிகளாய் நிறைந்துகிடந்த பாரதயுத்தத்திலே பீஷ்ம த்ரோணாதிகளான மஹாவீரர் பிரயோகித்த ஆக்நேயாஸ்த்ரம் முதலியவற்றால் அர்ஜுநனது தேர்

அழிந்துபோகாதபடி தனது திருவடிகளின் ஸம்பந்தத்தாலே உறுதியாயிருக்கச் செய்து, அந்த அர்ஜுநனுல் தாங்கமுடியாத அஸ்த்ர சஸ்த்ரங்கள் வந்தால் தன் மார்பிலே ஏற்றுக்கொள்ளும்படி அவன்தேரின் முன்புறத்திலே ஸாரதியாய்த் தங்கியிருந்து வெற்றி பெறுவித்த வீரன் வாழுமிடம் திருவயிந்திரபுரம்.

அஃது எப்படிப்பட்டதென்னில்; வெற்றிலைத் தோட்டங்களும் பாக்குச் சோலைகளும் நீர்வாய்ப்புள்ள கழனிகளும் நிறையப் பெற்றது. .... (கூ)

மூவராகிய வொருவனை மூவுலகுண்டுமிழ்ந் தளந்தானை *
தேவர்தானவர் சென்றுசென்றிறைஞ்சத் தண்திரு வயிந்திரபுரத்து *
மேவுசோதியை வேல்வலவன் கலிகன்றி விரித்துரைத்த *
பாவுதண்டமிழ் பத்திவைபாடிடப் பாவங்கள் பயிலாவே. (ய)

| | |
|---|---|
| மூவர் ஆகிய ஒருவனை | தானொருவனே மும்மூர்த்தியாக உருவெடுத்து முத்தொழில் நிகழ்த்துமவனாய் |
| மூ உலகு | மூன்று லோகங்களையும் |
| உண்டு உமிழ்ந்து அளந்தானை | (பிரளயகாலத்தில்) உட்கொண்டு (பிறகு) வெளிப்படுத்தி (மற்றொருகால் திரிவிக்கிரமனாகி) அளந்தவனாய் |
| தேவர் தானவர் சென்று சென்று இறைஞ்ச | தேவரும் தானவரும் வந்து வந்து வணங்கலாம்படி |
| தண் திரு அயிந்திர புரத்து மேவு சோதியை | குளிர்ந்த திருவயிந்திரபுரத்திலே நித்யவாஸம் பண்ணுகிற பரஞ்சோதியான பெருமானைக்குறித்து |
| வேல் வலவன் கலிகன்றி | வேல் பிடிக்கவல்ல திருமங்கைமன்னன் |
| விரித்து உரைத்த | விரிவாக அருளிச்செய்த |
| பாவு தண் தமிழ் இவை பத்து | அழகிய விஸ்தார கவியாக அமைந்த இப்பத்துப் பாசுரங்களையும் |
| பாடிட | பாடி யநுஸந்திக்குமளவில் |
| பாவங்கள் பயிலா | பாவங்கள் சேரமாட்டா. |

* * *—பிரமனுக்கு அந்தர்யாமியா யிருந்து படைப்புத் தொழிலையும், சிவனுக்கு அந்தர்யாமியா யிருந்து ஸம்ஹாரத் தொழிலையும், தானான தன்மையிலே நின்று ரக்ஷணத் தொழிலையும் ஸ்ரீமந் நாராயணனொருவனே நிர்வஹிக்கையாலே "மூவராகியவொருவனை" என்றார். தேவர்களும் அசுரர்களும் தங்கள் தங்கள் இஷ்டஸித்திக்காக வந்து ஆச்ரயிக்கலாம்படி திருவயிந்திரபுரத்திலெழுந்தருளி யிருக்கின்ற பரஞ்சோதி விஷயமாகக் கலியன் அருளிச்செய்த இப்பாசுரங்கள் பத்தையும் இனிமையாக அநுஸந்திக்குமவர்கள் பாவங்கள் நீங்கிப் புண்யபலம் அநுபவிக்கப்பெறுவர்களென்று இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. .... .... (ய)

அடிவரவு:—இருந்தண் மின்னும் வையம் மாறு ஆங்கு கூன் மின்னின் விரை வேல் மூவர் ஊன்.

மூன்றாம்பத்து முதல் திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றாம்பத்து—இரண்டாந்திருமொழி.

# ஊன்வாட வுண்ணாது.

அவதாரிகை:—நடுநாட்டுத்திருப்பதிகளான திருக்கோவலூரையும் திருவயிந்திரபுரத்தையும் மங்களாசாஸநஞ் செய்தருளின பின்பு இனிச் சோழநாட்டுத்திருப்பதிகளை யெல்லாம் மங்களாசாஸநஞ்செய்யத் திருவுள்ளம்பற்றின ஆழ்வார் தில்லைத்திருச்சித்திரகூடமென்னுந் திருப்பதியிலே இழிகிறார். பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமற்று எம்பெருமானைப் பெற்றநுபவிக்க நினைப்பவர்கள், மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு நீர்பருகியும் காற்று நுகர்ந்தும் காய்கனி கிழங்கு சருகுவருக்கங்களை உண்டும் விரதங்களால் உண்டி சுருக்கலும், கோடைகாலத்தில் வெயில்நிலையிலும் பஞ்சாக்நிமத்தியிலும் நிற்றலும், மாரிகாலத்தும் பனிக்காலத்தும் நீர்நிலையில் பாசியேற நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு அவற்றால் வருந் துன்பங்களைப் பொறுத்து இவ்வாறு சரீரத்தையொறுத்து நல்வீடு செல்லலாமென்று சாஸ்த்ரங்களிற் சொல்லியிருப்பதைப் பின்பற்றுமவர்கள் அப்படியே காயக்லேசங்கள் படுவதுண்டாகையாலே 'அந்தோ! எளியவழியிருக்க அரியவழியில் ஏன் வருந்தவேணும்' என்று நினைத்த விவ்வாழ்வார் அன்னவர்களை விளித்து 'நீங்கள் தில்லைத் திருச்சித்திரகூடத்தைச் சென்றுசேர்ந்த மாத்திரத்தில் உங்கட்குப் பரமபுருஷார்த்தம் அநாயாஸமாக ஸித்திக்கக்கடவதாயிருக்க அரியவழிகளில் முயற்சிசெய்யவேண்டா; இத்திருப்பதியைச்சென்று சேருங்கோள்' என்று உபதேசிக்கிறாராய்ச் செல்லுகிறது இத்திருமொழி. ... *

(எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.)

ஊன்வாட வுண்ணா துயிர்காவலிட்டு
உடலில்பிரியாப் புலனைந்தும் நோந்து *
தாம்வாடவாடத் தவஞ்செய்ய வேண்டா
தமதாவிமையோ ருலகாள கிற்பீர்! *
கானாடமஞ்ஞைக் கணமாட மாடே
கயலாகோனீர்ப் பழனம் புடைபோய் *
தேனாட மாடக்கொடியாடு தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. (க)

| | | |
|---|---|---|
| இமையோர் உலகு தமதா ஆள கிற்பீர் | பரமபதத்தை ஸ்வாதீநமாக ஆளவேண்டி யிருக்குமவர்களே!, | |
| ஊன் வாட | மாம்ஸம் வற்றி யுலரும்படி | |
| உண்ணாது | உபவாஸங்களிருந்து | |

உயிர் காவலிட்டு — பிராணன் மாத்திரம் போகாதபடியாக (நீரையும் காற்றையும் உட்கொண்டு பிராணனைக்) காப்பாற்றி

உடலில் பிரியா புலன் ஐந்தும் நொந்து — சரீரத்தை விட்டுப்போகாத பஞ்சேந்திரியங்களும் நோவ

தாம் வாடவாட — தாங்கள் மேன்மேலும் வாட்டமடையும்படி

தவம் செய்ய வேண்டா — தபஸ்ஸு பண்ணவேண்டா;

(பின்னை என்னசெய்ய வேண்டுமென்னில்;)

கான் ஆட — சோலைகள் அசையும்படியாக

மஞ்ஞை கணம் ஆட — மயில்களின் கூட்டங்கள் ஆடவும்

மாடே — பக்கத்திலே

தேன் — வண்டுகளானவை

கயல் ஆடு — மீன்கள் துள்ளி விளையாடுகிற

நீர் — ஜலஸம்ருத்தியையுடைய

கால் — வாய்க்கால்களை யுடைத்தான

பழனம் புடை போய் — நீர் நிலங்களினருகேபோய்

ஆட — (மதுவில் நசையாலே) மேலே பறக்கவும்

மாடம் — மாடங்களிலுள்ள

கொடி — கொடிகள்

ஆடு — அசையாநிற்கவும்பெற்ற

தில்லை திரு சித்ர கூடம் — தில்லைத் திருச்சித்திரகூடமென்னுந் திருப்பதியை

சென்று சேர்மின்கள் — சென்று சேருங்கோள்.

* * *—"இமையோருலகைத் தமதாக ஆளகிற்பீர்!, தில்லைத்திருச்சித்ர கூடஞ்சென்று சேர்மின்கள்; வாடவாடத் தவஞ்செய்யவேண்டா" என்கிறார். வேதாந்தங்களில் "யஜ்ஞேந தாநேந தபஸா நாஶகேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி" [ப்ருஹதாரண்யகம்.] என்று சொல்லப்பட்டுள்ளது; அதாவது—பிராமணர்கள் யாகம்செய்தும் தானஞ்செய்தும் தவம்புரிந்தும் பட்டினி கிடந்தும் பேறுபெறப்பார்க்கிறார்கள் என்று ஓதப்பட்டுள்ளது. சரீரத்தை வருத்தப்படுத்திச் செய்யவேண்டியவையாயும், அப்படி செய்தாலும் 'அது தப்பிற்று, இது தப்பிற்று' என்று சொல்லிப் பெரும்பாலும் பலனை இழக்க வேண்டியவையாயுமுள்ள அக்கருமங்களில் கைவைத்து அநர்த்தப்பட்டுப் போவதைக்காட்டிலும் தில்லைத்திருச் சித்திரகூடத்தைச் சென்று சேர்ந்தால் அங்குள்ள எம்பெருமானுடைய திருவருளுக்கு இலக்காகி எளிதாக வாழலாமாகையால் அது செய்யுங்களென்று முமுக்ஷுக்களை நோக்கி உபதேசிக்கிறார்.

பட்டினிகிடப்பதற்குப் பிரயோஜனம் மாம்ஸம் வற்றி யுலர்ந்து சரீரம் மெலிந்து போகவேணு மென்பதேயாதலால் "ஊன்வாடவுண்ணாது" என்றார். அடியோடு உண்ணாதிருந்தால் உயிர் நிலைக்கமாட்டாதேயென்ன "உயிர்காவலிட்டு" என்கிறார்; உயிரைக் காத்துக்கொள்ள வேண்டுமளவு நீரைக்குடித்தும் காற்றை நுகர்ந்தும் காய் கனி கிழங்கு சருகுவருக்கங்களையுண்டும் தேஹதாரணம் பண்ணும்படியைப் பேசினாராயிற்று.

உயிருள்ளவரையில் உடலைவிட்டுப் பிரியாத பஞ்சேந்திரியங்களும் வருந்தும்படியாகக் கோடைகாலத்தில் வெயில்நிலையிலும் பஞ்சாக்நி மத்தியிலும் நின்றும் மாரிகாலத்தும் பனிக்காலத்தும் நீர்நிலையில் பாசியேற நின்றும் தவஞ்

செய்யவேண்டா வென்கிறார். ஊன்வாட வுண்ணுதிருப்பதும் தாம்வாட வாடத் தவஞ்செய்வதுமான ஆயாஸங்கள் படுவது பரமபத ப்ராப்திக்காக வென்பதைக் காட்டுகிறார் தமதாவிமையோ ருலகாளகிற்பீர்! என்னும் விளியினால். பெரிய திருமடலிலும் "ஓர் தொன்னெறியை வேண்டுவார் வீழ்கனியு மூழிலையும், என்னுமிவையே நுகர்ந்துடலந் தாம்வருந்தித், துன்னுமிலைக்குரம்பைத் துஞ்சியும் வெஞ்சுடரோன், மன்னுமழல்நுகர்ந்தும் வண்தடத்தினுட்கிடந்தும், இன்னதோர் தன்மையராயிங்குடலம் விட்டெழுந்து, தொன்னெறிக்கட் சென்றார்" என்றது காண்க.

நிவர்த்திக்கவேண்டுமதை முன்னடிகளிற்சொல்லி ப்ரவர்த்திக்க வேண்டுமதைப் பின்னடிகளிற் பேசுகிறார்; சித்திரகூடஞ்சென்று சேர்வதே கர்த்தவ்ய மென்கிறார்.

மஞ்ஞை—மயில். சோலைகளில் மயில்கள் கூத்தாடுவது சோலைகள் தாமே ஆடுவதொக்கு மென்க. "கயலாடுகானீர்ப்பழனம்புடைபோய்த் தேனாட" என்று நீர்நிலங்களிலே வண்டுகள் உலாவுவதாகச் சொன்னது மதுபான நிமித்தமாகவென்க: தீர்த்தங்கள் மதுவோடுகூடிப் பெருகுமாதலால் மதுவில் நசையாலே வண்டுகள் வந்து மொய்க்குமன்றோ; "ஈக்கள் வண்டோடுமொய்ப்ப வரம்பிகந்து, ஊக்கமே மிகுந்து உள்தெளிவின்றியே, தேக்கெறிந்து வருதலிற் றீம்புனல், வாக்கு தேனுகர்மாக்களை மானுமே" ‡ என்ற கம்பராமாயணமுங் காண்க. இவ்வாழ்வார் தாமும் முதல் திருமொழியில் "வண்டறை மாநீர்" என்றதும் நோக்குக. மாடக்கொடியாடு என்ற அடைமொழியினால் அங்குள்ள திருமாளிகைகளின் செல்வமிகுதியைக் காட்டினபடி.

சித்திரகூடம்—விசித்திரமான சிகரங்களையுடையதெனப் பொருள்படுங் காரணப்பெயர். இது இராமபிரான் வநவாஸஞ் செய்தகாலத்து அவனது திருவுள்ளத்திற்கு மிகவும் பாங்காயிருந்ததொரு மலை; அதனைப்போலவே இத்தலமும் எம்பெருமானது திருவுள்ளத்திற்கு மிகவும் பாங்காயிருப்பது பற்றி அப்பெயரே இதற்கும் இடப்பட்டதென்பர். இது தில்லைமரங்களடர்ந்த காடாயிருந்ததனால் 'தில்லைத்திருச்சித்திரகூடம்' என வழங்கப்படும். இங்கு உத்ஸவமூர்த்தி, இராமபிரான் வநவாஸஞ்செய்கையில் சித்திரகூட பர்வதத்தில் வீற்றிருந்த வண்ணமாக எழுந்தருளியிருக்கின்றனர். மூலமூர்த்தி, க்ஷீராப்தி நாதன்போலச் சயனத்திருக்கோலமாகிச் சிவபிரானது நடனத்தைப்பார்த்து ஆமோதித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கின்றனர்.

இத்திருமொழியில் ஒவ்வொரு பாசுரத்திலும் இத்திருப்பதியின் வாசகம் வருமிடத்து, 'திருச்சித்திரகூடம்' என்னாது 'திருச்சித்ரகூடம்' என்றே ஓதுக. "இணைந்தியல் காலை யரலக்ககரமும்" என்ற நன்னூல் விதிப்படி 'சித்ர' என்னும் வடசொல் 'சித்திர' என்று திரியவேண்டுமாயினும் ஓசை குன்றாமைக்

‡ ஆற்றுப்படலம்—21.

காக இங்கு அங்ஙனம் திரியவில்லை: இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டுகிற பத்தாம்பாட்டில் "குன்றுவோலிமாலை" என்று விசேஷித்தருளிச்செய்கையாலே அதற்கிணங்க 'திருச்சித்ரகூடம்' என்ற ஒலி குன்றுதபாடமே ஒக்குமென்க. ... .... .... (க)

காயோடுநீடு கனியுண்டு வீசு
கடுங்கால்நுகர்ந்து நெடுங்காலம் * ஐந்து
தீயூடுநின்று தவஞ்செய்ய வேண்டா
திருமார்பனைச் சிந்தையுள் வைத்துமென்பீர்! *
வாயோதுவேதம் மலிகின்ற தோல்சீர்
மறையாளர்நாளும் முறையால் வளர்த்த *
தீயோங்கவோங்கப் புகழோங்கு தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. (உ)

| | |
|---|---|
| திரு மார்பனை | பிராட்டியைத் திருமார்பிற் கொண்ட பெருமானை |
| சிந்தையுள் வைத்தும் என்பீர் | நெஞ்சில் தரிப்போமென்றிருக்கிற பக்தர்களே!, |
| காயோடு | இளங் காய்களையும் |
| நீடு கனி | நெடுநாளுலர்ந்தபழங்களையும் |
| உண்டு | புஜித்தும் |
| வீசு கடுங் கால் நுகர்ந்து | வீசுகிற உஷ்ணமான காற்றை உட்கொண்டும் |
| நெடுங்காலம் | நெடுநாள் வரையில் |
| ஐந்து தீயூடு நின்று | பஞ்சாக்நி மத்தியில் நின்று கொண்டு |
| தவம் செய்ய வேண்டா | தபஸ்ஸு பண்ணவேண்டா; |

(பின்னை என்செய்ய வேண்டு மென்னில்;)

| | |
|---|---|
| வாய் ஓது வேதம் மலிகின்ற | வாயாலே ஓதப்பட்டு வருகிற வேதங்கள் குறைவற்றிருக்கிற |
| தொல் சீர் | இயற்கையான நற்குணங்களமைந்த |
| மறையாளர் | வைதிகர்கள் |
| நாளும் | நாள்தோறும் |
| முறையால் வளர்த்த | கிரமமாக அநுஷ்டித்த |
| தீ | அக்நிகார்யங்கள் |
| ஓங்க ஓங்க | வளர வளர, (அதனாலே) |
| புகழ் ஓங்கு | கீர்த்தி வளரப்பெற்ற |

தில்லை திரு சித்ரகூடம் சென்று சேர்மின்கள்—.

* * *—கீழ்ப்பாட்டில் "உயிர்காவலிட்டு" என்றதை விவரிக்கிறார் "காயோடு நீடு கனியுண்டு வீசு கடுங்கால் நுகர்ந்து" என்று. இளம்பிஞ்சுகளைத் தின்றும் வெய்யிலிலும் காற்றிலு முலர்ந்து பசையற்ற பழங்களைப் புசித்தும் வீசுகின்ற வெட்டிய காற்றைப் பருகியும் பஞ்சாக்நிமத்யத்தில் நின்று கொண்டு தவஞ்செய்தலாகிற வீண்தொழிலை விட்டிட்டுத் தில்லைத் திருச்சித்ர கூடஞ்சென்று சேர்மின்க ளென்கிறார். பிள்ளைப் பெருமாளையங்கார் இப்பாசுரத்தைத் திருவுள்ளம்பற்றித் திருவரங்கக் கலம்பகத்தில் "காயிலைதின்றுங் கானிலுறைந்துங் கதிதேடித், தீயிடைநின்றும் பூவலம் வந்துந் திரிவீர்காள்,

தாயிலுமன்பன் பூமகள் நண்பன் தடநாகப், பாயன் முகுந்தன் கோயிலரங்கம் பணிவீரே" என்றருளிய பாசுரம் நோக்கத்தக்கது.

வாயோதுவேதம்=1. "வாசோவை வாசோவைஷ்ணா வவணதகூவு:" என்றும் 2. "தஸ்மைத உஹா ஸ்ருஜாவ தயஉவாவ ஸ்ருஜாவ திஜநவெ உநு: ஸ்ருஜாஹ்யு:" என்றும் சொல்லுமாபோலே உச்சாரண அநூச்சாரண ரூபமான அத்யயந பரம்பரையாக ஓதப்பட்டு வருகிற வேதம் என்றபடி: "ஓலைப்படா ப்ரமாணம்" என்றும் "எழுதாமறை" என்றும் சொல்லக்கடவதிறே.

"தீயோடு நின்று" என்றும் ஓதுவர். ... ... ... (௨)

வெம்புஞ்சினத்துப் புனக்கேழ லொன்ருய்
விரிநீர் முதுவெள்ள முள்புக்கழுந்த *
வம்புண்பொழில்சூ ழுலகன் றெடுத்தா
னடிப்போதணைவான் விருப்போ டிருப்பீர்! *
பைம்பொன்னுமுத்தும் மணியுங் கொணர்ந்து
படைமன்னவன் பல்லவர்கோன் பணிந்த *
செம்பொன் மணிமாடங்கள்சூழ்ந்த தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. (௩)

வம்பு உண் பொழில் சூழ் உலகு — வாஸனை வீசுகின்ற சோலைகளால் சூழப்பட்ட பூமியானது
விரி முதுநீர் வெள்ளம் உள் புக்கு — பரந்த கடல் வெள்ளத்தினுள்ளே புகுந்து
அழுந்த — மூழ்கிப்போக
அன்று — அக்காலத்து,
வெம்பும் சினம் புனம் கேழல் ஒன்று ஆய் — மிக்க கோபத்தை யுடைத்தாய் விலக்ஷண மான காட்டுவராஹத் திருவுருவாகி
எடுத்தான் — (அப்பூமியை அங்குநின்றும்) உத்தரிப்பித்துக் கொணர்ந்த பெருமானுடைய
அடி போது — பாதாரவிந்தத்தை
அணைவான் விருப்போடு இருப்பீர் — சார வேணுமென்னும் ஆசைகொண்டிருக்கும் அன்பர்களே!,
மன்னவன் பல்லவர் கோன் — பல்லவ ராஜன்
பை பொன்னும் — அழகிய பொற்பூக்களையும்
முத்தும் — முத்துக்களையும்
மணியும் — மாணிக்கங்களையும்
கொணர்ந்து — கொண்டுவந்து(ஸமர்ப்பித்து)
படை — தனதுபரிவாரங்களோடுகூட
பணிந்த — ஆச்ரயிக்கப் பெற்றதும்
செம் பொன் மணி மாடங்கள் சூழ்ந்த — அழகிய பொன்னாலும் ரத்னங்களாலும் செய்யப் பட்ட மாடங்களால் சூழப்பட்டதுமான
தில்லை ... சேர்மின்கள்—.

* * *—மஹாவராஹமாகத் திருவவதரித்து மஹோபகாரஞ் செய்தருளின பெருமானுடைய பாதாரவிந்தங்களைப் பணிய விருப்பமுடையவர்களே!,

1. தைத்திரீய காடகச்ருதியின் முடிவில். 2. சாந்தோக்ய உபநிஷத்தின் முடிவில்.

பல்லவராஜன் ஸபரிவாரனாய்வந்து நவரத்நங்களையுங் கொணர்ந்து ஸமர்ப்பித்துக் கைங்கரியங்கள் செய்த தலமாகிய தில்லைத்திருச்சித்திர கூடத்தைச் சென்று சேருங்களென்கிறார். ... .... ... (௩)

அருமாநில மன்றளப்பான் குறளாய்
அவுணன் பெருவேள்வியில் சென்றிரந்த *
பெருமான் திருநாமம்பிதற்றி நுந்தம்
பிறவித்துயர் நீங்குதுமென்ன கிற்பீர்! *
கருமாகடலுள் கிடந்தா னுவந்து
கவைநா வரவினணைப் பள்ளியின்மேல் *
திருமால் திருமங்கையோடாடு தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. (௪)

| | |
|---|---|
| அன்று | முன்பொரு காலத்தில், |
| அரு மா நிலம் | ஒருவராலும் அளக்கமுடியாத பெரிய பூமியை |
| அளப்பான் | அளப்பதற்காக |
| குறள் ஆய் | வாமநரூபியாகி |
| அவுணன் பெரு வேள்வியில் சென்று | மாவலியென்னு மசுரனுடைய பெரிய யாகபூமியிற் சென்று |
| இரந்த | (மூவடிமண்) யாசித்த |
| பெருமான் | எம்பெருமானுடைய |
| திரு நாமம் பிதற்றி | திருநாமங்களை வாயாரச் சொல்லி |
| நும்தம் பிறவி துயர் நீங்குதும் என்ன கிற்பீர் | உங்களுடைய ஸம்ஸார துக்கங்களைப் போக்கிக்கொள்ள நினைத்திருக்கு மன்பர்களே!, |
| கரு மா கடலுள் | கறுத்துப் பெரிய கடலிலே |
| கவை நா அரவின் அணை பள்ளியின்மேல் | இரட்டை நாவையுடைய திருவனந் தாழ்வானாகிற திருப்பள்ளி மெத்தையின்மேல் |
| உவந்து கிடந்தான் திருமால் | மகிழ்ந்து சயனித் தருள்பவனான திருமால் |
| திரு மங்கையோடு ஆடு | பிராட்டியோடு நித்யவாஸம் பண்ணப்பெற்ற |

தில்லை...சேர்மின்கள்—.

* * *—மஹாபலியின் அபிமானத்தி லொதுங்கிக்கிடந்த மாநிலங்களை ஸ்வாதீநப்படுத்திக் கொள்வதற்காக யாசக வேஷத்துடனே வாமந ப்ரஹ்மசாரியாய் அவனது யாக பூமியிற்சென்று மூவடிமண் தாவென்றிரந்து உடனே தன் பெருமையைப் பிரகாசப்படுத்தின ஸர்வேச்வரனுடைய திருநாமங்களை வாய்வந்தபடி சொல்லி மோக்ஷமடையப் பெறுவோ மென்றிருக்குமவர்களே !, திருப்பாற்கடலிலே திருவனந்தாழ்வான் மீது பள்ளி கொண்டிருக்குந் திருக்கோலமாக எம்பெருமான் (மூலமூர்த்தி) ஸேவைஸாதித் தருளுமிடமான தில்லைத் திருச்சித்ர கூடஞ்சென்று சேருங்களென்கிறார்.

கவை நாவரவு=கவை—பிளவு. .... ... ... (௪)

கோமங்க வங்கக்கடல் வையமுய்யக்
குலமன்னரங்கம் மழுவில் துணிய *
தாமங்கமருள் படைதொட்ட வென்றித்
தவமாமுனியைத் தமக்காக்க கிற்பீர்! *
பூமங்கைதங்கிப் புலமங்கை மன்னிப்
புகழ்மங்கையெங்குந் திகழப் புகழ்சேர் *
சேமங்கொள்பைம்பூம் பொழில்சூழ்ந்த தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. (௫)

| | |
|---|---|
| கோ | க்ஷத்ரியர்கள் |
| மங்க | அழியவும் |
| வங்கம் கடல் வையம் உய்ய | மரக்கலங்கள் நிறைந்த கடலால் சூழப்பட்ட பூமியிலுள்ளார் உஜ்ஜீவிக்கவும் |
| குலமன்னர் அங்கம் மழு வில் துணிய | ராஜாக்களுடைய சரீரம் மழுவாலே துணிபடவும் |
| தாம் | தாமே |
| அங்கு அமருள் | அப்போதுண்டான போர்க்களத்திலே (புகுந்து) |
| படை தொட்ட | ஆயுதத்தொழில் புரிந்த |
| வென்றி தவம் மா முனியை | ஜயசீலனுய்த் தபஸ்வியான பரசுராமனுக அவதாரம் பண்ணின பெருமானை |
| தமக்கு ஆக்க கிற்பீர் | ஸ்வாதீனப்படுத்திக்கொள்ள நினைக்குமன்பர்களே !, |
| பூ மங்கை | பெரிய பிராட்டியார் |
| தங்கி | (வலவருகே) தங்கியும் |
| புலம் மங்கை | பூமிப்பிராட்டியார் |
| மன்னி | (இடவருகே) பொருந்தியும் |
| புகழ் மங்கை எங்கும் திகழ | கீர்த்தியாகிற மங்கை எல்லா விடங்களிலும் வியாபித்து விளங்கவும் பெற்று |
| புகழ் சேர் சேமம் கொள் | புகழோடு கூடிய க்ஷேமத்தை யுடைத்தாய் |
| பை பூ பொழில் சூழ்ந்த | பரந்து பூத்த சோலைகளால் சூழப்பட்ட |

தில்லை...சேர்மின்கள்—.

* * *—ஸ்ரீமந்நாராயணனுக்கும் பரசுராமனுக்கும் ஒற்றுமை நயம்பற்றி யருளிச்செய்வன முன்னடிகள். உலகத்திலே எவரும் அழிப்பவரில்லாமை யால் கொழுத்துத்திரிந்து கொடுமையியற்றிவந்த க்ஷத்ரிய வம்சங்கள் பலவற்றை நாசஞ் செய்தற் பொருட்டு நாராயண மூர்த்தி ஜமதக்நி முனிவரது மனைவியான ரேணுகையினிடம் இராமனுய்த் திருவவதரித்து, 'பரசு' என்னும் கோடாலிப் படையை ஆயுதமாகக்கொண்டு அதனுற் பரசுராமனென வழங்கப்பெற்று, தனது தந்தையின் ஹோமதேநுவைக் கவர்ந்து அவனைக் கொன்றிட்டது காரணமாகக் கார்த்தவீர்யார்ஜுநனையும் அவனது குமாரர்களையுங் கொன்று அதனுலேயே க்ஷத்ரியவம்சம் முழுவதன்மேலும் கோபாவேசங்கொண்டு உலகத்திலுள்ள அரசர்கள் பலரையும் இருபத்தொருதலைமுறை பொருது ஒழித்திட்டான்; இப்பரசுராமன் ஏழு சிரஞ்சீவிகளில் ஒருவன். இவனது வலிமையும் வெற்றியும் அற்புதமானது. சிவபிரானது கைலாஸகிரியைப் பெயர்த்தெடுத்த இராவணன்

மிக வலியவனென்றும், அவனினும் கார்த்தவீரியன் வலியவனென்றும் அவனினும் பரசுராமன் வலியவனென்றும் இதிஹாஸங்களால் விளங்கும். விஷத்தையுண்டு கங்கையைத் தரித்து மேரு வில்வளைத்துத் திரிபுரமெரித்து மன்மதனை நீறுபடுத்தி யமனையுதைத்து ஸம்ஹாரத் தொழில் நிகழ்த்தும் பேராற்றலையுடைய உக்ரமூர்த்தியாவான் ருத்ரன்; அக்கடவுள் வீற்றிருக்கின்ற கைலாஸகிரியை ஒருகால் இராவணன் வேரோடு பெயர்த்தனன். அங்ஙனம் மிக வலியனாய் திக்விஜயஞ் செய்து திக்கஜங்களையும் வென்ற இராவணனைக் கார்த்தவீர்யார்ஜுநன் கட்டிச் சிறையிலிட்டனன். அவனைப் பரசுராமபிரான் தோள் துணித்துத் தொலைத்திட்டனன்.

எம்பெருமானுடைய தசாவதாரங்களுள் ஆறும் அவதாரமான இப் பரசுராமன் ஏழாம் அவதாரமான தசரதராமன்மீது கோபித்தலும், இவ்விருவரும் ஒருவரோடொருவர் பொருதலும், அவர்களில் ஒருவர் மற்றொருவரை வெல்லுதலும் பொருந்துமோ வெனின்;—துஷ்டர்களாய்க் கொழுத்துத் திரிந்த அரசர்களைக் கொல்லும் பொருட்டுப் பரசுராமனிடத்தில் ஆவேசித்திருந்த விஷ்ணு சக்தி விசேஷமானது அக்காரியம் முடிந்த பின்பு அவ்விஷ்ணுவின் அம்சாவதாரமான தசரதராமனாற் கவர்ந்து கொள்ளப்பட்டதாகையாற் பொருந்து மென்க. இதனால், ஆவேசாவதாரத்திற் காட்டிலும் அம்சாவதாரத்திற்கு உள்ள ஏற்றம் விளங்கும்.

ஸ்ரீமந் நாராயணனது விபவாவதாரங்கள் அளவற்றவை. அவை முக்கியம் அமுக்கியம் என இருவகைப்படும். இவற்றில் முந்தியது சிறந்தது; பிந்தியது அதனினும் தாழ்ந்தது. முக்கியமாவது ஸாக்ஷாதவதாரம்; அமுக்கியமாவது ஆவேசாவதாரம். ஆவேசந்தான் ஸ்வரூபாவேசமென்றும் சக்தியாவேசமென்றும் இருவகையதாம்; ஸ்வரூபாவேசமாவது சேதநருடைய சரீரங்களில் எம்பெருமான் தன்னுடைய ரூபத்துடன் ஆவேசித்து நிற்பது. பரசுராமன், பலராமன் போல்வார் இத்திறத்தார்கள். சக்தியாவேசமாவது சேதநர்பக்கல் காரிய காலத்திலே எம்பெருமான் சக்திமாத்திரத்தால் தோன்றி விளங்குதல். கார்த்தவீர்யார்ஜுநன், அர்ஜுநன், வ்யாஸர்போல்வார் இத்திறத்தார். இவற்றில் சக்தியாவேசத்தைவிட ஸ்வரூபாவேசம் பிரபலம். இவற்றின் உண்மை நிலையை விஷ்வக்ஸேந ஸம்ஹிதை முதலிய ஸ்ரீபாஞ்சராத்ர ஸம்ஹிதைகளிலும் தத்வத்ரயத்திலும் அதன் வியாக்கியானத்திலும் பரக்கக் காணலாம். பரசுராமாவதாரம் ஸ்வரூபாவேசாவதாரம்.

இராமாநுச நூற்றந்தாதியில் "கோக்குல மன்னரை மூவெழுகால்" என்ற ஐம்பத்தாறும் பாசுரத்தின் உரையிலே ஸ்ரீ மணவாளமாமுனிகள்—"பரசுராமாவதாரம் அஹங்கார யுக்தஜீவனை அதிஷ்டித்து நிற்கையாலே முமுக்ஷுக்களுக்கு அநுபாஸ்யமன்றோ? போக்கியதேவனைப்போற்றும்புனிதனென்பானென்னென்னில்; அதுக்குக் குறையில்லை; விரோதி நிரஸநம் பண்ணின உபகாரத்துக்குத் தோற்று ஸ்துதிக்கிற மாத்ரமொழிய ததுபாஸந மல்லாமையாலே.

'மன்னடங்க மழுவலங்கைக் கொண்ட இராமநம்பி!' என்றும் 'வென்றிமா மழு வேந்தி முன் மண்மிசை மன்னரை மூவெழுகால் கொன்றதேவா!' என்றும் ஆழ்வார்களருளிச் செய்ததும் விரோதி நிரஸந ஸ்வபாவத்துக்குத் தோற்றுத் துதித்ததித்தனையிறே." என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் இங்கு ஸ்மரிக்கத்தக்கன. ஆகவே இங்கு "வென்றித் தவமாமுனியைத் தமக்காக்ககிற்பீர்" என்றதில் குறையொன்று மில்லையென்க.

வங்கக் கடல்=வங்கமென்று கப்பலுக்குப் பெயர்; இனி "ஸமுத்ராம்ப ஊர்மி-வ-ரீ" என்ற அமரகோசத்தின்படி பங்கம் என்ற வடசொல் அலைக்கு வாசகமாகையால் அச்சொல்லே வங்கமெனத் திரிந்ததென்று கொண்டு 'அலை கடல்' என்று பொருள்கொள்வதும் பொருந்தும்.

ஸ்ரீதேவி, பூதேவி, கீர்த்திதேவி என எம்பெருமானுக்கு மூன்று திவ்ய மஹிஷிகளாம்; இவர்களுள் முதல்தேவி எம்பெருமானுடைய வலப்பக்கத்தைப் பற்றினள்; இரண்டாந்தேவி இடப்பக்கத்தைப் பற்றினள்; (கீர்த்தியென்னும்) மூன்றாந்தேவி உலகை முழுவதையும் இடமாகப் பற்றினுள் என்று ஒரு சமத்காரம் பொலியப் பேசுகிறார் காண்மின். ஸ்ரீதேவி பூதேவிகட்கு வல்லபனென்று உலகம் நிறைந்த புகழ்பெற்றிருக்கிற எம்பெருமான் நித்யவாஸம் பண்ணுகிற தில்லைத் திருச்சித்ரகூடமென்றதாயிற்று.

சேமம்—க்ஷேமம். .... ... ... ... ... ... (ரு)

நெய்வாயழலம்பு துரந்து முந்நீர்
துணியப்பணிகொண் டணியார்ந்து * இலங்கு
மையார்மணி வண்ணனை யெண்ணிநுந்தம்
மனத்தே யிருத்தும்படி வாழவல்லீர்! *
அவ்வா யிளமங்கையர் பேசவுந்தான்
அருமாமறை யந்தணர் சிந்தைபுக *
செவ்வாய்க்கிளி நான்மறைபாடு தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. (சு)

| | |
|---|---|
| நெய் வாய் அழல் அம்பு | கூர்மை பொருந்திய வாயையுடைத்தாய் அக்நியைச் சொரிகின்ற அம்பை |
| துரந்து | பிரயோகித்து |
| முந்நீர் துணிய | ஸமுத்ரத்தை த்வம்ஸம் செய்ய முயன்று (பின்பு ஸமுத்ரராஜன் அநுகூலித்து வந்தவாறே) |
| பணி கொண்டு | (அவன்மேலே அணை கட்டுகையாகிற) கைங்கரியத்தை அவனால் கொண்டவனும் |
| அணி ஆர்ந்து இலங்கு மை ஆர் மணி வண்ணனை | ஆபரணங்கள் நிறைந்து விளங்குகின்ற கருமணிபோன்ற வடிவையுடையனுயுமிருக்கிற பெருமானை |
| எண்ணி | சிந்தித்து |
| நும் தம் | உங்களுடைய |
| மனத்தே | நெஞ்சிலே |
| இருத்தும்படி வாழ வல்லீர் | (அவனை) இருத்தி வாழ நினைத்திருக்கும் மன்பர்களே!, |

| | | | |
|---|---|---|---|
| அவ்வாய் | அப்படிப்பட்ட வாயை யுடைய | செம் வாய் கிளி | சிவந்த வாயையுடைய கிளிகளானவை |
| இள மங்கையர் | சிறு பெண்கள் | அந்தணர் சிந்தை புக | பிராஹ்மணர்கட்கும் மநோஹரமாக |
| அரு மா மறை | (காதால் கேட்டுக்கேட்டு முக பாடமான) அரிய பெரிய வேதவாக்கியங்களை | நால் மறை | நான்கு வேதங்களையும் |
| பேசவும் | சொல்லாநிற்க (அப்பெண்க ளுடனே கூட) | பாடு | பாடுமிடமான |
| | | | தில்லை...சேர்மின்கள்—. |

* * *—ஸ்ரீ ராமாவதாரத்தில் கடலில் அணைகட்டின பெருமானையே சிந்தித்து வாழுமன்பர்களே! சித்திரகூடஞ் சென்று சேர்மின்க ளென்கிறார்.

விபீஷணாழ்வான் இராமபிரான் பக்கல்வந்து சேர்ந்து உய்ந்தபின் பெருமானைப் பார்த்து 'ஸ்வாமிந்! இந்த நம்முடைய ஸேனைகள் கடலைக் கடந்து அப்பாற் செல்லவேண்டுமாதலால் அதற்காகக் கடலரசனை நீர் சரணம் புகவேணும்' என்ன, இராமபிரான் 'கடலைக் கடக்க உபாயம் சொல்லவேண்டும்' என்று கடலரசனாகிய வருணனைப் பிரார்த்தித்துத் தர்ப்பசயனத்திலேபடுத்து மூன்று நாளளவும் ப்ராயோபவேசமாகக் கிடக்க, ஸமுத்ரராஜன் அப்பெருமானது மஹிமையைக் கருதாமல் உபேக்ஷயா யிருந்துவிடவே ஸ்ரீராமன் அதுகண்டு கோபங்கொண்டு 'அனைவரும் நடந்தே செல்லும்படி கடலை வற்றச்செய்வேன்' என்று ஆக்நேயாஸ்த்ரத்தைத் தொடுக்கத் தொடங்கியவளவிலே வருணன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து இராமபிரானைச் சரணமடைந்து கடல்வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு, நளன்கையினால் நீரில் போட்ட கற்களும் மிதக்குமென்று அவனுக்கு அவன் தகப்பனார் வரமளித் திருக்கிறாராகையால் அவனைக்கொண்டு ஸேதுகட்ட வேணுமென்று சொல்லிவிட்டு மறைந்திட்டான். இராகவனும் அப்படியே மற்ற வானரங்கள் சுற்றுமுள்ள மலைகளைப் பிடுங்கிக் கொண்டுவந்து நளன்கையில் கொடுக்கச்செய்து நளன்கையினால் அம்மலைகளை நீரில் போகடுவித்து ஸேது கட்டுவித்தானென்ற வரலாறு இங்கு உணரத்தக்கது.

[அவ்வாயிளமங்கையர் இத்யாதி.] இத் திருப்பதியில் வைதிக ப்ராஹ்மணர்கள் விசேஷமாக விளங்குவர்; "மூவாயிர நான்மறையாளர் நாளும் முறையால் வணங்க" என்று இவர்தாமே மேலேயருளிச் செய்வதும், 1. "தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள், அந்தணர்களொரு மூவாயிரவரேத்த அணிமணி யாசனத்திருந்த வம்மான்றானே" என்று ஸ்ரீகுலசேகரப்பெருமா ளருளிச்செய்ததும் குறிக்கொள்ளத் தக்கன. "நாங்கை நாலாயிரம், தில்லை மூவாயிரம்" என்ற வழக்குச் சொல்லுமொன்றுண்டு. அந்த அந்தணர்கள் அநவரதமும் வேத மோதிக்கொண்டே யிருக்கையாலே அவ்வீட்டுப் பெண் பிள்ளைகளும் ஸர்வதா காதில்பட்ட வுறைப்பின் மிகுதியால் வேதங்களைச் சொல்ல, அவர்க

1. பெருமாள் திருமொழி 10—2.

ளது கையிலேயிருந்து வளர்ந்து பேசிற்றேபேசுங் கிளிப்பிள்ளைகளும் நான் மறைகள் பாடுகின்றனவாம். ஆகவிப்படி வைதிக புருஷர்கள் வாயிலும் பெண் பிள்ளைகளின் வாயிலும் பக்ஷிகளின் வாயிலும் வேதவொலியே மலியப் பெற்றது இத்தலம் என்றாராயிற்று.

அவ்வாயிளமங்கையர் என்றது—மேலே சொல்லப்படுங் கிளிகளின்வாய் போன்று பழுத்த வாயையுடைய சிறுமிகள் என்றபடி. **அந்தணர்சிந்தைபுக**= கிளிகள் வேதஞ்சொல்வதைக் கேட்ட அந்தணர்கள் 'அத்யயநத்துக்கு இட்டுப் பிறவாத இப்பக்ஷிகள் வேதமோதுகிற விசித்திரம் என்னே!' என்று மனமுருகும்படியாக. ... ... ... (சு)

மௌவல்குழலாய்ச்சி மென்தோள் நயந்து
மகரஞ்சுழலச் சுழல்நீர் பயந்த *
தெய்வத் திருமா மலர்மங்கைதங்கு
திருமார்பனைச் சிந்தையுள் வைத்துமென்பீர்! *
கௌவைக்களிற்றின் மருப்பும் பொருப்பில்
கமழ்சந்துமுந்தி நிவா வலங்கொள் *
தெய்வப்புனல்சூழ்ந் தழகாய தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. (எ)

| | | | |
|---|---|---|---|
| மௌவல் குழல் ஆய்ச்சி | முல்லைப்பூவைக் கூந்தலிலே அணிந்துள்ள நப்பின்னைப் பிராட்டியினுடைய | கௌவை களிற்றின் மருப்பும் | (சிங்கத்தோடே பிணங்கிப்) பிளிறுகிற யானையின் கொம்புகளையும் |
| மெல் தோள் நயந்து | மெல்லிய தோள்களை விரும்பி யணைந்தவனும், | பொருப்பில் | மலையிலுள்ள |
| மகரம் சுழல சுழல் நீர் பயந்த | மீன்கள் சுழலும்படி சுழன்று வருகிற கடலினால் பிரஸவிக்கப்பட்ட | கமழ் சந்தும் | மணங்கமழ்கின்ற சந்தன மரங்களையும் |
| | | உந்தி | தள்ளிக்கொண்டு |
| தெய்வம் திரு மா மலர் மங்கை | அழகிய பெரிய பிராட்டியார் | நிவா | 'நிவா' என்கிற ஆறானது |
| தங்கு | நித்யவாஸம் பண்ணப்பெற்ற | வலங்கொள் | சுற்றிலும் பிரவஹிக்கப் பெற்றதும் |
| திரு மார்பனை | திருமார்பை யுடையவனுமான பெருமானை | தெய்வம் புனல் சூழ்ந்து அழகாய | புண்ய தீர்த்தங்களால் சூழப்பட்டு அழகியதுமான |
| சிந்தையுள் வைத்தும் என்பீர் | நெஞ்சில் வைக்கவேண்டி யிருக்குமன்பர்களே!, | தில்லை........சேர்மின்கள்—. | |

* * *—நப்பின்னைப்பிராட்டிக்கும் பெரிய பிராட்டியார்க்கும் கொழுநனை எம்பெருமானையே இடைவிடாது சிந்தைசெய்யு மன்பர்காள்!, யானைத் தந்தங்களையும் மலயபர்வதத்துச் சந்தன மரங்களையும் தள்ளிக்கொண்டு பெருகுகின்ற நிவாவென்னும் நதி புடைசூழப் பெற்றதும் மற்றும் பலபல புண்ய தீர்த்

தங்கள் விளங்கப்பெற்றதுமான தில்லைத் திருச்சித்திரகூடத்தைச் சென்று சேர்மின்களென்கிறார்.

"மௌவல் குழலாய்ச்சி மென்தோள் நயந்து" என்றது—நப்பின்னை மணாளனாயிருக்குமாற்றைச் சொன்னபடி. பெரிய பிராட்டியார், பாற்கடல் கடையும்போது அதில் நின்றுந் தோன்றினவளாதலால் "நீர்பயந்த தெய்வத் திருமாமலர் மங்கை" என்றார். மகரம்—மீனுக்கும் முதலைக்கும் பெயர்.

கௌவை எனினும் கவ்வை எனினும் ஒக்கும்; பேரொலி என்று பொருள். (மதநீர் என்பாருஞ் சிலருண்டு.) சந்து—சந்தநமென்ற வடசொற் சிதைவு. நிவா—வெள்ளாறு; இத்தலத்திற் பெருகுவதொரு நதி. ... (எ)

மாவாயி னங்கம் மதியாதுகீறி
 மழைமாமுதுகுன் றெடுத்து * ஆயர்தங்கள்
கோவாய்நிரைமேய்த் துலகுண்ட மாயன்
 குரைமா கழல்கூடுங் குறிப்புடையீர்!
மூவாயிர நான்மறையாளர் நாளும்
 முறையால்வணங்க வணங்காய சோதி *
தேவாதிதேவன் திகழ்கின்ற தில்லைத்
 திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. (அ)

| | |
|---|---|
| மா | கேசியென்னும் குதிரை வடிவாக வந்த அசுரனுடைய |
| வாயின் | வாயோடுகூட |
| அங்கம் | (அதன்) உடலையும் |
| மதியாது கீறி | அலக்ஷியமாகப் பிளந்தொழித்தவனும், |
| மழை | (இந்திரன் பெய்வித்த) பெருமழைக்காக |
| மா முது குன்று எடுத்து | பெரிய பழைய கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்துப் பிடித்தவனும் |
| ஆயர் தங்கள் கோ ஆய் | இடையர்கட்குத் தலைவனாய் |
| நிரை மேய்த்து | பசுக்களை மேய்த்தவனும் |
| உலகு உண்ட | (பிரளய காலத்தில்) உலகங்களை உண்டவனுமிருக்கிற |
| மாயன் | எம்பெருமானுடைய |
| குரை மா கழல் | ஆபரணவொலி பொருந்திய சிறந்த திருவடிகளை |
| கூடும் குறிப்பு உடையீர் | சேரவேணுமென்னும் நினைவுடைய அன்பர்களே!, |
| மூவாயிரம் நான்மறையாளர் | மூவாயிரம் பிராமணர்கள் |
| நாளும் | நாள்தோறும் |
| முறையால் | முறைமைப்படி |
| வணங்க | வந்து பணியப்பெற்று |
| அணங்கு ஆய சோதி | அப்ராக்ருதமான தேஜஸ்ஸை யுடையனான |
| தேவாதி தேவன் | ஸர்வேச்வரன் |
| திகழ்கின்ற | விளங்குகின்ற |
| | தில்லை.........சேர்மின்கள்—. |

* * *—ஒருநாள் கம்ஸனாலேவப்பட்ட கேசியென்பானோர் அஸுரன் குதிரையினுருவத்தோடு ஆயர்கள் அஞ்சி நடுங்கும்படி கனைத்துத் தூரத்திக்

கொண்டு தன்மேற் பாய்ந்துவர, தன்திருக்கையை நன்ருய்ப் பெருக்கி நீட்டி அதன்வாயிற் கொடுத்துத் தாக்கிப் பற்களையுதிர்த்து உதட்டைப்பிளந்து அதனுடம்பையும் இருபிளவாக வகிர்ந்து தள்ளினவனும், கோவர்த்தன மலையைக் கொற்றக் குடையாகத் தாங்கிக் கோநிரை காத்தவனும், இட்டமான பசுக்களை இனிது மறித்து நீரூட்டி விட்டுக்கொண்டு விளையாடினவனும், பிரளயாபத்திலே அனைத்தையும் திருவயிற்றினுள்ளே புகுவித்துப் பாதுகாத்தவனுமான ஸர்வேச்வரனது திருவடியைச் சேர விரும்பியிருக்கு மன்பர்காள்!, மூவாயிரவரென்று கணக்கிடப் பெற்றிருந்த வைதிக ப்ராஹ்மணர்களினுல் ஆச்ரயிக்கப்பட்ட பரஞ்சோதி பரமபுருஷன் வாழுமிடமான தில்லைத் திருச்சித்ரகூடத்தைச் சென்று சேருங்களென்கிருர்.

அணங்காயசோதி=அணங்கு—தெய்வம். திவ்யமான சோதியையுடைய என்றபடி. தேவாதி தேவன்—வடசொல் தொடர். ... .... (அ)

சேருநீலவேற்கண் மடவார் திறத்துச்
சினத்தோடேநின்று மனத்தால் வளர்க்கும் *
அருநீலபாவ மகலப் புகழ்சேர்
அமரர்க்குமெய்தாத வண்டத் திருப்பீர்! *
பெருநீர்நிவாவுந்தி முத்தம் கொணர்ந்து
எங்கும்வித்தும்வயலுள் கயல்பாய்ந் துகள *
திருநீலநின்று திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே. (௯)

| | |
|---|---|
| செரு நீலம் வேல் கண் | யுத்தத்திற்குக் கருவியாய் நீல நிறத்ததான வேல் போன்றகண்களையுடைய |
| மடவார் திறத்து | ஸ்த்ரீகள் விஷயமாக வுண்டான |
| சினத்தோடு நின்று | கோபத்தோடு கூடியிருந்து |
| மனத்தால் வளர்க்கும் | நெஞ்சினுலே மேன்மேலும் வ்ருத்தி செய்விக்கப்படுகிற |
| அரு | போக்கமுடியாத |
| நீலம் | நெஞ்சை யிருள்மூடப் பண்ணுகிற |
| பாவம் | பாவங்கள் |
| அகல | நீங்கப்பெற்று |
| புகழ் சேர் அமரர்க்கும் எய்தாத அண்டத்து இருப்பீர் | புகழையுடைய பிரமன் முதலிய தேவர்கட்கும் துர்லபமான பரமபதத்திலே இருக்கவேண்டியிருக்கு மன்பர்களே!, |
| பெரு நீர் | மிக்க நீரையுடைய |
| நிவா | 'நிவா' என்னும் ஆருனது |
| முத்தம் கொணர்ந்து உந்தி வித்தும் | முத்துக்களைக் கொண்டுவந்து தள்ளி விதைவிதைத்தாற்போலே சொருகப்பெற்ற |
| வயலுள் எங்கும் | வயல்களி லெல்லாம் |
| கயல் | மீன்கள் |
| பாய்ந்து உகள | குதித்துத் துள்ளவும் |
| திரு நீலம் | அழகிய நெய்தல்மலர்கள் |
| நின்று திகழ்கின்ற | எப்போதும் விளங்கவும் பெற்ற |

தில்லை........சேர்மின்கள்—.

* * *—மடவார்திறத்துச்சினமாவது—மடவார் நிமித்தமாக வுண்டாகிற பகை; அதாவது என்னென்னில்; தான் ஒரு மாதரை ஆசைப்பட்டிருக்க மற்றொருவனும் அவளிடத்தே ஆசைவைத்து இவனை அருகு நாடவொட்டாமல் அடித்துத்தள்ள, எப்பாடுபட்டாவது அந்தமாதரைத் தான் பரிக்ரஹித்தே தீருவதென்கிற தீவ்ரமான நோக்கத்தினால் மற்றவனைக் கொலைசெய்துவிடு மளவுந் துணிந்து நிற்கை. இப்படிப்பட்ட துணிவினால் செய்யப்படும் பாவங்கள் பகவத் ப்ராப்திக்கு இடையூறுதலால் அவற்றைபகற்றி, தேவதைகட்கும் எட்டா நிலமாகிய பரமபதத்திற் சென்று சேர்ந்து நித்ய கைங்கரியம் பண்ண வேணுமென்று விருப்புற்றிருக்குமவர்களே! என்று அன்பர்களை விளிக்கிறார் முன்னடிகளில். அன்னவர்களை விளித்து, 'நீங்கள் தில்லைத் திருச்சித்திர கூடம் சென்று சேர்மின்கள்' என்று சொல்லுவதன் கருத்து இருவகையதாம். சித்திரகூடத்திலே நீங்கள் சிலகாலமாவது வாழ்ந்தால்தான் உங்கட்குப் பரமபத ப்ராப்தி உண்டாகும் என்பதாக ஒருகருத்து; பரமபதத்துக்குப் போக வேணுமென்கிற விருப்பம் உங்கட்கு ஏதுக்காக?; வீணான அந்த விருப்பத்தை விட்டிட்டுச் சித்திரகூடம் சென்று சேர்ந்தீர்களாகில் அவ்விடத்திருப்பே உங்கட்குப் பரமபத வாழ்ச்சியாங்கிடீர் என்பதாக மற்றொரு கருத்து.

செருநீலவேற்கண்=செருச்செய்யும் வேலையும் நீலமலரையும் போன்ற கண்களையுடைய மடவார் என்றுரைத்தலுமாம். மடவாருடைய கலவிக்குப் பிரதிபந்தகர்களாமவர்விஷயத்திலுண்டாகுஞ் சினத்தை மடவார்திறத்துச்சின மென்றது—அதற்கு மடவார்களே மூலகாரணமாதல் பற்றியென்க. "கூனியின் சொல்லால் இராமன் வநவாசஞ்சென்றான்" என்பதை இதற்கு ஒருபுடை ஒப்பாகக் கொள்க.

அருநீலபாவமகல=அருமையாயும் நீலமாயுமிருக்கிற பாவம் நீங்க; எப்படிப்பட்ட ப்ராயச்சித்தங்களாலும் போக்கமுடியாதனவாதலால் 'அரு' என்றது; நெஞ்சை இருளப்பண்ணுதலால் நீலமென்றது. மூன்றாமடியில் "வித்தும்வயலுள்" என்றது வினைத்தொகை. வித்து—வினைப்பகுதி: வித்துதல்—விதைத்தல். இங்கு வித்தும்வயலென்றது—விதைக்கப்பெற்ற வயலென்றபடி. வெள்ளாறு பெரு வெள்ளமாய்ப் பெருகி வரும்போது முத்துக்களைக் கொழித்துக் கொண்டுவந்து கழனிகளில் தள்ள, அந்த முத்துக்கள் விதை விதைத்தது போல் விளங்க, அவற்றை மீன்கள்கண்டு 'இவை என்னவோ!' என்று வெருவித் தாவித் திரிகின்றன வென்று ஸ்வபாவோக்தியாகக் கூறினவாறு. .... (கூ)

சீரார்பொழில்சூழ்ந் தழகாய தில்லைத்
திருச்சித்ரகூடத்துறை செங்கண் மாலுக்கு *
ஆராதவுள்ளத் தவர்கேட் டேவப்ப
அலைநீருலகுக் கருளே புரியும் *

காரார்புயற்கைக் கலிகன்றி குன்றாவொலிமாலை
யோரொன்பதோ டொன்றும் வல்லார் *
பாராருலக மளந்தா னடிக்கீழ்ப்
பலகாலம்நிற்கும்படி வாழ்வர் தாமே. (௰)

| | | | |
|---|---|---|---|
| சீர் ஆர் பொழில் சூழ்ந்து அழகாய | சிறந்த சோலைகளால் சூழப்பட்டு அழகுபெற்ற | கார் ஆர் புயல் கை | காளமேகம்போல் உதாரரான |
| தில்லை திரு சித்ர கூடத்து | தில்லைத் திருச்சித்திர கூடத்திலே | கலிகன்றி | திருமங்கையாழ்வார் (அருளிச் செய்த) |
| உறை | நித்யவாஸம் பண்ணுகிற | குன்றா ஒலி | குறையாத ஓசையை யுடைத்தான |
| செங்கண் மாலுக்கு | புண்டரீகாக்ஷனை பெருமான் விஷயமாக, | மாலை | சொல்மாலையாகிய |
| ஆராத உள்ளத்தவர் | எவ்வளவு பகவதநுபவம் பண்ணினாலும் திருப்தி பிறவாத நெஞ்சை யுடையரான அன்பர்கள் | ஓர் ஒன்பதோடு ஒன்றும் | இப்பத்துப் பாசுரங்களையும் |
| கேட்டு உவப்ப | கேட்டு ஆநந்திக்கும்படி, | வல்லார் தாம் | ஓதவல்லவர்கள், |
| அலை நீர் உலகுக்கு அருளே புரியும் | கடல் சூழ்ந்த இவ்வுலகத்திலுள்ளார்க்கு அருள் செய்யுமவராய் | பார் ஆர் உலகம் அளந்தான் அடி கீழ் | பூமியையும் ஸ்வர்க்காதி லோகங்களையும் அளந்தவனை பெருமானுடைய திருவடிவாரத்திலே |
| | | பல காலம் | நெடுங்காலம் |
| | | நிற்கும்படி | அடிமைசெய்து நிற்கும்படி |
| | | வாழ்வர் | வாழப் பெறுவர். |

* * *—சுற்றிலும் பொழில்கள் சூழ்ந்து அழகுமிக்கிருக்குந் தில்லைத் திருச்சித்திர கூடத்தில் வாழுமெம்பெருமான் விஷயமாக, பரமோதாரரான பரகாலர் பாடினவிப்பாடல்கள் பகவத் பக்திமிகுந்த ஸ்ரீவைஷ்ணவர்கட்குக் கர்ணாம்ருதமானவை; இப்படிப்பட்ட விவ்வருளிச்செயல்களை ஓதவல்லவர்கள் எம்பெருமான் திருவடி நிழலிலொதுங்கி வாழப் பெறுவரென்று—இத்திருமொழிகற்பார்க்குப் பயனுரைத்த பாசுரமிது. .... ... (௧௦)

அடிவரவு:—ஊன் காய் வெம்பும் அருமா கோ நெய் மௌவல் மாவாய் செருச் சீரார் வாட.

## மூன்றாம்பத்து இரண்டாந்திருமொழி உரை

முற்றுப் பெற்றது.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றாம்பத்து—மூன்றாந்திருமொழி,

# வாடமருதிடைபோகி.



அவதாரிகை:—"தில்லைத்திருச்சித்ரகூடஞ் சென்றுசேர்மின்கள்" என்று பரோபதேசமாகச் சென்றது கீழ்த்திருமொழி; தம்முடைய அநுபவமாய்ச் செல்லுகிறது இத்திருமொழி. விபவாவதாரத் திருக்குணங்களெல்லாம் சித்திர கூடத்தெம்பெருமான் திறத்திலே நிழலிட்டுவிளங்கக்காண்கையாலே ஒவ்வொரு பாசுரத்திலும் ஒவ்வொருவகையாக அக்குணங்களை அநுஸந்தித்து அநுபவிக்கிறாராயிற்று. ... ... .... ... *

வாடமருதிடைபோகி மல்லரைக்கொன் றொக்கலித்திட்டு *
ஆடல்நன்மா வுடைத்தாய ராநிரைக்கன் றிடர்தீர்ப்பான் *
கூடிய மாமழைகாத்த கூத்தனென வருகின்றான் *
சேடுயர் பூம்பொழில்தில்லைச் சித்திரகூடத் துள்ளானே. (க)

| | |
|---|---|
| மருது இடை | இரட்டை மருதமரங்களின் நடுவே |
| வாட | அவை பங்கமடையும்படி |
| போகி | தவழ்ந்து சென்றவனும், |
| மல்லரை கொன்று | மல்லர்களைக் கொன்றவனும், |
| ஒக்கலித்திட்டு ஆடல் நல் மா உடைத்து | நடைபழகி ஆடிக்கொண்டு வந்த கொடிய (அசுரக்) குதிரையைக் கொன்றவனும், |
| அன்று | முன்பொரு காலத்தில் |
| ஆயர் ஆநிரைக்கு இடர் தீர்ப்பான் | இடையர்கட்கும் பசுக்கூட்டங்கட்கும் நேர்ந்த துன்பத்தைத் தீர்ப்பதற்காக |
| கூடிய மா மழை காத்த | திரண்ட பெருமழையைத் தடுத்து ரக்ஷித்தவனுமாயிருக்கிற |
| கூத்தன் என | கூத்துகளாடின கோபால க்ருஷ்ணனென்று சொல்லும்படியாக |
| வருகின்றான் | வருமவன் |
| சேடு உயர் பூ பொழில் தில்லை சித்திர கூடத்து உள்ளான் | இளமை தங்கிய ஓங்கின பூஞ்சோலைகளையுடைய தில்லைத் திருச்சித்திர கூடத்திலுள்ளான். |

* * *—முதல் மூன்றடிகளாலும் க்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களைப்பேசி, அப்படிப்பட்ட கண்ணபிரானே பின்புள்ளாருமிழவாமைக்காகச் சித்திரகூடத்திலேவந்து நித்யஸந்நிதிபண்ணி ஸேவைஸாதிக்கின்றானென்கிறார். இரட்டை மருதமரங்களினிடையே தவழ்ந்து அவற்றை முறித்துத்தள்ளினவனும், மல்லர்களை முடித்தவனும், கேசியென்னு மசுரன் தன்னுடைய நடையழகிலே கண்ணன்

ஈடுபட்டுப் பாராக்காயிருக்க அவனை விழுங்கிவிடுவோமென்றெண்ணிக் குதிரை வடிவெடுத்து நடையழகு காட்டிக்கொண்டுவர, அவனைக்கொன்றொழித்தவனும், கோவர்த்தனமலையைக் கொற்றக்குடையாகவெடுத்துக் கோநிரைகாத்தவனுமான பெருமான் அப்போது திருவாய்ப்பாடித் திருவீதியிலே, 1. "சீலைக்குதம்பை யொருகாது ஒருகாது செந்நிறமேற்றோன்றிப்பூ, கோலப்பணைக்கச்சுங்கூறை யுடையுங்குளிர்முத்தின் கோடாலமும், காலிப்பின்னேவருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்து காணீர்" என்றும் 2. "தழைகளுந் தொங்கலுந்ததும்பி யெங்குந் தண்ணுமையெக்கம் மத்தளி தாழ்பீலிக், குழல்களுங் கீதமுமாகி யெங்குங் கோவிந்தன் வருகின்ற கூட்டங்கண்டு, மழைகொலோ வருகின்ற தென்று சொல்லி மங்கைமார் சாலகவாசல்பற்றி, நுழைவனர் நிற்பனராகி யெங்குமுள்ளம் விட்டு ஊண்மறந்தொழிந்தனரே" என்றுஞ் சொல்லும்படியான எப்படிப்பட்ட அழகுடனே எழுந்தருளினனோ அப்படிப்பட்ட அழகை நாமும் இழவாமே இங்கு ஸேவிக்கப்பெற்றோ மென்றாராயிற்று.

கண்ணன் குழந்தையாயிருக்குங்காலத்தில் துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்த யசோதை கிருஷ்ணனைத் திருவயிற்றில் கயிற்றினால் கட்டி ஓருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை இழுத்துக் கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமரத்தின் நடுவே எழுந்தருளிய பொழுது அவ்வுரல் குறுக்காய்நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில், முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க் கிடந்த நளகூபரன் மணிக்ரீவன் என்னும் குபேரபுத்திரர் இருவரும் சாபந் தீர்ந்து சென்றனர். இந்த குபேரபுத்திரர்கள் முன்பொருகாலத்தில் பல அப்ஸரஸ் ஸ்த்ரீகளுடனே ஆடையில்லாமல் ஜலக்ரீடை செய்துகொண்டிருக்கையில் நாரதமாமுனிவர் அங்கு எழுந்தருள, மங்கையர் அனைவரும் நாணங் கொண்டு ஆடையெடுத்து உடுத்து நீங்க, இந்த மைந்தர் மாத்திரம் மதுபான மயக்கத்தினால் வஸ்த்ரமில்லாமலேயிருக்க, நாரதர்கண்டு கோபங்கொண்டு 'மரங்கள்போலிருக்கிற நீங்கள் மரங்களாவீர்' என்று சபிக்க, உடனே அவர்கள் வணங்கி வேண்டிக்கொண்டதற்கு இரங்கி 'நெடுங்காலஞ்சென்றபின்பு திருமால் உங்களருகே நெருங்குஞ்சமயத்தில் இவ்வடிவமொழிந்து முன்னையவடிவம் பெற்று மீள்வீர்' என்று சாபவிடை கூறிப்போயினர். இப்படி சாபத்தினால் மரங்களான விவற்றில் கம்ஸனால் ஏவப்பட்ட இரண்டு அஸுரர்களும் ஆவேசித்துக்கிடந்தனரென்று சில புராணங்கள் கூறும். ஆழ்வார்களும் இங்ஙனே அருளிச்செய்வதுண்டு; "ஒருங்கொத்த விணைமருதம் உன்னிய வந்தவரை" என்றும் "பொய்ம்மாய மருதான வசுரரை" என்றும் பெரியாழ்வாரருளிச் செய்துளர்.

வாட மருதிடைபோகி=அஸுராவேசங்கொண்ட மருதமரங்களாகை

1. பெரியாழ்வார் திருமொழி 3—3—1. 2. பெரியாழ்வார் திருமொழி 3—4—1.

யாலே பராத்பரனை ஸ்ரீக்ருஷ்ணன் கிட்ட வரவர, அப்போதே அவை வாட்டமடைந்தனவாம்.

மல்லரைக்கொன்று=கம்ஸன் தன்னைக்கொல்லப்பிறந்த தேவகீ புத்திரன் யசோதையினிடம் ஒளித்து வளர்தல் முதலிய வரலாறுகளை நாரதமுனிவர் சொல்லக்கேட்டு அதிககோபங்கொண்டு எவ்வகையினாலாவது கண்ணனைக் கொல்ல நிச்சயித்து வில்விழாவென்கிற வியாஜம் வைத்துக் கண்ணபிரானையும் பலராமனையும் அழைத்துவரும்படி நியமிக்கப்பட்ட அக்ரூரனுடைய பிரார்த்தனைக்கிணங்கக் கண்ணபிரான் நம்பி மூத்தபிரானுடன் புறப்பட்டு மதுரையிற் புகுந்து நடுவழியில் ஒரு துஷ்ட வண்ணானைக்கொன்று அவனிடமிருந்த சிறந்த ஆடைகளையெடுத்துச் சாத்திக்கொண்டு ராஜவீதியில் வருகிறவளவிலே மாலாகாரரையும் கூனியையும் அநுக்ரஹித்துப் பின்பு கம்ஸனரண்மனையை நோக்கிச் செல்லுகையில் அவ்வரண்மனை வாயில்வழியில் தம்மைக்கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீடமென்னும் மதயானை சீறிவர, அவ்யாதவவீரர் அதனையெதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியையெடுப்பதுபோல எளிதிற்பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அடித்து அவ்யானையையும் யானைப்பாகனையும் உயிர்தொலைத்துவிட்டு உள்ளே கம்ஸஸபையிற் செல்லுகையில் அவர்களையெதிர்த்துப்பொருது கொல்லும்படி கம்ஸனால் ஏவப்பட்டிருந்த சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர் வந்து எதிர்த்து உக்கிரமாகப் பெரும்போர்செய்ய, அவர்களையெல்லாம் அவ்யாதவவீரர் இருவரும் மற்போரினாலேயேகொன்று வென்றிட்டனர் என்ற கதையுணர்க. அன்றியும், கண்ணபிரான் பாண்டவதூதனாய்த் துரியோதனனிடஞ்சென்றபொழுது துரியோதனன் ரஹஸ்யமாகத் தன்னுடைய ஸபாமண்டபத்தில் மிகப்பெரிய நிலவறையொன்றைத் தோண்டுவித்து அதில் அநேக மல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளேயிருக்கவைத்து அப்படுகுழியைப்பிறர் அறியவொண்ணாதபடி மூங்கிற் பிளப்புக்களால் மேலேமூடி அதன் மேற் சிறந்த ரத்நாஸநமொன்றையமைத்து அவ்வாஸநத்தின்மீது தன்னை வீற்றிருக்கச்சொல்ல, அங்ஙனமே தான் அதன்மே லேறினமாத்திரத்திலே மூங்கிற்பிளப்புக்கள் முறிபட்டு ஆஸநம் உள்ளிறங்கிப் பிலவறையிற் செல்லுமளவில் மிகப்பெரிதாக விச்வரூபமெடுத்துப் பல கைகளையுங் கால்களையுங் கொண்டு எதிர்த்து அப்பிலவறையிலிருந்த மல்லர்களை மடிவித்த வரலாறுமொன்றுண்டு. மல்லர்—ஆயுதஸஹாயமின்றி உடல்வலிமையையே கொண்டு யுத்தஞ்செய்பவர்.

ஒக்கலித்திட்டு என்ற வினையெச்சம் மேலே இரண்டாமடியோடு கூடக்கடவது; ஒக்கலித்திட்டாடல்செய்த குதிரை—நடைபழகுவதுபோல ஆடியசைந்துகொண்டுவந்த குதிரையென்க. "நன்மா" என்றது விபரீதலக்ஷணை, 'நல்லபாம்பு' என்னுமாபோலே.

கூத்தனெனவருகின்றான் இப்பதிகத்தில் ஒவ்வொரு பாசுரத்திலும் ஈற்றடியில் வருகின்றானென்றும் வருவானென்றும் அருளிச்செய்யக் காண்கையாலே, ஆழ்வார் இத்திருப்பதிக்கெழுந்தருளின ஸமயம் பெருமாளுக்குத் திருவீதிப் புறப்பாடாக இருக்கலாமென்று சிலர் கூறுவதுண்டு. ... ... (௧)

பேய்மகள் கொங்கைநஞ்சுண்ட பிள்ளைபரிசிதுவென்றால் *
மாநிலமாமகள் மாதர்கேள்வ னிவனென்றும் * வண்டுண்
பூமகள் நாயகனென்றும் புலங்கெழு கோவியர்பாடி *
தேமலர் தூவவருவான் சித்திரகூடத் துள்ளானே. (௨)

| | |
|---|---|
| பேய் மகள் | "பேய்ச்சியான பூதனையினுடைய |
| கொங்கை | முலையில் (தடவியிருந்த) |
| நஞ்சு | விஷத்தை |
| உண்ட இது | (அம்ருதமாக) உறிஞ்சியுண்ட இக்காரியம் |
| பிள்ளை பரிசு என்றால் | இச் சிறுபிள்ளையின் செயல்" என்று சொல்லக் கேட்டதும் |
| புலன் கெழு கோவியர் | அழகிய இடைப் பெண்களானவர்கள், |
| இவன் | "இக் கண்ணபிரான் |
| மா நிலமாமகள் மாதர் கேள்வன் என்றும் | பூமிப் பிராட்டிக்கு வல்லபன்" என்றும் |
| வண்டு உண் பூ மகள் நாயகன் என்றும் பாடி | "வண்டுகள் மதுவுண்கிற தாமரைப்பூவிற் பிறந்த பெரிய பிராட்டியார்க்கு நாதன்" என்றும் சொல்லிப் பாடிக்கொண்டு |
| தே(ன்) மலர் தூவ | செவ்விகுன்றாத புஷ்பங்களைப் பணிமாற |
| வருவான் | (திருவாய்ப் பாடித் திருவீதிகளிலே) ஸஞ்சரித்த பெருமான் |
| சித்திர கூடத்து உள்ளான் | (இப்போது) சித்திரகூடத்திலே ஸேவை ஸாதிக்கின்றான். |

* * *—ஸ்ரீகிருஷ்ணனைப்பெற்ற தாயான தேவகியினது உடன்பிறந்தவனாய் அக்கண்ணபிரானுக்கு மாமனாகிய கம்ஸன், தன்னைக்கொல்லப்பிறந்த தேவகீபுத்திரன் ஒளித்து வளர்தலை அறிந்து, அக்குழந்தையை நாடியுணர்ந்து கொல்லும்பொருட்டுப் பல அசுரர்களை ஏவ, அவர்களில் ஒருத்தியான பூதனையென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து அங்குத்தூங்கிக்கொண்டிருந்த கிருஷ்ணசிசுவையெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையைக்கொடுத்துக் கொல்லமுயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்ணுகிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தனனென்ற வரலாறு அறிக.

கண்ணபிரான் சிறுகுழந்தையாகத் தெருப்புழுதியளைந்து விளையாடும்போது இடைச்சிகள் ஒருவர்க்கொருவர் வார்த்தையாடுகையில் 'இப்பிள்ளை

ஸாமாந்யமன்று; முலைகொடுக்கவந்த வொருத்தியை முடித்த பிள்ளைகாண்மின் இது' என்று சொல்லக்கேட்ட இடைச்சிகள் "அப்படியா? இப்படிப்பட்ட அரியபெரிய காரியஞ்செய்கிற இப்பிள்ளையை இடைப்பிள்ளையென்று நினைக்க நியாயமேயில்லை; திருமடந்தை மண்மடந்தைகட்குக் கொழுநனான ஸாக்ஷாத் ஸ்ரீமந்நாராயணனே இக்குழந்தையாக வந்து பிறந்தானத்தனை" என்று சொல்லித் துதித்துத்தொழுவர்களாம்; அப்படிப்பட்டவன் அந்த பரத்வ ஸௌலப்யங்களைப் பிரகாசிப்பித்துக்கொண்டு நமக்கும் ஸேவைஸாதிக்குமிடம் சித்திரகூடம் என்றாராயிற்று. "வாயுள் வையகங்கண்ட மடநல்லார், ஆயர் புத்திரனல்லன் அருந்தெய்வம், பாயசீருடைப் பண்புடைப்பாலகன், மாயனென்று மகிழ்ந்தனர் மாதரே" என்ற பெரியாழ்வார் திருமொழிப் பாசுரத்தை இங்கு நினைப்பது.

புலன்கெழு கோவியர்—கண் மனம் முதலிய இந்திரியங்களைக் கவர்கின்ற அழகிய வடிவுபடைத்த இடைச்சிகளென்கை. கோபீ [கோபீ] என்ற வடசொல் பன்மையுருபேற்றுக் கோவியர் என்றாயிற்று. 2. "பொலன்கெழு' என்றபாடமும் உண்டென்று வியாக்கியானத்தினால் விளங்குகின்றது; பொலன்—பொன்மயமான நகைகளினால், கெழு—விளங்குகின்ற=என்க. .... (உ)

பண்டிவன் வெண்ணெயுண்டானென் றுய்ச்சியர்கூடி யிழிப்ப *
எண்டிசையோரும் வணங்க விணைமருதூடு நடந்திட்டு *
அண்டரும் வானத்தவரு மாயிர நாமங்களோடு *
திண்டிறல் பாடவருவான் சித்திரகூடத் துள்ளானே. (ஙு)

| | |
|---|---|
| பண்டு | முன்பொருகாலத்தில், |
| இவன் | "இச்சிறுபிள்ளை |
| வெண்ணெய் உண்டான் என்று | வெண்ணெயைத் (திருடித்) தின்றான்" என்று சொல்லி |
| ஆய்ச்சியர் கூடி | இடைச்சிகள் கும்பல் சேர்ந்து |
| இழிப்ப | இழிவாகப் பேசப்பெற்றவனும், |
| எண் திசையோரும் வணங்க | எட்டுத்திக்கிலுள்ளாரும் வணங்கும்படியாக |
| இணை மருதூடு நடந்திட்டு | இரட்டை மருதமரத்தினிடையே நடை பயின்றவனும் |
| அண்டரும் | இடையர்களும் |
| வானத்தவரும் | தேவர்களும் |
| ஆயிரம் நாமங்களோடு | ஸஹஸ்ரநாமங்களைச் சொல்லி |
| திண் திறல் பாட வருவான் | த்ருடமான ஆண்பிள்ளைத்தனத்தைப் பாடும்படி (திருவாய்ப்பாடியில்) ஸஞ்சரித்தவனுமுள்ள பெருமான் |
| | சித்திரகூடத்து உள்ளான்—. |

* * *—சிலர் எளிமைக்குணத்திலே யீடுபட்டிருப்பர்கள், சிலர் மேன்மைக்குணத்திலே யீடுபட்டிருப்பர்களென்றுண்டே; அதன்படியே, கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் வெண்ணெய் முதலியவற்றைக் களவாடி யமுது செய்த எளிமைக்குணத்திலே நெஞ்சிழிந்தவர்கள் 1. "அறியாதார்க்கு ஆனாயனாகிப்போய் ஆய்ப்பாடி, உறியார் நறுவெண்ணெ யுண்டுகந்தான்காணேடீ"

1. பெரியதிருமொழி 11—5—4.

என்றாற்போலே ஏசிப்பேசிப் போதுபோக்குவர்கள் ; மேன்மைக்குணத்தி லீடுபட்டவர்கள் 1. “ கானமரும் கல்லதர்போய்க் காடுறைந்த பொன்னடிக்கள், வானவர்தஞ்சென்னி மலர்கண்டாய்சாழலே ” என்றாற்போலே பேசி வணங்கிக் கிடப்பார்கள். ஆகவிப்படி ஏசுகைக்கும் ஏத்துகைக்கும் உரிய எளிமை மேன்மை கள் விளங்கநின்ற பெருமான் அக்குணங்களிரண்டும் குன்றாமே ஸேவை ஸாதிக்குமிடம் சித்ரகூடம் என்றாராயிற்று.

மூன்றாமடியில், அண்டர்—இடையர்கள். “ அண்டர் மிண்டிப்புகுந்து நெய்யாடினார் ” என்ற பெரியாழ்வார் திருமொழிப் பிரயோகமுங்காண்க. (௩)

வளைக்கை நெடுங்கண்மடவா ராய்ச்சிய ரஞ்சியழைப்ப *
தளைத்தவிழ் தாமரைப்பொய்கைத் தண்தடம்புக் கண்டார்காண *
முளைத்த வெயிற்றழல்நாகத் துச்சியில் நின்றதுவாட *
திளைத்தமர் செய்துவருவான் சித்திரகூடத் துள்ளானே. (௪)

| | |
|---|---|
| வளை கை நெடுங் கண் மடவார் ஆய்ச்சியர் | வளையல்களணிந்த கைகளையும் நீண்ட கண்களையுமுடைய இடைப்பெண்கள் |
| அஞ்சி | பயப்பட்டு |
| அழைப்ப | (‘காளிங்க மர்த்தனமாகிற இந்த பயங்கரமான செய்தியைவந்து பாருங்கள்’ என்று) அழைக்க, |
| அண்டர் | இடையர்கள் |
| தளைத்து அவிழ் தாமரை பொய்கை தண் தடம் புக்கு | மலர்ந்த தாமரைப் பூக்களையுடைய வொரு பொய்கையின் குளிர்ந்த கரையிலே சென்று |
| காண | பார்த்தவளவிலே |
| முளைத்த எயிறு அழல் நாகத்து உச்சியில் | முளைத்த பற்களையுடையதும் விஷாக்நியை உமிழ்வதுமான காளியநாகத்தினுச்சியிலே |
| நின்று | நின்றுகொண்டு |
| அது வாட திளைத்து | அந்தநாகம் இளைக்கும்படி நர்த்தனஞ் செய்து |
| அமர் செய்து | (அந்த நாகத்தோடே) யுத்தஞ் செய்து (வெற்றி பெற்று) |
| வருவான் | உல்லாஸமாக வீதியார எழுந்தருளின பெருமான் |

சித்திரகூடத்து உள்ளான்—.

* * *—ஒருநாள் கிருஷ்ணன் கன்றுகளை ஓட்டிக்கொண்டு ஒருவரும் ஸஞ்சரியாத வழியே போகத்தொடங்க, மற்றுள்ள இடைப்பிள்ளைகள் அழைத்து ‘கிருஷ்ணா! அவ்வழி நோக்கவேண்டா ; அவ்வழியிற் சென்றால் யமுநாநதியில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடுமுழுவதையும் தன் விஷாக்நியினாற் கொதிப்படைந்த நீருள்ளதாய்ப் பானத்துக்குத் தகாதவாறு செய்த காளியனென்னும் கொடிய ஐந்தலைநாகம் குடும்பத்தோடு வாஸஞ்செய்து கொண்டு, அணுகினவர்களனைவரையும் பிணமாக்கிவிடுதலால் நாங்கள் அஞ்சு கின்றோம்’ என்ன ; அதுகேட்ட கண்ணபிரான் உடனே அக்காளிய நாகத்தைத் தண்டிக்கவேண்டுமென்ற திருவுள்ளங்கொண்டு அம்மடுவிற்குச்

1. பெரியதிருமொழி 11—5—1.

சமீபத்திலுள்ளதொரு கடம்பமரத்தின்மேலேறி அம்மடுவில் குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின்மேலேறித் துவைத்து நர்த்தனஞ்செய்து நசுக்கி வலியடக்குகையில், மாங்கலிய பிக்ஷை இட்டருளவேண்டுமென்று வணங்கிப் பிரார்த்தித்த நாககன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி அந்தக்காளியனை உயிரோடு கடலிற்சென்று வாழும்படி விட்டருளினனென்ற வரலாறு அறிக.

யமுனைப்புறமாகச்சென்ற இளமங்கையர் அவ்விடத்தில் காளியனுக்கும் கண்ணனுக்கும் போர்நடப்பது கண்டு 'ஐயோ! சிறுகுழந்தை பாம்பின் வாயிலே விழுந்து மடியப்போகிறதே!, நோக்குவாராருமில்லையே; பலராமனும் கூட இல்லையே!' என்று மிகவுங் கவலைப்பட்டு நடுநடுங்கித் திருவாய்ப்பாடியேற வோடிவந்து 'அநியாயம்! அநியாயம்!!' என்று கோபாலத்தலைவர்களைக் கூவி யழைக்க, அவர்களும் செய்தியறிந்து பதறியெழுந்து அப்பொய்கைக்கரைக்கு ஓடிச்செல்வதற்குள்ளே காளியமர்த்தனத்தைத் தலைக்கட்டி வெற்றியுடனே வீதியாரவந்தானும்; அப்படிப்பட்டவன் துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலநார்த்தமாக ஸேவைஸாதிக்குமிடம் தில்லைத்திருச் சித்திரகூடம் என்றுறாயிற்று.

தளைத்தவிழ்தாமரைப்பொய்கை = தளைத்து அவிழ் — 'கட்டுண்டிருந்து (பிறகு) அவிழ்ந்த' என்று பொருளாய் விகஸித்தபடியைச் சொல்லிற்றுகிறது. தாமரைகள் புஷ்பிக்கக்கூடிய பொய்கை என்று கருத்து: இப்படிப்பட்ட பொய்கையையன்றோ காளியன் தன்விஷாக்நியினால் கொதிப்பித்துக்கொண்டு கிடந்தானென்கை. தடம்—வடசொல்; கரை. ... .... (௪)

பருவக் கருமுகிலொத்து முத்துடைமா கடலொத்து *
அருவித்திரள் திகழ்கின்ற வாயிரம்பொன் மலையொத்து *
உருவக் கருங்குழலாய்ச்சி திறத்தினமால் விடைசெற்று *
தெருவில் திளைத்துவருவான் சித்திரகூடத் துள்ளானே. (௫)

| | |
|---|---|
| பருவம் கரு முகில் ஒத்து | கார்காலத்திலுண்டான காளமேகம் போன்றவனும் |
| முத்து உடை மா கடல் ஒத்து | முத்துக்களையுடைய பெரிய கடல் போன்றவனும் |
| அருவி திரள் திகழ்கின்ற ஆயிரம் பொன் மலை ஒத்து | அருவிகளின் கூட்டங்களால் விளங்குகின்ற ஆயிரம் பொன்மலைகள் போன்றவனும், |
| உருவம் கரு குழல் ஆய்ச்சி திறத்து | அழகிய கறுத்த கூந்தலையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக |
| மால் விடை இனம் செற்று | பெரிய ரிஷபங்களின் திரளைத் தொலைத்தவனும் |
| தெருவில் | (திருவாய்ப்பாடியின்) வீதியிலே |
| திளைத்து வருவான் | கூத்தாடிக்கொண்டு வருமவன் |
| சித்திரகூடத்து உள்ளான்—. | |

* * *—திருவாய்ப்பாடித் திருவீதியிலே கண்ணபிரான் எழுந்தருளும்போது பார்த்தால் 'கார்காலத்துக் காளமேகந்தான் இங்ஙனே வடிவெடுத்து நடந்து செல்லுகின்றதோ!' என்று சிலர்க்கு உத்ப்ரேக்ஷிக்கலாம் படியிருக்கும்.

முத்துவடங்கள் முதலிய ஆபரணங்களை அணிந்துகொண்டு செல்வதைப் பார்த்தால் 'முத்துக்கள் மலிந்த கருங்கடல்தான் இங்ஙனே வடிவெடுத்து நடந்து செல்லுகின்றதோ!' என்றும் 'அருவிகள் விளங்குகின்ற பொன்மலைகள் பலகூடி இங்ஙனே உருவெடுத்து நடந்து செல்லுகின்றவோ!' என்றும் சிலர்க்கு உத்ப்ரேக்ஷிக்கலாம்படியிருக்கும். ஆகவிப்படி உத்ப்ரேக்ஷிக்கத்தக்க வடிவழகு வாய்ந்து, நப்பின்னைப்பிராட்டியைத் திருமணம்புணர்வதற்குக் கொண்ட கோலத்துடனே வீதியாரவரும்போது யாதொரு அழகு விளங்கிற்றோ அவ்வழகைப்பின்புள்ளாரும் ஸேவித்து மகிழும்படி ஸேவைஸாதிக்குமிடம் திருச்சித்ரகூடம் என்றாராயிற்று.

பருவக்கருமுகில்—பருவமாவது காலம்; அதாவது இங்கு மாரிகாலம் இரண்டாமடியில் பொன்மலையைச்சொன்னதால் ஆபரணச்சேர்த்தி விவக்ஷிதமென்க. 1. "பலபலவேயாபரணம்" என்பவாதலால் "ஆயிரம் பொன்மலையொத்து" என்றார். ... ... .... ... (௫)

எய்யச்சிதைந்த திலங்கைமலங்க வருமழை காப்பான் *
உய்யப் பருவரைதாங்கி யாநிரைகாத்தா னென்றேத்தி *
வையத் தேவரும்வணங்க வணங்கெழுமா மலைபோலே *
தெய்வப்புள் ளேறிவருவான் சித்திரகூடத் துள்ளானே. (௬)

| | | | |
|---|---|---|---|
| எய்ய | "ஒரு அம்பைத் தொடுத்து விட்ட மாத்திரத்திலே | பரு வரை தாங்கி | பெரிய கோவர்த்தன மலையை(க் குடையாக) எடுத்துப் பிடித்து |
| இலங்கை | லங்காபுரியானது | காத்தான் | எல்லாரையும் காப்பாற்றினான்" |
| சிதைந்தது | அழிந்தொழிந்தது; | என்று | என்று சொல்லி |
| | (அதுவுந் தவிர) | வையத்து எவரும் | பூமியிலுள்ளாரெல்லாரும் |
| ஆ நிரை | பசுக்களின் கூட்டம் | ஏத்தி வணங்க | துதித்துத் தொழும்படியாக |
| மலங்க | துன்பமடையும்படியாக | அணங்கு எழு மா மலை போலே | தெய்வாவேசங் கொண்ட ஒரு பெரிய மலை போலே யிருக்கிற |
| வரும் | வந்து ஏழுநாள் ஓயாமல் பெய்த | தெய்வம் புள் ஏறி | திவ்ய பக்ஷியாகிய கருடன் மீதேறிக்கொண்டு |
| மழை | மழையை | வருவான் | எழுந்தருளும் பெருமான் |
| காப்பான் | தடுப்பதற்காகவும் | | சித்திரகூடத்து உள்ளான்—. |
| உய்ய | (ஆநிரைகள்) பிழைப்பதற்காகவும் | | |

* * *—ஸமயங்களில் அடியவர்களைக் காத்தருளும்பொருட்டு எம்பெருமான் பெரியதிருவடியின்மீதேறிக்கொண்டு எழுந்தருள்வதுண்டே; அப்படி எழுந்தருளும்போது, "எய்யச்சிதைந்தது இலங்கை" என்று சொல்லிப் பலர்

1. திருவாய்மொழி 2—5—7.

ஏத்திவணங்குவர்கள் ; அதாவது—இப்பெருமான் ஒரு அம்பு தொடுத்துவிட்ட மாத்திரத்திலே இலங்கை நீறாகியொழிந்தது என்பர்கள். மற்றும்பலர் "மலங்க வரும் மழை காப்பான் உய்யப் பருவரைதாங்கி ஆநிரைகாத்தான்" என்று சொல்லி யேத்தி வணங்குவர்கள் ; அதாவது—1. "உண்ணாதுறங்காது ஒலி கடலையூடறுத்துப் பெண்ணாக்கையாப்புண்டு தாமுற்றபேது" என்னும்படி படாதபாடுகள்பட்டு இலங்கை செற்றது தன் மனைவிக்காகத்தானேயென்று சிலர் சொல்லிவிடக்கூடும் ; அப்படியன்றியே, வாயில்லாச்சீவன்களைக் காக்க வேண்டி மலையையெடுத்துக் கல்மாரிகாத்த மஹோபகாரகன்காண்மின் என்பர் கள். இங்ஙனே பலர் பல குணங்களைச்சொல்லி யேத்தப்பெற்றுப் பெரிய திருவடியின்மீதேறி யெழுந்தருளு மெம்பெருமான் ஆச்ரிதரக்ஷணார்த்தமாகப் பின்னானார் வணங்குஞ் சோதியாய்ப் பிரகாசிக்குமிடம் திருச்சித்ரகூடம் என்றா ராயிற்று.

மூன்றாமடியில் "வையத்தேவரும்" என்பதே பாடம். அரும்பதவுரை காரர் "வையத்தேவரும்" என்று பாடங்கொண்டு நிலத்தேவர்களான பிரா மணர்களென்று பொருளுரைத்தது பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளத்திற்குப் பொருந்தாது ; ஓசையின்பமும் சிதையும்.

அணங்கெழுமாமலைபோலே = அணங்கெழுதலாவது தெய்வாவேசம் பெறுதல். 2. "காய்சினப்பறவையூர்ந்து பொன்மலையின் மீமிசைக்கார்முகில் போல்" என்றாற்போலே பொன்போல்மேனியனான கருடன்மீது கரியதிருமால் வீற்றிருப்பது பொன்மலையினுச்சியில் காளமேகம் படிந்தாற்போன்றிருத்தலால் "மாமலைபோலே தெய்வப்புள்" என்றார். .... .... (சு)

ஆவரிவை செய்தறிவா ரஞ்சனமா மலைபோலே *
மேவுசினத் தடல்வேழம் வீழமுனிந்து * அழகாய
காவிமலர் நெடுங்கண்ணார் கைதொழ வீதிவருவான் *
தேவர்வணங்கு தண்தில்லைச் சித்திரகூடத் துள்ளானே. (எ)

| | | | |
|---|---|---|---|
| மா அஞ்சனம் மலை போலே | "பெரிய கரிய மலை போன்றதும் | முனிந்து இவை செய் தறிவார் ஆவர் | சீறியருளினது முதலிய இப்படிப்பட்ட அருந் தொழில்களைச் செய்தறி வார் (இக்கண்ணபிரான் தவிர) வேறுயாருமில்லை" (என்று சொல்லி) |
| மேவு சினம் | மிகுதியாகக்கொண்ட கோபத்தை யுடையதும் | | |
| அடல் | மிக்க வலிவை யுடையதுமான | அழகாய காவி மலர் நெடு கண்ணார் கைதொழ | அழகிய நீலோற்பலம் போன்ற நீண்ட கண்களை யுடைய மாதர்கள் கை கூப்பித் தொழும்படியாக |
| வேழம் | (குவலயாபீடமென்னும் கம்ஸனது) யானை | வீதிவருவான் | (வடமதுரைத்) தெருவிலே கம்பீரமாக எழுந்தருளினவன் |
| வீழ | மாண்டொழியும்படி | | |

1. நாச்சியார் திருமொழி 11—7. 2. திருவாய்மொழி 9—2—6.

| | | | |
|---|---|---|---|
| தேவர் வணங்கு | நித்யஸூரிகளும் வந்து வணங்கப்பெற்ற | தில்லை சித்திர கூடத்து உள்ளான் | தில்லைத்திருச்சித்திர கூடத்தில் ஸேவை ஸாதிக்கின்றான். |
| தண் | அழகிய | | |

* * *—ஒருத்திமகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனாயொளித்து வளரத் தரிக்கிலானாகித் தீங்குநினைந்த கம்ஸனால் வில்விழாவென்கிற வியாஜம் வைத்து மதுரைக்கு வரவழைக்கப்பட்ட கண்ணபிரான் அவனது அரண்மனை வாயிலிற்புகும்போது தன்னைக்கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்டிருந்த குவலயாபீடமென்னும் மதயானை சீறிவர, கண்ணபிரான் அதனை யெதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியையெடுப்பதுபோல எளிதிற்பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அடித்து அவ்யானையையும் யானைப்பாகனையும் உயிர்தொலைத்த வரலாறு மதுரைமாநகரம் முழுவதும் ஒரு நொடிப்பொழுதில் பரவிவிடவே, அங்குநின்றுங் கண்ணபிரான் மீண்டெழுந் தருளும்போது அந்நகரத்து இளமங்கையரெல்லாம் சாலகவாசல்களிலே வந்து நின்றுகொண்டு ‘இப்படிப்பட்ட அரியபெரிய வீரச்செயல் செய்ய மற்று ஆராலேனும் முடியுமோ? மலையையெதிர்த்த மஹாவீரனன்றோ இவன்!’ என்று புகழ்ந்து கைதொழுதார்கள்; அப்படி அவர்களால் துதித்துத் தொழப்பட்டவனாகி வீதியேற எழுந்தருளும்போதிருந்த அற்புதமான அழகைப் பிற்பட்டுள்ள நாமும் அநுபவிக்கலாம்படி சித்திரகூடத்திலே வந்து பொருந்தி ஸேவை ஸாதியா நின்றானென்றதாயிற்று.

“என்று” என்றொருசொல் இரண்டாமடியில் வருவித்துக்கொள்ள வேணும்: “ஆவரிவை செய்தறிவாரென்று அழகாய காவிமலர் நெடுங்கண்ணார் கைதொழவீதிவருவான்.”

இவை என்ற பன்மையில்—வழியிடையே வண்ணானைக்கொன்றது, ஆயுதச்சாலையிலே புகுந்து வில்லைமுறித்தது, கடைசியாகக் கம்ஸனைக்கொன்றது முதலியனவும் விவக்ஷிதம். .... ... .... ... (எ)

பொங்கியமரி லொருகால் பொன்பெயரோனை வெருவ *
அங்கவ னாகமளைந்திட் டாயிரந்தோ ளெழுந்தாட *
பைங்கணிரண் டெரிகான்ற நீண்டவெயிற் றொடுபேழ்வாய் *
சிங்கவுருவின் வருவான் சித்திரகூடத் துள்ளானே. (அ)

| | | | |
|---|---|---|---|
| ஒருகால் | முன்பொருகாலத்தில், | அங்கு | அவ்விடத்திலே |
| அமரில் | போர்க்களத்தில் | அவன் ஆகம் | அவ்விரணியனது உடம்பிலே |
| பொன் பெயரோன் | ஹிரண்யாஸுரன் | அளைந்திட்டு | கைவைத்து |
| வெருவ | பயப்படும்படியாக | | |
| பொங்கி | கிளர்ந்து | | |

| | |
|---|---|
| ஆயிரம் தோள் எழுந்து ஆட | (அவனைச்சித்திரவதம் பண்ணவேணுமென்கிற பதற்றத்தாலே) கைகள் பலமுகமாகப் பெருக்கமடைய, |
| எரி கான்ற இரண்டு பைங்கண் | நெருப்பை உமிழ்கின்ற பசுத்த இரண்டு திருக்கண்களையும் |
| நீண்ட எயிற்றொடு | நீண்ட கோரப்பற்களையும் |
| பேழ் வாய் | பெரிய வாயையுமுடைய |
| சிங்கம் உருவின் வருவான் | நாஸிம்ஹரூபியாய்க் காட்சிதந்த பெருமான் |

சித்திரகூடத்து உள்ளான்—.

* * *—பண்டொருகால் நரசிங்கமூர்த்தியாய்த் தூணில் தோன்றி இரணியன் மார்வைப் பிளந்தொழித்து, பயங்கரமான உருவத்துடனே காட்சிதந்த பெருமான், அவ்விரணியன்போன்ற ஆஸுரப்ரக்ருதிகளுக்குப் பயங்கரனுகவும் ப்ரஹ்லாதாழ்வான் போன்ற பக்தசிகாமணிகளுக்கு ப்ரஸந்நமுகனுகவும் ஸேவைஸாதிக்குமிடம் திருச்சித்திரகூடம் என்றுராயிற்று.

பொன்பெயரோன்—வடமொழியில் ‘ஹிரண்யம்’ என்பதற்குப் ‘பொன்’ என்று பொருளாதலால் ஹிரண்யனென்னும் பெயருடைய அசுரனைப் பொன் பெயரோனென்கிறது: ஆகவே இது லக்ஷிதலக்ஷணை.

ஆயிரந்தோளெழுந்தாட—பரமபாகவத விரோதியான இரணியனைப் புடைப்பதிலே திருக்கைகளுக்குண்டான பதற்றத்தைப் பலமுகமாக்கி வருணித்தபடி. ‘கான்ற’ என்னும் பெயரெச்சத்தில், ‘கால்’ என்பது வினைப்பகுதி. (அ)

கருமுகில் போல்வதோர்மேனி கையனவாழியும் சங்கும் *
பெருவிறல் வானவர்சூழ வேழுலகும் தொழுதேத்த *
ஒருமக ளாயர்மடந்தை யொருத்திநிலமகள் * மற்றைத்
திருமகளோடும் வருவான் சித்திரகூடத் துள்ளானே. (கூ)

| | |
|---|---|
| கரு முகில் போல்வது ஓர் மேனி | காளமேகம்போன்று விலக்ஷணமான திருமேனியோடும் |
| கையன ஆழியும் சங்கும் | திருக்கைகளிலுள்ள திருவாழிதிருச்சங்குகளோடுங்கூடி, |
| பெரு விறல் வானவர் சூழ | மிக்க சக்தியையுடைய தேவர்கள் சுற்றிலும் சூழ்ந்து ஸேவிக்கவும் |
| ஏழ் உலகும் தொழுது ஏத்த | உலகத்திலுள்ளாரெல்லாரும் வணங்கித்துதிக்கவும் பெற்று, |
| ஒரு மகள் ஆயர் மடந்தை | விலக்ஷணையான நீளாதேவியோடும் |
| ஒருத்தி நிலமகள் | ஒப்பற்ற பூமிப்பிராட்டியோடும் |
| மற்றை திரு மகளோடும் | இன்னும் ஸ்ரீதேவியோடுங்கூடி |
| வருவான் | வருமவன் |

சித்திரகூடத்து உள்ளான்—.

* * *—கீழ் எட்டுப்பாசுரங்களிலும் விபவாவதாரப்படிகளை அநுஸந்தித்துப் பேசினர்; இவ்வளவிலே சித்திரகூடத்தெம்பெருமான் ஆழ்வார் பக்கலிலே திருவுள்ளமுவந்து, ‘ஆழ்வீர்!, நீர் ஒவ்வொரு பாசுரத்திலும் வருவான்

வருவான் வருவான் என்று பேசிக்கொண்டு வருகிறீராகையாலே நம்முடைய புறப்பாடு காண்கையில் உமக்கு ஆவல் அதிகரித்திருப்பதாக அறிகின்றேன்; உமக்காக நான் இன்று ஒரு புறப்பாடுகொட்டுகிறேன்; கண்டுகளித்துக் கவிபாடும்' என்று சொல்லி நாச்சிமார்களுடனே பெரிய திருவோலக்கமாகப் புறப்பாடு கண்டருள, அதனை ஸேவித்து மகிழ்ந்து பேசுகிறதுபோலேயிருக்கிறது இப் பாசுரம்.

திருமேனி காளமேகம் போன்றுள்ளது; அதற்குப் பரபாகமாகத் திருக் கைகளிலே திருவாழி திருச்சங்குகள் ஜ்வலிக்கின்றன. இந்திரனுள்ளிட்ட தேவர் குழாமெல்லாம் வந்து சுற்றிலும் சூழ்ந்துவருகின்றது. மற்றுமுள்ளாரும் தொழுது துதிக்கின்றனர். ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி என்ற நாய்ச்சிமார் மூவரும் விட்டுப்பிரியாதே கூடவே எழுந்தருளியிருக்கின்றனர்; ஆகவிப்படிப் பட்ட விபவம் பொலியப் புறப்பட்டெழுந்தருளாநின்முன் சித்திரகூடத்தெம் பெருமானென்று கண்ணாரக்கண்டு வாயாரப்பேசினாராயிற்று.

ஆயர்மடந்தை=நப்பின்னைப்பிராட்டி; இவள் கண்ணபிரானது மனைவி யரில் தலைமையுடையவள்: கும்பனென்னும் இடையர் தலைவனது மகள். இவளை மணஞ்செய்துகொள்ளுதற்காகவே, இவளது தந்தை கந்யாசுல்கமாகக்குறித்தபடி யாவர்க்குமடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளையும் கண்ண பிரான் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கித் தழுவினன். இவள் திரு மாலின் தேவியருள் நீளாதேவியின் அம்சமெனப்படுதலால் நீளா என்ற சொல் லாலே இவளைக் குறிப்பதுமுண்டு: "நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்த முத்போத்ய க்ருஷ்ணம்" இத்யாதி [திருப்பாவைத் தனியன்] காண்க .... (கூ)

தேனமர் பூம்பொழில்தில்லைச் சித்திரகூட மமர்ந்த *
வானவர் தங்கள்பிரானை மங்கையர்கோன் மருவார் *
ஊனமர் வேல்கலிகன்றி யொண்டமி ழொன்பதோடொன்றும் *
தானிவை கற்றுவல்லார்மேல் சாரா தீவினைதானே. (ய)

தேன் அமர் பூ பொழில் — வண்டுகள்மொய்த்து அழகிய சோலைகளையுடைய
தில்லை சித்திரகூடம் — தில்லைத் திருச்சித்திரகூடத்திலே
அமர்ந்த — நித்யவாஸஞ்செய்தருள்கிற
வானவர் தங்கள் பிரானை — தேவாதிதேவன் விஷயமாக,
மங்கையர் கோன் — திருமங்கையிலுள்ளார்க்குத் தலைவரும்
மருவார் ஊன் அமர் வேல் — எதிரிகளின் சரீரத்திலே பொருந்தித் தைக்கும் வேற்படையை யுடையவருமான
கலிகன்றி — திருமங்கையாழ்வார் (அருளிச்செய்த)
ஒண் தமிழ் — அழகிய தமிழினாலாகிய
இவை ஒன்பதோடு ஒன்றும் — இப்பத்துப்பாசுரங்களையும்
கற்று வல்லார் மேல் — ஓதித்தேறினவர்களிடத்தில்
தீ வினை சாரா — பாவங்கள் கிட்டமாட்டா.

* * *—தில்லைத் திருச்சித்திரகூடத் தெம்பெருமான் விஷயமாகத் திருமங்கை மன்னன் திருவாய்மலர்ந்தருளிய இப்பதிகத்தைப் பயின்று பிறர்க்கும் பொருள்கூற வல்லமை பெறுமவர்கள் தீவினைகட்குப் பாத்திரமாகாமல் நல்லராய் வாழ்வரென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. (ய)

அடிவரவு:—வாட பேய் பண்டு வளை பருவம் எய்ய ஆவர் பொங்கி கருமுகில் தேனமர் ஒருகுறள்.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றாம்பத்து—நான்காந்திருமொழி.

# ஒரு குறளாய்.

அவதாரிகை:—சீர்காழியென்று ப்ரஸித்தமாக வழங்கப்பட்டுவரும் காழிச்சீராமவிண்ணகரமென்னுந் திருப்பதியை மங்களாசாஸநஞ் செய்வதாம் இத்திருமொழி.

கீழ்த் திருச்சித்திரகூடத்தைப்பற்றிப் பேசும்போது "தில்லைத் திருச்சித்ரகூடஞ்சென்று சேர்மின்களே" என்றார்; இப்போது "காழிச்சீராம விண்ணகரே சேர்மினீரே" என்கிறார்; மேலே (ஆறாம்பத்தில்) "திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்" என்பர்; இப்படி பல திருப்பதிகளையும் எடுத்துரைத்துச் 'சென்று சேருங்கள்—சென்று சேருங்கள்' என்றால் எந்தத் திருப்பதியிற் சென்று சேர்வது? என்று ஒரு ஸ்வாமியை ஒருவர் கேட்க; 'ஆழ்வார் திருவாயில் நுழைந்து புறப்பட்ட திருப்பதிகளிலெல்லாம் நாம் நுழைந்து புறப்படவேண்டியது ப்ராப்தம்' என்று அதற்கு அவர் விடையருளினரென்று ப்ரஸித்தம். 1. "பதியே பரவித்தொழுந்தொண்டர்" என்றும் 2. "உலகமேத்துங் கண்டியூரரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லையென்று மண்டினார்" என்றுஞ் சொல்லுகிறபடியே எம்பெருமானுகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் சென்று சென்று மங்களாசாஸநம் பண்ணி வாழவேணுமென்பது தாற்பரியம்.

இவ்வாழ்வார் திவ்யதேச யாத்திரையாக ஸபரிவாரராய் எழுந்தருளுமடைவிலே இந்தக் காழிச்சீராமவிண்ணகரத்தினருகே யெழுந்தருளுகையில்

1. பெரிய திருமொழி 7—1—7. 2. திருக்குறுந்தாண்டகம் 19.

வழக்கப்படி பரிஜனங்கள் இவர்முன்னே "$ நாலுகவிப்பெருமாள் வந்தார்!, பரவாதிமத்தகஜகண்டீரவர் வந்தார்!" இத்தியாதி பல பிருதாவளிகளை எடுத்தேத்திக்கொண்டு செல்லாநிற்க, இவ்வூரிலுள்ள ஞானசம்பந்தமூர்த்தி நாயனாரென்கிற சைவசமயாசிரியருடைய அடியார்கள் வந்து 'எங்கள் நாயனாருள்ளவிடத்தே நீர் விருதூதிச் செல்லலாகாது' என்று தடைசெய்ய, அதுகேட்டு ஆழ்வார் சம்பந்தருள்ளவிடத்தே சென்று அவரோடு வாதப்போர் செய்யத்தொடங்குகையில், நாயனார் ஆழ்வாரை நோக்கி 'உமது கவித்திறத்தை யான் காணுமாறு முந்துறமுன்னம் ஒருபாடல்பாடும்' என்று சொல்ல; உடனே ஆழ்வார் "ஒருகுறளாயிருநிலமூவடிமண்வேண்டி" என்று தொடங்கி இத்திருப்பதி விஷயமாகப் பதிகம்பாட, கேட்டு ஞானசம்பந்தர் மிக அதிசயித்து 'உமக்கு இந்தவிருதுகள் யாவும் தகும் தகும்' என்றுசொல்லித் தமது வேலாயுதத்தை இவர்க்குத் திருமுன்காணிக்கையாக ஸமர்ப்பித்து நன்கு பஹுமானித்து உபசரித்து வழிபட்டு வழிவிட்டு மீண்டதாகப் பெரியோர் கூறும் இதிஹாஸம் இங்கு அறியத்தக்கது. ....

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஒருகுறளா யிருநில மூவடிமண் வேண்டி
யுலகனைத்து மீரடியா லொடுக்கி * ஒன்றும்
தருகவெனு மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாளணைவீர்! * தக்க கீர்த்தி
யருமறையின் திரள்நான்கும் வேள்வி யைந்து
மங்கங்க ளவையாறு மிசைக ளேழும் *
தெருவில்மலி விழாவளமுஞ் சிறக்குங் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே. (க)

| | | | |
|---|---|---|---|
| ஒரு குறள் ஆய் | விலக்ஷண வாமநரூபியாகி (மஹாபலியிடஞ்சென்று) | (மூன்றாமடியைவைக்க இடம் காணாமையாலே) | |
| இரு நிலம் | விசாலமான இந்த பூமிக்குள்ளே | ஒன்றும் தருக எனு | 'மற்றோரடிவைப்புக்கு உரியநிலத்தைக் கொடு' என்றுசொல்லி |
| மூ அடி மண் வேண்டி | மூவடி நிலத்தைமாத்திரம் யாசித்து | | |
| (அப்படியே அவன் தாரைவார்த்து தத்தஞ்செய்தவாறே) | | (அதற்கு அவன் தன்தலையைக்காட்டவே அதில் மூன்றாமடியை வைத்து) | |
| உலகு அனைத்தும் | கீழ்மேலுலகங்க ளெல்லாவற்றையும் | மாவலியை சிறையில் வைத்த | அந்த மஹாபலியை (ப் பாதாளமாகிற) சிறையிலேகொண்டு வைத்த |
| ஈர் அடியால் | இரண்டடியாலே | | |
| ஒடுக்கி | ஆக்கிரமித்து, | | |

$ ஆசுகவி, மதுரகவி, சித்ரகவி, விஸ்தாரகவி என்ற நால்வகையான கவித்திறங்களில் மிக்க வல்லமை பெற்றவரென்றபடி.

| | |
|---|---|
| தாடாளன் | பெருமை பொருந்திய ஸர்வேச்வரனுடைய |
| தாள் அணைவீர் | திருவடிகளைச் சேரவேண்டியிருக்குமவர்களே!, |
| | (நீங்கள் செய்யத்தக்கது என்னவென்றால்) |
| தக்க கீர்த்தி அரு மறையின் திரள் நான்கும் | தகுதியான கீர்த்தியையுடைய அரிய வேதங்களின் திரள்கள் நான்கும் |
| வேள்வி ஐந்தும் | பஞ்சமஹாயஜ்ஞங்களும் |
| அங்கங்கள் அவை ஆறும் | வியாகரணம் முதலிய ஆறு அங்கங்களும் |
| இசைகள் ஏழும் | ஸப்தஸ்வரங்களும் |
| தெருவில் மலி விழா வளமும் | வீதிநிறைந்த உத்ஸவவைபவங்களும் (ஆகிய இவற்றாலே) |
| சிறக்கும் | சிறப்புப்பெற்ற |
| காழி | காழியென்னும் க்ஷேத்திரத்திலுள்ள |
| சீராம விண்ணகர் | சீராம விண்ணகரமென்னுந் திருப்பதியை |
| நீர் சேர்மின் | நீங்கள் சென்று சேருங்கள். |

* * *—இப்பாட்டில், ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து ஆறு ஏழு என்னும் எண்கள் அழகாக அமைந்திருத்தல் நோக்கத்தக்கது. இத்திருப்பதியிலெழுந்தருளியிருக்கிற பெருமான் [மூலமூர்த்தி] உலகளந்த பெருமாளாதலால் ஒருகுறளா யென்று தொடங்குகிறார்.

உலகளந்த வரலாறு வருமாறு:—ப்ரஹ்லாதன் தனக்கு வயதுசென்றபிறகு தன்னுடைய பகவத்தியானத்திற்கு இடையூறாயிருக்கிற ராஜ்ய பரிபாலனத்தைத் தனது பௌத்திரனாகிய பலியினிடத்தில் ஒப்புவித்துத் தான் தவஞ்செய்யப் போவதாகக்கருதி அந்த மாவலியை ஒருநாள் ஏகாந்தத்தில் அழைத்து 'நான் வெகுகாலம் அரசாண்டு வந்தேன்; என்காலத்தில் ஒருவரும் அதர்மம் செய்யாதபடி நோக்கி வந்தேன்; ஸ்ரீவிஷ்ணுவே முழுமுதற்கடவுள் என்கிற ஸித்தாந்தத்தை நான் உலகிற் பரவச்செய்து அனைவரையும் விஷ்ணுபக்தர்களாக்கி வந்தேன். இப்போது நான் கிழவனாய் விட்டபடியால் விதிப்படி தவஞ் செய்யப் போகின்றேன்; விஷ்ணுத்வேஷியாய் மாண்டுபோன உன் தந்தையை [விரோசனனை] ப்போலல்லாமல் நீ பரமவிஷ்ணு பக்தனாயிருந்து ராஜ்யமாளக்கடவை' என்று நன்மதிகூறிப் பட்டங்கட்டித் தான் இமயமலையேறித் தவஞ்செய்யச் சென்றான்.

பிறகு மாவலி அப்படியே சிலநாள் அரசாண்டுவந்து ஒரு நாள் மந்திரிகளை அழைத்து 'நான் சில நன்மைகளையடையத் தவஞ்செய்யச்செல்லவிரும்புகிறேன்; நான் மீண்டு வருமளவும் இந்த ராஜ்யத்தில் விஷ்ணுபக்தி வழுவாதபடி நோக்கி வாருங்கள் என்று கட்டளையிட்டுத் தான் இமயமலையருகிற் போய் நான்முகக் கடவுளை நோக்கித் தவஞ்செய்துகொண்டிருக்கையில் பிரமன் ப்ரஸந்நனாய் வந்து காட்சிதந்து 'வரம்வேண்டிக்கொள்' என்ன, 'ஸ்வாமிந்! எனக்கு என் பாட்டனாருபதேசித்த விஷ்ணுபக்தியும் தருமசிந்தையும் ஸத்யமும் எப்போதும் வழுவாதிருக்கவேணும்' என்றும் 'மூவுலகத்தையும் நான் வென்று வாழவேணும்' என்றும் இவை முதலான சிலவரங்களை வேண்டிப் பெற்றுக்கொண்ட மாவலி

தனது ராஜதானியாகிய சோணிதபுரத்திற்கு வந்து சுக்கிராசாரியர் முதலிய ஆப்தர்களிடம் தான் பெற்றவரங்களைச் சொல்லி அவர்களுடன்கூட மகிழ்ச்சி யடைந்து ராஜ்யத்தைச் செங்கோல் செலுத்திக்கொண்டு வந்து பலபல யாகங் களையும் மற்றும் பலவிதமான தான தருமங்களையும் செய்துகொண்டு சுக்கிரா சாரியரையும் ப்ரஸந்நராக்கி, தான் ஸகல லோகங்களையும் வெல்லத்தக்க விறுடையனும்படி அவரிடத்திலும் ஆசிர்வாதம் பெற்று அதனால் செருக்குற்று ஒருவரையும் மதியாமல் திரிந்து கொண்டிருந்தான்.

சிலநாள் கழிந்தபின் ஸ்வர்க்கலோகத்தையும் வென்று ஆளவேண்டுமெனக் கருதி சுக்கிராசாரியரை யழைத்து 'நீர் ப்ருஹஸ்பதியிடம் சென்று நான்சொன் னதாகச் சொல்லும்; அதாவது—ஓ ப்ருஹஸ்பதீ! உமக்கு இந்திரனைப்போல் நானுமொரு சிஷ்யனே; எங்கள் குலத்தில் ஹிரண்யகசிபு ஆண்டுவந்த ஸ்வர்க்க லோகத்தைப் பின்பு ஒருவரும் ஆளத்தக்க பலசாலிகளாகப் பிறவாமையால் இந்திரன் பிடித்துக்கொண்டான்; இப்போது அதனை ஆளுகைக்கு எனக்கு வல்லமையுண்டு; ஆகையால் இப்போது அதை எனக்கு விட்டுவிடவேண்டியது; இல்லையாகில் போர் செய்யவேண்டியது; இதற்கு இந்திரன் என்னசொல்லு கிறானே அதை உணர்ந்து சொல்லும்' என்று சொல்லியனுப்பினான். சுக்கிரனால் இதுகேட்ட ப்ருஹஸ்பதியும் இந்திரனோடு ஆலோசித்து ஒருமாதத்திற்குள் விடையளிப்பதாகச் சொல்லி சுக்கிரனை அனுப்பிவிட்டார். பிறகு இந்திரன் ஒன்றுந்தோன்றாமல் ப்ருஹஸ்பதியையுங் கூட்டிக்கொண்டு பிரமனிடஞ் சென்று செய்தியைச் சொல்ல, அதுகேட்ட நான்முகன் 'வரங்கொடுப்பதற்கு மாத் திரமே எனக்கு அதிகாரமுளது; கொடுத்த வரத்தினால் கெடுதி நேரிடுங் காலத்தில் வேறொரு உபாயத்தினால் அதை மாற்ற எனக்கு வல்லமை இல்லை' என்ன, பிறகு சிவனிடஞ் சென்றுமுறையிட, அச்சிவபிரானும் 'பிரமன் தந்த வரத்தை நான் அழிக்கவல்லேனல்லேன்; விஷ்ணுவிடஞ்சென்று முறை யிடுதல் நன்று' என்று சொல்லிவிட, அவர்கள் விஷ்ணு பக்கலில் வந்து சொல்லிக்கொள்ள, அதற்கு விஷ்ணு 'ஓ ப்ருஹஸ்பதே! மாவலி எனக்குச் சிறந்த பக்தன், மிக்க தருமசிந்தையுள்ளவன், திடீரென்று அவனை நான் ஒன்றுஞ் செய்யலாகாது; தக்க உபாயத்தை நீங்களே ஆராய்ந்து சிறிதுகாலங் கழியுங்கள்' என்று சொல்லிவிட்டு மறைந்தார்.

முன்பு சுக்கிரனிடம் ப்ருஹஸ்பதி சொல்லியிருந்த ஒருமாத அவதி கடந்துவிட, ஸ்வர்க்கலோகத்தினின்றும் ஒரு சமாசாரமும் வரக்காணாமையால் மாவலி தன் படைகளை யெடுத்துவிட்டு ஜயபேரி முழங்கப்புறப்பட்டு இந்திர னோடு போர்புரிவதென்று ஸ்வர்க்கஞ்சென்று அங்கு ஒருவரையுங் காணாமல் அங் குள்ள சிங்காசனத்தின்மீது தான் ஏறி விற்றிருந்து இந்திரனைப்போல் மூன்று உலகங்களையும் ஆண்டுவந்தான். அப்போது மூன்றுலகங்களிலுமுள்ள ஸகல பிராணிகளும் விஷ்ணுபக்தராயினர். தருமம் குறையற நடைபெற்று வந்தது.

ஒருநாள் ப்ருஹஸ்பதி மாவலியிடம் வந்து 'அரசனே! நீர் சுக்கிரனை வைத்துக்கொண்டு அரசுபுரியும்; நான் தவஞ்செய்யப்போகிறேன்' என்ன, அதற்கு மாவலி 'இந்திரனாக வருபவர்கட்கெல்லாம் உம்மைப் புரோஹிதராக ஸ்ரீமஹாவிஷ்ணு நியமித்திருக்கிறாராகையால் இவ்விடம் விட்டு நீர் போகலாகாது' என்ன, அதற்கு அவர் 'நூறு அச்வமேதயாகஞ் செய்து எவனொருவன் இந்திரபட்டத்திற்கு வருகிறானோ அவனுக்கு நான் புரோஹிதனாம்படி விஷ்ணு நியமனமேயன்றி, கிரமமாக இருந்த இந்திரனை அச்சமுறுத்தித் துரத்திவிட்டு இந்த ஸ்தானத்திற்கு அநீதியாக வந்திருக்கிற உமக்கு நான் புரோஹிதனாகமாட்டேன்' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டுக் கச்யபருடைய ஆச்ரமத்திற்கு வந்து அவருடைய தருமபத்தினியாகிய அதிதி தேவியிடத்தில் இந்திரனுடைய துக்கச்செய்திகளை யுரைக்க, அவள் கேட்டு மனம் பொறாமல் அழுதுகொண்டு தன் புத்திரனாகிய இந்திரனுக்கு நன்மைகள் உண்டாகும்படி விஷ்ணுவிடம் பிரார்த்திக்கவிரும்பி பகவானைத் துதித்துக்கொண்டிருக்கையில் ப்ரஸந்நரான ஸ்ரீமஹாவிஷ்ணு அதிதியின் முன்னே வந்து ஸேவைஸாதித்து அவளுடைய கோரிக்கையை அறிந்துகொண்டு 'அம்மா! நான் உனக்குப் பிள்ளையாகப் பிறந்து இந்திரனுடைய துயரத்தைப் போக்குகிறேன்' என்று சோதிவாய் திறந்து அருளிச்செய்து மறைந்துவிட்டார்.

பிறகு சிறிது காலங்கழிந்தபின் அதிதி கர்ப்பந்தரித்து வாமனனைப் பெற்றனள். கச்யபர் அப்புதல்வனுக்கு ப்ராஹ்மணஸம்ஸ்காரங்களையெல்லாம் கிரமமாகச் செய்வித்தார். வாமனனும் தபஸ்வியாக இருந்துவந்தான். அக்காலத்தில் மாவலி நர்மதாநதியின் கரையில் வைஷ்ணவயாகஞ் செய்யமுயன்று யாகத்தை நடத்திக் கொண்டிருக்கையில் இவ்வாமனன் 'இந்திரனுக்கு நாம் உதவிசெய்ய இதுவே தக்க ஸமயம்' என்றெண்ணி அங்கிருந்து புறப்பட்டு மாவலியின் யாகசாலைக்குச் சென்றார். பரமவிலக்ஷணமான திருக்கோலத்தைக் கண்ட மாவலி பெருமகிழ்ச்சிகொண்டு வாமனனை உபசாரபூர்வகமாக ஆஸனத்தில் இருத்தி வந்த காரியத்தை விநயத்துடன் விசாரிக்க, வாமனன் 'ஓ மன்னவனே! நான் தவஞ்செய்ய விரும்புகிறேன்; பிறருடைய நிலத்திலிருந்து தவஞ்செய்தால் பயனில்லையாகையால் எனக்கு அறுதியாக என் காலால் மூவடிமண் தரவேண்டும்' என்ன, அதுகொடுப்பதற்கு அவன் இசைந்தவுடனே திரிவிக்ரமனாக ஆகாயத்தை அளாவி வளர்ந்து ஓரடியால் பூலோகத்தையும் மற்றோரடியால் மேலுலகத்தையும் அளந்து மூன்றாமடிக்காக அவன் இசைவின்படியே அவன் முடியிற் காலைவைத்து அவனைப் பாதாளத்திலழுத்தி அடக்கினன்—என்பதாம்.

இரண்டாமடியில் 'என்ன' என்கிற செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம் 'என' என்று தொக்கியிருக்கிறது; 'என்று சொல்லி' என்பது பொருள். தாடாளன்—பெருமை பொருந்தியவன், முயற்சியுள்ளவன். இத்தலம் தாடாளன் ஸந்நிதி என வழங்கப்படுதலு முண்டு.

தக்ககீர்த்தியருமறையின் திரள்நான்கும்=வேதங்கள் ஆதியுமந்தமுமில்லாதவை யென்றும், ஒரு புருஷனுற் செய்யப்படாமல் ஸ்வயம் வ்யக்த மென்றும் எவ்வகைக் குற்றமு மற்றவை யென்றும் சொல்லத்தக்க கீர்த்தியை யுடையன. மூலம் அதிகரிப்பதற்கும் அர்த்தம் அறிந்து கொள்வதற்கும் வெகு அருமை யுள்ளதுபற்றி அருமறை என்றது. ஒவ்வொரு வேதத்திலும் சாகாபேதங்கள் பலவுள்ளதனுல் மறையின் திரள் என்றது.

வேள்வியைந்தும்=ப்ரஹ்மயஜ்ஞம் தேவயஜ்ஞம் பூதயஜ்ஞம் பித்ருயஜ்ஞம் மநுஷ்யயஜ்ஞம் என்பன பஞ்ச மஹாயஜ்ஞங்கள். ப்ரம்மயஜ்ஞமாவது—'ப்ரஹ்மயஜ்ஞ ப்ரச்நம்' என்று தினப்படியாக வேதத்தில் ஒவ்வொரு ப்ரச்நம் ஓதுவது. தேவயஜ்ஞமாவது—அக்னிஹோத்ரம் செய்வது. பூதயஜ்ஞ மென்பது—பிராணிகட்கு பலியிடுவது. பித்ருயஜ்ஞ மென்பது பித்ருக்களை யுத்தேசித்துத் தர்ப்பணம் விடுவது. மநுஷ்யயஜ்ஞ மென்பது விருந்தாளிகட்கு உணவுமுதலியன கொடுப்பது. ஆகவிவை பஞ்ச மஹாயஜ்ஞங்க ளெனப்படும்.

அங்கங்களவையாறும்=“ஶிக்ஷா வ்யாகரணம் ச²ந்தோ நிருக்தம் ஜ்யோதிஷம் ததா² । கல்பஶ்சேதி ஷட³ங்கா³நி வேதஸ்யாஹுர்மநீஷிண: ॥” என்கிறபடியே சிக்ஷை வியாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம் என வேதாங்கங்கள் ஆறு. அச்சுக்கள் ஹல்லுக்கள் என்னும் அக்ஷரங்களை உச்சரிக்வேண்டிய முறைகளும் அவை ஒன்றோடொன்று சேரவேண்டும் முறைகளும் சிக்ஷையில் சொல்லப்படும். ப்ரக்ருதி ப்ரத்யயங்களின் பாகுபாடும், அவற்றின் அர்த்த விவேகமும் வியாகரணத்திலும் நிருக்தத்திலும் நிர்ணயிக்கப்படும். காயத்ரீ த்ரிஷ்டுப் ஜகதீ இத்யாதியான சந்தோ பேதங்கள் சந்தஸ்ஸில் கூறப்படும். வேதோக்த கருமங்களைக் காலமறிந்து அநுஷ்டிக்க வேண்டுகையாலே அக்காலங்களை யறிவிக்கும் ஜ்யோதிஷம். ஆச்வலாயநர் ஆபஸ்தம்பர் முதலிய மஹர்ஷிகளால் செய்யப்பட்ட கல்பங்களில் வைதிக கருமங்களை அநுஷ்டிக்க வேண்டிய முறைமைகள் விளக்கப்படும். இப்படிப்பட்ட ஆறு அங்கங்களின் பாடப்ரவசநங்கள் சீர்காழியில் நிகழ்கின்றனவாம். நிஷாதம், ரிஷபம், காந்தாரம், ஷட்ஜம், மத்யமம், தைவதம், பஞ்சமம் என்று ஸ்வரங்கள் ஏழாம். “நிஷாதர்ஷபகாந்தார ஷட்ஜமத்யமதைவதா: । பஞ்சமஶ்சேத்யமீ ஸப்த தந்த்ரீகண்டோத்திதா: ஸ்வரா:.” என்ற அமரகோசம் காண்க. காந்தர்வ சாஸ்த்ரத்தில் வல்லவர்களும் இத்தலத்தில் பலருண்டு என்றபடி அன்றியே; “ஷட்ஜம் ரௌதி மயூரஸ்து காவோ நர்தந்தி சர்ஷபம் । அஜாவிகௌ து காந்தாரம் க்ரௌஞ்சோ நததி மத்யமம் ॥ புஷ்பஸாதாரணே காலே கோகிலோ ரௌதி பஞ்சமம் । அஶ்வஸ்து தைவதம் ரௌதி நிஷாதம் ரௌதி குஞ்ஜர:.” [மயிலின் கூவுதல் ஷட்ஜஸ்வரம், மாடுகளின் கூவுதல் ரிஷபஸ்வரம், ஆடுகளின் கூவுதல் காந்தாரஸ்வரம், அன்றிற் பறவையின் கூவுதல் மத்யமஸ்வரம், குயிலின் கூவுதல்

பஞ்சமஸ்வரம் குதிரையின் கனைத்தல் தைவதஸ்வரம், யானையின் முழக்கம் நிஷாதஸ்வரம்] என்று நாரதர் சொல்லியிருக்கையாலே, மேற்சொன்ன பசுபக்ஷி களின் இனிமையான ஒலிகள் மலிந்திருக்கும்படியைச் சொன்னவாறுமாம். (க)

நான்முகனுள் மிகைத்தருக்கை யிருக்கு வாய்மை
    நலமிகுசீ ருரோமசனுல் நவிற்றி * நக்க
னூன்முகமார் தலையோட்டூ ணொழித்த வெந்தை
    யொளிமலர்ச் சேவடி யணைவீர்! * உழுசேயோடச்
சூன்முகமார் வளையளைவா யுகுத்த முத்தைத்
    தோல்குருகு சினையெனச் சூழ்ந்தியங்க * எங்கும்
தேன்முகமார் கமலவயல் சேல்பாய் காழிச்
    சீராம விண்ணகரே சேர்மி னீரே. (உ)

| | |
|---|---|
| நான்முகன் | பிரமனுக்கு |
| நாள் மிகை தருக்கை | ஆயுள் மிகுதியினு லுண்டான கர்வத்தை, |
| இருக்கு வாய்மை நலம் மிகு சீர் உரோமசனுல் நவிற்றி | வேதாத்யயநநிஷ்டனும் நற்குணங்களமைந்தவனு மான ரோமச மஹர்ஷியி னுல் போக்கடித்தவ னையும், |
| நக்கன் | திகம்பரச்சாமியான ருத்ரன் |
| ஊன் முகம் ஆர் | மாமிசம் முதலியவை தங்கியிருந்த |
| தலை ஓடு | கபாலத்தைக்கொண்டு |
| ஊண் | பிச்சையெடுத்தலை |
| ஒழித்த | தவிர்த்தவனுயுமுள்ள |
| எந்தை | எம்பெருமானுடைய |
| ஒளி | அழகு பொருந்திய |
| மலர் சேவடி | திருவடித்தாமரைகளை |
| அணைவீர் | அணுகவேணுமென்றிருக்கு மன்பர்களே!, |

(நீங்கள் செய்யவேண்டியதாவது,)

| | |
|---|---|
| உழு சே ஓட | உழுகிற எருதுகள் (வயல் களிலே) ஓடுவதனுல், |
| சூல் முகம் ஆர் வளை அளைவாய் உகுத்த முத்தை | பிரஸவிக்குந்தருணத்தி லிருந்த சங்குகள் வங்குகளிலே ஈன்ற முத்துக்களை |
| தொல் குருகு | பெரிய கொக்குகளானவை |
| சினை என | (தங்களுடைய) முட்டை யென்று (மயங்கி) |
| சூழ்ந்து இயங்க | (அந்த முத்துக்களைச்) சுற்றி ஸஞ்சரியாநிற்கப் பெற்றதும் |
| எங்கும் | எல்லாவிடங்களிலும் |
| தேன் முகம் ஆர் கமலம் | தேனொழுகுகின்ற முகம் பொருந்திய தாமரைகளை யுடையதும் |
| சேல் பாய் | மீன்கள் துள்ளிக்குதிக்கப் பெற்றதுமான |
| வயல் | கழனியையுடைய |

காழி........சேர்மின்—.

* * *—மற்றெல்லாருடைய ஆயுளைக் காட்டிலும் நான்முகக் கடவுளின் ஆயுள் நீண்டதென்பது ப்ரஸித்தம். இதனுல் அவன் மிக்க அஹங்காரங் கொண்டிருந்தான்: 'சிரஞ்சீவிகளில் நமக்கு மேற்பட்டாரில்லை' என்று செருக்குக் கொண்டிருந்த அந்த நான்முகனுடைய கர்வத்தை எம்பெருமான் ரோமச ரென்னும் ஒரு மஹர்ஷியினுல் தொலைத்திட்டன னென்கிறது முதலடியில்.

இவ்வரலாற்றின் விவரணம் இதிஹாஸ புராணங்களில் ஆனமட்டும் ஆராய்ந்து பார்த்தும் அகப்படப் பெற்றிலோம். இப்பாட்டின் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்திலுள்ள ஸ்ரீஸூக்தி வருமாறு—"ரோமச பகவான், ப்ரஹ்மாக்களென்று சிலர் நீர்க்குமிழிபோலே தோற்றுவது மறைவதாய்ப் போகக்கடவது எத்தனைபேர்! என்றாயிற்று. சதுர்முகனுடைய ஆயுஸ்ஸின் மிகுதியாலுண்டான துர்மாநத்தை, வேதங்களையுச்சரியா நிற்பானாய் ஆசார ப்ராதாந்யத்தால் வந்த ஏற்றத்தையுடையனான ரோமச பகவானாலே......தவிர்த்து" என்றிவ்வளவே யுள்ளது. இக்கதையைப் பலர் பலவாறாகச் சொல்லக் கேட்டிருக்கிறோம். ரோமசரென்பவர் சரீரமுழுவதும் (கரடிபோல்) அடர்ந்த மயிர்களையுடைய ஒரு மாமுனிவர். இவர் நீண்டகாலம் வாழ்ந்திருந்து எம்பெருமானைச் சிந்தனை செய்யவேணுமென்று குதூஹல முடையராய், தீர்க்காயுஸ் பெறுவதற்காக ஒரு புண்ய நதிக்கரையிலிருந்து தவஞ்செய்து கொண்டிருக்கையில் அளவு கடந்த ஆநந்தங்கொண்ட ஸ்ரீமந்நாராயணன் இவர் முன்னே வந்து ஸேவைதந்தருளி 'உம்முடைய விருப்பத்தைக் கூசாதே வேண்டிக்கொள்ளும்' என்று சோதிவாய்திறந் தருளிச்செய்ய, மாமுனிவரும் 'இவ்வுடம்போடே உன்னை வெகுகாலம் வழிபடவேணுமென்று பேராசை கொண்டிருக்கிறேன் நான்; அனேகமாயிரம் ப்ரஹ்மாக்களுடைய ஆயுளை என்னொருவனுக்குக் கல்பித்தருளினால் மஹாப்ரஸாதமாகும்' என்று கைகூப்பி விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமான் அப்படியே திருவுள்ளமுவந்து "மாமுனிவரே! ப்ரஹ்மாவினுடைய ஆயுளின் அவதி உமக்குத் தெரிந்ததே; ஒரு ப்ரஹ்மா காலஞ் சென்றால் உம்முடைய உடம்பினின்றும் ஒரு ரோமம் இற்று விழக்கடவது; இப்படி ஒவ்வொரு ப்ரஹ்மாவின் முடிவிலும் ஒவ்வொரு மயிராக இற்றுவந்து 'இனி உம்முடைய உடம்பில் ஒரு ரோமமும் இல்லை' என்று சொல்லத்தக்க நிலைமை நேருமளவும் நீர் ஜீவித்திருக்கக் கடவீர்" என்று வரந்தந்தருளி மறைந்திட்டனன்—என்பதாக இக்கதையின் விவரணம் அஸ்மதாசார்யரான அழகிய மணவாளச் சீயர் அருளிச் செய்யக் கேட்டிருக்கை. இதிஹாஸ புராணங்களிலிருந்து இதற்கு ஆகரம் கண்டு கூறுமவர்கட்கு எற்றைக்கும் கைம்மாறும் என் தலையே. பலகோடி நூறாயிரம் ப்ரஹ்மாக்களின் ஆயுளை ரோமச மஹர்ஷிக்கு வரங்கொடுத்த பெருமானென்று முதலடியாற் சொல்லிற்றாயிற்று.

"மிகத்தருக்கை" என்று பலர் பாட மோதுவரேனும் அது ஒவ்வாது; "மிகைத்தருக்கை" என்றே ஓதுக. மிகையாவது ஆதிக்யம்; அதனாலுண்டான தருக்கு—செருக்கு. இருக்குவாய்மை—'ருக்' என்ற வடசொல் இருக்கு எனத்திரிந்தது; இச்சொல்—வேதங்களுக்குப் பொதுப்பெயராகவும் ஒருவேதத்துக்குச் சிறப்புப்பெயராகவும் வழங்கும். வாய்மை—உச்சரித்தல். "நவிற்றி" என்னும் வினையெச்சத்திற்கு—'போக்கடித்து' என்று பொருள் கொள்ள வேண்டியிருத்தலால் 'நவிழ்த்தி' என்பது நவிற்றியென மருவியிருப்பதாகக்

கொள்ளலாம். நவிழ்த்தல்—அவித்தல். இனி, "உரோமசனு லவித்து" என்றே பாடமிருந்திருக்கு மென்பர் சிலர்.

[நக்கன் இத்யாதி.] ஒருகாலத்திலே பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்துதலையுடையனு யிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்றதென்று கருதி அவனது சிரமொன்றைக் கிள்ளி யெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன்கையில் ஒட்டிக் கொள்ளுதலும், அவன் இதற்கென்ன செய்வதென்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந்தொலையப் பிச்சை யெடுக்கவேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ அன்றைக்கே இது கையைவிட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலம் பலதலங்களிலுஞ் சென்று பிச்சை யேற்றுக்கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நீங்காதாக, பின்பொருநாள் பதரிகாச்ரமத்தை யடைந்து அங்கெழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரந்தபோது அப்பெருமான் 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையை விட்டகன்றது—என்ற வரலாறு அறிக.

'நக்நஃ' என்ற வடசொல் நக்கனெனத் திரிந்தது; ஆடையில்லாதவனென்று பொருள்: சிவனது நாமங்களில் ஒன்று. [ஊன் முகம் ஆர்.] 'முகம்' என்றது வடசொல் விகாரம்: 'முதலியவை' என்று பொருள். ரக்தம் முதலியவற்றைக்கொள்க.

இத்தலத்தின் நிலநிலைமை பின்னடிகளில் வருணிக்கப்படுகின்றது: வயல்களிலே, கருப்பங்கொண்டுள்ள சங்குகள் ப்ரஸவிக்க விருக்கையில், அங்கு, உழுகிற எருதுகள் குறுக்கும் நெடுக்கும் ஓட, அவ்வதிர்ச்சியினால் அந்தசங்குகள் முத்துக்களைப் பிரஸவித்தன: வெள்ளைவெளேலென்றிருக்கிற அவற்றைக் கொக்குகள் கண்டு அவற்றைத் தம்முடைய முட்டையாக ப்ரமித்து அந்த முத்துக்களைச் சுற்றிப் பறந்து கொண்டிருக்கின்றனவாம்.

அளை—புற்று; வாய்—ஏழனுருபு. ... .... ... (உ)

வையணைந்த நுதிக்கோட்டு வராக மொன்றாய்
மண்ணெல்லா மிடந்தெடுத்து மதங்கள் செய்து *
நெய்யணைந்த திகிரியினால் வாணன் திண்டோள்
நேர்ந்தவன் தாளிணை கிற்பீர்! * நெய்தலோடு
மையணைந்த குவளைகள்தம் கண்க ளென்றும்
மலர்க்குமுதம் வாயென்றும் கடைசி மார்கள் *
செய்யணைந்து களைகளையா தேறுங் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே. (௩)

| | |
|---|---|
| வை அணைந்த நுதி | கூர்மை பொருந்திய முனையையுடைய |
| கோடு | கோரப்பற்களையுடைத்தான |
| வாரகம் ஒன்று ஆய் | விலக்ஷண வராஹரூபியாகி |
| மண் எல்லாம் | பூமி முழுவதையும் |
| இடந்து | அண்டபித்தியில்நின்றும் ஒட்டுவிடுவித்து |
| எடுத்து | (கோட்டு நுனியில்) ஏந்திக்கொண்டுவந்து |
| மதங்கள் செய்து | செருக்கு விளங்கும் வியாபாரங்களைச் செய்தவனும், |
| வாணன் திண் தோள் | பாணாஸுரனுடைய திடமான புஜங்களை |
| நெய் அணைந்த திகிரியினால் நேர்ந்தவன் | கூர்மை பொருந்திய திருவாழியினால் அறுத்தவனுமுள்ள பெருமானுடைய |
| தாள் | திருவடிகளை |
| அணைகிற்பீர் | சேர விரும்பியிருக்கு மன்பர்களே !,— |
| கடைசிமார்கள் | பள்ளச்சிகள் |
| செய் அணைந்து | (களை பறிப்பதாகக்) கழனியிலே இழிந்து, |
| நெய்தலோடு | நெய்தல் மலரையும் |
| மை அணைந்த குவளைகள் | கருமை நிறம் மிக்க குவளை மலரையும் |
| தம் கண்கள் என்றும் | தங்களுடைய கண்களாகவும் |
| குமுதம் மலர் | சிவந்த ஆம்பல் மலரை |
| தம் வாய் என்றும் | தங்களுடைய வாயாகவும் ப்ரமித்து |
| களை களையாது | களை பறியாமலே |
| ஏறும் | வெறுமனே கரையேறுமிடமான |
| | காழி.........சேர்மின்—. |

* * *—வராஹரூபியாகி ஸ்ரீபூமிப்பிராட்டியை உத்தரித்தவனும் வாணனாயிரந்தோள் துணித்தவனுமான பெருமானுடைய திருவடிகளிற்சென்று சேரவேணுமானால் காழிச்சீராமவிண்ணகரம் சேர்வதே நன்று.

வாணன்திண்டோள்நேர்ந்த வரலாறு:—பலிச்சக்ரவர்த்தியின் சந்ததியிற் பிறந்தவனான பாணாஸுரன் ஒருகாலத்தில் சிவபிரானது நடனத்தைக்கண்டு அதற்குத் தனது இரண்டு கைகளால் மத்தளந்தட்ட, சிவபெருமான் அருள் கூர்ந்து அவனுக்கு ஆயிரங் கைகளையும் நெருப்பு மதிளையும் அளவிறந்த வலிமையையும் மிக்க செல்வத்தையும் தான் தனது பரிவாரங்களோடு அவன் மாளிகை வாசலில் காவல் செய்திருத்தல் முதலிய வரங்களையும் தந்தருளினன். அந்தப் பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷை யென்பவள் ஒருநாள் ஒரு புருஷனோடு தான் கூடியதாகக் கனாக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிக்க ஆசை பற்றியவளாய், தனது உயிர்த்தோழியான சித்ரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து அவள் மூலமாய் அந்தப் புருஷன் கிருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தன் என்றறிந்துகொண்டு 'அவனைப் பெறுதற்கு உபாயஞ் செய்யவேண்டும்' என்று அத்தோழியையே வேண்ட, அவள் தன் யோகவித்யை மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தாழ்வானைத் தூக்கிக்கொண்டுவந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை அநுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளராலறிந்த பாணாஸுரன் தன் ஸேனையுடன் அநிருத்தனை எதிர்த்து மாயையி

னுற் பொருது நாகாஸ்திரத்தினுல் கட்டிப்போட்டிருக்க, த்வாரகையிலே அநிருத்தனைக் காணுமல் யாதவர்களெல்லாருங் கலங்கியிருந்தபோது நாரத மஹாமுனிவனுல் நடந்த வரலாறு சொல்லப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ணபகவான் பெரிய திருவடியை நினைத்தருளி உடனே வந்து நின்ற அக்கருடாழ்வானது தோளின் மேல் ஏறிக்கொண்டு பலராமன் முதலானுரோடுகூடப் பாணபுரமாகிய சோணித புரத்துக்கு எழுந்தருளும்போதே அப்பட்டணத்தின் ஸமீபத்தில் காவல் செய்துகொண்டிருந்த சிவபிரானது ப்ரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களை யெல்லாம் அழித்து, பின்பு சிவனுல் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய்வந்து பாணனைக்காப்பாற்றும்பொருட்டுத் தன்னோடு யுத்தஞ்செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தை யுண்டாக்கி இதன் சக்தியினுலே அதனைத் தூரத்திவிட்டபின்பு, சிவனுடைய அநுசரராய்ப் பாணு சுரனுடைய கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் நாசஞ்செய்து பாணுஸுரனோடு போர் செய்யத் தொடங்க, அவனுக்குப் பக்க பலமாகச் சிவனும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போரிட, கண்ணன் தான் ஜ்ரும் பணுஸ்த்ரத்தைப் பிரயோகித்துச் சிவனை ஒன்றுஞ் செய்யாமல் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்துபோம்படி செய்து ஸுப்ரஹ்மண்யனையும் கண பதியையும் உங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர் அநேகமாயிரம் ஸூர்யர் கட்கு ஸமானமான ஸுதர்சநமென்கிற தனது திருவாழியாழ்வானை யெடுத்து ப்ரயோகித்து அப்பாணனது ஆயிரந் தோள்களையும் தாரைதாரையாய் உதிர மொழுக அறுத்து அவனுயிரையும் சிதைப்பதாக விருக்கையில் பரமசிவன் அருகில்வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனுல் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி [' தேவதாந்தர பஜநம் பண்ணுவார்க்கு இதுவே கைகண்ட பலன் ' என்று பிரகாசப்படுத்தி] பின்பு அவன் தன்னைத் தொழுது அநிருத்தனுக்கு உஷையைச் சிறப்பாக மணம் புரிவிக்க, அதன்பின் மீண்டு வந்தனன் கண்ணபிரான்—என்பதாம்.

[நெய்தலோடு இத்யாதி.] இத்தலத்தில் வாழ்கின்ற கடைச்சாதிப் பெண்களும் அழகிற் சிறந்துள்ளாரென்பதை ஒரு சமத்காரம் பொலியப் பேசுகின்றுர். கடைசிமார்கள்—உழவுத் தொழில் செய்யும் ஈனசாதி மாதர். கழனிகளில் பயிர்களினிடையே நெய்தல், குவளை, குமுதம் முதலியன உண்டாவது வழக்கம்; அவற்றுல் பயிரின் வளர்ச்சி குறைபடுமாதலால் அவற்றைக் களை பறிப்பதும் வழக்கம். அங்ஙனமே களை பறிப்பதாகக் கழனிகளில் இழிந்த இழிகுல மகளிர் அந்த நெய்தல் மலர்களையும் குவளை மலர்களையும் தங்களுடைய கண்களாகவே பாவித்தும், குமுதமலர்களைத் தங்கள் வாயாகவே பாவித்தும் 'நம்முடைய அவயவங்களையேயோ நாம் பறித்தெறிவது !; இஃது என்ன காரியம் !' என்று கையொழிந்து களை பறியாமலே வெளியேறுகின்றனராம், மயக்கவணி.

பெரியாழ்வார் திருமொழியில் [3-5-3.] "தம்மைச் சரணென்ற தம்பாவையரைப் புனம் மேய்கின்ற மானினம் காண்மினென்று, கொம்மைப் புயக்குன்றர் சிலை குனிக்குங் கோவர்த்தனம்" என்ற பாசுரத்தின் தாற்பரியசைலியும் இங்கு ஸ்மரிக்கத்தக்கது. கோவர்த்தனகிரியில் வாழுங் குறத்திகள் மானேய்மடநோக்கிகள் என்பதைப் பெறுவிக்க நினைத்த பெரியாழ்வார் ஒரு வர்ணனை பண்ணினதுபோல இவ்வாழ்வாரும் இப்பாட்டில் இந்த வர்ணனை வைத்தாரென்க. கடைசிமார்களின் அழகே இப்படியிருக்குமாயின், குலமாதர்களின் அழகு சொல்லவேணுமோ என்று கைமுதிகந்யாயந்தோற்றக் கடைசிமார்களைக் கூறிய வாறு. ஆடவர்களின் ஜ்ஞாநாநுஷ்டாநங்களை வருணித்தல்போல, மடவார்களின் அவயவ ஸௌந்தரியத்தை வருணித்தலும் நகர்க்குச் சிறப்புக் கூறுதலிற் சேர்ந்ததாமென்பது உணரத்தக்கது; "ஒப்பவரில்லா மாதர்கள் வாழும் மாடமாமயிலைத் திருவல்லிக்கேணி" என்றாரிறே கீழும்.

வை—கூர்மை. "மதங்கள்செய்து" என்றவிடத்து "வானத்தெழுந்த மழைமுகில்போல் எங்கும், கானத்து மேய்ந்து களித்து விளையாடி, ஏனத்துருவாய்" என்ற பெரியாழ்வார் பாசுரம் அநுஸந்திக்க. ... ... (௩)

பஞ்சியமெல் லடிப்பின்னை திறத்து முன்னாள்
பாய்விடைக ளேழடர்த்துப் பொன்னன் பைம்பூண் *
நெஞ்சிடந்து குருதியுக வுகிர்வே லாண்ட
நின்மலன் தாளணை கிற்பீர்! * நீலமாலைத்
தஞ்சுடைய விருள்தழைப்பத் தரள மாங்கே
தண்மதியின் நிலாக்காட்டப் பவளந் தன்னால் *
செஞ்சுடர் வெயில்விரிக்கு மழகார் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே. (௪)

| | |
|---|---|
| முன் நாள் | முற்காலத்தில் |
| பஞ்சிய மெல் அடி | பஞ்சுபோன்று மிருதுவான திருவடிகளையுடைய |
| பின்னை திறத்து | நப்பின்னைப் பிராட்டிக்காக, |
| பாய் விடைகள் ஏழ் அடர்த்து | மேல்விழுந்து நலியுமியல்வுடைய ரிஷபங்களேழையும் வலியடக்கினவனும் |
| பொன்னன் | இரணியாசுரனுடைய |
| பை பூண் நெஞ்சு | அழகிய ஆபரணங்களணிந்துள்ள மார்வை |
| இடந்து | பிளந்து |
| குருதி உக | ரத்தம் பீறிப்புறப்படும்படி |
| உகிர் வேல் ஆண்ட | நகங்களையே வேலாயுதமாகக் கொண்டு வியாபரித்தவனுமுள்ள |
| நின்மலன் | பரிசுத்த பரமாத்மாவினது |
| தாள் | திருவடிகளை |
| அணைகிற்பீர் | சேரவிரும்புமன்பர்களே! |
| நீலம் | (மாடங்களிற் பதித்த) நீல ரத்னங்கள் |
| மாலை தஞ்சு உடைய இருள் தழைப்ப | அந்திப்பொழுதை ஆதாரமாகவுடைய இருட்டை அதிகப்படுத்தவும் |

| | | | |
|---|---|---|---|
| ஆங்கே தாளம் | அவற்றின் நடுவே யழுத்தின முத்துக்கள் | சுடர் செம் வெயில் விரிக்கும் | (உதயகாலத்து) ஸூரியனுடைய சிவந்த காந்தியைப் பரப்பவும் பெற்று |
| தண் மதியின் நிலா காட்ட | குளிர்ந்த சந்திரனது நிலாவைக் காட்டவும் | | |
| பவளம் தன்னால் | (இடையிடையே அழுத்தப் பட்ட) பவழங்களாலே | அழகு ஆர் காழி........சேர்மின்—. | அழகு பொருந்தியுள்ள |

* * *—நப்பின்னைப் பிராட்டியைத் திருமணம் புணர்வதற்காக ஏழ் விடைகள் செற்றவனும் இரணியன் மார்பைப் பிளந்தொழித்தவனுமான பெருமானது திருவடிகளைச் சேரவேணுமாகில், காழிச்சீராம விண்ணகரஞ் சேர்வது தவிர வேறு புகலில்லை யென்கிறார்.

இரணியன் தன்னை மஹாப்ரபுவாகவும் ஸர்வேச்வரனாகவும் நினைத்திருந்த தற்கேற்பப் பல ஆபரணங்களணிந்திருந்ததனால் "பொன்னன்பைம்பூண் நெஞ்சு" என்றார். இரணியன் தான் வரம் பெறும்போது 'அஸ்த்ர சஸ்த்ரங்களொன்றினாலும் நான் சாகக்கூடாது' என்று வரம் பெற்றிருந்தனனாதலால் அந்த வரம் பழுதுபடாமைக்காக எம்பெருமான் தனது திருக்கை நகங்களைக் கொண்டே வேலாயுதம் செய்யுங்காரியத்தைச் செய்தனனாதலால் 'உகிர் வேலாண்ட' என்றார். நின்மலன்—குற்றமற்றவன்; இவையெல்லாம் ஆச்ரிதர்களை வாழ்விக்கச் செய்த காரியமாகையாலே குணமேயாமென்க.

[நீலமாலை யித்யாதி.] இத்தலத்தில் திருமாளிகைகளெல்லாம் நவமணிகளிழைக்கப் பெற்றுள்ளவை யென்பதை ஒரு வர்ணனையாக வெளிப்படுத்துகிறார்; சேராச் சேர்த்தியாயிருக்கிறதென்கிறார்;—இருள், சந்திரன், ஸூரியன் என்னும் இம்மூன்று வஸ்துக்களும் ஒன்றோடொன்று ஸம்பந்தப்படாமலே வேறு வேறு காலங்களிலும் வேறு வேறு தேசங்களிலும் இருக்கக்கூடியவை என்பது ப்ரஸித்தமானதே; இத்தலத்திலோவென்னில் இம்மூன்றும் கூடி வாழ்கின்றனவென்று சமத்காரமாக வருணிக்கிறார். அதாவது—நீலமணிகள் முத்துக்கள் பவழங்கள் இவை அங்குள்ள திருமாளிகைகளில் [அல்லது, திருக்கோயிலில்] மாறிமாறிப் பதித்துள்ளதனால், நீலமணிகள் அழுத்தப்பெற்றுள்ள விடங்களில் நீலச்சுடர் மலிந்திருப்பது இருள்மூடிக் கிடப்பதுபோன்றுளது; முத்துக்கள் பதிக்கப்பெற்றுள்ள விடங்களில் அவற்றின் வெள்ளொளி நிலவு போன்றுளது; பவழங்கள் பதிக்கப்பெற்றுள்ள விடங்களில் அவற்றின் செஞ்சுடரானது உதய காலத்து ஸூர்யனுடைய சிவந்த வெயில் போன்றுளது. ஆகவே, வ்யதிகரணங்களாயிருக்கக்கூடிய பொருள்களும் ஸமாநாதிகரணங்களாயிருக்கப்பெற்ற அழகு வாய்ந்தது இத்தலம் என்றதாயிற்று.

தஞ்சு—தஞ்சம். இருளானது மாலைப் பொழுதைப் பற்றுக் கோடாகவுடையதாதலால் "மாலை தஞ்சுடைய விருள்" எனப்பட்டது.

தாளம்—முத்து. ... .... ... (௪)

தெவ்வாய மறமன்னர் குருதி கொண்டு
திருக்குலத்தி லிறந்தோர்க்குத் திருத்தி செய்து *
வெவ்வாய மாகீண்டு வேழ மட்ட
விண்ணவர்கோன் தாளணைவீர்! * விகிர்த மாதர்
அவ்வாய வாள்நெடுங்கண் குவளை காட்ட
வரவிந்தம் முகங்காட்ட வருகே யாம்பல் *
செவ்வாயின் திரள்காட்டும் வயல்சூழ் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே. (௫)

| | |
|---|---|
| தெவ் ஆய மறம் மன்னர் | சத்துருக்களாகிய வீர ராஜாக்களினுடைய |
| குருதி கொண்டு | ரத்தத்தாலே |
| திருக் குலத்தில் இறந்தோர்க்கு திருத்தி செய்து | தன் வம்சத்தில் மாண்டவர்களுக்குத் தர்ப்பணம் செய்த பரசுராமனாக அவதரித்தவனும், |
| வெம் வாய மா கீண்டு | கொடிய வாயையுடைய குதிரையாக வந்த வசுரனைக் கிழித்தொழித் தவனும் |
| வேழம் அட்ட | (கம்ஸனது) யானையை முடித்தவனுமுள்ள |
| விண்ணவர் கோன் | தேவாதி தேவனுடைய |
| தாள் | திருவடிகளை |
| அணைவீர் | சேரவிரும்பு மன்பர்களே!, |
| குவளை | கருநெய்தற் பூககளானவை |
| விகிர்தம் மாதர் | விலக்ஷணைகளான ஸ்த்ரீகளுடைய |
| அவ்வாய | அப்படிப்பட்ட |
| வாள் நெடுங் கண் காட்ட | அழகிய நீண்ட கண்கள் போன்று விளங்கவும் |
| அரவிந்தம் | தாமரை மலர்களானவை |
| முகம் காட்ட | (அவர்களது) முகம் போன்று விளங்கவும் |
| அருகே | அருகிலுள்ள |
| ஆம்பல் | செவ்வல்லி மலர்களானவை |
| செம் வாயின் திரள் காட்டும் | (அவர்களது) சிவந்த வாய்களின் கூட்டம் போன்று விளங்கவும் பெற்ற |
| வயல் சூழ் | கழனிகளால் சூழப்பட்ட |

காழி.........சேர்மின்—.

* * *—ஜமதக்நிக்கு ரேணுகையினிடத்துப் பிறந்த புத்திரன் பரசுராமன்; கார்த்தவீர்யார்ஜுநன் புத்திரர் யாகப்பசுவை நாடிச் சென்றபோது ஜமதக்நியின் ஆச்ரமத்திலிருந்த ஹோமதேநுவைக்கண்டு அந்த ஜமதக்நியைக்கொன்று பசுவைக் கவர்ந்து சென்றனர்; அச்சமயம் வெளியே போயிருந்த பரசுராமன் மீண்டுவந்து தந்தை கொல்லப்பட்டிருப்பதைக்கண்டு 'க்ஷத்ரியரை வேரறுத்து இப்பழி தீர்ப்பேன்' என்று விரதம் பூண்டு க்ஷத்ரியரையெல்லாம் கருவறுத்து அவர்களது ரக்த வெள்ளங்களைப் பெரிய தடாகமாக மடுத்து அதிலே பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்தானென்ற வரலாறு அறியத்தக்கது. இங்ஙனம் செய்த பரசுராமன் ஸ்ரீமந் நாராயணனது அவதாரமாதலால் இக்காரியத்தை எம்பெருமான்மேலேற்றிக் கூறினாரிங்கு.

தெவ்—பகை, பகைவர். திருத்தி—'த்ருப்தி' என்னும் வடசொல்லின் விகாரம்: தர்ப்பணத்தைச் சொன்னபடி.

[விகிர்தமாதர் இத்யாதி.] விகிர்தம்—வடசொல். 'வேறுபாடுடைய' என்று பொருள். மற்றெல்லாரும் போலன்றியே வைலக்ஷண்யம் பொருந்தியமாதர் என்றபடி. அவர்கள், குவளை போன்ற கண்ணழகும் கமலம்போன்ற முகவழகும் செவ்வாம்பல்போன்ற வாயழகுமுடையராய் இத்தலத்தில் வாழ்கின்றாரென்றவாறு.

அரவிந்தம்—தற்சம வடசொல். ... .... (ரு)

பைங்கண்விறல் செம்முகத்து வாலி மாளப்
படர்வனத்துக் கவந்தனொடும் படையார் திண்கை *
வெங்கண்விறல் விராதனுக விற் குனித்த
விண்ணவர்கோன் தாளணைவீர்! * வெற்புப் போலும்
துங்கமுக மாளிகைமே லாயங் கூறும்
துடியிடையார் முகக்கமலச் சோதி தன்னால் *
திங்கள்முகம் பனிபடைக்கு மழகார் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே. (சா)

பைங் கண் விறல் செம் முகம் — பசுமைதங்கிய கண்களையும் மிடுக்கையும் (கோபத்தாற்) சிவந்தமுகத்தையுமுடைய
வாலி — வாலியென்னும் வாநரராஜன்
மாள — முடியும்படியாகவும்,
படர் வனத்து கவந்தனொடும் — பரந்த காட்டிலுள்ள கபந்தனென்பவனும்
திண் படை ஆர் கை வெம் கண் விறல் விராதன் — திடமான ஆயுதங்கள் நிறைந்த கைகளையும் உக்ரமான கண்களையும் வலிமையையுமுடைய விராதனென்பவனும்
உக — முடியும்படியாகவும்
வில் குனித்த — வில்லைவளைத்து (அம்புகளைப் பிரயோகித்த)
விண்ணவர் கோன் — தேவாதி தேவனுடைய
தாள் அணைவீர் — திருவடிகளையடைய விரும்புமன்பர்களே!;
வெற்பு போலும் துங்கம் முகம் — மலைபோன்று உயர்ந்த முகத்தையுடைய
மாளிகை மேல் — மாளிகைகளின் மேல்நிலத்திலேநின்று
ஆயம் கூறும் — ஸ்நேஹமாகப் பேசிக்கொண்டிருக்கிற
துடி இடையார் — உடுக்கைபோன்று நுண்ணிய இடையையுடைய மாதர்களது
கமலம் முகம் சோதி தன்னால் — தாமரை போன்ற முகத்தின் காந்தியினாலே
திங்கள் முகம் பனி படைக்கும் — சந்திரனுடைய முகத்திலே வருத்தமுண்டாக்கப் பெற்ற
அழகு ஆர் காழி.........சேர்மின்—.

* * *—ஸுக்ரீவன் இராமபிரானோடு ஸ்நேஹஞ்செய்துகொண்டு அவனது நியமனத்தினால் கிஷ்கிந்தைக்குச் சென்று வீரநாதஞ்செய்ய, அதைக்கேட்டு வாலி பொறுக்கமாட்டாதவனாய் வெளிக்கிளம்பிவந்து ஸுக்ரீவனோடு யுத்தஞ் செய்யத் தொடங்க, அப்போது இராமன் அவ்விருவரில் இன்னான் ஸுக்ரீவன், இன்னான் வாலி யென்று வாசிகண்டறியாமையால் அம்பு எய்யா

தொழியவே, ஸுக்ரீவன் வாலியிடத்துப் பராஜயப்பட்டு வேதனை பொறுக்க மாட்டாமல் நிச்யமூக பர்வதத்துக்கே மீண்டு ஓடிவந்துசேர, இராமன் அம்பு எய்யாத காரணங்கூறி 'இப்போது உனக்கு ஓர் அடையாளமிடுகிறேன்; மறுபடியும் வாலியை யுத்தத்துக்கு அழை' என்று சொல்லி அவன் கழுத்தில் ஒரு பூமாலையைச் சுற்றிக் கிஷ்கிந்தைக்குப் போகவிட, ஸுக்ரீவன் சென்று முன்போலவே வீரநாதஞ்செய்ய, அதைக்கேட்டு வாலி போர்க்குப் புறப்பட அப்போது அவன் மனைவியாகிய தாரை 'ஓ பிராணநாதா! சற்று முன்பு அடிபட்டு ஓடினவன் திரும்பி இப்போதே சண்டைக்கு அழைக்கின்றமையால் இது வெறுமனன்று: ஏதோ ஒரு பெருத்த ஸஹாயத்தை அண்டைகொண்டு வந்திருக்கவேணும்; நீ இப்போது திடீரென்று போர்க்குப்போவது தகுதியல்ல' என்று சொல்லித் தடுத்தவளவிலும் அவள் வார்த்தையைச் செவியிலுங் கொள்ளாமல் சடக்கெனப் புறப்பட்டுவந்து ஸுக்ரீவனுடன் பிணங்கினான். அந்த வாலிஸுக்ரீவர்களிருவரும் ஒருவர்க்கொருவர் கீழேதள்ளுவது மேலே பாய்வது கட்டிக்கொண்டு நெருக்குவது கடிப்பது குத்துவது அடிப்பதாய் வலிதான யுத்தஞ் செய்யுங்காலத்தில், இராகவன் ஒரு மரத்தடியில் மறைந்திருந்து வாலியைப் பாணத்தினாலடித்தார். அந்த பாணத்தினால் வாலி மார்பு பிளந்து கீழே விழுந்துவிட்டான். இதைத் தாரை கேள்விப்பட்டு அங்கதனென்னும் புத்திரனுடன்கூட ஓடிவந்து வாலியைத்தழுவிக்கொண்டு பலவாறு புலம்பி, பிறகு எதிரில் நின்ற இராமனைப்பார்த்து அவருடைய மஹாபுருஷ லக்ஷணங்களைக்கண்டு இவர் ஸாக்ஷாத் பரமாத்மாவென்று நிச்சயித்துத் துதித்தனள். வாலியும் இராமனோடு வாதாடிப் பல ஸமாதானங்கள் சொல்லக் கேட்டு நன்மதிபெற்றுக் கைகூப்பி இராகவனைத் தொழுது ஸுக்ரீவனைப் போல் அங்கதனையும் நோக்கிக்கொள்ளவேணும்' என்று பிரார்த்தித்துவிட்டு ப்ராணனையும் விட்டான்.

இராமன் வாலியைக் கொன்றவிதனில் ஸாமந்யர் சில ஆக்ஷேபங்கள் கூறுவதுண்டு; அவையும் அவற்றுக்கு ஸமாதானங்களும் வருமாறு:—இராவணவதத்திற்கு உதவி தேடுகிற இராமன் இராவணனை எளிதில் வெல்லவல்ல வாலியைக் கொன்றுவிட்டு, பயங்கொள்ளியான ஸுக்ரீவனை உதவிசெய்துகொண்டது என்ன புத்திசாலித்தனம்! என்று சிலர் சங்கிப்பர்கள்; கேண்மின்:—வாலி முன்னமே இராவணனுடன் அக்நிஸாக்ஷிகமாக ஸ்நேஹங்கொண்டிருந்தமை பற்றி, அவனைத் தான் உதவிகொண்டால் இராவணன் முதலிய துஷ்டர்களைத் தொலைக்க வகையில்லாமையால் இராமன் ஸுக்ரீவனை நண்பனாகக் கொண்டு அவன் வேண்டுகோளின்படி வாலியை வதைத்திட்டனன். இனிச் செய்யவேண்டிய ராவண ஸம்ஹாரமாகிற தேவகாரியத்திற்கு இவ்வாலிவதம் அங்கமெனக் கருதத்தக்கது; எவ்வகைப் பெருந்தீங்கு செய்திருந்தாலும் சரணமடைந்தால் அவர்களைப் பாதுகாப்பதென்ற சிறந்த தருமத்தை மேற்கொண்டு நடப்பவனான

இராமபிரான், அத்தருமத்தை முழுதும்விட்டு, ஸுக்ரீவன் சரணமடைந்த பின்னரும் அவனை மிக வருந்திக் கொல்லத்தொடங்கி அந்தத் தருமத்திற்கு எதிரானமைபற்றி வாலியைக் கொல்லலாயிற்று. அன்றியும் பிறர் மனைவியைக் காதலித்துக் கவர்தலும், தம்பியினிடம் பகைபாராட்டுதலும், வலியழிந்து புறங்கொடுத்து ஓடுகின்றவனைத் துரத்தித்துரத்திக் கொல்லத் தொடங்குதலும் முதலிய தீச்செயல்கள் வாலியினிடம் இருந்ததனாலும் பரம தார்மிகனான இராமன் வாலியை அழிக்கலானான். இராமபிரான்றான் ஏகபத்நீவிரதமுடையவனாய், தம்பியரைத் தன்னுயிர்போலக் கொள்பவனாய், வலியிழந்த பகைவனை 'இன்று போய் நாளை வா' என்று அன்போடு சொல்லிவிடுத்தருளும் மஹாவீரனாவான்.

இஃதெல்லாமிருக்கட்டும்; மறைந்து நின்று அம்பு எய்தது கூடுமோ? எனின்; இது அரசர் கொடிய விலங்குகளைப் பதுங்கிநின்று அழிக்கும் வேட்டைமுறைமையாலென்பர்.

" யத்வா ஶ்ரமம் ஶ்ரமயாவத்ஶ்ரமயாவயெந
ஹந்தா ஜவத்ரு நதா ஶதாவதாஹிதாவ்யாக।
தத்யாக்தெவ தவ ராவவவம்ஶஜஸ்ய
தியக்ஷா நெவஹி விபக்ஷதயொவஹாரஃ॥"

என்று அதிமாநுஷஸ்தவத்தில் ஆழ்வானருளிச்செய்ததுங் காண்க.

வேறுவகையான ஸமாதானங்களுமுள்ளன;—முதலில் சரணமடைந்த ஸுக்ரீவனுக்கு அபயமளித்து வாலியைக் கொல்வதாக வாக்குதத்தஞ்செய்துவிட்ட பெருமாள் பின்னர் வாலியினெதிரில் நின்று போர்செய்தால் இப்பெருமானது திறத்தைக்கண்டு அஞ்சி வாலியும் அவனைச் சரணமடைந்திடுவனாயின் தஞ்சமடைந்தவனைக் கொலைசெய்யக்கூடாமைபற்றி அவனைக் கொல்லாதுவிட நேர்ந்தால் முன்னைய வாக்குத் தவறிவிடுமேயென்ற நோக்கம் முக்கிய காரணமாம். அன்றியும், எதிர்ந்தார் வலிமையிற் பாதி தன்னிடம் வந்து கூடும்படி வாலி சிவபிரானிடத்துப் பெற்றிருக்கின்ற வரம் பழுதுபடாமலிருக்குமாறு மறைந்து நின்று அம்பெய்தனன் என்றலுமொன்று; அவரவர்கள் தேவதாந்தரங்களிடத்துப் பெற்ற வரங்கள் பழுதுபடாதபடியன்றோ எம்பெருமான் காரியஞ் செய்வது. இங்ஙனம் பல காரணங்களுள. இங்கு விரிப்பிற் பெருகும். ஸ்ரீராமாயணம் அதன் வியாக்கியானங்கள் வல்லார்வாய்க் கேட்டுணர்க. கடவுளரது நியாயம் நுட்பமானதும் அறிதற்கு அரியதுமாதலால் அது மனிதரது நியாயத்தோடு ஒப்புநோக்கி ஆராய்தற்கு உரியதென்றென்பது உணரத்தக்கது. நிற்க.

கவந்தன் மடிந்த வரலாறு:—தநுவென்னும் யக்ஷனது மகனாய் ஸ்தூலசிரஸ் என்னும் முனிவனது சாபத்தால் அரக்கனாகி, பிரமனருளால் நீண்ட

ஆயுள்பெற்று, தேவேந்திரனோடு எதிர்த்து அவனது வஜ்ராயுதத்தாற் புடை பட்டுத் தனது தலை வயிற்றில் அழுந்தியதுபற்றிக் கபந்தம்போலுந் தோற்ற முடையனானதால் கபந்தனென்று பெயர்பெற்ற அரக்கன் தண்டகாரணியத்தில் ஒருபக்கத்திலேயிருந்து தனது நீண்ட கைகளிரண்டையும் எட்டியமட்டில் பரப் பித் துழாவி அவற்றிற்குள் அகப்பட்ட ஜீவராசிகளையெல்லாம் வாரி வாய்ப் பெய்து விழுங்கிக்கொண்டிருக்க, அங்குச்சென்று இவன் கைகளினிடையே அகப்பட்டுக்கொண்ட ராமலக்ஷ்மணர்கள் இவனது தோள்களைத் துணித்துத் தள்ளியவளவில், இவன் முன்னைய சாபமும் முற்பிறப்பின் தீவினையும் தீர்ந்தவ னாகி ராக்ஷஸசரீரத்தை யொழித்து திவ்யசரீரம்பெற்றுப் பெருமானைப்பலவாறு துதித்து நற்கதிக்குச் சென்றன னென்றறிக.

விராதனைக்கொன்றவரலாறு—இராமபிரான் தண்டகாவனத்திற் சென்று புகுந்து அங்கே பல மஹர்ஷிகளின் ஸத்காரங்களைப்பெற்று அவர்களிடம் நியமனம் வாங்கிக்கொண்டு அப்பால் ஓர் அரணியத்திற்குப் போம்போது விராத னென்பானோர் அரக்கன் தன் சூலத்தில் பல மிருகங்களைக் குத்தியெடுத்துக் கொண்டுவந்து வழியில் ராமலக்ஷ்மண ஸீதைகளைப் பார்த்து விரைந்தோடி வந்து ஸீதையை யெடுத்துத் தன்மடியில் வைத்துக்கொண்டு இவளை நான் பக்ஷித்து விடுகிறேனென்று சொல்லி ராமலக்ஷ்மணர்களைப் பலவிதமாக நிந்திக்க அவர்கள் அவன்மேல் அம்புகளை எறிய, அவன் பிராட்டியை விட்டுவிட்டு இவர் களைக் கொல்லக்கருதி இவர்கள்மேல் சூலம் முதலிய பல ஆயுதங்களைப் போட்டுக் கொண்டுவந்து இவ்விருவரையும் தனது தோளின்மேல் ஏற்றிக்கொண்டு போகையில் இதைக்கண்டு பரிதபித்த பிராட்டியின் வருத்தம் தீருமாறு இரு வரும் தங்கள் கத்தியை யெடுத்து விராதனுடைய புஜங்களை வெட்டிவிட்டார்கள். இராமபாணம் பட்ட மஹிமையினால் விராதன் தனது பூர்வ ஜன்ம சரி தங்களை நினைத்து 'ஓ புருஷோத்தமனே!, நான் ஒரு கந்தர்வன்; ஒருகால் ரம்பையை அணைய விரும்பினேன்; குபேரன், தன் மருகியோடு புணர நினைத்த என்மேல் கோபங்கொண்டு 'நீ அரக்கனாகக் கடவை' என்று என்னைச் சபிக்க, பிறகு நான் வேண்டிக்கொண்டதன்மேல் அருள்புரிந்து 'இராகவனால் உனக்கு இந்த சாபம் தொலையப்போகிறது' என்று அநுக்ரஹித்தான்; அப்படியே இப்போது நான் சாபந் தொலைந்து சதிர்த்தேன்' என்று சொல்லிவிட்டு இவர் களுக்கு சரபங்கமாமுனிவருடைய ஆச்ரமத்திற்கு வழி காட்டிவிட்டுத் தான் சுவர்க்கமடைந்தனன். இராமலக்ஷ்மணர்கள் அங்கு ஓர் பெரிய குழி வெட்டி விராதனுடலை அதில் தள்ளித் தூற்றுவிட்டுப் பிராட்டியுடன்கூடச் சரபங்காச்ர மஞ் சென்றனர்.

[வெற்புப்போலு மித்யாதி.] சந்திர மண்டலத்தளவும் ஓங்கியுள்ள மாடங் களின்மீது மாதர்கள் ஒருவர்க்கொருவர் தோழமை கொண்டாடி வார்த்தை யாடாநிற்கையில் அவர்களுடைய முகச்சோதியைப் பார்த்துச் சந்திரன் 'இவர்

கள் முன்னே நாம் பிழைக்கிற பிழைப்பு ஒரு பிழைப்பா !' என்று வெள்கி வருந்துகின்றனென்ற விதனால்—இத்தலத்து மாடமாளிகைகள் மிகவும் ஓங்கி விளங்குகின்றன வென்பதும், இத்தலத்து மாதர்கள் திங்கள்திருமுகத்துச் சேயிழையார் என்பதும் பெறுவிக்கப்பட்டனவாம்.

துங்கம்—வடசொல்; உந்நதமானது. ஆயம்—தோழி, தோழமை. பனி—அச்சம், துக்கம், நடுக்கம். .... .... .... (சு)

போருவில்வலம் புரியரக்கன் முடிகள் பத்தும்
புற்றுமறிந்தன போலப் புவிமேல் சிந்த *
செருவில்வலம் புரிசிலைக்கை மலைத்தோள் வேந்தன்
திருவடிசேர்ந் துய்கிற்பீர் ! * திரைநீத் தெள்கி
மருவிவலம் புரிகைதைக் கழியூ டாடி
வயல்நண்ணி மழைதருநீர் தவழ்கால் மன்னி *
தெருவில் வலம்புரி தரளமீனுங் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே. (எ)

| | |
|---|---|
| பொருவு இல் | ஒப்பற்ற |
| வலம் புரி | வலிமையைக் கொண்டுள்ள |
| அரக்கன் | இராவணனுடைய |
| முடிகள் பத்தும் | பத்துத் தலைகளும் |
| புற்று மறிந்தன போல புவி மேல் சிந்த | புற்று சரியுமாபோலே (எளிதாகக்) கீழே இற்று விழும்படியாக |
| செருவில் | யுத்தத்தில் |
| வலம் புரி | வலிமை காட்டுகிற |
| சிலை | வில்லை |
| கை | திருக்கையிலேயுடைய |
| மலை தோள் வேந்தன் | மலைபோன்ற தோள்களையுடைய சக்ரவர்த்தி திருமகனது |
| திரு அடி சேர்ந்து உய்கிற்பீர் | திருவடிகளையடைந்து வாழவிரும்பு மன்பர்களே!, |
| வலம்புரி | சங்குகளானவை, |
| திரை | ஸமுத்ரத்தை |
| எள்கி | இகழ்ந்து |
| நீத்து | விட்டு நீங்கி [கடலில் நின்றும் வந்து] |
| மருவி | (சீர்காழியிலே) வந்து சேர்ந்து |
| கைதை கழியூடு ஆடி | தாழைகள் நிறைந்த கழியினுள்ளே திரிந்து |
| | (பிறகு அங்கு நின்றும்) |
| வயல் நண்ணி | கழனிகளைச்சென்று சேர்ந்து |
| | (பிறகு அங்கு நின்றும்) |
| மழை தரு நீர் தவழ் கால் | மழை நீர் வெள்ளம் பெருகி வருகிற வாய்க்கால்கள் மூலமாக |
| தெருவில் மன்னி | வீதிகளிலே வந்து சேர்ந்து |
| வலம்புரி தரளம் ஈனும் | சங்குகளையும் முத்துக்களையும் (தெருக்களிலே) பிரஸவிக்கப்பெற்ற |
| | காழி............சேர்மின்—. |

* * *—ராவண ஸம்ஹாரம்பண்ணி வெற்றிபெற்ற கோதண்டராமனுடைய திருவடிகளைச் சேர்ந்து வாழவேண்டில் காழிச் சீராம விண்ணகரே சேர்மின். இப்பாட்டில் 'வலம்புரி' என்ற சொல் நான்கு அடிகளிலும் வந்திருக்கின்றது;

முதலிரண்டடிகளிலுள்ளது வலம், புரி என்று பிரிந்து பலசாலியென்று பொருள்படும். பின்னிரண்டடிகளிலுள்ளது முழுச்சொல்லாய் ‘சங்கு’ என்று பொருள்படும். வலப்பக்கத்தாற் சுழிந்திருப்பது வலம்புரியென்றும், இப்பியைவிட ஆயிரம்மடங்கு சிறந்ததான இடம்புரியினும் ஆயிரம்மடங்கு சிறந்தது வலம்புரியென்றும் சொல்லப்படினும், இங்கு வலம்புரியென்றது ஸாமாந்ய சப்தமாகி, சங்குமாத்திரத்தைச் சொல்லுவதாக நிற்கும்.

முன்னடிகளிலுள்ள வலம்புரி யென்ற சொற்களில், வலம்—‘பலம்’ என்ற வடசொல் விகாரம். புற்றுமறிந்தனபோல—புற்றுகளைச் சிதைப்பது எப்படி எளிதான காரியமோ அப்படி எளிதாகவே அரக்கன் முடிகள் பத்தையும் சிதைத்தமையைச் சொன்னபடி. அன்றியே பல முகங்களையுடையதான புற்றின் மேல்முகங்களைச் சிதைத்துவிட்டால் தலையொழிந்த கவந்தம்போற் காணப்படுமாதலால், இதற்காக எடுத்த உவமையாகவுங் கொள்ளலாம்.

[திரைநீத்துஇத்யாதி.] கடலிலே வாழ்ந்து கொண்டிருந்த சங்குகளானவை, இத்தலத்தின் நீர்வளத்தைப் பார்த்துக் கடலில் வாஸத்தை இகழ்ந்து விட்டிட்டு இத்தலத்தில் தாழைகள் மலிந்த கழிகளிலே வந்துசேர்ந்து, பிறகு, வயல்களிலே சென்று பாய்கின்ற அக்கழிகள் மூலமாக வயல்களிலே வந்துசேர்ந்து, அவ்விடத்தில் மழைநீர் தேங்கிநின்று அது வாய்க்காலாலே ஊரிலே வந்துபுகுர அவ்வழியாலே தெருக்களிலே வந்தேறி, அந்நீர் வடிந்தவாறே பின்னைப் போக மாட்டாதே அவ்விடந்தன்னிலே கிடந்து சங்குகளையும் முத்துக்களையும் ப்ரஸவிக்கின்றனவாம். இத்தால் நீர்வள நிலவளங்கள் சொல்லப்பட்டன. .... (எ)

பட்டரவே ரகலல்குல் பவளச் செவ்வாய்
பணைநெடுந்தோள் பிணைநெடுங்கண் பாலா மின்சொல் *
மட்டவிழுங் குழலிக்கா வானோர் காவில்
மரங்கொணர்ந்தா னடியணைவீர்! * அணில்கள் தாவ
நெட்டிலைய கருங்கமுகின் செங்காய் வீழ
நீள்பலவின் தாழ்சினையில் நெருங்கு * பீனத்
தெட்டபழஞ் சிதைந்துமதுச் சொரியுங் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே. (அ)

| | | | |
|---|---|---|---|
| பட்டு அரவு ஏர் அகல் அல்குல் | பட்டுச்சேலை யணிந்துள்ளதும், பாம்பின்படத்தையொத்து அழகியதும் அகன்றதுமான நிதம்ப ப்ரதேசத்தையும் | பணை நெடு தோள் | மூங்கில்போன்று நீண்ட தோள்களையும் |
| | | பிணை நெடு கண் | பெண்மானின்கண்போன்று நீண்ட கண்களையும் |
| பவளம் செம் வாய் | பவழம்போற் சிவந்த அதரத்தையும் | பால் ஆம் இன் சொல் | அமுதம்போன்று இனிமையான வாய்மொழிகளையும் |

| | |
|---|---|
| மட்டு அவிழும் குழலிக்கா | (முடியிலணிந்த மலர்களினின்றும்) தேன்வெள்ளமிடாநின்ற கூந்தலையும் உடையளான ஸத்யபாமைப்பிராட்டிக்காக |
| வானோர் காவின் | தேவலோகத்துச் சோலையில் நின்றும் |
| மரம்கொணர்ந்தான் | பாரிஜாதமரத்தைப் பிடுங்கிக்கொண்டுவந்த பெருமானுடைய |
| அடி | திருவடிகளை |
| அணைவீர் | சேரவிரும்பு மன்பர்காள்!; |
| அணில்கள் தாவ | அணிற்பிள்ளைகள் கிளைகிளையாகத் தாவித்தவழ்வதனால் |
| நெடு இலைய கரு கமுகின் செங்காய் வீழ | நீண்ட இலைகளையுடைய கறுத்த பாக்குமரங்களின் பழுக்காய்கள் உதிர்ந்து விழ (அதனாலே) |
| நீள் பலவின் | நீண்ட பலாமரங்களினுடைய |
| தாழ் சினையில் | (காய்களின் கனத்தால்) தாழ்ந்த கிளைகளில் |
| நெருங்கு | நெருங்கியிருக்கிற |
| பீனம் | பருத்த |
| தெட்ட | கனியப்பழுத்த |
| பழம் | (பலாப்) பழங்கள் |
| சிதைந்து | நசுங்கி |
| மது சொரியும் | தேனைப்பொழியுமிடமான |
| காழி.........சேர்மின்— | |

* * *—ஸத்யபாமைப் பிராட்டிக்காகப் பாரிஜாதாபஹரணம் பண்ணின பெருமானடியைப் பேண விருப்புடையார்க்குக் காழிச்சீராமவிண்ணகரே கதியென்கிறார்.

தேவர்களைக் குடியிருக்க வொட்டாமல் அலைக்கழித்த நரகாசுரனைத் தேவேந்திரனது வேண்டுகோளின்படி ஸ்ரீகிருஷ்ணன் ஸத்யபாமையோடுசென்று கொன்று, அவ்வசுரன் வலியக் கவர்ந்து சென்றிருந்த அத்தேவேந்திரனது தாயான அதிதி தேவியின் காதணியைக் கொண்டுவந்து கொடுப்பதற்காக அந்த ஸத்யபாமையுடனே ஸ்வர்க்கலோகத்துக்குப் போயினன்; அங்கு இவர்களை வரவேற்பதற்காகத் தேவேந்திரன் தனது மனைவியான இந்திராணியுடனே வந்தான்; அப்போது ஸத்யபாமையானவள் அவ்விந்திராணி தன்முடியில் இனிய மணமுள்ள பாரிஜாதபுஷ்பம் சூடியிருந்ததைக்கண்டு அத்தகைய மலர் தனக்கு வேண்டுமென்று விரும்பினாள். தங்களுக்குக் குடியிருப்பையுண்டாக்கின அந்த ஸ்ரீக்ருஷ்ணஸத்யபாமைகளின் விஷயத்தில் குறிப்பறிந்து நடப்பதே தகுதியாயிருக்கவும் அவ்வாறு செய்யாமற்போனாலும் கேட்டபின்பாவது அம்மலரைக் கொடுக்லாமே; அதுவுஞ் செய்யாமல், அப்போது ஸத்யபாமைக்கு உதவுதற்கு ஏற்றபாக்கிய மற்றவளாதலாலும், அம்மலருக்கு உரிய விருக்ஷத்தையே இழக்கவேண்டிய காலமாகையாலும், ஸத்யபாமை கேட்டதற்கு இந்திராணி 'இது தேவர்கட்குத் தகுமேயல்லாமல் மானிடப் பெண்ணாகிய உனக்குத் தகாது' என்றனள். அதுகேட்ட அப்பிராட்டி தனது விருப்பத்தை ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் தெரிவிக்க, அப்பிரான் அப்போது கருடனைக்கொண்டு அந்தப்பாரிஜாத விருக்ஷத்தை வேரோடுபிடுங்கி த்வாரகையில் சேர்ப்பித்து ஸத்யபாமையின் வீட்டில் நடுவித்தனன் என்ற வரலாறு அறிக. ஸத்யபாமைப் பிராட்டியின் அவயவ ஸௌந்தரியங்களை ஐந்தாறு விசேஷணங்களினால் விரித்துரைக்கின்றார்.

'ப்ரவாளம்' என்னும் வடசொல் பவளமெனத்திரிந்தது. பணை—மூங்கில். பசுமையினும் நெய்ப்புடைமையினும் திரண்ட வடிவத்திலும் மூங்கிலைத் தோளுக்கு உவமை கூறுவர். பிணை—மான்பேடை.

[அணில்கள் தாவ இத்யாதி.] இத்தலத்துச் சோலைகளின் நிலைமையை வருணிக்கிறார். அணிற்பிள்ளைகள் மரங்களிலே தாவித்திரிவது வழக்கமாகையாலே பாக்குமரங்களின் பணைகளிலே தாவும்போது அந்த உராய்தலினால் பழுக்காய்கள் உதிர்ந்து அவை பலாப்பழங்களின்மேல் 'தொப்' என்று விழ, அதனால் அப்பழங்கள் பிளவுற்று உள்ளிருந்து தேன் வெள்ளமிட்டுப் பெருகுகின்றதாம்.

நெடுமை + இலை நெட்டிலை. 'க்ரமுகம்' என்னும் வடசொல் கமுகு எனத்திரிந்தது. பீநம்—வடசொல். தேட்டபழம்=எம்பெருமானார் இத் திவ்ப்ரபந்த காலக்ஷேபம் நடத்தியருளும்போது இவ்விடத்திலுள்ள 'தேட்ட' என்பதற்குச் சரியான பொருள் விளங்கவில்லை யென்று அருளிச்செய்துவைத்து, பின்பொருகால் திவ்யதேச யாத்திரை யெழுந்தருளும்போது இத்தலத்தின் சோலைவழியே வந்து கொண்டிருக்க, அங்கே நாவல் மரங்களின் மீது சில சிறுபிள்ளைகள் ஏறிப் பழம்பறியாநிற்கையில் கீழேயிருந்த சிலபிள்ளைகள் 'அண்ணே! தேட்டபழமாகப் பார்த்துப் பறித்துப்போடு' என்ன; அதை யாத்ருச்சிகமாகக் கேட்டருளின எம்பெருமானார் 'பிள்ளாய்! தெட்ட பழமென்றால் என்ன?' என்று வினவியருள, 'கனியப் பழுத்த பழம்' என்று இப்பிள்ளைகள் சொல்ல, உடையவரும் திருவுள்ளமுவந்து 'இதுஒரு திசைச் சொல்போலே யிருந்தது; நம்மாழ்வார் திருநாவாய்ப் பதிகத்திலே 1. "குறுக்கும் வகையுண்டுகொலோ" என்றதை யொக்குமிது' என்றருளிச் செய்தாரென்று பெரியோர்களருளிச் செய்யக் கேட்டிருக்கை. .... ... (அ)

பிறைதங்கு சடையானை வலத்தே வைத்துப்
 பிரமனைத் தன் னுந்தியிலே தோற்றுவித்து *
கறைதங்கு வேல்தடங்கண் திருவை மார்பில்
 கலந்தவன் தாளணை கிற்பீர் * கழுநீர்கூடித்
துறைதங்கு கமலத்துத் துயின்று கைதைத்
 தோடாரும் பொதிசோற்றுச் சுண்ணம் நண்ணி *
சிறைவண்டு களிபாடும் வயல்சூழ் காழிச்
 சீராம விண்ணகரே சேர்மி னீரே. (௯)

| | | | |
|---|---|---|---|
| பிறை தங்கு சடையானை வலத்தே வைத்து | சந்திரகலை தங்கியிருக்கப் பெற்ற சடைமுடியை யுடையனான சிவனை வலவருகே வைத்துக் கொண்டிருப்பவனும் | பிரமனை தன் உந்தியிலே தோற்றுவித்து | நான்முகனைத் தனது நாபிக்கமலத்தில் படைத்தவனும் |

1. திருவாய்மொழி 9–8–1. இப்பாட்டின் ஈற்றடியின் வியாக்கியானம் (ஈடு) ஸேவிக்கத்தக்கது.

| | | | |
|---|---|---|---|
| கறை தங்கு வேல் தட கண் திருவை மார்வில் கலந்தவன் | (சத்ருக்களின்) ரத்தமாம்ஸக் கறைதங்கிய வேல் போன்று விசாலமான திருக்கண்களையுடைய பிராட்டியைத் திருமார்பிலே கொண்டுள்ளவனாயுமிருக்கிற பெருமானுடைய | | (அத்தால் வந்த ச்ரமம் ஆறும்படி) |
| தாள் | திருவடிகளை | துறை தங்கு கமலத்து துயின்று | நீர்நிலங்களிலுள்ள தாமரைப் பூவிலே (புகுந்து தேனைப் பருகி அங்கே) உறங்கி (அதன்பிறகு) |
| அணைகிற்பீர் | சேரவிரும்பு மன்பர்களே!, | கைதை தோடு ஆரும் | தாழைமடல்களில் பொருந்தியுள்ள |
| சிறை வண்டு | இறகையுடைய வண்டுகளானவை | பொதி சோற்றுச் சுண்ணம் நண்ணி | பூந்தாதுத்துகள்களிலே புரண்டு |
| கழுநீர் கூடி | செங்கழுநீர்ப்பூக்களில் (பேடையோடு) சேர்ந்திருந்து | களி பாடும் வயல் சூழ் | களித்து இசைபாடப்பெற்ற கழனிகளால் சூழப்பட்ட |
| | | | காழி.........சேர்மின்—. |

* * *—தன்னுடைய திருமேனியிலே பிராட்டிக்கு இடங்கொடுப்பது போலே துர்மாநிகளான ப்ரஹ்ம ருத்ரர்களுக்கும் இடம் கற்பித்த சீலவானை பெருமானடியைக் கூடவேண்டில் காழிச்சீராமவிண்ணகரஞ் சேர்வதே சரண மென்கிறார்.

தாமஸதெய்வமான ருத்ரனுக்கும் தனது திருமேனியின் வலப்பக்கத்தில் இடங்கொடுத்து ஆதரிக்குமவனும் எம்பெருமான். திருவாய்மொழியில் "வலத்தனன் திரிபுரமெரித்தவன்" (1—3—9) என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் "பஶ்யைகாதஶ மே ருத்ராந் தக்ஷிணம் பார்ஶ்வமாஶ்ரிதாந் = பச்யைகாதச மே ருத்ராந் தக்ஷிணம் பார்ச்வமாச்ரிதாந்" என்ற மோக்ஷதர்மவசநத்தை எடுத்துக்காட்டியிருப்பது இங்கே அநுஸந்தேயம். "தபஸா தோஷிதஸ் தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா। ஸ்வபார்ஶ்வே தக்ஷிணே ஶம்போர் நிவாஸ: பரிகல்பித: = தபஸா தோஷிதஸ் தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா—ஸ்வபார்ச்வே தக்ஷிணே சம்போர் நிவாஸ: பரிகல்பித:" என்றொரு வசநமும் இருபத்திநாலாயிரப்படியிற் காண்பதுண்டு. [சிவன் பண்ணின தவத்தினால் திருவுள்ளமுவந்த திருமால் அவனுக்குத் தனது வலவருகிலே வாஸஸ்தானம் அமைத்துக் கொடுத்தருளினன்—என்பது இதன்பொருள்.]

"ஏறாளுமிறையோனும் திசைமுகனுந் திருமகளும், கூறாளுந்தனியுடம்பன்" என்றும், "அக்கும்புலியினதளு முடையாரவரொருவர், பக்கம் நிற்க நின்ற பண்பர்" என்றும் ஆழ்வார்கள் அடிக்கடி அருளிச்செய்கிறார்களே, சிவன் முதலானோர் எப்போதும் எம்பெருமானுடைய திருமேனியைப் பற்றியிருக்கிறார்களோ? என்றொரு சங்கை பிறக்கக்கூடும்; இந்த சங்கையும் இதற்குப் பரிஹாரமும் பூருவர்களின் வியாக்கியானங்களிலேயே உள்ளன; கீழ் உதாஹரித்த திருவாய்மொழிப் பாசுரத்தின் வியாக்கியானங்களிலே—"ஸர்வ

காலமும் இவர்கள் எம்பெருமானுடைய திருமேனியிலே யிருப்பர்களோ வென்னில்; ஆபத்துக்களிலே திருமேனியிலே இடங்கொடுத்தருளும்; அது மஹா குணமாகையாலே ஆழ்வார்கள் எப்போது மொக்க அருளிச்செய்துகொண்டு போருவர்கள். ஸாமந்தர்க்குப் புறம்பே நாடுகள் கனக்கவுண்டாகிலும் மாளிகைக்குள்ளே செம்பாலே நாழியரிசியைத் தங்களுக்கு வரிசையாக நினைத்திருப்பர்களிறே; அப்படியே இவர்களும் திருமேனியில் பண்ணிவைக்கும் ப்ராப்தி விடார்களிறே. ஒரோ கலஹங்களிலே அடையவளைந்தானுக்குள்ளே குடிவாங்கியிருந்து கலஹந்தெளிந்தவாறே புறம்பே புறப்பட்டாலும் 'இவ்விடம் இன்னார் பற்று, இவ்விடம் இன்னார் பற்று' என்று பின்னும் ப்ராப்தி சொல்லிவைக்குமா போலே" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கத் தக்கன

[கழுநீர்கூடி இத்யாதி.] வண்டுகளானவை செங்கழுநீர் மலர்களிலே பேடைகளுடன் கூடி ரமித்து அதனாலுண்டான துவட்சிக்குப் பரிஹாரமாகத் தாமரைப் பூக்களிலே வந்து துயில் கொண்டிருந்து (தேனைப் பருகிக் களைதீர்ந்து) பின்பு தாழைமடற் சுண்ணங்களிலே போய்ப்புரண்டு களிப்பின் மிகுதியாலே இசைபாடுகின்றனவாம்.

"கேதகீ" என்னும் வடசொல் 'கைதை' எனவும், 'சூர்ணம்' என்னும் வடசொல் 'சுண்ணம்' எனவும் திரிந்தன. ... ... ... (௯)

செங்கமலத் தயனனைய மறையோர் காழிச்
 சீராம விண்ணகரின் செங்கண் மாலை *
அங்கமலத் தடவயல் சூழாலி நாட
 னருள்மாரி யரட்டமுக்கி யடையார் சீயம் *
கொங்குமலர்க் குழலியர்வேள் மங்கை வேந்தன்
 கொற்றவேற் பரகாலன் கலியன் சொன்ன *
சங்கமுகத் தமிழ்மாலை பத்தும் வல்லார்
 தடங்கடல்சூ ழுலகுக்குத் தலைவர் தாமே. (ய)

செங்கமலத்து அயன் அனைய மறையோர் } (திருநாபிக்) கமலத்திற் பிறந்த பிரமனையொத்த வைதிகர்கள் வாழ்கிற

காழி சீராம விண்ணகரின் { காழிச் சீராம விண்ணகரத்திலுள்ள

செங் கண் மாலை { செந்தாமரைபோற் கண்ணனான பெருமான் விஷயமாக,

அம் கமலம் தடம் வயல் சூழ் ஆலி நாடன் { அழகிய தாமரைத்தடாகங்களையுடைய வயல்களால் சூழப்பட்ட திருவாலி நாட்டுக்குத்தலைவரும்

அருள் மாரி { (பக்தர்கட்கு) அருளைப்பொழியும் மேகம்போன்றவரும்

அரட்டு அமுக்கி { தீங்குசெய்யுமவர்களைத் தலையெடுக்கவொட்டாதே அமுங்கச்செய்பவரும்

அடையார் சீயம் { சத்ருக்களுக்கு ஸிம்ஹம் போன்றவரும்

| | | | |
|---|---|---|---|
| கொங்கு மலர் குழலியர் வேள் | தேன்மிக்க பூக்களையணிந்த கூந்தலையுடைய மாதர்க்கு விரும்பத்தக்கவரும் | சொன்ன | அருளிச்செய்த |
| மங்கை வேந்தன் | திருமங்கைக்கு நிர்வாஹகரும் | சங்கம் முகம் தமிழ் மாலை பத்தும் | (புலவர்) கூட்டங்கூடிக் கொண்டாடத்தகுந்த தமிழ்ப்பாசுரங்களான இப்பத்தையும் |
| பரகாலன் | எதிரிகட்கு யமன்போன்றவரும் | வல்லார் தாம் | ஓதவல்லவர்கள் |
| கொற்றம் வேல் | வெற்றிபொருந்திய வேற்படையை யுடையருமான | தட கடல் சூழ் உலகுக்கு | பரந்த கடலால் சூழப்பட்ட உலகத்திலுள்ளார்க் கெல்லாம் |
| கலியன் | ஆழ்வார் | தலைவர் | மேலாயிருக்கப்பெறுவர். |

* * *—இப்பதிகத்தின் பயனுரைக்கு மிப்பாசுரத்தில் ஆழ்வார்பெருமையும் இத்திருமொழியின் பெருமையுமே பெரிதாயிருக்கின்றதே, இது தகுதியோ என்று சிலர் சங்கிப்பர்கள்: "தோன்றா தோற்றித்துறை பலமுடிப்பினும், தான் தற்புகழ்தல் தகுதியன்றே" (நன்னூல்) என்று சொன்னவுடனே "மன்னுடை மன்றத்து ஓலைத்தூக்கினும், தன்னுடை யாற்ற லுணராரிடையினும், மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும், தன்னை மறுதலை பழித்த காலையும், தன்னைப் புகழ்தலும் தகும் புலவோற்கே" என்றுஞ் சொல்லியிருப்பதனால், (இப்பதிகத்தின் அவதாரிகையில் நாம் குறிப்பிட்டுள்ள வரலாற்றின் படியே) தன்னை மறுதலை பழித்தகாலை, தன்னுடையாற்ற லுணராதாரிடையே அருளிச் செய்ய நேர்ந்த பதிகமிதுவாகையாலே இத்தற்புகழ்ச்சி குற்றத்தின்பாற் படமாட்டாதென்றுணர்க.

பிரமன் எப்போதும் வேதஞ்சொல்லிக் கொண்டே யிருப்பதுபோல இத்தலத்திலுள்ள அந்தணர்களும் அநவரதம் வேதாத்யயந நிஷ்டராயிருத்தல் பற்றிச் "செங்கமலத் தயனனைய மறையோர்" என்றார். "விண்ணகர் என் செங்கண்மாலை" என்பதும் பாடமாம்.

'ஸிம்ஹ' என்னும் வடசொல் சீய மெனத் திரிந்தது. ஈற்றடியில், 'ஸம்வாதவ' என்னும் வட சொற்றொடர் சங்கமுக மென்று திரிந்தது. 1. "குழாங்களாயடியீருடன் கூடி நின்றாடுமினே" என்றாற்போலே ரஸிகர்கள் பலர் கூடிக்கொண்டாடி அநுபவிக்கவேண்டிய அருளிச்செயல் என்றவாறு. *

அடிவரவு:—ஒருகுறள் நான்முகன் வை பஞ்சிய தெவ்வாய பைங்கண் பொருவில் பட்டு பிறை செங்கமலத்து வந்து.

நான்காந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

1. திருவாய்மொழி 2—3—11.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றாம்பத்து—ஐந்தாந்திருமொழி,

# வந்துனதடியேன்.

அவதாரிகை:—"காழிச்சீராமவிண்ணகரே சேர்மினீரே" என்று ஒரு தடவைக்கு ஒன்பது தடவையாகச் சொல்லிநின்றார் கீழ்த்திருமொழியில். இங்ஙனே பிறர்க்கு உபதேசிக்கிற இவ்வாழ்வார் தாமும் அப்படியே காழிச்சீராம விண்ணகரிலேயே கால்தாழ்ந்து நம்மளவும் வாராமல் நின்று விடுவரோ வென்று சங்கைகொண்ட திருவாலி எம்பெருமான், தன்னை இவ்வாழ்வார் நினையாதிருக்கச் செய்தேயும் தானாகவே இவரை விஷயீகரித்து இவருடைய நெஞ்சிலேவந்து குடிகொண்டான். அதனையுணர்ந்த ஆழ்வார் 'பிரானே! நான் அபேக்ஷியாதிருக்கவும் நீயாகவே வந்து விஷயீகரித்தாய்; உன்னையொழிய வேறொன்றில் நெஞ்சு செல்லாதபடியான ருசியையும் பிறப்பித்தாய்; ஒரு நொடிப் பொழுதாகிலும் உன்னை விட்டுப்பிரிந்தால் பிழையேன் என்னும்படியான நிலைமையைப் பிறப்பித்தாய்; இனி நானுன்னைப் போக வொட்டேன்; என்னெஞ்சிலேயே நித்யவாஸம் பண்ணியிருந்து என்னை ஒழிவில் காலமெல்லாம் அடிமைகொண்டருளவேணும்' என்று பிரார்த்தித்துச் செல்லுகிறார் இதில். (*)

(ஆசிரியத்துறை)

வந்துனதடியேன் மனம்புகுந்தாய் புகுந்ததற்பின் வணங்கும் * என்
சிந்தனைக்கினியாய் திருவே யென்னாருயிரே! *
அந்தளிரணியா ரசோகினிளந்தளிர்கள் கலந்து * அவையெங்கும்
செந்தழல் புரையும் திருவாலியம்மானே! (௧)

| | |
|---|---|
| அம் தளிர் | அழகிய தளிர்களாலுண்டான |
| அணி ஆர் | அழகுபொருந்திய |
| அசோகின் | அசோகமரத்தினது |
| இள தளிர்கள் அவை | இளந்தளிர்களானவை |
| எங்கும் கலந்து | எல்லாவிடங்களிலும் பரவியிருப்பதனாலே |
| செம் தழல் புரையும் | சிவந்த அக்நி ஜ்வலிப்பது போலே யிருக்கப்பெற்ற |
| திரு ஆலி அம்மானே | திருவாலியில் எழுந்தருளி யிருக்கும் பெருமானே!, |
| திருவே | எனக்குச் செல்வமானவனே! |
| என் ஆர் உயிரே | எனது அருமையான உயிர்போன்றவனே!, |
| வந்து | நீயாகவே நிர்ஹேதுக விஷயீகாரம்பண்ணி |
| உனது அடியேன் மனம் புகுந்தாய் | உன்னடியனான என்னுடைய மனத்திலே வந்துபுகுந்தருளினாய்; |
| புகுந்ததற்பின் | அப்படி நீ வந்து புகுந்தபின்பு |
| வணங்கும் என் சிந்தனைக்கு | வணக்கமுற்ற என் மனத்துக்கு |
| இனியாய் | போக்யனானாய். |

* * *—[வந்து உனதடியேன்மனம்புகுந்தாய்.] எம்பெருமானுக்கு, பரமபதத்திலும் திருப்பாற்கடலிலும் கோயில் திருமலை பெருமள்கோயில் முதலான உகந்தருளின விடங்களிலும் இருப்பதிற் காட்டிலும் மெய்யடியாருடைய ஹ்ருதயகமலத்திலே வாழ்வதே பரமோத்தேச்ய மாகையாலே இப்போது அப்பெருமான் இவ்வாழ்வாரது திருவுள்ளத்திலே வந்து குடிகொண்டான். தம்முடைய பிரார்த்தனை யின்றியே அவன்தானாகவே விரும்பிவந்து புகுந்த மகிழ்ச்சி உள்ளடங்காமல் "வந்துனதடியேன் மனம்புகுந்தாய்" என்று வாய்விட்டுப் பேசுகின்றார்.

[புகுந்ததற்பின் வணங்குமேன் சிந்தனைக்கினியாய் !;] அவன்றானாகவே வந்து புகுந்தாலும் 'உன்னை இங்கிருக்க வொட்டேன்' என்று அடித்துத் துரத்தும் பாவிகளுமுண்டே ஸம்ஸாரத்தில்; அப்படியல்லாமல் 1. "இசைவித் தென்னையுன் தாளிணைக் கீழிருத்துமம்மானே" என்னுமாபோலே பெருநன்றி பாராட்டின தமக்குத் தித்தித்திருந்தமை சொன்னபடி. கண்ணபிரான் பாண்டவர்க்குத் தூதுவனாய்த் துரியோதனனிடஞ் செல்ல, அப்பிரான் வருகையையறிந்த துரியோதனன் கூடவிருக்கு மரசர்களை நோக்கி 'க்ருஷ்ணன் வரும்போது ஒருவருமெழுந்து மரியாதை செய்யக்கூடாது' என்று உறுதியாய்க் கட்டளையிட்டுத் தானும் ஸபையிலே உறுதியுடனிருக்க, க்ருஷ்ணன் அங்கு எழுந்தருளிய வளவில் ஸபையிலிருந்த ராஜாக்களெல்லாரும் ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவினது சோதியைக்கண்டு 2. "யதாஹம் கேஶவே வ்ருத்திம் அவஶாः ப்ரதிபேதிரே" = யதார்ஹம் கேசவே வ்ருத்திம் அவசாः ப்ரதிபேதிரே." என்கிறபடியே பரவசர்களாய் எழுந்து மரியாதை செய்துவிட, துரியோதனன் தானும் துடைநடுங்கி எழுந்துவிட்டானென்றிருக்கும்போது ஆழ்வார்க்குச் சொல்லவேணுமோ?. ஆழ்வாருடைய திருவாராதனத் திருமூர்த்திக்குச் சிந்தனைக் கினியானென்று திருநாமம் ப்ரஸித்தம். இத்திருநாமங் கொண்ட திவ்யமங்கள விக்ரஹம் இன்றைக்கும் கலியன்ஸந்நிதியில் ஸேவை ஸாதிப்பர்.

அருமை+உயிர், ஆருயிர். 3. "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணன்" என்னலாம்படி எனக்குத் தாரகங்களெல்லாம் தானேயாயிருப்பவன் என்றபடி. எம்பெருமானுடைய நினைவாலே, பக்தர்கள் அவனுக்கு உயிராயிருப்பர்; பக்தர்களுடைய நினைவாலே அவன் இவர்கட்கு உயிரா யிருப்பன். 4. "அறிவிலேனுக் கருளாய் அறிவாருயிரானாய்" என்றவிடத்து அறிவார்களுக்கு [ஜ்ஞாநிகளுக்கு] உயிரா யிருப்பவனே! என்றும் அறிவார்களை உயிராகவுடையவனே! என்றும் இரண்டுவகையான நிர்வாஹங் காண்க.

---

1. திருவாய்மொழி 5—8—9.

2. மஹாபாரத சுலோகம்—அவரவர்கள் கண்ணபிரானிடத்தில் இருக்கவேண்டிய மரியாதைப்படி திடீரென்று இருந்து விட்டார்களென்று கருத்து.

3. திருவாய்மொழி 6—7—1. 4. திருவாய்மொழி 6—9—8.

[அந்தளிரித்யாதி.] இத்தலத்தின் சோலைப்புறமெங்கும் அசோகமரங்கள் அடர்ந்து கிடப்பதால் அவற்றின் செந்நிறமான தளிர்களின் ஒளி எங்கும் வீசி அக்நிஜ்வாலை பரவியிருப்பதுபோல் விளங்குகின்றது; ஆகவிப்படி எங்கும் நெருப்புக் கொளுத்தினாற்போலே அழகியதாய்த் திகழ்கின்ற திருவாலிமாநகரில் எழுந்தருளியிருக்கு மெம்பெருமானே! நீ என்னுடைய சிந்தையிற்புகுந்து தித்தித்திருக்கின்றாய் என்றதாயிற்று.

"சிந்தனைக்கினியாய்" என்பதை முற்றாகக்கொள்ளாமல் விளியாகக் கொண்டால் 'வாழ்க' என்றொரு வினைமுற்று வருவித்து முடிக்க. .... (௧)

நீலத்தடவரை மாமணிநிகழக் கிடந்ததுபோல் * அரவணை
வேலைத்தலைக்கிடந்தாய்! அடியேன்மனத்திருந்தாய் *
சோலைத்தலைக் கணமாமயில்நடமாட மழைமுகில்போன் றெழுந்து * எங்கும்
ஆலைப்புகைகமழ மணியாலியம்மானே! (௨)

சோலைத்தலை — சோலையிலே
மா மயில் கணம் — அழகிய மயில்களின் கூட்டமானது
நடம் ஆட — (களித்துக்) கூத்தாடும்படியாக
ஆலை புகை — கருப்பஞ்சாறு அட்ட புகையானது
மழை முகில் போன்று எங்கும் எழுந்து — காளமேகம்போலே எங்குங் கிளர்ந்து பரவி
கமழும் — பரிமளிக்கப்பெற்ற
அணி ஆலி அம்மானே!—;

நீலம் தட வரை — நீலநிறமுள்ள பெரிய வொருமலையானது
மா மணி நிகழ கிடந்தது போல் — (தன்மேல்) ஒரு நீலரத்னம் விளங்கப்பெற்றுப் படுத்திருப்பதுபோன்று
வேலைத் தலை — திருப்பாற் கடலிலே
அரவு அணை — சேஷசயனத்திலே
கிடந்தாய் — (கௌஸ்துபமணி விளங்கப்) பள்ளிகொண்டிருந்தாய் முன்பு;
அடியேன் மனத்து இருந்தாய் — (இப்போது) என்னுடைய மனத்திலே புகுந்து நீங்காதிருக்கின்றாய்.

* * *—திருப்பாற்கடல் முதலான விடங்களில் எம்பெருமான் வாழ்வதானது ஸமயம்பார்த்து அன்பருடைய நெஞ்சிலேவந்து சேர்வதற்காகவே யாமென்பது நம் ஆசார்யர்களின் கொள்கை. ஆகவே, க்ஷீராப்தி முதலியவற்றில் வாஸம் உபாயமாய்ப் பக்தருடைய ஹ்ருதயத்தில் வாஸமே புருஷார்த்தமா யிருக்குமென்றும், இது ஸித்தித்துவிட்டால் பரமபதம் முதலியவற்றில் வாஸம் செய்வதில் ஆதரம் மட்டமாய்விடுமென்றும் ஸ்ரீவசநபூஷணத்தில் பிள்ளையுலகாசிரியர் பரமரஸமாக அருளிச்செய்துளர். நம்மாழ்வாரும் "கல்லுங் கனைகடலும் வைகுந்தவானாடும், புல்லென்றொழிந்தன கொல் ஏபாவம்—வெல்ல நெடியான் நிறங்கரியான் உள்புகுந்து நீங்கான், அடியேனதுள்ளத் தகம்." என்று பெரிய திருவந்தாதியில் அருளிச்செய்தார். இவ்வாழ்வாரும் அவ்வர்த்தமே தோன்ற அருளிச்செய்கிறார்; "அரவணை வேலைத்தலைக் கிடந்தாய் அடியேன் மனத் திருந்தாய்" என்ற சொற்சேர்த்தியால்—அடியேனுடைய மனத்தில் ஸமயம்

பார்த்து வந்து சேர்வதற்காகவே நீ திருப்பாற்கடலில் உபாய சிந்தனை பண்ணிக் கொண்டு கிடந்தாய் என்ற கருத்து விளங்கும்.

நீலநிறத்ததொரு மலையின்மேல் மாமணி விளங்குவதுபோலத் திருப்பாற் கடலில் அரவணைமேற் கிடந்தாய் என்றவிதனில், நீலமலையின் ஸ்தாநத்திலே எம்பெருமானையும் மாமணியின் ஸ்தாநத்திலே ஸ்ரீகௌஸ்துப மணியையும் உபமேயமாகக் கொள்ளவேணும். ஆகவே "அரவணை வேலைத்தலை" என்ற வாக்கியத்திற்கு உபமேயகோடியில் அந்வயமில்லை; அந்வயம் வேணுமென்னில்; எம்பெருமானுடைய கரிய திருமேனியின் நிழலீட்டாலே பாற்கடலும் பாம் பணையும் நீலநிறம் பெற்றனவென்றுகொண்டு, பாற்கடற்பாம்பணையை நீலத் தடவரைக்கு உபமேயமாகவும் எம்பெருமானை மாமணிக்கு உபமேயமாகவுங் கொள்ளலாம். இந்த யோஜனையில், [அபிபணிபதிபாவாதித்யாதி.] "அபி பணிபதிபாவாத் சுப்ரமந்தச் சயாளோ: மரகதஸுகுமாரை: ரங்கபர்த்துர் மயூகை:—ஸகலஜலதிபாநச்யாமஜீமூதஜைத்ரம் புலகயதி விமாநம் பாவநம் லோசநே ந:." $ என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவ ச்லோக மநுஸந்திக்கத்தகும்.

மாமணி நிகழ = நிகழ்தல்—விளங்குதல். வேலைத்தலை = கடற்கரைக்கு வாசகமான 'வேலா' என்னும் வடசொல் வேலையென ஐயீறாகி ஆகுபெயரால் கடற்கு வாசகமாயிற்று. தலை—ஏழனுருபு. வேலையிலே அரவணைக் கிடந்தாய் என்க.

[சோலைத்தலை இத்யாதி.] கரும்பாலைகளில் கருப்பஞ்சாறு அடுவதனால் விசேஷமாகப் புகைகிளம்பி எங்கும் பரவியிருப்பதைக் கண்டமயில்கள் அப் புகைத்திரளை மேகத்திரளாக மயங்கிக் களித்துக் கூத்தாடுகின்றனவாம். மயில்கள் மேகங்களைக் கண்டு தோகை விரித்துக் கூத்தாடுதல் இயல்பு. ... (உ)

நென்னல்போய்வரு மென்றென்றெண்ணியிராமை யென்மனத்தேபுகுந்தது *
இம்மைக் கேன்றிருந்தேன் எறிநீர்வளஞ் செறுவில் *
செங்நெற்கூழை வரம்பொரீஇ அரிவார்முகத்தெழு வாளைபோய்கரும்பு *
அங்நற் காடணையு மணியாலி யம்மானே. (ங)

| | | | |
|---|---|---|---|
| எறி நீர் வளம் செறுவில் | அலையெறிகின்ற நீர்வளம்பொருந்திய வயல்களிலே | அரிவார் முகத்து | அறுக்கிறவர்களுடைய முகத்திலே |
| செங்நெல் கூழை | செங்நெற்பயிர்களை | எழு | (அக்கதிர்களில் நின்றும்) குதித்துப்பாய்ந்த |
| வரம்பு ஒரீஇ | வரப்புகளின்மேலே சாயவிட்டு | வாளை | மீன்களானவை |

$, இத்தால் ஸ்ரீரங்கவிமாநத்தை வருணிக்கிறார். திருவநந்தாழ்வானே ரங்கவிமாந மாக வடிவெடுத்திருப்பதால் இவ்விமானம் வெண்ணிறமாயினும், உள்ளே திருக்கண்வளர்ந் தருளும் திருவரங்கநாதனது நீலமேனியொளியால், கருங்கடலை முற்றும்பருகி யெழுந்த காளமேகத்தையும் வென்று மிகவும் நீலமாக விளங்குகின்றதாம் விமானம்.

| | | | |
|---|---|---|---|
| போய் | (அபாயமுள்ள இவ்விடம் இனி நமக்குத்தகா தென்று அவ்விடம் விட்டுப்) புறப்பட்டுப்போய் | நென்னல் போய் வரும் என்று என்று எண்ணி இராமை | 'நேற்றுப்போனான், இன்று வருவன் இன்று வருவன் இன்றுவருவன்' என்றிப்படி பாரித்துக் கொண்டு போதுபோக்க வேண்டாதபடி |
| அ நல் கரும்பு காடு அணையும் | அப்படிப்பட்ட நல்ல கருப்பஞ்சோலைகளிலே சேரப்பெற்ற | என் மனத்தே புகுந்தது | (ஸ்திரப்ராதிஷ்டையாக நீ) என்நெஞ்சிலே புகுந்தவிது |
| அணி ஆலி அம்மானே !—; | | இம்மைக்கு என்று இருந்தேன் | இந்தஜன்மம் முழுமைக்குமாம் என்று துணிந்திருக்கிறேன். |

* * *—இனி போக்குவரத்து இல்லாமே ஸ்திரப்ரதிஷ்டையாம்படி என் மனத்திலே புகுந்தா யென்கிறது முதலடி. நென்னல் போய் வருமென்றென் றெண்ணியிராமை=உலகத்திலே ஒருவரை ஒருவர் விட்டுப்பிரிய நேர்வதுண்டே; காதலியைக் காதலன் விட்டுப்பிரிந்து தேசாந்தரஞ் சென்றால் விரஹவ்யஸநத்தை ஒருவாறு ஆற்றிக்கொள்வதற்காக 'நேற்றுப் போனார், இன்று வந்திடுவர்' என்று சொல்லிக்கொண்டே காதலி காலங்கழிப்பது வழக்கம்; அப்படிச் சொல்லிக்கொண்டு ஏங்கிக்கிடக்க வேண்டாதபடி வயலாலிமணவாளன் ஆழ்வார் தம்முடைய திருவுள்ளத்தை ஒரு நொடிப்பொழுதும் விட்டுப்பிரியாதிருக்கின்றமையைச் சொன்னபடி. "நென்னல் போய் வரும்" என்பதற்கு மற்றொரு வகையாகவும் பொருள் சொல்லலாம்; நேற்று ஒரு நாள் கழிந்தது, இற்றை நாள் வந்தது; இதுவுங்கழிந்து நாளை நாள் வரக்கடவது, அதுவுங் கழிந்து அடுத்த நாள் வரக்கடவது என்றிப்படியே (பரதாழ்வான் போலே) பல்லைக்கடித்துக் கொண்டு பிரிவு நாள்களை எண்ணியிருக்க வேண்டாதபடி— என்றுமாம்.

ஆழ்வீர்! இப்போது உம்முடைய நெஞ்சிலே எம்பெருமான் இப்படி வந்து புகுந்தாலும் அடுத்த க்ஷணத்திலே ஓடிப்போய்விட மாட்டானோ வென்று பிறர் சங்கிக்க இடமில்லாதபடி "இம்மைக்கென்றிருந்தேன்" என்கிறார். இந்த ஜன்மம் முழுமைக்கும் இப்படியே நித்ய ஸம்ச்லேஷம் குறையின்றி நிலைநிற்குமென்று நிச்சயித்திருக்கிறேனென்றவாறு. இருந்தேன்=நிகழ் காலத்தை இறந்த காலத்தாற் சொல்லுவது முண்டு.

எறிநீர்வளஞ் செறுவில் என்றுதொடங்கித் திருவாலியின் வயல் நிலைமையை வருணிக்கிறார். கழனிகளில் செந்நெற் பயிர்கள் வானோங்கி வளர்ந்திருந்ததனால் அவற்றை நேரே நின்று அறுக்க முடியாமல் கதிர்த்தலைகளை மடக்கி வரப்புகளிலே படியவைத்து அறுக்கின்றார்களாம் பயிர்த்தொழிலாளர்; அப்படியறுக்கும்போது அக்கதிர்களைச் சேரப்பிடித்த பிடியிலே அகப்பட்டுக்கொண்ட வாளைமீன்கள் அவர்களுடைய முகத்திலே எழப்பாய்ந்து அபாயமுள்ள அவ்விடத்தைவிட்டுக் கவலையின்றி வாழ்வதற்காக ஸமீபத்திலுள்ள கருப்பங்காட்டிலே சென்று சேர்கின்றனவாம்.

செந்நெல் கூழை='கூழை' என்று ஐகாரவீற்றதான சொல்லாகவே கொள்ளுதலும், 'கூழ்' என்ற சொல் இரண்டாம் வேற்றுமையுருபு ஏற்றிருப்பதாகக் கொள்ளுதலும் பொருந்தும். கூழை என்று * தலை மயிர்க்குப் பேராய் இலக்கணையால் தலையைச் சொல்லிற்றாய் 'செந்நெல் தலை' என்றபடி. பிந்தின யோஜனையில், கூழ் என்ற உணவின் பெயர் அதன் காரணமான பயிரைக் குறித்தது; காரியவாகுபெயர். ஓரீஇ—ஒருக்கி; சொல்லிசையளபெடை. (ங)

மின்னின்மன்னு நுடங்கிடைமடவார்தம் சிந்தைமறந்து வந்து * நின்
மன்னு சேவடிக்கே மறவாமை வைத்தாயால் *
புன்னைமன்னு செருந்திவண்பொழில்வா யகன்பணைகள் கலந்தெங்கும் *
அன்னமன்னும் வய லணியாலி யம்மானே. (ச)

| | |
|---|---|
| புன்னை | புன்னைமரங்களும் |
| செருந்தி | சுரபுன்னை மரங்களும் |
| மன்னு | பொருந்தியிருக்கிற |
| வண் பொழில் வாய் | அழகிய சோலைகளிலே |
| அகன் பணைகள் எங்கும் | விசாலமான தடாகங்களிலெங்கும் |
| அன்னம் கலந்து மன்னும் | அன்னப்பறவைகள் சேர்ந்துவாழப்பெற்றதாயும் |
| வயல் | வயல்களையுடைத்தாயுமிருக்கிற |
| அணி ஆலி அம்மானே | அழகிய திருவாலிநகர்க்கு இறைவனே!; |
| மின்னின் மன்னு நுடங்கு இடை | மின்னல்போன்று துவண்ட இடையையுடைய |
| மடவார் தம் | ஸ்த்ரீகளைப்பற்றின |
| சிந்தை | சிந்தனையை |
| மறந்து வந்து | தவிர்ந்துவந்து |
| நின் மன்னு சேவடிக்கே | உன் இணைத்திருவடிகளையே |
| மறவாமை | நான் நித்தியம் அநுஸந்திக்கும்படி |
| வைத்தாய் | அருள்செய்து வைத்திருக்கிறாய்; |
| ஆல் | ஆச்சரியம்!. |

* * *—ஆழ்வார் தம்முடைய பழைய நிலைமையையும் இப்போதைய நிலைமையையும் நினைந்து எம்பெருமானிடத்திலே பெருநன்றி பாராட்டுகின்றார். பிரானே! அநாதி காலமாக நான் எப்படியிருந்தவன்; மாதர்களின் இடையழகிலே மயங்கிக் கிடந்தவனன்றோ; அப்படிப்பட்ட என்னை அவ்விஷயத்தைக் காறியுமிழ்ந்து உன் திருவடிகளையே சிக்கனப்பிடித்துக்கொண்டு வாழுமாறு பண்ணிவைத்தாயே!, இந்த மஹோபகாரத்தை நான் மறக்கலாகுமோ? என்கிறார். மூன்றாமடியில், பணை—'பண்ணை' என்பதன் தொகுத்தல்; குளம். (ச)

நீடுபன்மலர் மாலையிட்டுநின் னிணையடிதொழுதேத்தும் * என்மனம்
வாடநீ நினையேல் மரமெய்த மாமுனிவா! *
பாடலின்னொலி சங்கினோசை பரந்துபல்பணையால் மலிந்தெங்கும் *
ஆடலோசை யறா அணியாலி யம்மானே. (ரு)

* மேல் எட்டாம்பத்தில் (2-9.) "முள்ளெயிறேய்ந்தில கூழை முடி கொடா" என்பதுங்காண்க.

| | |
|---|---|
| பாடல் இன் ஒலி | (பகவத்விஷயப்) பாட்டுக்களின் மதுரமான தொனியும் |
| சங்கின் ஓசை | சங்குகளின் முழக்கமும் |
| பரந்து | எங்கும் வியாபித்திருக்கப் பெற்றதும் |
| பல் பணியால் மலிந்து | பலவகைப்பட்ட வாத்ய கோஷங்களாலும் நிறைந்திருக்கப் பெற்றதும் |
| எங்கும் | எவ்விடத்தும் |
| ஆடல் ஓசை அறு | கூத்தாட்டங்களின் ஓசை விட்டு நீங்காதிருக்கப் பெற்றதுமான |
| அணி ஆலி அம்மானே | அழகிய திருவாலிநகர்க்கு ஸ்வாமியே !, |
| மரம் எய்த மா முனிவா | (ஸுக்ரீவனுடைய நம்பிக்கைக்காக) மராமரங்களேழின்மேலும் அம்பு விட்டுத்துளைத்த ஸத்யஸங்கல்பனே !, |
| நின் இணை அடி | உன் இணைத்திருவடிகளில் |
| பல் மலர்மாலை | பலவகைப்பட்ட புஷ்பமாலைகளை |
| நீடு இட்டு | நெடுங்காலம் ஸமர்ப்பித்து |
| தொழுது | ஸேவித்து |
| ஏத்தும் | துதிசெய்கின்ற |
| என் | அடியேனுடைய |
| மனம் வாட | நெஞ்சு (உன்னைப்பிரிந்து) வாட்டமடையும் வகை |
| நீ நினையேல் | நீ நினைக்கலாகாது [என்னை விட்டு நீ பிரியலாகாது.] |

* * *—எப்போதும் உன்னுடைய திருவடிகளிலேயே அந்தரங்கப்பணிவிடைகள் செய்துகொண்டு போதுபோக்காநின்ற என்னுடைய மனத்தை நீ ஒரு போதும் வாடச்செய்ய நெஞ்சால் நினைக்கவுங்கூடாது ; [இந்த நித்ய ஸம்ச்லேஷத்துக்கு ஒரு குறை நேர்ந்தால் இவருடைய மனம் வாடிப்போகுமாதலால் ஒரு நாளும் பிரியாதிருக்கவேணு மென்றவாறு.]

மரமெய்த வரலாறு :—ஸுக்ரீவன் இராமனால் அபயப்ரதானம் செய்யப்பெற்ற பின்பும் மனந்தெளியாமல் வாலியின் பேராற்றலைப்பற்றிப் பலவாறு சொல்லி, வாலி மராமரங்களைத் துளைத்ததையும் துந்துபியின் உடலெலும்பை ஒரு யோஜனை தூரம் தூக்கி யெறிந்ததையுங் குறித்துப்பாராட்டிக் கூறி, 'இவ்வாறு பேராற்றலமைந்தவனை வெல்வது ஸாத்யமாகுமோ ?' என்று சொல்ல ; அது கேட்ட லக்ஷ்மணன் 'உனக்கு விச்வாஸம் இல்லையாயின் இப்போது என்ன செய்ய வேண்டுவது ?' என்ன, ஸுக்ரீவன் 'இராமபிரான் நீறு பூத்த நெருப்புப்போலத் தோன்றினும் வாலியின் வல்லமையை நினைக்கும்போது ஸந்தேஹ முண்டாகின்றது ; ஏழு மராமரங்களையும் துளைத்து இந்தத் துந்துபியின் எலும்பையும் இருநூறு விரற்கடை தூரம் தூக்கி யெறிந்தால் எனக்கு நம்பிக்கையுண்டாகும்' என்று சொல்ல ; ஸுக்ரீவனுக்கு நம்புதலுண்டாக்குமாறு அவனது வார்த்தைக்கு இசைந்து இராமபிரான் துந்துபியின் உடலெலும்புக்குவியலைத் தனது காற் கட்டைவிரலினால் இலேசாய்த் தூக்கிப் பத்து யோஜனை தூரத்துக்கு அப்பால் எறிய, அதனைக்கண்ட ஸுக்ரீவன் 'முன்பு உலராதிருக்கையில் வாலி இதனைத்தூக்கி யெறிந்தான் ; இப்போது உலர்ந்துபோன இதனைத் தூக்கியெறிதல் ஒரு சிறப்பன்று' என்று கூற, பின்பு இராமபிரான்

ஒரு பாணத்தை ஏழு மராமரங்களின் மேல் ஏவ அது அம்மரங்களைத் துளைத்ததோடு ஏழுலகங்களையுந் துளைத்துச்சென்று மீண்டு அம்பருத்தூணியை அடைந்தது.

(மராமரம்—ஆச்சாமரம்.)

பிரானே ! ஸுக்ரீவனுக்கு நம்பிக்கை யுண்டாக்குவதற்காக அருந்தொழில் செய்தாய் ; எனக்காக அப்படிப்பட்ட செயலொன்றும் நீ செய்ய வேண்டா ; என்னைவிட்டுப் பிரியாதிருந்தால் போதுமானது என்ற கருத்துத் தொனிக்கும். ... ... ... .... (ரு)

கந்தமாமல ரெட்டுமிட்டுநின் காமருசேவடி கைதொழுதெழும் *
புந்தியேன் மனத்தே புகுந்தாயைப் போகலொட்டேன் *
சந்திவேள்வி சடங்கு நான்மறையோதி யோதுவித்தாதியாய்வரும் *
அந்தணாள ரரு வணியாலி யம்மானே. (சா)

| | | | |
|---|---|---|---|
| சந்தி வேள்வி சடங்கு நால் மறை | ஸந்தியாவந்தனம் முதலிய நித்ய கர்மங்களையும் யாகம் முதலிய நைமித்திக கருமங்களையும் காம்யகருமங்களையும் தெரிவிக்கிற நான்கு வேதங்களையும் | நின் காமரு சே அடி | உனது அழகிய திருவடிகளிலே |
| ஆதியாய் | அநாதிகாலமாக | கந்தம் மா மலர் எட்டும் இட்டு | மணம் மிக்க சிறந்த எட்டு வகைப் பூக்களையும் ஸமர்ப்பித்து |
| ஓதிஓது வித்து வரும் | தாங்கள் ஓதியும் பிறர்க்கு ஓதுவித்தும் வருகின்ற | கை தொழுது எழும் புந்தியேன் | வணங்கி உஜ்ஜீவிக்கவேணுமென்கிற அத்யவஸாயமுடையேனுடைய என்னுடைய |
| அந்தணாளர் | பிராமணர்கள் | மனத்தே | நெஞ்சிலே |
| அரு | விட்டுநீங்காத [நித்யவாஸம் பண்ணுமிடமான] | புகுந்தாயை | வந்து புகுந்த வுன்னை |
| அணி ஆலி அம்மானே !— | | போகல் ஒட்டேன் | இனி வேறோரிடம் போகவொட்டேன். |

* * *—கீழ்ப்பாட்டில் “என் மனம் வாட நீ நினையேல்” என்று மறை பொருளாகச் சொன்னதின் கருத்து வெளிப்படுமாறு இப்பாசுர மருளிச்செய்கிறார். “𑌗𑌨𑍍𑌧𑌃” என்றவட சொல் ‘கந்தம்’ என்று கிடக்கிறது ; மணம் மிக்க மாமலரெட்டு எவையென்னில் ; கருமுகை, கற்பகம், நாழல், மந்தாரம், ஸௌகந்தி, செங்கழுநீர், தாமரை, தாழை என்பனவாம். இவற்றைச் சொன்னது மற்றும் தேவார்ஹமாயுள்ள புன்னை முதலிய புஷ்பங்களுக்கும் உபலக்ஷணமாம்.

“மாமல ரெட்டு மிட்டு” என்றவிதற்கு—ஒவ்வொரு அக்ஷரமும் நறுமலர் போலே அவனுக்கு போக்யமாம்படியிருக்கையாலே எட்டு மலர்கள் போன்ற எட்டெழுத்தோடுங் கூடின திருமந்திரத்தை அநுஸந்தித்து என்பதாகவும் பொருள் கூறலாம். அன்றியே ; “அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரிய நிக்ரஹ:—ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமா புஷ்பம் விசேஷத:. ஜ்ஞாநம் புஷ்பம்

தப: புஷ்பம் த்யாநம் புஷ்பம் ததைவ ச—ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம்பவேத்." என்கிறபடியே அஹிம்ஸை, இந்திரியநிக்ரஹம், ஸர்வ பிராணிகளிடத்திலும் இரக்கம், பொறுமை, ஞானம், தவம், தியானம், ஸத்யம் என்று எட்டு வகையான புஷ்பங்களாகச் சொல்லப்பட்டவற்றை ஸமர்ப்பித்து என்றுமாம். (இப்பொருள்கள் ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்திலுள்ளவை.)

காமரு சேவடி—'காமம் தரு' என்பது 'காமரு' என மருவிக்கிடக்கிறது; ஆசையை விளைக்கவல்ல திருவடி என்றபடி: எனவே, அழகிய திருவடி என்றதாயிற்று. உனது ஸ்ப்ருஹணீயமான திருவடிகளைக் கைதொழுது உஜ்ஜீவிக்க வேணுமென்னும் அத்யவஸாய முடையேனான என்னுடைய ஹ்ருதயத்திலே, நானுன்னை விரும்பாதிருக்க நீயாகவே வந்து புகுந்த பின்பு இனிப்போக லொட்டேன்; தானாகவே விரும்பி வந்து சேர்ந்த செல்வத்தைத் தள்ளுவாருண்டோ? என்கிறார்.

அறு தொழிலந்தணர்கள் நிறைந்திருக்கும் திருவாலி யென்கிறது பின்னடிகளில். ... .... .... .... (௬.)

உலவுதிரைக்கடற் பள்ளிகொண்டு வந்துன்னடியேன் மனம்புகுந்த * அப்
புலவ! புண்ணியனே! புகுந்தாயைப் போகலொட்டேன் *
நிலவுமலர்ப்புன்னை நாழல்நீழல் தண்டாமரை மலரின்மிசை * மலி
அலவன் கண்படுக்கும் அணியாலி யம்மானே. (எ)

| | |
|---|---|
| நிலவு மலர் புன்னை | எப்போதுமுள்ள புஷ்பங்களையுடைய புன்னை மரங்களென்ன |
| நாழல் | ஞாழல்மரங்களென்ன (இவற்றினுடைய) |
| நீழல் | நிழலில் |
| தண் தாமரை மலரின் மிசை | குளிர்ந்த தாமரைப்பூவின் மேலே |
| மலி அலவன் | பெரிய ஆண் நண்டுகள் |
| கண் படுக்கும் | பள்ளிகொண்டிருக்கப் பெற்ற |
| அணி ஆலி அம்மானே!—; | |
| திரை உலவு கடல் | திரைக்கிளப்பத்தையுடைய திருப்பாற்கடலில் |
| பள்ளிகொண்டு | சயனித்திருந்து (ஸமயம் பார்த்திருந்து) |
| வந்து | அங்குநின்றும் ஓடிவந்து |
| உன் அடியேன் மனம் புகுந்த | உனது தாஸனான என்னுடைய மனத்திலே புகுந்த |
| அப் புலவ | அப்படிப்பட்ட ஸர்வஜ்ஞனே! |
| புண்ணியனே | எனது பாக்கியம் வடிவெடுத்தவனே! |
| புகுந்தாயை | என்னிடம் வந்து சேர்ந்தவுன்னை |
| போகல் ஒட்டேன் | இனி வேறிடம் போகவொட்டேன். |

* * *—எம்பெருமான் திருப்பாற்கடல் முதலியவிடங்களில் வாழ்வதானது அவ்விடமே உத்தேச்யமென்கிற எண்ணத்தினாலன்று; எந்த ஸமயத்திலே எந்த அன்பருடைய உள்ளத்திலே புகுந்து கொள்ளலாமென்று பார்த்துக் கொண்டு உபாயாநுஷ்டாநம் பண்ணுமவன்போல அங்கே கிடக்கிறானென்பர்;

இவ்வர்த்தம் ஸ்ரீவசநபூஷணத்தில்—" 'திருமாலிருஞ் சோலைமலையே' என்கிறபடியே உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை இவனுடைய சரீர ஏகதேசத்திலே பண்ணும்; அங்குத்தைவாஸம் ஸாதநம், இங்குத்தைவாஸம் ஸாத்யம். 'கல்லுங்கனைகடலும்' என்கிறபடியே இது ஸித்தித்தால் அவற்றில் ஆதரம் மட்டமாயிருக்கும். 'இளங்கோயில் கைவிடேல்' என்று இவன் ப்ரார்த்திக்க வேண்டும்படியாயிருக்கும்." என்ற ஸ்ரீஸூக்திகளால் நன்கு விசதமாகும். இதுவே இப்பாட்டின் முதலடியினுறையும் பொருளாம். உலவுதிரைக்கடலில் பள்ளிகொண்டிருந்தது அடியேன் மனத்தில் புகுருகைக்காகவென்கிறார். இப்படி நெடுநாள் பாரித்து ஸமயம் பார்த்து என் மனத்திலே புகுந்த உன்னை இனி நான் போகவொட்டேனென்கிறார். "[அப்புலவ;] விசேஷஜ்ஞனல்லையோ? அவஸரமறியாயோ புகுருகைக்கு" என்ற பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்க. 'புண்ணியனே!' என்றது—உன்னைப் பெறுவதற்கு உறுப்பாக என் பக்கலிலே யாதொரு ஸுக்ருதமுங் கண்டதில்லை; நீயேயன்றோ மூலஸுக்ருதம் என்றபடி.

பின்னடிகளின் வியாக்கியானத்திலே—"வயலாலி மணவாளனுடைய வ்யாபாரத்தோடு அங்குண்டான * திர்யக்குக்களுடைய வ்யாபாரத்தோடு வாசியற்றிருக்கிறதாயிற்று இவர்க்கு, அந்நிலத்திலுள்ளவை யாகையாலே" என்றுள்ள ஸ்ரீஸூக்தி அநுஸந்திக்கத்தக்கது. அலவன்—ஆண் நண்டு. (எ)

சங்குதங்கு தடங்கடற்கடன்மல்லை யுட்கிடந்தாய் * அருள்புரிந்து
இங்கேன்னுள் புகுந்தாய்! இனிப்போயினு லறையோ! *
கோங்குசேண்பக மல்லிகைமலர் புல்கியின்னிள வண்டுபோய் * இளந்
தேங்கின் தாதளையும் திருவாலி யம்மானே. (அ)

| | |
|---|---|
| சங்கு தங்கு தட கடல் | சங்குகள் தங்கிய பெரிய திருப்பாற்கடலிலும் |
| கடல் மல்லையுள் | திருக்கடன் மல்லையிலும் |
| கிடந்தாய் | (முன்பு) பள்ளிகொண்டிருந்தாய்; |
| இங்கு | இப்போது |
| அருள் புரிந்து | கருணைகூர்ந்து |
| என்னுள் புகுந்தாய் | என்னெஞ்சிலே பிரவேசித்தாய்; |
| இனி போயினல் அறையோ | இனி நீயே விட்டுப்போக நினைத்தாயாகில் அறையோவறை. |
| இன் இள வண்டு | இனிய இளவண்டுகளானவை |
| கொங்கு | மணம்மிக்க |
| செண்பகம் | செண்பகப் பூவையும் |
| மல்லிகை மலர் | மல்லிகைப் பூவையும் |
| புல்கி | தழுவிப் பார்த்து (அவை கொதித்தபடியாலே) |
| போய் | அவற்றைவிட்டுப்போய் |
| இளதெங்கின் தாது அளையும் | இளைய தென்னை மரங்களின் பாளைகளிலே அளையப் பெற்ற |
| திரு ஆலி அம்மானே!—; | |

* திர்யக்குக்கள்—நண்டு வண்டு முதலியன.

* * *—"சங்கு தங்கு தடங்கடல்" என்பதைக் கடன்மல்லைக்கு விசேஷண மாக்கியுமுரைக்கலாம்; சங்குகள் தங்குகிற கடற்கரையிலேயிருக்கிற திருக் கடன்மல்லைத்திருப்பதியிலே என்றபடியாம். அர்ச்சாவதாரங்களில் எழுந்தருளி யிருப்பதும் அன்பருடைய உள்ளத்திலே புகுருகைக்கு ஸாதநமாக வென்க. பரமபோக்யமான திருப்பதிகள் பலவுமிருக்க, அவற்றை விட்டு நிர்ஹேதுக க்ருபையாலே என்னெஞ்சிலே வந்து புகுந்தாய்; இனி இவ்விடம் விட்டு நீ போவதென்றால் அது உன்னாலாகாது; போக முடியுமானால் புறப்பட்டுப்பார்; என்னுடைய வார்த்தை மெய்யாகிறதோ, உன்னுடைய எண்ணம் நிறைவேறு கிறதோ, பார்ப்போமென்கிறார் முன்னடிகளில்.

இனிப்போயினால் அறையோ=அறையோ வென்பது தோற்றவர் முன்னே ஜயித்தவர் சொல்லும் வார்த்தைக்குறிப்பு. "அறையோவென நின்ற திருங் கருங்கடல்" என்றார் நம்மாழ்வாரும் திருவிருத்தத்தில். "இனிப்போயினா லறையோ" என்னுமிவ்விடத்தில் வெற்றி தோல்விகளொன்று மில்லையே யென் னில்; எம்பெருமானே! நீ இவ்விடம் விட்டுப் பேர முடியாது; எப்படியாவது அகன்று போய்விட வேணுமென்று நீ முயன்றாலும் உன் முயற்சி தோற்றுப் போய் என் வார்த்தையே வெற்றிபெற்றதாகும் என்பதாகக்கொள்க. நீ இங்கே வந்து புகுந்ததற்குக் காரணமான பேரருள் மாறினாலன்றோ இவ்விருப்பு மாறப்போகிறது; அருளும் மாறாது, இவ்விருப்பும் மாறாது என்றவாறு.

பின்னடிகளின் கருத்து:—நறுமணம் மிக்க செண்பக மல்லிகை மலர்களிலே மதுவைப்பருக இழிந்த வண்டுகள் அவற்றோடே தழுவியிருந்து, அவை கொதித்தவாறே அந்தக் கொதிப்பை ஆற்றுகைக்காக, கோடையிலே நோவு பட்டவர்கள் சந்தனச் சேற்றிலே கைவைத்துக் கொண்டு கிடக்குமாபோலே இளந்தெங்கிலே போய் அதின் தாதுகளிலே அளைகின்றனவென்பதாம். (அ)

ஓதியா யிரநாமமும் பணிந்தேத்தி நின்னடைந்தேற்கு * ஒருபொருள்
வேதியா! அரையா உரையாயொருமாற்ற மெந்தாய்! *
நீதியாகிய வேதமாமுனியாளர் தோற்றமுரைத்து * மற்றவர்க்கு
ஆதியா யிருந்தாய் அணியாலி யம்மானே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| நீதி ஆகிய வேதம் | (நாட்டார் அநுஷ்டிக்க வேண்டுமவற்றை) விதிக்குமவையான வேதங்களையும் | மற்றவர்க்கு ஆதி ஆய் இருந்தாய் | மற்றுமுள்ள எல்லார்க்கும் காரணபூதனாயுமிருக்கு மவனே! |
| மா முனியாளர் தோற்றம் | (அந்த வேதங்களிலுள்ள மந்திரங்களை தர்சநம் பண்ணினவர்களான) மஹர்ஷி களின் வரலாற்றையும் | வேதியா | வேதமொன்றினாலேயே அறியத் தக்கவனே! |
| | | அரையா | தேவாதிதேவனே! |
| | | எந்தாய் | எமக்கு ஸ்வாமியானவனே! |
| உரைத்து | வெளியிட்டவனாயும் | | அணி ஆலி அம்மானே!—; |

| | | | |
|---|---|---|---|
| ஆயிரம் நாமமும் ஓதி | (உனது) ஸஹஸ்ர நாமங்களை யுஞ்சொல்லி | ஒரு பொருள் | ஒரு அர்த்தத்தையாவது |
| பணிந்து ஏத்தி | வணங்கித் துதித்து | ஒரு மாற்றம் | ஒரு சொல்லையாவது |
| நின் அடைந்தேற்கு | உன்னைத் தஞ்சமாகப்பற்றியுள்ள எனக்கு | உரையாய் | அருளிச்செய்யவேணும். |

* * *—கீழ்ப் பாசுரங்களிலே "புருந்தாயைப் போகலொட்டேன்" என்று இவர் தாம் சொல்லிவைத்தாலும், "உன் மனத்தா லென்னினைந்திருந் தாய்?" என்றும் "இனியென் திருக்குறிப்பே?" என்றும் அவன் திருவுள்ளத்தை யநுஸரித்து நிற்கவேண்டிய ஸ்வரூபவுண்மையை உணர்ந்தவரான ஆழ்வார், ஸ்வரூபத்துக்குத் தகுதியாகவன்றோ பேசவேணும்; அப்படியே பேசுகிறாரிப் பாட்டில்; பல் பன்னிரண்டையுங்காட்டிப் பிரார்த்திக்கின்றார்; அடியேன் தேறியிருக்கும்படி உன் சோதிவாய் திறந்து ஒரு நல்வார்த்தை சொல்ல வேணும்; கடற்கரையிலே நின்று "நத்யஜேயம் கதஞ்சந" என்ற வார்த்தை யையாவது தேர்த்தட்டிலே நின்று "மாசுச:" என்ற வார்த்தையையாவது அடியேனை நோக்கி யருளிச்செய்ய வேணுமென்கிறார். நீ ஸ்வதந்த்ரனாகையாலே இன்று அநுக்ரஹித்து வந்துசேர்ந்தது போலே நாளை நிக்ரஹித்து அகன்று போய்விடவுங்கூடும்; இங்ஙனே நான் சங்கித்துக் கலங்கியிருக்கவொண்ணாதபடி 'இனி நானுன்னை விட்டொருநாளும் பிரியேன்' என்று சோதிவாய்திறந்து ஒரு வார்த்தைசொல்லி என்னைத் தேற்றுவிக்கவேணு மென்கிறார்.

"ஒரு பொருள் உரையாய்" "ஒருமாற்ற முரையாய்" என்று இரண்டு வாக்கியமாக அந்வயித்துக் கொள்ளலாம்; 'என்னைப் பெறுகைக்கு இத்திருவடி களே ஸாதநம்' என்கிற ஒரு பொருளையும், "மாசுச:=துக்கப்படாதே" என்ற ஒரு சொல்லையும் சொல்ல வேணுமென்கை.

நீதியாகிய வேதம்—"ஸத்யம்வத, தர்மம் சர = மெய்யே சொல்லு, தரு மத்தை நடத்து" இத்யாதி வாக்யங்களால் நீதியை யுணர்த்துகின்ற வேதம் என்றபடி. .... .... ... ... (கூ)

புல்லி வண்டறையும் பொழில்புடைசூழ் தென்னாலியிருந்த மாயனை *
கல்லின் மன்னுதிண்டோள் கலியனொலிசெய்த *
நல்ல வின்னிசைமாலை நாலுமோரைந்துமொன்றும் நவின்று தாமுடன் *
வல்லரா யுரைப்பார்க் கிடமாகும் வானுலகே. (ய)

| | | | |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகளானவை | தென் ஆலி | திருவாலியிலே |
| புல்லி | ஒன்றோடொன்று அணைந்து | இருந்த | எழுந்தருளியிருக்கின்ற |
| அறையும் | இசை பாடப்பெற்ற | மாயனை | எம்பெருமான் விஷயமாக, |
| பொழில் | சோலைகளாலே | கல்லின் திண் மன்னு தோள் | மலைபோலே திடமாயும் நித்யமாயுமிருக்கிற தோள்களை யுடைய |
| புடை சூழ் | சுற்றிலுஞ் சூழப்பட்ட | | |

| | |
|---|---|
| கலியன் | திருமங்கையாழ்வார் |
| ஒலி செய்த | அருளிச்செய்த |
| நல்ல இன் இசை | அழகிய இனிய இசையை யுடைத்தான |
| மாலை நாலும் ஓரைந்தும் ஒன்றும் | சொல்மாலையாகிய இப்பத்துப் பாசுரங்களையும் |
| நவின்று | அப்யஸித்து |
| உடன் வல்லராய் இருப்பார் தமக்கு | அர்த்தாநுஸந்தாநமும் பண்ணிக்கொண்டிருக்குமவர்கட்கு |
| வான் உலகு | பரமபதம் |
| இடம் ஆகும் | இருப்பிடமாகும். |

* * *—வண்டுகள் சோலைகளிலே படிந்து மதுவைப்பருகிக் களித்துக் கூவாநிற்கப்பெற்ற திருவாலி நகரில் எழுந்தருளியிருக்கு மெம்பெருமானைக் கலியன் பாடின இச்சொல்மாலையைப் பொருளுடன் கற்குமவர்கள் திருநாட்டிலே சென்று நித்ய கைங்கரியம் பண்ணப் பெறுவர்களென்பதாம்.

வல்லராயிருப்பார்க்கு இடம் வானுலகே ஆகும்=இத்திருமொழியை ஓதுமவர்கள் எவ்விடத்திலே இருக்கின்றார்களோ அவ்விடமே பரமபதம்; தனியே பரமபதமென்று வேறொன்று கிடையாது என்றபடியுமாம். "உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகும் தம்மூரெல்லாம்" என்ற திருவாய்மொழியின் சாயை. ... .... .. .... (௰)

அடிவரவு:—வந்து நீல நென்னல் மின்னின் நீடு கந்தம் உலவு சங்கு ஓதி புல்லி. தூவிரிய.

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றும்பத்து - ஆறுந்திருமொழி,

# தூவிரிய மலருழக்கி.



அவதாரிகை:—கீழ்த்திருமொழி போலே இத்திருமொழியும் வயலாலி மணவாளன் விஷயமானதே. கீழ்த்திருமொழியில் "அடியேன் மனத்திருந்தாய்" என்றும் "என் மனத்தே புகுந்தது" என்றும் மாநஸமாய் நிகழ்ந்த அநுபவம் முதிர்ந்து பிரத்யக்ஷம் போலேயாய், மெய்யே பிரத்யக்ஷமென்றே நிச்சயித்துத் தழுவி முழுசிப் பரிமாற நினைத்து அப்படி நினைத்தபடி அநுபவிக்கக் கிடையாமையாலே கரைபுரண்ட ஆற்றாமையுண்டாகி ஒரு பிராட்டியின் அவஸ்தையை யடைந்து அவ்வாயாலே தமது நிலைமையைத் தெரிவிக்கின்றாராழ்வார்.

எம்பெருமானை யநுபவித்தல் பலவகைப்பட்டிருக்கும்; அவனுடைய திருநாமங்களைச் சொல்லி யநுபவித்தல், திருக்கல்யாண குணங்களைச் சொல்லி யநுபவித்தல், வடிவழகை வருணித்து அநுபவித்தல், அவனுகந்தருளின திவ்ய தேசங்களின் வளங்களைப் பேசி யநுபவித்தல், அங்கே அபிமாநமுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களின் பெருமையைப்பேசி யநுபவித்தல்—என்றிப்படி பலவகைப் பட்டிருக்கும் பகவதநுபவம். இவ்வகைகளில் பரமவிலக்ஷணமான மற்றொரு வகையுமுண்டு; அதாவது—ஆழ்வார் தாமான தன்மையைவிட்டுப் பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்றுவாயாலே பேசியநுபவித்தல். இப்படி அநுபவிக்குந்திறத்தில், தாய்பாசுரம் தோழி பாசுரம் மகள் பாசுரம் என மூன்று வகுப்புகளுண்டு. அப்போது ஆழ்வார்க்குப் பரகாலர் என்ற ஆண்மைப் பெயர் நீங்கி, 'பரகாலநாயகி' என்று பெண்மைப் பெயர் வழங்கப்பட்டு வரும். தாய் சொல்வது போலவும் தலைமகள் சொல்வது போலவும் தோழி சொல்வதுபோலவும் பாசுரங்கள் வெளிவந்தாலும் பாசுரம் பேசுகிறவர் ஆழ்வாரேயாவர். ஒரு ஆறானது பல வாய்க்கால்களாகப்பெருகினாலும் அவற்றுக்குப் பிரதானமான பெயர் ஒன்றேயாயிருக்குமாபோலே இம்மூன்று நிலைமைகளாகச் சொல்மாலை வழிந்து புறப்பட்டாலும் "கையிலங்கு வேற்கலியன் கண்டுரைத்த தமிழ்மாலை" என்று ஆழ்வார் பாசுரமாகவே தலைக்கட்டும்.

இரண்டாம்பத்திலே "திவளும் வெண்மதிபோல்" என்னுந்திருமொழி தாய் பாசுரமாகச் சென்றதுபோலே இத்திருமொழி தலைவிபாசுரமாகச் செல்லுகிறது. சகுந்தலை துஷ்யந்த மஹாராஜனோடே கலந்து பிரிந்தாப்போலே ஒரு விளையாடு சூழலிலே பரமபுருஷனாகிற தலைவனோடே கலந்துபிரிந்த வொரு பிராட்டியின் நிலைமையை ஏற்றுக்கொண்ட ஆழ்வார், அவ்வெம்பெருமான் விரைந்து மீண்டுவரக் காணாமையாலும் அவனைப்பிரிந்து தான் ஆறியிருக்க மாட்டாமையாலும் தானே அவனிருப்பிடம் நோக்கிச் செல்லுதற்கு இயலாதபடி மேனி மெலிந்துகிடக்கையாலும், கண்ணிற்கண்ட வண்டு குருகு முதலிய பறவைகளைத் தூதுவிடுகிறார். அதாவது—ஆழ்வார் ஞானமனுட்டானமிவை நன்றாகவே யுடையரான சில மஹான்களை தம்மை எம்பெருமான் பக்கல் சேர்ப்பதற்கு உரிய ஆசாரியராக வரித்து அவர்களை நோக்கிச் சொல்லுகிறாரென்று கொள்க.

இதில், முதல் நான்கு பாசுரங்களை தூதுரைப்பன; மேற்பாசுரங்கள் எம்பெருமானை நோக்கித் தமது ஆற்றாமையைத் தாமேசொல்லிக் கதறுவன.

நஞ்சீயர், திருமேனி நோவுசாத்திக் கொண்டெழுந்தருளி யிருக்கையில் அவருடைய ஸ்ரீபாதத்து முதலிகளில் ஒருவரான பெற்றி யென்பவர் விசாரிக்கச் சென்று வார்த்தையாடுகையில் 'இப்போது ஸ்வாமிக்கு என்ன திருவுள்ளம்?' என்று கேட்க; அதற்கு நஞ்சீயர் "*தூவிரியமலருழக்கித் திருமொழிப் பாசுரங்களைக் காதாரக் கேட்கவும், பெருமாள் எழுந்தருளப் பின்னும் முன்னும் சுற்றும் வந்து ஸேவிக்கவும் இஷ்டமாயிருக்கின்றது" என்றருளிச்செய்ய, அப்போதே வரந்தரும்பெருமாளரையர் என்பவரை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்து

இத்திருமொழியை ஸேவிக்கச்சொல்லிக் கேட்டருளா நிற்கையில், நாலாம்பாட்டிலே "தானாக நினையானேல் தன்னினைந்து நைவேற்கு ஓர் மீனாய கொடி நெடுவேள் வலி செய்ய மெலிவேனோ?" என்னுமளவிலே வந்தவாறே 'நோவுபடுவதற்கு முன்பே வந்து உதவாமற் போனாலும் நேர்ந்த நோயைப் பரிஹரிக்கவாகிலும் வந்தாலாகாதோ?' என்றருளிச்செய்து மிகவும் தளர்ந்து வருந்தினரென்பது ப்ரஸித்தம். ஆகவே, இத்திருமொழி பகவத் காமுகர்களை நன்கு உருக்குமென்க. ... ... ... ... *

தூவிரிய மலருழக்கித் துணையோடும் பிரியாதே *
பூவிரிய மதுநுகரும் பொறிவரிய சிறுவண்டே! *
தீவிரிய மறைவளர்க்கும் புகழாளர் திருவாலி *
ஏவரிவெஞ் சிலையானுக் கென்னிலைமை யுரையாயே. (௧)

| | |
|---|---|
| தூ விரிய | சிறகு விரியும்படியாக இருந்து |
| மலர் | புஷ்பங்களை |
| உழக்கி | மிதித்து |
| துணையோடும் பிரியாதே | தன் துணைவியைவிட்டுப் பிரியாமலிருந்து |
| பூ விரிய மது நுகரும் | பூக்கள் விகஸிக்க, அவற்றிலுள்ள தேனைப் பானம்பண்ணுகிற |
| பொறி வரிய | புள்ளிகளையும் ரேகைகளையுமுடைய |
| சிறு வண்டே | சிறிய வண்டே! |
| தீ விரிய | அக்நி காரியங்கள் விஸ்தாரமாகப் பரவும்படி |
| மறை | வைதிக மரியாதைகளை |
| வளர்க்கும் புகழ் ஆளர் திரு ஆலி | குறைவின்றி நடத்துகையால் வந்த கீர்த்தியையுடைய வைதிகர்கள் வாழ்கிற திருவாலியிலே நித்ய வாஸம் பண்ணுகிற |
| ஏ வரி வெம் சிலையானுக்கு | அம்புகள் தொடுக்கப்பெற்று அழகியதாய் (சத்துருக்களுக்கு)க் கொடிதாயிருந்துள்ள வில்லை ஆளவல்ல எம்பெருமானுக்கு |
| என் நிலைமை | என்னுடைய அவஸ்தையை |
| உரையாய் | சொல்லுவாயாக. |

* * *—வயலாலிமணவாளன் பக்கலிலே சென்று தமது நிலைமையைச் சொல்லுமாறு ஒரு வண்டை நோக்கிக் கூறுகிறார். அந்த வண்டு தன் பேடையோடே கலந்து மலரிலே மதுபானம் பண்ணிக்கொண்டிருந்தமையால், 'நான் துணைவனைப்பிரிந்து உணவும் உறக்கமுமற்று வருந்திக்கிடக்கும்போது நீ இப்படி உன் காரியமே கண்ணாக இருப்பது தகுதியோ?' என்னுங்கருத்து முன்னிரண்டடிகளில் வெளிவரும். வண்டுகள் சிறகுகளை விரித்துக்கொண்டு மலரை மிதித்தேறி மதுவைப்பருகுதல் இயல்பாதலால் "தூவிரியமலருழக்கி" எனப்பட்டது. 'தூ' என்றும் 'தூவி' என்றும் சிறகுக்குப் பெயர். உழக்கல்—மிதித்தல், சிதிலமாக்குதல்.

நாம் வருந்தி ஒடுங்கிக்கிடக்கும்போது இந்த வண்டுகள் மாத்திரம் சிறகை விரித்து மலர்களிலே ஏறிக்கிடப்பதற்கு யாது காரணமென்று பார்த்தார்; அவை நம்மைப்போலே விரஹவேதனைப்படாமல் துணைபிரியாதிருப்பதனால்

சிறகை விரிக்கவும் மலர்களிலே கால்பாவவும் மதுவைப்பருகவும் மேனி நிறம் பெற்றிருக்கவும் பெறுகின்றன வென்றுணர்ந்து 'துணையோடும்பிரியாதே' இத்யாதிகள் அருளிச்செய்கிறார். புஷ்பத்தைக் கண்டால் அருவருத்தும் போக்ய வஸ்துக்களில் வெறுப்புற்றும் மேனி நிறமழிந்தும் இராநின்ற என்னையும் உன்னைப்போலே யாக்கவேண்டாவோ? நானும் துணைவனோடு கலந்து வாழும்படி நீ காரியஞ்செய்ய வேண்டாவோ ? என்பது உள்ளுறை.

1 "உளங்கனிந்திருக்கு மடியவர்தங்களுள்ளத்துள் ஊறியதேன்" என்னப் பட்ட பகவத் விஷயமாகிற மதுவை விரும்பியும், 2. "போந்ததென்னெஞ் சென்னும் பொன்வண்டு உனதடிப்போதி லொண்சீராந் தெளிதேனுண் டமர்ந் திடவேண்டி" என்கிறபடியே ஆசார்ய பாதாரவிந்த ஸேவையாகிற மதுவைப் பருகுதலையே விரதமாகவுடைத்தாகியும், ஊர்த்தத்வ கதிக்கு ஸாதநமாகிய இரண்டு சிறகுகள் போன்ற கர்மஜ்ஞாநங்களையுடையராகியும் ஸாரக்ராஹிக ளாயுமிருக்கின்ற ஸ்ரீவைஷ்ணவர்களை வண்டாகச் சொல்லுவது வழக்கம். அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களை நோக்கி 'நீர் எம்பெருமான் திருவடிகளிலே புருஷகாரஞ் செய்து அடியேனையும் உம்மைப்போலே பகவதநுபவமே நித்ய மாய்ச் செல்லுமாறு ஆட்படுத்திக் கொள்ளவேணும்' என்று ப்ரார்த்தித்தல் இதற்கு உள்ளுறை பொருள். வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிவது ஸம்ப்ரதாய மென்க

முதலடியில் "தூவிரியும் மலருழக்கி" என்ற பாடமு முண்டென்று பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியானத்தினால் தெரிகின்றது; தூய்தாக விரியும் மலரை=நன்றாக அலர்ந்த மலரை என்றபடி. பொறிவரிய=புள்ளிகளும் ரேகை களும் வண்டுக்கு இயல்பு.

முன்னடிகளால், வண்டை விளித்து, இனிப் பின்னடிகளால் தனக்காகச் செய்யவேண்டுங் காரியத்தை நியமிக்கிறாள் பரகாலநாயகி. வயலாலி மணவாளனை நீ இங்கே அழைத்துக் கொண்டு வரவேண்டா ; 'இன்னாள் இன்னபாடு பட்டுக் கொண்டிருக்கிறாள்' என்று ஒரு சொல் அவன் செவியிலே விழவிட்டால் போது மென்கிறாள்.

பரத்வத்தில் தலைநிற்குமவனை வயலாலி மணவாளன் பக்கல் நிஹீநஜந்து வாகிய நான் போகமுடியுமோ ? போனாலும் என் வார்த்தையை அவன் காது கொடுத்துக் கேட்பனோ ? கேட்டாலும் இதை ஒரு பொருளாகக் கொண்டு காரியஞ் செய்வனோ ? என்று வண்டு சங்கித்து நிற்க ; நீ இங்ஙனே மயங்க வேண்டா ; அத்திருப்பதியில் வாழுமவர்கள் மஹாதார்மிஷ்டர்கள் ; ஸர்வயஜ்ஞ ஸமாராத்யனான எம்பெருமானைக்குறித்து யஜ்ஞயாகங்கள் செய்து கொண்டிருப் பர்கள் ; எம்பெருமான் இப்படி ஒருத்தியைப் படுகொலை யடிக்கிறானென்பது அவர்களுக்குத் தெரிந்தால் 'இப்படி ஸ்த்ரீஹத்தி பண்ணுகிறவனையோ நாம்

1. பெரிய திருமொழி 4—3—9. 2. இராமாநுச நூற்றந்தாதி—99.

யஜிக்கின்றோம்!' என்று நொந்து 'முன்னம் ஓடிச்சென்று அவள் குறையைத் தீர்த்து வாழ்வித்து வந்தால்தான் உன்னை நாங்கள் தெய்வமென்றும் தயாளு வென்றுங் கொள்வோம்' என்று சொல்லி அவனைப்புறப்படச் செய்தே வேறு காரியம் பார்ப்பர்கள்; தர்மிஷ்டர்களாகையாலே உன்னையும் வரவேற்று ஸத்கரிப்பர்கள்: ஆனபின்பு தியங்காதே நீ அங்குப்போகலா மென்கைக்காக "தீவிரிய மறைவளர்க்கும் புகழாளர் திருவாலி" என்கிறாள்.

நம்முடைய பிரதிபந்தகங்களைப் போக்கிக் காரியஞ்செய்ய நினைத்தால் அப்பெருமான் எளிதிற் செய்யவல்லவன்; அதற்குரிய ஸாதநம் கைகண்டவன் என்கிறாள் ஏவரி வெஞ்சிலையானுக்கு என்று. வில்லைப்பிடித்தபிடியிலே எதிரிகள் குடல்குழம்பும்படியாக வுள்ளவன்காண் அப்பெருமான். வண்டு பரகாலநாயகியை நாக்கி 'நான் தூதுபோக வேண்டிய ஊரைச்சொன்னாய்; ஊரின் வளப்பம் சொன்னாய்; ஊர்க்குத் தலைவன் பெயரைச் சொன்னாய்; ஸந்தோஷம்; இனி அங்குப்போய் நான் சொல்ல வேண்டிய வார்த்தைகளை விரிவாகச் சொல்லாய்' என்று கேட்க; அதனை நான் எங்ஙனே சொல்லுவேன்? என் வடிவு இருக்கும் படியைப்பார்த்துக் கொண்டாயன்றோ; இதற்கு நீயே பாசுரமிட்டுச் சொல்லாய் என்கிறாள்—என்னிலைமையுரையாயே என்று. "உரையாயே" என்ற விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தின் அழகு காண்மின்;—"[உரையாயே.] கொடுவரவேண்டா; அறிவிக்கு மித்தனையிறே இத்தலைக்கு வேண்டுவது; வருகை அவன் பணியே; வாராதொழியுமன்று ரக்ஷகனுக்குக் குறையாமே: நீங்களறிவித்தவநந்தரம் உங்கள் பேச்சுக் கேட்டுத் தானே வாராநிற்கும்" என்று. ... .... ... ... ... (க)

பிணியவிழும் நறுநீல மலர்கிழியப் பேடையோடும் *
அணிமலர்மேல் மதுநுகரு மறுகால சிறுவண்டே! *
மணிகெழுநீர் மருங்கலரும் வயலாலி மணவாளன் *
பணியறியேன் நீசென்றேன் பயலைநோ யுரையாயே. (உ)

| | | | |
|---|---|---|---|
| பிணி அவிழும் | கட்டு அவிழ்கின்ற | மணி | அழகிய |
| நறு நீலமலர் | மணம்மிக்க நீலோற்பல மலர்கள் | கழுநீர் | செங்கழுநீர்ப் பூக்கள் |
| கிழிய | கிழியும்படியாக | மருங்கு | நாற்பக்கத்திலும் |
| பெடை யோடும் | பேடையுடனே | அலரும் | விகஸிக்கப்பெற்ற |
| | | வயல் | கழனிகளையுடைய |
| அணி மலர் மேல் | அழகிய அந்த மலர்களி விருந்துகொண்டு | ஆலி | திருவாலியிலே யெழுந் தருளி யிருக்கிற |
| மது நுகரும் | மதுபானம் பண்ணுகிற | மணவாளன் | மணவாளப்பிள்ளை போன்ற எம்பெருமானுடைய |
| அறு கால சிறு வண்டே | ஆறு கால்களையுடைய சிறிய வண்டே!, | பணி | செய்தியை |

| | | | |
|---|---|---|---|
| அறியேன் | இன்னதென்று நானறிகின்றேனில்லை; | என் பயலை நோய் | என்னுடம்பு வேறுபட்டிருத்தலாகிற நோயை |
| நீ சென்று | நீ போய் | உரையாய் | சொல்லுவாயாக. |

* * *—இப்பாசுரமும் வண்டைத் தூதுவிடுவதாம். மலரத் தொடங்கின நீலமலரிலே குடும்பத்தோடு சென்றிழிந்து மதுபானம் பண்ணுநிற்கிற வண்டே! வயலாலி மணவாளன் என்னோடு கலந்து பிரிந்துபோனது முதலாக அவன் நினைத்திருப்பது இன்னதென்று தெரியவில்லை; என்னை மறந்திட்டானோ; அன்றி என்னையே நினைத்துக்கொண்டு கிடக்கிறானோ; இங்கே வருவதாக இருக்கிறானோ; என்னை அங்கு வரவழைத்துக் கொள்வதாக இருக்கிறானோ; அன்றி நானொருத்தி இருக்கிறேனென்பதைக் கணிசியாமலே கிடக்கிறானோ; இப்போது அவன் செய்வதும் செய்ய நினைத்திருப்பது மொன்றும் எனக்குத் தெரியவில்லை; என்னைப்பிரிந்து அவன் வருத்தமற்றிருப்பது போலவே நானும் அவனைப் பிரிந்து வருத்தமற்றிருக்கிறேனாக அப்பெருமான் நினைத்து ஆறியிருக்கவுங் கூடும்; நான் இங்ஙனே நோவுபடுகிறேனென்பது தெரிந்தால் இங்குவந்து சேரத் தாமஸிக்கமாட்டானாதலால், நீ அங்குச்சென்று நான் படுகிறநோயைத் தெரிவிக்கவேணு மென்கிறாள்.

அறுகால சிறுவண்டே!=இவ்விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில்—"இரண்டுகாலுடையாரைப் போலன்றிக்கே ஆறுகாலுடையார்க்குக் கடுகப்போய்க் காரியம் தலைக்கட்டலாமிறே" என்றுள்ள ஸ்ரீஸூக்தியை நோக்குங்கால், வண்டு வேகமாக விரைந்து செல்வதற்குப்பாங்காக ஆறுகால்களையுடைத்தாயிருப்பதைப் பாராட்டிக் கூறுவதாகப் பொருள்படக்கூடும். ஆனால் இது பூர்வபக்ஷப் பொருளேயன்றி ஸித்தாந்தப் பொருளன்று; மேற்குறித்த வாக்கியத்திற்கு அடுத்ததான "நித்யம் யதீய சரணௌ சரணம் மதீயம் என்று சேர்ப்பார் காலேயிறே இவர்கள் ஜீவநமாக நினைத்திருப்பது" என்ற ஸ்ரீஸூக்தியின் உட்கருத்து ஆராயத்தக்கது. இந்த அரும்பெரும் பொருளை விளக்கிக் காட்டுவோம்;—திருநெடுந்தாண்டகத்தில் "தேமருவு பொழிலிடத்து" என்ற (26) பாசுரத்தில் "அறுகால சிறுவண்டே தொழுதேனுன்னை" என்ற விடத்து வியாக்கியானத்தில்—"[அறுகால சிறுவண்டே!] த்விபாத்தாயிருத்தல் சதுஷ்பாத்தாயிருத்தல் செய்கையன்றியே கமநஸாதநமான கால்கள் ஆறு உண்டாகப் பெற்றேனென்கிறாள் என்று பூர்வர்கள் நிர்வாஹம்; வண்டுக்கு கமநஸாதநம் சிறகாகையாலும் மேலே தொழுதே னென்கையாலும் என் தலையிலே வைக்கைக்கு ஆறுகாலுண்டாகப் பெற்றேனென்கிறாள் என்று பட்டர் அருளிச்செய்வர்." என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. வண்டுக்கு ஆறுகால்கள் உள்ளனவாகிலும் விரைந்து செல்வதற்கு அவை உபயோகப்படுமவையல்லவே; சிறகாலே பறந்து செல்ல வேண்டிய சாதியாதலால். ஆகவே; 'அறுகால' என்ற விசேஷணத்திற்கு ஸ்வாரஸ்யமான பொருள் பட்டரருளிச் செய்வது யாதெனில்;

வண்டே! நீ எம்பெருமான் பக்கல் சென்று என்னிலைமையை விண்ணப்பஞ் செய்து அவனது அருளைப்பெற்று மீண்டு வந்தாயாகில் நீ செய்த மஹோபகாரத்திற்குத் தோற்று உன் திருவடிகளை நான் தலைமேலணிந்து கொள்வேன்; அப்போது என் தலை நிறைந்திருக்கும்படி உனக்கு ஆறுகால்கள் உண்டாயிருக்கப் பெற்றது பரமபாக்கிய மென்கிறாளென்பதாம். உள்ளுறை பொருளில், புருஷகாரக்ருத்யம் செய்யும் பாகவதர்களை வண்டின் ஸ்தாநத்தில் நிற்பதால் பாகவதர்களுடைய திருவடிகள் உத்தேச்யமாகக் குறையில்லையே. "எங்கானல கங்கழிவாய் இரைதேர்ந்திங்கினிதமரும், செங்காலமடநாராய் திருமூழிக்களத் துறையுங், கொங்கார் பூந்துழாய் முடியென் குடக்கூத்தற்கு என்தூதாய், நுங்கால்கள் என் தலைமேல் கெழுமீரோ நுமரோடே" என்ற திருவாய்மொழியும் நோக்குக பயலைநோய்—மேனிநிறத்தை வேறுபடுத்திக்கிடக்கிற நோய். பயலை—பசலை; நிறவேறுபாடு. ... ... .... (௨)

நீர்வானம் மண்ணெரிகா லாய்நின்ற நெடுமால் * தன்
தாராய நறுந்துளவம் பெருந்தகையேற் கருளானே! *
சீராரும் வளர்பொழில்சூழ் திருவாலி வயல்வாழும் *
கூர்வாய சிறுகுருகே! குறிப்பறிந்து கூறாயே. (௩)

| | | | |
|---|---|---|---|
| நீர் வானம் மண் எரி கால் ஆய் நின்ற நெடு மால் | பஞ்ச பூதங்களுக்கு நிர்வாஹகனா யிருக்கிற ஸர்வேச்வரன் | வளர் பொழில் சூழ் | வளர்கின்ற சோலைகளாலே சூழப்பட்ட |
| தன் | தன்னுடைய | திரு ஆலி | திருவாலிமாநகரில் |
| தார் ஆய | மாலையாகிய | வயல் | கழனியிலே |
| நறு துளவம் | மணம்மிக்க திருத்துழாயை | வாழும் | வாழ்கின்ற |
| பெரும் தகையேற்கு | மிகவும் தகுதியையுடையவளான எனக்கு | கூர் வாய சிறு குருகே | கூர்மையான வாயலகையுடைய சிறிய கொக்கே! |
| அருளானே | கொடுத்தருள்கின்றானில்லையே; | குறிப்பு அறிந்து | (திருவாலி யெம்பெருமானுடைய) திருவுள்ளக் கருத்தை அறிந்து கொண்டு வந்து |
| சீர் ஆரும் | சீர்மை பொருந்திய | கூறாய் | (எனக்குச்) சொல்ல வேணும். |

* * *—நாரையைத் தூதுவிடும் பாசுரம் இது. சோலை வாய்ப்புப் பொருந்திய திருவாலியின் கழனிகளிலே மேய்ந்து வாழ்கின்ற சிறுகுருகே!, எல்லாப் பொருள்களும் தானேயாய் நிற்கிற ஸர்வேச்வரனான வயலாலி மணவாளன் தனது திருத்துழாய்மாலையை எனக்கு அருள் செய்கின்றிலன்; (அதாவது—மார்பிலணிந்துள்ள மணமாலை என் கொங்கைத்தடத்தில் நெருக்குண்ணும்படி வந்து ஸம்ச்லேஷிக்கின்றானில்லை.) அவனுடைய திருவுள்ளம் என்மேல் மாறிவிட்டதோ அறியேன்; நீ சென்று அவனது திருவுள்ளத்தைத் தெரிந்துகொண்டு வந்து எனக்குச் சொல்லவேணும்; நானொருத்தியிருக்கிறே

னென்கிற நினைவோடேயிருந்து இவ்விடம் வருவதாக இருக்கிருனு? அல்லது, இத்தலையை மறந்தேயொழிந்தானு? அபிப்ராய மிருக்கும்படியை அறிந்து கொண்டுவந்து எனக்குச் சொல்லாய் என்கிருள்.

**குறிப்பறிந்து கூறாய்**=அவனுடைய திருவுள்ளத்தை யறிந்து வந்து என்னிடம் சொல்லு என்ற பொருள்தவிர, மற்றொரு பொருளும் சொல்லலாம்; அதாவது—நான் உனக்குத் தூதுசொல்லும் வார்த்தையை அவனிடஞ்சென்று திடீரென்று சொல்லிவிடாதே; எந்த ஸமயத்தில் சொன்னல் பலிக்குமோ அந்த ஸமயத்தில் சொல்லவேண்டுமாதலால் அந்தக் குறிப்புத்தெரிந்துகொண்டு என் வார்த்தையை அவனிடம் சொல்லு என்பதாம். "நான் ஆற்ருமையாலே கண்ணுஞ்சுழலையிட்டுச் சொன்னவற்றை யெல்லாம் அங்குச் சொல்லாதே அவன் தரிக்கும்படி அளவறிந்து வார்த்தை சொல் என்றுமாம்" என்ற பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தியின் போக்யதை அநுபவிக்கத் தக்கது.

**துளவம்**—'துளஸீ' என்னும் வடசொல் விகாரமென்ப. இரண்டாமடியில், "பெருந்தகையேற்கு" "பெறுந்தகையேற்கு" என்பன பாட பேதங்கள். இரண்டு பாடமும் பொருந்தும். பிந்தின பாடத்தில், திருத்துழாயைப் பெறுவதற்குத் தகுதியுடையளான எனக்கு அருள் செய்கின்ருனில்லையே என்று பொருள் கொள்க. ... ... ... ... (௩)

**தானாக நினையானேல் தன்னினைந்து நைவேற்கு * ஓர்**
**மீனாய கொடிநெடுவேள் வலிசெய்ய மெலிவேனே? ***
**தேன்வாய வரிவண்டே! திருவாலி நகராளும் ***
**ஆனாயற் கென்னுறுநோ யறியச்சென் றுரையாயே. (௪)**

| | | | |
|---|---|---|---|
| தான் ஆக | அவன் தானாகவே | தேன் வாய வரி வண்டே | தேன்போல் இனிய வாய்ப் பேச்சையும் ரேகையையுமுடைய வண்டே!, |
| நினையான் ஏல் | என்னை நினையாதிருந்தாலும் | திருஆலி நகர் ஆளும் | திருவாலி நகரியை ஆட்சி புரிகின்ற |
| தன் நினைந்து | அவன் தன்னையே நினைத்துக்கொண்டு | ஆன் ஆயற்கு சென்று | கோபாலகிருஷ்ணன் பக்கலிலே போய் |
| நைவேற்கு | மனம் தளர்ந்திருக்கிற என்னை | என் உறு நோய் | எனது அதிகமான மனோவியாதியை |
| ஓர் மீன் ஆய கொடி நெடு வேள் வலி செய்ய | மகரத்வஜனான மன்மதன் துன்பப்படுத்த | அறிய உரையாய் | தெளிவாகத் தெரிவிக்க வேணும். |
| மெலிவேனே | இப்படியும் நான் இளைத்துப்போவேனே? | | |

* * *—முதலிரண்டு பாசுரங்கள்போலே இதுவும் வண்டுவிடு தூது. உடையவன் உடைமையை விட்டுப்பிரிந்தால் 'ஐயோ! உடைமையை இழந்

தோமே!, மறுபடியும் அதனை நாம் பெறவேணுமே!, எப்படி பெறப்போகி ரோம்' என்று துணுக்குத் துணுக்கென்றிருந்து ஸொத்தின்மேலேயே கருத் தூன்றியிருக்கவேண்டுவது முறைமை; இந்த முறைமையை எம்பெருமான் நோக்குகின்றிலன்; தன் சரக்காகிய என்னைப் பிரிந்து கவலையற்றிருக்கின் ருனே; உடையவன் கவலையற்றிருந்தானுகிலும் உடைமை கவலை கொள்வது நியாயமன்று; அசேதநமாயிருந்துவிட்டால் கவலை கொள்ளாமலிருக்கலாம்; சைதந்ய முண்டாகையாலே கவலை கொள்ளாதிருக்கமுடியவில்லை; என்பது முதலடியின் கருத்து. "நாம் அவனைப்போலே யாகமாட்டோமே; நாமும் நினையாமைக்கு ஒரு நெஞ்சு படைக்கப்பெற்றிலோம்" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி.

ஓர்மீனுய கோடி நெடுவேள் வலிசெய்ய மெலிவேனே?= அப்பெருமானை நினைந்திருப்பதே குற்றமாக மன்மதன் என்னை நோவுபடுத்துகின்றனே; நல்லதோ கெட்டதோ எம்பெருமானுலே விளைவதாயிருந்தால் ஸஹிக்கலாம்; இடையிலே மன்மதனென்னும் சிறுபையல் ஹிம்ஸிக்கும்படியாகவோ நம்முடைய கதி! என வருந்துகின்றுள். "காமற்கு என்கடவேன் கருமாமுகில் வண்ணற்கல்லால், பூமேல் ஐங்கணைகோத்துப் புகுந்தெய்யக் காமற்கு என் கடவேன்" (10-10-7.)என்று மேலே அருளிச்செய்வதுங் காண்க. ஆசை அதிகரித்துச் செல்லுவதையும், அது கைகூடாமையாலே கஷ்டம் மீதூர்ந்து செல்லுவதையும் காமனுடைய ஹிம்ஸையாகச் சொல்லுவது மரபு.

தேன்வாய வரிவண்டே!=ஆபத்காலத்திலே மதுரமான பேச்சுப்பேசுமவ னன்றோநீ. பிராட்டி அசோகவனத்திலே சிம்சுபாவ்ருக்ஷத்திலே மயிர் முடியைப் பிணைத்து உயிர்மாய்க்கப் புகுந்த ஸமயத்திலே ஒருவன் இனிமையான பேச்சுப்பேசி உயிர்பெறுத்தினுப்போலே உதவுமவனன்றோநீ என்று புகழ்ந்து கூறுகிறபடி.

"திருவாலிநகராளும்ஆனுயற்கு" என்றவிடத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம்— "திருவாய்ப்பாடியில் ஸம்பத்தோடே திருவாலியில் ஸம்பத்தையும் கையடைப்பாக்கினுல், பின்னை அவனுக்கு, நொந்தாரை ஐயோ வென்ன அவஸரமுண்டோ?" என்று. இதன் சுவையை அநுபவிப்பாரார்? அர்ச்சாவதாரத்தின் ஐச்வரியமும் விபவாவதாரத்தின் ஐச்வரியமும் ஒருமடை கொண்டிருக்குமிட மென்பது தோன்ற மூலமிருக்குமழகையறிந்து வியாக் கியான மிட்ட அழகை என் சொல்வோம்.

என்னுறு நோய் அறியச்சென்றுரையாய் ='அறிய' என்பதை 'உரையாய்' என்பதோடே கூட்டியுரைத்தலும், 'சென்று' என்பதோடே கூட்டியுரைத் தலுமாக இரண்டு நிர்வாஹ முண்டு. நீசென்று என்னுடைய நோயை அவன் நன்றாக அறிந்துகொள்ளும்படி சொல்லு என்பது-முதல் அந்வயத்தின் பொருள். நீ தளர்ந்து செல்லுகிற நடையிலேயே என்னுடைய ஆற்றாமை யெல்லாம் அவனறிந்து நாக்கிலும் பல்லிலும் நீர்ப்பசையற்று உடம்பு வெளுக்கும்படி யாகச் சென்று தூது சொல்லு என்பது பிந்தின அந்வயத்தின் கருத்து. (ச)

வாளாய கண்பனிப்ப மென்முலைகள் பொன்னரும்ப *
நாணாளும் நின்னினைந்து நைவேற்கு * ஓ! மண்ணளந்த
தாளாளா! தண்குடந்தை நகராளா! வரையெடுத்த
தோளாளா! * என்றனக்கோர் துணையாள னாகாயே. (௫)

| | | | |
|---|---|---|---|
| ஓ மண் அளந்த தாளாளா | பூமியை யளந்துகொண்ட திருவடிகளை யுடையவனே! | மெல் முலைகள் பொன் அரும்ப | மெல்லிய முலைகளில் நிறவேறுபாடு தோன்றவும் |
| ஓ தண் குடந்தை நகர் ஆளா | குளிர்ந்த திருக்குடந்தையை ஆளுமவனே! | நாள் நாளும் | நாள்தோறும் |
| ஓ வரைஎடுத்த தோள்ஆளா | கோவர்த்தன மலையைக் குடையாக வெடுத்துப் பிடித்த திருத்தோள்களை யுடையவனே! | நின் நினைந்து | உன்னையே நினைத்துக்கொண்டு |
| | | நைவேற்கு என்தனக்கு | மனம் தளர்கின்ற எனக்கு |
| வாள்ஆய கண் பனிப்ப | வாள்போன்ற (எனது) கண்கள் நீரைப் பெருக்கவும் | ஓர் துணையாளன் ஆகாய் | நீ சிறந்த துணைவனாகவேணும். |

* * *—கீழ் நான்கு பாசுரங்களும் தூது விடுவனவாய்ச் சென்றன. வயலாலி மணவாளனையே இடைவிடாது நெஞ்சில் பாவனை செய்து கொண்டிருந்ததனால், அவன் கண்முன்னே வந்து தோற்றுகிறானாகக் கொண்டு அவனோடு நேரே வார்த்தை சொல்லுவதாகச் செல்லுகின்றன சில பாசுரங்கள். பிராட்டி அசோகவனத்தில் திருவடியை நோக்கிப் பெருமாளுக்குத் தூதுமொழிகள் சொல்லிக்கொண்டிருக்கும்போது இடையிலே பெருமானையே ஸம்போதநம் பண்ணி 'நாதா! என் விஷயத்தில் சிறிது அபராதம் பண்ணின காகத்தின் விஷயத்தில் உன் பராக்ரமத்தைப் பெரிதாகக் காட்டினாய்; என்னை அடியோடு பிரித்துக் கொணர்ந்து சிறைவைத்திருக்கின்ற மஹாபாபியான இராவணன்மேல் பொறுமை பாராட்டி நிற்கின்றாய்; இஃது என்ன?' என்றிப்படிப்பட்ட சில வார்த்தைகளை முன்னிலையாகவே சொன்னதுபோல இப்பரகால நாயகியும் வயலாலி மணவாளனை முன்னிலையாக்கிச் சில பாசுரங்கள் பேசுகிறாள்.

ஸ்வாமிந்! என்னைப்பிரிந்ததனால் நீ படவேண்டிய பாடுகளையெல்லாம் நான் படுகிறேனே!, இவ்வளவிலும் வந்து உதவாதிருக்கிறாயே! என்கிறாள். என்னுடைய கண்ணழகிலே ஈடுபட்டு *“ந ஜீவேயம் க்ஷணமபிவிநா தாம் அஸிதேக்ஷணாம்” என்றாப்போலே துடித்துக் கண்ணீர் பெருக நிற்கவேண்டியவன் நீயாயிருக்க நானன்றோ கண்பனிப்ப நிற்கிறேன். “கண்பனிப்ப” என்னாமல் “வாளாய கண்பனிப்ப” என்று விசேஷித்ததற்குக் கருத்துண்டு: அவன் என்னை விட்டுப் பிரிந்து போவதாகப்புறப்பட்ட ஸமயத்திலே 'புறப்படாதே; இங்கே

* ஸீதைவிஷயமாக இராமபிரான் சொல்லும் ச்லோகம். 'அக்கண்ணழகியைப் பிரிந்து ஒருநொடிப்பொழுதும் உயிர்தரிக்கமாட்டேன்' என்கை.

விழுந்துகிட' என்று கண்ணாலே விலங்கிட்டு நிறுத்திவைத்து நித்யாநுபவம் பண்ணலாயிருக்கவும் வெட்கத்தாலே தலைகவிழ்ந்திருந்து கெட்டேனே யென்கிருள் போலும்.

மென்முலைகள் பொன்னரும்ப=முலைகளின் நிறம் வேறுபட்டுப் பசலை பூத்திருப்பதைப் பொன்னரும்பி யிருப்பதாகச் சொல்லுகிறது. ஆழ்வார் ஸ்த்ரீ பாவனையை மாநஸிகமாக ஏறிட்டுக்கொண்டாலும் மார்பில் மெய்யே முலைகள் முளைக்கமாட்டாவே, அப்படியிருக்க "மென்முலைகள் பொன்னரும்ப" என்று சொல்லுவது எங்ஙனே? என்று சங்கிக்கக்கூடும் நாயகனை அநுபவிப்பதற்கு முலை ஸாதநமாயிருப்பதுபோல எம்பெருமானை அநுபவிப்பதற்கு பக்தி (ஆசை) ஸாமக்ரியாக இருப்பதனால் அந்த பக்தியே முலையெனப்படுகிறதாகக் கொள்க. ஆகவே 'மென்முலைகள் பொன்னரும்ப' என்றது—எம்பெருமானை அநுபவித்து மேன்மைபெற வேண்டிய என் ஆசையானது அவ்வநுபவங் கிடையாமையாலே பாழாய்ப்போக என்றபடி.

"ஓ மண்ணளந்த தாளாளா!" என்று தொடங்கி மூன்றுவிளிகள் மூன்று லோகங்கேட்க விளிக்கிருர். 'ஓ' என்பதை ஒவ்வொரு விளியோடுங்கூட்டுக. ஒருவரும் அபேக்ஷியாதிருக்க எல்லார் தலையிலும் திருவடியைக் கொண்டுபோய் வைத்தவனன்றோ நீ. அக்காலத்தில் இழந்தவர்களுக்கும் இனிமை பயக்கிறோமென்று திருக்குடந்தையில் திருக்கண்வளருமவனன்றோ நீ; இடக்கை வலக்கை யறியாதவர்களையும் வாயில்லாச்சீவன்களையும் மலையெடுத்து மழைதடுத்துக் காத்தவனன்றோ நீ; இவ்வளவு குணசாலியாயிருந்துவைத்து என்னொருத்திக்கேயோ வேம்பாகவேணும் என்கிருள்.

என்தனக்கு ஓர் துணையாளனாகாய்—கோவர்த்தநமலையாகிற பெருஞ்சுமையைத்தூக்கி நின்ருயென்பது ஒரு பெருமையல்ல; என்னுடைய ஆற்ருமையிலே சிறிதளவாகிலும் உன்னால் சுமக்கமுடியுமா பாராய் பிரானே! என்கிருள் போலும். .... ... ... ... (௫)

தாராய தண்துளவ வண்டுழுத வரைமார்பன் *
போரானைக் கொம்பொசித்த புட்பாக னென்னம்மான் *
தேராரும் நெடுவீதித் திருவாலி நகராளும் *
காராய னென்னுடைய கனவளையும் கவர்வானே! (௬)

| | |
|---|---|
| தார்ஆய தண் துளபம் | மாலையாகிய திருத்துழாயிலுள்ள |
| வண்டு | வண்டுகளாலே |
| உழுத | (தேனும் சுண்ணமுங் கொண்டு) சேறுசெய்யப்பட்ட |
| வரை மார்பன் | மலைபோன்ற திருமார்பை யுடையவனும் |
| போர் ஆனை | போர்புரிய நின்ற (கம்ஸனது) யானையினுடைய |
| கொம்பு ஒசித்த | தந்தங்களை முறித்தொழித்தவனும் |
| புள் பாகன் | கருடனை வாஹநமாகக்கொண்டு நடத்துமவனும் |

| | |
|---|---|
| என் அம்மான் | எனக்கு ஸ்வாமியானவனும் |
| தேர் ஆரும் நெடு வீதி | திருத்தேர் எழுந்தருள்வதற்குப்பாங்கான பெருமை பொருந்திய வீதிகளையுடைய |
| திரு ஆலி நகர் ஆளும் | திருவாலிநகரை ஆள்பவனுமான |
| கார் ஆயன் | கரியகோலக் கண்ணபிரான் |
| என்னுடைய | (வேறு புகலற்றிருக்கிற) என்னுடைய |
| கனம் வளையும் | பொன்வளைகளையும் |
| கவர்வானே | அபஹரிப்பனே !- [அபஹரிப்பது தகுமோ.] |

* * *—கீழ்ப்பாட்டொன்றும், இப்பாட்டுக்கு மேற்பாட்டுக்களும் வயலாலி மணவாளனையே முன்னிலைப்படுத்திச் சொல்லுவனவாயிருக்க, இப்பாட்டொன்றே அவனைப்படர்க்கையாக்கிப் பேசுவது. அநுபவம் போகிற போக்குக்களாம் இவை.

திருத்துழாய் மாலையில் மதுவெள்ளத்தாலே சேறு செய்யப்பெற்ற திருமார்வையுடையவனும், கம்ஸனுடைய அரண்மனைவாசலில் புகும்போதே தன்னைக் கொல்லுவதாகச் சீறிவந்த குவலயாபீடமென்னும் மதயானையின் தந்தங்களை முறித்தொழித்தவனும், அடியார்களிருக்குமிடத்தேறச் சென்று உதவுகைக்காகப் பெரிய திருவடியை வாஹநமாகவுடையவனுமான வயலாலி மணவாளன் என்னுடைய நாண் மடம் அச்சம் முதலிய ஆத்மகுணங்களைக் கொள்ளைகொண்டவளவோடு த்ருப்தி பெறாமல் கையில் வளைகளையுங் கவர்ந்துகொண்டானே ! என்கிறாள்.

நாயகனைப்பிரிந்து வருந்துவதனால் உடம்பானது ஈர்க்குப்போல் மெலிந்துபோக, கைகளில் பொருத்தமாக அணியப்பட்டிருந்த வளைகள் அவலீலையாகக் கழன்று விழுதல் இயல்பு. இவ்விதமாக என்னுடம்பை இளைக்கச்செய்யலாமோ என்ற கருத்தையடக்கி 'என்னுடைய கனவளையுங் கவர்வானே?' என்றது. "யாஸ்யாமீதி ப்ரியே வததி ஸஹஸா க்ஷணேந தந்வ்யா: களிதாநி ஸஞ்சலவலயாநி ஸஹைவ தூஷிதாநி—யாமி நயாமீதி தவே வததி புரஸ்தாத் க்ஷணேந தந்வங்க்யா:—களிதாநி புரோவலயாநி அபராணி புநஸ் ததைவ தளிதாநி." என்ற சுலோகத்தின் தாற்பரியம் இங்கே நினைக்கத்தகும். அதாவது—நாயகன் நாயகியை நோக்கி 'என் கண்மணி! நான் உன்னைப்பிரிந்து ஓர் ஊருக்குச் செல்லுகின்றேன்' என்று சொல்லி வாய்மூடுவதற்குள்ளே அவளுடைய கையில் அணியப்பட்டிருந்த வளைகளில் முன்னேயிருந்த வளைகள் கழன்று கீழேவீழ்ந்தன. [உடம்பு க்ருசமாய்ப்போகத் தொடங்கிற்று என்கை.] அதனைக்கண்ட நாயகன் 'இவள் நமது பிரிவைப் பொறுத்திருக்கக் கூடியவளன்றாகையால் இவளைப்பிரிந்து நாம் வெளியேறலாகாது' என்று நினைத்து உடனே 'அம்மா! நான் போகவில்லை' என்றானும்; அச்சொல் செவிப்பட்ட க்ஷணத்திலேயே முன்பு கழன்றுவீழ்ந்த வளைகள்போக நின்ற வளைகள் படீலென்று வெடித்துத் துகளாய்ப்போயின: என்பது மேற்

காட்டிய சுலோகத்தின் கருத்து. நாயகனுடைய விரஹம் ப்ரஸ்தாவத்தில் வந்தமாத்திரத்திலேயே நாயகியின் உடல் மிகவும் மெலிந்துபோம் என்பதும் அந்தப்பிரிவு வார்த்தை மாறினவாறே உடம்பு பூரிக்குமென்பதும் இதன் உள்ளுறை. ஆகவே, இங்கு "என்னுடைய கனவளையுங் கவர்வானே" என்றது வயலாலி மணவாளனை நான் நித்யமாக ஸம்ச்லேஷித்து உடம்பு பூரித்துக்கிடக்க ப்ராப்தமாயிருக்க, இப்படி பிரிந்து மெலிந்து வருந்துகை தகுதிதானோ? என்றவாறு.

கனவளை—'வந' என்னும் வடசொல் கனமெனத் திரிந்ததாகக் கொண்டால் கெட்டியானவளை என்று பொருளாம். அன்றி, 'கநகம்' என்னும் வடசொல் சிதைந்ததாகக் கொண்டால், பொன்வளை என்று பொருளாம். (சு)

கொண்டரவத் திரையுலவு குரைகடல்மேல் குலவரைபோல் *
பண்டரவி னணைக்கிடந்து பாரளந்த பண்பாளா! *
வண்டமரும் வளர்பொழில்சூழ் வயலாலி மைந்தா! * என்
கண்டுயில்நீ கொண்டாய்க்கென் கனவளையும் கடவேனோ! (எ)

| | |
|---|---|
| பண்டு | முற்காலத்தில், |
| அரவம் திரை உலவு | பெரிய கோஷத்தையுடைய அலைகள் உலாவுகின்ற |
| குரை கடல் மேல் | பரந்த திருப்பாற்கடலிலே |
| கொண்டு | திருவுள்ளங்கொண்டு |
| அரவு இன் அணை | ஆதிசேஷனாகிற இனிய படுக்கையிலே |
| குலம் வரை போல் | சிறந்த மலைபோலே |
| கிடந்து | பள்ளிகொண்டவனும் |
| பார் அளந்த | (திரிவிக்கிரமனாய்) பூமியை அளந்தவனாயுமுள்ள |
| பண்பு ஆளா | தயாளுவானவனே!, |
| வண்டு அமரும் வளர் பொழில் சூழ் | வண்டுகள் படிந்து ஓங்கின சோலைகளால் சூழப்பட்ட |
| வயல் | கழனிகளையுடைய |
| ஆலி | திருவாலியி லெழுந்தருளியிருக்கிற |
| மைந்தா | நித்ய யௌவநசாலியான பெருமானே!, |
| என் கண் துயில் | எனது கண்ணுறக்கத்தை |
| நீ கொண்டாய்க்கு | போக்கடித்த உனக்கு |
| என் கனம் வளையும் | எனது பொன்வளைகளையும் |
| கடவேனோ | இழக்கக்கடவேனோ?. |

* * *—ஆர்த்தரான பக்தர்களுடைய கூக்குரல் கேட்பதற்குப் பாங்கானவிடமென்று திருப்பாற்கடலைத் திருவுள்ளம்பற்றி அங்கே பள்ளிகொண்டிருக்கும் பெருமானே!; அங்ஙனம் அங்கே பள்ளிகொண்டிருக்கையில் ஒருகால் தேவேந்திரனுடைய கூக்குரல் கேட்டுப் பதறியெழுந்து மாவலிபக்கலிலே மாணுருவாய் வந்து திரிவிக்கிரமனாகி உலகளந்த பெருமானே!, இப்போதும் அன்பர்களைக் காப்பதற்கென்றே திருவாலியில் நித்யஸந்நிதி பண்ணியிருக்குமவனே! நீ இப்படிப்பட்ட குணசாலியாயிருந்துவைத்து என்னுடையகண்ணுறக்கத்தையும் அபஹரித்துக் கைவளையையும் அபஹரித்தாயே! இது என்ன முறைமை என்கிறாள்

"என் கண்துயில் நீ கொண்டாய்க்கு" என்றவிடத்தில் 'நீ' என்றது வார்த்தைப்பாடு; அதற்குத் தனியே பொருளில்லை; கொண்டாய்க்கு—கொண்ட உனக்கு. கண்துயில் கொள்ளுகையாவது உறங்கவொட்டாமை 1. "தொல்லை மாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே" என்கிறபடியே எம்பெருமானைப் பெறுவதற்கு முன்பும் உறக்கமில்லை; "ஸதா பஶ்யந்தி ஸூரய:" என்கிறபடியே எம்பெருமானைப்பெற்ற பின்பும் உறக்கமில்லை.

இப்பாட்டால், இரவும்பகலும் உன்னையே சிந்தித்துக்கொண்டு கண் உறங்கப்பெறாமல் மேனி மெலிந்துபோனேன் என்றாளாயிற்று. .... (எ)

குயிலாலும் வளர்பொழில்சூழ் தண்குடந்தைக் குடமாடீ! *
துயிலாத கண்ணிணையேன் நின்னினைந்து துயர்வேனோ! *
முயலாலு மிளமதிக்கே வளையிழந்தேற்கு * இதுநடுவே
வயலாலி மணவாளா! கொள்வாயோ மணிநிறமே! (அ)

குயில் ஆலும் — குயில்கள் (களித்துக்) கூத்தாடுமிடமான
வளர் பொழில் சூழ் — வளர்ந்த சோலைகளால் சூழப்பட்ட
தண் குடந்தை — குளிர்ந்த திருக்குடந்தையிலே எழுந்தருளியிருக்கிற
குடம் ஆடீ — குடக் கூத்தாடின பெருமானே!,
துயிலாத கண் இணையேன் — உறக்கங்கொள்ளாத கண்களையுடைய அடியேன்
நின் நினைந்து — உன்னையே சிந்தித்துக் கொண்டு
துயர்வேனோ — துக்கித்துக் கிடப்பேனோ!
வயலாலிமணவாளா!—;
முயல் ஆலும் இள மதிக்கே — (தன்னிடையிலே) முயல் துள்ளிவிளையாடப் பெற்ற பாலசந்திரனுக்கே
வளை இழந்தேற்கு — வளைகளை இழந்தவளான என்னிடத்திநின்றும்
இது நடுவே — இத்தனை துக்கங்களினிடையே
மணி நிறமே கொள்வாயோ — அழகிய மேனிநிறத்தையும் கொள்ளை கொள்வாயோ?

* * *—திருவாய்ப்பாடியில் இடைப்பெண்களெல்லாரும் காணலாம்படி குடக்கூத்தாடின அழகையும் அப்படிப்பட்ட ஸௌசீல்யத்தையும் திருக்குடந்தையிலே பிரகாசப்படுத்திக் கொண்டு கிடந்தருளும் பிரானே! என்னுடைய கண்களுக்கு உறக்கமென்பது அடியோடே போயிற்று. இளையபெருமாள் [லக்ஷ்மணன்] அவதரித்த முஹூர்த்தத்திலே என்னுடைய கண்களும் பிறந்தன போலும். உறங்காதே கிடக்கிற இக்கண்களுக்குத்தான் நீ இலக்காகவில்லையே, அப்படியே உட்கண்ணான நெஞ்சுக்கும் இலக்காகாமலிருந்து விட்டாயாகில் ஒருவருத்தமுமின்றி வாழ்வேனே; எப்போதும் என்னினைவுக்கு விஷயமாகி வருத்துகின்றாயே!. ஆகாசத்தில் சந்திரன் உதித்தவாறே நான் மேனி மெலிந்து வளையிழக்கின்றேன்; எனக்கு இந்த அநர்த்தம் போராதா? நீயும் நடுவே வந்து புகுந்து என்மேனி நிறத்தையுங் கொள்ளைகொள்ள வேணுமோ வென்கிறாள்.

1. திருவிருத்தம் 97.

முயலாலு மிளமதிக்கே=சந்திரனுடைய மத்தியில் கறுத்துத் தோற்றுகிற மறுவைக் கவிகள் முயலென்றும் மானென்றும் பலபடியாகக் கூறுவராதலால் 'முயலாலு மிளமதி' என்றார். 1. "சார்ந்தகடுதேய்ப்பத் தடாவிய கோட்டுச்சிவாய், ஊர்ந்தியங்கும் வெண்மதியினொண் முயலைச்—சேர்ந்து, சினவேங்கைபார்க்குந் திருமலையே ஆயன், புனவேங்கை நாறும் பொருப்பு" என்ற பேயாழ்வார் பாசுரத்தில் வர்ணனையும் நோக்கத்தக்கது. ... .... (அ)

நிலையாளா நின்வணங்க வேண்டாயே யாகிலும் * என்
முலையாள வொருநாளுன் னகலத்தா லாளாயே *
சிலையாளா மரமெய்த திறலாளா ! திருமெய்ய
மலையாளா ! * நீயாள வளையாள மாட்டோமே. (கூ)

| | |
|---|---|
| சிலையாளா | சார்ங்க வில்லை அடக்கி யாள்பவனே! |
| மரம் எய்த திறலாளா | (ஸுக்ரீவனுடைய நம்பிக்கைக்காக) ஸப்தஸால வ்ருக்ஷங்களை வீழ்த் தொழித்த பெரு மிடுக்கனே!, |
| திரு மெய்ய மலை ஆளா | திருமெய்ய மென்னுந்திருப் பதியை ஆளுமவனே! |
| நிலை ஆள் ஆ நின் வணங்க வேண்டாயே ஆகிலும் | நிலைபெற்ற அடிச்சியாக விருந்து உன்னை நான் வணங்கும்படி திருவுள்ளம் பற்றாமற்போனாலும் |
| ஒரு நாள் | ஒரு நாளாகிலும் |
| என் முலை ஆள | எனது முலைகள் ஆட்செய்யும்படியாக |
| உன் அகலத் தால் ஆளாய் | உனது திருமார்பினால் அணைத்தருளவேணும்; |
| நீ ஆள | உன்னுடைய ஆளுகையில் உட்பட்டிருக்குமளவில் |
| வளை ஆள மாட்டோமே | 'கையில் வளை தங்காமல் துன்பப்படவேண்டியதே யன்றோ எமக்குக் கதி. |

* * *—2. "ஒழிவில் காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்ய வேண்டும் நாம்" என்றும், 3. "நியதமும் அத்தாணிச் சேவகமும்" என்றுஞ் சொல்லுகிறபடியே ஸத்தையுள்ளவரைக்கும் உன் திருவடிகளுக்கு ஆளாயிருக்க வேண்டுவதே கடமை ; ஆனாலும் இப்படி நீ திருவுள்ளம் பற்றினாலன்றி இந்த நித்யகைங்கரியம் கிடைக்கமாட்டாதன்றோ ; என்னை நித்ய கைங்கரியத்திற்கு ஆளாக்கிக் கொள்ளத்திருவுள்ளமில்லை யெனினும் ஒரு நாளாகிலும் உன் திருமேனியை எனக்குத்தந்தாலாகாதோ ? இதுவும் நீ செய்யமாட்டாயாகில், ஆர்த்தர்களை ரக்ஷிப்பதற்காகக் கையிலே வில்பிடித்துக் கொண்டிருக்கிறேனென்று நீ இருப்பது ஏதுக்காக ? ஸுக்ரீவனுக்கு நம்பிக்கை யுண்டாக்குவதற்காக மராமரங்களேழையுந்துளைத்த மிடுக்கை யுடையவனென்று உன்னைப்புகழ்வது ஏதுக்காக ? திருமெய்யத்திலே ஸத்யேசனென்று பெயர் படைத்திருப்பது ஏதுக்காக ? நான் ஒருத்தி வாழும்படி காரியஞ் செய்யமாட்டாதவனுக்கு இப்புகழெல்லாம் பொருந்துமோ என்கிறாள்.

1. மூன்றாந்திருவந்தாதி—75. 2. திருவாய்மொழி 3—3—1. 3. திருப்பல்லாண்டு 8.

நீ ஆள வளையாள மாட்டோமே—உன்னுடைய ஆளுகையிலே அடங்கியிருப்பார்க்கு [அதாவது—உன்னுடைய மனைவியராக இருப்பார்க்கு] க்கையில் வளை தங்கியிருக்க ப்ராப்தியுண்டோ? என்கை. விட்டுப்பிரியாமல் கூடியிருக்குங் காலத்திலோ ஸந்தோஷமிகுதியினால் உடம்பு பூரித்து வளை வெடித்துப் போம். பிரிந்த காலத்திலோ உடலிளைத்து வளை கழன்றொழியும்: ஆனபின்பு ஒரு போதும் வளை தங்கியிருக்க ப்ராப்தியில்லை என்னலாம்.

முற்காலத்தில், அம்மங்கியம்மாள் என்னும் ஓர் ஆசிரியர் நோயால்வருந்தியிருக்க, நஞ்சீயரும் நம்பிள்ளையும் அவரைக்கண்டு விசாரிக்க எழுந்தருளியிருந்தனர்; அப்போது அவர் மிகவும் க்லேசப்படுவதைக்கண்டு நஞ்சீயர், 'ஸ்வாமிந்! தேவரீர் ஸாமாந்ய மநுஷ்யரன்றே; எவ்வளவோ பகவத் பாகவத கைங்கரியங்கள் பண்ணியிருக்கிறீர்; குணாநுபவத்தாலல்லது போது போக்கியறியீர்; இப்படிப் பட்ட உம்மையும் எம்பெருமான் மற்றவர்களைப்போலே இப்படி கஷ்டப்படுத்துகிறானே!' என்றாராம்; அதற்கு அவர் "'நீயாள வளையாள மாட்டோமே' என்றன்றோ கலியன்பாசுரம்; எம்பெருமானுக்கு வாழ்க்கைப்பட்டால் க்லேசப் பட்டுத்தானேயிருக்கவேண்டும்" என்றாராம். பிறகு வெளியில் எழுந்தருளின பின் நஞ்சீயர் நம்பிள்ளையை நோக்கி 'பார்த்தீரா இவருடைய அத்யவஸாயத்தை; என்ன பாசுரமெடுத்துக் காட்டினார்!' என்று அருளிச்செய்து மகிழ்ந்தனராம்.

மையிலங்கு கருங்குவளை மருங்கலரும் வயலாலி *
நெய்யிலங்கு சுடராழிப் படையானை நெடுமாலை *
கையிலங்கு வேல்கலியன் கண்டுரைத்த தமிழ்மாலை *
ஐயிரண்டு மிவைவல்லார்க் கருவினைக ளடையாவே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| கை இலங்கு வேல் கலியன் | கையில் விளங்குகின்ற வேலையுடைய திருமங்கையாழ்வார், | நெடு மாலை | ஸர்வேச்வரனை |
| மை இலங்கு கரு குவளை | மைபோல் விளங்குகின்ற கறுத்த குவளைமலர்கள் | கண்டு உரைத்த | ஸேவித்துச்சொன்ன |
| மருங்கு அலரும் வயல் | ஸமீபங்களிலே விகஸிக்கப் பெற்றகழனிகளையுடைய | தமிழ் மாலை | தமிழ்த் தொடைகளான |
| ஆலி | திருவாலியிலே இருக்கிற | இவை ஐ இரண்டும் | இப்பத்துப் பாசுரங்களையும் |
| நெய் இலங்கு சுடர் ஆழி படையானை | நெய் பூசப்பட்டு விளங்குகின்றதும் சுடரையுடையதுமான சக்கரத்தை ஆயுதமாகக் கொண்டுள்ள | வல்லார்க்கு | ஓதவல்லவர்களுக்கு |
| | | அரு வினைகள் | துஷ்கருமங்கள் |
| | | அடையா | சேரமாட்டா. |

* * *—பெரிய ஆற்றின் வாய்க்கால்கள் பல பெயர்களால் பெருகாநின்றாலும், முடிவில் கடலிலேசென்று சேரும்போது முக்கியமான பெயருடனே சென்று சேருமே; அதுபோல, ஆழ்வார் கீழ்ப்பாசுரங்கள் வேற்றுவாயாலே பேசினாலும் பதிகம் முடிக்கும்போது தம் வாய்கொண்டே முடிக்கிறார்.

சுற்றுப்புறமெங்கும் கருங்குவளைமலர்கள் பூக்கப்பெற்ற கழனிகள் சூழ்ந்த திருவாலிமாநகரில் கையுந்திருவாழியுமாக எழுந்தருளியிருக்கும் ஸர்வேச்வரனைக் குறித்துத் திருமங்கைமன்னன் திருவாய்மலர்ந்தருளிய இப்பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்களுக்கு அப்பெருமானைப் பிரிந்து நோவுபட்டுத் தூதுவிடவேண்டும்படியான தீவினையொன்றுங் கிட்டாது என்றவாறு.

இத்திருமொழியை ஓதுமவர்கள் பக்கலிலே எம்பெருமான் வியாமோஹங்கொண்டு தான் தூதுவிடுவனேயன்றி அவனுக்குத் தூதனுப்பும்படியான வ்யஸநம் நேரமாட்டாதென்க. ... ... .... (கo)

**அடிவரவு:**—தூவிரிய பிணி நீர் தான் வாள் தாராய கொண்டு குயில் நிலையாளா மையிலங்கு கள்வன்.

ஆறுந்திருமொழி உரை முற்றிற்று.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றும் பத்து—ஏழாந் திருமொழி.

# கள்வன்கொல்யானறியேன்.

**அவதாரிகை:**—கீழிரண்டு திருமொழிகள்போலே இத்திருமொழியும் திருவாலித் திருப்பதி விஷயமே. கீழ்த்திருமொழியில் முதல் நான்கு பாசுரங்களாலே வயலாலிமணவாளனுக்குத் தூதுவிட்டாள். அதற்குமேல் அவ்வெம்பெருமான் கண்முன்னே வந்து தோற்றுவதாகவே பாவநாப்ரகர்ஷத்தாலே நினைத்து அவனை நோக்கி நேரே வார்த்தையாடுவதாகச் சில பாசுரங்கள் சென்றன. அப்படி வார்த்தையாடும்போது "என்றனக்கோர் துணையாளனாகாயே" "வயலாலிமைந்தா! என்கண்துயில் நீ கொண்டாய்க்கு என் கனவளையுங்கடவேனோ" "இது நடுவே வயலாலிமணவாளா கொள்வாயோ மணிநிறமே" "என் முலையாளவொருநாள் உன்னகலத்தாலாளாயே" என்றிப்படி ஆழ்வார் கதறுவதை உணர்ந்த வயலாலிமணவாளன், 'இனி இவரை நாம் இப்படி துடிக்கவிட்டிருக்கலாகாது; நம் இடத்திலே கொண்டுவந்து நித்யாநுபவம் பண்ணிக் களிப்பதே நன்று' என்று நிச்சயித்துப் பரகாலநாயகியைத் தாய்மார் முதலானோரும் அறியாமே ரஹஸ்யமாக அழைத்துக்கொண்டு போய்விட்டான். படுக்கைத்தலையிலே மகளுடன்கூடவே படுத்துக்கொண்டிருந்து மகளின் விரஹதாபத்துக்கு உபசாரங்கள் பண்ணிக்கொண்டிருந்த திருத்தாயார் ஆயாஸத்தாலே சிறிது கண்ணுறங்கினபோது இந்த ஸம்பவம் நேர்ந்துவிட்டது. உடனே

துணுக்கென்று கண்விழித்துக்கொண்ட திருத்தாயார் படுக்கையைத் தடவிப் பார்த்தாள்; எங்கும் தேடிப்பார்த்தாள்; மகளைக் கண்டிலள். 'பேய் கொண்டதோ! பிசாசு கொண்டதோ!' என்று நினைக்கலாமாயினும், இவளுக்கு வயலாலிமணவாள னிடத்திலேயிருந்த ஆவலின் மிகுதியையும், பாவனை முற்றி அவனோடே நேரில் வார்த்தை சொல்லுமாபோலே சொல்லிக்கொண்டிருந்த வாற்றையும், அப்பெருமான்றனக்கும் இவள்மேலே காதல்விஞ்சியிருந்தபடியையும் நன்கு அறிந்தவளாகையாலே அப்பெருமானே இவளைக் கொண்டுபோயிருக்கவேணுமென்று நினைத்து எழுந்து பார்த்தவாறே வயலாலிமணவாளன் கையைப் பிடித்துக்கொண்டு போகிறபடியைக் கண்ணாலேகண்டு அதனை வாய்விட்டுச் சொல்லுகிறாள்.

ஆழ்வாரைப் படுக்கையில் நின்றும் கிளப்பிக் கொண்டுபோனானென்றால் இதன் கருத்துயாது? என்னில்; மாநஸாநுபவமா யிருக்கச்செய்தேயும் திருமேனியோடே பாஹ்யஸம்ச்லேஷம் பண்ணுவதுபோல் பாவிக்கச்செய்த அநுபவத்தைச் சிறிது விஸ்தாரப்படுத்தினானெம்பெருமான் என்பதே இதன் கருத்தாம்.

ஆழ்வாரைப் படர்க்கையாக்கித் தாய்பேசுவதுபோலச் செல்லுகிற விதற்குக் கருத்துயாதெனில்;—உலகத்தில் பெற்று வளர்த்துப் பெண்பிள்ளை யௌவனபருவத்தில் நாயகனிடத்துள்ள அன்பு மிகுதியால் அவனிருப்பிடத்துக்குச் செல்லவேணுமென்று பதறுமளவில், படிகடந்து புறப்படுகை குலமரியாதைக்குப் பொருந்தாதென்று தடுப்பவள் தாய் எனப்படுவள்: ஸித்தோபாயமான எம்பெருமானைப் பற்றினவர்கள் பேற்றை விளம்பித்துப் பெறுதலில் காரணமில்லாமையாலே அதனை விரைவில் பெறவேணுமென்னுங் காதல் கிளர்ந்து அதனால் படிகடந்து நடக்க வேண்டிவந்த வளவில், இது ப்ரபந்நர்குடிக் கட்டுப்பாட்டுக்குச் சேராதென்று விலக்கி 'எம்பெருமான் தானே வந்து விஷயீகரிக்கக் கண்டிருக்கவேணும்' என்று சொல்லித் துடிப்பை அடக்கப்பார்க்கிற நம: பதத்திற் கூறப்பட்ட உபாய அத்யவஸாயமாகிற ப்ராஜ்ஞாவஸ்தையைத் தாய் என்பதாகக்கொள்க.

வயலாலிமணவாளனோடே நித்யஸம்ச்லேஷம் பண்ணவேணு மென்றிருந்த ஆழ்வாருடைய விருப்பம் இத்திருமொழியாகப் பரிணமித்துவிட்டதுபோலும்.

கலிநிலைத்துறை.

கள்வன்கொல் யானறியேன் கரியானொரு காளைவந்து *
வள்ளிமருங்கு லென்றன் மடமானினைப் போதவென்று *
வெள்ளிவளைக் கைபற்றப் பெற்றதாயரை யிட்டகன்று *
அள்ளலம் பூங்கழனி யணியாலி புகுவர்கொலோ? (க)

கள்வன் கொல் யான் அறியேன் — (வந்து அழைத்துக்கொண்டு போனவன்) திருடனோ? (அன்றி உடையவன் தானோ?) எனக்குத் தெரியவில்லை;

கரியான் ஒரு காளை வந்து — கருநிறத்தவனான ஒரு யௌவனபுருஷன் வந்து,

வள்ளி மருங்குல் — கொடிபோல் நுட்பமான இடையையுடையளாய்

என் தன் மடம் மானினை } இளமான்போன்றவளான எனது மகளை
போத என்று வாவா என்றழைத்து,
வெள்ளி வளை கை பற்ற { வெள்ளை வளைகளணிந்துள்ள கையைப்பிடிக்க, (உடனே அவள்)
பெற்ற தாயரை இட்டு அகன்று } பெற்று வளர்த்த தாயாகிய என்னையும் உபேக்ஷித்து விட்டொழிந்து
(போய்விட்டாள்;)
(இப்படி தம்பதிகளாகப்போன விவர்கள்)
அள்ளல் அம் பூ கழனி அணி { சேற்று நிலங்களிலே அழகிய பூக்கள் நிறைந்த கழனிகளாலே அலங்கரிக்கப்பட்ட
ஆலி திருவாலியிலே
புகுவர் கொலோ } சென்று சேருவர்களோ?

* * *—திருத்தாயார் சொல்லத்தொடங்கும்போதே "கள்வன் கோல்" என்று எம்பெருமானைக் கள்ளனாகச் சங்கித்துச் சொல்லுகிறாள். சாஸ்த்ரங்களில் சேதநனைக் கள்வனாகச் சொல்லியிருக்கிறது; "கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேண ஆத்மாபஹாரிணா" என்றது. எம்பெருமானுக்கே உரிமைப்பட்டதான ஆத்மாவை ஸ்வசேஷமாகவும் அந்யசேஷமாகவுங் கருதுகின்ற சேதநன் ஆத்மாபஹாரக் கள்ளனெனப்படுகிறான். தன் உடைமையைத் தான் கைக்கொள்ளுகிற எம்பெருமானைக் கள்வனென்று சொல்லத்தகாது. ஆயினும், "யானே என்றனதே" என்றிருக்கும் அஹங்கார மமகாரங்கள் நெடுநாளாக சேதநனிடத்து அழுந்திக்கிடக்கும் வாஸநையினுறைப்பினால் தன்னுடைய கள்ளத்தனத்தை எம்பெருமான்மீது ஏறிடலாகுமென்பது தோன்றக் கள்வன் கோல் என்கிறது. "1. செஞ்சொற்கவிகாள்! உயிர்காத்து ஆட்செய்மின், திருமாலிருஞ்சோலை வஞ்சக்கள்வன் மாமாயன்" என்றதுங்காண்க.

கள்வன்கோல் யானறியேன்—'கள்வனே வந்தான்' என்று உறுதியாகச் சொல்ல நா எழவில்லைபோலும்; ஸர்வஸ்வாமியானவன் தன் உடைமையைக் கைக்கொண்டு போனானாகையாலும், பிரகாசமாகவே கொண்டுபோனானாகையாலும் கள்வனென்ன முடியாது; ஆயினும் மமகாரத்தின் ஊற்றத்தாலே "கள்வன் கொல்யானறியேன்" என்று உல்லேகிப்பதுபோலச் சொல்லலாயிராநின்றது. இங்ஙனே திருத்தாயார் தெருவிலே ஓடிவந்து "கள்வன் கொல் யானறியேன்" என்று கதறினவாறே இங்குமங்குமுள்ளார டங்கலுந் திரண்டு வந்துசேர்ந்து 'அம்மா! இஃது என்ன அநியாயம்; கள்வனா வந்துவிட்டான்? யார் அவன்? அவன் கவர்ந்துசென்ற பொருள் யாது?' என்று பேராரவாரமாய் வினவ, மேலே சொல்லுகிறாள் கரியானொருகாளை வந்து என்று தொடங்கி. நீலமேக நிறத்தனாய் இளம்பருவமுடையனான வொருவன் என்னகத்தினுள்ளே புகுந்து என்மகளை 'புறப்படு, புறப்படு' என்று சொல்லிக் கைையப்பிடித்திழுத்துக் கொண்டுபோகின்றான் காண்மின் என்கிறாள்.

---

1. திருவாய்மொழி 10—7—1.

வயலாலிமணவாளன் பரகாலநாயகியைக் கவர்ந்து சென்றதாகச் சொல்லு கிறவிது, பலருமறிய ப்ரகாசமாகக் கவர்ந்துசென்றமையைச் சொல்லுகிறதோ? அன்றி, ரஹஸ்யமாகக் கவர்ந்து சென்றபடியைச் சொல்லுகிறதோ? என்னில்; மகளைத் தாய் அணைத்துக்கொண்டு கிடக்கையில் ஏகாந்தமாகவந்து கவர்ந்து சென்றதாகப் பிள்ளையமுதனார் நிர்வஹித்தனராம். அதை பட்டர் கேட்டருளி, 'அங்ஙனம் வேண்டா; பலருங் கண்டுகொண்டிருக்கையில் தீவட்டிக்கொள்ளைக் கள்ளர் கொள்ளைகொண்டு போமாபோலே கொண்டுசென்றதாக நிர்வஹிப்பது எளிது' என்றருளிச்செய்தாராம்.

வயலாலிமணவாளன் தானே வந்து அழைத்துக்கொண்டு போகையாலே 'திருவாலிக்கே சென்று சேர்ந்தாள்' என்று உறுதிப்பாடாகச் சொல்லலாமே; அப்படி சொல்லாது, "அணியாலி புகுவர்கோலோ" என்று ஸந்தேஹமாகச் சொல்லுவானேன்? என்னில்; கேண்மின்;—திருவாய்மொழியில் "உண்ணுஞ் சோறு பருகுநீர்" என்கிற திருவாய்மொழியின் நடையும் இத்திருமொழியின் நடையும் ஒருபுடை ஒத்திருக்கும். அத்திருவாய்மொழியில் நம்மாழ்வாராகிற தலைமகள் [பராங்குசநாயகி] தானாகவே எம்பெருமானுறையுமிடமான திருக்கோளூரை விசாரித்துக்கொண்டு புறப்பட்டுப்போவதாகச் சொல்லப்படுகிறது; இத்திருமொழியில், எம்பெருமானே வந்து அழைத்துக்கொண்டு செல்வதாகச் சொல்லப்படுகிறது: இவ்வளவே வாசி. ஆளவந்தாருடைய கோஷ்டியிலே இவ்விரண்டு திருப்பதிகங்களையும் பற்றி விசாரம் நடந்தது. உண்ணுஞ்சோறு திருவாய்மொழியிலும் மகள் தாயைவிட்டுச் சென்றாள்; கள்வன்கொல் திரு மொழியிலும் மகள் தாயைவிட்டுச் சென்றாள்; இவ்விருவருள் எந்தமகளுக்காக அதிகம் கவலைப்படவேண்டுவது? என்று விசாரம் நிகழ்ந்தது. அப்போது அங்கிருந்த முதலிகள்—"பரகாலநாயகி தனித்துச்செல்லவில்லை; 'நெடுமால் துணையாப் போயின பூங்கொடியாள்' என்கையாலே தலைவனாகிற துணையோடே சென்றிருக்கிறாள்; ஆகையாலே அவளைப்பற்றிக் கவலைப்படவேண்டுவதில்லை; பராங்குசநாயகி அப்படி துணையோடு செல்லாமல் துணைவன்பால் தனியே சென்றுளாகையாலே அவளைப்பற்றியே கவலைப்பட வேண்டிற்றுள்ளது" என்றார்கள்; அதற்கு ஆளவந்தார்—'இப்படி சொல்லலாகாது; பராங்குச நாயகி தனியே சென்றுளாகிலும் தான் நினைத்தவிடத்திற்போய்ச் சேரவேணு மென்னும் ஆவலினால் எப்படியாவது விரைவிற்சென்று சேர்ந்துவிடுவள்; வழியில் தங்கி அபாயங்களுக்கு ஆஸ்பதமாவதற்குக் காரணமில்லை; ஆனது பற்றியே 1. "திண்ண மேன்னிளமான் புகுமூர் திருக்கோளூரே" என்று ஸம்சய மின்றி நிச்சயித்துச் சொல்லப்பட்டது அங்கு; ஆகையாலே அவளைப்பற்றிக் கவலைப்படவேண்டிற்றில்லை. பரகாலநாயகியும் அப்படி தனியே சென்றிருப்ப ளாகில் அவளும் தனக்கு உத்தேச்யமான திருவாலியிலே சென்று சேர்ந்தே தீருவள்; "திண்ணமென்னிளமான் புகுமூர் திருவாலியே" என்று தாயும்

1. திருவாய்மொழி 6—7—1.

நிச்சயம்படக் கூறியிருப்பள்; அவளைப்பற்றியும் கவலைப்பட வேண்டாதிருக்கும். அங்ஙனன்றியே தம்பதிகளாய்ச் செல்லுகையாலே நாயகனுடைய வடிவழகிலே ஈடுபட்டு நாயகி பைத்தியம்பிடித்தும், நாயகியின் வடிவழகிலே ஈடுபட்டு நாயகன் பைத்தியம்பிடித்தும் இப்படி இருவரும் பித்தம் தலைக்கொண்டவர்களாய்ப் போக நேருமாகையாலே உத்தேச்யமான திருவாலியிலேயே சென்று சேருவர்களென்று உறுதியாகச் சொல்வதற்கில்லை; திருவாலியிற்சென்று சேருவர்களோ? அன்றியே பரஸ்பரம் பித்துக்கொள்ளிகளாய்ச்சென்று லங்கை போன்ற விரோதிக ளிருப்பிடங்களிலே சென்று சேருவர்களோ! என்று சங்கித்துக் கவலைப்படவேண்டியிருக்கிறது; இது தோன்றவே 'அணியாலி புகுவர்கோலோ?' என்று ஸந்தேஹம்படச் சொல்லியிருக்கிறது காண்மின்—என்றருளிச் செய்தாராம். ஆகவே இத்திருமொழியில் ஒவ்வொரு பாசுரத்திலும் "ஆலி புகுவர்கோலோ" என்று ஸந்தேஹமாகவே சொல்லியிருப்பது பொருந்தும். பெரியாழ்வார் திருமொழியில் "நல்லதோர் தாமரைப் பொய்கை நாண்மலர்மேல் பனிசோர, அல்லியுந்தாதுமுதிர்ந்திட்டு அழகழிந்தாலொத்ததாலோ, இல்லம் வெறியோடிற்றாலோ என் மகளை யெங்குங் காணேன், மல்லரை அட்டவன்பின் போய் மதுரைப்புறம் புக்காள்கோலோ" என்று— இருவருஞ் சேர்ந்து பிச்சேறிக் கம்ஸநகரமாகிய மதுரையிற் புகுவார்களோ? அன்றி அதற்கு அருகிலுள்ள திருவாய்ப்பாடியிற் புகுவார்களோ? என்று உடன்போக்கிற் சென்ற தலைவியைக் குறித்துத் தாய் ஐயப்பட்டுச் சொன்னதும் இங்கு நினைக்கத்தக்கது. காளை—"காளையே எருதுபாலைக்கதிபன்நல்லிளையோன் பேராம்" என்பது நிகண்டு. வள்ளி—'வல்லீ' என்னும் வடசொல் விகாரம். மடமான்—உவமையாகுபெயர். 'போதரு' என்பது போத என்று குறைந்திருக்கின்ற தென்னலாம். மூன்றாமடியில், "இட்டகன்று, விட்டகன்று" என்பன பாடபேதங்கள். ... .... ... ... (க)

பண்டிவனாயன் நங்காய்! படிறன்புகுந்து * என்மகள்தன்
தொண்டையஞ் செங்கனிவாய் நுகர்ந்தானையுகந்து * அவன்பின்
கெண்டையொண் கண்மிளிரக் கிளிபோல் மிழற்றிநடந்து *
வண்டமர் கானல்மல்கும் வயலாலி புகுவர்கோலோ? (உ)

(அயல்வீட்டுப் பெண்களில் ஒருத்தியை நோக்கிச் சொல்லுகிறாள்.)

| | |
|---|---|
| நங்காய் | பெண்ணே!, |
| இவன் | என் மகளைக்கொண்டுபோன இவன் |
| பண்டு | முன்பெல்லாம் |
| படிறன் | (பெண்களைத் திருடுவது முதலான) தீம்புகளைச் செய்கிற |
| ஆயன் | இடையனாயிருந்தவன்; (அப்படிப்பட்டவிவன் இப்போது) |
| புகுந்து | (என் வீட்டிலே ப்ரத்யக்ஷமாக) வந்து நுழைந்து |
| என் மகள்தன் | என் பெண்ணினுடைய |
| அம் செம் தொண்டை கனி வாய் | அழகிய சிவந்த ஆதொண்டைப் பழம் போன்ற அதரத்தை |

| | |
|---|---|
| நுகர்ந்தானை | (பானம் பண்ணினன்;) அப்படி பானம்பண்ணின இவனை, |
| உகந்து | (என் பெண்) விரும்பி |
| கெண்டை ஒண் கண் மிளிர | கெண்டைமீன்போலே அழகிய கண்கள் ஒளிவிட |
| கிளி போல் மிழற்றி | கிளிபோலே மழலைச் சொற்கள் பேசிக்கொண்டு |
| அவன் பின் நடந்து | அவன் பின்னே நடந்துபோய் |
| | (தம்பதிகளாய்ச் சேர்ந்துகொண்ட அவ்விருவரும்) |
| வண்டு அமர் | வண்டுகள்படிந்த |
| கானல் மல்கும் | கடற்கரைச் சோலைசூழ்ந்த |
| வயல் | கழனிகளையுடைய |
| ஆலி | திருவாலியிலே |
| புகுவர் கொலோ | சென்று சேருவர்களோ ?. |

* * *—மற்றொரு அயல்வீட்டுப் பெண்மணாட்டி வந்து 'அம்மா! கள்வன் கொல்யானறியேனென்று கதறினாயே, என்ன விசேஷம்?' என்று கேட்க; அவளுக்குச் சொல்லுகிறாள் தாய். திருவாய்ப்பாடியிலே "மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக், கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்புதுகிலவைகீறி, நிச்சலுந் தீமைகள்" செய்துகொண்டிருந்த கோபாலகிருஷ்ணனென்பவன் என்னகத்திலே புகுந்து என் மகளினது கொவ்வைக் கனிபோன்ற அதரத்தைப் பருகிநின்றான்; பின்னை அவனுடனே என்மகள் புறப்பட்டுச் சென்றாள்; சென்ற இருவரும் திருவாலிக்கேபோய்ச் சேர்ந்திருப்பர்களோ, அன்றி எங்கேனும் விரோதிவர்க்கமுள்ளவிடத்தே புகுந்திருப்பர்களோ அறிகின்றிலேன் என்கிறாள்.

படிறு—தீம்பு. கெண்டையோண்கண் மிளிர=வழியிலே செல்லும்போது அபூர்வமான பலபல பொருள்களைக் காண நேருமே; அவற்றைக் காணும்போது இவையென்ன இவையென்ன?' என்று காதலனைக் கண்ணாலேயே கேட்டுக் கொண்டு போவளாம். அதனைக் கருதியே "கெண்டையொண்கண் மிளிர" எனப்பட்டதென்க. சிலபொருள்களைப்பற்றி வாயாலும் கேட்க நேருமாகையாலும் இனிய செஞ்சொற்களைப் பேசிக்கொண்டே வழி நடக்கவேண்டியிருக்குமாகையாலும் "கிளிபோல்மிழற்றி நடந்து" எனப்பட்டது. ... (உ)

அஞ்சுவன் வெஞ்சொல்நங்காய்! அரக்கர்குலப் பாவைதன்னை *
வெஞ்சின மூக்கரிந்த விறலோன்திறம் கேட்கில் * மெய்யே
பஞ்சிய மெல்லடியெம் பணைத்தோளி பரக்கழிந்து *
வஞ்சியந் தண்பணைசூழ் வயலாலி புகுவர்கொலோ? (ங)

| | |
|---|---|
| வெம் சொல் நங்காய் | விரும்பத்தக்க வாய் மொழியையுடைய (அயல் வீட்டுப்) பெண்ணே !, |
| அரக்கர் குலம் பாவை தன்னை மூக்கு | ராக்ஷஸகுலத்துப் பதுமை போன்ற சூர்ப்பணகையினுடைய மூக்கை |
| வெம் சினம் | கடுங்கோபத்தாலே |
| அரிந்த | அறுத்தொழித்த |
| விறலோன் | மிடுக்கையுடையனான அந்த யௌவந புருஷனுடைய |
| திறம் | தன்மையை |

| | | | |
|---|---|---|---|
| கேட்கில் | கேள்விப்படுமளவில் | (அவனோடு செல்ல; அவ்விருவரும்) | |
| மெய்யே அஞ்சுவன் | உண்மையாக அஞ்சுகின்றேன்! | வஞ்சி அம் தண் பணை சூழ் | வஞ்சிக் கொடிகளாலழகிய குளிர்ந்த நீர் நிலைகள் சூழ்ந்த |
| பஞ்சிய மெல் அடி | பஞ்சுபோன்ற மிருதுவான அடியையுடையவளும் | வயல் | கழனிகளையுடைய |
| எம் பணை தோளி | மூங்கில்போன்ற தோள்களை யுடையவளுமான என்மகள் | ஆலி | திருவாலியிலே |
| பாக்கழிந்து | பெரும்பழிக்கு இடமாகி | புகுவர் கொலோ | சென்று சேர்ந்திருப்பர்களோ?. |

* * *—வினவவந்த மற்றொரு தோழியை நோக்கிச் சொல்லுகிறாள் தாய். "அரக்கர் குலப்பாவை தன்னை மூக்கரிந்த விறலோன் திறங்கேட்கில் மெய்யே அஞ்சுவன்"—தண்டகாரணியத்திலே இராமபிரான் வஸிக்கும்போது இராவணனது தங்கையான சூர்ப்பணகை அப்பெருமானைக்கண்டு காதல்கொண்டு தனது ராக்ஷஸரூபத்தை மறைத்து அழகிய பெண்ணின் வடிவுகொண்டுவந்து 'என்னை அங்கீகரிக்கவேணும்' என்று ஸ்ரீராமனைப் பிரார்த்திக்க, அப்பிரான் 'எனக்கு இதோ ஒரு ஸ்த்ரீ இருக்கிறாள், ஆதலால் அங்கே போ' என்று இளையபெருமாளைக் காட்ட, அவனும் 'நான் ஸ்ரீராமனுக்கு அடிமை; என்னை மணந்துகொண்டால் நீயும் வேலைக்காரியாகவேண்டிவரும்; ஆகையாலே அவர் பக்கலிலேயே போவாய்' என்ன, இப்படி இருவரும் தன்னை அவமதிக்கையாலே அச்சூர்ப்பணகை மிக்க சினங்கொண்டு தனது உண்மையான வடிவுடனே வந்து ஸீதாபிராட்டியை எடுத்துக்கொண்டுபோக யத்நிக்க, அப்போது இராமபிரான் ஸ்த்ரீயென்று அவளைக் கொல்லாமல் விட்டு இலக்குமணனைக்கொண்டு அவளது செவி மூக்கு முதலிய அங்கங்களையறுத்து மானபங்கஞ்செய்து போகவிட்டனனென்பது வரலாறு. இதனை இவ்விடத்தில் (பரகாலநாயகி) எடுத்துரைத்து, "இப்படிப்பட்ட தன்மையைக் கேட்க நான் அஞ்சுகின்றேன்" என்று சொல்லியிருப்பதன் கருத்து யாது? அரக்கியின் மூக்கை யறுத்ததுபோலே என் மகளின் மூக்கையும் அறுத்துவிடுவனோவென்று அஞ்சுகின்றேனென்பதாகவன்றோ மேலெழ நோக்குமிடத்துக் கருத்துத் தோன்றுகின்றது. குணக்கடலாகிய எம்பெருமான் விஷயத்திலே இவ்வாறு நினைத்து அஞ்சுதல் கூடுமோ? இது குணஹாநி சொல்லுகிறபடியாகுமன்றோ? என்று பூருவர்கள் விசாரஞ் செய்யுமிடத்து, கிடாம்பியாச்சான் 'துடிப்பு இருக்கக்கை வேகவேணுமோ? எம்பெருமானார் இனிதாக நிர்வஹித்துப் பொருளருளிச்செய்து வைத்திருக்க நாம் ஏன் வருந்தவேண்டும்?' என்றுசொல்லி அப்பொருளையும் வெளியிட்டார்; அதாவது—அரக்கர் குலப்பாவை தன்னை மூக்கரிந்த விறலோன் என்றதனால், பெருமாளுக்கும் பிராட்டிக்கும் நேர்ந்த பிரிவு தெரிவிக்கப்படுகிறது: இராவணன் ஸீதையைக் கவர்ந்து சென்றதற்கு மூலகாரணம் சூர்ப்பணகையின் அங்கபங்கமேயாதலால் இந்த அங்கபங்கத்தைச் சொல்லுகிற முகத்தால் ஸ்ரீராமஸீதைகளின் பிரிவுதான் நினைவுக்கு வரக்கூடியது. ஆகவே, முன்பு இருவருமாய்ப் புறப்பட்டுச்சென்று

ஒருவரையொருவர் பிரிந்து பலநாள் வருந்திக்கிடக்க நேர்ந்ததே!; அவ்விதமாக இப்போதும் இவர்களுக்கு ஏதேனும் விதிவசத்தாலே பிரிவு நேர்ந்து பரிதபிக்க ப்ராப்தமாகுமோவென்று அஞ்சுகின்றேன்—என்பதாம்.

"மூக்கரிந்த விறலோன்" என்று பெருமாளை எப்படி சொல்லலாம்? மூக்கரிந்த செயல் இளையபெருமாளதன்றோவெனில்; ஆயினும் இதனைப் பெருமாள் செயலாகவே கூறுதலுமுண்டு. "சூர்ப்பணகாவைச் செவியொடுமூக்கு, அவளார்க்க அரிந்தானைப் பாடிப்பற" என்றார் பெரியாழ்வாரும். வால்மீகி முனிவர் இளையபெருமாளைச் சொல்லுமிடத்து "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்றார்; அதாவது லக்ஷ்மணனை ஸ்ரீராமனது வலக்கையாகக் கூறினர்; ஆதலால் சூர்ப்பணகாபங்கத்தைப் பெருமாளது செயலாகக் கூறுவது பொருந்துமென்க; தன்கையாலேயன்றோ தண்டித்தது. இராமபிரான் ஏவுதற் கருத்தாவாதலாலும் பொருந்தும்.

வெஞ்சொல் நங்காய் — 'வெஞ்சொல்' என்பதை நங்கைக்கு விசேஷண மாக்கியுரைக்கலாம். வெம்மை— விருப்பத்துக்கும் பேராகையாலே, மநோஹர மான பேச்சைப் பேசுகின்ற பெண்ணே! என்றவாறு. அன்றியே, 'வெஞ்சொல்' என்பதைத் தனிச்சொல்லாகப் பிரித்து, 'இதுவெவ்விய சொல்லாக இருக்கின் றது' என்றுரைப்பாருமுளர்.

பஞ்சிய— 'பஞ்சு' என்பது பெயர்ச்சொல்லாயினும் அதை வினைப்பகுதி வடிவமாகக் கொண்டு அதன்மேல் விகுதியேற்றிப் 'பஞ்சிய' எனப்பட்டது; 'கடைக்கணித்தான்' இத்யாதிப் பிரயோகங்கள்காண்க. செம்பஞ்சுச்சாறு ஊட்டப்பெற்ற மெல்லடி என்றுரைப்பாருமுளர்.

பரக்கழிந்து— 'பரக்கு அழிந்து' என்றுபிரித்து, 'பரக்கு' என்பதற்கு அடக்கமென்று பொருள்கூறி, 'அடக்கங்கெட்டு' என்றுரைப்பர் சிலர். அது நிற்க: கம்பராமாயணத்தில் கிஷ்கிந்தாகாண்டத்து வாலிவதைப்படலத்தில்— (79) "அரக்கரோரழிவு செய்து கழிவரேலதற்கு வேறோர், குரக்கினத்தரசைக் கொல்ல மனுநெறி கூறிற்றுண்டோ?, இரக்கமெங்குகுத்தாயென்பால் எப்பிழை கண்டாயப்பா, பரக்கழி யிது நீபூண்டாற் புகழையார் பரிக்கற்பாலார்?" என்ற செய்யுளில் 'பரக்கழி' என்னும் பதத்தின் பிரயோகம் காண்கிறது. அவ்விடத்து உரையில், "பரக்கழி—பெருநிந்தை; பெருந்தீங்குமாம்" என்றிருக்கக் காண் கிறோம். ஆகவே, இங்கே 'பரக்கழிந்து' என்பதற்கு— 'பெரும்பழி விளையப் பெற்று' என்று பொருள்கொள்ளுதல் பொருந்தும். நாச்சியார் திருமொழி யில் (12-3.) "கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானோர் மகனைப் பெற்ற" என்றவிடத்தில், "பரக்கழிக்கை—பழிவிளைக்கை" என்பது வியாக்கி யானம்.

பணை—'பண்ணை' என்பதன் தொகுத்தல்; தடாகம். 'பணை' என்றே கொண்டு, மூங்கிற்புதர் என்னவுமாம். ... ... ... (௩)

ஏதவன் தொல்பிறப்பு? இளையவன் வளையூதி * மன்னர்
தூதுவனாயவனூர் சொலுவீர்! சொல்லீ ரறியேன் *
மாதவன்தன் துணையாநடந்தாள் தடஞ்சூழ் புறவின் *
போதுவண்டாடு செம்மல் புனலாலி புகுவர்கொலோ? (ச)

| | |
|---|---|
| அவன் | (என் மகளைக் கொண்டு போன) அவனுடைய |
| தொல் பிறப்பு | பழைய ஜன்மம் |
| ஏது | க்ஷத்ரிய ஜன்மமோ? இடைச் சன்மமோ? யாது கொல்? |
| அறியேன் | நானறிகின்றிலேன்; |
| இளையவன் | குமரனாயும் |
| வளை ஊதி | சங்கை ஊதுமவனாயும் |
| மன்னர் தூதுவனாயவன் | பாண்டவர்களுக்காகத் தூதுசென்றவனாயுமுள்ள அவனுடைய |
| ஊர் | ஊரையும் |
| அறியேன் | அறிகின்றிலேன்: |
| சொல்லுவீர் | சொல்லத் தெரிந்தவர்களே! |
| சொல்லீர் | சொல்லுங்கள்; |
| | (என்மகளோ வென்னில்) |
| மாதவன் தன் துணை ஆ | திருமால் தனக்குத் துணையாகப் பெற்று |
| நடந்தாள் | (அவனோடு கூடச்) சென்றாள்; |
| | (சென்ற இருவரும்) |
| தடம் சூழ் புறவின் | தடாகங்கள் சூழ்ந்த சோலைகளையுடையதும் |
| போது | பூக்களிலே |
| வண்டு ஆடு | வண்டுகள் களித்துக் கூத்தாடப் பெற்ற |
| செம்மல் | பெருமைதங்கிய |
| புனல் | தீர்த்தங்களை யுடையதுமான |
| ஆலி | திருவாலியிலே |
| புகுவர் கொலோ | சென்று சேருவர்களோ? |

* * *—பரகாலதிருத்தாயார் இங்ஙனே தெருவிலேநின்று அலற்றுவதைக் கேட்டு ஓடிவந்த மாதர்களிற் சிலர் 'அம்மா! உன் மகளைக்கொண்டுபோனவன் என்ன ஜாதியிற் பிறந்தவன்? எவ்வூரிலிருந்து வந்தவன்?' என்று கேட்க; நானொன்றுமறியேன்; "ஒருத்திமகனாய்ப்பிறந்து ஓரிரவிலொருத்திமகனாயொளித்து வளர" என்கிறபடியே, யதுகுலத்திலே பிறந்து இடைக்குலத்திலே வளர்ந்தவனுமவன்; ஆகையால் அவனை நான் க்ஷத்ரியகுலத்தவனென்பேனோ, இடைக்குலத்தவனென்பேனோ? எனக்குச் சொல்லத்தெரியாது; நீங்களறிவீர்களாகில் சொல்லுங்கள். அவனுடைய ஊர் எதுவென்று கேட்கிறீர்கள்; அதுவும் எனக்குத்தெரியாது; "விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர் வேங்கடம், மண்ணகரம் மாமாடவேளுக்கை—மண்ணகத்த, தென்குடந்தை தேனார் திருவரங்கந் தென்கோட்டி" என்றும் "கண்டியூரரங்கம் மெய்யம் கச்சி பேர்மல்லை" என்றும் சொல்லப்படுகிற ஊர்கள் ஒன்றா இரண்டா? பல்லாயிரமானால் எந்த வூரென்று நான் சொல்லுவேன்; உங்களால் நிஷ்கர்ஷித்துச் சொல்லமுடியுமானால் சொல்லுங்கள். ஆனால், அவனைப்பார்க்கும்போது நான் தெரிந்துகொண்டவை சிலவுண்டு; பாண்டவர்கட்காகத் துரியோதநாதியரிடம் தூதுபோனவனும் பாரதப்போரில் தனது பாஞ்சஜந்யமென்னும் சங்கை வாயிலே

வைத்து ஊதினவனும் இவன்றான் என்று தெரிந்துகொண்டேன். யௌவந புருஷனுயிருப்பதை நேரில் கண்டேன். மற்றைப்படி அவனது குலமும் ஊரும் நானறிகின்றிலேன் என்கிறாள் முன்னடிகளில். 1. "இன்னாரென்றறியேன் அன்னே ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய வடிகளை இன்னாரென் றறியேன்" என்று மகள் சொல்லுவதுபோலவே தாயும் சொல்லுகிற அழகு காண்மின். 'அவனுடைய பிறப்பும் ஊரும் அறியேன்' என்று சொல்லுகிற விதன் கருத்து யாதெனில்; "அஜாயமாநோ பஹுதா விஜாயதே" என்றும் 2. "எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர் தலைவா!" என்றும் சொல்லுகிறபடியே பலவகைப்பட்ட பிறவிகளிலும் பிறந்தவனும், 3. "கரந் தெங்கும் பரந்துளன்" என்கிறபடியே ஸர்வவ்யாபியாயு முள்ளவன் என் மகளைக் கொண்டுபோனா னென்பதாம்.

அப்பெருமான் வந்து தன்மகளை யழைக்கும்போது 'திருவாலிக்குப் போவோம், வா' என்று சொன்னசொல்மாத்திரம் தாயின் செவியிலே விழுந் தமையால் இருவருமாகத் திருவாலிக்குச் செல்லுகின்றனர் என்பதை யறிந்து பின்னடிகள் பேசுகின்றாள். உத்தேசித்த திருவாலிக்கே சென்றிருப்பார்களோ? அன்றி, ஒருவர்க்கொருவர் மயங்கி வேறு எங்கேனும் புக்கிருப்பார்களோ வென்கிறாள்.

மாதவன்தன் துணையா நடந்தாள்—என்மகள் தனியே புறப்பட்டுச்சென் றிருப்பளாகில் கவலைப்படவேமாட்டேன்; வழியே சென்று வயலாலியிற் சேர்ந்தே விடுவள்; மாதவனைத் துணையாகக்கொண்டு நடந்தாளாகையாலே அவனால் இவள் மயங்கி, இவளால் அவன் மயங்கி ஆக இருவருடைய மயக்கத் தாலும் என்ன அபாயம் விளைந்திருக்குமோவென்று கவலைகொள்கின்றே னென்றாளாயிற்று. ஆறு நீந்தவேண்டுவார் கருங்கல்லை மடியிலே கட்டிக்கொண்டு இழிவதுபோலன்றோ வழிநடக்கவேண்டுவார் மாதவனைத் துணைகொண்டு புறப் படுவது—என்பது உள்ளுறையுங்கருத்து. மாதவன்—திருமகள் கொழுநன் என்றபடி. 4 "சுவையன் திருவின்மணாளன்" என்கிறபடியே பிராட்டி பக்க லிலே ரஸிக்யம் சிக்ஷித்துக்கொண்டவனாகையாலே அவனோடு வழிநடக்கமுடி யுமோ? அவன் சொல்லும் ஒவ்வொரு இன்ப வார்த்தையிலும் மதிகெட்டு மூர்ச்சிக்க வேண்டியதாகுமன்றோ என்றவாறு. செம்மல்-பெருமை, சிறப்பு. (௬)

தாயெனையென் றிரங்காள் தடந்தோளி தனக்கமைந்த *
மாயனை மாதவனை மதித்தென்னை யகன்றவிவள் *
வேயனதோள் விசிறிப் பேடையன்ன மெனநடந்து *
போயின பூங்கொடியாள் புனலாலி புகுவர்கொலோ? (௭)

---

1. பெரிய திருமொழி 10—10—9. 2. திருவிருத்தம்—1.
3. திருவாய்மொழி 1—1—10. 4. திருவாய்மொழி 1—9—1.

| | | | |
|---|---|---|---|
| தட தோளி இவள் | பெரிய தோள்களையுடைய என்மகள் | வேய் அன தோள் விசிறி | மூங்கில்போன்ற தோள்களை வீசிக்கொண்டு |
| எனை | என் விஷயத்தில் | பெடை அன்னம் என நடந்து போயின | அன்னப் பேடைபோல் நடந்து சென்ற |
| தாய் என்று இரங்காள் | பெற்றதாய்என்றும் இரக்கங் கொள்ளவில்லை ; | | |
| தனக்கு அமைந்த | தனக்குத் தகுந்த | பூ கொடியாள் | அழகிய கொடிபோன்ற என்மகளும் (அவனும்) |
| மாயனை மாதவனை | ஆச்சரியனான திருமாலை | | |
| மதித்து | கொண்டாடிக்கொண்டு | புனல் ஆலி | நீர்வளம் மிகுந்த திருவாலியிலே |
| என்னை அகன்ற | என்னை விட்டு நீங்கினவளாய் | புகுவர் கொலோ | சென்று சேருவர்களோ ? |

* * *—1. "ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால், திருமகள்போல வளர்த்தேன் செங்கண்மால் தான் கொண்டுபோனான்" என்றாற்போலே பெற்றதாய் வயிறெரியக்கூடுமென்பது என்மகளுக்குத் தெரியாமையில்லை ; தெரிந்தும், 'அப்படித்தான் வயிறெரியட்டுமே ; நமக்கு என்ன கெடுதி' என்று ஈரமற்றநெஞ்சினளாய் அகன்று போய்விட்டாள் ; நம்மைப்பெற்று வளர்த்த தாய் நம்மைப்பிரிந்து பரிதாபமுறாதபடி நாம் நடந்துகொள்ள வேணுமேயென்று சிறிதும் இரக்கங்கொண்டாளில்லை: தன்னைவந்து அழைத்தவன் ஆச்சரியமான குணங்களோடும் சக்தியோடும் கூடினவன் என்றும், பெரிய பிராட்டியாரிடத்தில் பழகி ராவஸிகயத்தில் கைதேர்ந்தவனென்றும் அவனுடைய பெருமையை மதித்து உடன்சென்றாளே யொழிய, நான் வருந்துவேனென்பதைச் சிறிதும் நினைத்திலள். அவள் புறப்பட்டு நடந்துசென்ற போதையழகை நினைக்க நினைக்க என் வயிற்றெரிச்சல் ஆறவில்லை ; மிகவும் உல்லாஸமாக நடப்பவள்போலத் தோள்களை வீசிக்கொண்டு, 'அன்னப்பேடைதான் நடந்து செல்லுகின்றதோ' என்னலாம்படியாகச் சென்ற அழகை என்சொல்லுவேன். என்னை வருத்தத்திற்கு ஆளாக்கிவிட்டுப் போனாலும் போகட்டும் ; சேரவேண்டுமிடத்தில் சுகமாகச் சென்று சேர்ந்தாளாகிலும் ஸந்தோஷமே ; தனக்கமைந்த மாயவனை மாதவனைப் பின் செல்லுகின்றாளாகையாலே பரஸ்பரம் மயங்கி வழி தப்புவர்களோ வென்று கவலைப்படுகின்றேனென்றாளாயிற்று.

'என்னை' என்பது 'எனை' என்று தொக்கிக்கிடக்கிறது. .... (௫)

என்துணையேன் றெடுத்தேற் கிறையேனு மிரங்கிற்றிலள் *
தன்துணையாய வென்தன் தனிமைக்கு மிரங்கிற்றிலள் *
வன்துணை வானவர்க்காய் வரம்செற் றரங்கத்துறையும் *
இன்துணைவ னொடும்போய் எழிலாலி புகுவர்கொலோ ? (௬)

1. பெரியாழ்வார் திருமொழி 3—8—4.

(என் மகளானவள்)

என் துணை என்று எடுத்தேற்கு { 'இவள் நமக்கு உதவியாயிருப்பள்' என்றுவளர்த்து வந்த என் விஷயத்தில்

இறையேனும் கொஞ்சமாகிலும்

இரங்கிற்றிலள் } இரக்கங்கொண்டாளில்லை ;

தன் துணை ஆய என்தன் தனிமைக்கும் { (இதுவரையில்) தனக்கு உதவியாயிருந்த நான் தனியே யிருப்பதற்காகவும்

இரங்கிற்றிலள் } இரக்கங் கொண்டாளில்லை;

வானவர்க்கு தேவர்களுக்கு

வன் துணை ஆய் } சிறந்த துணையாய்

(இலங்கைக்குச் சென்று)

வரம் செற்று { (ராவணாதிகளின்) வர பலத்தை அடக்கி

(அந்த விடாய் தீர)

அரங்கத்து உறையும் { கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற

இன் துணைவனொடும்போய் { நல்ல துணைவனான திருமாலோடே சென்று

(இருவரும்)

எழில் ஆலி புகுவர்கொலோ—.

* * *—உலகத்தில் மக்களைப்பெற்றுவளர்ப்பது ஏதுக்காக? நாம் தளர்ந்திருக்குங் காலத்திலே நமக்குத் துணையாவரென்றே. அப்படியிருக்கவும், என் மகள் எனது ஆர்த்தியைக் கணிசியாமலும், பெற்றுவளர்த்த தாயைத் தனிப்பட விட்டுப்போகிறோமேயென்று விசாரப்படாமலும் விட்டொழிந்தாள். அவளோ பெரிய துணைவனைப் பிடித்துக்கொண்டாள்; ஆச்ரிதர்கட்காகத் தன் உடம்பை அம்புகட்கு இரையாக்கிக் காரியம் செய்யுமவன் என்று அவன் திறத்திலே யீடுபட்டு உடன் சென்றாள்; திருவரங்கம் பெரியகோயிலில் திருக்கண்வளர்ந்தருளும் பெருமான் வந்து அழைத்தால் போகாதிருக்கலாமோ வென்றும்; இவனேயன்றோ நமக்கு இனிய துணைவனென்றும் நினைத்துச் சென்று விட்டாள்; செல்லிற்செல்லுக: இருவரும் வழியே சென்று வயலாலியிற் சேர்ந்திருக்கவேணுமே; அப்படி சேர்ந்திருப்பர்களோ, சேராதிருப்பர்களோ வென்று கவலைப்படுகின்றாள்.

வரம் செற்று=இராவணன் நெடுநாள் தவம்புரிந்து வலியவரங்கள் பெற்றிருந்ததனால் 'நமக்கு அழிவில்லை' என்று செருக்குக்கொண்டு மனம்போனபடி செய்து திரிந்தான்; அப்படிப்பட்டவனைத் தண்டிக்கவேண்டி அவன் பெற்றிருந்த வரத்தில் அகப்படாத மானிடவடிவமெடுத்துவந்து கொன்றொழித்ததனால் 'வரஞ் செற்று' எனப்பட்டது; பெற்றவரம் பாழாம்படியாக என்கை. (௬)

அன்னையு மத்தனுமேன் றடியோமுக் கிரங்கிற்றிலள் *
பின்னைதன் காதலன்தன் பெருந்தோள்நலம் பேணினளால் *
மின்னையும் வஞ்சியையும் வென்றிலங்கு மிடையாள்நடந்து *
புன்னையு மன்னமுஞ்சூழ் புனலாலி புகுவர்கோலோ ? (எ)

மின்னையும் — மின்னற்கொடியையும்
வஞ்சியையும் — வஞ்சிக்கொடியையும்
வென்று — தோற்கடித்து
இலங்கும் — (மிகவும் ஸூக்ஷ்மமாக) விளங்காநின்ற
இடையாள் — இடையை யுடையளான என் மகள்,
அன்னையும் அத்தனும் என்று — தாய் தகப்பனென்று கூட
அடியோமுக்கு — எங்கள் விஷயத்தில்
இரங்கிற்றிலள் — தயைபண்ணினாளில்லை;
பின்னைதன் காதலன்தன் — பின்னை மணாளனை திருமாலினது
பெரு தோள் நலம் பேணினள் — பெருமை தங்கிய தோள்களோடே அணைந்து பெறும் ஸுகத்தையே விரும்பினவளாய்
நடந்து — (அவனோடு கூட) நடந்து செல்ல,
(அவ்விருவரும்)
புன்னையும் அன்னமும் சூழ் — புன்னைப் பொழிலும் அன்னப் பறவைகளும் சூழ்ந்த
புனல் — நீர்வளம் பொருந்திய
ஆலி — திருவாலியிலே
புகுவர்கொலோ — சென்று சேருவர்களோ ?.

* * *—போகிறவள் தாய்தந்தையரிடத்து ஒரு வாய்ச்சொல் சொல்லிவிட்டுப்போகலாமே; அதுவுஞ் செய்திலள்; தனக்குத் தாய் ஒருத்தி, தந்தையொருவன் இருப்பதாகவே நெஞ்சில் கொண்டிலள். எங்களை இவ்வளவு அலக்ஷியஞ்செய்துவிட்டுப் போவதற்குக் காரணமுண்டு; நப்பின்னைப்பிராட்டியைக்கைப்பிடித்த பெருமான்றானே நேரேவந்து அழைத்தமையால் அவனுடைய தோளழகிலே தோய்ந்து எம்மை மறந்தாள். 1. "சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய் தந்தையுமவரே யினியாவாரே" என்று உலகங்கட்கெல்லாம் தாய்தந்தையானவனுடைய தோளோடே அணையப் பெறில் பிராகிருதர்களான தாய்தந்தையர் நமக்கு ஏதுக்கு? என்று அலக்ஷியஞ் செய்தனள் போலும்; செய்திடுக; அவள்தான் நடந்து செல்லக்கூடியவளோ? மின்னல், வஞ்சிக்கொடி என்னுமவற்றிற் காட்டிலும் நுட்பமான இடையை யுடையவிவள் நடந்து செல்லத்தகுந்தவளன்றே. (அழைத்துக்கொண்டு போகிறவன் பெரியதிருவடியின் மேலே வைத்துக்கொண்டு போகலாகாதோ? என்பது உள்ளுறை.) நடந்துபோனாலும் போகட்டும்; இருவராய்ச் செல்லுகிற விவர்கள் உத்தேசித்த இடத்திற்சென்று சேர்ந்திருப்பர்களா? என்கிறாள்.

"அடியோமுக்கு" என்றது—தேவதேவ திவ்ய மஹிஷியாகப்பெற்ற பெருமேன்மையில் ஈடுபட்டதனாலென்க.

புன்னையு மன்னமுஞ் சூழ் புனலாலி=ஊர்வெளியே சோலைவாய்ப்பையும் நீர்வாய்ப்பையும் நோக்கி அங்கே கால்தாழ்ந்து மயங்கிக்கிடந்து ஏதேனும் அபாயத்துக்கு இலக்காகாதே கண்ணை மூடிக்கொண்டு உள்ளேபோய்ச்சேர வேணுமே யென்கிறாள்போலும். .... .... .... (எ)

1 திருவாய்மொழி 5—1—8.

முற்றிலும் பைங்கிளியும் பந்தூசலும் பேசுகின்ற *
சிற்றில் மென்பூவையும் விட்டகன்ற செழுங்கோதைதன்னை *
பெற்றிலேன் முற்றிழையைப் பிறப்பிலிபின்னே நடந்து *
மற்றெல்லாம் கைதொழப்போய் வயலாலி புகுவர்கொலோ? (அ)

| | |
|---|---|
| முற்றிலும் | (விளையாட்டுக் கருவியான) சிறுமுறத்தையும் |
| பைங்கிளியும் | பச்சைக் கிளியையும் |
| பந்தும் | பந்தையும் |
| ஊசலும் | ஊஞ்சலையும் |
| சிற்றில் பேசுகின்ற | சிறிய கூட்டிலிருந்து பேசுகிற |
| மென் பூவையும் | மெல்லிய நாகணவாய்ப் பறவையையும் |
| விட்டு அகன்ற | விட்டிட்டு வெளியேறின |
| செழு கோதை தன்னை | அழகிய பூமாலை போன்றவளும் |
| முற்று இழையை | நிறைந்த ஆபரணங்களை யணிந்தவளுமான என் மகளை |
| பெற்றிலேன் | நான் கண்ணால் காணப்பெற்றிலேன்; |
| மற்று எல்லாம் கைதொழ | எல்லோருங் கண்டு ஸேவிக்கும்படியாக |
| பிறப்பு இலி பின்னே நடந்து போய் | நித்யனான எம்பெருமான் பின்னே நடந்துசென்று |
| (இருவரும்) | |
| வயல் ஆலி புகுவர்கொலோ— . | |

* * *—என்மகள் பருவம் முற்றினவளல்லள்; நேற்றுவரையில் விளையாட்டுக்கருவிகளான முற்றில், கிளி, பந்து, ஊசல், பூவைப்பட்சி முதலியவற்றை ஒரு நொடிப்பொழுதும் விட்டுப்பிரியாதிருந்தவள். இப்படிப்பட்டவிவள் இன்புறுமிவ் விளையாட்டுடையானான பெருமான் வந்தழைத்தவாறே தனது விளையாட்டுக் கருவிகளையெல்லாம் விட்டொழிந்து அவனோடு விளையாடு வதையே தனக்கு ப்ராப்தமாகக்கொண்டு உடன் சென்று விட்டாள். இருவருமாய்ச்செல்லும்போது வழியிடையே மஹோத்ஸவமாகவன்றோ நிகழப்போகிறது; இருவரையும் நோக்கிக் கைகெடுத்துக் கும்பிடாதார் ஒருவரேனுமிருப்பரோ? பாவியேனாகிய நானொருத்தியேயன்றோ இழந்தவள்; மற்றையோர் இழக்கமாட்டார்களே; அனைவருங் கைதொழச் செல்லுமிவர்கள் பாங்காக வயலாலியிற்சென்று சேரவேணுமே யென்கிறாள்.

முற்றில்—சிறுமுறம்; சிறு பெண்கள் விளையாட்டாகச் சிற்றிலிழைப்பதற்கு மணல்கொழிக்கும் கருவி இது; 'முச்சல்' என்று உலகவழக்குச்சொல். சிறு + இல், சிற்றில். பறவை வஸிக்கும் சிறிய கூட்டைச் சொல்லுகிறது இங்கு. செழுங்கோதை தன்னை—'கோதை' என்று பூமாலைக்குப் பெயர்; பூமாலைபோல் ஸுகுமாரமான தன்மைவாய்ந்தவள்; நெஞ்சைக்கவருமவள் என்கை.

"மற்றெல்லாங் கைதொழப் போய்" என்றவிடத்துப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானங்காண்மின்—"தாயான குற்றத்தாலே எனக்கு ஒருத்திக்குமிறே தொழவொண்ணாதது; அல்லாதார்க்கெல்லாம் தொழுது பின்னே போக

லாமிறே." என்று. 'மற்றெல்லாரும்' என்னுமல் 'மற்றெல்லாம்' என்கையாலே, அஃறிணைப்பொருள்களோடு உயர்திணைப்பொருள்களோடு வாசியற ஸகலமும் தொழுமென்றவாறு. ... ... ... (அ)

காவியங்கண்ணி யெண்ணில் கடிமாமலர்ப் பாவையொப்பாள் *
பாவியேன் பெற்றமையால் பணைத்தோளி பரக்கழிந்து *
தூவிசே ரன்னமன்ன நடையாள் நெடுமாலொடும்போய் *
வாவியந் தண்பணைசூழ் வயலாலி புகுவர்கொலோ? (௯)

| | |
|---|---|
| காவி அம் கண்ணி { நீலோற்பலமலர் போன்று அழகிய கண்களை யுடையவளும், | பாவியேன் பெற்றமையால் { பாவியான என்னுடைய வயிற்றிற் பிறந்த குற்றத்தினால் |
| எண்ணில் கடி மா மலர் பாவை ஒப்பாள் { ஆலோசிக்குமிடத்தில், பெரிய பிராட்டியாரோடு ஒப்பாகச் சொல்லத் தகுந்தவளும் | பரக்கழிந்து பெரும்பழிக்கு இலக்காகி |
| | நெடு மாலொடும் போய் { ஸர்வேச்வரனோடு கூடச்சென்று (இருவரும்) |
| தூவி சேர் அன்னம் அன்ன நடையாள் { இறகையுடைய அன்னப்பேடையின் நடைபோன்ற நடையையுடையவளும் | வாவி நடைவாவிகளும் |
| | அம் தண் பணை { அழகிய குளிர்ந்த தடாகங்களும் |
| பணை தோளி { மூங்கில் போன்ற தோள் களையுடையளுமான என்மகள் | சூழ் சூழ்ந்த |
| | வயல் ஆலி புகுவர்கொலோ—. |

* * *—என்மகளை என்மகளாக நினைத்திரேன்மின்; ஸாக்ஷாத் பெரிய பிராட்டியாரோடு ஒத்தவளாக நினைத்திருங்கள் என்கிறாள் முதலடியால். 1. "பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்" என்பது நம்மாழ்வார் திருத்தாய் பாசுரம்; இத்திருத்தாய் "கடிமாமலர்ப்பாவை யொப்பாள்" என்கிறாள்; "கந்தல் கழிந்தால் ஸர்வர்க்கும் நாரீணாம் முத்தமையுடைய அவஸ்தை வரக்கடவதாயிருக்கும்" என்பது ஸ்ரீவசநபூஷணம்: வந்தேறியான அஜ்ஞாநம் முதலிய தோஷங்கள் கழிந்து விட்டால் ஸகல ஆத்மாக்களுக்கும் பெரிய பிராட்டியாருடைய நிலை தன்னடையே வந்துவிடும் என்பது இதன் கருத்து. எம்பெருமானொருவனுக்கே உரிமைப்பட்டிருக்கை, அவனொருவனையே சரணமாகப் பற்றியிருக்கை, அவனொருவனையே போக்யமாகக் கொண்டிருக்கை, அவனொருவனாலேயே தான் நிர்வஹிக்கத் தகுந்திருக்கை, ஸம்ச்லேஷத்தில் ஆறியிருக்கை, விச்லேஷத்தில் ஆறியிராமை என்னுமிவ்வாறுபடிகளாலே அவித்யாதி தோஷங்கள் மிச்சமின்றிக் கழிந்து பரிசுத்தமாகப்பெற்ற ஆத்மஸ்வரூபத்துக்கு இந்த ஆறுபடிகளாலும் நிறைந்துள்ள பிராட்டியோடு ஸாம்யம் இயற்கையாகவே உண்டாயிருக்குமன்றோ.

பாவியேன் பெற்றமையால்=இவள் திருப்பாற்கடலிலாவது தாமரைமலரிலாவது பிறந்திருப்பாளாகில் அவன் திருமார்பை விட்டுப் பிரியாதே இருந்

திருக்கக்கூடும்; அங்ஙனன்றியே பாவியேனான என் வயிற்றிலே வந்து பிறந்தனளாதலால் "தந்தையுந்தாயு முற்றாரும்நிற்கத் தனிவழிபோயினாள்" என்று நால்வர்வாயிலே பழிச்சொல் புறப்படும்படியாகப் போகநேர்ந்தது இவளுக்கு என்கிறாள்.

இப்படி, ஸீதாபிராட்டி சக்ரவர்த்தி திருமகனுடனே சென்றதுபோலே இருவராய்ச் சென்றவிவர்கள் திருவாலித்திருப்பதியினுள்ளே சென்று சேர்ந்திருப்பர்களோ, அல்லது ஊர்ப்புறத்தே வாவித்தடங்களிலே ரமித்து மயங்கிக் கிடப்பர்களோ வென்கிறது பின்னடிகளில்.

பரக்கழிந்து=மூன்றாம்பாட்டினுரை காண்க. வாவி—'வாபீ' என்னும் வடசொல் விகாரம். ... ... ... ... (௯)

தாய்மனம் நின்றிரங்கத் தனியே நெடுமால்துணையா *
போயின பூங்கொடியாள் புனலாலி புகுவரென்று *
காய்சின வேற்கலிய னொலிசெய் தமிழ்மாலைபத்தும் *
மேவிய நெஞ்சுடையார் தஞ்சமாவது விண்ணுலகே. (௧௦)

| | |
|---|---|
| தாய் | தாயானவள் |
| நின்று மனம் இரங்க | வயிறெரியா நிற்க |
| தனியே | தாயினிடம் சொல்லாமல் தன் இஷ்டப்படியே |
| நெடு மால் துணை ஆ | ஸர்வேச்வரனைத் துணையாகக்கொண்டு |
| போயின | புறப்பட்டுப்போன |
| பூ கொடியாள் | அழகிய கொடிபோன்ற என்மகளும் (அவனும் ஆகிய இருவரும்) |
| புனல் ஆலி புகுவர் என்று | நீர்வளம் மிக்க திருவாலியிலே சென்று சேர்ந்திருப்பர்களோ என்று சிந்தைப்படுவதாக |
| காய் சினம் வேல் கலியன் | எதிரிகளைத் தபிக்கச் செய்கின்றகோபத்தையும் வேலையுமுடையரான திருமங்கையாழ்வார் |
| ஒலிசெய் | அருளிச்செய்த |
| தமிழ் மாலை பத்தும் | இத்தமிழ்ப் பாமாலை பத்தையும் |
| மேவிய நெஞ்சு உடையார் | (கற்க) விரும்பும் மனமுடையவர்கட்கு |
| விண் உலகு | பரமபதம் |
| தஞ்சம் ஆவது | ப்ராப்யபூமியாம். |

* * *—"நல்லதோர் தாமரைப்பொய்கை நாண்மலர்மேற் பனிசோர, அல்லியுந்தாது முதிர்ந்திட்டு அழகழிந்தாலொத்ததாலோ, இல்லம் வெறியோடிற்றாலோ" என்றாற்போலே தாய் வயிறெரிந்து சொல்லும்படியாக விட்டுப்பிரிந்து வயலாலிமணவாளன் பின்னே நடந்துசென்ற பரகாலநாயகியைப்பற்றிக் கவலைப்பட்டுப்பேசின இத்திருமொழியை ஓதவல்லவர்கள் விண்ணுலகத்தே நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்களென்றவாறு.

"நெடுமால் துணையா" என்றுநிற்க, "தனியே" என்றது—பிறந்தகத்து உறவுமுறையாருடனே புக்ககம் போகவேண்டியது ப்ராப்தமாயிருக்க, அங்ஙனம் போகாமல் என்றபடி. புகுவரென்று=புகுவர்கொலோவென்று. ஈற்றடி

யில், "மேவிய நெஞ்சுடையார்க்கு" என்றும் பாடமுண்டென்ப. "தஞ்சமாவது விண்ணுலகே" என்றவிடத்து வியாக்கியானம்—"தனிவழியே போனுளென்று தாயார் பயப்படப் போகவேண்டா; ஆதிவாஹிக கணத்தோடே தானே வழி காட்டிக் கொடுபோம்." .... .... ... ... (௧௦)

அடிவரவு:—கள்வன் பண்டு அஞ்சுவன் ஏதலன் தாய் என்துணை அன்னையும் முற்றிலும் காவி தாய்மனம் நந்தா.

ஏழாந்திருமொழி உரை முற்றிற்று.



ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றும் பத்து—எட்டாந்திருமொழி,

# நந்தாவிளக்கே.



அவதாரிகை:—இது முதலாகத் திருநாங்கூர்த் திருப்பதிகள் பதினொன்றையும் ஒவ்வொரு திருமொழியிலே ஒவ்வொரு திருப்பதியாக மங்களாசாஸநம் பண்ணுகிறார். திருநாங்கூரென்பது பெரிய க்ஷேத்ரம்; "நாங்கை நாலாயிரம்" என்ற பழமொழியின்படி நாலாயிரங்குடிகள் வாழ்ந்த க்ஷேத்ரமாதலால் அவரவர்கட்கு அணித்தாக எம்பெருமான் பதினொரிடங்களில் ஸந்நிதி பண்ணலாயிற்று. அவற்றுள், திருமணிமாடக்கோயிலென்னுந் திருப்பதியை மங்களாசாஸநஞ் செய்வதாம் இத்திருமொழி.

நந்தாவிளக்கே! அளத்தற்கரியாய்!
நரநாரணனே! கருமாமுகில்போ
லெந்தாய்!*எமக்கே யருளாயெனநின்
றிமையோர்பரவுமிடம்*எத்திசையும்
கந்தாரமந்தே னிசைபாடமாடே
களிவண்டமிழற்ற நிழல்துதைந்து *
மந்தாரநின்று மணமல்குநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே! (௧)

நந்தா விளக்கே { 'நித்யமாய் ஸ்வயம்ப்ரகாசமான ஞானத்தை ஸ்வரூபமாகவுடையவனே!

அளத்தற்கு அரியாய் } அளவிட முடியாதவனே!

நரநாரணனே { நரநாராயணவதாரம் செய்தருளினவனே!

கரு மா முகில் போல்எந்தாய் { கறுத்துப் பெருத்த மேகம் போன்ற எம்பெருமானே!

எமக்கே அருளாய் என { எங்களுக்கே அருள் செய்ய வேணும்' என்று சொல்லி

| | | | |
|---|---|---|---|
| இமையோர் நின்று பரவும் இடம் | தேவர்கள் இந்நிலத்தில்வந்து நின்று துதிசெய்யுமிடமானதும், | மிழற்ற | ஆலாபனைபண்ணவும் |
| அம் தேன் | அழகிய தேன்சாதி வண்டுகள் | மந்தாரம் | பாரிஜாதமரங்கள் |
| எத்திசையும் | எல்லாவிடங்களிலும் | நிழல் துதைந்து நின்று | நிழல்தா நெருங்கி நின்று |
| கந்தாரம் இசை பாட | தேவகாந்தாரி ராகம் பாடவும் | மணம் மல்கும் | பரிமளம் நிறைந்திருக்கப் பெற்றதுமான |
| களி வண்டு | களிவண்டு சாதியிற்பிறந்த வண்டுகள் | நாங்கூர் | திருநாங்கூரிலுள்ள |
| மாடே | பக்கங்களில் | மணிமாடக் கோயில் | மணிமாடக் கோயிலென்னுந் திருப்பதியை |
| | | | என் மனனே! வணங்கு—. |

* * *—பிரமன் முதலிய தேவர்கள் வந்து திரண்டு பலபடியாகத் தோத்திரங்கள் பண்ணி, 'எனக்கே அருள்செய்யவேணும், எனக்கே அருள்செய்யவேணும்' என்று ஒவ்வொருவரும் தனித்தனியே பிரார்த்திக்குமாறு காட்சி தந்தருளுமிடமான மணிமாடக்கோயிலை மனமே! வணங்கு என்பதாம்.

**நந்தாவிளக்கே!**=ஒருநாளும் அணையாத விளக்கே! என்கை; (நந்துதல்—அழிதல்.) ஒளியினாலே விளங்கும்பொருள் விளக்கு எனப்படும்; அதுபோல எம்பெருமான் நித்யமாய் ஸ்வயம்ப்ரகாசமான ஜ்ஞாநத்தைக் குணமாகவுடையனும் அப்படிப்பட்ட ஞானமே ஸ்வரூபமாகவுள்ளவனுமாயிருப்பதுபற்றி நந்தா விளக்கு எனப்பட்டான். 1. "வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு" என்றும் 2. "மிக்கஞானமூர்த்தியாய வேதவிளக்கு" என்றும் எம்பெருமானை விளக்காகச் சொல்லியிருக்குமிடங்கள் பலகாண்க. உலகத்திலுள்ள ஸாமாந்யமான விளக்கைவிட இந்த விளக்குக்கு வாசியுண்டு. எங்ஙனேயென்னில்; உலகத்திலே நாம் விளக்கைக் காணவேணுமானால் வேறொரு விளக்கின் உதவியைக்கொண்டு காணவேண்டா; அதன் ஒளியைக்கொண்டே அதனைக் காண்கிறோம். எம்பெருமானாகிற இந்த நந்தாவிளக்கைக் காணவேண்டில் வேறொருவிளக்கின் உதவி இன்றியமையாதது: 3. "ஞானச்சுடர் விளக்கேற்றினேன்" என்றும், 4. "உணர்வென்னு மொளிகொள் விளக்கேற்றி" என்றும் சொல்லுகிறபடியே ஞானவிளக்கேற்றிக் காணவேணும். 5. "ஹர்தும் தமஸ் ஸதஸதீ ச விவேக்துமீஶோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி—ஹர்த்தும் தமஸ் ஸதஸதீச விவேக்துமீசோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி" என்கிறபடியே பெருவிளக்காகச் சொல்லப்பட்ட சாஸ்த்ரத்தைக் கொண்டும் காணவேணும்.

---

1. பெரியாழ்வார் திருமொழி. 4—3—11. 2. திருவாய்மொழி 4—7—10.
3. இரண்டாந்திருவந்தாதி 1. 4. மூன்றாந்திருவந்தாதி.
5. ஸ்ரீரங்கராஜஸ்தவம், உத்தரசதகம்—1. அகவிருளை அகற்றுதற்கும் ஸத்தாயும் அஸத்தாயுமுள்ளவற்றைப் பகுத்துணர்வதற்கும் பாங்காக எம்பெருமான் விளக்குப்போலே சாஸ்த்ரத்தை அளிக்கின்றானென்கை.

அளத்தற்கு அரியாய்—அளவிடமுடியாதவனே! என்கை. உலகத்திலுள்ள பொருள்களை மூன்றுவகைகளாலே அளவிடுதலுண்டு; அதாவது—காலத்தைக் கொண்டும், தேசத்தைக்கொண்டும், வஸ்துவைக்கொண்டும் அளவிடுதல்; இஃது எம்பெருமானிடத்தில் செய்யவொண்ணாது; எம்பெருமான் ஒரு காலத்திலிருந்து மற்றொருகாலத்தில் இல்லாதிருந்தால் காலத்தைக்கொண்டு அவனை அளவிடலாம்; ஸர்வகாலத்திலு முள்ளவனாதலால் காலபரிச்சேதமில்லாதவன். ஓரிடத்தில் இருந்து மற்றோரிடத்தில் இல்லாதிருந்தால் தேசத்தைக்கொண்டு அளவிடலாம்; 1. "பரந்ததண்பரவையுள் நீர்தொறும் பரந்துளன்" என்கிறபடியே ஸர்வவ்யாபியாயிருப்பதால் தேசபரிச்சேதமில்லாதவன். 'இன்ன வஸ்துபோலேயிருப்பவன்' என்று உவமையிட்டுக்கூற முடியுமானால் வஸ்துவைக்கொண்டு அளவிடலாம். அவனோடொத்த வஸ்து இல்லாமையினால் வஸ்து பரிச்சேதமில்லாதவன். இதுவே த்ரிவிதபரிச்சேத ராஹித்யம் [த்ரிவிதபரிச்சேதராஹித்யம்] என்று ஸ்ரீபாஷ்யாதிகளிற் கூறப்படும். இதுபற்றியே எம்பெருமானுக்கு அநந்தன் என்று திருநாமமாயிற்று. 2. "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம—ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" என்கிற உபநிஷத்வாக்யத்தை "நந்தாவிளக்கே அளத்தற்கரியாய்" என்றவளவுக்குப் பொருத்தமாக நிர்வஹிப்பராம் ஆழ்வான். நந்தா—'ஸத்யம்;' விளக்கு—'ஜ்ஞாநம்;' அளத்தற்கரியாய்—'அநந்தம்' 'ப்ரஹ்ம'.

நரநாரணனே—ஸ்ரீபதரிகாச்ரமத்தில் திருமந்த்ரத்தை வெளியிட்டருளத் தானே சிஷ்யனும் ஆசார்யனும் செய்தருளின அவதாரம்; "நரநாரணனாயுலகத்தறநூல் சிங்காமை விரித்தவன்" என்பர் மேலும். இவையெல்லாங் கிடக்க, காளமேகத் திருவுருவைக்காட்டித் தங்களை ஆழங்காற்படுத்திக் கொண்டது தோன்ற 'கருமாமுகில்போல் எந்தாய்' எனப்பட்டது. ஆக இவ்விளிகளெல்லாம் இமையோர்களுடையவை. இங்ஙனே ஸம்போதித்து 'எமக்கு அருள்புரியவேணும், எமக்கு அருள்புரியவேணும்' என்று இமையோர் பரவி யேத்துமிடம் நாங்கூர் மணிமாடக்கோயில்.

திருநாங்கூரின் சோலைவளம் சொல்லப்படுகிறது பின்னடிகளில். வண்டுகளிற் பல சாதிகளுண்டு; தேன்வண்டு, களிவண்டு, சுரும்பு வண்டு என்றிவை போல்வன. ... ... .... ... (க)

முதலைத்தனிமா முரண்தீரவன்று
முதுநீர்த்தடத்துச் செங்கண்வேழமுய்ய *
விதலைத்தலைச்சென் றதற்கேயுதவி
வினைதீர்த்தவம்மானிடம் * விண்ணணவும்
பதலைக்கபோதத் தொளிமாடநெற்றிப்
பவளக்கொழுங்கால பைங்கால்புறவம் *
மதலைத்தலைமென் பெடைகூடுநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே! (உ

1. திருவாய்மொழி 1—1—10. 2. தைத்ரீய உபநிஷத்து.

| | |
|---|---|
| அன்று | முன்பொருகாலத்தில் |
| முது நீர் தடத்து | அகாதமான நீரையுடைய பொய்கைக் கரையிலே |
| முதலை | முதலையினுடைய |
| தனி மா முரண் தீர | மிகப் பெரிய துஷ்டத்தனம் தீரும்படியாகவும் |
| செம் கண் வேழம் உய்ய | சிவந்த கண்களையுடைய கஜேந்திராழ்வான் உஜ்ஜீவிக்கும்படியாகவும் |
| விதலைத்தலை சென்று | (அவ்யானை) மிகவும் நடுங்கிக் கிடந்த ஸமயத்திலே எழுந்தருளி |
| அதற்கே உதவி | அந்த யானைக்கு உபகரித்து |
| வினை தீர்த்த அம்மான் இடம் | அதன் இடரை நீக்கின பெருமான் எழுந்தருளியிருக்குமிடமானதும்,— |
| விண் அணவும் | விண்ணுலகை அளாவியிருப்பனவாய் |
| பதலை கபோதம் | கலசங்களையும் கபோத வொழுங்குகளையுமுடையனவாய் |
| ஒளி | (இழைத்த ரத்னங்களினால்) ஒளி பெற்றனவான |
| மாடம் | மாடமாளிகைகளினுடைய |
| நெற்றி | முகங்களிலே, |
| பவளம் கொழு கால | அழகிய பவழத்தூண் போன்ற |
| பைங்கால் | பசுமையான காலையுடைய |
| புறவம் | புறா |
| மதலைத்தலை | கொடுங்கையின் மேலுள்ள |
| மென் பெடை | மெல்லிய பேடையுடனே |
| கூடும் | கலவிசெய்யப் பெற்ற |
| நாங்கூர் | திருநாங்கூரிலே |
| மணிமாடக்கோயில் | என் மனனே ! வணங்கு. |

* * *—ஸ்ரீகஜேந்திராழ்வானுடைய துயரைத்தொலைத்த பெருமான் மணிமாடக்கோயிலில் ஸந்நிதிபண்ணியிராநின்றான்; நெஞ்சே! அங்குச் சென்று அநுபவிக்கப்பாராய் என்கிறார். அப்பொய்கையில் நாடோறும் எத்தனையோ ஆனைகள் தண்ணீர் குடிக்கவந்து இறங்குவதுண்டு; பகவத் விஷயமே அறியாமல், கேவலம் தேஹபோஷணமே தொழிலாய்த்திரியும் அந்த யானைகளுக்கு யாதொரு துன்பமும் இம்முதலை உண்டாக்கிற்றில்லை; எம்பெருமானை நாடோறும் தாமரைப்பூவால் ஆராதிப்பதையே நியமமாகக்கொண்டு பூப்பறிக்க ஆவலுடன் வந்திழிந்த கஜேந்திராழ்வானுக்கே துன்பம் விளைவித்ததனால் "முதலைத் தனி மா முரண்" என்றார். பகவத்பக்தர்களையே ஹிம்ஸிக்க வேணுமென்றிருந்த துஷ்டத்தனம்.

செங்கண்வேழம்=யானையின் கண்களுக்குச் செம்மை இயற்கையன்று; துன்பம் பொறுக்கமாட்டாமல் கண்கள் சிவந்தபடி.

விதலைத்தலைச்சென்று=‘விதலை’ என்று நடுக்கத்துக்குப் பெயர்; ‘நாம் கஷ்டப்பட்டுப் பறித்த பூ எம்பெருமானுடைய அர்ச்சனைக்கு உதவாமற் போகிறதோ!’ என்று அஞ்சி நடுங்கியிருந்தகாலத்தில் என்கை. விதலை என்பதற்கு வேறொருவகையாகவும் பொருள்கூறுவதுண்டு; வடமொழியில், ‘வி’ என்னுஞ்சொல் பக்ஷியென்னும் பொருளது; பக்ஷிகளில் தலைவனான கருடனை ‘விதலை’ என்கிறது; விதலைத்தலை—கருடன்மேலே.

[விண்ணணவு மித்யாதி.] நகரச்சிறப்புக் கூறப்படுகின்றது; திருநாங்கூரில் மாடமாளிகைகள் விண்ணுலகளவும் ஓங்கியிருக்கின்றன; அவற்றில் புறாக்கள்

உல்லாஸமாகக் கலந்திருக்கின்றன—என்கிறது. பதலையாவது—நுனியில் ஸ்தாபிக்கப்படும் கும்பங்கள். 'கபோதம்' என்ற வடசொல் மாடப்புறுவுக்கு வாசகமாயினும், அப்புறுக்கள் தங்கி வாழுமிடமாகிய ஸந்நிவேசத்தையும் தமிழில் கபோதமென்றும் கபோதையென்றும் கபோதியென்றும் வ்யவஹரிப்பதுண்டு. கட்டிடத்தின் ஓர் பகுதி.

"மதலைத்தலை-பிள்ளைத்தூண்களின் தலையிலே" என்பது வியாக்கியானம் அதுதான் கொடுங்கை என்னலாம். .... ... ... (௨)

கொலைப்புண்டலைக்குன்ற மொன்றுய்யவன்று
கொடுமாமுதலைக் கிடர்செய்து *கொங்கா
ரிலைப்புண்டரீகத் தவளின்பமன்போ
டணைந்திட்டவம்மானிடம் * ஆளரியால்
அலைப்புண்டயானை மருப்புமகிலும்
அணிமுத்தும் வெண்சாமரையோடு* பொன்னி
மலைபண்டமண்டத் திரையுந்துநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே! (௩)

அன்று — முன்பொருகாலத்தில்,

கொலை புண் தலை ஒன்று குன்றம் உய்ய — கொலைத்தொழில் செய்ய வல்லதும் புண்பட்ட தலையையுடையதும் மலை போன்றதுமான ஒரு யானை உஜ்ஜீவிக்கும்படியாக

கொடு மா முதலைக்கு — கொடுமையிற் சிறந்த முதலைக்கு

இடர் செய்து — துன்பமுண்டாக்கி

(இந்த ஸந்தோஷத்தினால்)

கொங்கு ஆர் இலை புண்டரீகத்தவள் இன்பம் அன்போடு அணைந்திட்ட — பரிமளம் நிரம்பிய இலைகளையுடைய தாமரைப்பூவிற் பிறந்தவளான பிராட்டியின் சேர்த்தியின்பத்தை அன்புடன் அநுபவிக்கப்பெற்ற

அம்மான் இடம்—;

பொன்னி — காவேரியானது,

ஆள் அரியால் — வீரச்சிங்கங்களாலே

அலைப்புண்ட — ஸம்ஹரிக்கப்பட்ட

யானை — யானைகளினுடைய

மருப்பும் — தந்தங்களையும்

அகிலும் — அகில்மரங்களையும்

அணி முத்தும் — அழகிய முத்துக்களையும்

வெண் சாமரையோடு — வெளுத்த சாமரங்களையும்

மலை பண்டம் அண்ட — மலையில் விளையக்கூடிய மற்றும் பல வஸ்துக்களையுமெல்லாம்

திரை — அலைகளாலே

உந்து — தள்ளிக்கொண்டு பெருகப்பெற்ற

நாங்கூர் * * * வணங்கு—.

* * *—ஸ்ரீகஜேந்திராழ்வானுடைய துயரைத்தீர்த்தது மாத்திரம் கீழ்ப் பாட்டிற் சொல்லிற்று; அவ்வளவில் ஆழ்வார் திருப்திபெறுவரோ; எம்பெருமான் ஆச்ரிதவிரோதிகளைக் களைந்தொழித்தால் அந்த ஸந்தோஷத்திற்குப் போக்குவீடாகப் பிராட்டி பஹுமானம் பண்ணுவதொன்றுண்டு; அதாவது திருமுலைத்தடங்களாலே அணையவமுக்கிக் கட்டுதல். ஸ்ரீராமபிரான் கரதூஷ

ஞதிகளைக்கொன்றொழித்து மீண்டபோது இப்படிப்பட்ட வெருமதியைப் பிராட்டிசெய்தமை ஸ்ரீராமாயணத்தில் விளங்குமே; "தம்ஜ்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம்| பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே = தம்த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம் மஹர்ஷீணும் ஸுகாவஹம்— பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே." என்னுகின்றது. அப்படியே, ஸ்ரீகஜேந்த்ர விரோதியான முதலையைத்துணித்துச் சென்றபின்பு பிராட்டி செய்த ஸத்காரத்தை ரிஷிகள் சொல்லாதொழிந்தாலும் அக்குறைதீர ஆழ்வார் தாமருளிச்செய்கிருர்—" கோமோ முதலைக்கு இடர் செய்து புண்டரீகத் தவளின்ப மன்போடணைந்திட்ட வம்மான் " என்கிருர்.

கோலைப்புண் தலைக்குன்றம்='குன்றம்' என்றது உவமவாகுபெயரால் யானையை உணர்த்தும்; யானைக்குக் கொலைத்தொழில் நிகழ்த்துவதும், மாவட்டியின் குத்தலினுல் புண் ஆருததலையை யுடைத்தாயிருத்தலும் சாதியியல்பென்று கொண்டு இவ்விசேஷணங்களிடப்பட்டன.

திருநாங்கூரில் காவிரியாறு நேரே பெருகுகின்றதில்லையாயினும் காவிரிக்கால்களின் பெருக்கு சுற்றுப்பிரதேசங்களி லுள்ளதுபற்றி 'போன்னி...திரையுந்து நாங்கூர்' எனப்பட்டது. ஆளரியால்=ஆண்மைத்தனம் [பௌருஷம்] நிரம்பிய சிங்கங்களினுல் என்கை. மலை முகட்டினின்று பெருகும் பெரிய ஆற்றுப்பெருக்குக்களில் யானைத்தந்தங்களும் அகில் மரங்களும் முத்துக்களும் முதலியன உந்தப்பட்டு வருதல் வழக்கமென்க. "ஸஹ்யோத்த வ்ருத்த நதீஹரணிகா ... காவேரீ ஶ்ரீரங்கரேவி ... " என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலும் காவேரீவர்ணநத்தில் அருளிச்செய்ததறிக. ... (ந)

சிறையாருவணப் புள்ளோன்றேறியன்று
திசைநான்குநான்கு மிரிய * செருவில்
கறையார்நெடுவே லரக்கர்மடியக்
கடல்சூழிலங்கை கடந்தானிடந்தான் *
முறையால்வளர்க்கின்ற முத்தீயர்நால்வேதர்
ஐவேள்வியாறங்க ரேழினிசையோர் *
மறையோர்வணங்கப் புகழெய்துநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே! (ச)

| | | | |
|---|---|---|---|
| அன்று | முன்பொருகாலத்தில், | கறை ஆர் நெடு வேல் அரக்கர் | (ரத்தக்) கறை நிரம்பிய பெரிய வேற்படையை யுடைய ராக்ஷஸர்கள் |
| சிறை ஆர் | சிறகோடு கூடின | திசை நான்கும் நான்கும் இரிய | எட்டுத் திசைகளிலும் (சிலர்) சிதறியோடும்படியாகவும் |
| ஒன்று | ஒப்பற்ற | மடிய | (பலர்) உயிர்மாண்டொழியும் படியாகவும் (செய்து) |
| உவணம் புள் | கருடப்பறவையின் மீது | | |
| ஏறி | ஏறிக்கொண்டெழுந்தருளி, | | |
| செருவில் | யுத்தத்தில் (எதிர்த்த) | | |

| | | | |
|---|---|---|---|
| கடல் சூழ் இலங்கை | கடலால் சூழப்பட்ட லங்காபுரியை | ஆறு அங்கர் | வேதாங்கங்கள் ஆறையும் பயின்றவராய் |
| கடந்தான் | ஒழித்த பெருமானுடைய | ஏழின் இசையோர் | ஸப்தஸ்வரங்களையும் அறிந்தவரான |
| இடம் தான் | இருப்பிடமான;— | மறையோர் | வைதிகப்ராஹ்மணர்கள் |
| முறையால் வளர்க்கின்ற முத்தீயர் | முறைப்படி ஹோமஞ் செய்கிற மூன்று அக்நிகளையுடையராய் | வணங்க | (நித்யவாஸம்பண்ணிக் கொண்டு) வணங்குவதனால் |
| நால் வேதர் | நான்கு வேதங்களையும் அதிகரித்தவராய் | புகழ் எய்து நாங்கூர் | புகழ் பெற்றிருக்கின்ற திருநாங்கூரிலே |
| ஐ வேள்வி | பஞ்சமஹாயஜ்ஞங்களை அநுஷ்டிப்பவராய் | மணிமாடக்கோயில் என் மனனே வணங்கு—. | |

* * *—உத்தர ஸ்ரீராமாயணத்தை அடியொற்றி முன்னடிகள் கூறப்பட்டன. மாலி சுமாலி முதலிய ராக்ஷஸர்களைத் திருமால் வெல்லும்போது பெரிய திருவடியின்மீதேறியிருந்து வென்றமை ப்ரஸித்தம். அப்போது திரண்டுவந்த ராக்ஷஸர்களில் பலர் மூலைக்கு ஒருவராய்ச் சிதறி ஓடிச்சென்றதும் பலர் போர்க்களத்திலகப்பட்டு மாண்டொழிந்ததும் அறிக. கருடனுக்கு வடமொழியில் 'ஸுபர்ண:' என்று பெயர்; அது உவணமெனத் திரியும்.

கறையார் நெடுவேலரக்கர்=வேற்படையை எப்போதும் கொலைத் தொழிலிலேயே செலுத்திக்கொண்டிருப்பதனால் கறைகழுவ அவகாசமேயில்லாமல் (உதிரக்) கறை நிரம்பியிருக்குமென்க.

திருநாங்கூர் வைதிகப்ராஹ்மணர் நிறைந்த ஊரென்கிறது பின்னடிகளில். முத்தீ—கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்நி என்பவை த்ரேதாக்நிகளெனப்படும். "ஐவேள்வி ஆறங்கர் ஏழினிசையோர்"=இதன் விவரணங்கள் (3-4-1) "ஒரு குறளாய்" என்ற பாசுரத்தினுரையிற் காணத்தக்கன. [பக்கம்—410.]

புகழெய்து=பரமவைதிகர்கள் வாழுமிடமென்று புகழ்பெற்றநாங்கூர். (ச)

இழையாடுகொங்கைத் தலைநஞ்சமுண்டிட்
டிளங்கன்றுகொண்டு விளங்காயெறிந்து *
தழைவாடவன்தாள் குருந்தமொசித்துத்
தடந்தாமரைப்பொய்கை புக்கானிடந்தான் *
குழையாடவல்லிக் குலமாடமாடே
குயில்கூவநீடு கொடிமாடமல்கு *
மழையாடுசோலை மயிலாலுநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே! (ரு)

| | | | |
|---|---|---|---|
| இழை ஆடு | ஆபரணங்கள்விளங்கப்பெற்ற | உண்டிட்டு | (அவளுயிரோடு கூட) உண்டவனும், |
| கொங்கைத் தலை | (பேய்ச்சியின்) முலையிலுள்ள | இள கன்று கொண்டு | வத்ஸாஸுரனை (எறிதடியாக) க்கொண்டு |
| நஞ்சம் | விஷத்தை | | |

| | |
|---|---|
| விளங்காய் எறிந்து | கபித்தாஸுரன்மேல்சுழற்றி யெறிந்து இருவரையும் முடித்தவனும், |
| வல் தாள் | வலிதான வேர்ப்பற்றை யுடைய |
| குருந்தம் | குருந்தமரத்தை |
| தழை வாட | (அதன்) தழைகளெல்லாம் வாடியுலரும்படி |
| ஒசித்து | முறித்தவனும் |
| தட தாமரை பொய்கை புக்கான் | பெரிய தாமரைத் தடாகத்தி லிழிந்(து கோபிக ளுடனே ஜலக்ரீடை செய்) தவனுமுள்ள பெருமானுடைய |
| | இடம் தான் —; |
| குழை ஆட | மரங்களின் தளிர்கள் (மந்தமாருதத்தாலே) அசைந்தாடுவதனால் |
| மாடே | அவற்றினருகேயுள்ள |
| வல்லி குலம் | பூங்கொடிகளின் திரள் |
| ஆட | ஆடவும் |
| குயில் கூவ | குயில்கள் கூவவும் |
| மழை ஆடி | மேகங்கள் உலாவுகின்ற |
| சோலை | சோலைகளிலே |
| மயில் ஆலும் | மயில்கள் நர்த்தனம் பண்ணவும் பெற்றதாய் |
| நீடு | நீண்ட |
| கொடி | த்வஜங்கள் நாட்டப்பெற்ற |
| மாடம் | மாடமாளிகைகளினால் |
| மல்கு | நிறைந்திருக்கப்பெற்றதான |
| நாங்கூர் | திருநாங்கூரிலே |

மணிமாடக்கோயில் என் மனனே! வணங்கு—.

* * *—தன்னை மெய்த்தாயாகவே நினைத்துக்கொண்டு அன்பாய் முலை யுண்ணவேணும் என்று கருதின பூதனை, யசோதை அணிந்துகொள்ளு மாபரணங்களை அணிந்துகொண்டு வந்ததுபற்றி "இழையாடு" என்று அடைமொழி கொடுக்கப்பட்டது. "கொங்கைத்தலை" "கொங்கைத்தலம்" என்பன பாடபேதங்கள்.

இளங்கன்றுகொண்டு விளங்காயெறிந்த வரலாறு:—கம்ஸனால் ஏவப்பட்ட அசுரர்களில் விளாமரத்திலாவேசித்துக் கபித்தாஸுரனென்ன நின்றான் ஓர் அசுரன்; கண்ணன் விளங்கனியைப்பறித்து உண்ணும்போது அவனை முடித்து விடலாமென்பதும், கண்ணன் விளாமரத்தின்கீழ் வந்து நிற்கும்போது மேலே முறிந்து விழுந்து முடித்துவிடலாமென்பதும் இவ்வசுரனது கருத்து. இப்படியே தன்னை முட்டிக்கொல்லும்பொருட்டு ஒரு கன்றில் ஆவேசித்து வத்ஸாஸுரனென்ன நின்றான் ஓர் அசுரன். இச்சூதுகளையறிந்த கண்ணபிரான் வத்ஸாஸுரனைப் பின்னிரண்டு கால்களையும் பிடித்து எடுத்துச்சுழற்றி விளாமரத்தின்மேல் எறிய, இருவரும் சிதைந்து தமது அசுர வடிவத்துடனே விழுந்து இறந்தனரென்பதாம். (இது முள்ளைக்கொண்டே முள்ளைக்களைவது போலாம்.)

குருந்த மொசித்த வரலாறு:—வேறொரு அசுரன், மலர் கொய்தற்பொருட்டு விரும்பியேறும் குருந்தமரத்திற் பிரவேசித்து அப்பெருமான் வந்து தன்மீது ஏறும்போது தான் முறிந்துவீழ்ந்து அவனை வீழ்த்திக் கொல்லக்கருதியபோது மாயவனை கண்ணபிரான் அம்மரத்தைக் கைகளாற் பிடித்துத் தன் வலிமை கொண்டு முறித்து அழித்தனனென்பதாம்.

தடந்தாமரைப் பொய்கை புக்கான்—இதை இரண்டு வகையாக நிர்வஹிப்பர்;—காளிய நாகத்தைத் தண்டிப்பதற்காக யமுனையின் ஓர் மடுவிலே சென்று குதித்தபடியைச் சொல்லிற்றாகவுமாம்; அன்றியே; ஆய்ச்சிகளோடே ஜலக்ரீடை பண்ணுவதற்காகப் பொய்கையிலே புகுந்தபடியைச் சொல்லிற்றாகவுமாம். இப்படிப்பட்ட எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடமான திருநாங்கூரில் மணிமாடக்கோயில் வணங்கென் மனனே!.

திருநாங்கூரின் சோலைவாய்ப்பும் நகர்வாய்ப்பும் பின்னடிகளில் வருணிக்கப்படுகின்றன. ... ... ... ... (ரு)

பண்ணேர்மொழி யாய்ச்சியரஞ்சவஞ்சப்
பகுவாய்க்கழுதுக் கிரங்காது * அவள்த
னுண்ணாமுலை மற்றவளாவியோடு
முடனேசுவைத்தானிடம் * ஓங்குபைந்தாள்
கண்ணார்கரும்பின் கழைதின்றுவைகிக்
கழுநீரில்மூழ்கிச் செழுநீர்த்தடத்து *
மண்ணேந்திளமேதிகள் வைகுநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே! (சா)

| | |
|---|---|
| பண் நேர் மொழி | பண்ணிசையோடொத்த பேச்சையுடையரான |
| ஆய்ச்சியர் | இடைச்சிகள் |
| அஞ்ச | பயப்படும்படியான வடிவுடையவளாய் |
| வஞ்சம் பகு வாய் கழுதுக்கு | வஞ்சனையையும் பெரிய வாயையுமுடையளான (பூதனையென்னும்) பேய்ச்சியினிடத்தில் |
| இரங்காது | தான் நோவுபடாமல் |
| அவள் தன் | அப்பூதனையினது |
| உண்ணா முலை | உண்ணத்தகாத முலைப்பாலை |
| மற்றவள் ஆவியோடு முடனே | அவளுடைய உயிரோடு கூடவே |
| சுவைத்தான் இடம் | உறிஞ்சியுண்ட பெருமானுடைய இருப்பிடமாய் |
| ஓங்கு பைந் தாள் கண் ஆர் கரும்பின் கழை தின்று | உயர்ந்து பசுங்கால்களையுடையனவாய் கணுக்கள் நிரம்பியவான கரும்புத் தடிகளைத் தின்று |
| வைகி | நகரமாட்டாமல் அங்கேயே தாமஸித்துக்கிடந்து |
| | (அதன் பிறகு) |
| கழு நீரின் | செங்கழுநீர்ப் பூக்களோடு கூடிய |
| செழு நீர் தடத்து | அழகிய நீர் நிரம்பிய தடாகத்திலே |
| மூழ்கி | முழுகி |
| மண் ஏந்து | (கொம்புகளில்) மண்ணைத் தாங்கிக்கொண்டிருக்கிற |
| இள மேதிகள் | இளைய எருமைகள் |
| வைகும் | (கரையேறாது நீரிலேயே) தாமஸித்திருக்கப்பெற்ற |
| நாங்கூர் | திருநாங்கூரிலே |
| மணிமாடக்கோயில் என் மனனே! வணங்கு- | |

* * *—கண்ணபிரானுடைய சிறுச்சேவகங்கள் பலபல இருந்தாலும் முலை கொடுத்துக் கொல்லவந்த பேய்ச்சிக்குத் தப்பிப் பிழைத்தது மிக அருமை.

யாதலால் இந்த வீரச்செயலில் அதிகமாக ஈடுபட்டிருப்பர்கள் ஆழ்வார்கள்; ஆகவே இதனை அடிக்கடி வாய்வெருவுவர்கள் என்க.

பூதனை செத்துப்பிணமாய் விழுந்திருந்ததைக்கண்ட ஆய்ச்சிகள் அவளது பயங்கரமான அரக்க வடிவைக்கண்டு 'இவளுடைய நினைவு நிறைவேறியிருக்குமாகில் உலகம் அஸ்தமித்தொழிந்திருக்குமே!' என்று அஞ்சின அச்சம் "பண்ணேர் மொழியாய்ச்சியரஞ்ச" என்பதனால் தெரிவிக்கப்பட்டது. இனி 'ஆய்ச்சியர்' என்ற பன்மையை உயர்வுப்பன்மையாகக்கொண்டு யசோதையைச் சொல்வதாகப் பொருள்கொண்டு 1. "மின்னேர் நுண்ணிடை வஞ்ச மகள் கொங்கைதுஞ்ச வாய்வைத்த பிரானே! அன்னே யுன்னை யறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவ னம்மந்தரவே" என்றும் 2. "பேய்ச்சி முலையுண்டபின்னை இப்பிள்ளையைப் பேசுவதஞ்சுவனே" என்றும் சொல்லுகிறபடியே அவள் அஞ்சின அச்சம் தெரிவிக்கப்படுகின்றதென்னவுமாம்.

'பகுவாய்' என்ற விசேஷணம் பேய்ச்சியின் ராக்ஷஸத் தன்மைக்கு உரியதாம். கழுது—பேய்.

[ஓங்கு பைந்தாள் இத்யாதி.] வயல்களிலே இளைய எருமைகள் கரும்புகளின் தலையாடியை மேய்ந்து, தன்னளவல்லாதபடி மிகவும் தின்கையாலே நகர்ந்து செல்லமாட்டாமல் அவ்விடந்தன்னிலே இடம் வலங்கொண்டு விடாயாறி, பிறகு மெல்ல நடந்துசென்று செங்கழுநீர்க் குட்டையிலே முழுகி, சேற்றிலே கொம்புகளைக் குத்தி மண்ணுருண்டையைப் பெயர்த்தெடுத்துத் தாங்கிக்கொண்டு கிளம்பி, பின்னை அடித்து ஏறவிடவும் முடியாதபடி அவ்விடத்திலேயே கிடக்கும்படியைக் கூறினவாறு.

இப்பாசுரத்தைப் பிள்ளைவிழுப்பரையரும் ஆப்பானுங்கூடி அநுஸந்தித்துப் பொருள் நோக்குங்கால்—மூன்றாமடியில் ஒருமுறை 'வைகி' என்று வந்திருக்கிறது; நான்காமடியிலும் 'வைகு' என்று வந்திருக்கிறது; ஆவ்ருத்திக்குப் பொருளென்? என்று ஸந்தேஹித்து பட்டரைப் பணிந்துகேட்க; "அவ்விடத்து எருமைகளின் ஸௌகுமார்யம் விளக்கப்பட்டதாகிறது; முரட்டெருமைகளாயிருந்தால் பதறிப்பதறி நடக்கும்; ஸுகுமாரமான எருமைகளாகையாலே வைகி வைகிக் கிடக்கிறபடி" என்றருளிச்செய்தாராம்.

வைகுதல்—விளம்பித்தல். .... .... .... (சு)

தளைக்கட்டவிழ்தாமரை வைகுபொய்கைத்
 தடம்புக்கடங்கா விடங்காலரவம் *
இளைக்கத்திளைத்திட் டதனுச்சிதன்மே
 லடிவைத்தவம்மானிடம் * மாமதியம்
திளைக்குங்கோடி மாளிகைசூழ்தெருவில்
 செழுமுத்துவெண்ணெற் கெனச்சென்று * முன்றில்
வளைக்கைநுளைப்பாவையர் மாறுநாங்கூர்
 மணிமாடக்கோயில் வணங்கென்மனனே! (எ)

1. பெரியாழ்வார் திருமொழி 3-1-1. 2. பெரிய திருமொழி 10-7-8.

| | |
|---|---|
| தளை (தாமரை) | கட்டுவிரியாமல் மொக்காயிருக்கிற (தாமரைப்பூக்களும்) |
| கட்டு அவிழ் தாமரை | கட்டு நெகிழ்ந்து அலர்ந்த தாமரைப்பூக்களும் |
| வைகு | தங்கியிருக்கப்பெற்ற |
| பொய்கைத் தடம் புக்கு | பொய்கையிலே புகுந்து, |
| அடங்கா | (அப்பொய்கையினுள்) அடங்காமல் கிளர்ந்தெழுந்ததாய் |
| விடம் கால் | விஷத்தைக் கக்குகின்ற |
| அரவம் | காளிய நாகம் |
| இளைக்க | இளைத்துப்போம்படி |
| திளைத்திட்டு | விளையாடி |
| அதன் உச்சி தன்மேல் | அதன் தலைமேலே |
| அடி வைத்த | திருவடியை நாட்டியருளின |
| அம்மான் | பெருமானுடைய |
| இடம் | இருப்பிடமாய்;— |
| வளை கை | வளையணிந்த கையையுடைய |
| நுளைப் பாவையர் | குறத்திகள், |
| மா மதியம் திளைக்கும் கொடி மாளிகை சூழ் தெருவில் | சந்திரன் விளையாடும்படி ஓங்கின, கொடிகளணிந்த மாளிகைகள் நிறைந்த வீதியிலே |
| செழு முத்து | சிறந்த முத்துக்களை |
| வெண் நெற்கு என | வெளுத்த நெல்லுகளுக்குத் தருகிறோமென்று சொல்லிக்கொண்டு |
| முன்றில் | ஒவ்வொரு வீட்டுவாசலிலும் |
| சென்று | போய் |
| மாறும் | விற்பனை செய்யப்பெற்ற |
| நாங்கூர் | திருநாங்கூரிலே |

மணிமாடக்கோயில் என் மனனே! வணங்கு—.

* * *—யமுனையின் ஒரு மடுவிலிருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்நியால் கொதிப்பித்துக் கொடுமை புரிந்துவந்த காளியநாகத்தின் கொழுப்பையடக்கி அதன் தலைமேல் நாட்டியமாடின பெருமானுறையுமிடம் திருநாங்கூர் மணிமாடக்கோயில்.

தளைக்கட்டவிழ்தாமரை='தளைத்தாமரை, கட்டவிழ்தாமரை' என்று இரண்டுபடியாக யோஜிப்பது. தளையாவது கட்டு; கட்டு நெகிழாமல் முகுளமாகவேயிருக்கிற தாமரைகளும், கட்டவிழ்ந்து மலர்ந்துள்ள தாமரைகளும் தங்கியிருக்கிற பொய்கை என்றவாறு.

விடம் கால்='கால்' என்பது வினைப்பகுதி. ('காற்று' என்னுஞ் சொல் இப்பகுதி யடியாகவே பிறந்தது.) காலுதல்—வீசுதல். காலரவம்—வினைத்தொகை. அதனுச்சிதன்மேலடிவைத்த=1. "அடிச்சியோந்தலைமிசை நீயணியாய் ஆழியங்கண்ணாவுன் கோலபாதம்" என்று அன்பர் சென்னிக்கணியாகத் திருவடிகளை வைத்திடாயென்று எத்தனையேனும் வேண்டினாலும் கிடைக்கமாட்டாத திருவடிகள் பாபியான காளியன் தலையிலே வைக்கப்பட்டனவே! என்ற பரிதாபம் தோற்றும். ஆழ்வானும் ஸுந்தரபாஹுஸ்தவத்திலே 'ஐயோ! நான் காளியன் தலையாகப் பிறவாதொழிந்தேனே!' என்று ஒரு ச்லோகத்தால் கதறுகின்றார்—"காளீயஸ்ய ஃபணதாம் ஶிரஸ்ஸு ௭௨" இத்யாதி.

1. திருவாய் மொழி 10—3—6.

[மாமதியந்திளைக்கும் இத்யாதி.] திருநாங்கூரில் வாழ்பவர்களனைவரும் பெருஞ்செல்வம் பொலிந்தவர்களென்பது விளங்க "மாமதியந்திளைக்குங் கோடிமாளிகைசூழ்தெரு" எனப்பட்டது. மாளிகைகளிலே கொடி நாட்டப் பட்டிருக்கும்; அவை சந்திரமண்டலத்தை எட்டியிருக்கையாலே, கடமையாக ஸஞ்சரிக்கவேண்டிய சந்திரன் அக்கொடிகளிலே துவக்குண்டு அப்பால் செல்லப்பெறாமல் அவற்றோடே விளையாடுகிறபடி. இப்படிப்பட்ட மாளிகைகள் நிறைந்த வீதிகளிலே குறத்திகள் தங்களுக்கு அவலீலையாகக் கிடைக்கிற நன்முத்துக்களைக் கூடை கூடையாகக் கொணர்ந்து நாழி நெல்லுக்கு விற்பனை செய்கிறார்களாம்.

இது அவ்விடத்து நிகழ்ச்சியைக் கூறுவதாயினும், இதனால் ஒரு அர்த்தம் தொனிக்கும். விரித்துச் சொல்லுவோம் கேண்மின்;—கடலிலே வலைவீசி மீன் பிடித்து ஜீவிப்பானொரு செம்படவன் ஒரு நாள் மீன்களிடையே விலையுயர்ந்த ரத்நமொன்று கிடைக்கப்பெற்றான்; அதனுடைய மதிப்பை அவன் அறிய மாட்டாதவனாதலால் அந்தரத்நத்தைக் கொண்டுபோய் ஒரு வியாபாரியிடத்திலே மிகக்குறைந்த விலைகூறி விற்றுவிடுகிறான்; அந்த வியாபாரி, தான் ரத்நத்தின் மதிப்பு நன்குணர்ந்தவனாகையாலும் வியாபாரமே ஜீவிகையாகவுடையவனாகை யாலும் அவன் அதைக் கொண்டுபோய் ஒரு மஹாராஜனிடத்திலே க்ரமமாக அதற்குள்ள விலைகூறி விற்றுவிடுகிறான்; பிறகு அந்த மஹாராஜன் அந்த ரத்நத்தைத் தான் விற்பனைசெய்ய நினையாதே அதனைப் பெரியதொரு ஹாரத்திலே இணைத்து ஸ்வயம் போக்யமாக அமைத்துக்கொள்ளுகிறான். ஆக இச்செய்தியில் ஒரு ரத்நத்துக்கே மூன்று தன்மைகள் உண்டாகின்றன; அற்பவிலைக்கு மாறுதல், உள்ளவிலைக்கு மாறுதல், விலைக்கு ஆட்படாமல் ஸ்வயம் போக்யமாகக் கொள்ளப்படுதல் என மூன்றுவகைகள் ஒன்றுக்கே அதிகாரி பேதத்தால் கூடுவதுபோலே நாம் செய்யும் ஸுக்ருதங்களுக்கும் இங்ஙனே மூன்று தன்மைகள் கூடும். ரத்நத்தின் மதிப்பை அறியமாட்டாது அதனை அற்பவிலைக்கு விற்கும் செம்படவன்போல, ப்ரபத்தியின் சீர்மையை அறியமாட்டாத சிற்றறிவாளர் ப்ரபத்தியைக்கொண்டு ஐச்வர்ய கைவல்யாதி க்ஷுத்ரபலன்களைக்கொள்வர்; ரத்நத்தைக் குறைந்த விலைக்குக் கொடாதே தகுந்த விலைக்குக்கொடுக்கும் வியாபாரியைப்போன்ற மத்யம அதிகாரிகள் ப்ர பத்தியை மோக்ஷஸாதநமாக அபிமாநித்து க்ஷுத்ரபலன்களைக் கொள்ளாதே மோக்ஷபலனைக் கொள்வர்; ரத்நத்தை ஒன்றுக்கும் ஸாதநமாக்காதே ஸ்வயம் போக்யமாகக்கொள்ளும் மஹாராஜனைப்போன்ற உத்தமாதிகாரிகள் ப்ரபத்தியை ஒன்றுக்கும் ஸாதநமாகக் கோலாதே ஸ்வயம்புருஷார்த்தமாகக்கொண்டு வர்த்திப் பர்கள்—என்று ஸம்ப்ரதாயார்த்தம் நிர்வஹிக்கிறபுடையிலே, இங்குச்சொன்ன வரலாற்றினால் கீழ்ப்பட்ட அதிகாரிகளின் தன்மை உணர்த்தப்பட்டதாகத் தொனிப்பது காண்க.

செழுமுத்து வெண்ணெற்கென='செழு' என்னும் முத்து விசேஷணத்தினால், தாங்கள் கொடுக்கும் பொருளின் சீர்மையும், 'வெண்' என்னும் நெல் விசேஷணத்தினால் தாங்கள் கொள்ளும் பொருளின் தாழ்வும் தெரிவிக்கப்பட்டனவாம். 'செந்நெல் வேண்டா; வெண்ணெல் போதும்' என்கிறார்களாம். 'முன்றில் சென்று' என்கையாலே, திருநாங்கூராரிடத்தும் முத்துக்கள் ஏராளமாயிருக்கையாலே அவர்கள் வந்து கொள்வதில்லை; குறத்திகள் தாங்களே சென்று, வேண்டாவென்று கதவடைத்துத் தள்ளினாலும் 'நாழி நெல்லுக்கு நானாழி முத்துக் கொள்ளுங்கள்' என்று வலிகட்டாயமாகக் கொடுக்கச் செல்லுகின்றமை தோன்றுமென்ப. முன்றில்—இல்முன். .... ... (௭)

துளையார்கருமென் குழலாய்ச்சியர்தம்
துகில்வாரியும் சிற்றில்சிதைத்தும் * முற்றா
விளையார்விளையாட்டோடு காதல்வெள்ளம்
விளைவித்தவம்மானிடம் * வேல்நெடுங்கண்
முளைவாளெயிற்று மடவார்பயிற்று
மொழிகேட்டிருந்து முதிராதவின்சொல் *
வளைவாயகிள்ளை மறைபாடுநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே ! (௮)

| | |
|---|---|
| துளை ஆர் கரு மென் குழல் | (சுருண்டிருக்கையாலே) துளைகள் பொருந்திய கறுத்த மெல்லிய கூந்தலையுடைய |
| ஆய்ச்சியர் தம் | இடைச்சிகளினுடைய |
| துகில் | ஆடைகளை |
| வாரியும் | அபஹரித்தும் |
| சிற்றில் சிதைத்தும் | (அவர்களிழைக்கிற) சிறு மணல் வீடுகளை அழித்தும் |
| முற்றா இளையார் | முற்றுதலில்லாத இளம் பெண்களுக்கு |
| விளையாட்டொடு | லீலா ரஸத்தையும் |
| காதல் வெள்ளம் | ஆசைப்பெருக்கையும் |
| விளைவித்த | உண்டாக்கின |
| அம்மான் | பெருமானுடைய |

| | |
|---|---|
| இடம் | இருப்பிடமாய்;— |
| முதிராத இன் சொல் | பரிபக்குவமாகாத மதுரமான சொல்லையும் |
| வளை வாய | வளைந்த வாயையுமுடைய |
| கிள்ளை | கிளிகள் |
| வேல் நெடு கண் முளை வாள் எயிறு மடவார் பயிற்று | வேல்போன்று நீண்ட கண்களையும், முளைக்கின்றவளவாய் ஒளியையுடைய பற்களையுமுடையரான வைதிக ஸ்திரீகள் அப்யாஸம் செய்விக்கிற |
| மொழி | வேதச் சொற்களை |
| கேட்டிருந்து | கேட்டுக்கொண்டிருந்து |
| மறை பாடும் | வேதபாராயணம் பண்ணப்பெற்ற |
| நாங்கூர் | திருநாங்கூரிலே |

மணிமாடக்கோயில் என் மனனே! வணங்கு—.

* * *—நாய்ச்சியார் திருமொழியில் "கோழியழைப்பதன் முன்னம்" "நாமமாயிரமேத்த நின்ற" என்ற இரண்டு திருமொழிகளில் விரிவாகக் கூறப்

பட்டுள்ள க்ருஷ்ணலீலைகளிரண்டும் இதில் முதலடியிற் சுருக்கப்பட்டன. ஆய்ச்சிகள் கண்ணபிரானைப் பிரிந்து விரஹதாபம் ஆறுகைக்காக அவனுக்குத் தெரியாமலே ஒருபொய்கையிற் சென்று நீராடவேணுமென நினைத்து 'நாமும் அவனுமாய் முன்பு குளித்த பொய்கைகளிற் புகுந்தால் அவன் அறிந்து வந்திடுவன்; அவனறியாததொரு பொய்கை தேடிப்போகவேணும்; அப்படி போமளவில் எல்லாருமாய்த் திரண்டுபோனால் அவன் வழியறிந்து வந்திடுவன்; ஆனபின்பு ஒருவரொருவராகப் போவோம்; அப்படிப்போமிடத்தும் வழிதெரியாதபடி இட்ட அடிச்சுவட்டை அழித்துக்கொண்டு போவோம்' என்று ஸங்கேதித்துக்கொண்டு அப்படியே எல்லோரும்போக, அப்போதைக்கப்போது எல்லாமறிந்துகொண்டேயிருக்கிற கண்ணபிரான் இருளன்னமாமேனியனாகை யாலே அவர்கள் நிழலைப்பற்றிக் கொண்டுபோய் அவர்கட்கு முன்னமே பொய்கைக்கரைபோய்ச் சேர்ந்திருக்க, இவர்கள் அவன் வந்தமை யறியாதாராய், இடைச்சிகளாகையாலே சேலைகளையும் ஆபரணங்களையு மெல்லாங்களைந்து கரையில் வைத்துவிட்டு நீரிலே அவகாஹிக்க, அவ்வளவிலே கண்ணபிரான் இவற்றையெல்லாம் வாரியெடுத்துக்கொண்டு மிகவிரைந்து குருந்தின்மேலேறி மறையநின்றான்; பிறகு ஆய்ச்சிகள் கரையேறிக் கண்டவளவில் அவைகாணாமையாலே துணுக்கென்று திகைத்து 'நம்முடன் கூடவந்தார் பிறர் ஆருமில்லையே; இவற்றை ஆகாயங்கொண்டதோ! திசைகள்கொண்டனவோ! இக்குளங் கொண்டதோ! க்ருஷ்ணன்தான் கொண்டானோ!' என்று இங்ஙனே கலங்கிப் பலபடியாகச் சங்கித்து எங்கும் பருகுபருகென்று பார்த்துக்கொண்டு வாராநிற்கக் கண்ணனைக் குருந்தமரத்தின்மேற் கண்டு பலவிதமாக யாசித்து ஆபரணவஸ்த்ரங்களைப் பெற்றுக்கொண்டமையறிக.

சிற்றில் சிதைத்தும்=மணற்கொட்டகங்களிலே சிறுமிகள் கூடிச் சிறுவீடு கட்டுவதாகச் செய்வதொரு விளையாடலுக்குச் சிற்றிலிழைக்கையென்று பெயர்; அதைக் கண்ணபிரான் காலாலுதைத்துச் சிதைப்பதும் ஒருவிளையாட்டாம்; அதற்குச் சிற்றில் சிதைக்கையென்று பெயர். இப்படி துகில்வாருவதும் சிற்றில் சிதைப்பதும் அப்பெண்டிர்க்குத் தன்மேல் காதலை அதிகரிப்பித்துக் கொள்வதற்கே யாதலால் "காதல் வெள்ளம் விளைவித்த வம்மான்" எனப்பட்டது.

"துளையார்கருமென் குழலாய்ச்சியர்" என்ற தொடர்க்கு மூன்றுவகையாகப் பொருள் கொள்ளலாம்; துளைகள் நிறைந்த கரிய மெல்லிய புல்லாங்குழல் போல் இனிய குரலுடைய ஆய்ச்சியர் என்பது ஒருவகை; (நீரிற்படிந்து) துளைதற்கு நிறைந்துள்ள கரிய மெல்லிய கூந்தலையுடைய ஆய்ச்சியர் என்பது மற்றொருவகை. துளைகள் பொருந்திய கரிய மெல்லிய குழலின் பெயரையும் (அதன் அடைமொழிகளையும்) தங்கள் கூந்தலுக்குடைய ஆய்ச்சியர் என்பது இன்னொருவகை. இவற்றுள், முதற்பொருளில் 'குழல்' என்னுஞ்சொல் உபமானத்தளவிலே நில்லாமல் உபமேயமான குரலையும் உணர்த்தினது ஆகுபெயரால். இரண்டாம் பொருளில் துளை என்னும் வினைப்பகுதியே தொழிற்பெயர்ப்

பொருள்தந்தது; முதனிலைத் தொழிற்பெயர். மூன்றும் பொருளிற் சிலவிஷயங்கள் குறிக்கொள்ளவேண்டியவை யுண்டு; கேண்மின்; தமிழில் ஒரு பதத்திற்கு இரண்டு பொருள் இருந்தால் ஒருபொருளுக்கு இசையும் அடைமொழிகளை மற்றொரு பொருளுக்கும் உபயோகிப்பதுண்டு; (உதாரணம்.) 'வஞ்சி' என்னுஞ்சொல் வஞ்சிமரத்தையும் சேரன் ராஜதானியாகிய வஞ்சிமாநகரத்தையும் பொருளாகவுடையது. வஞ்சிமரத்தைக் கூறவேண்டுங்கால் உபயோகப்படுத்தக் கூடிய இலை, காய், கொடி முதலிய அடைமொழிகள் வஞ்சிமாநகரைக் கூறுங்கால் உபயோகப்படாவாயினும் கவிகள் பிரயோகத்தில் உபயோகிப்பதுண்டு; 1. "நெட்டிலைவஞ்சிக்கோ" என்றவிடத்தும், 2. "புல்லிலைவஞ்சிப் புறமதிலலைக்கும் கல்லென்பொருநை" என்றவிடத்தும் வ்ருக்ஷவிசேஷப் பொருட்கு உரிய 'நெட்டிலை' 'புல்லிலை' என்னும் அடைமொழிகளை அம்மரப்பெயர்கொண்ட வஞ்சிமாநகர்க்கும் ஏற்றியுள்ளமை காண்க. 'நாகம்' என்னுஞ்சொல் புன்னைமரத்திற்கும் பாம்புக்கும் பெயர்; பரிபாடலில் நாகமென்ற சொல்லையிட்டுப் புன்னைமரத்தை வருணிக்குங்கால் பாம்புக்கு உரிய அடைமொழிகளைப் புன்னைக்கு இட்டனர். "ஒளிதிகழ் உத்தி உருக்கெழுநாகம்" [பரிபாடல் 12.] என்றது காண்க. இங்ஙனே பலஉண்டு. அப்படியே இங்கும் புல்லாங்குழலுக்கு இணங்கக்கூடிய அடைமொழிகள் அதன்பெயர்பூண்ட கூந்தலுக்கு ஏற்றப்பட்டனவென்க. பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில்—"துளையாரென்று துளைமிக்கிருக்கை; அதாவது சுருண்டு கறுத்து ம்ருதுவான குழலையுடையராய்" என்றருளிச் செய்திருக்கக் காண்கிறோம். கூந்தல் சுருண்டிருக்கும் நிலைமையில் துளைகள் தென்படுதல்பற்றி இங்ஙனே உரைத்தருளினர் போலும்.

[வேல் நெடுங்கண் இத்யாதி.] இத்திருப்பதியில் வைதிகப்ராஹ்மணர்கள் விசேஷமாக விளங்குவர்; அவர்கள் அநவரதமும் வேதமோதிக்கொண்டேயிருக்கையாலே அவ்வீட்டுப் பெண்பிள்ளைகளும் ஸர்வதா காதில்பட்ட உறைப்பின் மிகுதியால் வேதவாக்கியங்களைச் சொல்ல, அவர்களது கையிலேயிருந்து வளர்ந்து பேசிற்றேபேசுங் கிளிப்பிள்ளைகளும் மறைபாடுகின்றனவாம். ஆகவிப்படி வைதிகபுருஷர்கள் வாயிலும் பெண்பிள்ளைகளின் வாயிலும் கிளிப்பிள்ளைகளின் வாயிலும் வேதவொலியே மலியப்பெற்றது இத்தலம் என்றாயிற்று.

விடையோடவென்றாய்ச்சி மென்தோள்நயந்த
விகிர்தா! விளங்கு சுடராழியென்னும் *
படையோடுசங்கொன் றுடையாயெனநின்
றிமையோர்பரவுமிடம் * பைந்தடத்துப்
பெடையோடுசெங்கால வன்னந்துகைப்பத்
தோகைப்புண்டரீகத் திடைச்செங்கழுநீர் *
மடையோடநின்று மதுவிம்முநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே! (௯)

1. பரிபாடல் 12-ஆம் பாட்டினுரையிற் பரிமேலழகர் காட்டியுள்ள மேற்கோள்.
2. புறநானூறு—387.

| | |
|---|---|
| விடை | '(ஏழு) ரிஷபங்கள் |
| ஓட | பங்கமடையும்படி |
| வென்று | அவற்றை ஜயித்து |
| ஆய்ச்சி | நப்பின்னைப் பிராட்டியினுடைய |
| மென் தோள் | மெல்லிய புஜங்களை |
| நயந்த | விரும்பியணைத்த |
| விகிர்தா | விலக்ஷணபுருஷனே! |
| விளங்கு | விளங்குகின்ற |
| சுடர் | தேஜஸ்ஸையுடைய |
| ஆழி என்னும் படையோடு | சக்ராயுதத்தையும் |
| சங்கு ஒன்று | ஒப்பற்ற சங்கையும் |
| உடையாய் | உடையவனே!' |
| என நின்று | என்று சொல்லா நின்று கொண்டு |
| இமையோர் பரவும் இடம் | தேவர்கள் துதிசெய்யுமிடமாய்,— |
| பைந்தடத்து | அழகிய தடாகத்திலே, |
| செம் கால அன்னம் | சிவந்த கால்களையுடைய அன்னப்பறவை |
| பெடையோடு | பேடையோடு கூடி |
| துகைப்ப | எறித்துகைப்ப, (அதனாலே துகைப்புண்ட) |
| தொகை புண்டரீகத்திடை | திரளான தாமரைப் பூக்களினின்று பெருகின |
| மது | தேனானது |
| செங்கழுநீர் மடை ஓட நின்று விம்மும் | செங்கழுநீர் மடைகளிலும் ஓடிப் பாயும்படியாகப் பெருகப்பெற்ற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |

மணிமாடக்கோயில் என் மனனே! வணங்கு—.

* * *—'நப்பின்னைப் பிராட்டியைப் புணர்வதற்கு விரோதியாயிருந்த ஏழு எருதுகளையும் வலியடக்கி அவளை மணஞ்செய்துகொண்ட விலக்ஷண ஸுந்தரனே! திருவாழியையும் திருச்சங்கையும் திருக்கையிலேந்தின பெருமானே!' என்றிப்படி பலபடியாகத் துதித்துக்கொண்டு தேவர்கள் பணியுமிடமான திருநாங்கூரிலே மணிமாடக் கோயிலை என்மனனே! வணங்கு.

பின்னடிகளில் திருநாங்கூரின் வயற்சிறப்பு வருணிக்கப்படுகின்றது; அன்னப் பறவைகள் தாமரைப் பூக்களிலே தம்பதிகளாயிருந்துகொண்டு விளையாடும்போது அம்மலர்கள் துகைக்கப்பட்டு அவற்றினின்று மதுவெள்ளம் பெருகிச் செங்கழுநீர் மடைகள்தோறும் ஓடுகின்றதாம்.

"திரண்ட புண்டரீகங்களின் நடுவே அன்னங்கள் துகைக்க, நடுவு நிற்கிற செங்கழுநீரானது மதுவெள்ளமிடாநிற்கும்" என்ற பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திற்கிணங்க வேறுவகையாகவும் பொருளுரைத்துக் கொள்க.

விகிர்தா='விக்ருதঃ' என்னும் வடசொல் வேறுபட்டவனென்னும் பொருளுடையது; எங்குங் கண்டறியாத அழகுடையவனென்கை.

புண்டரீகம், மது—வடசொற்கள். .... .... (௬)

வண்டார் பொழில்சூழ்ந் தழகாய நாங்கூர்
மணிமாடக் கோயில் நெடுமாலுக்கு * என்றும்
தொண்டாய தொல்சீர் வயல்மங்கையர் கோன்
கலியனொலிசெய் தமிழ்மாலை வல்லார் *

கண்டார் வணங்கக் களியானை மீதே
கடல்சூ ழுலகுக் கொருகாவலராய் *
விண்டோய் நெடுவெண் குடைநீழலின் கீழ்
விரிநீ ருலகாண்டு விரும்புவரே. (கO

| | |
|---|---|
| வண்டு ஆர் | வண்டுகள் நிறைந்த |
| பொழில் | சோலைகளாலே |
| சூழ்ந்து | சூழப்பட்டு |
| அழகு ஆய | அழகியதாயிராநின்ற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| மணிமாடக் கோயில் நெடுமாலுக்கு | மணிமாடக் கோயிலில் எழுந்தருளியிருக்கிற ஸர்வேச்வரனுக்கு |
| என்றும் தொண்டு ஆய தொல் சீர் | நித்யகைங்கரியம் செய்வதையே ஸஹஜ குணமாகவுடையரும் |
| வயல் மங்கையர் கோன் | வயல் சூழ்ந்த மங்கை நாட்டிலுள்ளார்க்குத் தலைவருமான |
| கலியன் | ஆழ்வார் |
| ஒலி செய் | அருளிச்செய்த |
| தமிழ் மாலை | தமிழ்த் தொடையான இத்திருமொழியை |
| வல்லார் | ஓதவல்லவர்கள், |
| கண்டார் வணங்க | கண்டவரெல்லாம் காலிலே விழும்படி |
| களி யானை மீதே | மத்தகஜத்தின் மேலேறி (இருந்து) |
| கடல் சூழ் உலகுக்கு | கடல்சூழ்ந்த மண்ணுலகம் முழுமைக்கும் |
| ஒரு காவலர் ஆய் | தாங்களே துணையற்ற அரசராகி |
| விண் தோய் நெடு வெண் குடை நீழலின் கீழ் | வானத்தளவுமளாவிய நீண்ட வெண்கொற்றக் குடையின் கீழிருந்து |
| விரி நீர் உலகு ஆண்டு | ஆவரண ஜலம் சூழ்ந்த பிரமாண்டத்தை ஆண்டு கொண்டு |
| விரும்புவர் | மகிழ்ந்திருக்கப்பெறுவர். |

* * *—திருநாங்கூர் மணிமாடக்கோயில் திருப்பதியெம்பெருமானுக்குத் தொண்டு செய்வதையே இயற்கைக் குணமாகவுடைய திருமங்கையாழ்வாரருளிச் செய்த இத்திருமொழியை ஓதவல்லவர்கள் "ஒருநாயகமாய் ஓடவுலகுடனாண்டவர்" என்னுமாபோலே இப்பூமண்டலத்திற்கு அத்விதீய ராஜாக்களாய் வாழ்ந்து ஐச்வரிய மநுபவிக்கப்பெறுவர்களென்று—இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று.

இஹலோக புருஷார்த்தங்களைப் பலனாகக்கூறுதலில் ஆழ்வார்க்கு ஊற்றமில்லையாயினும், மருந்துதின்னப் பின்வாங்கும் பயல்களை வெல்லக்கட்டியைக் காட்டி ருசிப்பிப்பதுபோல, இஹலோக புருஷார்த்த ஸாதனங்களிலேயே ஊற்றமுடைய பிராகிருதர்களையும் இழுத்துப் பிடிக்கவேண்டி இங்ஙனே யருளிச் செய்கிறாரெனக் கொள்க.

விரும்புவர்=சிற்றின்பங்களை நுகர்ந்தபின் கிரமமாகப் பேரின்பத்தையும் அநுபவிக்க விரும்புவர் என்றும் பொருளாகும்.

காவலர்='கா' என்னும் வினைப்பகுதியே முதனிலைத் தொழிற்பெயராய்க் காத்தல் தொழிலை உணர்த்தும்; ரக்ஷிப்பதில் வல்லவர் என்றவாறு. (௧௦)

அடிவரவு:—நந்தா முதலை கொலை சிறை இழை பண் நுளை துளை விடை வண்டார் சலம்.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றும்பத்து—ஒன்பதாந்திருமொழி,

## சலங்கொண்ட விரணியன்.

அவதாரிகை:—திருநாங்கூரில், எம்பெருமான் ஸ்ரீவைகுண்டத்திலெழுந்தருளியிருப்பதுபோலவே வீற்றிருந்த திருக்கோலமாகச் சேவை சாதித்தலால் வைகுந்த விண்ணகரமென்று திருநாமம் பெற்றதென்ன வமைந்த திருப்பதியை மங்களாசாஸநஞ் செய்வதாம் இத்திருமொழி. ... ... *

சலங்கொண்ட விரணியன தகல்மார்வம் கீண்டு
தடங்கடலைக் கடைந்தமுதம் கொண்டுகந்த காளை *
நலங்கொண்ட கருமுகில்போல் திருமேனி யம்மான்
நாடோறும் மகிழ்ந்தினிது மருவியுறை கோயில் *
சலங்கொண்டு மலர்சொரியும் மல்லிகை யொண்செருந்தி
சண்பகங்கள் மணநாறும் வண்பொழிலி னூடே *
வலங்கொண்டு கயலோடி விளையாடு நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (௧)

| | | | |
|---|---|---|---|
| சலம் கொண்ட | தப்பு எண்ணங்கொண்ட | கடைந்து | கடைந்து |
| இரணியனது | ஹிரண்யாஸுரனுடைய | அமுதம் | (அதில் தோன்றிய) அமுதத்தை |
| அகல் மார்வம் | அகன்ற மார்வை | கொண்டு உகந்த | (தேவர்களுக்காக), எடுத்து (க்கொடுத்து) திருவுள்ள முவந்தவனும் |
| கீண்டு | பிளந்தொழித்தவனும் | காளை | நித்யயௌவன முடையவனும் |
| தடங்கடலை | பெரிய கடலை | | |

நலம் கொண்ட கரு முகில் போல் திருமேனி — அழகிய நீலமேகம் போன்ற திருமேனியையுடையவனுமிருக்கிற
அம்மான் — எம்பெருமான்
நாள்தோறும் — எப்போதும்
மகிழ்ந்து — திருவுள்ள முவந்து
இனிது — போக்யமாக
மருவி உறை கோயில் — பொருந்தி வாழுமிடமாய்,—
சலம் கொண்டு — தண்ணீரைப்பருகி
மலர் சொரியும் — புஷ்பங்களைச் சொரிகின்ற
ஒண் மல்லிகை செருந்தி சண்பகங்கள் — அழகிய மல்லிகைச் செடிகளும் சுரபுன்னை மரங்களும் சண்பக மரங்களும்
மணம் நாறும் — பரிமளம் வீசப்பெற்ற
வண் பொழிலினூடே — அழகியசோலைகளினுள்ளே
கயல் — மீன்களானவை
ஓடி வலங்கொண்டு விளையாடும் — ஓடித்துள்ளிவிளையாடப் பெற்ற
நாங்கூர் — திருநாங்கூரிலே
வைகுந்த விண்ணகரம் — வைகுந்தவிண்ணகர மென்னுந் திருப்பதியை
மட நெஞ்சே! வணங்கு—.

* * *—ஸ்ரீமந் நாராயண நாமத்தைக் கேட்கப்பொறாத பாவியான இரணியனுடைய மார்வைப் பிளந்தொழிக்க நரஸிம்ஹாவதாரஞ் செய்தருளினவனும், துர்வாஸ முனியின் சாபத்தினால் செல்வம் முழுவதையுமிழந்து அஸுர ராக்ஷஸர்களால் பீடிக்கப்பட்டுப் பரிபவமடைந்து பாதக்கமலம் வந்து பணிந்த தேவர்களை உய்விக்கவேண்டிக் கடல்கடைந்து அமுதமளித்தவனும், எத்தனை அவதாரங்கள் பண்ணினாலும் நித்யயுவாவாகவே விளங்குபவனும், நீலமேக நிறத்தனுமான எம்பெருமான் எழுந்தருளி யிருக்குமிடமான திருநாங்கூர் வைகுந்த விண்ணகரத் திருப்பதியைத் தொழுவாய் மனமே! என்கிறார்.

எம்பெருமான் திருவுள்ளமுவந்து எழுந்தருளி யிருப்பதற்குப் பாங்கான தலம் என்பதை மூதலிக்கிறார் பின்னடிகளில். மல்லிகை, சுரபுன்னை, சண்பகம் முதலியவை எங்கும் அடர்ந்திருப்பதனால் அவற்றின் நறுமணம் நிறைந்திருக்கின்றது. நீரைவிட்டுப் பிரிந்தால் ஒரு நொடிப்பொழுதும் வாழமாட்டாத மீன்களும் நீர் உறுத்துவதாகக்கொண்டு அதைவிட்டு நீங்கி, அதிற்காட்டிலும் நிலமிதிதானே நன்றாயிருக்கிற சோலையிலே வந்துசேர்ந்து அச்சோலையின் நறுமணத்தை மோந்துகொண்டு துள்ளி விளையாடுகின்றனவாம்.

பொழிலினூடே கயல்கள் விளையாடுவதாக மூலத்திற் கூறியிருந்தாலும், பொழில்களிலே சில பொய்கைகளும் இருக்கக்கூடியவையாதலால் அவற்றிலே மீன் விளையாடுவதைக் கூறுவதாகப் பொருள்கொள்ளலா மென்பர் சிலர்; பெரியவாச்சான்பிள்ளையின் பரமரஸமான வியாக்கியானத்தின் சுவையறியாமையே.

முதலடியில், 'ஜலம்' என்னும் வடசொல் சலமெனத் திரிந்தது. மூன்றாமடியில் ஜலமென்பது சலமென்றாயிற்று. இச்சொல்லுக்குத் தண்ணீரென்று பொருள்கொள்ளாமல் சீற்றமென்று பொருள்கொண்டு, மல்லிகை செருந்தி

சண்பகங்கள் ஒன்றோடொன்று போரிடுவனபோன்று மிகமிக மலர்சொரிகின்றமையைக் கூறுவதாக உரைப்பதுமொக்கும். வித்யார்த்திகள் ஒருவர்க்கொருவர் ஸ்பர்த்தையோடு படித்துக் கல்வியில் தேர்ச்சியடைவது போலாம். .... (க)

திண்ணியதோ ரரியுருவாய்த் திசையனைத்தும் நடுங்கத்
தேவரோடு தானவர்கள் திசைப்ப * இரணியனை
நண்ணியவன் மார்வகலத் துகிர்மடுத்த நாதன்
நாடோறும் மகிழ்ந்தினிது மருவியுறை கோயில் *
எண்ணில்மிகு பெருஞ்செல்வத் தெழில்விளங்கு மறையும்
ஏழிசையும் கேள்விகளும் இயன்றபெருங் குணத்தோர் *
மண்ணில்மிகு மறையவர்கள் மலிவெய்து நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே ! (உ)

| | |
|---|---|
| திசை அனைத்தும் | எல்லாத்திசைகளிலுள்ளவர்களும் |
| நடுங்க | நடுங்கும்படியாகவும் |
| தேவரோடு தானவர்கள் திசைப்ப | தேவரும் தானவரும் கலங்கும்படியாகவும் |
| திண்ணியது ஓர் அரி உரு ஆய் | வலிமிக்கநரஸிம்ஹரூபியாய் |
| இரணியனை | ஹிரண்யாஸுரனை |
| நண்ணி | கிட்டி |
| அவன் | அவனுடைய |
| மார்வு அகலத்து | அகன்ற மார்விடத்து |
| உகிர் | (திருக்கை) நகங்களை |
| மடுத்த | ஊன்றவைத்துப் பிளந்தொழித்த |
| நாதன் | எம்பெருமான் |

நாள்தோறும் மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்—;

| | |
|---|---|
| எண்ணில் மிகு | எண்ணமுடியாமல் மிகுந்த [அளவிறந்த] |
| பெரு செல்வத்து | (நிர்த்தோஷத்வம் முதலிய) பெருஞ்செல்வத்தோடு கூடி |
| எழில் விளங்கும் | அழகு விளங்காநின்ற |
| மறையும் | வேதங்களும் |
| ஏழ் இசையும் | ஸப்தஸ்வரங்களும் |
| கேள்விகளும் | வேதார்த்தச்ரவணங்களும் |
| இயன்ற | பொருந்திய |
| பெரு குணத்தோர் | மஹாகுணசாலிகளாய் |
| மண்ணில் மிகு | பூமிக்குள் சிறப்புப்பெற்ற |
| மறையவர்கள் | வைதிகப்ராம்மணர்கள் |
| மலிவு எய்து | நிறைந்திருக்கப்பெற்ற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |

வைகுந்த விண்ணகரம் மட நெஞ்சே ! வணங்கு—.

* * *—கீழ்ப்பாட்டில் "சலங்கொண்ட விரணியனதகல்மார்வங் கீண்டு" என்று சுருக்கமாக நரஸிம்ஹாவதாரத்தை அநுஸந்தித்ததில் த்ருப்திபெறாமல் அதனையே விரிவாக அநுஸந்திக்கிறாரிதில். ஒரு தூணில் நின்று இங்ஙனே சேராச்சேர்த்தியான நரசிங்கவடிவு தோன்றினால் இன்னமும் எந்தெந்த வஸ்துவில்நின்றும் எந்தெந்த விதமான வடிவங்கள் தோன்றுமோவென்று அனைவரும் அஞ்சி நடுங்கும்படியாக நரஸிம்ஹாவதாரம் பண்ணினபடியைப் பேசுகிறார்

முதலடியில். திண்ணியது ஓரரியுருவாய்=இரணியனுடைய கோபாவேசம் அளவற்றதாயிருக்கச் செய்தேயும் அதைக்கண்டு பின்வாங்காமல் அழன்று வெளிக்கிளம்பினமைபற்றித் 'திண்ணியது' என விசேஷிக்கப்பட்டது. எரிகிற நெருப்பிலே சென்று கிட்டுவாரைப்போலே க்ரூரனான இரணியனைத் தீண்டி அவனுடைய மார்பிலே உகிரையூன்றி அவனையழியச் செய்து தன்னுடைய ஈச்வரத்வத்தை நிலைநிறுத்திக் கொண்டவன் நித்யவாஸம் பண்ணுமிடம் திருநாங்கூரில் வைகுந்த விண்ணகரம். இப்படி பகவானுக்குமாத்திரம் இருப்பிடமாயிருக்கையன்றியே, ஸகல சாஸ்த்ர நிபுணர்களாய் ஆத்மகுணசாலிகளான பரம பாகவதர்களுக்கும் இருப்பிடமானது இத்தலம். .... .... ... (௨)

அண்டமுமிவ் வலைகடலு மவனிகளு மெல்லா
மமுதுசெய்த திருவயிற்ற னரன்கொண்டு திரியும் *
முண்டமது நிறைத்தவன்கண் சாபமது நீக்கும்
முதல்வனவன் மகிழ்ந்தினிது மருவியுறை கோயில் *
எண்டிசையும் பெருஞ்செந்நெ லிளந்தெங்கு கதலி
யிலைக்கொடியொண் குலைக்கமுகோ டிசலிவளஞ் சோரிய *
வண்டுபல விசைபாட மயிலாலு நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (௩)

| | |
|---|---|
| அண்டமும் | அண்டங்களும் |
| இ அலை கடலும் | இந்த அலையெறிகின்ற கடல்களும் |
| அவனிகளும் எல்லாம் | பூமிகளும் ஆகிய எல்லாவற்றையும் |
| அமுதுசெய்த | (பிரளயகாலத்தில்) உட்கொண்ட |
| திரு வயிற்றன் | திருவயிற்றையுடையவனும், |
| அரன் | ருத்ரன் |
| கொண்டு | தன்கையில் ஏற்றுக்கொண்டு |
| திரியும் | திரிந்த |
| முண்டம் அது | தலையோட்டை |
| நிறைத்து | நிறையச் செய்து |
| அவன்கண் சாபம் அது நீக்கும் | அவனிடத்து நேர்ந்திருந்த பிரமஹத்திசாபத்தைப் போக்கினவனுமான |
| முதல்வன் அவன் | ஜகத்காரண பூதனான ஸர்வேச்வரன் |
| மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்—; | |
| எண்திசையும் | பார்த்தவிடமெங்கும் |
| பெரு செந்நெல் | பெரிய செந்நெற் பயிர்களும் |
| இள தெங்கு | இளந் தென்னைமரங்களும் |
| கதலி | வாழைமரங்களும் |
| இலை கொடி | வெற்றிலைக் கொடிகளும் |
| ஒண் குலை கமுகோடு | அழகிய குலைகளையுடைய பாக்குமரங்களும் |
| இசலி | ஒன்றுக் கொன்று மிகைத்துக் கொண்டு |
| வளம் சொரிய | செழித்து வளரப்பெற்றதும் |
| வண்டு பல இசை பாட | வண்டுகள் பலவகையான ராகங்களைப் பாடப் பெற்றதும் |
| மயில் ஆலும் | மயில்கள் ஆடப்பெற்றதுமான |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| வைகுந்த * * * வணங்கு—. | |

* * *—வயல்வாய்ப்பும் பொழில்வாய்ப்பும் அமைந்ததான வைகுந்த விண்ணகரத்தில் எழுந்தருளியிருக்கு மெம்பெருமான் அடியாருடைய ஆபத்துக்கு உதவும் நற்றுணைவனென்கிறார். உலகங்களெல்லாம் பிரளயப் பெருங் கடலில் மூழ்கி யழிந்துபோவதா யிருக்கையில் எல்லாவற்றையும் தனது திரு வயிற்றினுள்ளடக்கி ரக்ஷித்தருளினவனும், ப்ரஹ்மஹத்தி சாபத்தினால் பிச்சை யெடுத்துத் திரிந்த ருத்ரனை அப்பாவத்தில் நின்றும் தவிர்த்தவனுமான பெருமான் திருவுள்ள முவந்து வாழுமிடம் திருநாங்கூர் வைகுந்த விண்ணகரம். (௩)

கலையிலங்கு மகலல்கு லரக்கர்குலக் கோடியைக்
காதோடு மூக்குடனரியக் கதறியவ ளோடி *
தலையிலங்கை வைத்து மலையிலங்கை புகச்செய்த
தடந்தோளன் மகிழ்ந்தினிது மருவியுறை கோயில் *
சிலையிலங்கு மணிமாடத் துச்சிமிசைச் சூலம்
செழுங்கொண்ட லகடிரியச் சோரிந்தசெழு முத்தம் *
மலையிலங்கு மாளிகைமேல் மலிவெய்து நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (௪)

| | |
|---|---|
| கலை இலங்கும் | நல்லசேலை விளங்கப் பெற்ற |
| அகல் அல்குல் | அகன்ற நிதம்ப ப்ரதேசத்தை யுடையளான |
| அரக்கர் குலக் கொடியை | சூர்ப்பணகையினுடைய |
| காதொடு மூக்கு | காதையும் மூக்கையும் |
| உடன் அரிய | உடனே அறுக்க |
| அவள் | அவ்வரக்கி |
| கதறி | வாய்விட்டு அலறி |
| தலையில் | தன் தலைமேலே |
| அங்கை வைத்து | உள்ளங்கையைவைத்துக் கொண்டு |
| மலை இலங்கை ஓடி புக | மலைமேலுள்ள இலங்கையிலே ஓடிப் புகுந்து அழும்படி |
| செய்த | பண்ணின |
| தட தோளன் | மஹாபாஹுவான பெருமான் |
| மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்—; | |
| சிலை இலங்கு | ஒளி விளங்குகின்ற |
| மணி மாடத்து உச்சி மிசை | ரத்னங்களிழைத்த மாளிகைகளின் முடிமேலே யிருக்கிற |
| சூலம் | சூலங்கள் |
| செழு கொண்டல் | அழகிய மேகங்களினுடைய |
| அகடு | கீழ்வயிற்றை |
| இரிய | பிளக்க (அதனாலே) |
| சொரிந்த | பெய்த |
| செழு முத்தம் | அழகிய முத்துக்கள் |
| மலை இலங்கு மாளிகை மேல் | மலைபோல்விளங்குகின்ற மாளிகைகளின்மேலே |
| மலிவு எய்து | குவிந்து கிடக்கப்பெற்ற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| வைகுந்த * * * வணங்கு—. | |

* * *—சூர்ப்பணகையை அங்கபங்கம் பண்ணின பெருமான் வாழுமிடமான வைகுந்த விண்ணகரை நெஞ்சே! வணங்கு என்கிறார். விகாரமான

ராக்ஷஸ வடிவத்துடனே சென்று நம்மை விவாஹஞ்செய்து கொள்ளும்படி வேண்டினால் வேட்கை நிறைவேறாதென்றெண்ணி அழகியதொரு வடிவமெடுத்து வந்தாளாதலால் கலையிலங்கு மகலல்குலரக்கர் குலக்கோடி எனப்பட்டாள். இவள் காதும் மூக்குமறுப்புண்டவுடனே ஜநஸ்தானத்திற் சென்று அங்கிருந்த தன் தமையனாகிய கரனிடத்துச் சென்று தான்பட்ட பரிபவத்தைச் சொல்லிப் புரண்டழுது அவனுக்குக் கோபத்தை யுண்டாக்கி, பதினாலாயிரம் ஸேநாதிபதிகளையும் ஸேனைகளையும் தூஷணன் த்ரிசிரஸ் என்பவர்களையும் கடைசியாக அக்கரனையும் ராமபாணத்துக்கு இரையாக்கி மடிவித்து, இச்செய்திகளையெல்லாம் இராவணனுக்கு அறிவித்து அவன் காலின்கீழ்க் கதறியழுவதற்காக இலங்கை சென்றமை இரண்டாமடியிற் கூறப்பட்டது. பொறுக்கமுடியாத துன்பமடைந்தவர்கள் தலைமேல் கையைவைத்துக் கொள்ளுதல் வழக்கமானது பற்றித் தலையில் அங்கை வைத்து எனப்பட்டது.

திருநாங்கூரின் செல்வச்சிறப்பை வருணிக்கிறார் பின்னடிகளில். மாடமாளிகைகளின் முனையிலே பாதுகாப்புக் குறிப்பாகச் சூலங்கள் நாட்டப்படும்; ("நீடுமாடத் தனிச்சூலம் போழ்கக் கொண்டல்துளிதூவ" (7–5–6) என்பர் திருவழுந்தூர்ப் பதிகத்திலும்.) அந்த சூலங்கள் மேகமண்டலத்தளவும் ஓங்கியிருப்பதனால், அவை மேகங்களின் வயிறுகளைக் குத்திப்பிளக்க, அவற்றினின்றும் முத்துக்கள் சிதறிவிழுந்து மாளிகைகளிலெங்கும் மலிந்து கிடக்கின்றனவாம். .... ... .... ... .... ... (௪)

மின்னனைய நுண்மருங்குல் மெல்லியற்கா இலங்கை
வேந்தன் முடியொருபதும் தோளிருபதும் போயுதிர *
தன்னிகரில் சிலைவளைத்தன் றிலங்கைபொடி செய்த
தடந்தோளன் மகிழ்ந்தினிது மருவியுறை கோயில் *
செந்நெலொடு செங்கமலம் செல்கயல்கள் வாளை
செங்கழுநீரொடு மிடைந்து கழனி திகழ்ந்தெங்கும் *
மன்னுபுகழ் வேதியர்கள் மலிவெய்து நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (௫)

அன்று — முன்பொருகாலத்தில்,
மின் அனைய நுண் மருங்குல் மெல்லியற்கு ஆ — மின்னல்போன்று நுட்பமான இடையையுடைய ஸீதாபிராட்டிக்காக
இலங்கை வேந்தன் — இராவணனுடைய
முடி ஒருபதும் — பத்துத்தலைகளும்
தோள் இருபதும் — இருபது தோள்களும்
போய் உதிர — சின்னபின்னமாம்படி
நிகர் இல் — ஒப்பற்ற
தன் சிலை — தனது கோதண்டவில்லை
வளைத்து — வளையச்செய்து (அம்புகளைச்செலுத்தி)
இலங்கை — லங்காபுரியை
பொடி செய்த — பொடியாக்கின
தட தோளன் — மஹாவீரன்
மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்—;
செந்நெலொடு — செந்நெல்களும்

| | | | |
|---|---|---|---|
| வசம் கமலம் | செந்தாமரைப்பூக்களும் | திகழ்ந்து | விளங்கப்பெற்றதும் |
| சேல் கயல்கள் வாளை | மீன் விசேஷங்களும் | மன்னு புகழ் | நித்யமான கீர்த்தியையுடைய |
| செங்கழுநீரொடு | செங்கழுநீர்ப்பூக்களும் | வேதியர்கள் | வைதிகர்கள் |
| மிடைந்து | சேர்ந்துகொண்டு | மலிவு எய்து | நிறைந்திருக்கப் பெற்றதுமான |
| கழனி எங்கும் | கழனிகளுள்ள விடமெங்கும் | நாங்கூர் | திருநாங்கூரிலே |
| | | வைகுந்த * * * வணங்கு—. | |

* * *—பிராட்டியைச் சிறைவைத்த குற்றத்திற்காக இராவணனைச் சித்திரவதம் பண்ணி முடித்த பெருவீரன் எழுந்தருளியிருக்குமிடம் வைகுந்த விண்ணகரம். வெளிப்புறங்களிற் பார்த்தால் வயல்களின் வளம் வாசாமகோசரம்; உள்ளே பார்த்தால் வைதிகர்களின் வளம் வாசாமகோசரம். இப்படி எங்கும் விலக்ஷணமான திவ்யதேசத்தை நெஞ்சே! வணங்கு. .... (௫)

பெண்மைமிகு வடிவுகொடு வந்தவளைப் பெரிய
பேயினது உருவுகொடு மாள வுயிருண்டு *
திண்மைமிகு மருதொடு நற்சகட மிறுத்தருளும்
தேவனவன் மகிழ்ந்தினிது மருவியுறை கோயில் *
உண்மைமிகு மறையொடு நற்கலைகள் நிறைபொறைக
ளுதவுகொடை யென்றிவற்றி னொழிவில்லா * பெரிய
வண்மைமிகு மறையவர்கள் மலிவெய்து நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (௬)

| | | | |
|---|---|---|---|
| பெண்மை மிகு வடிவு கொடு | உத்தம ஸ்த்ரீயின் வடிவைப் பூண்டுகொண்டு | தேவன் அவன் | அப்பெருமான் |
| | | மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்—; | |
| வந்தவளை | (கொல்லுவதற்காக) வந்த பூதனையானவள் | உண்மை மிகு மறையொடு | உள்ளது உள்ளபடி சொல்லுகிற வேதங்களென்ன |
| பெரிய பேயினது உருவு கொடு மாள | தன் நிஜமான கொடிய பேய்வடிவத்துடனே இறக்கும்படியாக | நல் கலைகள் | (அந்த வேதங்களுக்கு வியாக்கியானமான) சிறந்த இதிஹாஸ புராணாதிகளென்ன (இவற்றையும்) |
| உயிர் உண்டு | (அவளது) உயிரை உறிஞ்சியுண்டவனும் | நிறை | நிறைந்துகிடக்கிற |
| திண்மை மிகு மருதொடு | திடமாக வேரூன்றிக் கிடந்த மருதமரத்தையும் | பொறைகள் | பொறுமை முதலிய குணங்களென்ன |
| | | உதவு கொடை | கேட்டார் கேட்டபடி கொடுக்கும் ஔதார்யமென்ன |
| நல் சகடம் | கொடிய சகடத்தையும் | | |
| இறுத்து அருளும் | முறித்தருளினவனுமுள்ள | என்று இவற்றின் ஒழிவு இல்லா | என்றிவை முதலான குணங்களையும் எப்போதும் உடையவர்களாய் |

பெரிய வண்மை மிகு { ஆத்மஸமர்ப்பணமாகிற சிறந்த ஔதார்யத்தையு முடையவர்களான
மறையவர்கள் வைதிகப்ராஹ்மணர்கள்
மலிவு எய்தும் நாங்கூர் } மலிந்திருக்கப்பெற்ற திருநாங்கூரிலே
வைகுந்தவிண்ணகரம் மடநெஞ்சே! வணங்கு'

* * *—வைகுந்தவிண்ணகரத்தி லெழுந்தருளியிருக்கு மெம்பெருமான் இப்போதும் கிருஷ்ணாவதார சேஷ்டிதங்கள் தோற்றவிருப்பவன்; பேய்ச்சியின் முலைசுவைத்து அவளை முடித்தவனும், உரலோடு பிணிப்புண்டு தவழ்ந்து செல்லுகையில் இரட்டை மருதமரங்களை முறித்துத்தள்ளினவனும், சகடாஸுரனை வீழ்த்திக்கொன்றவனுமான கண்ணபிரானே இங்குள்ளான்.

இத்திருப்பதியில் வாழ்பவர்களோ வென்னில்; வேதவேதாங்கங்களை நன்கு கற்றுணர்ந்தவர்களும் பொறுமை ஔதார்யம் முதலிய குணங்களால் மிக்கவர்களுமாவர். மூன்றாமடியில் "உதவுகொடை" என்றதற்கும் நான்காமடியில் "வண்மை மிகு" என்றதற்கும் வாசி ஏதென்னில்; யாசகர்களுக்கு தானம் பண்ணுகிறபடியைச் சொல்வது மூன்றாமடி; எம்பெருமானிடத்தில் ஆத்மஸமர்ப்பணம் பண்ணினபடியைச் சொல்வது நான்காமடி—என்று வாசி காண்க. ... ... .... ... ... (சு)

விளங்கனியை யிளங்கன்று கொண்டுதிர வெறிந்து
வேல்நெடுங்க ணாய்ச்சியர்கள் வைத்ததயிர் வெண்ணெய் *
உளங்குளிர வமுதுசெய்திவ் வுலகுண்ட காளை
உகந்தினிது நாடோறும் மருவியுறை கோயில் *
இளம்படிநற் கமுகுகுலைத் தெங்குகொடிச் செந்நெல்
ஈன்கரும்பு கண்வளரக் கால்தடவும் புனலால் *
வளங்கொண்ட பெருஞ்செல்வம் வளருமணி நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (எ)

இள கன்று கொண்டு } (வத்ஸாஸுரனென்கிற ஒரு) இளங்கன்றைத் தூக்கி
விளங்கனியை உதிர எறிந்து { விளாம்பழங்கள் உதிரும்படி (கபித்தாஸுரன் மேல்) வீசியெறிந்தவனும்,
வேல் நெடு கண் ஆய்ச்சியர்கள் { வேல்போன்று நீண்ட கண்களையுடையரான இடைச்சிகள்
வைத்த { (உறிகளில்) சேமித்துவைத்த
தயிர் வெண்ணெய் { தயிரையும் வெண்ணெயையும்
உளம் குளிர அமுது செய்து { தன் திருவுள்ளம் குளிரும்படி அமுதுசெய்தும் (அதனால் த்ருப்தி பெறாதவன் போன்று)
இ உலகு உண்ட { இந்த லோகங்களை யெல்லாம் அமுது செய்தவனுமா யிருக்கிற
காளை நித்யயுவாவான பெருமான்
உகந்து இனிது நாள்தோறும் மருவி உறை கோயில்—;
இள படி நல் கமுகு { இளமையை இயல்வாக வுடைய நல்ல பாக்குமரங்களும்

| | | | |
|---|---|---|---|
| குலை தெங்கு | குலைகளையுடைய தென்னைமரங்களும் | புனலால் | தண்ணீரினால் |
| கொடி | வெற்றிலைக் கொடிகளும் | வளம் கொண்ட | அழகு மிகுந்ததும் |
| செந்நெல் | செந்நெற்பயிர்களும் | பெரு செல்வம் வளரும் | மிக்க ஐச்வரியம் பொலிந்திருப்பதும் |
| ஈன் கரும்பு | இனிய கரும்புகளும் (ஆகிய இவை) | அணி | அழகியதுமான |
| கண்வளர | நாடோறும் செழித்தோங்கி வளரும்படி | நாங்கூர் | திருநாங்கூரிலே |
| கால் தடவும் | அடியிலே பாய்கின்ற | வைகுந்தவிண்ணகரம் மட நெஞ்சே! வணங்கு—. | |

* * *—முள்ளைக்கொண்டே முள்ளைக்களைவதுபோல வத்ஸாஸுரனைக் கொண்டு கபித்தாஸுரனை முடித்தவனும், அவ்வவ்வீடுகளிலே இடைச்சிகள் உறிகளிலே சேமித்துவைத்திருந்த தயிர் வெண்ணெய் நெய் பால் முதலிய வற்றை த்ருப்தியுண்டாமளவும் அமுது செய்தவனும், அவ்வளவிலும் வயிறு நிறையாதவன்போன்று பிரளயகாலத்தில் உலகங்களையெல்லாம்வாரி வயிற்றிற் கொண்டவனுமான பெருமான் திருவுள்ளமுவந்து வாழுமிடமாயும், பாக்கு மரங்கள் தென்னைமரங்கள் வெற்றிலைக்கொடிகள் செந்நெற்பயிர்கள் கரும்புகள் முதலியவை செழித்துவளரப்பெற்றதாயுமுள்ள வைகுந்தவிண்ணகரத்தை நெஞ்சே! வணங்கு. ... .... .... .... (எ)

ஆறாத சினத்தின்மிகு நரகனுர மழித்த
அடலாழித் தடக்கையன் அலர்மகட்கு மரற்கும் *
கூறாகக் கொடுத்தருளுந் திருவுடம்ப னிமையோர்
குலமுதல்வன் மகிழ்ந்தினிது மருவியுறை கோயில் *
மாறாத மலர்க்கமலம் செங்கழுநீர் ததும்பி
மதுவெள்ள மொழுகவய லுழவர்மடை யடைப்ப *
மாறாத பெருஞ்செல்வம் வளருமணி நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (அ)

| | | | |
|---|---|---|---|
| ஆறாத | தணியாமல் வளர்கின்ற | அலர் மகட்கும் | பெரியபிராட்டியார்க்கும் |
| சினத்தின் | கோபத்தினால் | அரற்கும் | சிவபிரானுக்கும் |
| மிகு | மிகுந்தவனான | கூறு ஆக கொடுத் தருளும் திரு உடம்பன் | பகுதியாகக் கொடுக்கப்பட்ட திருமேனியை யுடையவனும் |
| நரகன் | நரகாசுரனுடைய | | |
| உரம் | மிடுக்கை | | |
| அழித்த | தொலைத்த | இமையோர் குலம் முதல்வன் | நித்யஸூரிகள் திரளுக்கு நாதனுமான எம்பெருமான் |
| அடல் ஆழி | தீக்ஷ்ணமான திருவாழியை | | |
| தட கையன் | தனது தடங்கையிலே யுடையவனும் | மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்—; | |

| | | | |
|---|---|---|---|
| மாறுத மலர் கமலம் | மாறுத மலரையுடைய தாமரைகள் | உழவர் | பயிர்த்தொழில் செய்பவர்கள் |
| செங்கழுநீர் | செங்கழுநீர்ப்பூக்கள் (ஆகிய இவற்றில்நின்று) | வயல் மடை அடைப்ப | (தங்கள் தங்கள்) கழனிமடைகளை யடைக்கப்பெற்றதும் |
| மது வெள்ளம் | தேன் வெள்ளமானது | மாறுத பெரு செல்வம் வளரும் அணி நாங்கூர் | ஓயாத மிக்க செல்வம் வளர்வதுமான அழகிய திருநாங்கூரில் |
| ததும்பி ஒழுக | இடைவிடாது பாய்வதனால் | | வைகுந்தவிண்ணகரம் மட நெஞ்சே! வணங்கு—. |

* * *—எம்பெருமான் வராஹாவதாரஞ்செய்து பூமியைக் கோட்டால் குத்தியெடுத்தபொழுது எம்பெருமானுடைய ஸ்பர்சத்தால் பூமிதேவிக்குக் குமாரனாய்ப் பிறந்தவனும், அஸமயத்திற் புணர்ந்து பெறப்பட்டதனால் அஸுரத்தன்மை பூண்டவனுமான நரகன் என்பவன் பிராக்ஜோதிஷமென்னும் பட்டணத்திலிருந்துகொண்டு ஸகல ப்ராணிகளையும் நலிந்து தேவரிஷி கந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும் ராஜாக்களின் கன்னிகைகளையும் பற்பலரைப் பலாத்காரமாய் அபஹரித்துக் கொண்டுபோய்த் தான் மணம்புணர்வதாகக் கருதித் தன்மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும் மந்தரகிரி சிகரமான ரத்நபர்வதத்தையும் தேவமாதாவான அதிதிதேவியின் குண்டலங்களையுங் கவர்ந்துபோனதுமன்றி இந்திரனுடைய ஐராவதயானையையும் அடித்துக்கொண்டுபோகச் சமயம்பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரனது வேண்டுகோளால் கண்ணபிரான் கருடனை வரவழைத்துப் பூமிதேவியின் அம்சமான ஸத்யபாமையுடனே தான் கருடன்மேலேறி அந்நகரத்தையடைந்து சக்கராயுதத்தைப் பிரயோகித்து அவனது மந்திரியான முரன் முதலிய பல அஸுரர்களையும் இறுதியில் அந்த நரகாஸுரனையும் அறுத்துத் தள்ளியழித்து அவன் பலதிசைகளிலிருந்து கொண்டுவந்து சிறைப்படுத்தியிருந்த பதினாறுயிரத்தொரு நூறுகன்னிகைகளையும் ஆட்கொண்டனனாதலால் "ஆறுதசினத்தின் மிகு நரகனுரமழித்த அடலாழித் தடக்கையன்" என்றார்.

அலர்மகட்கும் அரற்குங்கூறுகக் கொடுத்தருளுந் திருவுடம்பன்=நித்யாநபாயினியான பிராட்டிக்குப்போலவே தாமஸதெய்வமான ருத்ரனுக்கும் தனது திருமேனியில் இடம் கூறுபடுத்திக் கொடுத்து ஆதரிக்குமவனும் எம்பெருமான். இதனால் பிரானது ஸௌசீல்யகுணத்தை அநுபவித்தவாறு. திருவாய்மொழியில் "வலத்தனன் திரிபுரமெரித்தவன்" (1—3—9) என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் "[Grantha text] = பச்யைகாதச மே ருத்ராந் தக்ஷிணம் பார்ச்வமாச்ரிதாந்" என்ற மோக்ஷதர்ம வசநத்தை எடுத்துக்காட்டியிருப்பது இங்கே அநுஸந்தேயம். "[Grantha text]

நிவாஸஃ பரிகல்பிதஃ = தபஸா தோஷிதஸ் தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா, ஸ்வபார்ச்வே தக்ஷிணே சம்போர் நிவாஸஃ பரிகல்பிதஃ." என்றொரு வசநமும் இருபத்தினாலாயிரப்படியிற் காண்பதுண்டு. [சிவன்பண்ணின தவத்தினால் திருவுள்ளமுவந்த திருமால் அவனுக்குத் தனது வலவருகிலே வாஸஸ்தாநமமைத்துக் கொடுத்தருளினன்—என்பது இதன் பொருள்.]

"ஏறாளுமிறையோனுந் திசைமுகனுந் திருமகளுங், கூறாளுந் தனியுடம்பன்" என்றும், "அக்கும்புலியினதளு முடையாரவரொருவர், பக்கம் நிற்க நின்ற பண்பர்" என்றும் ஆழ்வார்கள் அடிக்கடி அருளிச்செய்கிறார்களே, சிவன் முதலானோர் எப்போதும் எம்பெருமானுடைய திருமேனியைப் பற்றியிருக்கிறார்களோ? என்றொரு கேள்வி பிறக்கக்கூடும்: இந்த சங்கையும் இதற்குப் பரிஹாரமும் பூருவர்களின் வியாக்கியானங்களிலேயே உள்ளன; கீழ் உதாஹரித்த திருவாய்மொழிப் பாசுரத்தின் வியாக்கியானங்களிலே—"ஸர்வகாலமும் இவர்கள் எம்பெருமானுடைய திருமேனியிலே இருப்பர்களோ வென்னில்; ஆபத்துக்களிலே திருமேனியிலே இடங்கொடுத்தருளும்; அது மஹாகுணமாகையாலே ஆழ்வார்கள் எப்போது மொக்க அருளிச்செய்து கொண்டு போருவர்கள். ஸாமந்தர்க்குப் புறம்பே நாடுகள் கனக்கவுண்டாகிலும் மாளிகைக்குள்ளே செம்பாலே நாழியரிசியைத் தங்களுக்கு வரிசையாக நினைத்திருப்பர்களிறே: அப்படியே இவர்களுந் திருமேனியில் பண்ணிவைக்கும் ப்ராப்தி விடார்களிறே. ஓரோ கலஹங்களிலே அடையவளைந்தானுக்குள்ளே குடிவாங்கியிருந்து கலஹந்தெளிந்தவாறே புறம்பே புறப்பட்டாலும் 'இவ்விடம் இன்னார் பற்று, இவ்விடம் இன்னார்பற்று' என்று பின்னும் ப்ராப்தி சொல்லிவைக்குமாபோலே." என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கத்தக்கன.

ஆக, நரகாஸுரனை நாசஞ்செய்தவனும், பிராட்டிக்கும் சிவனுக்குமொக்கத் தனது திருமேனியிலே இருப்பிடம் வகுத்துக் கொடுத்து ஆதரிப்பவனுமான தேவாதிதேவன் வாழுமிடமாய், தாமரை மலர்களினின்றும் செங்கழுநீர் மலர்களினின்றும் மதுவானது வெள்ளமிட்டுப் பாய, வயலிலுள்ள பயிர்த்தொழிலாளர் 'இப்பெரு வெள்ளத்தினால் பயிர்க்கு அழிவு விளைந்திடும்' என்றஞ்சி மடைகளை யடைக்கப்பெற்றதான திருநாங்கூரில் வைகுந்த விண்ணகரத்தை மனமே! வணங்கு—என்றாராயிற்று.

"மாறுதபெருஞ் செல்வம் வளரும்" என்ற விடத்திற்கு வியாக்கியானமருளாநின்ற பெரியவாச்சான்பிள்ளை—"அங்கே உடைந்தது கிடாய், இங்கே உடைந்தது கிடாய், ஸஹ்யப் பெருக்குக்கிடாய் என்று கூப்பிடுகிற ஆரவாரமேயாய்க் கிடக்குமாயிற்று" என்றருளிச் செய்யுமழகு காண்மின். ... (அ)

வங்கமலி தடங்கடலுள் வானவர்களோடு
மாமுனிவர் பலர்கூடி மாமலர்கள் தூவி *
எங்கள் தனிநாயகனே! யெமக்கருளா யென்னும்
ஈசனவன் மகிழ்ந்தினிது மருவியுறை கோயில் *

செங்கயலும் வாளைகளும் செந்நெலிடைக் குதிப்பச்
சேலுகளும் செழும்பணைசூழ் வீதிதோறும் மிடைந்து *
மங்குல்மதி யகடுரிஞ்சு மணிமாட நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (க)

| | |
|---|---|
| வங்கம் மலி | மரக்கலங்கள் நிறைந்து கிடக்கிற |
| தட கடலுள் | பெரிய திருப்பாற்கடலிலே |
| வானவர்களோடு மா முனிவர் பலர் கூடி | தேவர்களும் மஹர்ஷிகளும் பலர் ஒன்றுகூடி |
| மா மலர்கள் தூவி | சிறந்த புஷ்பங்களைப் பணிமாறி |
| எங்கள் தனி நாயகனே எமக்கு அருளாய் என்னும் | "எங்களுக்கு அத்விதிய நாதனானவனே! எமக்குக் கிருபை பண்ணவேணும்" என்று வேண்டப்பெற்ற |
| ஈசன் அவன் | எம்பெருமான் |
| மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்—; | |
| செம் கயலும் | செவ்விய கயல்மீன்களும் |
| வாளைகளும் | வாளைமீன்களும் |
| செந்நெலிடை | செந்நெற்பயிர்களினிடையே |
| குதிப்ப | துள்ளிக்குதிக்க, |
| சேல் உகளும் | சேல்மீன்களும் கூடவே களித்து விளையாடப்பெற்ற |
| செழு பணை | அழகிய தடாகங்கள் |
| சூழ் வீதிதொறும் மிடைந்து | பெரிய வீதிகள்தோறும் நெருங்கியிருக்கப் பெற்றதும் |
| மங்குல் மதி அகடு உரிஞ்சும் மணி மாடம் | ஆகாசத்தில் திரிகிற சந்திரனுடைய கீழ்வயிறு தேயும்படி யுயர்ந்த மணிமாடங்களை யுடையதுமான |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| வைகுந்தவிண்ணகரம் மட நெஞ்சே! வணங்கு—. | |

* * *—பிரமன் சிவனிந்திரன் முதலிய தேவர்கள் திருப்பாற்கடலிலே வந்து கூடிச் செண்பக மல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி முதலிய மாமலர்களைப் பணிமாறி 'எம்பெருமானே! எமக்கு அருள்புரிய வேணும்' என்று பிரார்த்திக்கும்படி அந்தப் பள்ளிகொண்டருளும் பெருமானே நம்போலியர்கட்கும் அருள்செய்யத் திருவைகுந்த விண்ணகரத்திலே வந்து ஸந்நிதிபண்ணியிருப்பதாகக் கூறுவன முன்னடிகள்.

கயல், வாளை, சேல் என்னும் மீன்வகைகள் செந்நெற்பயிர்களினிடையே துள்ளிக் குதித்து விளையாடப்பெற்ற அழகிய பொய்கைகள் ஒவ்வொரு வீதியிலும் ஏராளமா யிருக்கப்பெற்றதும், ஆகாச ஸஞ்சாரியான சந்திரனுடைய கீழ்வயிறு தேயும்படியாக வுயர்ந்திருக்கின்ற மணிமாடங்களை யுடையதுமான திருநாங்கூரிலுள்ளதாம் இத்திருப்பதி.

"ஃஂமஞூஶ ஊகி-லீவ-ள = பங்கஸ் தரங்க ஊர்மிர் வா" என்ற அமரகோசத்தின்படி 'பங்கம்' என்ற வடசொல் அலைக்கு வாசகமாதலால் அச்சொல்லே இங்கு வங்க மெனத் திரிந்திருப்பதாகக் கொண்டு 'அலைகள்நிறைந்த கடல்' என்றுரைக்கவுமாம். ... .... ... ... (க)

சங்கமலி தண்டுமுதல் சக்கர முனேந்தும்
தாமரைக்கண் நெடியபிரான் தானமரும் கோயில் *
வங்கமலி கடலுலகில் மலிவெய்து நாங்கூர்
வைகுந்த விண்ணகர்மேல் வண்டறையும் பொழில்சூழ் *
மங்கையர்தம் தலைவன் மருவலர்தமுடல்துணிய
வாள்வீசும் பரகாலன் கலிகன்றி சொன்ன *
சங்கமலி தமிழ்மாலை பத்திவை வல்லார்கள்
தரணியோடு விசும்பாளுந் தன்மை பெறுவாரே. (க0)

சங்கு — ஸ்ரீ பாஞ்சஜந்யமும்
மலி தண்டு — பொருந்திய கௌமோதகியும்
சக்கரம் முதல் — ஸுதர்சநமும் முதலான திவ்யாயுதங்களை
முன் — கண்முன்னே
ஏந்தும் — தரித்துக்கொண்டிருக்கிற
நெடிய தாமரை கண் பிரான்தான் — நீண்ட தாமரைபோன்ற திருக்கண்களையுடைய ஸர்வேச்வரன்
அமரும் கோயில் — நித்யவாஸம் பண்ணுகிற ஸந்நிதியாய்,
வங்கம் மலி கடல் உலகில் மலிவு எய்து நாங்கூர் — கப்பல்கள் நிறைந்த கடலால் சூழப்பட்ட நிலவுலகத்தில் பிரஸித்தி பெற்ற திருநாங்கூரிலுள்ளதான
வைகுந்த விண்ணகர் மேல் — வைகுந்தவிண்ணகரத் திருப்பதி விஷயமாக
வண்டு அறையும் பொழில் சூழ் மங்கையர்தம் தலைவன் — வண்டுகள் ரீங்காரம் செய்கின்ற சோலைகளினால் சூழப்பட்ட திருமங்கைநாட்டிலுள்ளார்க்குத் தலைவரும்
மருவலர் தம் உடல் துணிய வாள் வீசும் — பகைவருடைய சரீரங்கள் தொலையும்படி வாட்படையை வீசுகின்றவரும்
பரகாலன் — பரகாலனென்னுந் திருநாமமுடையவருமான
கலிகன்றி — திருமங்கையாழ்வார்
சொன்ன — அருளிச்செய்த
சங்கம் மலி — சங்கப்புலவர்கள் கொண்டாடத்தக்க
தமிழ் மாலை — தமிழ்மாலையாகிய
இவை பத்து — இப்பத்துப் பாசுரங்களையும்
வல்லார்கள் — ஓதவல்லவர்கள்
தரணியொடு — பூமியையும்
விசும்பு — பரமபதத்தையும்
ஆளும் தன்மை பெறுவார் — ஆளும்படியான அதிசயத்தைப் பெறுவர்கள்.

* * *—திருவாழிமுதலிய திவ்யாயுதங்களை அழகுக்குடலாகத் தரித்துக் கொண்டிருக்கின்ற புண்டரீகாக்ஷன் நித்யவாஸம் பண்ணப்பெற்றதும், இவ்வுலகின்கண் மிகப் பிரஸித்திபெற்ற திருநாங்கூரில் ஒருபகுதியாக விளங்குவதுமான வைகுந்த விண்ணகரத் திருப்பதி விஷயமாகப் பரகாலன் சொன்ன சிறந்த இத்தமிழ்ப் பாசுரங்கள் பத்தையும் அதிகரிப்பவர்கள் உபயவிபூதி நிர்

வாஹகராவர்களென்று இத்திருமொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக் கட்டினாராயிற்று. ... .... ... ... (௧௦)

அடிவரவு:—சலம் திண்ணிய அண்டமும் கலை மின் பெண்மை விளங்கனியை ஆறு த வங்கம் சங்கு திரு.

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றும்பத்து—பத்தாந்திருமொழி,

# திருமடந்தை மண்மடந்தை.

அவதாரிகை:—அடியார்களின் விரோதிகளை அகற்றுமியல்வினனாய், அடியார்கட்கு ஆபத்துக்களிலே வந்து உதவிபுரியுந் துணைவனான ஸர்வேச்வரன் புருஷகார பூதைகளான பிராட்டிமாருடனே அரிமேய விண்ணகரமென்னுந் திருப்பதியிலே நித்யவாஸம் செய்தருளுகிறபடியை ஆழ்வார் அநுஸந்தித்து, 'நெஞ்சே! அத்திருப்பதியிற் சென்று வணங்கு' என்று தம் திருவுள்ளத்திற்கு உபதேசிக்கிறார் இத்திருமொழியில். ... ... *

திருமடந்தை மண்மடந்தை யிருபாலுந் திகழத்
　தீவினைகள் போயகல வடியவர்கட்கென்று
மருள்நடந்து * இவ்வேழுலகத் தவர்பணிய வானோர்
　அமர்ந்தேத்த விருந்தவிடம் * பெரும்புகழ் வேதியர்வாழ்
தருமிடங்கள் மலர்கள்மிகு கைதைகள் செங்கழுநீர்
　தாமரைகள் தடங்கள்தோறு மிடங்கள்தோறும் திகழ *
அருவிடங்கள் பொழில்தழுவி யெழில்திகழு நாங்கூர்
　அரிமேய விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே. (௧)

இருபாலும் இரண்டு பக்கங்களிலும்
திரு மடந்தை மண் மடந்தை திகழ { ஸ்ரீதேவி பூதேவிகள் விளங்கநின்று
அடியவர்கட்கு ஆச்ரிதர்பக்கலில்
தீ வினைகள் போய் அகல { கொடியபாவங்கள் தொலையும்படியாக
என்றும் எப்போதும்
அருள் நடந்து க்ருபைபண்ணி
இவ் ஏழ் உலகத்தவர் பணிய { இந்த ஸப்தலோகங்களிலுள்ளாராலும் ஆச்ரயிக்கப்பெற்று
வானோர் அமர்ந்து ஏத்த { நித்யஸூரிகள் கால் பொருந்தித் தோத்திரம் பண்ணப்பெற்று

| | |
|---|---|
| இருந்த இடம் | (எம்பெருமான்) எழுந்தருளியிருக்குமிடமாய், |
| பெரு புகழ் | மிக்கபுகழை யுடையரான |
| வேதியர் | வைதிகர்கள் |
| வாழ்தரும் | வாழ்கின்ற |
| இடங்கள் | இடங்களை யுடைத்தாய் |
| மலர்கள் மிகு | புஷ்பஸம்ருத்தியை யுடைய |
| கைதைகள் | தாழைகளும் |
| செங்கழுநீர் | செங்கழுநீர்களும் |
| தாமரைகள் | தாமரைகளும் |
| தடங்கள் தொறும் | தடாகங்கள்தோறும் (நிறைந்து) |
| இடங்கள் தொறும் திகழ | கண்டவிடமெங்கும் விளங்கப்பெற்றதாய், |
| பொழில் | சோலைகளானவை |
| அரு இடங்கள் தழுவி | ஆகாச ஸ்தலங்களைத் தழுவி யிருப்பதனாலே |
| எழில் திகழும் | அழகு விளங்காநிற்பதான |
| நாங்கூர் | திருநாங்கூரில் |

அரிமேய விண்ணகரம் மடநெஞ்சே! வணங்கு—.

* * *—இவ்வுலகத்தவர்களடங்கலும் பெரும்பாலும் குற்றங்குறைகட்குக் கொள்கலமாயிருக்கையாலே 'நம்முடைய அபராதங்களைக்கண்டு தண்டிப்பனே!' என்று பலரும் அஞ்சிக்கிடவாதபடி, சேதநர்கள் எத்தனை அபராதங்கள் செய்திருந்தாலும் அவற்றை நற்றமாக உபபாதித்து உரைக்கவல்ல பெரிய பிராட்டியாரும் அவற்றைப் பொறுப்பிக்கவல்ல பூமிப்பிராட்டியாரும் எம்பெருமானை ஒரு நொடிப்பொழுதும் விட்டுப்பிரியாமல் கூடவேயிருக்குமிருப்பைப் பேசுகிறார் "திருமடந்தை மண்மடந்தை யிருபாலுந்திகழ" என்று. இப்படி ஸ்ரீதேவி பூதேவிகள் இறையுமகலாது உடனிருக்கையாலே அடியார்கள் விஷயத்தில் எப்போதும் அருளே நடந்துசென்று அத்தாலே தீவினைகள் "வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ, கானோவொருங்கிற்றுக் கண்டிலமால்" என்னும்படி பறந்தோடினபடியை யருளிச்செய்கிறார் "தீவினைகள் போயகல வடியவர்கட்கென்று மருள்நடந்து" என்று. இப்படிகளையெல்லாங் கண்டு 'இவனல்லது வேறு ஆச்ரயணீயரில்லை' என்று ஏழுலகத்தவர்களும் வந்து ஆச்ரயிக்குமிடமாம் திருநாங்கூரில் அரிமேய விண்ணகரம்.

பகவத் பாகவத குணாநுபவத்தாலன்றிப் போதுபோக்கார்களென்னும் பெரும் புகழையுடையரான வைதிகர்கள் வாழுமிடமாய், தாழைகளும் தாமரைகளும் செங்கழுநீர்களும் தடாகங்கள்தோறும் மலிந்து கண்டவிடமெங்கும் விளங்கப்பெற்றதாய், ஆகாசத்தை யளாவிநிற்குஞ் சோலைகளாலே அழகியதான அத்திருப்பதியை நெஞ்சே! வணங்கு.

அருவிடங்கள்=உருவமற்ற வஸ்துவானது 'அரு' எனப்படும்; எனவே ஆகாசத்தைச் சொன்னதாயிற்று. அரிமேய விண்ணகரம்='ஹரிர் ஹரதி பாபாநி' என்கிறபடியே அடியவர்களின் பாபங்களைப் போக்குவதனாலே ஹரியெனப்படுகிற எம்பெருமான் நித்யவாஸம் பண்ணப்பெற்ற திவ்யதலம் என்கை. ... ... ... ... (க)

வென்றிமிகு நரகனுரமது அழியவிசிறும்
விறலாழித் தடக்கையன், விண்ணவர்கட் கன்று *
குன்றுகொடு குரைகடலைக் கடைந்தமுத மளிக்கும்
குருமணியென் னாரமுதம் குலவியுறை கோயில் *
என்றுமிகு பெருஞ்செல்வத் தெழில்விளங்கு மறையோர்
ஏழிசையும் கேள்விகளு மியன்றபெருங் குணத்தோர் *
அன்றுலகம் படைத்தவனை யனையவர்கள் நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (உ)

| | |
|---|---|
| வென்றி மிகு நரகன் | ஜயசீலனான நரகாசுரனுடைய |
| உரம்அது அழிய | மிடுக்கு அழியும்படி |
| விசிறும் | (அவன்மீது) வீசி யெறியப்பட்ட |
| விறல் ஆழி | வலிவுள்ள திருவாழியை |
| தட கையன் | பெரிய திருக்கையிலே உடையவனும் |
| அன்று | முன்பொருகாலத்தில் |
| விண்ணவர் கட்கு | இந்திரன்முதலிய தேவர்களுக்காக |
| குன்று கொடு | மந்தரபர்வதத்தை நட்டு |
| குரை கடலை | கோஷஞ்செய்யுமியல்வை யுடைய ஸமுத்ரத்தை |
| கடைந்து | கடைந்து |
| அமுதம் அளிக்கும் | அமிருதத்தை யெடுத்துக் கொடுத்தவனும் |
| குரு மணி | சிறந்த ரத்னம் போன்றவனும் |
| என் ஆர் அமுதம் | எனக்குப் பரிபூர்ணமான அமுதம்போன்றவனு மான பெருமான் |
| குலவி | கொண்டாட்டத்துடனே |
| உறை கோயில் | எழுந்தருளியிருக்கும் திவ்யதேசம்;— |
| என்றும் | எப்போதும் |
| மிகு | வளர்ந்துவருகிற |
| பெரு செல்வத்து எழில் விளங்கும் | அளவற்ற செல்வத்தின் அழகு விளங்கும்படி யுள்ளவர்களாய் |
| மறையோர் | வேதம் வல்லவர்களாய் |
| ஏழ் இசையும் கேள்விகளும் இயன்ற பெரு குணத்தோர் | ஸப்தஸ்வரங்களையும் மற்றுமுள்ள அங்கங்களையும் அதிகரித்த மஹா குணசாலிகளாய் |
| அன்று உலகம் படைத் தவனை அனையவர்கள் | முன்பு உலகங்களைப் படைத்த பிரமனைப்போன்றவர்க ளான அந்தணர்கள் வாழ்கிற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |

அரிமேய விண்ணகரம் *** வணங்கு.—

* * *—தான்சென்று போர்புரிந்த விடங்களிலெங்கும் வெற்றியே பெற்றவனான நரகாசுரனைத் தொலைத்த திருவாழியையுடையவனும், துர்வாஸ முனியின் சாபத்தினாலே அரசிழந்த தேவர்கட்கு அருள்கூர்ந்து கடல்கடைந்து அமுதமெடுத்தளித்தவனும், ரத்னம்போற் சிறந்தவனும், அம்ருதம்போல் பரம போக்யனுமான எம்பெருமான் உவந்து எழுந்தருளியிருக்கும் திவ்யதேசமாய், ஸகல சாஸ்த்ரங்களையும் அதிகரித்து ஆத்மகுணமும் அமையப்பெற்று, 'ஸாக்ஷாத் சதுர்முகனைப்போலே ஜகத்ஸ்ருஷ்டியும் பண்ணவல்ல சக்திமான்கள்' என்று சொல்லத்தக்கவர்களான வைதிகர்கள் வாழுமிடமான திருநாங்கூரிமேய விண்ணகரத்தை நெஞ்சே! வணங்கு.

குருமணி='ஶ்ரூ' என்னும் வடசொல் குருவெனத் திரிந்தது. ... (உ)

உம்பருமிவ் வேழுலகு மேழ்கடலு மெல்லா
முண்டபிரான், அண்டர்கள்முன் கண்டுமகிழ் வெய்த *
கும்பமிகு மதயானை மருப்பொசித்துக் கஞ்சன்
குஞ்சிபிடித் தடித்தபிரான் கோயில் * மருங்கெங்கும்
பைம்பொனொடு வெண்முத்தம் பலபுன்னை காட்டப்
பலங்கனிகள் தேன்காட்ட படவரவே ரல்குல் *
அம்பனைய கண்மடவார் மகிழ்வெய்து நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (௩)

| | |
|---|---|
| உம்பரும் | தேவஜாதியும் |
| இவ் ஏழ் உலகும் | இந்த ஸப்தலோகங்களும் |
| ஏழ் கடலும் | ஸப்த ஸாகரங்களும் |
| எல்லாம் | ஆகிய இவை யெல்லாவற்றையும் |
| உண்ட | (பிரளயகாலத்தில்) திருவயிற்றிலே வைத்து நோக்கின |
| பிரான் | உபகார சீலனும், |
| முன் | முன்பு |
| அண்டர்கள் | இடையர்கள் |
| கண்டு | கண்ணாலே கண்டு |
| மகிழ்வு எய்த | களிப்படையும்படி |
| கும்பம் மிகு | குடம்போன்ற பெரிய மத்தகத்தையுடைய |
| மதம் யானை | மத்தகஜமான குவலயாபீடத்தினுடைய |
| மருப்பு | தந்தங்களை |
| ஒசித்து | முறித்துவிட்டு (உள்ளே நுழைந்து) |
| கஞ்சன் | கம்ஸனுடைய |
| குஞ்சி பிடித்து | மயிரைப்பிடித்து (கீழே தள்ளி) |
| அடித்த | அவனை யழியச்செய்த |
| பிரான் | உபகாரகனுமான பெருமானுடைய |
| கோயில் | திவ்யதேசம் ;— |
| மருங்கு எங்கும் | பக்கங்களிலெல்லாம் |
| பல புன்னை | பலபல புன்னைமரங்கள் (மொக்கும் மலருமாய்ப் பூத்து நின்று) |
| பைம்பொனொடு வெண் முத்தம் காட்ட | அழகிய பொன்னையும் வெளுத்தமுத்துக்களையும் பிரகாசப்படுத்தவும் |
| பலங்கனிகள் | பலாப்பழங்கள் |
| தேன் காட்ட | தேனைச் சொரிந்து காட்டவும் பெற்றதாய், |
| படம் அரவு ஏர் அல்குல் | படமெடுத்த பாம்பைப் போன்று அழகிய நிதம்பத்தையும் |
| அம்பு அனைய கண் | அம்புபோல் கூர்மையான கண்களையும் உடைய |
| மடவார் | ஸ்த்ரீகள் |
| மகிழ்வு எய்தும் | மகிழ்ந்துவாழுமிடமான |
| நாங்கூர் | திருநாங்கூரிலே |
| அரிமேய விண்ணகரம் * * * வணங்கு—. | |

* * *—பிரளயப்பெருங்கடலில் உலகமெல்லாம் அழிந்துபோவதாயிருக்கையில் அவையெல்லாவற்றையும் தனது திருவயிற்றினுள்ளடக்கி ரக்ஷித்தருளினவனும், கம்ஸனாலேவப்பட்ட குவலயாபீடமென்னும் மதயானையைக் கொன்றொழித்துப் பிறகு கம்ஸனையும் குடுமியைப்பிடித்திழுத்து மஞ்சத்தினின்று

கீழேதள்ளிக் கிரீடம் சிதறவடித்துக் கொன்றொழித்தவனான பெருமான் எழுந்தருளியிருக்குமிடமான அரிமேய விண்ணகரத்தை நெஞ்சே! வணங்கு.

எங்குப்பார்த்தாலும் புன்னைமரங்கள் மொக்கும் மலருமாய்க் காண்கையாலே, மொக்குகள் முத்துக்கள்போலவும் மலர்கள் பொன்போலவும் விளங்கப்பெற்று, தேனைச் சொரியாநிற்கும் பலாமரங்கள் நிறைந்திருக்கப்பெற்று, அழகிற் சிறந்த மாதர்கள் மகிழ்ந்து வாழப்பெற்றதான திருநாங்கூரிலுள்ளது இத்தலம்.

கும்பம் —வடசொல்; யானையின் வடமொழி நாமங்களுள் 'கும்பீ' என்பதும் ஒன்று. 'மருப்போசித்து' என்றது கொலைசெய்தமையைக் காட்டுகிற உபசாரவழக்கு. குஞ்சி—ஆண்மயிர். .... ... (௩)

ஓடாத வாளரியி னுருவமது கொண்டன்
றுலப்பில்மிகு பெருவரத்த விரணியனைப் பற்றி *
வாடாத வள்ளுகிரால் பிளந்தவன் தன்மகனுக்
கருள்செய்தான் வாழுமிடம் மல்லிகை செங்கழுநீர் *
சேடேறு மலர்ச்செருந்தி செழுங்கமுகம் பாளை
செண்பகங்கள் மணநாறும் வண்பொழிலி னூடே *
ஆடேறு வயலாலைப் புகைகமழு நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (௪)

| | | | |
|---|---|---|---|
| அன்று | முன்பொருகாலத்தில், | மல்லிகை | மல்லிகைகளும் |
| ஓடாத | போரில் பின்வாங்கமாட்டாத | செங்கழுநீர் | செங்கழுநீர்களும் |
| ஆள் அரியின் உருவம் அது கொண்டு | நரஸிம்ஹரூபியாகி | சேடு ஏறு மலர் செருந்தி | திரள் திரளாகப்பூத்த பூக்களையுடைய ஸுர புன்னைகளும் |
| உலப்பு இல் மிகு பெரு வரத்த | முடிவில்லாத மிகப்பெரிய வரங்களைப் பெற்றவனை | செழு கமுகம்பாளை | அழகிய பாக்குப் பாளைகளும் |
| இரணியனை | ஹிரண்யாஸுரனை | செண்பகங்கள் | செண்பகப் பூக்களும் |
| பற்றி | பிடித்துக்கொண்டு | மணம் நாறும் | பரிமளம் வீசப்பெற்ற |
| வாடாத வள் உகிரால் பிளந்து | வளையாத தீக்ஷ்ணமான நகங்களினால் கிழித்து | வண் பொழிலின் ஊடே | அழகிய சோலைகளின் நடுவே |
| அவன் தன் மகனுக்கு | அவனது புத்திரனான ப்ரஹ்லாதனுக்கு | ஆடு ஏறு வயல் | கரும்பு ஆடுகைக்காக ஏறின வயலில் |
| அருள் செய்தான் | க்ருபை பண்ணின பெருமான் | ஆலைப்புகை கமழும் | கரும்பாலைகளின் புகை பரிமளிக்கப்பெற்ற |
| வாழும் இடம் | எழுந்தருளியிருக்கும் திவ்ய தேசம் ;— | நாங்கூர் | திருநாங்கூரிலே |
| | | அரிமேய விண்ணகரம் * * * வணங்கு— | |

* * *—எத்தனையோ தவங்கள்செய்து எத்தனையோ வரங்கள் பெற்றவனான இரணியனுக்காக நரஸிம்ஹரூபங்கொண்டு அவனது மார்பைக் கீண்

டொழித்து அவனது குமாரனை ப்ரஹ்லாதாழ்வான் திறத்துப் பேரருள் செய்த பெருமான் வாழுமிடமாய், மல்லிகைகளும் செங்கழுநீர்களும், திரள் திரளாகப்பூத்த பூக்களையுடைய ஸுரபுன்னைகளும் பாக்குப்பாளைகளும் செண்பகமலர்களும் வாஸனைவீசப்பெற்ற அழகிய சோலைகளின் நடுவே கரும்பு ஆடுகைக்காக ஏறின வயலில் கரும்பாலைகளின் புகை பரிமளிக்கப் பெற்றதான திருநாங்கூரில் அரிமேயவிண்ணகரத்தை நெஞ்சே! வணங்கு.

சேடு—அழகு; இளமை, திரட்சி, நன்மை, பெருமை. .... .... (ச)

கண்டவர்தம் மனமகிழ மாவலிதன் வேள்விக்
களவின்மிகு சிறுகுறளாய் மூவடியென்றிரந்திட்டு *
அண்டமுமிவ் வலைகடலு மவனிகளு மெல்லாம்
அளந்தபிரா னமருமிடம் வளங்கொள்பொழி லயலே *
அண்டமுறு முழவொலியும் வண்டினங்க ளொலியும்
அருமறையி னொலியும் மடவார் சிலம்பினொலியும் *
அண்டமுறு மலைகடலி னொலிதிகழு நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (ரு)

| | |
|---|---|
| கண்டவர் தம் மனம் | பார்த்தவர்களெல்லாருடைய மனமும் |
| மகிழ | ஆநந்தமடையும்படி |
| மாவலி தன் வேள்வி | மஹாபலியின் யாகபூமியிலே |
| களவின் மிகு | வஞ்சனைமிகுந்த |
| சிறு குறள் ஆய் | சிறுத்த வாமநரூபியாய்க் கொண்டு |
| மூ அடி என்று இரந்திட்டு | 'மூவடிநிலம் தா' என்று யாசித்து |
| அண்டமும் | மேலுலகங்களையும் |
| இவ் அலை கடலும் அவனிகளும் | அலையெறிகின்ற இக் கடல்களோடு கூடின பூமண்டலத்தையும் |
| எல்லாம் | மற்றுமெல்லாவற்றையும் |
| அளந்த | அளந்துகொண்ட |
| பிரான் | எம்பெருமான் |
| அமரும் இடம் | எழுந்தருளியிருக்கும் திவ்யதேசம்;— |
| வளம் கொள் பொழில் அயலே | அழகிய சோலைகளின் அருகே |
| அண்டம் உறு முழவு ஒலியும் | ஆகாசத்தளவும் வியாபிக்கிற வாத்யகோஷங்களும் |
| வண்டு இனங்கள் ஒலியும் | வண்டுத்திரள்களின் ரீங்காரமும் |
| அரு மறையின் ஒலியும் | அருமையான வேதங்களின் கோஷமும் |
| மடவார் | மாதருடைய |
| சிலம்பின் ஒலியும் | காலணிகளின் ஓசையும் |
| அண்டம் உறும் அலை கடலின் ஒலி திகழும் | அண்டபித்தியளவுஞ் சென்று அலையெறிகிற (பிரளயக்) கடலின் கோஷம் போலே விளங்கப்பெற்ற |
| நாங்கூர் | திருநாங்கூரிலே |
| அரிமேய விண்ணகரம் * * * வணங்கு—. | |

* * *—அநுகூலரோடு பிரதிகூலரோடு வாசியற யார்பார்த்தாலும் அவர்களுடைய நெஞ்சைக் கவருமதான அழகுவாய்ந்த வாமனமூர்த்தியாகி மஹாபலி

யின் யாகபூமியிலெழுந்தருளி 'என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடிமண் கொடு' என்று யாசித்து மூவடிமண் நீரேற்றுப்பெற்று உடனே விம்மவளர்ந்து எல்லாவுலகங்களையும் ஆக்கிரமித்துக்கொண்ட எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடமாய், எங்குப்பார்த்தாலும் வாத்யகோஷங்களும் வண்டினவொலிகளும் வேதத்வநிகளும் ஸ்த்ரீகளின் நூபுரசப்தங்களும் கடலொலிபோல் விளங்கப்பெற்றதான திருநாங்கூரில் அரிமேய விண்ணகரத்தை நெஞ்சே! வணங்கு.

வாள்நெடுங்கண் மலர்க்கூந்தல் மைதிலிக்கா விலங்கை
    மன்னன்முடி யொருபதும் தோளிருபதும் போயுதிர *
தாள்நெடுந்திண் சிலைவளைத்த தயரதன்சேய் என்தன்
    தனிச்சரண் வானவர்க்கரசு கருதுமிடம் தடமார் *
சேணிடங்கொள் மலர்க்கமலம் சேல்கயல்கள் வாளை
    செந்நெலொடு மடுத்தரிய வுதிர்ந்தசெழு முத்தம் *
வாள்நெடுங்கண் கடைசியர்கள் வாருமணி நாங்கூர்
    அரிமேய விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (௯)

| | |
|---|---|
| வாள் நெடு கண் | வாள்போல் கூர்மையாய் நீண்ட திருக்கண்களையும் |
| மலர் கூந்தல் | பூவணிந்த கூந்தலையுமுடைய |
| மைதிலிக்கா | ஸீதாபிராட்டியைச் சிறை வைத்த குற்றத்திற்காக |
| இலங்கை மன்னன் | இராவணனுடைய |
| ஒருபது முடியும் | பத்துத்தலைகளும் |
| இருபது தோளும் | இருபதுதோள்களும் |
| போய் உதிர | சிதறிப்போம்படி |
| தாள் நெடு திண் சிலை வளைத்த | குதையோடு கூடி நீண்டு திண்ணிதான வில்லை வளைத்த |
| தயரதன் சேய் | தசரதபுத்திரனும் |
| என்தன் தனி சரண் | எனக்கு ஒப்பற்ற ரக்ஷகனும் |
| வானவர்க்கு அரசு | நித்யஸூரிநாதனுமான பெருமான் |
| கருதும் இடம் | திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்கும் திவ்யதேசம்;— |
| தடம் ஆர் | பொய்கைகளில் நிறைந்திருப்பனவும் |
| சேண் இடம் கொள் | ஆகாசமுள்ள விடமெங்கும் ஓங்கிவளர்ந்திருப்பனவுமான |
| கமலம் மலர் | தாமரைப்பூக்களையும் |
| சேல் கயல்கள் வாளை | சேல் கயல்வாளையென்னும் மீன்களையும் |
| செந்நெலொடு மடுத்து | செந்நெற்பயிர்களோடு சேர்த்துப்பிடித்து |
| அரிய | அறுக்க |
| உதிர்ந்த | அவற்றினின்று உதிர்ந்த |
| செழு முத்தம் | அழகிய முத்துக்களை |
| வாள் நெடு கண் கடைசியர்கள் வாரும் | வாள்போன்று நீண்ட கண்களையுடைய கடைச்சாதிப்பெண்கள் வாரித்திரட்டுமிடமான |
| அணி நாங்கூர் | திருநாங்கூரில் |

அரிமேயவிண்ணகரம் * * * வணங்கு—.

* * *— அழகிற்சிறந்த ஸீதாபிராட்டிக்காக இராவணனுடைய தலைகளும் தோள்களும் சிதறிப்போம்படி வில்வளைத்த மஹாவீரனும், எனக்கு அத்விதீய

ரக்ஷகனும், நித்யஸூரி நிர்வாஹகனுமான பெருமான் திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்குமிடமாய்,—வயல்களிலே செந்நெற்பயிர்களை யறுக்கும் போது அவற்றைப் பிடிக்கிறபிடியில் தாமரைகளும் மீன்களும் கூடவே பிடிபட்டு அறுக்கப்பட, அவற்றினின்று உதிர்ந்த முத்துக்களை வலைச்சியர்கள் வாரித்திரட்டுமிடமான திருநாங்கூரில் அரிமேய விண்ணகரத்தை நெஞ்சே! வணங்கு.

திருநாங்கூர் ஸமீபத்தில் கடலுள்ளதனால் அக்கடலோதமும் இங்கே வந்து கூடும்; அவ்வோதங்களுடனே முத்துக்களும் வந்து சேரும்; அவை மீன்களின் வயிற்றினுள்ளே புகும்; அவை அறுவடையில் வெளிப்பட்டன வென்க.

"செங்நேலோடு மடுத்தரிய" என்ற விடத்து, 'செங்நெலொடு மடுத்து' என்றும் 'செங்நெலொடும் அடுத்து' என்றும் பிரிப்பர். ... .... (௬)

தீமனத்தான் கஞ்சனது வஞ்சனையில் திரியும்
 தேனுகனும் பூதனைத னாருயிரும் செகுத்தான் *
காமனைத்தான் பயந்த கருமேனியுடை யம்மான்
 கருதுமிடம் பொருதுபுனல் துறைதுறை முத்துந்தி *
நாமனத்தால் மந்திரங்கள் நால்வேதமைந்து
 கேள்வியோ டாறங்கம் நவின்று கலைபயின்று * அங்
காமனத்து மறையவர்கள் பயிலுமணி நாங்கூர்
 அரிமேய விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (எ)

| | |
|---|---|
| தீ மனத்தான் | பொல்லாத நெஞ்சையுடையனான |
| கஞ்சனது | கம்ஸனுடைய |
| வஞ்சனையின் | கபடச்செய்கைக்கிணங்க |
| திரியும் | (கெட்ட எண்ணத்துடனே) திரிந்து கொண்டிருந்த |
| தேனுகனும் | தேநுகாஸுரனுடையவும் |
| பூதனைதன் உம் | பூதனையினுடையவும் |
| ஆர் உயிர் | நற்சீவனை |
| செகுத்தான் | முடித்தவனும், |
| காமனை | மன்மதனை |
| பயந்த | புத்திரனாகப்படைத்தவனும் |
| கரு மேனி உடை அம்மான் | கரியதிருமேனியையுடையவனுமான ஸர்வேச்வரன் |

கருதும் இடம்—;

| | |
|---|---|
| புனல் | ஜலமானது |
| பொருது | அலையெறிந்து |
| துறை துறை | துறைகள்தோறும் |
| முத்து | முத்துக்களை |
| உந்தி | தள்ளிக்கிடக்குமிடமாயும், |
| நா | நாவினாலும் |
| மனத்தால் | மநஸ்ஸினாலும் |
| மந்திரங்கள் | (பகவானது) மந்த்ரங்களையும் |
| நால் வேதம் | நான்குவேதங்களையும் |
| ஆறு அங்கம் | ஆறு அங்கங்களையும் |
| நவின்று | அப்யஸித்து |
| கலை | மற்றுமுள்ள சாஸ்திரங்களையும் |
| பயின்று | அதிகரித்து |
| ஐந்து வேள்வியோடு | பஞ்சமஹாயஜ்ஞங்களோடு கூடி |

அங்கு ஆம் மனத்து { ஆமுஷ்மிகத்திலேயே பொருந்தின நெஞ்சை யுடையரான
மறையவர்கள் வைதிகர்கள்
பயிலும் { நித்யவாஸம் பண்ணப் பெற்றதாயுமுள்ள
அணி நாங்கூர் திருநாங்கூரில்
அரிமேயவிண்ணகரம் * * * வணங்கு—.

* * *—தன்னைக் கொல்லப்பிறந்த தேவகிபுத்திரன் திருவாய்ப்பாடியில் ஒளித்து வளர்தலை நாரதர் சொல்லக்கேட்ட கம்ஸன் அக்கண்ணபிரானை எவ்வகையினாலேனும் முடித்துவிடவேண்டுமென நிச்சயித்துத் தன் பரிஜநங்களை நோக்கிப் பற்பல வுருவுகொண்டு அங்குப்போய் அவனை முடித்திடுமாறு கட்டளையிட, அங்ஙனம் கண்ணனை நலியப்போன அசுரர்களில் தேனுகன் என்பவனுமொருவன் ;—ஒருநாள் கண்ணபிரான் பலராமனோடும் ஆயர் சிறுவர்களோடும் ஆநிரை மேய்த்துக்கொண்டு, பழங்கள் அழகாக மிகுதியாய்ப்பழுத்து வாஸனைவீசிக்கொண்டிருந்த வொரு பனங்காட்டையடைந்து அப்பனம்பழங்களை விரும்பி உதிர்த்துக்கொண்டு வருகையில் அவ்வனத்துக்குத் தலைவனும் கம்ஸன் பரிவாரத்தில் ஒருவனுமாகிய கழுதைவடிவங்கொண்ட தேநுகாஸுரன் கோபமூண்டு ஓடிவந்து எதிர்த்துப் போர்செய்ய, உடனே கண்ணன் அதிலாகவமாய்ப் பின்னங்காலிரண்டையும் பற்றி அவ்வசுரக் கழுதையைச்சுழற்றி உயிரிழக்கும்படி பனைமரத்தின்மேல் எறிந்து அழித்தனன் என்பது வரலாறு.

ஸ்ரீக்ருஷ்ணன் ருக்மிணிப்பிராட்டியினிடத்தில் மந்மதனுடைய அம்சபூதனை ப்ரத்யும்நனைப் பிறப்பித்ததனால் காமனைப்பயந்த கருமேனியுடையம்மானயினனென்க. இப்படிப்பட்ட எம்பெருமான் வாழுமிடமாய், தண்ணீர் அலையெறிந்து துறைகள்தோறும் முத்துக்களைத் தள்ளிக்கிடக்குமிடமாய், நாவினாலும் நெஞ்சாலும் பகவந்மந்திரங்களையும் நால்வேதங்களையும் வேதாங்கங்களையும் மற்றுமுள்ள கலைகளையும் அதிகரித்து ஆசாரப்ரதாநர்களாய் ஆமுஷ்மிகநிஷ்டர்களான வைதிகர்கள் நித்யவாஸம் பண்ணப்பெற்றதான திருநாங்கூரில் அரிமேய விண்ணகரத்தை நெஞ்சே! வணங்கு. ... ... (எ)

கன்றதனால் விளவெறிந்து கனியுதிர்த்த காளை
காமருசீர் முகில்வண்ணன் காலிகள்முன் காப்பான் *
குன்றதனால் மழைதடுத்துக் குடமாடுகூத்தன்
குலவுமிடம் கொடிமதிள்கள் மாளிகை கோபுரங்கள் *
துன்றுமணி மண்டபங்கள் சாலைகள் தூமறையோர்
தொக்கீண்டித் தொழுதியோடு மிகப்பயிலும்சோலை *
அன்றலர்வாய் மதுவுண்டங் களிமுரலு நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (அ)

கன்று அதனால் வத்ஸாஸுரனைக் கொண்டு
விளவு எறிந்து { கபித்தாஸுரன்மேல் வீசியெறிந்து
கனி விளாம்பழங்களை
உதிர்த்த உதிரச்செய்த
காளை இளையவனும்,

| | |
|---|---|
| காமரு சீர் | விரும்பத்தக்க கல்யாண குணங்களையுடையவனும் |
| முகில் வண்ணன் | காளமேக நிறத்தனும், |
| முன் | முன்பொருகால் |
| காலிகள் | பசுக்களை |
| காப்பான் | (பெருமழையினின்று) காக்கும்பொருட்டு |
| குன்று அதனால் | கோவர்த்தன மலையினால் |
| மழை தடுத்து | மழையைத் தடை செய்தவனும் |
| குடம் ஆடு கூத்தன் | குடக்கூத்தாடினவனுமான பெருமான் |
| குலவும் இடம் | உவந்திருக்கும் திவ்ய தேசம் ;— |
| கொடி மதிள்கள் | த்வஜங்கள் பொருந்திய மதிள்களையும் |
| மாளிகை | மாளிகைகளையும் |
| கோபுரங்கள் | கோபுரங்களையும் |
| துன்று மணி மண்டபங்கள் | நெருங்கின மணிமயமான மண்டபங்களையும் |
| சாலைகள் | தர்ம சாலைகளையும் உடைத்தாய், |
| தூ மறையோர் | பரிசுத்தரான அந்தணர்கள் |
| தொக்கு ஈண்டி | கும்பலாகக் கூடியிருக்குமிடமாய், |
| தொழுதி யொடு | பறவைகளின் ஒலியோடு |
| மிக பயிலும் | மிகவுங் கூடியிருக்கின்ற |
| சோலை | சோலைகளிலே |
| அன்று அலர் வாய் | அப்போதலர்ந்த செவ்விப் பூக்களில் |
| மது உண்டு | தேனைப்பருகி |
| அங்கு | அவ்விடத்தில் |
| அளி முரலும் | வண்டுகள் பாடப்பெற்றதான |
| நாங்கூர் | திருநாங்கூரிலே |

அரிமேய விண்ணகரம் * * * வணங்கு—.

* * *—கன்றின் வடிவாய்வந்த வொரு அசுரனைக்கொண்டு விளாமரத்தின் வடிவாய்நின்ற மற்றோரசுரன்மீதெறிந்து இரண்டையும் முடித்தொழித்தவனும், இந்திரன் பசிக்கோபத்தினால் ஏழுநாள் விடாமழை பெய்வித்தவப்போது கோவர்த்தனமலையைக் குடையாகவெடுத்துப் பிடித்துநின்று ஆயர்பாடியைக் காத்தருளினவனும், இடைச்சாதியின் மெய்ப்பாடுதோன்றக் குடக்கூத்தாடினவனுமான பெருமான் உவந்திருக்கும் திருப்பதியாய்,—த்வஜங்கள் பொருந்திய மதிள்களையும் மாளிகைகளையும் கோபுரங்களையும் மணிமண்டபங்களையும் தர்ம சாலைகளையுமுடைத்தாய், பரமபவித்திரர்களான அந்தணர்கள் திரண்டு வாழுமிடமாய், பறவைகளின் கோஷங்கள் மிக்க சோலைகளில் அப்போதலர்ந்த நறுமலர்களிலே வண்டுகள் தேனைக்குடித்து இசைபாடப்பெற்றதான திருநாங்கூரில் அரிமேய விண்ணகரத்தை நெஞ்சே ! வணங்கு.

தொழுதி—பக்ஷிகளின் த்வநி. .... .... (அ)

வஞ்சனையால் வந்தவள்தன் உயிருண்டு வாய்த்த
தயிருண்டு வெண்ணெ யமுதுண்டு * வலிமிக்க
கஞ்சனுயி ரதுவுண்டிவ் வுலகுண்ட காளை
கருதுமிடம் காவிரிசந் தகில்கனக முந்தி *

மஞ்சுலவு பொழிலூடும் வயலூடும் வந்து
வளம்கொடுப்ப மாமறையோர் மாமலர்கள் தூவி *
அஞ்சலித்தங் கரிசரணென் றிறைஞ்சுமணி நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (௯)

| | |
|---|---|
| வஞ்சனையால் வந்தவள் தன் | கபட வேஷத்தோடு வந்தவளான பேய்ச்சியினுடைய |
| உயிர் உண்டு | உயிரை உறிஞ்சியுண்டவனும் |
| வாய்த்த தயிர் உண்டு | கையிலகப்பட்ட தயிரையெல்லாம் உண்டவனும் |
| வெண்ணெய் அமுது உண்டு | வெண்ணெயை அமுது செய்தவனும் |
| வலி மிக்க | பலசாலியான |
| கஞ்சன் | கம்ஸனுடைய |
| உயிர் அது உண்டு | உயிரை அபஹரித்தவனும் |
| இ உலகு உண்ட | இவ்வுலகங்களையெல்லாம் (பிரளயக்கடல் கொள்ளாதபடி) அமுது செய்தவனுமுள்ள |
| காளை | யுவாவானவன் |
| கருதும் இடம்—; | |
| காவிரி | காவிரியாறானது |
| சந்து | சந்தன மரங்களையும் |
| அகில் | அகில் மரங்களையும் |
| கனகம் | ஸ்வர்ணங்களையும் |
| உந்தி | தள்ளிக் கொண்டுவந்து |
| மஞ்சு உலவு பொழிலூடும் | மேகமண்டலத்தளவும் ஓங்கின சோலைகளிலும் |
| வயலூடும் | கழனிகளிலும் |
| வந்து | பிரவேசித்து |
| வளம் கொடுப்ப | (அவற்றுக்குச்) செழிப்பை யுண்டாக்கப் பெற்றதும், |
| மா மறையோர் | மஹா வைதிக ப்ராஹ்மணர்கள் |
| மா மலர்கள் தூவி | சிறந்த புஷ்பங்களை ஸமர்ப்பித்து |
| அஞ்சலித்து | கைகூப்பிநின்று |
| அரி சரண் என்று இறைஞ்சும் | 'ஹரீ! உன் திருவடிகளே சரணம்' என்றுசொல்லி வணங்கப்பெற்றதுமான |
| அணி நாங்கூர் | திருநாங்கூரிலே |
| அரிமேய விண்ணகரம் * * * வணங்கு—. | |

* * *—பேய்வடிவைமறைத்துத் தாய்வடிவோடு வந்த பூதனையின் உயிரை விஷங்கலந்த முலைப்பாலுடனே உறிஞ்சியுண்டவனும், அந்த விஷத்திற்கு மாற்றாகத் தயிர் வெண்ணெய் முதலியவற்றை வாரியுண்டவனும், கம்ஸனுடைய உயிரையும் முடித்தவனும், உலகமுண்ட பெருவாயனுமான பெருமான் திருவுள்ளம் பற்றியிருக்குந் திருப்பதியாய்,—காவேரியானது சந்தன மரங்களையும் அகில்மரங்களையும் நவரத்னங்களையும் தள்ளிக்கொண்டு வந்து சோலைகளிலும் வயல்களிலும் புகுந்து அவற்றிற்குச் செழிப்பையுண்டாக்கப்பெற்றதாய், பரமவைதிகர்களான அந்தணர்கள் சிறந்த புஷ்பங்களைக் கொணர்ந்து ஸமர்ப்பித்துக் கைகூப்பிநின்று 'உன் திருவடிகளேசரணம்' என்று சொல்லி வணங்கப்பெற்றதான திருநாங்கூரில் அரிமேய விண்ணகரத்தை நெஞ்சே! வணங்கு. (௯)

சென்றுசின விடையேழும் படவடர்த்துப் பின்னை
செவ்வித்தோள் புணர்ந்துகந்த திருமால்தன் கோயில் *
அன்றயனு மரன்சேயு மனையவர்கள் நாங்கூர்
அரிமேய விண்ணகர மமர்ந்த செழுங்குன்றை *
கன்றிநெடு வேல்வலவன் மங்கையர்தம் கோமான்
கலிகன்றி யொலிமாலை யைந்தினொடு மூன்றும் *
ஒன்றினொடு மொன்றுமிவை கற்றுவல்லா ருலகத்
துத்தமர்கட் குத்தமரா யும்பரு மாவர்களே. (கo)

| | |
|---|---|
| சென்று | தானேசென்று |
| சினம் எழ் விடையும் | கொடுமையிருந்த ஏழு ரிஷபங்களும் |
| பட அடர்த்து | முடியும்படி பொருது |
| பின்னை | நப்பின்னைப் பிராட்டியினுடைய |
| செவ்வி தோள் | அழகிய தோளோடே |
| புணர்ந்து | கலந்து |
| உகந்த | திருவுள்ளம் மகிழ்ந்த |
| திருமால் தன் | லக்ஷ்மீநாதனுடைய |
| கோயில் | ஸந்நிதியாய் |
| அயனும் | பிரமனையும் |
| அரன் சேயும் | ருத்ரபுத்திரனை ஸுப்ரஹ்மண்யனையும் |
| அனையவர்கள் | ஒத்திருக்கின்றவர்கள் [வேதம்வல்லவர்களாய் அழகியவர்களான அந்தணர்கள்] வாழ்கிற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| அரிமேய விண்ணகரம் | அரிமேய விண்ணகர மென்னுந்திருப்பதியில் |
| அமர்ந்த | பொருந்தி யெழுந்தருளி யிருக்கிற |
| செழு குன்றை | அழகிய மலைபோன்ற எம்பெருமானைக்குறித்து, |
| கன்றி நெடு வேல் வலவன் | கோபக்குறியோடு கூடினதாய் நீண்டதான வேற்படையைத் தரிக்க வல்லவரும் |
| மங்கையர் தம் கோமான் | திருமங்கை நாட்டிலுள்ளார்க் குத் தலைவருமான |
| கலி கன்றி | திருமங்கையாழ்வார் |
| ஒலி | அருளிச்செய்த |
| மாலை | சொல்மாலையாகிய |
| ஐந்தினொடு மூன்றும் ஒன்றினொடும் ஒன்றும் இவை | இப்பத்துப் பாசுரங்களையும் |
| கற்றுவல்லார் | ஓதியுணர்ந்து ஸேவிக்க வல்லவர்கள் |
| உலகத்து | இவ்வுலகத்திலே |
| உத்தமர்கட்கு உத்தமர் ஆய் | மிகவும் உத்க்ருஷ்டர்களாய் வாழ்ந்திருந்து (பின்பு) |
| உம்பரும் ஆவர்கள் | நித்யஸூரிகளோடு சேர்ந்தவர்களுமாவர். |

* * *—நப்பின்னைப்பிராட்டியை மணம்புணர்வதற்கு இடையூறாயிருந்த ஏழ்விடைகளையும் வலியடக்கி அப்பிராட்டியோடே ஸம்ச்லேஷித்த திருமால் எழுந்தருளியிருக்குமிடமாய் வேதாத்யயநத்தில் பிரமனை யொத்தவர்களாயும் அழகில் ஸுப்ரஹ்மண்யனை நிகர்த்தவர்களாயுமுள்ள அந்தணர்கள் வாழுமிட மான திருநாங்கூரில் அரிமேய விண்ணகரமென்னுந் திருப்பதியில் வாழ்கின்ற பச்சைமாமலைபோல் மேனியனை பெருமான்விஷயமாகத் திருமங்கையாழ்வா

ரருளிச்செய்த இத்திருமொழியை ஓதியுணருமவர்கள் இவ்விபூதியிலே பெரும் புகழாளராய் நெடுங்காலம் வாழ்ந்திருந்து பிறகு நித்யவிபூதியையும் ஆளப் பெறுவர்களென்று இத்திருமொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

இப்பாசுரத்தில் "ஐந்தினோடு மூன்றும் ஒன்றினோடு மொன்று மிவை" என்றது ஸாபிப்ராயம்; அதாவது—க்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களைச் சொல்லுகின்ற பாசுரங்கள் ஐந்தும், நரஸிம்ஹாவதாரம், வாமநாவதாரம், ராமாவதாரம் ஆகிய மூன்றவதாரங்களைப்பற்றிப் பேசுகின்ற பாசுரங்கள் மூன்றும், அர்ச்சாவதாரபரமான முதற்பாட்டு ஒன்றும், பயனுரைத்த ஈற்றுப்பாட்டு ஒன்றும்—ஆகப் பத்துப்பாசுரங்களென்கை. இரண்டு, மூன்று, ஏழு, எட்டு, ஒன்பதாம் பாசுரங்கள் க்ருஷ்ணாவதார விஷயங்கள். நான்கு ஐந்து ஆறும்பாசுரங்கள், முறையே, நரஸிம்ஹ வாமந ராமாவதார விஷயங்கள். ... ... (ய)

அடிவரவு.—திருமடந்தை வென்றி உம்பர் ஓடாத கண்டவர் வாள் தீமனத்தான் கன்று வஞ்சனையால் சென்று போது.

பத்தாந்திருமொழி உரை முற்றிற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
பெரிய திருமொழி
திவ்யார்த்த தீபிகையில்
மூன்றும்பத்து முற்றிற்று.



ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரிய திருமொழி.

## நான்காம்பத்து—முதல்திருமொழி.

## போதலர்ந்த பொழிற்சோலை.

அவதாரிகை:—திருநாங்கூரிலுள்ள திருத்தேவனார்தொகை யென்னுந் திருப்பதியை மங்களாசாஸநஞ் செய்வதாமித்திருமொழி.

"மணிமாடக்கோயில் வணங்கென் மனனே!" என்றும் "திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே" என்றும் "தில்லைத்திருச்சித்ரகூடஞ் சென்று சேர்மின்களே" என்றும் ஒவ்வொருவகையான வினைமுற்றுக்களிட்டுத் திருப்பதிகங்களருளிச்செய்தாற் போலல்லாமல் திருப்பதியின் திருநாமத்தோடே முடிக்கும்வகையாக இத்திருமொழி அருளிச்செய்யப்பட்டது; மேல்திருமொழியும் இங்ஙனமே. திவ்யதேசங்களை அநுபவிக்கும் முறைமைகள் பலவற்றுள் இதுவும் ஒரு முறைமையாகும். எவ்வகையினாலேனும் திவ்யதேசங்களின் திருநாமங்கள் ஆழ்வார் திருவாக்கில் நுழைந்து புறப்பட்டு ஸத்தைபெறக்கடவன வத்தனை.

பண்டொருகால் எம்பெருமானை ஸேவிப்பதற்காகத் தேவர்கள் வந்து திரண்டவிடம் என்பதுபற்றி இத்திருப்பதிக்குத் திருத்தேவனார்தொகையென்று திருநாமமாயிற்றுப்போலும். தேவனார்—தேவதைகள், தொகை—நெருங்கி நின்றவிடம். ... .... ....

கலிவிருத்தம்.

போதலர்ந்த பொழிற்சோலைப் புறமெங்கும் பொருதிரைகள் *
தாதுதிர வந்தலைக்கும் தடமண்ணித் தென்கரைமேல் *
மாதவன்றா னுறையுமிடம் வயல்நாங்கை * வரிவண்டு
தேதேனவென் றிசைபாடும் திருத்தேவனார்தொகையே. (க)

போது அலர்ந்த } புஷ்பங்கள் மலரப்பெற்ற
பொழில் சோலை புறம் எங்கும் } பெரியசோலைகளுள்ள விடங்கள்முழுதும்
தாது உதிர { பூக்களின்தாதுகள் உதிரும்படியாக
பொரு திரைகள் வந்து அலைக்கும் } செறிந்த அலைகள் வந்து வீசப்பெற்ற
தடம் மண்ணி { பெரியமண்ணியாற்றினுடைய
தென் கரை மேல் } தெற்குக்கரையின்மேலே,

மாதவன் தான் } மாதவப்பெருமாள்

உறையும் இடம் { நித்யவாஸம்செய்தருளுமிடம் (எதுவென்றால்,)

வயல் நாங்கை { கழனிகள்சூழ்ந்த திருநாங்கூரில்,

வரி வண்டு { ரேகைகளையுடைய வண்டுகள்

தேதென என்று இசை பாடும் } தென்ன தென்னவென்று இசைபாடப்பெற்ற

திருத் தேவனார் தொகை { திருத்தேவனார்தொகையென்னுந் திருப்பதியாம்.

* * *—இத்திருப்பதியின் திருநாமம் "மாதவப்பெருமாள் ஸந்நிதி" என்றும் ப்ரஸித்தமாக வழங்கிவருதலால் "மாதவன் தானுறையுமிடம்" என்றார். மாதவன்—திருமகள் நாதன். இத்தலம் மண்ணியாற்றின் தென்கரையிலுள்ளதுபற்றித் தடமண்ணித் தென்கரைமேல் என்றது. அந்த நதியின் வளத்தை ஒன்றரையடிகளால் வருணிக்கிறார்.

போதலர்ந்த பொழிற்சோலே='போது' என்று காலத்திற்கும் புஷ்பத்திற்கும் பெயராதலால் அவ்விரண்டு பொருள்களும் இங்குக் கொள்ளத்தகும். காலத்திலே அலர்ந்த, (அல்லது) பூக்களலர்ந்த.

பொழில் என்றசொல்லுக்குப் பெருமையென்ற பொருளுமுண்டாதலால் அப்பொருள் இங்குக் கொள்ளப்பட்டது. அன்றி, 'பொழில் சோலே' என்ற இரண்டு சொற்களையும் ஒரு பொருளனவாகவேகொண்டு 'செறிந்தபொழில்' என்று தாற்பரியங்கொள்ளவுமாம். பூஞ்சோலேகள் உள்ளவிடமெங்கும் மண்ணியாற்றின் நீர்ப்பெருக்குகள் பெருகி அலேமோதிப் பூந்தாதுகளை உதிர்க்கப்பெற்றவிட மென்றதாயிற்று.

தேதென=இசைக்குறிப்பு. ... .... ... (க)

யாவருமா யாவையுமாய் எழில்வேதப் பொருள்களுமாய் *
மூவருமாய் முதலாய மூர்த்தியமர்ந் துறையுமிடம் *
மாவரும் திண்படைமன்னே வென்றிகொள்வார் மன்னுநாங்கை *
தேவரும்சென் றிறைஞ்சுபொழில் திருத்தேவனார்தொகையே. (உ)

யாவரும் ஆய் { சேதனப்பொருள்களெல்லாவற்றையும் சரீரமாகக் கொண்டவனாய்

யாவையும் ஆய் { அசேதனப்பொருள்களெல்லாவற்றையும் சரீரமாகக்கொண்டவனாய்

எழில் வேதம் பொருள்களும் ஆய் } அழகிய வேதங்களின் அர்த்தமும் தானாய்

மூவரும் ஆய் { (பிரமன், விஷ்ணு, ருத்ரன் என்று) மூன்றுவடிவுகள் கொண்டவனும் தானேயாய்

முதல் ஆய — முழுமுதற் கடவுளான

மூர்த்தி — எம்பெருமான்

அமர்ந்து உறையும் இடம்—;

மா வரும் — குதிரைமேல் ஏறிவருகிற

திண் படை { திடமான ஆயுதங்களையுடைய

| | | | |
|---|---|---|---|
| மன்னை | ராஜலோகத்தை | தேவரும் சென்று இறைஞ்ச | நித்யஸூரிகளும் வந்து வணங்கப்பெற்றதாய் |
| வென்றி கொள்வார் | தோற்கடித்து வெற்றி பெறும் அந்தணர்கள் | பொழில் | சோலைகளையுடைத்தான |
| மன்னு | நித்யவாஸம்பண்ணுகிற | | |
| நாங்கை | திருநாங்கூரில் உள்ளதாய், | | திருத்தேவனார் தொகையே—. |

* * *—பிரத்யக்ஷத்திற்காணப்படுகிற சேதநா சேதநப்பொருள்களெல்லாம் பொய் என்றும் ப்ரஹ்மம் ஒன்றே ஸத்யமென்றும் சொல்லுகிற மாயாவாதிகளைப் போலன்றியே, 'சேதநங்களாகவும் அசேதநங்களாகவுங்காணப் படுகின்ற பொருள்கள் யாவும் ஸத்யமே; இவையெல்லாம் எம்பெருமானுடைய சரீரங்கள்; இப்படிப்பட்ட சரீரங்களோடு கூடிய எம்பெருமான் ஒருவனே; "ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம—ஏகமேவ அத்விதீயம் ப்ரஹ்ம" என்று வேதங்களிற் சொல்லியிருப்பதன் கருத்து இதுவே; கை, கால், கண், மூக்கு முதலிய உறுப்புகளோடு கூடின ஆத்மா ஒருவனாயிருப்பதுபோல, சேதநா சேதநஸ்வரூபங்களான சரீரங்களோடு கூடின எம்பெருமான் ஒருவன் என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன' என்று கொள்ளுகிற வைதிகர்களில் ஆழ்வார் தலைவராகையாலே இந்த ஸித்தாந்தம் விளங்கக் கூறுகின்றார் 'யாவருமாய் யாவையுமாய்' என்று. [விசிஷ்டாத்வைதம் என்பது இதுவே.]

யாவர் என்ற சொல் உயர்திணைவிகுதியேற்றதாதலால் ஸகல சேதநப் பொருள்களையுஞ் சொல்லுகிறது. யாவை என்ற சொல் அஃறிணைவிகுதியேற்றதாதலால் ஸகல அசேதநப் பொருள்களையுஞ் சொல்லுகிறது. 'ஆய்' என்று இவற்றோடு எம்பெருமானுக்கு ஐக்கியஞ் சொன்னது—சரீரசரீரிபாவத்தாலென்க.

எழில் வேதப்பொருள்களுமாய்—"வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:—ஸகல வேதங்களினாலும் அறியத்தக்கவன் நானே" என்று அவன் தானே சொல்லிவைத்திருக்கிறபடி ஸகல வேதப் பொருளாயிருப்பவனென்க. எம்பெருமானைப் பிரதிபாதிக்கின்ற வேதங்கள்—ஸ்வரூபம், ரூபம், குணம், விபூதி முதலியவற்றைப் பிரதிபாதிக்கும் முகத்தால் எம்பெருமானைப் பேசுவனவாகையால் அவற்றின் பன்மைக்கிணங்க "வேதப் பொருள்களுமாய்" என்று பன்மையாகச் சொல்லப்பட்டது.

மூவருமாய்—பிரமன் என்கிற வேஷம்பூண்டு படைத்தல் தொழிலைச்செய்தும், தானான தன்மையில் காத்தல் தொழிலைச் செய்தும், ருத்ரனான தன்மையில் ஸம்ஹாரத் தொழிலைச் செய்தும்போருகிறவன் என்க. மூர்த்தி—ஸ்வாமி.

மாவருந்திண்படை மன்னை வென்றி கொள்வார் மன்னு நாங்கை—பண்டொருகால் பாண்டியராஜன் படைதிரட்டிக்கொண்டு ஆக்ரமிக்க அங்கு வந்தபோது அத்திருநாங்கூரிலுள்ள ப்ராஹ்மணர்கள்தாமே எதிரே புறப்பட்டோடித் துரத்தியடித்து வெற்றி கொண்டதாக இதிஹாஸப்ரஸித்தியுண்டு;

"ஒண்டிறல் தென்னனோட வடவரசோட்டங்கண்ட, திண்டிறலாளர் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே" என்பர் மேல் ஐந்தாந் திருமொழியிலும். ஒண்டிறல் தென்னனை ஓட்டின கதை தவிர வேறொரு கதையும் பெரியவாச்சான் பிள்ளை காட்டுகிறார் காண்மின்:—"உடையபிள்ளையென்கிறவன் அங்குத்தையாலயத்தைக் கவிபாடவென்று வர, அவனை எதிரேசென்றடித்தோட்டிப் பின்னை பாடப்பெறாதே போனான் என்றொருப்ரவாதித்தியுமுண்டிறே" என்பது வியாக்கியானவாக்கியம். உடையபிள்ளையென்பது ஞானசம்பந்தருடைய மறுபெயராம். ... ... ... .... (௨)

வானும் மண்ணும் மற்றுள்ள பல்லுயிரும் *
தானாய வெம்பெருமான் தலைவனமர்ந் துறையுமிடம் *
ஆனாத பெருஞ்செல்வத்து அருமறையோர் நாங்கைதன்னுள் *
தேனாரும் மலர்ப்பொழில்சூழ் திருத்தேவனார்தொகையே. (௩)

* வான் நாடும் — நித்யவிபூதியும்
மண் நாடும் — லீலாவிபூதியும்
மற்று உள்ள பல் உயிரும் — அவ்வவ்விடங்களிலுள்ள பலவகைப்பட்ட ஜீவராசிகளும்
தான் ஆய — ஆகிய இவையெல்லாம் தானேயாயிருக்கப் பெற்ற
எம்பெருமான் தலைவன் அமர்ந்து உறையும் இடம்—;
ஆனாத — அழிவில்லாத
பெரு செல்வத்து — மிக்க ஐச்வரியத்தையுடையராய்
அரு மறையோர் — அருமையானவேதங்களை ஓதினவர்களுமான அந்தணர் வாழ்கிற
நாங்கை தன்னுள்—;
தேன் ஆரும் மலர் பொழில் சூழ் — தேன்நிறைந்த பூக்களையுடைய சோலைகள் சூழ்ந்த
திருத்தேவனார் தொகையே—.

* * *—வானுலகம் நிலவுலகம் என்கிற இரண்டு விபூதிகளிலுமுள்ள ஸகல சராசரங்களும் 'தான்' என்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படி நிற்கிற, (அதாவது) இவற்றுக்கெல்லாம் தானே அபிமாநியாயிருக்கிற ஸர்வேச்வரன் எழுந்தருளியிருக்குமிடம்—செல்வம் ஒருநாளுங் குறையாமல் பெருகிவரப் பெற்ற வைதிக ப்ராஹ்மணர்கள் வாழுந் திருநாங்கூரில் பரமபோக்யமான திருத்தேவனார் தொகையாம்.

"பல்லுயிருந்தானாய வெம்பெருமான்" என்றவிடத்துக்குப் பெரியவாச்சான்பிள்ளை எடுத்துக்காட்டுகிற விசேஷோக்தி வருமாறு:—"தானும் குடும்பமுமாய்க் கலநெல் ஜீவிப்பானொருவனை 'உனக்கென்ன வேணும்?' என்றால், 'எனக்குக் கலநெல்வேணும்' என்னுமிறே தன்னபிமானத்துக்குள்ளே யடங்குகையாலே. அப்படியே, தானே இதுக்கெல்லாம் அபிமாநியாயிருக்கிற ஸர்வேச்வரன்—ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்த வஸ்துக்களும் தனக்கு ப்ரகாரமாய்ப் புறம்பு ஒருவரின்றிக்கே உபயவிபூதியும் தன்னிழலிலே யொதுங்கும்படியிருக்கையாலே தலைவனானவன் வந்து நித்யவாஸம் பண்ணுகிற தேசம்."

ஆனாத=ஆன்—பகுதி. ... ... ... ... (௩)

இந்திரனு மிமையவரும் முனிவர்களு மெழிலமைந்த *
சந்தமலர்ச் சதுமுகனும் கதிரவனும் சந்திரனும் *
எந்தையெமக் கருளெனநின்று அருளுமிட மெழில்நாங்கை *
சுந்தரநற் பொழில்புடைசூழ் திருத்தேவனார்தொகையே. (ச)

| | |
|---|---|
| இந்திரனும் | தேவேந்திரனும் |
| இமையவரும் | மற்றுமுள்ள தேவர்களும் |
| முனிவர்களும் | (ஸநகர்முதலிய) மஹர்ஷிகளும் |
| எழில் அமைந்த | ப்ராஹ்மண லக்ஷ்மி பொருந்தியவனாய் |
| சந்தம் | வேதங்களை நிரூபமாக வுடையனாய் |
| மலர் | தாமரைப்பூவினின்று தோன்றினவனான |
| சதுமுகனும் | பிரமனும் |
| கதிரவனும் | ஸூர்யனும் |
| சந்திரனும் | சந்திரனும் |
| எந்தை | 'எமக்குஸ்வாமியானவனே! |
| எமக்கு | எங்கள் விஷயத்திலே |
| அருள் | கிருபைபண்ணவேணும்' |
| என | என்று ப்ரார்த்திக்க |
| நின்று | அதற்குஇசைந்து நின்று |
| அருளும் இடம் | (அப்படியே) கிருபை பண்ணுமிடம் (எதுவென்றால்) |
| எழில் நாங்கை | திருநாங்கூரில் |
| சுந்தரம் நல் பொழில் | மிகவுமழகியசோலைகளாலே |
| புடை சூழ் | நாற்புறமும் சூழப்பட்ட |
| | திருத்தேவனார் தொகையே—. |

* * *—இந்திரன் சந்திரன் ஸூர்யன் பிரமன் முதலிய தேவர்களும், ஸநகஸநந்தநாதி மஹாமுநிகளும் வந்து திரண்டு 'ஸ்வாமிந்! எமக்கு அருள் புரியவேணும்' என்று வேண்டிக்கொள்ள, அவர்களுடைய அதிகாரங்களை நடத்திக்கொடுக்கைக்காக அருள்கூரும் எம்பெருமான் நித்யஸந்நிதி பண்ணுமிடம் திருத்தேவனார்தொகை.

அர்த்திகளின் அபேக்ஷிதங்களை நிறைவேற்றித் தருவதற்காக மாத்திரமல்லாமல் சோலைவாய்ப்புக் கண்டும் விடமாட்டாமல் எழுந்தருளியிருக்குமிடமென்கிறது ஈற்றடி. ... .... .... .... (ச)

அண்டமுமிவ் வலைகடலும் அவனிகளுங் குலவரையும் *
உண்டபிரா னுறையுமிடம் ஒளிமணிசந் தகில்கனகம் *
தெண்டிரைகள் வரத்திட்டுத் திகழ்மண்ணித் தென்கரைமேல் *
திண்டிறலார் பயில்நாங்கைத் திருத்தேவனார்தொகையே. (ரு)

| | |
|---|---|
| அண்டமும் | ஆகாசமும் |
| அலை இக் கடலும் | அலையெறிகின்ற இக்கடல்களும் |
| அவனிகளும் | (நாவலந்தீவு முதலிய) தீவுகளும் |
| குலம் வரையும் | (ஹிமவான் முதலிய) குலபர்வதங்களும் ஆகிய இவற்றையெல்லாம் |
| உண்ட | (பிரளயகாலத்தில்) திருவயிற்றிற்கொண்ட |
| பிரான் | உபகாரகனான எம்பெருமான் |
| உறையும் இடம் | வாழுமிடம் (எதுவென்றால்) |
| ஒளி | ஒளிபொருந்திய |
| மணி | ரத்நங்களையும் |
| சந்து | சந்தன மரங்களையும் |

| | | | |
|---|---|---|---|
| அகில் | அகில் கட்டைகளையும் | | திகழ் மண்ணி தென் கரை மேல்—; |
| கனகம் | பொன்களையும் | திண் திறலார் | மிக்க பலசாலிகள் |
| தெண் திரைகள் வர | தெளிந்த அலைகளின் வழியே வரும்படியாக | பயில் | நித்யவாஸம் பண்ணுகிற |
| திரட்டும் | ராசி ராசியாகக் குவிக்கின்ற | நாங்கை | திருநாங்கூரிலுள்ளதான |
| | | | திருத்தேவனார் தொகை—. |

* * *—ஆகாசம், கடல்கள், த்வீபங்கள், குலபர்வதங்கள் ஆகிய இவையெல்லாவற்றையும் பிரளயாபத்திலே திருவயிற்றில் வைத்து உய்யக்கொண்ட உபகாரகன் உகந்து உறையுமிடம்—மணிமாணிக்கங்களைக் கொழித்துக்கொண்டு அலையெறிகின்ற மண்ணியாற்றின் தென்கரையிலுள்ள திருத்தேவனார்தொகை.

உருவமற்றதான ஆகாசத்தை வயிற்றினுள்ளே வைத்தருளினன் என்றதற்குக்கருத்து யாதெனில்; இடைவெளியாயுள்ளது ஆகாசமெனப்படும்: மிகச்சிறிய திருவயிற்றினுள்ளே இப்பெரும்பொருள்களையெல்லாம் வைத்தவிடத்தும் நெருக்குப்பட்டிராமல் இடைவெளி பெரிதுமுண்டாயிருந்தது என்றவாறு.

திண்டிறலார்பயில் = கீழ் இரண்டாம் பாட்டின் பின்னடிகளின் உரை விவரணங்காண்க. ... .... .... .... ... (ரு)

ஞாலமெல்லா மமுதுசெய்து நான்மறையுந் தொடராத *
பாலகனா யாலிலையில் பள்ளிகொள்ளும் பரமனிடம் *
சாலிவளம் பெருகிவரும் தடமண்ணித் தென்கரைமேல் *
சேலுகளும் வயல்நாங்கைத் திருத்தேவனார்தொகையே. (சு)

| | | | |
|---|---|---|---|
| நால் மறையும் தொடராத | நான்கு வேதங்களாலும் எட்டிப்பிடிக்க முடியாத (பெருமை பொருந்திய) | இடம் | திருப்பதி (எதுவென்றால்), |
| | | | தட மண்ணித் தென் கரை மேல்—; |
| பாலகன் ஆய் | இளங் குழந்தையாய்க் கொண்டு | சாலி | செந்நெற்பயிர்களினுடைய |
| | | வளம் | செழிப்பானது |
| ஞாலம்எல்லாம் | பூமிமுழுவதையும் | பெருகி வரும் | அதிகப்பட்டு வராநிற்பதாய் |
| அமுது செய்து | விழுங்கி | சேல் உகளும் | மீன்கள் துள்ளி விளையாடப் பெற்றதான |
| ஆல் இலையில் | ஆலந்தளிரில் | வயல் | கழனிகளையுடைய |
| பள்ளி கொள்ளும் | திருக்கண்வளர்ந்தருளுகிற | நாங்கை | திருநாங்கூரில் |
| பரமன் | எம்பெருமானுடைய | | திருத்தேவனார் தொகையே—. |

* * *—உலகங்களையெல்லாம் பிரளயங்கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்தடக்கி மிகச்சிறிய குழவியாய்ச் சிற்றாலந்தளிரில் திருக்கண் வளர்ந்தருளும் பெருமான் எழுந்தருளியிருக்குமிடம் நாங்கைத் திருத்தேவனார் தொகையாம்.

நான்மறையுந் தொடராத="யதோ வாசோ நிவர்த்தந்தே । அப்ராப்ய மநஸா ஸஹ" என்று வேதந்தானே ஓதிவைத்தது; பரமாத்மாவினுடைய

ஸ்வரூபத்தை நாடிச் சொல்லிக்கொண்டே சென்றவேதம் அதன்முடிவு தனக்கு எட்டாமையால்மீண்டதென்க: கோயில்களில் உத்ஸவங்கண்டருளுகிறபொழுது எம்பெருமானை வடமொழிவேதம் எட்டமாட்டாமல் நாடித்தொடர்ந்து செல்லு தற்கு அறிகுறியாக எம்பெருமானுக்குப் பின்னே வேதபாராயணம் செய்யப் பட்டுவருதல் காண்க. "தோடராத" என்றது—பின்தொடர்ந்தும் பிடிக்க முடியாத என்றபடி.

சாலி—தற்சமவடசொல். ... ... ... (௬)

ஓடாத வாளரியின் உருவாகி யிரணியனை *
வாடாத வள்ளுகிரால் பிளந்தளைந்த மாலதிடம் *
ஏடேறு பெருஞ்செல்வத்து எழில்மறையோர் நாங்கைதன்னுள் *
சேடேறு பொழில்தழுவு திருத்தேவனார்தோகையே. (எ)

| | |
|---|---|
| ஓடாத | நாட்டில் நடமாடாமல் அபூர்வமான |
| ஆள் அரியின் உரு ஆகி | நரஸிம்ஹ மூர்த்தியாகி |
| வாடாத | வளையாத |
| வள் உகிரால் | கூர்மைமிக்க நகங்களினால் |
| இரணியனை | ஹிரண்யாஸுரனை |
| பிளந்து | கிழித்து |
| அளைந்த | (ரத்தப்பெருக்கிலே) அளைந்துகொண்டிருந்த |
| மாலது | எம்பெருமானுடைய |

| | |
|---|---|
| இடம் | திருப்பதி (எதுவென்றால்) |
| ஏடு ஏறு | புத்தகங்களிலே எழுதி வைக்கத்தக்க |
| பெரு செல்வத்து | மிகுந்த ஐச்வரியத்தை யுடையராய் |
| எழில் மறையோர் | அழகிய வைதிகர்களான அந்தணர் வாழ்கிற |
| | நாங்கை தன்னுள்—; |
| சேடு ஏறு பொழில் தழுவு | இளமைபொருந்திய சோலை களோடு கூடிய |
| | திருத்தேவனார் தொகையே—. |

* * *—நாட்டில் நடையாடாத நரஸிம்ஹவேஷத்தைப் பரிக்ரஹித்து ஹிரண்யாஸுரனுடைய முரட்டுடலிலே விபரீயாநிற்கச் செய்தேயும் வளை யாத கூரிய உகிராலே அவனது மார்பை இருபிளவாகப்பிளந்து, அவ்வுடலில் நின்று பெருகின உதிரவெள்ளத்திலே அளைந்த பெருமான் எழுந்தருளியிருக்கு மிடம் திருத்தேவனார் தொகை.

ஏடேறு பெருஞ்செல்வத்து=எம்பெருமானுடைய பெருமைகளை ஸ்ரீராமா யணம் ஸ்ரீபாரதம் முதலிய இதிஹாஸங்களாக ஏடுபடுத்திவைத்திருப்பது போலப் புத்தகங்களாக எழுதிவைக்கத்தகுந்த பெருஞ்செல்வமுடையார் திரு நாங்கூர்வைதிகர்கள் என்கை. ஏடு என்று குற்றத்திற்கும் வாசகமாகையாலே குற்றமற்ற பெருஞ்செல்வத்தினர் என்று முரைப்பர். ஏறுகை—மாண்டு போகை. ... ... .... ... (எ)

வாராரு மிளங்கொங்கை மைதிலியை மணம்புணர்வான் *
காரார்திண் சிலையிறுத்த தனிக்காளை கருதுமிடம் *
ஏராரும் பெருஞ்செல்வத்து எழில்மறையோர் நாங்கைதன்னுள் *
சீராரும் மலர்ப்பொழில்சூழ் திருத்தேவனார்தோகையே. (அ)

| | | | |
|---|---|---|---|
| வார் ஆரும் இள கொங்கை | கச்சையிட்டுத் தாங்க வேண்டும்படியான இள முலைகளையுடைய | ஏர் ஆரும் | அழகு பொருந்திய |
| மைதிலியை | ஸீதாபிராட்டியை | பெரு செல்வத்து | மிக்க ஐச்வரியத்தை யுடையராய் |
| மணம் புணர்வான் | விவாஹம் செய்து கொள் வதற்காக | எழில் மறையோர் | விலக்ஷண வைதிகர்களான அந்தணர் வாழ்கிற |
| | | | நாங்கை தன்னுள்—; |
| கார் ஆர் திண் சிலை இறுத்த | வயிரம்பற்றித் திண்ணிதான வில்லை முறித்த | சீர் ஆரும் | அழகு விஞ்சிய |
| | | மலர் | பூக்களையுடைய |
| தனி காளை | விலக்ஷண யௌவநபுருஷன் | பொழில் | சோலைகளாலே |
| கருதும் இடம் | திருவுள்ளம்பற்றின திவ்ய தேசம் (எதுவென்றால்) | சூழ் | சூழப்பட்ட |
| | | | திருத்தேவனார் தொகையே—. |

* * *—"வாராளு மிளங்கொங்கை" என்றும் பாடமுண்டு. கச்சு அணிந்து ஆளவேண்டும்படியான இளமுலைகளையுடையாள் என்கை. பிராட்டியைத் திரு மணம் புணர்வதற்காக ஜநகராஜன் திருமாளிகையிலிருந்த ருத்ரதநுஸ்ஸை முறித்து அவளைத்திருமணம் புணர்ந்துகொண்ட யுவாவானவன் நாம்வாழ்வதற் குரிய விடமென்று திருவுள்ளம்பற்றின இடம் திருத்தேவனார் தொகை.

முன்னொருகாலத்தில் தேவசில்பியான விச்வகர்மாவினால் நிருமிக்கப்பட்ட சிறந்த இரண்டு விற்களுள் ஒன்றைச் சிவபிரானும் மற்றொன்றைத் திரு மாலும் எடுத்துக்கொண்டார்கள்; பின்பு ஒருகாலத்தில் அவ்விற்களுள் சிறந்தது இன்னதென்பதை அறிய விரும்பிய தேவர்களின் வேண்டுகோளாற் பிரமன் அரனுக்கும் அரிக்கும் போரைமூட்டிவிட, அங்ஙனமே அவர்கள் அவ்விற்களைக் கொண்டு பொருகையில், சிவபிரானது வில் சிறிது முறிபட்டது; அவ்வாறு இற்ற வில்லைச் சிவபிரான் ஜநககுலத்துத் தேவராதனென்னும் அரசனிடம் கொடுத்திட, அது வம்சபரம்பரையாய் ஜநகமஹாராஜனளவும் வந்தது. இவ் வில்லை நாணேற்றும் மஹாபுருஷனுக்கே ஸீதையைத் தாரைவார்த்துக் கொடுப்ப தாக ஜநகமஹாராஜன் நிச்சயித்திருந்தனனாதலால் இராமபிரான் அப்படியே செய்து மைதிலியை மணம்புணர்ந்தான். ... .... (அ)

கும்பமிகு மதயானை பாகனொடுங் குலைந்துவீழ *
கொம்பதனைப் பறித்தெறிந்த கூத்தனமர்ந் துறையுமிடம் *
வம்பவிழுஞ் செண்பகத்தின் மணங்கமழும் நாங்கைதன்னுள் *
செம்பொன்மதிள் பொழில்புடைசூழ் திருத்தேவனார்தொகையே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| மிகு கும்பம் | பெருத்தமத்தகத்தையுடைய | அதன் கொம்பை | அவ்யானையின் தந்தத்தை |
| மதம் யானை | (குவலயா பீடமென்கிற) மதயானையானது | பறித்து எறிந்த | பிடுங்கிப் பொகட்ட |
| பாகனொடும் | தனது பாகனோடுகூட | கூத்தன் | திவ்ய சேஷ்டிதங்களை யுடைய பெருமான் |
| குலைந்து வீழ | பங்கப்பட்டு ஒழியும்படியாக | | |

அமர்ந்து உறையும் இடம்—;

| | |
|---|---|
| வம்பு அவிழும் செண்பகத்தின் | அப்போதலர்ந்த செண்பகப் பூவினுடைய |
| மணம் கமழும் | வாஸனை வீசப்பெற்ற |

நாங்கை தன்னுள்—;

| | |
|---|---|
| செம் பொன் | செவ்விய பொன்னாற் செய்யப்பட்ட |
| மதிள் | திருமதில்களும் |
| பொழில் | சோலைகளும் |
| புடை சூழ் | சுற்றிலும் சூழ்ந்திருக்கப் பெற்ற |

திருத்தேவனார் தொகையே—.

* * *—வில்விழவென்கிற வியாஜம்வைத்துக் கம்ஸனாலழைக்கப்பட்டு அவனது அரண்மனையை நோக்கிச் செல்லுகையில் ஆங்கு வாயில் வழியில் தன்னைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்டிருந்த குவலயாபீடமென்னும் மதயானை சீறிவர, அதனை எதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை யெடுப்பதுபோல எளிதிற்பறித்து அவற்றையே ஆயுதமாகக் கொண்டு அடித்து அவ்யானையையும் யானைப்பாகனையும் உயிர்தொலைத்தொழித்த பெருமானுறையுமிடம் திருத்தேவனார் தொகை. கண்ணபிரான் இப்படி செய்த வீரச்செயல்களெல்லாம் சிரமப்பட்டுச் செய்ததன்றியே விநோதமாகக் கூத்தாடுவதுபோல் அநாயாஸமாகச் செய்தவையென்பது தோன்ற 'கூத்தன்' எனப் பட்டது.

வம்பு—புதுமை; வம்பவிழும்—புதுமையாகமலர்ந்த; அப்போதலர்ந்த என்கை. ... .... ... ... (கூ)

காரார்ந்த திருமேனிக் கண்ணனமர்ந் துறையுமிடம் *
சீரார்ந்த பொழில்நாங்கைத் திருத்தேவனார்தொகைமேல் *
கூரார்ந்த வேல்கலியன் கூறுதமிழ் பத்தும்வல்லார் *
ஏரார்ந்த வைகுந்தத்து இமையவரோ டிருப்பாரே. (கo)

| | |
|---|---|
| கார் ஆர்ந்த திரு மேனி | மேகத்தோடொத்த திருமேனியையுடைய |
| கண்ணன் | கண்ணபிரான் |
| அமர்ந்து உறையும் இடம் | பொருந்திவாழும் திருப்பதியாய், |
| சீர் ஆர்ந்த பொழில் நாங்கை | அழகுபொருந்திய சோலைகளையுடைய திருநாங்கூரிலுள்ளதான |
| திருத் தேவனார் தொகை மேல் | திருத்தேவனார்தொகை யென்னும் திவ்யதேசம் விஷயமாக |

கூர் ஆர்ந்த வேல் கலியன்—;

| | |
|---|---|
| கூறு | அருளிச்செய்த |
| தமிழ் பத்தும் | இத்தமிழ்ப்பாசுரங்கள் பத்தையும் |
| வல்லார் | ஓதவல்லவர்கள் |
| ஏர் ஆர்ந்த வைகுந்தத்து | நன்மைமிக்க ஸ்ரீவைகுண்டத்தில் |
| இமையவரோடு இருப்பார் | நித்யஸூரிகளோடுகூடியிருக்கப்பெறுவர்கள். |

* * *—மேகம்போல் தாபந்தீர்க்கும் வடிவையுடைய கண்ணபிரான் விரும்பியெழுந்தருளியிருக்குந் திருப்பதியாகிய நாங்கைத் திருத்தேவனார் தொகை விஷயமாகக் கலியன் வகுத்த இத்திருமொழியைக் கற்போர் நன்மைக்கு எல்லை

யில்லாமலிருக்கிற திருநாட்டிலே திருவடி திருவனந்தாழ்வான் முதலிய நித்ய ஸூரிகளோடே கூடிவாழப்பெறுவரென்று இத்திருமொழி கற்றார்க்குப்பலன் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. ... ... .... (ய)

அடிவரவு:—போது யாவரும் வானவும் இந்திரனும் அண்டமும் ஞாலம் ஓடாத வாரார் கும்பம் காரார்ந்த கம்பமா.

நான்காம்பத்து முதல்திருமொழி உரை முற்றிற்று.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—இரண்டாந்திருமொழி,

# கம்பமா கடல்.

## திருநாங்கூர் வண்புருடோத்தமத் திருப்பதி மங்களாசாஸனத் திருப்பதிகம்.

கம்பமாகடலடைத் திலங்கைக்குமன் கதிர்முடியவைபத்தும்
மம்பினாலறுத்து * அரசவன்தம்பிக்கு அளித்தவனுறைகோயில் *
செம்பலாநிரை செண்பகம்மாதவி சூதகம்வாழைகள்சூழ் *
வம்புலாங் கமுகோங்கிய நாங்கூர் வண்புருடோத்தமமே. (க)

| | |
|---|---|
| கம்பம் | (கண்டபோதே) நடுக்கத்தை விளைப்பதான |
| மா கடல் | பெரிய கடலிலே |
| அடைத்து | ஸேதுகட்டி |
| இலங்கைக்கு மன் | இலங்கைக்கு அதிபதியான இராவணனுடைய |
| கதிர் | ஒளிவிடுகின்ற |
| முடி அவை பத்தும் | தலைகள் பத்தையும் |
| அம்பினால் அறுத்து | பாணங்களினால் அறுத்து |
| அவன் தம்பிக்கு | அவ்விராவணன் தம்பியான விபீஷணாழ்வானுக்கு |
| அரசு அளித்தவன் | ராஜ்யமளித்த இராமபிரான் |
| உறை கோயில் | எழுந்தருளியிருக்குமிட மேதுவென்றால்,— |
| செம் பலா நிரை | பலாமரங்களின் செவ்விய வரிசைகளும் |
| செண்பகம் | செண்பகமரங்களும் |
| மாதவி | குருக்கத்திச் செடிகளும் |
| சூதகம் | மாமரங்களும் |
| வாழைகள் | வாழைமரங்களும் (ஆகிய இவற்றால்) |
| சூழ் | சூழப்பட்டு, |
| வம்பு உலாம் கமுகு ஓங்கிய | பரிமளம் வீசுகின்ற பாக்கு மரங்கள் ஓங்கி வளரப்பெற்ற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| வண் புருடோத்தமம் | வண்புருஷோத்தம மென்னும் திவ்யதேசமாம். |

* * *—சிறிய திருவடி அசோகவனத்திற் பிராட்டியைக்கண்டு மோதிர மளித்துச் சூடாமணிபெற்று, இலங்கையில் சில வீரச்செயல்களைக்காட்டி மீண்டுபோனபின், இலங்கைக்கிறைவனான இராவணன் ஸபைகூட்டி 'ஸுக்ரீவனுடைய மந்திரியாகிய ஓர் குரங்கு வந்து இலங்கையை அழித்துவிட்டுப் போயிற்று; இனி நாம் வெறுமனிருக்கலாகாது; இப்போது செய்யத்தக்க உபாயமென்? எனக்கு ஸீதையை இராமனுக்குக் கொடுக்க இஷ்டமில்லை; உங்கள் கருத்தைச் சொல்லுங்கள்' என்ன; ப்ரஹஸ்தன் முதலிய மந்திரிகளும் இந்திரஜித்து முதலிய புதல்வர்களும் மற்றும் பந்து வர்க்கங்களும் தாமஸ ப்ரக்ருதிகளாய் நல்வழி யறியாமல் இராவணன் சோற்றையுண்டு அவன் வழியே போமவர்களாகையால் இராவணன் சொன்னதையே அநுமோதித்து அதற்குத் தக்க யுக்திகளையுஞ் சொன்னார்கள்; தர்மாத்மாவாகிய விபீஷணாழ்வான் 'அண்ணா! நான் சொல்லும் ஹிதத்தைக் கேளும்' என்று தொடங்கிப் பலவாறாக உஜ்ஜீவிக்கும் வழிகளைக் கூறியவிடத்தும் இராவணன் யமனுக்கு ஆட்பட்டபடியாலே அந்த ஹிதோபதேசங்களை ஆதரியாமல் விபீஷணனை வெகுவாகத் திரஸ்கரித்தான்: பிறகு விபீஷணாழ்வான் 'இனி நமக்கு இப்பாவியின் ஸஹவாஸம் நொடிப்பொழுதும் தகாது; ஸ்ரீராமபிரானையே சரணமடைந்து உஜ்ஜீவிக்கத்தகும்;' என்று நிச்சயித்து உடனே அந்த ஸபையில் நின்றும் கதாபாணியாய் ஆகாசத்தில் உயரக்கிளம்பினார்: அவருடன்கூட அவருடைய நான்கு மந்திரிகளும் கிளம்பினார்கள்.

விபீஷணன் அந்த மந்திரிகள் நால்வருடன்கூடவந்து தென்கடலுக்கு வடகரையில் இராகவனெழுந்தருளி யிருக்குமிடத்தில் ஆகாசத்தில் நின்றவண்ணமாகவே ஸுக்ரீவாதி வாநர வீரர்களை முன்னிட்டு, தன் வரலாறுகளையெல்லாஞ் சொல்லித் தன்னைப் பெருமாள் கைக்கொண்டருளுமாறு பிரார்த்தித்துச் சரணம் புகுந்து, யுத்தத்தில் இராகவனுக்கு வேண்டும் உதவிகளையெல்லாம் செய்வதாகப் பிரதிஜ்ஞை செய்ய, இராமபிரான் அந்த விபீஷணனுக்குக் கடலினின்றும் ஜலம் வரவழைத்து 'லங்கா ராஜ்யத்தில் உமக்குப் பட்டாபிஷேகம் பண்ணினோம்' என்று அபிஷேகம் செய்வித்தார்: பின்பு விபீஷணன் பெருமாளைப் பார்த்து 'ஸ்வாமிந்! இந்த நம்முடைய சேனைகள் கடலைக் கடந்து அப்பாற் செல்லவேண்டுமாதலால் அதற்காகக் கடலரசனை நீர் சரணம் புகவேணும்' என்ன; இராமபிரான் 'கடலைக் கடக்க உபாயம் சொல்லவேண்டும்' என்று கடலரசனாகிய வருணனைப் பிரார்த்தித்து தர்ப்பசயனத்திலே படுத்து மூன்று நாளளவும் ப்ராயோபவேசமாகக் கிடக்க, ஸமுத்ரராஜன் அப்பெருமானது மஹிமையைக் கருதாமல் உபேக்ஷையாயிருந்துவிடவே, ஸ்ரீராமன் அதுகண்டு கோபங்கொண்டு 'அனைவரும் நடந்தே செல்லும்படி கடலை வற்றச் செய்வேன்' என்று ஆக்நேயாஸ்த்ரத்தைத் தொடுக்கத் தொடங்கியவளவிலே வருணன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து இராமபிரானைச் சரணமடைந்து கடல் வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு, நளன் கையினால் நீரில்போட்ட

கற்களும் மிதக்குமென்று அவனுக்கு அவன் தகப்பனார் வரமளித்திருக்கிறாராகையால் அவனைக்கொண்டு ஸேதுகட்டவேணுமென்று சொல்லி மறைந்துவிட்டான்: இராகவனும் அப்படியே மற்ற வானரங்கள் சுற்றுமுள்ள மலைகளைப் பிடுங்கிக்கொண்டுவந்து நளன் கையில் கொடுக்கச்செய்து நளன் கையினால் அம்மலைகளை நீரில் போகடுவித்து ஸேதுகட்டுவித்தான்; அவ்வழியாய் வானரஸேனைகளுடனே பெருமாள் இலங்கை சேர்ந்து போர்க்களத்தில் இராவணனைவென்று முடித்தருளினர்: அப்பெருமான் அந்த வீரச்செயல் விளங்கப் பின்னானார் வணங்குஞ் சோதியாயெழுந்தருளி நிற்குமிடம் திருநாங்கூர் வண்புருடோத்தமம்.

இராவணனை வென்று முடிப்பதற்கு முன்னமே கடற்கரையிலேயே விபீஷணாழ்வானுக்குப் பட்டாபிஷேகம் செய்ததாயிருக்க "இலங்கைக்கு மன் கதிர் முடியவை பத்து மம்பினாலறுத்து அரசவன் தம்பிக்கு அளித்தவன்" என்று ராவண ஸம்ஹாரமான பிறகு விபீஷண பட்டாபிஷேகம் செய்ததாக ஆழ்வார் அருளிச் செய்ததென்? என்னில்; முன்னரே செய்த அப்பட்டாபிஷேகம் நிலைத்தது ராவண ஸம்ஹாரத்துக்குப்பிறகே யாதலாலென்க. "தென்னிலங்கை மன்னன் சிரந்தோள் துணிசெய்து, மின்னிலங்குபூண் விபீடண நம்பிக்கு, என்னிலங்கு நாமத்தளவு மரசென்ற" என்றார் பெரியாழ்வாரும்.

'முடி' என்னுஞ் சொல்லுக்கு—கிரீடம் என்றும் தலை யென்றும் பொருளுண்டாகையால் 'கதிர்முடியவை பத்தும்' என்ற இவ்விடத்து இரட்டுறமொழிதலாகக்கொண்டு 'கிரணம் வீசுகின்ற கிரீடங்களணிந்த பத்துத் தலைகளையும்' என்று பொருள் கொள்ளுதலும் பொருந்தும்.

பின்னடிகளில் திருநாங்கூரின் சோலைவாய்ப்பு வருணிக்கப்படுகிறது.

மாதவி, சூதகம்—வடசொற்கள்.

பரம உதாரனான புருஷோத்தமனாகிய எம்பெருமானுடைய தலம் என்பது பற்றி இத்தலம் வண்புருடோத்தமம் ஆயிற்று. ... ... (க)

பல்லவந்திகழ் பூங்கடம்பேறி அக்காளியன் பணவரங்கில் *
ஒல்லைவந்துறப் பாய்ந்தருநடஞ்செய்த உம்பர்கோ னுறைகோயில் *
நல்லவேந்தழல் மூன்றுநால்வேதம் ஐவேள்வியோ டாறங்கம் *
வல்லவந்தணர் மல்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. (உ)

பல்லவம் திகழ் } தளிர்கள் விளங்காநின்ற
பூ கடம்பு — பூத்த கடம்பமரத்தின்மேல்
ஏறி — ஏறி
அ காளியன் { அப்படிப்பட்ட [கொடியனான] காளியனுடைய
பணம் அரங்கில் { படங்களாகிற நாட்யஸ்தலத்தில்

ஒல்லை வந்து உற பாய்ந்து { திடீரென்று வந்து சிக்கனக் குதித்து
அரு நடம் செய்த { அருமையான கூத்தாட்டம் செய்த
உம்பர் கோன் — தேவாதி தேவன்
உறை கோயில் } வாழுமிடம்;—

| | |
|---|---|
| வெம் தழல் மூன்று | த்ரேதாக்நிகளையும் |
| நால் வேதம் | நான்கு வேதங்களையும் |
| ஐ வேள்வியோடு | பஞ்ச மஹாயஜ்ஞங்களையும் |
| ஆறு அங்கம் | வேதாங்கங்கள் ஆறையும் |
| வல்ல | அதிகரித்து ஸமர்த்தர்களான |
| நல்ல அந்தணர் | நல்ல பிராமணர்கள் |
| மல்கிய | நிறைந்திருக்கப்பெற்ற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |

வண் புருடோத்தமம்—.

* * *—ஒருநாள் கண்ணபிரான் கன்றுகளை ஓட்டிக்கொண்டு ஒருவரும் ஸஞ்சரியாத வழியே போகத்தொடங்க, மற்ற இடைப்பிள்ளைகள் அழைத்து 'க்ருஷ்ணா! அவ்வழி நோக்கவேண்டா; அவ்வழியிற்சென்றால் யமுநாநதியில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடுமுழுவதையும் தன் விஷாக்நியினால் கொதிப்படைந்த நீருள்ளதாய்ப் பானத்துக்கு அநர்ஹமாம்படி செய்த காளியன் என்னுங் கொடிய ஐந்தலைநாகம் குடும்பத்தோடு வாஸஞ்செய்துகொண்டு அணுகினவர்களனைவரையும் பிணமாக்கி விடுதலால் நாங்கள் அஞ்சுகின்றோம்' என்ன; அதைக்கேட்ட கண்ணபிரான் உடனே அக்காளியநாகத்தைத் தண்டிக்கவேண்டுமென்ற திருவுள்ளங்கொண்டு அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளதொரு கடம்பமரத்தின்மேலேறி அம்மடுவிற்குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின்மேல் ஏறித்துவைத்து நர்த்தனஞ்செய்து நசுக்கி வலியடக்குகையில், மாங்கல்யபிக்ஷை யிட்டருளவேண்டுமென்று தன்னை வணங்கிப் பிரார்த்தித்த நாககன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி அந்தக்காளியனை உயிரோடு கடலிற் சென்று வாழும்படி விட்டருளினன். அப்படிப்பட்ட பெருமான் நமது ஸம்ஸாரமாகிய கொடிய ஸர்ப்பத்தையும் தண்டிக்க வந்து நிற்குமிடம் வண்புருடோத்தமம்.

பல்லவந்திகழ் பூங்கடம்பு ஏறி = அந்தக் கடப்பமரம் காளியனுடைய விஷாக்நியினால் கொளுத்தப்பட்டு இலை, பூ, காய், கனி முதலியவை யொன்றுமின்றி மொட்டை மரமாக இருந்தாலும், கண்ணபிரான் அதன்மேல் ஏறும்போது அவனுடைய திருவடி ஸம்பந்தமுண்டான மாத்திரத்தினால் பல்லவந்திகழ்பூங் கடம்பாயிற்றென்க. "பூத்தநீள் கடம்பேறி" என்றாள் சூடிக்கொடுத்த சுடர்க் கொடியும்.

திருநாங்கூரிலுள்ள அந்தணர்களின் ஜ்ஞாநாநுஷ்டாந வைபவம் கூறுவன பின்னடிகள். ... ... ... ... (௨)

அண்டரானவர் வானவர்கோனுக்கென்று அமைத்த சோறதுவெல்லா
முண்டு * கோநிரைமேய்த்தவை காத்தவன் உகந்தினிதுறைகோயில் *
கோண்டலார்முழவில் குளிர்வார்பொழில் குலமயில் நடமாட *
வண்டுதானிசை பாடிடுநாங்கூர் வண்புருடோத்தமமே. (௩)

அண்டர் ஆனவர் } இடையர்கள்
வானவர் கோனுக்கு என்று } தேவேந்திரனுக்குப் பலியிடவேண்டுமென்று
சமைத்த சோறு அது எல்லாம் } சமைத்த சோற்றை முழுதும்
உண்டு அமுது செய்தவனும்
கோ நிரை அவை } பசுக்கூட்டங்களை
மேய்த்து காத்தவன் } மேய்த்து ரக்ஷித்தவனுமுள்ள பெருமான்
உகந்து இனிது உறை கோயில்—;

குளிர் வார் பொழில் } குளிர்ந்து பரந்த சோலைகளிலே,
கொண்டல் மேகங்களினுடைய
ஆர் முழவில் } மிக்க கோஷம் உண்டாகும்போது
குலம் மயில் } கூட்டங்கூட்டமான மயில்கள்
நடம் ஆட கூத்தாடப்பெற்றதும்,
வண்டு வண்டுகள்
இசை பாடிடு } (மயில்களின் கூத்தாட்டத்திற்குத் தகுதியாக) இசைபாடப்பெற்றதுமான
நாங்கூர் திருநாங்கூரில்
வண்புருடோத்தமம்—.

* * *—திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்களெல்லாரும் கண்ணபிரானுடைய அற்புத சரிதைகளைக்கண்டு 'இவனே நம் குலக்கொழுந்து; இவனது சொற்படி நடப்பதே நமது கடமை' என்று நிச்சயித்திருந்தனர்; இருக்கையில், சரத்காலம் வந்தது; அப்போது இடையர்கள் வருடந்தோறும் நடத்துவது போல் இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பலபல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜைப்பொருள்களையும் அமைப்பதைக் கண்டு கண்ணபிரான் 'ஓ பெரியோர்களே! இவை ஏதுக்காக?' என்றான்; அதற்கு அவர்கள் 'அப்பா! தேவேந்திரனுடைய அநுக்ரஹத்தினால் காலங்களில் தகுதியாக மழைபெய்து அதனால் பசுக்களும் நாமும் ஸுகமே வாழ்கிறோம்; இனி எப்போதும் அந்த இந்திரன் நம்மை இப்படியே ரக்ஷிக்கவேணுமென்கைக்காக அவனுக்கு வருஷத்துக்கொருமுறை பொங்கலிடுவதுண்டு; அதற்காக இவையெல்லாம் சேர்த்துவைத்தோம்' என்றனர்: கண்ணன் அதுகேட்டு 'நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கிறோமோ அதற்கன்றோ பூஜை செய்யவேண்டும்; இக்கோவர்த்தன மலையன்றோ பசுக்களுக்குப் புல்லுந் தண்ணீருங்கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்ன பிரயோஜனமுண்டு? இதையெல்லாம் நீங்கள் இந்த மலைக்கே பலியிடுங்கள்' என்று கட்டளையிட, இடையர்கள் அப்படியே செய்யத்துணிந்து மலைக்கே பலியிட்டவளவில், கண்ணபிரான் தான் அம்மலையில் ஆவேசித்து அவற்றையெல்லாம் தானே அமுதுசெய்திட்டான்; பின்பு பூஜையிழந்த இந்திரன் சீற்றமுற்றுத் தன் பரிஜனங்களான மேகங்களையழைத்து 'இடைக்குலத்துக்குப் பெருந்தீங்கு விளையும்படி விடாமழை பெய்யுங்கள்' என்று சொல்லிக் கட்டளையிடவே, அம்மேகங்கள் அப்படியே வந்து ஏழுநாள் விடாமழை பெய்ய, இடையரும் பசுக்களுமெல்லாம் கதறிக்கதறிக் கண்ணனையே சரணமடைய, கண்ணபிரான் அபயமளித்து அம்மலையைப் பிடுங்கிக் குடையாகத்தூக்கித் தாங்கிக் கோகுலத்

தைச்சேர்ந்த ஸகல பிராணிகளையும் அதன்கீழ் அழைத்துக்கொண்டு சிறிதும் அபாயமின்றிக் காப்பாற்றியருளினன். அப்பெருமான் நம்மையுங் காக்கவேண்டி இன்றைக்கும் ஸேவைஸாதிக்குமிடம் வண்புருடோத்தமம்.

திருநாங்கூர்ச் சோலைகளில் கூத்தும் பாட்டுமாய்ச் செல்லுகின்றதென்கிறார் பின்னடிகளில். மேகங்கள் முழங்குவதையே வாத்யகோஷமாகக்கொண்டு மயில்கள் கூத்தாட வண்டுகள் ஸங்கீதம் பாடுகின்றனவாம். .... (௩)

பருங்கையானையின் கொம்பினைப்பறித்து அதன்பாகனைச் சாடிப்புக்கு *
ஒருங்கமல்லரைக்கொன்று பின்கஞ்சனையுதைத்தவ னுறைகோயில் *
கரும்பினூடுயர் சாலிகள்விளைதரு கழனியில் மலிவாவி *
மருங்கெலாம் பொழிலோங்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. (௪)

| | |
|---|---|
| பரு கை யானையின் | பருத்த துதிக்கையை யுடைய (குவலயாபீட மென்னும்) யானையினது |
| கொம்பினை | தந்தங்களை |
| பறித்து | பிடுங்கிக் கொன்று, |
| அதன் பாகனை | அந்த யானையின் பாகனையும் |
| சாடி | உயிர் தொலைத்திட்டு |
| புக்கு | உள்ளே நுழைந்து |
| மல்லரை | மல்லர்களை |
| ஒருங்க கொன்று | ஒன்றுசேர முடித்திட்டு |
| பின் | அதற்குப் பிறகு |
| கஞ்சனை | கம்ஸனை |
| உதைத்தவன் | முடித்தருளின கண்ணபிரான் |
| உறைகோயில் | நித்யவாஸம் பண்ணுமிடம் ;— |
| கரும்பினூடு | கருப்பஞ்சோலைகளி னிடையே |
| உயர் | ஓங்கிவளராநின்ற |
| சாலிகள் | செந்நெற்பயிர்கள் |
| விளைதரு | விளையப்பெற்ற |
| கழனியில் | கழனிகளில் |
| மலி | நிறைந்திருக்கிற |
| வாவி | நடைவாவிகளினுடைய |
| மருங்கு எலாம் | பக்கங்களிலெல்லாம் |
| பொழில் ஓங்கிய | சோலைகள் வளர்ந்திருக்கப் பெற்ற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| | வண்புருடோத்தமம்—. |

* * *—கபடமான எண்ணத்துடனே கம்ஸனுலழைக்கப்பட்டு அரண் மனையினுள் புகும்போது தன்னைக்கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப் பட்டிருந்த மதயானை சீறிவர, அதனையும் அதன் பாகனையும் உயிர் தொலைத் திட்டு உள்ளே கம்ஸஸபையிற் செல்லுகையில், எதிர்த்துப் பொருதுகொல் லும்படி கம்ஸனால் ஏவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர் வந்து எதிர்த்து உக்கிரமாகப் பெரும் போர்செய்ய, அவர்களையும் மற் போரினாலேயே கொன்று, பிறகு வேகமாக எழும்பிக் கஞ்சனது மஞ்சத்தின்மே லேறி அவனது கிரீடம் கழன்று கீழே விழும்படி அவனைத் தலைமயிர் பிடித்துத் தரையில்தள்ளி அவன்மேல் தான் விழுந்து கொன்றிட்ட கண்ணபிரான் ஆச்

*ரித விரோதிகளையெல்லாம் முடிப்பதற்காக நித்யவாஸஞ் செய்தருளுமிடம் வண்புருடோத்தமம்.*

*கரும்போடு ஸமமாக ஓங்கி வளர்கின்ற செந்நெற் பயிர்களை யுடைத்தான வயலிலே நிறைந்திருக்கின்ற பொய்கைகளின் பக்கங்களிலெல்லாம் சோலைகள் செழித்திருக்கின்ற திருநாங்கூரிலுள்ள தா மித்தலம்.* ... ... (ச)

சாடுபோய்விழத் தாள்நிமிர்த்து ஈசன்தன்படையோடுங் கிளையோடு
மோட * வாணனை யாயிரந்தோள்களுந் துணித்தவன் உறைகோயில் *
ஆடுவான்கொடி யகல்விசும்பணவிப்போய்ப் பகலவனொளி மறைக்கும் *
மாடமாளிகை சூழ்தருநாங்கூர் வண்புருடோத்தமமே. (ரு)

| | |
|---|---|
| *சாடு* | *(அஸுரனால் ஆவேசிக்கப்பட்ட) சகடமானது* |
| *போய் விழ* | *விழுந்தொழியும்படி* |
| *தாள் நிமிர்த்து* | *திருவடிகளைத் தூக்கினவனும்,* |
| *ஈசன்* | *ருத்ரன்* |
| *தன் படையோடும்* | *தனது ஸேனைகளோடும்* |
| *கிளையோடும்* | *சுற்றத்தாரோடும்* |
| *ஓட* | *தோற்று ஓடிப்போகும்படி யானவளவில்* |
| *வாணனை* | *பாணாஸுரனை* |
| *ஆயிரம் தோள்களும்* | *ஆயிரந் தோள்களையும்* |

| | |
|---|---|
| *துணித்தவன்* | *அறுத்தொழித்தவனுமுள்ள பெருமான்* |
| *உறை கோயில்—;* | |
| *ஆடு* | *அசையாநின்ற* |
| *வான் கொடி* | *பெரிய த்வஜங்கள்* |
| *அகல் விசும்பு* | *பரந்த ஆகாசத்தை* |
| *அணவி போய்* | *தழுவி உயரக்கிளம்பி* |
| *பகலவன்* | *ஸூர்யனுடைய* |
| *ஒளி* | *பிரதாபத்தை* |
| *மறைக்கும்* | *மறையச் செய்யப்பெற்ற* |
| *மாடம்* | *மாடங்களினாலும்* |
| *மாளிகை* | *மாளிகைகளினாலும்* |
| *சூழ்தரு* | *சூழப்பட்ட* |
| *நாங்கூர்* | *திருநாங்கூரில்* |
| *வண்புருடோத்தமம்—.* | |

** * *—நந்தகோபர் திருமாளிகையில் ஒரு வண்டியின் கீழ்ப்புறத்தில் கண்ணனைத் தொட்டிலிலிட்டுக் கண்வளர்த்தி யசோதை யமுனை நீராடப் போனாள்; கம்ஸனால் ஏவப்பட்ட அஸுரனொருவன் அச்சகடத்தில்வந்து ஆவேசித்து ஸ்ரீக்ருஷ்ண சிசுவின்மேலே விழுந்து கொல்ல முயன்றதையறிந்த அப்பகவான் பாலுக்கு அழுகிற பாவனையிலே தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கி உதைத்தருள, அவ்வுதைபட்ட மாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழேவிழுந்து அசுரனுட்பட அழிந்ததென்னும் வரலாறு,* சாடுபோய்விழத்தாள் நிமிர்த்து *என்றதிலடங்கியது.*

[ஈசன் தன் படையோடும் *இத்யாதி.*] *பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்தவனான பாணாஸுரன் ஒருகாலத்தில் சிவபிரானது நடனத்தைக்கண்டு அதற்குத் தனது இரண்டு கைகளால் மத்தளந்தட்ட, சிவபிரான் அருள்கூர்ந்து*

அவனுக்கு ஆயிரங்கைகளையும் நெருப்பு மதிளையும் அளவிறந்த வலிமையையும் மிக்க செல்வத்தையும் தான் தனது பரிவாரங்களோடு அவன் மாளிகைவாசலிற் காவல்செய்திருத்தல் முதலிய வரங்களையும் தந்தருளினன்; அந்தப் பாணாசுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள் ஒருநாள் ஒரு புருஷனோடு தான் கூடியதாகக் கனாக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிக்க ஆசைபற்றியவளாய், தனது உயிர்த்தோழியான சித்திரலேகைக்கு அச்செய்தியைத்தெரிவித்து, அவள் மூலமாய் அந்தப்புருஷன் கிருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனுடைய புத்திரனுமாகிய அநிருத்தன் என்றறிந்துகொண்டு 'அவனைப் பெறுதற்கு உபாயஞ் செய்யவேண்டும்' என்று அத்தோழியையே வேண்ட, அவள் தன் யோகவித்யை மஹிமையினால் த்வாரகைக்குச்சென்று அநிருத்தாழ்வானைத் தூக்கிக்கொண்டுவந்து அந்தப்புரத்திலேவிட, உஷை அவனோடு போகங்களை யநுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளராலறிந்த பாணாஸுரன் தன் ஸேனையுடன் அநிருத்தனை எதிர்த்து மாயையினாற் பொருது நாகாஸ்திரத்தினாற் கட்டிப்போட்டிருக்க, த்வாரகையிலே அநிருத்தனைக்காணாமல் யாதவர்களெல்லாருங் கலங்கியிருந்தபோது, நாரதமஹாமுனிவனால் நடந்த வரலாறு சொல்லப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ணபகவான் பெரியதிருவடியை நினைத்தருளி உடனே வந்துநின்ற அக்கருடாழ்வானது தோளின்மேல் ஏறிக்கொண்டு பலராமன் முதலானாரோடு கூடப் பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும்போதே அப்பட்டணத்தின் ஸமீபத்திற் காவல்செய்துகொண்டிருந்த சிவபிரானது ப்ரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களையெல்லாம் அழித்து, பின்பு சிவனால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளு முள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும்பொருட்டுத் தன்னோடு யுத்தஞ்செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தையுண்டாக்கி இதன் சக்தியினாலே அதனை துரத்திவிட்டபின்பு சிவனுடைய அநுசரர்களாய்ப் பாணாசுரனுடைய கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் நாசஞ்செய்து பாணாசுரனோடு போர்செய்யத் தொடங்க, அவனுக்குப் பக்கபலமாகச் சிவனும் ஸுப்ரம்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப்போரிட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்த்ரத்தைப் பிரயோகித்துச் சிவனை ஒருகாரியமுஞ் செய்யமுடியாமற் கொட்டாவிவிட்டுக்கொண்டு சோர்வடைந்து போம்படிசெய்து ஸுப்ரம்மண்யனையும் கணபதியையும் உங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர் அநேகமாயிரஞ் சூரியர்க்குச் சமானமான ஸுதர்சநமென்கிற தனது திருவாழியாழ்வானை யெடுத்துப் பிரயோகித்து அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரைதாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையுஞ் சிதைப்பதாக விருக்கையில், பரமசிவன் அருகில் வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத்தொழுது அநிருத்தனுக்கு உஷையைச் சிறப்பாக மணம்புரிவிக்க, அதன்பின் மீண்டுவந்தனன்

கண்ணபிரான். இப்படிப்பட்ட எம்பெருமான் அந்த வாணனைப்போன்ற ஆஸுரப்ரக்ருதிகளை அழித்து அடியார்களைக் காத்தருள்வதற்காக நித்யஸந்நிதி பண்ணுமிடம் வண்புருடோத்தமம்.

திருநாங்கூரில் மாடங்களின்மீதும் மாளிகைகளின்மீதும் த்வஜங்கள் நாட்டப்பட்டிருக்கின்றன; அவை அசைந்து ஆகாசத்தைத் தழுவும்போது ஸூர்யனுடைய கிரணங்களை மறைத்து நிழல் செய்கின்றனவாம். இதனால் அவ்விடத்து மாடமாளிகைகளின் ஓக்கம் வருணிக்கப்பட்டவாறு. ... (ரு)

அங்கையாலடி மூன்றுநீரேற்று அயனலர்கொடு தொழுதேத்த *
கங்கைபோதரக் கால்நிமிர்த்தருளிய கண்ணன்வந்துறை கோயில் *
கொங்கை கோங்கவைகாட்ட வாய்குமுதங்கள்காட்ட மாபதுமங்கள் *
மங்கைமார்முகங் காட்டிடுநாங்கூர் வண்புருடோத்தமமே. (சு)

| | |
|---|---|
| மூன்று அடி | மூவடி நிலத்துக்காக |
| அம் கையால் | அழகிய திருக்கையினால் |
| நீர் ஏற்று | உதகதானம் வாங்கி |
| | (திரிவிக்கிரமனாக ஓங்கிவளர்ந்த காலத்து) |
| அயன் | பிரமனானவன் |
| அலர் கொடு | புஷ்பங்களை ஸமர்ப்பித்து |
| தொழுது | வணங்கி |
| ஏத்த | துதிக்கும்படியாகவும் |
| கங்கை | கங்காநதியானது |
| போதர | பெருகும்படியாகவும் |
| கால் | திருவடியை |
| நிமிர்த்தருளிய | உயரநீட்டின |
| கண்ணன் | ஸர்வேச்வரன் |
| | வந்து உறை கோயில்—; |

| | |
|---|---|
| கோங்கு அவை | கோங்குமரத்தினரும்புகளானவை |
| மங்கைமார் | (அவ்வூரிலுள்ள) பெண்களினுடைய |
| கொங்கை | தனங்களை |
| காட்ட | பிரகாசிப்பிக்கவும் |
| குமுதங்கள் | செவ்வாம்பல்களானவை |
| வாய் காட்ட | (அப்பெண்களின்) அதரங்களைப் பிரகாசிப்பிக்கவும் |
| மா பதுமங்கள் | சிறந்த தாமரைமலர்கள் |
| முகம் காட்டிடு | (அப்பெண்களின்) முகங்களைப் பிரகாசிப்பிக்கவும் பெற்ற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| | வண்புருடோத்தமம்—. |

* * *—"கோஸஹஸ்ர ப்ரதாதாரம்—கோஸஹஸ்ரப்ரதாதாரம்" என்றும் "அலம்புரிந்த நெடுந்தடக்கை யமரர்வேந்தன்" என்றுஞ் சொல்லுகிறபடியே வேண்டுவார்க்கு வேண்டியபடி கொடுத்து வளர்ந்த கையைக்கொண்டு மாவலியிடம் மூவடிமண் நீரேற்றுப்பெற்று, திருக்கையில் நீர்விழுந்தவுடனே ஓங்கி வளர்ந்தருளுகிறபோது பிரமனுடைய இருப்பிடத்தளவுஞ் சென்று அவன் கையில் திருவடியிருக்க, அவன் புஷ்பங்களைப்பணிமாறி ஆச்ரயிக்கும்படியாகவும் அத்திருவடியில் நின்றும் கங்கை அவதரிக்கும்படியாகவும் நின்ற ஸர்வேவரன் நாமெல்லாரும் அடிதொழும்படியாகவும் நம்மைப் புனிதராக்கவும் நின்றருளுமிடம் வண்புருடோத்தமம்.

திருநாங்கூரில் ஊர்க்கும் வயலுக்கும் வாசி தெரிந்துகொள்ளவொண்ணாத படியிருக்குமென்கிறார் பின்னடிகளில். கோங்குமரங்களின் அரும்புகளைப் பார்த்தால் அவ்வூர்ப் பெண்களினுடைய கொங்கைகளாகவும், அலர்ந்திருக்கிற அரக்காம்பல்மலர்களைப்பார்த்தால் இப்பெண்களது அதரங்களாகவும், செவ்வி பெறவலர்ந்த செந்தாமரைப் பூக்களைப்பார்த்தால் அவர்களது முகங்களாகவும் விளங்குகின்றமையால் உள்வீதிகளுக்கும் வெளிநிலங்களுக்கும் வாசி தெரிவரிதாம்.

'பத்மம்' என்ற வடசொல் பதுமமெனத்திரிந்தது: பற்பமென்றுந் திரிவதுண்டு. .... ... .... ... (சு)

உளையவொண்டிறல் பொன்பெயரோன்தனது உரம்பிளந் துதிரத்தை
யளையும் * வெஞ்சினத்தரிபரிகீறிய அப்பன்வந்துறை கோயில் *
இளையமங்கைய ரிணையடிச்சிலம்பினோடு எழில்கொள் பந்தடிப்போர் *
வளையில்நின்றொலி மல்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. (எ)

| | |
|---|---|
| ஒண் திறல் | பிரஸித்தமான வலிவையுடையனான |
| பொன் பெயரோன் | இரணியனென்பவன் |
| உளைய | நோவுபடும்படி |
| தனது | அவனுடைய |
| உரம் | மார்வை |
| பிளந்து | கிழித்து |
| உதிரத்தை | (அவனது உடலில் நின்று இழிந்த) ரத்தத்தை |
| அளையும் | அளைந்த |
| வெம் சினத்து அரி | உக்ரநரஸிம்ஹனானவனும் |
| பரி கீறிய | குதிரைவடிவு கொண்டுவந்த கேசியென்னுமசுரனைக் கொன்றவனுமான |
| அப்பன் | ஸ்வாமி |
| வந்து உறை கோயில்—; | |
| இளைய மங்கையர் | சிறுப்பெண்கள் (நர்த்தனமாடும்போது உண்டான) |
| இணை அடி சிலம்பினோடு | இரண்டுகால்களிலு மணிந்த தண்டைச்சிலம்பி னொலியோடு கூட, |
| எழில் கொள் | அழகுபொருந்திய |
| பந்து அடிப்போர் | பந்தடிக்கும் சிறுமிகளினுடைய |
| கை வளையில் நின்று | கைவளையல்களினின்று உண்டான |
| ஒலி | ஓசையானது |
| மல்கிய | நிறைந்த |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| வண்புருடோத்தமம்—. | |

* * *—அச்சப்படுவதென்பதை ஒருநாளும் கனவிலுங் கண்டறியாத பெருமிடுக்கனான இரணியன் நெஞ்சு உளையும்படியாக அவனது மார்வை இருகூறுகப்பிளந்து ரத்தவெள்ளத்தைப் பெருக்கின நரஸிம்ஹ மூர்த்தியானவனும், கம்ஸனது ஏவுதலினால் குதிரைவடிவங்கொண்டு தன்னைக்கொல்வதாக வந்த கேசியென்னு மஸுரனைக் கிழித்தொழித்தவனுமான பெருமான் ஆச்ரித விரோதிகளைத் தொலைத்தற்பொருட்டு நித்யவாஸம் பண்ணியருளுமிடம் வண்புருடோத்தமம்.

திருநாங்கூரில் சிறுமிகள் நர்த்தனமாடுவார் சிலரும் பந்தடிப்பார் சிலருமாயிருக்கையாலே அன்னவர்களது காற்சிலம்புகளின் ஒலியும் கைவளைகளின் ஒலியுமே ஓங்கி மற்ற நகரகோஷங்களைக் கீழ்ப்படுத்தி நிற்குமென்று நகர்ச் சிறப்பு சொல்லிற்றாயிற்று, பின்னடிகளில். ... ...

வாளையார் தடங்கணுமைபங்கன் வன்சாபம்மற்றது நீங்க *
மூளையார்சிரத் தையமுன்னளித்த எம்முகில்வண்ணனுறை கோயில் *
பாளைவான்கமுகூடுயர்தெங்கின் வன்பழம்விழ வெருவிப்போய் *
வாளைபாய்தடஞ் சூழ்தருநாங்கூர் வண்புருடோத்தமமே. (அ)

| | |
|---|---|
| வாளை ஆர் தட கண் | மீன்போன்ற விசாலமான கண்களை யுடையளான |
| உமை | பார்வதியை |
| பங்கன் | தன் சரீரத்திலொருபக்கத்திலுடையனான ருத்ரனுடைய |
| வல் சாபம் அது நீங்க | வலிய சாபம் தொலையும்படியாக |
| முன் | முன்பொரு காலத்தில் |
| மூளை ஆர் சிரத்து | வெறும் எலும்பான தலையோட்டிலே |
| ஐயம் அளித்த | பிக்ஷையளித்த |
| எம் முகில் வண்ணன் | நீலமேக நிறத்தனான எம்பெருமான் |
| உறை கோயில்—; | |
| பாளை | பாளைகளை யுடைத்தாய் |

| | |
|---|---|
| வான் | ஓங்கியிருந்துள்ள |
| கமுகு ஊடு | பாக்கு மரங்களினிடையே |
| உயர் | உயர்ந்திருக்கின்ற |
| தெங்கின் | தென்னை மரங்களினுடைய |
| வன் பழம் | பெரிய காய்கள் |
| விழ | (குளத்தில்) விழ |
| வாளை | (அங்குள்ள) மீன்கள் |
| வெருவி போய் | அஞ்சி அவ்விடத்தை விட்டுப்போய் |
| பாய் | வேறிடத்தில் குதித்துச் சேரப்பெற்ற |
| தடம் | தடாகங்களினால் |
| சூழ்தரு | சூழப்பட்ட |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| வண்புருடோத்தமம்—. | |

* * *—பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்து தலைகளையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குவதற் கிடமாயிருக்கின்ற தென்று கருதி அவனது சிரமொன்றைக் கிள்ளி யெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன்கையில் ஒட்டிக்கொள்ளவே அவன் 'இதற்கு என்செய்வது' என்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந்தொலையப் பிச்சையெடுக்க வேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ அன்றைக்கே இது கையைவிட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலம் பல தலங்களிலுஞ் சென்று பிச்சைபேற்றுக் கொண்டே வருந்தித்திரிந்தும் அக்கபாலம் நிறையாது நீங்காதாக, பின்பு ஒருநாள் பதரிகாச்ரமத்தை யடைந்து அங்கெழுந்தருளியுள்ள நாராயண மூர்த்தியை வணங்கிப் பிரார்த்தித்தபோது அப்பெருமான் 'அக்ஷய' என்று பிக்ஷையிட, உடனே அக்கபாலம் நிறைந்து கையை விட்டகன்றதனாற் பரிசுத்தனாயினன் சிவபிரான். இப்படி சிவனது சாபத்தைத் தொலைத்த பெரு

மான் நம்முடைய பாவங்களையுந் தொலைக்கவேண்டி வந்து வாழுமிடம் வண் புருடோத்தமம்.

வாளையார் தடங்கண்—'வாள்' என்னுஞ் சொல் ஐகாரச்சாரியை பெற்று 'வாளை' என்று கிடப்பதாகக் கொண்டால், ஒளிபொருந்திய தடங் கண்களையுடைய பார்வதி என்று பொருள்கொள்ளலாம். 'உமா' என்ற வடசொல் உமையெனத் திரிந்தது. அர்த்தநாரீச்வரனாதலால் உமைபங்கன் என்றது. "மூளையார் சிரத்து" என்பதற்கு வியாக்கியானம்—"ரக்தஸ்பர்ச மொன்று மின்றிக்கே வெறும் அஸ்தியேயா யிருக்கிற தலையோட்டிலே."

பாக்குச் சோலைகளின் நடுவே தென்னைமரங்கள் ஓங்கி வளர்ந்திருக்கின்றன; அவற்றினின்று பெருப்பெருத்த காய்கள் இற்றுக் குளங்களிலே விழுகின்றன; அவற்றின் கடுமையான ஓசையைக் கேட்டவாறே மீன்கள் 'தங்களை இரையாகக் கொள்வதற்கு ஏதோவொன்று வந்து குதித்துவிட்டது' என்று பிரமித்து வேறிடந்தேடித் துள்ளித் தாவுகின்றனவாம். எம்பெருமானிடத்தில் அஸ்தானே பயசங்கை பண்ணிக் கலங்கும் பரிவர்களின்படிக்குப் போலியென்னலாம். ... ... ... ... (அ)

இந்துவார்சடை யீசனைப்பயந்த நான்முகனைத் தன்னெழிலாரும் *
உந்திமாமலர் மீமிசைப்படைத்தவன் உகந்தினிதுறை கோயில் *
குந்திவாழையின் கொழுங்கனிநுகர்ந்து தன்குருளையைத் தழுவிப்போய் *
மந்திமாம்பணைமேல் வைகுநாங்கூர் வண்புருடோத்தமமே. (௯)

| | |
|---|---|
| இந்து | சந்திரனோடுகூடி |
| வார் | நீண்டிருக்கிற |
| சடை | சடைமுடியையுடைய |
| ஈசனை | ருத்ரனை |
| பயந்த | ஸ்ருஷ்டித்த |
| நான்முகனை | பிரமனை |
| தன் | தன்னுடைய |
| எழில் ஆரும் | அழகு பொருந்திய |
| உந்தி மாமலர் மீமிசை | திருநாபிக்கமலத்திலே |
| படைத்தவன் | உண்டாக்கின பெருமான் |
| உகந்து இனிது உறை கோயில்—; | |
| மந்தி | பெண் குரங்கானது |

| | |
|---|---|
| குந்தி | குந்திக்கொண்டு |
| வாழையின் கொழு கனி | நல்ல வாழைப்பழங்களை |
| நுகர்ந்து | புஜித்து |
| தன் குருளையை | தனது குட்டியை |
| தழுவி | அணைத்துக்கொண்டு |
| போய் | அங்கு நின்றும்போய் |
| மாம்பணைமேல் | மாமரக் கிளைகளின்மேல் |
| வைகும் | தங்கியிருக்கப்பெற்ற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| வண்புருடோத்தமம்—. | |

* * *—"நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முகனும் தான் முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்" என்கிறபடியே சிவனுக்குப் பாட்ட

னும் பிரமனுக்குத் தந்தையுமான பெருமான் தனது உலகங்களை யெல்லாம் காத்தருள்வதற்குப் பாங்காக நித்யஸந்நிதி பண்ணுமிடம் வண்புருடோத்தமம்.

மந்திகள் தம்குட்டிகளுடனே வாழைமரங்களிலும் மாமரங்களிலும் தாவித்திரிந்து பழங்கள் நுகரும்படியைப் பேசுவன பின்னடிகள். ஸ்வபாவோக்தியென்க. .... ... .... ... (கூ)

மண்ணுளார்புகழ் வேதியர்நாங்கூர் வண்புருடோத்தமத்துள் *
அண்ணல்சேவடிக்கீழடைந்துய்ந்தவன் ஆலிமனருள்மாரி *
பண்ணுளார்தரப் பாடியபாடல் இப்பத்தும்வல்லார் * உலகில்
எண்ணிலாத பேரின்பமுற்று இமையவரோடுங் கூடுவரே. (கல)

| | |
|---|---|
| மண்ணுள் | பூ மண்டலத்தில் |
| ஆர் புகழ் வேதியர் | நிறைந்த புகழையுடைய வைதிகர்கள் வாழ்கிற |
| நாங்கூர் | திருநாங்கூரிலுள்ள |
| வண் புருடோத்தமத்துள் | வண்புருடோத்தம மென்னுந் திருப்பதியில் எழுந்தருளியிருக்கிற |
| அண்ணல் | ஸ்வாமியினுடைய |
| சே அடிக்கீழ் | திருவடிகளின்கீழ் |
| அடைந்து | சேர்ந்து |
| உய்ந்தவன் | உஜ்ஜீவித்தவரும் |
| ஆலி மன் | திருவாலி நாட்டுக்குத் தலைவரும் |
| அருள் மாரி | கிருபையை வர்ஷிக்கும் மேகமாயுள்ளவருமான திருமங்கையாழ்வார் |
| பண்ணுள் ஆர்தர | கானத்திலே பொருந்தும்படி |
| பாடிய | பாடின |
| பாடல் | பாசுரமான |
| இ பத்தும் | இத்திருமொழியை |
| வல்லார் | ஓதவல்லவர்கள் |
| உலகில் | இவ்வுலகின்கண் |
| எண் இலாத | அளவற்ற |
| பேர் இன்பம் | மஹாநந்தங்களை |
| உற்று | அநுபவித்து (பிறகு) |
| இமையவரோடும் | நித்யஸூரிகளோடும் |
| கூடுவர் | கூடிவாழப் பெறுவர். |

* * *—"மண்ணுள் ஆர்புகழ்" என்று பிரித்து, பூமியிலே நிறைந்த புகழையுடைய வைதிகர்கள் என்றும்; "மண்ணுளார் புகழ்" என்று கொண்டு பூமியிலுள்ளா ரெல்லாராலும் புகழப்பட்ட வைதிகர்கள் என்றும் உரைக்கலாம். இரண்டாம் பொருளில், புகழ் என்றது வினைத்தொகை. புருஷோத்தமனுடைய திருவடிகளைக் கிட்டி ஸத்தைபெற்ற கலியனருளிச் செய்த இத்திருமொழியைக் கற்பார் இவ்வுலகின்கண் எல்லையில்லாத ஆநந்தங்களை யநுபவித்துப் பின்பு நித்யஸூரிகளோடும் அந்வயித்து நித்யாநுபவம் பண்ணப் பெறுவரென்று இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ் சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. ... ... ... ... (கல)

அடிவரவு:—கம்பம் பல்லவம் அண்டர் பருங்கை சாடு அங்கை உளைய வாளை இந்து மண் பேரணி.

இரண்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

நான்காம்பத்து—மூன்றாந்திருமொழி

# பேரணிந்துலகத்தவர்.



## திருநாங்கூர்ச் செம்பொன்செய்கோயில் மங்களாசாஸனத் திருப்பதிகம்.

பேரணிந்துலகத்தவர் தொழுதேத்தும்
பேரருளாள னெம்பிரானை *
வாரணிமுலையாள் மலர்மகளோடு
மண்மகளு முடனிற்ப *
சீரணிமாட நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
காரணிமேகம் நின்றதொப்பானைக்
கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (க)

| | |
|---|---|
| உலகத்தவர் | இவ்வுலகிலுள்ளாரனைவரும் |
| பேர் அணிந்து | திருநாமஸங்கீர்த்தனஞ் செய்துகொண்டு |
| தொழுது | அடிபணிந்து |
| ஏத்தும் | துதிக்கப்பெற்ற |
| பேரருளாளன் | பேரருளாளப் பெருமாளாய் |
| எம் பிரானை | எமக்கு ஸ்வாமியாய் |
| கார் அணி மேகம் நின்றது ஒப்பானை | மழைகாலத்திலுண்டான அழகிய மேகம் நிற்கிறாப்போலுள்ளவனான பெருமானை |
| சீர் அணி மாடம் நாங்கை நல்நடுவுள் | அழகு பொருந்திய மாடங்களையுடைய திருநாங்கூரில் நட்டநடுவிலே |
| செம்பொன் செய் கோயிலின் உள்ளே | செம்பொன் செய்கோயில் என்னுந் திருப்பதியிலே, |
| வார் அணி முலையாள் | கச்சணிந்த முலையையுடையளான |
| மலர் மகளோடு | பெரியபிராட்டியும் |
| மண் மகளும் | பூமிப்பிராட்டியும் |
| உடன் நிற்ப | கூடியிருக்க |
| கண்டு கொண்டு | ஸேவித்து |
| உய்ந்தொழிந்தேன் | உஜ்ஜீவித்துப்போனேன். |

* * *—இவ்வுலகத்திலுள்ளாரடங்கலுந் திரண்டு ஸஹஸ்ரநாமங்களை ஸங்கீர்த்தனஞ் செய்துகொண்டு திருவடிகளில் வந்து பணியும்படியாகவுள்ளவனும், அன்னவர் திறத்து அருள் செய்வதனாலே பேரருளாளனென்று திருநாமம் பெற்றவனும், கார்காலத்தில் நீர்கொண்டெழுந்த காளமேகந்தான் இங்

னனே ஒரு வடிவெடுத்து நிற்கின்றதோ என்னலாம்படி விளங்குபவனுமான எம்பெருமான் இரண்டுபக்கத்திலும் திருமகளும் மண்மகளும் உடன் நிற்கத் திருநாங்கூர்ச் செம்பொன்செய் கோயிலினுள்ளே ஸேவித்து வாழப்பெற்றே னென்கிறார்.

பிராட்டிக்கு 'வாரணிமுலையாள்' என்று இட்ட விசேஷணம் அவளுடைய நித்ய யௌவனத்தைக் காட்டுதற்கென்க.

நாங்கைநன்னடுவுள்=' செம்பொன்செய்கோயில்' என்னுந் திருப்பதி திருநாங்கூரில் நட்டநடுவில் உள்ளது; இவ்வாழ்வார்தாமும் இத்திருப்பதியின் மங்களாசாஸநபரமான இத்திருமொழியைத் திருநாங்கூர்ப்பதிகங்கள் பதினொன்றின் நன்னடுவே அமைத்தருளின அழகும் ஆராயத்தக்கது. "நந்தாவிளக்கே" என்று தொடங்கி "கவளயானை கொம்போசித்த" என்ற திருமொழியளவாகப் பதினொரு திருமொழிகள் திருநாங்கூர்த் திருப்பதிகளைக் கவிபாடுவன; அவற்றுள் கீழே ஐந்து திருமொழிகள் சென்றன; மேலே ஐந்து திருமொழிகளுள்ளன; இத்திருமொழி நன்னடுவே உள்ளது எனக்காண்க. ... (க)

பிறப்பொடுமூப்பொன் றில்லவன்றன்னைப்
பேதியாவின்பவெள்ளத்தை *
இறப்பெதிர்காலக்கழிவுமானானை
ஏழிசையின் சுவைதன்னை *
சிறப்புடைமறையோர் நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
மறைப்பெரும்பொருளை வானவர்கோனைக்
கண்டுநான் வாழ்ந்தொழிந்தேனே. (உ)

பிறப்பொடு மூப்பு ஒன்று இல்லவன் தன்னை { பிறப்பு கிழத்தனம் முதலிய விகாரங்களொன்றுமில்லாதவனாய்
பேதியா இன்பம் வெள்ளத்தை { என்றுமொருபடிப்பட்ட ஆநந்தக்கடலாயிருப்பவனாய்
இறப்பு எதிர் காலம் கழிவும் ஆனானை { மூன்று காலங்களிலும் உள்ளவனாய்
ஏழ்இசையின் சுவை தன்னை { ஸப்தஸ்வரங்களினுடைய ரஸம்போல் போக்யனாய்
மறை பெரு பொருளை { வேதங்களிற் சிறந்த பொருளாயிருப்பவனாய்
வானவர் கோனை { நித்யஸூரி நாதனான எம்பெருமானை
சிறப்பு உடை மறையோர் { சிறந்த வைதிகர்கள் வாழ்கிற
நாங்கை நல்நடுவுள் { திருநாங்கூரில் நட்டநடுவிலே
செம்பொன்செய்கோயிலின் உள்ளே
கண்டு நான் வாழ்ந்தொழிந்தேன்—.

* * *—"அஜாயமாநோ பஹுதா விஜாயதே" என்றும் "எங்கின் யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா" என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமான் பற்பல அவதாரங்களெடுத்தாலும் அவை நம்முடைய பிறவிகள்

போல் கருமமடியாகவுண்டானவை யன்றியே கேவலம் அநுக்ரஹமடியாகவுண் டானமைபற்றிப் "பிறப்போடு மூப்போன்றில்லவன்" என்கிறது.

பேதியாவின்பவெள்ளத்தை — ஆநந்த முடைமை ஜீவாத்மாவுக்கு மிருந் தாலும் பிரகிருதி ஸம்பந்தத்தாலே அதற்குக் குறைவு உண்டாகிறது; இப்படி யல்லாமல் எம்பெருமானுடைய ஆநந்தமயத்வம் ஒரு உபாதியினாலும் பேதப் படாதிருக்குமென்க. பேதியா — பேதியாத; விகாரமடையாத. இன்ப வெள் ளத்தை — இன்பவெள்ளமே ஸ்வரூபமாயுள்ளவனை.

எம்பெருமான் இன்னகாலத்திலுள்ளான், இன்ன காலத்திலில்லை என்ன வொண்ணாதபடி எக்காலத்தும் உள்ளமைபற்றி 'இறப்பெதிர் காலக் கழிவு மானானை' என்றது. 'கழிவும்' என்றது — கழிந்துகொண்டே செல்லுகிற நிகழ்காலத்தைச் சொன்னபடி. ஏழிசையின் சுவைதன்னை — ஸப்தஸ்வரங் களிலுமுண்டான ரஸமே ஒருவடிவு கொண்டாற்போல் பரமபோக்யனானவனை. இப்படிப்பட்டவனாய் ஸகல வேத ப்ரதிபாத்யனாய் தேவாதிதேவனா யிருக்கும் பெருமானைச் செம்பொன்செய் கோயிலினுள்ளே கண்டு வாழ்ந்தேனென்று ராயிற்று. ... ... ... .... (உ)

திடவிசும்பெரிநீர்த் திங்களுஞ்சுடரும்
செழுநிலத்துயிர்களும் மற்றும் *
படர்பொருள்களுமாய் நின்றவன்றன்னைப்
பங்கயத்தயனவனனைய *
திடமொழிமறையோர் நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
கடல்நிறவண்ணன்றன்னை நானடியேன்
கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (௩)

| | |
|---|---|
| திடம் | திடமான |
| விசும்பு எரி நீர் | ஆகாசம் அக்நி ஜலம் முதலான பஞ்சபூதங்களும் |
| திங்களும் | சந்திரனும் |
| சுடரும் | ஸூர்யனும் |
| செழு நிலத்து உயிர்களும் | வளம்மிக்க பூமியிலுள்ள பிராணிகளும் |
| மற்றும் படர் பொருள் களும் | மற்றும் பலவகைப்பட்ட பதார்த்தங்களும் (ஆகிய இவற்றுக்கு) |
| ஆய் நின்றவன் தன்னை | அந்தர்யாமியா யிருப்பவனும் |
| கடல் நிறம் வண்ணன் தன்னை | கடலின் நிறம் போன்ற திருமேனியை யுடையனு மான பெருமானை |
| பங்கயத்து அயன் அவன் அனைய | தாமரையிற்பிறந்த பிரமனைப் போன்றவர்களாய் |
| திடம் மொழி மறையோர் | திடமான வாக்கை யுடையவர்களான அந்தணர்கள் வாழ்கிற |

நாங்கை நன்னடுவுள் செம்பொன்செய் கோயிலின் உள்ளே அடியேன் நான் கண்டுகொண்டு உய்ந்து ஒழிந்தேன் —.

* * * — பஞ்சபூதங்கள், சந்த்ரஸூர்யர்கள், இந்நிலவுலகத்திலுள்ள உயிர் கள், ஆக இவை முதலிய ஸகலமான பொருள்களுக்கும் அந்தராத்மாவாய் நிற்

பவனாய், தனக்கு அஸாதாரணமான கரியகோலத் திருவுருவையுடையனான வெம்பெருமானைச் செம்பொன்செய் கோயிலினுள்ளே ஸேவித்து உஜ்ஜீவிக்கப் பெற்றேனென்கிறார்.

விசும்பு, எரி, நீர் என்று மூன்று பூதங்களைச்சொன்னது பஞ்சபூதங்களுக்கும் உபலக்ஷணமென்ப. "ஆகாஶாத்வாயு:" என்ற சுருதியின்படி ஆகாசமே மற்ற நான்கு பூதங்கட்கும் மூலகாரணமாதலாலும் அவையழிந்த பின்பும் ஆகாசம் சிலநாளைக்கு நிற்பதாகையாலும் அதற்குத் திடம் என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது மற்ற நான்கு பூதங்களைமாத்திரம் இசைந்து ஆகாசத்தை இல்லைசெய்கின்ற மதத்தினரைக் கண்டிப்பவர்போலத் 'திட விசும்பு' என்கிறாரென்னவுமாம். இப்பக்ஷத்தில், திட மென்றது—பிரமாணத்தினால் திடமாகவுள்ள என்றபடி. 'த்ரு஢ம்' என்னும் வடசொல் திடமெனத் திரிந்தது.

திருநாங்கூரிலுள்ள அந்தணர்கள் பிரமனைப்போன்றவர்க ளென்றது—எப்போதும் வேதாத்யயந சீலர்களாய் ஆசாரபரர்களாயிருக்கையை நோக்கியாம். பிரமனைப்போலே ஜகத்ஸ்ருஷ்டி பண்ணவும் வல்ல ரென்னவுமாம். திடமொழி மறையோர்=சொன்னசொல் தவறாத ஸத்யசீலர். .... .... (௩)

வசையறுகுறளாய் மாவலிவேள்வி
மண்ணளவிட்டவன்றன்னை *
அசைவறுமமர ரடியிணைவணங்க
அலைகடல்துயின்றவம்மானை *
திசைமுகனனையோர்நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
உயர்மணிமகுடம் சூடிநின்றானைக்
கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (௪)

| | |
|---|---|
| வசை அறு குறள் ஆய் | குற்றமற்ற வாமனரூபியாய்க் கொண்டு |
| மாவலி | மஹாபலியினுடைய |
| வேள்வியில் | யாகபூமியில் |
| மண் அளவிட்டவன் தன்னை | உலகளந்தவனும், |
| அசைவு அறும் அமரர் | சலிப்பில்லாத நித்யஸூரிகள் |
| அடி இணை | உபயபாதங்களை |
| வணங்க | ஆச்ரயிக்கும்படியாக |
| அலை கடல் துயின்ற அம்மானை | அலையெறிகின்ற திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருப்பவனும், |
| உயர் மணி மகுடம் சூடி நின்றானை | உயர்ந்த ரத்ன கிரீடத்தை அணிந்துகொண்டிருப்பவனுமான பெருமானை |
| திசைமுகன் அனையோர் | பிரமனைப்போன்ற அந்தணர்கள் வாழ்கிற |
| நாங்கை நன்னடுவுள் செம்பொன்செய் கோயிலின் உள்ளே கண்டுகொண்டு உய்ந்தொழிந்தேன்—. | |

* * *—குறட்பிரமசாரியாய் மாவலி வேள்வியிற்சென்று மூவடிமண் கொண்டு உலகளந்தவனும், ஆர்த்தரான தேவர்களின் கூக்குரல் கேட்பதற்குப்

*பாங்கான இடமென்று திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டிருப்பவனும், ஸம்ஸாரிகளையெல்லாம் ரக்ஷிக்கிறேனென்று முடிசூடியிருப்பவனுமான ஸர்வேச்வரனைச் செம்பொன்செய் கோயிலினுள்ளே கண்டு வாழ்ந்தேனென்கிறார்.*

வசை அறு குறள்—*உலகில் குள்ள வடிவைக்கண்டு குறைகூறிப் பலரும் பரிஹஸிப்பர்கள்; எம்பெருமான் கொண்ட குறளுருவம் அப்படியன்றியே ஒருகுறையுங் கூறவொண்ணாதபடி மிகவுமழகியதாயிருக்கிறதென்கை.* அசைவு அறும் அமரர்—*தங்களுடைய சேஷத்வ பாரதந்திரியங்களுக்கு நழுவுதலில்லாத அமரர் என்கை: திருப்பாற்கடலில் தேவர்கள் சென்றால் இக்கரையிலே நின்று கூப்பிடவேணுமத்தனையன்றி உள்ளே புகுந்து ஒரு கைங்கரியம்பண்ண யோக்யதையற்றிருப்பர்கள்; நித்யஸூரிகளோ வென்னில் அப்படியல்லாமல் எல்லா வடிமைகளுஞ் செய்யப்பெறுவர்கள்; ஆகவே, இங்கு* 'அசைவறுமமரர்' *என்றது நித்யஸூரிகளை யென்க.* மணிமகுடம்—*வடசொல் தொடர்.* (௪)

தீமனத்தரக்கர் திறலழித்தவனே
யென்று, சென்றடைந்தவர்தமக்கு *
தாய்மனத்திரங்கி யருளினைக்கொடுக்கும்
தயரதன்மதலையைச்சயமே *
தேமலர்ப்பொழில்சூழ் நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
காமனைப்பயந்தான் தன்னை நானடியேன்
கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (௫)

| | |
|---|---|
| *தீ மனத்து* | *'தீய நெஞ்சையுடையரான* |
| *அரக்கர்* | *ராக்ஷஸர்களினுடைய* |
| *திறல்* | *மிடுக்கை* |
| *அழித்தவனே* | *நாசம் செய்தவனே!'* |
| *என்று* | *என்று சொல்லிக்கொண்டு* |
| *சென்று அடைந்தவர் தமக்கு* | *வந்து கிட்டினவர்கள் விஷயத்தில்* |
| *தாய் மனத்து* | *தாய்போலே* |
| *இரங்கி* | *கரைந்து* |
| *அருளினை கொடுக்கும்* | *கிருபை பண்ணுகின்ற* |
| *தயரதன் மதலையை* | *தசரத புத்ரனானவனும்* |
| *காமனை பயந் தான் தன்னை* | *ப்ரத்யும்நனைப் படைத்தவனுமான பெருமானை* |
| *சயம் மே* | *ஜயசப்தங்கள் பொருந்தியிருக்கப்பெற்றதும்* |
| *தேன் மலர் பொழில் சூழ்* | *தேன்நிறைந்த புஷ்பங்களையுடைய சோலைகளாலே சூழப்பட்டதுமான* |
| *நாங்கை* | *திருநாங்கூரில்* |

*நன்னடுவுள் செம்பொன்செய் கோயிலின் உள்ளே அடியேன் நான் கண்டு கொண்டு உய்ந்து ஒழிந்தேன்—.*

* * *—*'ஸாதுக்களை நலிவதையே தொழிலாகக்கொண்ட ராக்ஷஸர்களைத் தொலைத்தொழித்தவனே!' என்று சொல்லித்துதித்து வணங்கும் அன்பர்*

திறத்திலே தாய்போல இரங்கியருள்புரியும் சக்ரவர்த்தி திருமகனுரைச் செம்பொன்செய் கோயிலில் கண்டேனென்கிறார்.

சயமே=‘ஸ்வயம்’ என்ற வடசொல்லும் சயமெனத்திரியும், ‘ஜயம்’ என்ற வடசொல்லும் சயமெனத்திரியும்; சயம் மே=ஸ்வயமாகவே வந்து மேவியிருக்கப்பெற்ற தலம்; (அன்றியே) ‘ஜய விஜயீபவ’ என்று பல்லாண்டு பாடும்படியான ஜயசப்தங்கள் மேவப்பெற்ற என்னவுமாம். இனி, ‘சய:’ என்னும் வடசொல் ஸமூஹமென்னும் பொருள் கொண்டதாதலால் அதுவே இங்குச் சயமெனத்திரிந்ததாகக்கொண்டு ‘ஸமூஹமான தேமலர்ப் பொழிலையுடைய’ என்று முரைப்பர்.

காமனைப் பயந்தான்றன்னை=கண்ணபிரான் ருக்மிணிப்பிராட்டியினிடத்தில் மந்மதனுடைய அம்சமான ப்ரத்யும்நனைப் பெற்ற வரலாறு அறிக. (௫

மல்லைமாமுந்நீரதர்பட, மலையா
லணைசெய்து மகிழ்ந்தவன்றன்னை *
கல்லின்மீதியன்ற கடிமதிளிலங்கை
கலங்க, ஓர் வாளிதொட்டானை *
செல்வநான்மறையோர் நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
அல்லிமாமலராள் தன்னொடுமடியேன்
கண்டுகொண்டல்லல்தீர்ந்தேனே. (௬

| | |
|---|---|
| மல்லை மா முந்நீர் | செல்வம் மிக்க பெரிய கடலானது |
| அதர்பட | வழியாக அமையும்படி |
| மலையால் | மலைகளைக்கொண்டு |
| அணை செய்து | அணை கட்டி |
| மகிழ்ந்தவன் தன்னை | திருவுள்ள முகந்தவனும், |
| கல்லின் மீது | (த்ரிகூட மென்னும்) மலையின்மேலே |
| இயன்ற | கட்டப்பட்ட |
| கடி மதிள் | அரணான மதிளை யுடைத்தான |
| இலங்கை | இலங்காபுரியானது |
| கலங்க | சிதறியொழியும்படி |
| ஓர் வாளி தொட்டானை | ஒரு அம்பைப்பிரயோகித்தவனுமான பெருமானை |
| செல்வம் நால் மறையோர் | சதுர்வேதங்களைச் செல்வமாகவுடைய அந்தணர் வாழ்கிற |
| நாங்கை நன்னடுவுள் செம்பொன்செய் கோயிலின் உள்ளே—; | |
| அல்லி மா மலராள் தன்னொடும் | பிராட்டியோடு கூட |
| அடியேன் கண்டு கொண்டு | அடியேன் ஸேவித்து |
| அல்லல் தீர்ந்தேன் | துன்பங்கள் தொலையப் பெற்றேன். |

* * *—கடலைக்கடந்து இலங்கைக்குச் செல்லநேர்ந்தபோது அக்கடல் தானே வழியாம்படி குன்றுகளைக்கொண்டு அணைகட்டுவித்து லீலாரஸ மநுபவித்தவனும், அம்புதுரந்து இலங்கையைப் பாழ்படுத்தினவனுமான பெருமா

னைப் பிராட்டியுடனே செம்பொன்செய் கோயிலினுள்ளே கண்டு ஸம்ஸார தாபங்களெல்லாந் தீரப்பெற்றேனென்கிறார்.

கடல் ரத்னங்களுக்குப் பிறப்பிடமாதலால் 'மல்லைமா முந்நீர்' எனப்பட்டது. த்ரிகூடமென்னும் மலையின் சிகரத்திலே இலங்கைமாநகர் இயற்றப்பட்டதாதலால் 'கல்லின் மீதியன்ற' எனப்பட்டது. கல்—மலைக்கு ஆகுபெயர். கடி—அரண்.

செல்வநான்மறையோர்=“ப்ராஹ்மணாநாம் தநம் வேத:” என்று அந்தணர்கட்கு வேதமே செல்வமாகும். 'அந்தணர்மாடு' என்றே வேதத்திற்குப் பெயர் வழங்கும். (மாடு—செல்வம்.) .... .. (௬)

வெஞ்சினக்களிறும் வில்லோடுமல்லும்
வெகுண்டிறுத்தடர்த்தவன்றன்னை *
கஞ்சனைக்காய்ந்த காளையம்மானைக்
கருமுகில் திருநிறத்தவனை *
செஞ்சொல்நான்மறையோர் நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
அஞ்சனக்குன்றம் நின்றதொப்பானைக்
கண்டுகொண்டல்லல்தீர்ந்தேனே. (எ)

| | |
|---|---|
| வெம் சினம் | வெவ்விய கோபத்தை யுடைத்தான |
| களிறு | (குவலயாபீடமென்னும்) யானையை |
| வெகுண்டும் | சீறி முடித்தும், |
| வில் | (கம்ஸன் பூஜையில் வைத்திருந்த) வில்லை |
| இறுத்து | முறித்தும் |
| மல்லும் | மல்லர்களையும் |
| அடர்த்தவன் தன்னை | முடித்தவனாய் |
| கஞ்சனை | கம்ஸனை |
| காய்ந்த | கோபித்து முடித்த |
| காளை | யுவாவான |
| அம்மானை | ஸ்வாமியாய் |
| கரு முகில் திரு நிறத்தவனை | காளமேகத் திருவுருவனாய் |
| அஞ்சனம் குன்றம் நின்றது ஒப்பானை | ஒரு மைமலைநின்றது போன்றுள்ளவனான பெருமானை |
| செம் சொல் நால் மறையோர் | அழகிய சொற்களையுடையரான வைதிகர் வாழ்கிற |
| நாங்கை நன்னடுவுள் | |
| செம்பொன்செய் கோயிலின் உள்ளே | |
| கண்டுகொண்டு—; | |
| அல்லல் தீர்ந்தேன் | துன்பங்கள் தொலையப் பெற்றேன்—. |

* * *—முதலடியில், வெகுண்டு, இறுத்து, அடர்த்து என்பவை முறை முறையே களிற்றிலும் வில்லிலும் மல்லிலும் இயையக்கடவன: களிற்றை வெகுண்டவன், வில்லை இறுத்தவன், மல்லை அடர்த்தவன் எனக. இம்மூன்று காரியங்களும் கம்ஸவதத்திற்கு முந்துறமுன்னம் நடந்தவை. க்ருஷ்ணாவதாரத்திலே இப்படிசெய்த சிறுச்சேவகங்களெல்லாம் விளங்கும்படியாகச் செம்

பொன்செய் கோயிலினுள்ளே, கண்டார் கண்குளிரும்படி ஓர் அஞ்ஜனகிரி நிற்பதுபோலே நிற்கும்பெருமானைக் கண்டுகொண்டு ஸகலதாபங்களும் தணியப் பெற்றேனென்றாராயிற்று. .... .... ... (எ)

அன்றியவாண னாயிரந்தோளுந்
துணிய, அன்றாழிதொட்டானை *
மின்திகழ்குடுமி வேங்கடமலைமேல்
மேவியவேத நல்விளக்கை *
தென்திசைத்திலதமனையவர் நாங்கைச்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
மன்றதுபொலிய மகிழ்ந்துநின்றானை
வணங்கிநான் வாழ்ந்தொழிந்தேனே. (அ)

| | |
|---|---|
| அன்றிய | கோபித்து எதிரிட்ட |
| வாணன் | பாணாஸுரனுடைய |
| ஆயிரம் தோளும் | ஆயிரந்தோள்களும் |
| துணிய | அறுந்து விழும்படி |
| அன்று | அக்காலத்தில் |
| ஆழி தொட்டானை | திருவாழியைப் பிரயோகித்தவனும் |
| மின் திகழ் | ஒளிவிளங்காநின்ற |
| குடுமி | சிகரத்தையுடைய |
| வேங்கடம் மலை மேல் | திருவேங்கட மலையின் மேல் |
| மேவிய | பொருந்தியிருப்பவனும் |
| வேதம் நல் விளக்கை | வேதங்களால் காணக்கூடிய நல்ல விளக்கானவனும், |
| தென் திசை | தென்திசைக்கு |
| திலதம் அனையவர் | திலகம்போன்ற மஹான்கள் வாழ்கிற |
| நாங்கை செம்பொன்செய் கோயிலின் உள்ளே—; | |
| மன்று அது பொலிய | ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டி விளங்க |
| மகிழ்ந்து நின்றானை | திருவுள்ளமுவந்து நிற்பவனுமான பெருமானை |
| நான் வணங்கி வாழ்ந்தொழிந்தேன்—. | |

* * *—தன்திருப்பேரனாகிய அநிருத்தனைச் சிறையிட்டுவைத்த வாணனது தோள்களைத் திருவாழியினால் துணித்தவனான கண்ணபிரானும், திருவேங்கடமலையில் ஸேவைஸாதிக்கும் திருவேங்கடமுடையானுமே எனக்குச் செம்பொன்செய் கோயிலினுள்ளே பேரருளாளப் பெருமாளாக ஸேவைஸாதிக்கக் கண்டேனென்கிறார்.

அன்றியவாணன்=அன்றுதல்—பகைத்தல். வாணனது தோள்களைத் துணித்துக்கொண்டே வருமளவில் பரமசிவன் வந்துவணங்கிப் பிரார்த்தித்ததனால் நான்குதோள்களைமாத்திரம் துணியாது உயிரோடு விட்டிட்டானென்று புராணங்கூறாநிற்க 'ஆயிரந்தோளுந்துணிய' என்னக்கூடுமோ வென்னில்; பெருந்தொகையில் சில சிறுஎண்கள் ஏறினாலும் குறைந்தாலும் அப்பெருந்தொகையாகவே வ்யவஹரிக்கும் வழக்கமுள்ளமையறிக. "ஆழிதொட்டானை" என்ற சொல்நயத்தால் வெகுலாகவமாகத் தோள்களைத் துணித்தமை விளங்கும்.

மன்றதுபோலிய=பலர் திரட்சியாகக் கூடுமிடத்திற்கு 'மன்று' என்று பெயர்; 'நாங்கை நாலாயிரம்' என்ற பழமொழியின்படி நாலாயிரம் ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழ்ந்தவிடமாயிருந்ததுபற்றி "மன்றதுபொலிய" என்கிறார் என்னலாம்: (அது—முதல்வேற்றுமைச் சொல்லுருபு.) ... ... (௮)

களங்கனிவண்ணா! கண்ணனே! என்றன்
கார்முகிலே! யெனநினைந்திட்டு *
உளங்கனிந்திருக்குமடியவர்தங்கள்
உள்ளத்துளூறியதேனை *
தெளிந்தநான்மறையோர் நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
வளங்கொள்பேரின்பம் மன்னிநின்றானை
வணங்கிநான் வாழ்ந்தொழிந்தேனே. (௯)

களங்கனி வண்ணா — களாப்பழம்போன்ற திருநிறமுடையவனே!
கண்ணனே — ஸ்ரீக்ருஷ்ணனே!
என்தன் கார் முகிலே — என்னுடைய காளமேகமே!
என நினைந்திட்டு — என்று தியானித்து
உளம் கனிந்திருக்கும் — நெஞ்சு பரிபக்குவமாயிருக்கிற
அடியவர் தங்கள் — அடியார்களுடைய
உள்ளத்துள் — ஹ்ருதயத்திலே
ஊறிய — ஊற்றுமாறாதே யிருக்கிற
தேனை — தேன் போன்றவனும்,

தெளிந்த நான்மறையோர் நாங்கை நன்னடுவுள் செம்பொன்செய் கோயிலின் உள்ளே—;

வளம் கொள் பேர் இன்பம் மன்னி நின்றானை — மிகுந்த பரமாநந்தம் பொருந்தி நிற்பவனுமான பெருமானை

நான் வணங்கி வாழ்ந்தொழிந்தேன்—.

* * *—'கண்ணுக்குக் குளிர்ந்து களாப்பழம்போலேயிருக்கிற வடிவையுடையவனே!' என்றும் 'கண்ணபிரானே!' என்றும் 'காளமேகத்திருவுருவை நான் பூர்ணாநுபவம் செய்யும்படி உபகரித்தருளினவனே!' என்றும் அநுஸந்தித்து நெஞ்சுகனிந்திருக்கும் அன்பருடைய உள்ளத்திலே ஊறினதேன்போலே இனியனாயிருப்பவனைச் செம்பொன்செய் கோயிலினுள்ளே கண்டு வணங்கி வாழ்ந்தேனென்கிறார்.

தெளிந்த நான்மறையோர்=ஒருஸமயத்திலே ஸர்வேச்வரன் ரக்ஷகனென்றிருப்பது, மற்றொருஸமயத்திலே மற்றொன்று ரக்ஷகமென்றிருப்பது, ஆக இப்படி மாறிமாறிக் கலக்குகையின்றியே, எக்காலத்திலும் எவ்விடத்திலும் எவ்வவஸ்தையிலும் எம்பெருமானே ரக்ஷகன் என்னும் தெளிவுடையார் வாழுந் திருநாங்கூர் என்க. இப்படிப்பட்ட தெளிவுடையார்க்குக் காட்சி கொடுத்துக்கொண்டு நிற்கப் பெற்றோமேயென்னும் மகிழ்ச்சி வடிவிலே தோன்ற நின்றமையால் "வளங்கொள் பேரின்பம் மன்னிநின்றானை" என்றார். ... (௯)

தேனமர்சோலை நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
வானவர்கோனைக் கண்டமைசொல்லும்
மங்கையார் வாட்கலிகன்றி *
ஊனமில்பாடலொன்பதோடொன்றும்
ஒழிவின்றிக் கற்றுவல்லார்கள் *
மானவெண்குடைக்கீழ் வையகமாண்டு
வானவராகுவர் மகிழ்ந்தே. (௧௦)

| | |
|---|---|
| தேன் அமர் சோலை | வண்டுகள் படிந்த சோலைகளையுடைய |
| நாங்கை | திருநாங்கூரில் |
| நல் நடுவுள் | நட்ட நடுவில் |
| செம்பொன் செய் கோயிலின் உள்ளே | செம்பொன்செய் கோயிலென்னுந் திருப்பதியிலே |
| வானவர் கோனை | தேவாதிதேவனை |
| கண்டமை | தாம் ஸேவித்தபடியை |
| சொல்லும் | அருளிச்செய்தவரும் |
| மங்கையார் | திருமங்கையிலுள்ளார்க்குத் தலைவரும் |
| வாள் | வாட்படையை யுடையவருமான |
| கலிகன்றி | திருமங்கையாழ்வாருடைய, |
| ஊனம் இல் பாடல் | குறையொன்றுமில்லாத பாசுரமான |
| ஒன்பதோடு ஒன்றும் | இப்பத்துப்பாட்டுக்களையும் |
| ஒழிவு இன்றி | ஒன்றும் விடாமல் |
| கற்று வல்லார்கள் | ஓதி யுணரவல்லவர்கள் |
| மானம் | பரப்பையுடைய |
| வெண் குடை கீழ் | வெண்கொற்றக் குடையின் கீழ் (இருந்துகொண்டு) |
| வையகம் | பூ மண்டலத்தை |
| ஆண்டு | அரசாண்டு |
| மகிழ்ந்து | உவந்து |
| வானவர் ஆகுவர் | (பிறகு) நித்யஸூரிகளுமாவர். |

* * *—திருநாங்கூர் நன்னடுவுள் செம்பொன்செய்கோயிலென்னுந் திருப்பதியில் "கண்டு கொண்டுய்ந்தொழிந்தேனே" என்றும் "கண்டு நான் வாழ்ந்தொழிந்தேனே" என்றும் எம்பெருமானைத்தாம் ஸேவிக்கப்பெற்றமையை ஒருகால் சொன்னாற்போலே ஒன்பதின்கால் சொன்ன திருமங்கையாழ்வாருடைய இப்பாசுரங்களை ஒன்றும் வழுவாமே அப்யஸிக்கவல்லவர்கள் வெண்கொற்றக் குடையின்கீழ் வீற்றிருந்து இவ்வுலகை நெடுங்காலமரசாண்டு பின்னர் நித்யஸூரிகள் திரளிலும் சென்று சேரப்பெறுவரென்று இத்திருமொழிகற்றார்க்குப் பயன்சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. .... .... (ய)

அடிவரவு:—பேரணி பிறப்பு திட வசை தீ மல்லை வெஞ்சினம் அன்றிய களங்கனி தேனமர் மாற்று.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—நான்காந்திருமொழி.

# மாற்றரசர்மணிமுடியும்.

## திருநாங்கூர்த் திருத்தெற்றியம்பலத் திருப்பதியின் மங்களாசாஸனத் திருப்பதிகம்.

மாற்றரசர்மணிமுடியுந் திறலுந்தேசும்
மற்றவர்தம் காதலிமார் குழையும் * தந்தை
கால்தளையுமுடன்கழல வந்துதோன்றிக்
கதநாகங்காத்தளித்த கண்ணர்கண்டீர் *
நூற்றிதழ்கொளரவிந்தம் நுழைந்தபள்ளத்து
இளங்கமுகின் முதுபாளை பகுவாய்நண்டின் *
சேற்றளையில் வெண்முத்தஞ்சிந்து நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (க)

பள்ளத்து — தாழ்ந்த நிலத்தில் முளைத்துள்ள

நூறு இதழ் கொள் அரவிந்தம் நுழைந்த — பல இதழ்களையுடைய தாமரைப் பூவிலே பிரவேசித்த

பகு வாய் நண்டின் — விரிந்தவாயை யுடைத்தான நண்டினுடைய

சேறு அளையில் — சேறுமிக்க வளையிலே

இள கமுகின் முது பாளை — இளைய பாக்குமரங்களினுடைய முற்றின பாளையானது

வெண் முத்தம் சிந்து — வெளுத்த முத்துக்களை இறைக்கப்பெற்ற

நாங்கூர் — திருநாங்கூரில்

திருத்தெற்றியம்பலத்து — திருத்தெற்றியம்பலமென்னுந் திருப்பதியிலெழுந்தருளியுள்ள

என் — எனக்கு ஸ்வாமியாய்

செம் கண் மால் — செந்தாமரைக் கண்ணனான ஸர்வேச்வரன் (எப்படிப் பட்டவனென்றால்,)

மாறு அரசர் — பகைவரான (துரியோதனன் முதலிய) அரசர்களினுடைய

மணி முடியும் — மாணிக்கங்களிழைத்த கிரீடங்களும்

திறலும் — வலிவும்

தேசும் — தேஜஸ்ஸும்

அவர் தம் காதலிமார் குழையும் — அவ்வரசரது மனைவிகளின் காதணியும்

தந்தை — தன் தகப்பனான வஸுதேவருடைய

கால் தளையும் — காலிலே இடப்பட்டிருந்த விலங்கும்

உடன் கழல — ஏககாலத்திலே ஒழியும்படியாக

| | | | |
|---|---|---|---|
| வந்து தோன்றி | திருவவதரித்தவனும் | காத்து அளித்த | ரக்ஷித்தருளினவனுமுள்ள |
| கதம் | சீற்றத்தையுடைய | கண்ணார் | கண்ணபிரான் காண்மின். |
| நாகம் | கஜேந்திராழ்வானை | காண்மீர் | |

* * *—இத்திருமொழியிற் பாசுரங்களை, பின்னடிகள் முன்னாக முன்னடிகளை அந்வயித்துக்கொள்க. முன்னடிகள் எம்பெருமான் வைபவத்தையும் பின்னடிகள் திருப்பதியின் வளத்தையும் பேசுவன. முன்னடிகளை முன்னே அந்வயித்துப் பின்னடிகளைப் பின்னே அந்வயிப்பதும் பொருந்தும். "மாற்றரசர் மணிமுடியுந் திறலுந்தேசும் மற்றவர்தங் காதலிமார் குழையும் தந்தை கால்தளையு முடன்கழல வந்துதோன்றிக் கதநாகங் காத்தளித்த கண்ணார் திருத்தெற்றி யம்பலத்தென் செங்கண்மால் கண்டீர்" என்றாற்போலே அந்வயிக்கவேண்டும். மேற்பாசுரங்களிலும் இங்ஙனமே அந்வயிக்கலாம். ஆயினும், பின்னடிகளை முன்னே அந்வயித்து முன்னடிகளைப் பின்னே அந்வயித்துப் பொருள்கொள்வதே நன்கு பொருந்தும்

திருநாங்கூரின் ஒரு பகுதியாகிய திருத்தெற்றி யம்பலமென்னுந் திருப்பதியிலெழுந்தருளியிருக்கும் செந்தாமரைக் கண்ணன் யாரென்றால், மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தவனும், முதலையைத் துணித்த ஸ்ரீ கஜேந்திராழ்வானைக் காத்தவனுமான கண்ணனேயாவன்—என்கிறார். "தந்தை காலில் விலங்கற வந்து தோன்றிய தோன்றல்" என்கிறபடியே கண்ணபிரான் திருவவதரிக்கும்போதே தனது தாய் தந்தையரான வஸுதேவ தேவகிகளின் கால்விலங்கு இற்றுமுறிந்தது; பிறகு நாளடைவில் கம்ஸ, சிசுபால, துர்யோதநாதிகளான அசுரப்பூண்டுகளெல்லாம் ஒழிந்தன; ஆயினும் "மாற்றரசர் மணிமுடியும் திறலும் தேசும்" என்று தொடங்கி "உடன் கழல" என்று எல்லாம் ஓரேகாலத்தில் நடந்தவைபோல ஆழ்வார் அருளிச்செய்தது ஒரு சமத்காரமாகும். கண்ணபிரானுகத் திருவவதரித்தபின் வெகு விரைவாகப் பகைவரைத் தொலைத்தாயிற்று என்பதைக் காட்டும் இவ்வதிசயோக்தி. தந்தைகால்தளை கழன்றது முன்னே; மாற்றரசர் மணிமுடியும் திறலும் தேசும் ஒழிந்தது வேறொரு காலத்தில்; அவர்தம் காதலிமார் குழைகள் கழன்றது அதற்குப் பிறகு: இப்படியிருந்தும், இவையெல்லாவற்றையுங்கூட்டி "உடன்கழல" என்றது—கண்ணபிரானுடைய சக்திவிசேஷத்தை விளக்குவதொரு அதிசயோக்தியென்க. பர்த்தாக்கள் மாண்டொழிந்தபின்பு மனைவியர் ஒருவகை ஆபரணமும் அணியக்கூடாதாகையால் இவர்கள் கைம்பெண்டாட்டிகளாயினர் என்பதைக் காட்டும் 'அவர்தம் காதலிமார் குழையும்—கழல' என்றது. குழை என்றவிது ஆபரணங்களெல்லாவற்றிற்கும் உபலக்ஷணம்: தாலியற்றவர்களாக என்றவாறு.

தந்தை கால் தளை கழன்ற வரலாறு:—மதுரா நகரத்தில் யதுவம்சத்தாரில் உக்ரஸேநன் என்றொரு தர்மிஷ்டன் அரசனாயிருந்தான்; அவனது மகன் கம்ஸனென்பான்: இக்கஞ்சன் துஷ்டர்களில் தலைவனாயிருந்துகொண்டு பெரியோர்

கட்குத் தீமையும் புல்லியர்கட்கு நன்மையும் செய்துகொண்டு தன் பலத்தினால் தனது தந்தையாகிய உக்ரஸேநனைச் சிங்காசனத்தினின்று தள்ளிவிட்டுத்தானே அரசாண்டுவருங் காலத்து, கம்ஸன் தனது உடன்பிறந்தவளாகிய யுக்தவயது வாய்ந்த தேவகியை வஸுதேவர்க்கு விவாஹம் செய்வித்து அவ்விவாஹம் முடிந்தபின் அவளை வஸுதேவர் மாளிகையிற் கொண்டுவிடுகைக்காகத் தேரேற்றிக்கொண்டு தான் தேவகியிடத்தில் மிக்க அன்பு ஆதரத்துடன் ஸாரதியாயிருந்து தேரை நடத்திவரும்போது, ஆகாயத்தில், 'அறிவுகேடனே! நீ யாரிடத்தில் அன்பு பூண்டிருக்கின்றனையோ அத்தேவகியின் எட்டாவது கர்ப்பம் உன்னைக் கொல்லப்போகிறது' என்று ஒரு அசரீரி வாக்குப் பிறக்க, அதனைக் கேட்ட கம்ஸன் திடுக்கிட்டு 'இனி நாம் தப்ப வழி யாது?' என்று யோசித்து, 'இவள் பிழைத்திருந்தாலன்றோ இவளது எட்டாவது பிள்ளை நம்மைக் கொல்லப்போகிறது; இப்போதே இவளைக் கொன்றுவிடுவோம்' என்றெண்ணிக் கத்தியை உருவிக்கொண்டு தேவகியைக் கொலைசெய்யப்புக, வஸுதேவர் அவனுக்குப் பல தருமங்களையும் காலகதியையும் பரக்க உபதேசிக்கவும் அவன் அதை மதியாமல் ஓரே பிடிவாதமாய் நிற்க, பின்பு வஸுதேவர் 'அப்பா! உனக்கு இவள் கையால் சாவு இல்லை; இவளுடைய பிள்ளைகையினாலல்லவோ சாவு நேரிடப்போகிறது; இவளுக்குப் பிள்ளை பிறந்தவுடன் அப்பிள்ளைகளை உன்னிடம் கொடுத்துவிடுகிறேன்; நீ அவற்றைக்கொன்றுவிடு' என்றுசொல்ல, கம்ஸன் அதை யுக்தமென்றுகொண்டு இத்தம்பதிகளை விலங்கிட்டுச் சிறையிலடைத்திட்டான். சிலநாள் கழிந்தபின், தேவகி கர்ப்பந்தரித்துப் பிள்ளைபெற்றாள்; வஸுதேவர் அப்பொழுதே அப்பிள்ளையைக் கம்ஸனிடம் கொண்டுபோய்க் கொடுத்துவிட, அவன் அதைக் காலைப்பிடித்துக் கல்மேல் அறைந்து கொன்றுவிட்டான். 1. "மக்களாறுவரைக் கல்லிடைமோத" என்கிறபடியே இவ்விதம் ஆறு பிள்ளைகளைக் கொன்றான். எம்பெருமானால் நியமிக்கப்பட்ட யோகநித்திரை யெனப்படும் மாயை நந்தகோபருடைய கோகுலத்திலிருந்த வஸுதேவ பத்தினியாகிய ரோஹிணியின் வயிற்றிலிருந்த வாயுரூபமான ஆறு மாதத்துக் கர்ப்பத்தைக் கலைத்துவிட்டு அவ்வஸுதேவருடைய மற்றொரு பத்தினியான தேவகியின் வயிற்றிலிருந்த ஆதிசேஷாம்சமான கர்ப்பத்தைக் கொண்டுபோய் அந்த ரோஹிணியின் வயிற்றில் சேர்த்திட, இங்ஙனம் வஸுதேவ பத்தினிகளுள் தேவகியின் கர்ப்பத்தில் (ஏழாவது கருவாக) ஆறுமாஸமும் ரோஹிணியின் கர்ப்பத்தில் மற்றோர் ஆறு மாஸமுமிருந்து பலராமன் பிறந்தனன். பிறகு தேவகியிடம் எட்டாவது கர்ப்பத்தில் ஸ்ரீ கிருஷ்ணனாய் அவதரிக்க அப்போதே வஸுதேவ தேவகிகளின் கால் விலங்கு இற்றுமுறிந்து விழுந்தது என்பதாம்.

கதநாகம் காத்தளித்த=கதம்—கோபம்; 'முதலையின் வாயிலே அகப்பட்டு நாம் இப்படி நெடும்போதாகத் துடியாநிற்கவும் எம்பெருமான் வந்து உதவிற்

1. பெரியாழ்வார் திருமொழி 5-3-1.

றிலனே!, என்ன கண்ணற்றவனோ!' என்று எம்பெருமான்மேல் கொண்ட கோபமென்னலாம். அன்றியே, சாதியியற்கைக்கு உரியவிசேஷணமாகவுமாம்; "தொடரெடுத்த மால்யானை" என்றதுபோல.

[நூற்றிதழ்கோள் இத்யாதி.] வடமொழியில் தாமரைக்கு 'சதபத்ரம்' என்றொரு பெயருண்டாதலால் அதற்கு இணங்கிய விசேஷணமாம் இது. அரவிந்தம்—தற்சமவடசொல். நண்டுகள் உணவுக்காகத் தாமரைப்பூவிலே சென்று புகுவதுண்டு; அங்ஙனம் போயிருக்கும்போது அந்த நண்டின் வளையில் பாக்குப் பாளைகளினின்று வெண்முத்துக்கள் இறைக்கப்பட்டு வளை மூடப்படுகின்றதாம் திருநாங்கூரில். .... .... .... .... (க)

பொற்றொடித்தோள் மடமகள்தன் வடிவுகொண்ட
　பொல்லாதவன்பேய்ச்சி கொங்கைவாங்கி *
பெற்றெடுத்த தாய்போலமடுப்ப, ஆரும்
　பேணாநஞ்சுண்டுகந்த பிள்ளைகண்டீர் *
நெல்தொடுத்த மலர்நீலம் நிறைந்தசூழல்
　இருஞ்சிறையவண்டொலியும் நெடுங்கணார்தம் *
சிற்றடிமேல்சிலம்பொலியுமிழற்று நாங்கூர்த்
　திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (உ)

| | |
|---|---|
| நெல் | நெற்கதிர்களின்மேல் |
| தொடுத்த | வரிசை வரிசையாகக் கட்டப்பட்ட |
| நீலம் மலர் | கரு நெய்தற் பூக்களாலே |
| நிறைந்த | நிறைந்துள்ள |
| சூழல் | சுற்றுப்புறங்களில் |
| இரு சிறைய வண்டு ஒலியும் | அழகிய சிறகுகளையுடைய வண்டுகளின் ஆரவாரமும் |
| நெடு கண்ணார் தம் | நீண்ட கண்களையுடையரான மாதர்களது |
| சிறு அடிமேல் | சிறிய பாதங்களிலணிந்த |
| சிலம்பு | தண்டைகளினுடைய |
| ஒலியும் | ஓசையும் |
| மிழற்று | தொனிக்கப்பெற்ற |
| நாங்கூர், திருத்தெற்றியம்பலத்து, என் செங்கண் மால்;—; | |
| பொன் தொடி | பொன் வளைகளணிந்த |
| தோள் | புஜங்களை யுடையவளும் |
| மடம் | ஆத்மகுணமுடையவளுமான |
| மகள் தன் | யசோதைப் பிராட்டியினுடைய |
| வடிவு கொண்ட | வேஷத்தை ஏறிட்டுக் கொண்டுவந்த |
| பொல்லாத வன் பேய்ச்சி | மிகவும் பொல்லாத பூதனையானவள் |
| கொங்கை | (தனது) முலையை |
| வாங்கி | கையாலெடுத்து |
| பெற்று எடுத்த தாய் போல மடுப்ப | பெற்று வளர்த்த தாய் போலே (அன்புடையவள் போலக் கண்ணனது வாயில்) வைத்திட, |
| ஆரும் பேணா நஞ்சு | ஒருவரும் விரும்பமாட்டாத விஷத்தை |
| உண்டு | (முலைப்பாலுடனே) பருகி |
| உகந்த | ஸந்தோஷமடைந்த |
| பிள்ளை கண்டீர் | சிறுவன் காண்மின். |

* * *—திருநாங்கூர் வயல்களில் நெற்பயிர்கள் செழித்து வளர்கின்றன; அந்த நெற்கதிர்களின்மேல் கருநெய்தற் பூக்கள் வரிசைவரிசையாகப் படர்ந்திருக்கின்றன; இப்படிப்பட்ட சுற்றுப்புறங்களில் வண்டுகளின் ஆரவாரமும், பூக்கொய்வதற்காகச் சென்ற மங்கைமார்களின் பாதச்சிலம்புகளின் ஆரவாரமும் சேர்ந்து தொனிக்கின்றனவாம். இப்படிப்பட்ட திருநாங்கூரிலுள்ள திருத்தெற்றியம்பலத் திருப்பதியின்கண் எழுந்தருளியுள்ள எம்பெருமான் யாவனென்னில்; முன்பு கம்ஸனால் ஏவப்பட்டுப் பேய்வடிவை மறைத்துத் தாய்வடிவு கொண்டு நஞ்சுதீற்றிய முலைகொடுக்கவந்த பூதனையின் ஸ்தந்யத்தை உறிஞ்சியுண்டு அவளுயிரை முடித்த கிருஷ்ணசிசுவாகிய எம்பெருமானேயாவன்.

குழந்தையானது தன்னைத் தாயென்றே நினைத்துக்கொள்ளும்படி யசோதை போலவே ஆபரண அலங்காரங்கள் செய்துகொண்டு வந்தாளாதலால் "போற்றேடித்தோள் மடமகள்தன் வடிவுகொண்ட" எனப்பட்டது. "தாய்போல் மடுப்ப" என்றபாடத்தில் சீர்கெடும்; "தாய்போல மடுப்ப" என்பதே ஆன்றோர்பாடம். ... ... .... ... (உ)

படலடைத்த சிறுகுரம்பைநுழைந்துபுக்குப்
பசுவெண்ணெய் பதமாரப் பண்ணைமுற்றும் *
அடலடர்த்த வேற்கண்ணார்தோக்கைபற்றி
அலந்தலைமை செய்துழலுமையன்கண்டீர் *
மடலெடுத்த நெடுந்தெங்கின்பழங்கள்வீழ
மாங்கனிகள் திரட்டுருட்டா வருநீர்ப்பொன்னி *
திடலெடுத்து மலர்சுமந்தங்கிழியு நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (ங)

மடல் எடுத்த நெடு தெங்கின் — பாளைகள் மிகவும் நிறைந்து உயர்ந்துள்ள தென்னை மரங்களினின்று,
பழங்கள் — காய்கள்
வீழ — (மாமரங்களின்மீது) விழ (அதனால் உதிர்ந்த)
மாங்கனிகள் திரட்டு — மாம்பழத்திரள்களை
உருட்டா — உருட்டிக் கொண்டும்
மலர் சுமந்து — (பலவகைப்) பூக்களையடித்துக் கொண்டும்
வரும் நீர் — பெருகுகின்ற பிரவாஹத்தையுடைய
பொன்னி — காவேரியானது
திடல் எடுத்து — மேட்டு நிலங்களை யெடுத்துவிட்டு
இழியும் — வெள்ளமிடப்பெற்ற நாங்கூர், திருத்தெற்றியம்பலத்து என் செங்கண் மால்—;
பசு வெண்ணெய் பதம் ஆர — அப்போது கடைந்துவைத்த வெண்ணெயை அமுது செய்வதற்காக
படல் அடைத்த சிறு குரம்பை நுழைந்து புக்கு — படலிட்டு மூடிவைத்த சிறு குடில்களிலே நுழைந்து உள்ளே போய்
அடல் அடர்த்த வேல் கண்ணார் — போர்செய்வதற்குரிய வேற்படைபோன்ற கண்களை யுடையரான இடைச்சிகளினுடைய
தோக்கை — சேலைத் தலைப்பை

| | | | |
|---|---|---|---|
| பற்றி | பிடித்திழுத்து | பண்ணை முற்றும் உழலும் | இடைச்சேரி யெங்குந் திரிகின்ற |
| அலந்தலைமை செய்து | துன்பமான சேஷ்டைகளைப் பண்ணி | ஐயன் கண்டீர் | மஹாநுபாவன் காண்மின். |

* * *—திருவாய்ப்பாடியில் கண்ணபிரானுடைய களவுத்தொழில்கள் ப்ரஸித்தமாகையால், அவரவர்கள் மனைகளில் வெண்ணெய் திரட்டிச் சேமித்து வைத்துப் படலும்விட்டடைத்துப் பாதுகாவல் செய்துவைப்பர்கள்; அப்படிப் பட்ட சிறுகுடில்களிலும் தந்திரமாகப்பிரவேசித்து வெண்ணெயை வாரியுண்பதும், "மாதர்கள் தம்மிடம்புக்குக் கச்சோடுபட்டைக்கிழித்துக் காம்புதுகிலவை கீறி, நிச்சலுந் தீமைகள்செய்வாய்" என்கிறபடியே பெண்களிடத்தில் சிலதீம்புகளைச் செய்வதுமாய் இப்படியே திருவாய்ப்பாடிமுழுவதையும் நலிவுபடுத்தின நாராயணனே திருத்தெற்றியம்பலத்திலுள்ளான் காண்மின்.

குரம்பை—குடிசை. பசுவெண்ணெய்=பசுமைமாறாத வெண்ணெய்; அப்போதுதான் கடைந்து திரட்டினவெண்ணெய். பதமார='பதம்' என்னுஞ் சொல்லுக்கு உள்ள பல பொருள்களில் உண்பதும் ஒரு பொருள். தோக்கை—முன்தானை. அலந்தலைமை—'அலந்தலை' என்னுஞ் சொல்லின்மேல் பண்புப் பெயர்விகுதி ஏறிக்கிடக்கிறது; துன்பம் என்பதுபொருள். வியாமோஹம் என்றபொருளுமுண்டு.

[மடலெடுத்த இத்யாதி.] திருநாங்கூரெங்கும் தென்னைமரங்களும் மாமரங்களும் மலிந்துகிடக்கின்றன; ஓங்கியிருக்கின்ற தெங்குகளினின்று தேங்காய்கள் மாமரங்களின் மீது விழவே, அந்த அதிர்ச்சியினால் மாம்பழங்கள் உதிர்ந்து வீழ்கின்றன; அவற்றையெல்லாம் திரட்டியுருட்டிக் கொண்டும் மற்றும் பலவகையான புஷ்பங்களை யடித்துக்கொண்டும் பெருவெள்ளமாகப் பிரவஹிக்கின்ற காவிரியாற்றுக்கால்களையுடையது திருநாங்கூர்.

திடலெடுத்து=திடல்-திடர்; எழுத்துப்போலி. திடராவது மேட்டுநிலம்; பெருவெள்ளம் பெருகும்போது மேடுகளெல்லாம் கரைந்து ஸமநிலமாதல் இயல்பு.

வாராரும் முலைமடவாள் பின்னைக்காகி
வளைமருப்பிற் கடுஞ்சினத்து வன்தாளார்ந்த *
காரார்திண் விடையடர்த்து வதுவையாண்ட
கருமுகில்போல் திருநிறத்தேன்கண்ணர்கண்டீர் *
ஏராரும் மலர்ப்பொழில்கள் தழுவியெங்கும்
எழில்மதியைக் கால்தொடர விளங்குசோதி *
சீராரு மணிமாடம் திகழு நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தேன் செங்கண்மாலே. (௪)

| | | | |
|---|---|---|---|
| ஏர் ஆரும் | அழகுபொருந்திய | எங்கும் தழுவி | ஆகாசமுள்ளவளவும் வியாபித்து |
| மலர் | புஷ்பங்களையுடைய | எழில் மதியை | அழகிய சந்திரனை |
| பொழில்கள் | சோலைகளானவை | | |

| | | | |
|---|---|---|---|
| கால் தொடா | (அசையவொட்டாமல்) கால்கட்டப் பெற்றதும் | வளை மருப்பின் | வளைந்த கொம்புகளை யுடையனவாய் |
| விளங்கு சோதி சீர்ஆரும் மணிமாடம் திகழும் | விளங்குகின்ற ஒளியையுடைய அழகிய மணிமாடங்கள் பிரகாசிக்கப் பெற்றதுமான | கடு சினத்து | மிக்க கோபத்தை யுடையனவாய் |
| நாங்கூர், திருத்தெற்றியம்பலத்து என் செங்கண் மால்—; | | வன் தாள் ஆர்ந்த | வலிய கால்களை யுடையனவாய் |
| | | கார் ஆர் | கருநிறம் பொருந்தியவான |
| | | திண் விடை | வலிய ரிஷபங்களை |
| | | அடர்த்து | வலியடக்கி |
| வார் ஆரும் முலை | கச்சணிந்த முலையையுடையவளும் | வதுவை ஆண்ட | (அவளை) விவாஹஞ் செய்துகொண்ட |
| மடவாள் | ஆத்மகுணங்களை யுடையவளுமான | கரு முகில் போல் திரு நிறத்து என் கண்ணர் கண்டீர் | நீலமேகச்யாமளனை நம் கண்ணபிரான் காண்மின். |
| பின்னைக்கு ஆகி | நப்பின்னைப் பிராட்டியைப் பெறுதற்காக, | | |

* * *—அழகிய சோலைகளால் சூழப்பட்டதும் சந்திரமண்டலத்தளவும் ஓங்கியிருந்துள்ள மணிமாடங்கள் மலிந்ததுமான திருநாங்கூரில் திருத்தெற்றியம்பலத்திலெழுந்தருளியிருக்கும் பெருமான் யாவனென்னில்; முன்பொருகால் நப்பின்னைப் பிராட்டியைத் திருமணம்புரிவதற்காக அதற்கு இடையூறாயிருந்த கொழுத்த ரிஷபங்களைச் செருக்கடக்கி அவளை மணம்புணர்ந்த காளமேகத் திருவுருவனன கண்ணபிரானேயாவன் என்பதாம். .... (சு)

கலையிலங்குமகலல்குல் கமலப்பாவை
கதிர்முத்த வெண்ணகையாள் கருங்கணுய்ச்சி *
முலையிலங்குமொளிமணிப்பூண் வடமுந்தேய்ப்ப
மூவாத வரைநெடுந்தோள் மூர்த்திகண்டீர் *
மலையிலங்கு நிரைச்சந்தி மாடவீதி
யாடவரை, மடமொழியார்முகத்து * இரண்டு
சிலையிலங்கி மனஞ்சிறைகொண் டிருக்குநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (எ)

| | | | |
|---|---|---|---|
| மலை இலங்கு | மலைபோல் விளங்குகின்ற | முகத்து | முகத்திலுள்ள |
| நிரை | வரிசை வரிசையாக | இரண்டு சிலை | இரண்டு விற்கள்போன்ற புருவங்களானவை |
| சந்தி | ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற | விலங்கி | வளைந்து |
| மாடம் | மாடங்களையுடைய | ஆடவரை | ஆண் பிள்ளைகளின் |
| வீதி | தெருக்களிலே | மனம் | மனத்தை |
| மடம் மொழியார் | இனிய பேச்சையுடைய பெண்களின் | சிறை கொண்டு இருக்கும் | ஸ்வாதீனப் படுத்திக்கொண் டிருக்கப்பெற்ற |

| | | | |
|---|---|---|---|
| நாங்கூர், திருத்தெற்றியம்பலத்து என் செங்கண் மால்—; | | முலை | தனங்களிலே |
| கலை இலங்கும் | மேகலை விளங்கப்பெற்ற | இலங்கும் | விளங்குகின்ற |
| அகல் அல்குல் | அகன்ற நிதம்பத்தை யுடையளாய் | ஒளி மணி | அழகிய மணிகளிழைத்துச் செய்யப்பட்ட |
| கதிர் முத்த வெள் நகையாள் | ஒளிபொருந்திய முத்துப் போலே வெளுத்த பற்களை யுடையளான | பூண் | கண்டிகையும் |
| | | வடமும் | ஹாரமும் |
| | | தேய்ப்ப | உராய, (அதனால்) |
| கமலம் பாவை | பெரிய பிராட்டியினுடையவும் | மூவாத | நித்யயௌவனம் மாறாத |
| கரு கண் ஆய்ச்சி | கறுத்த கண்களை யுடையளான நப்பின்னைப் பிராட்டியினுடையவும் | வரை நெடு தோள் | மலைபோன்று நெடிய திருத்தோள்களை யுடைய |
| | | மூர்த்தி கண்டீர் | ஸ்வாமி காண்மின். |

* * *—ஆண்களை எளிதில் வசப்படுத்தும் வல்லமைவாய்ந்த பெண்கள் மலிந்திருப்பதை வருணிப்பதும் நகர்ச்சிறப்பை வருணித்தலாதலால் அதனை வருணிக்கிறார் பின்னடிகளில். திருநாங்கூரில் வீதிகள்தோறும் மலைமலையான மாடங்கள் வரிசை வரிசையாக இடைவிடாது ஒன்றோடொன்று சேர்ந்திருக்கின்றன; அப்படிப்பட்ட வீதிகளில், மதுரமான பேச்சையுடைய பெண்கள் தங்களுடைய புருவநெறிப்பினால் ஆண்பிள்ளைகளின் மனத்தைக் கவர்ந்து கொள்ளுகின்றனராம்; இப்படிப்பட்ட அழகிற்சிறந்த மாதர் வாழப்பெற்ற திருநாங்கூரில் திருத்தெற்றியம்பலத் தெம்பெருமான் யாவனென்னில்;—பெரிய பிராட்டியாரோடும் நப்பின்னைப் பிராட்டியோடும் நித்யஸம்ச்லேஷம் பண்ணுகிற்கச் செய்தேயும் யௌவனம் சிறிதும் மாறாத நித்யயுவாவான பெருமான் காண்மின் என்பதாம்.

கலையிலங்கும்=‘மேகலை’ என்ற சொல் முதற்குறையாகிக் கலை என்று கிடக்கிறது என்று கொள்ளலாம். கலை—வஸ்த்ரமுமாம். “முலையிலங்கு மொளி மணிப்பூண் வடமும் தேய்ப்ப” என்பதனால் அப்பிராட்டிமாருடைய கலவி சொல்லப்பட்டதென்க.

முகத்து இரண்டு சிலை=விற்போன்ற புருவங்கள் என்னவேண்டுமிடத்து, வில் என்றே கூறினது ரூபகாதிசயோக்தியாம். ... ... (ரு)

தான்போலுமென்றெழுந்தான் தரணியாளன்
அதுகண்டு தரித்திருப்பானரக்கர்தங்கள் *
கோன்போலுமென்றெழுந்தான் குன்றமன்ன
இருபதுதோளுடன் துணித்த வொருவன்கண்டீர் *
மான்போலும் மென்னோக்கின் செய்யவாயார்
மரகதம்போல் மடக்கிளியைக் கைமேல்கொண்டு *
தேன்போலும் மென்மழலைபயிற்று நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தேன் செங்கண்மாலே. (சா)

| | |
|---|---|
| மான் போலும் மென் நோக்கின் | மானின் நோக்குப்போன்ற அழகிய நோக்கை யுடையராய் |
| செய்ய வாயார் | சிவந்த அதரத்தைய முடையரான பெண்கள் |
| மரகதம் போல் | மரதகப்பச்சைபோலே பசுமையாய் |
| மடம் | அழகியதான |
| கிளியை | கிளிப்பிள்ளையை |
| கை மேல் கொண்டு | தங்கள் கைகளின்மேல் வைத்துக்கொண்டு |
| தேன் போலும் மெல் மழலை | தேன்போலினிய மிருதுவான பேச்சை |
| பயிற்றும் | கற்பிக்கப்பெற்ற |

நாங்கூர் திருத்தெற்றியம்பலத்து என் செங்கண் மால்—;

| | |
|---|---|
| தரணி ஆளன் தான்போலும் என்று எழுந்தான் | '(இராமனென்கிற ஒரு சிறு மனிசன்) பூமியை யெல்லாம் தானே ஆள்பவனாக நினைத்து அஹங்காரப் படுகின்றான்; |
| அது கண்டு | அதை அறிந்தும் |
| தரித்து இருப்பான் | (அந்த ராமனைத் தண்டியாமல்) பொறுத்திருப்பவன் |
| அரக்கர் தங்கள் கோன் போலும் | ராக்ஷஸர்க்குத் தலைவனாவனோ' |
| என்று | என்றிப்படி நினைத்து |
| எழுந்தான் | கிளர்ந்தவனான இராவணனுடைய |
| குன்றம் அன்ன | மலைபோன்ற |
| இருபது தோள் | இருபது தோள்களையும் |
| உடன் | ஏககாலத்தில் |
| துணித்த | அறுத்தொழித்த |
| ஒருவன் கண்டீர் | தனிவீரன் காண்மின். |

* * *—இப்பாட்டின் முன்னடிகட்குப் பொருள் சொல்லுவது ஸூக்ஷ்ம புத்திசாலிகளுக்கன்றி மற்றையோர்க்கு இயலாது. முற்காலத்தில், ஆப்பான் திருவழுந்தூரரையர் என்கிற ஒருஸ்வாமியும் இன்னுஞ்சில முதலிகளுமாக இதற்குப் பொருள் என்னவென்று ஆராயத் தொடங்கினர்; அவர்கட்குப் பொருள் தோன்றவில்லை; அப்போது பட்டர் மிகச் சிறுபிராயத்தவராயிருந்தார்; அப்போது அருளிச்செயல் மூலம் ஓதியிருந்தாரல்லர் பட்டர்; ஆனாலும், பட்டர் சிறுபிராயமே தொடங்கி எல்லாவழிகளிலும் தமது ஸூக்ஷ்ம புத்தியைச் செல்லவிட்டுப் பலவகையான அர்த்த விசேஷங்களை வெளியிட்டுக் கொண்டு ஆச்சரியமாக விளங்கி வந்தமையால் பல பெரியோர்களும் பட்டரைப் பணிந்து அர்த்தங்கள் கேட்பதுண்டு; அப்படியே கீழ்ச்சொன்ன அரையர் முதலானாரும் பட்டரிடம் சென்று 'இப்பாட்டுக்குப் பொருள் என்ன?' என்று கேட்டனர்; அப்போதே பட்டர் 'பாசுரத்தை விளங்கச் சொல்லுங்கள்' என்று சொல்லி ஒருகால் பாசுரத்தைக் கேட்டவாறே, "தான்போலுமென் றெழுந்தான் தரணியாளன் அதுகண்டு தரித்திருப்பானரக்கர் தங்கள் கோன் போலும்" என்கிற வரையில் இராவணன் வார்த்தையின் அநுவாதம்—என்று சொல்லிப் பொருளைவிளக்கிக் காட்டினர். இங்கே வியாக்கியான வாக்கியம் வருமாறு:—"ஆப்பான் திருவழுந்தூரரையரும் மற்றுமுள்ள முதலிகளுமாக

'இப்பாட்டிற் சொல்லுகிற தென்?' என்று பட்டருக்கு விண்ணப்பஞ்செய்ய, ஒருகால் இயலைக் $ கேளா, 'ராவணன் வார்த்தைகாண்' என்றருளிச் செய்தார். [தான்போலு மித்யாதி.] ஒரு க்ஷத்ரியன்போலே எதிரியென்று வந்தான்; அது கண்டு தரித்திருப்பான் ராக்ஷஸராஜனும்—என்று கிளர்ந்தெழுந்த ராவணனுடைய மலைபோலே யிருக்கிற இருபது தோளையும் துணித்த தனிவீரன்கிடீர்" என்று.

இப்பொருளை விவரித்துக் காட்டுவோம்;—திருத்தெற்றியம்பலத் தெம்பெருமான் யாவனென்னில், இராவணனுடைய மலைபோன்ற இருபது தோள்களையும் துணித்த தனிவீரன்; அந்த இராவணன் எப்படிப்பட்டவனென்னில், மிகவும் அஹங்காரந்தோற்றச் செருக்கி வார்த்தை சொல்லிக்கொண்டே போர்க்களத்தில் கிளர்ந்தவன்; அப்படி அவன் செருக்குடன் சொன்னவார்த்தை ஏதென்னில்; 'தான் போலுமென்றெழுந்தான் தரணியாளன் அதுகண்டு தரித்திருப்பான் அரக்கர்தங்கள் கோன்போலும்' என்கிற இவ்வார்த்தையாம். இவ்வார்த்தைக்கு அர்த்தமேதென்னில்; இராமனென்று ஒரு பயல் தான் பெரியவொரு க்ஷத்ரியன்போல எதிரியென்று வருகிறதாம்; அதைக்கண்டு ஒருவன் பொறுத்திருக்கிறதாம்; அப்படி பொறுத்திருப்பவன் ராக்ஷஸர்கட்குத் தலைவனென்று பெயர் சுமந்திருப்பதாம்; என்று வெகு அற்பமாகச் சொல்லி யுத்தத்திற்குக் கிளம்பினனென்கை. இதனால், இராமன் தனக்கு எதிரியென்று புறப்படுவதற்கும் தகுதியற்றவன் என்பதும், இராமன் போர்க்கு வரச்செய்தேயும் தான் ஆறியிருப்பது தன்பெருமைக்குத் தகாதென்பதும் தெரிவிக்கப்பட்டனவாம்.

இப்பாட்டின் இவ்வரிய பெரிய பொருளை உணராதவர்கள் பிறரும் உணர்ந்து கொள்ள இட மில்லாதபடி "தான்போலு மேன்றெழுந்தான்" என்றும் "கோன்போலு மேன்றெழுந்தான்" என்றும் பாடத்தையே மாறுபடுத்திப் பதிப்பித்தும் ஓதுவித்தும் வருவது வருந்தத் தக்கது.

பின் ஒன்றரையடிகள் திருநாங்கூரின் சிறப்பை வருணிப்பன. அழகிய பெண்கள் தங்கள் கைமீது பசுங்கிளியை வைத்துக்கொண்டு இனிய பேச்சுக்களை அவற்றுக்குக் கற்பிக்குமிடமாம் திருநாங்கூர். ... ... ... (சு)

பொங்கிலங்கு புரிநூலும் தோலுந்தாழப்
 பொல்லாத குறளுருவாய்ப் பொருந்தாவாணன் *
மங்கலம்சேர் மறைவேள்வி யதனுள்புக்கு
 மண்ணகலம் குறையிரந்த மைந்தன்கண்டீர் *
கொங்கலர்ந்த மலர்க்குழலார் கொங்கைதோய்ந்த
 குங்குமத்தின் குழம்பளைந்த கோலந்தன்னால் *
செங்கலங்கல் வெண்மணல்மேல் தவழுநாங்கூர்த்
 திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. (எ)

$ கேளா—கேட்டு என்றபடி.

| | |
|---|---|
| கொங்கு அலர்ந்த | பரிமளம் பரவாநின்ற |
| மலர் | பூக்களையணிந்த |
| குழலார் | கூந்தலையுடையரான மாதர்களினுடைய |
| கொங்கை | தனங்களின்மீது |
| தோய்ந்த | படிந்த |
| குங்குமத்தின் குழம்பு | குங்குமச்சாறுதன்னை |
| அளைந்த | அளைந்ததனாலுண்டான |
| கோலம் தன்னால் | அழகினால் |
| செம் | சிவந்திருக்கிற |
| கலங்கல் | வெள்ளமானது |
| வெண் மணல் மேல் தவழும் | வெளுத்த மணற் குன்றுகளின்மேல் பரவப்பெற்ற |

நாங்கூர், திருத்தெற்றியம்பலத்து என் செங்கண் மால்—;

| | |
|---|---|
| பொங்கு இலங்கு புரிநூலும் | மிக விளங்குகின்ற யஜ்ஞோபவீதமும் |
| தோலும் | க்ருஷ்ணாஜிநமும் |
| தாழ | தொங்கப்பெற்ற |
| பொல்லாத குறள் உரு ஆய் | அழகிய வாமநமூர்த்தியாகி |
| பொருந்தா வாணன் | ஆஸுரப்ரக்ருதியான மஹாபலியினுடைய |
| மங்கலம் சேர் | மங்களம் பொருந்திய |
| மறை | வேதகோஷத்தையுடைய |
| வேள்வி அதனுள் | யாகபூமியிலே |
| புக்கு | எழுந்தருளி |
| குறை | தனக்கு வேண்டியதான |
| மண் அகலம் | பூமியை |
| இரந்த | யாசித்த |
| மைந்தன் கண்டீர் | சிறுக்கன் காண்மின் |

* * *—பிரமசாரியாச்ரமத்திற்கு உரிய கோலத்துடனே வாமநரூபியாய் மாவலியின் யாகபூமியிற் சென்று பூமிதானம் பெற்ற பெருமானே திருத்தெற்றியம்பலத்திலுள்ளானென்கிறது. யஜ்ஞோபவீதமும் க்ருஷ்ணாஜிநமும் ப்ரஹ்ம சர்ய ஆச்ரமத்திற்கு உரியவை. "அழகிய குறளுருவாய்" என்று சொன்னால் கண்ணெச்சில் படுமோ என்றஞ்சி 'பொல்லாத குறளுருவாய்' என்றார். 'பொல்லாத' என்றது எதிர்மறை யிலக்கணையால், நல்லதென்றபடி. ஸாக்ஷாத் ஸர்வேச்வரன் எழுந்தருளப் பெற்ற யாகமாகையாலே 'மங்கலம் சேர்' என்று வேள்விக்கு அடைமொழி கொடுக்கப்பட்டது.

[கோங்கலர்ந்த இத்யாதி.] பரிமளம் கமழ்கின்ற பூக்களையணிந்த கூந்தலையுடைய பெண்கள் நீரில்படிந்து தீர்த்தமாடுகையில் தங்கள் கொங்கைத் தடங்களில் அணிந்திருந்த குங்குமக் குழம்புகளைத் தேய்த்து அலம்புவதனால் ஜலப்ரவாஹமானது சிவப்பு நிறம்பெற்று வெண்மணல் நிலங்களிலே தவழ்கின்றதாம் திருநாங்கூரில். இதனால் அவ்வூர்ப் பெண்களின் செல்வமிகுதி சொல்லப்பட்டதாம். நீர் வெள்ளத்தைச் செந்நிறமாக்குவதற்குப் போதுமான குங்குமப்பூச்சாறு முலைத்தடங்களில் பூசப்பெறுவது செல்வம் மிக்கவர்க்கேயன்றோ. "கொவ்வைவாய் மகளிர் கொங்கைக் குங்குமங் கழுவிப்போந்த, தெய்வ நீர் கமழுநாங்கூர்" என்பர் மேல் திருமொழியிலும். .... .... (எ)

சிலம்பினிடைச் சிறுபரல்போல் பெரியமேரு
திருக் குளம்பில் கணகணப்பத் திருவாகாரம்
குலுங்க * நிலமடந்தைதனை யிடந்துபுல்கிக்
கோட்டிடைவைத் தருளியவெங் கோமான்கண்டீர் *
இலங்கியநான் மறையனைத்து மங்கமாறும்
ஏழிசையும் கேள்விகளுமெண்டிக்கெங்கும் *
சிலம்பியநற் பெருஞ்செல்வம் திகழுநாங்கூர்த்
திருத்தேற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (௩)

| | |
|---|---|
| சிலம்பின் இடை | தண்டைச்சிலம்பின் நடுவிலிட்ட |
| சிறு பரல் போல் | சிறிய பருக்காங்கல்போல |
| பெரிய மேரு | பெருத்த மேருமலையானது |
| திரு குளம்பில் | அழகிய குளம்பிலே |
| கணகணப்ப | கணகணவென்று ஒலிக்கும்படியாகவும் |
| திரு ஆகாரம் குலுங்க | (திருமார்பில்) பிராட்டி யிருக்குமிருப்பு குலுங்கும்படியாகவும் |
| நிலம் மடந்தைதனை | பூமிப்பிராட்டியை |
| இடந்து | கோட்டால் குத்தியெடுத்து |
| புல்கி | தழுவிக்கொண்டு |
| கோட்டிடை | கோரப்பல்லின்மீது |
| வைத்து அருளிய | ஸ்தாபித்துக்கொண்ட |
| எம் கோமான் கண்டீர் | எம்பெருமான் காண்மின். |
| இலங்கிய | (பிரமாணங்களுள் சிறந்ததாக) விளங்குகின்ற |
| நால் மறை அனைத்தும் | எல்லா வேதங்களும் |
| அங்கம் ஆறும் | (வியாகரணம் முதலிய) ஆறு அங்கங்களும் |
| ஏழ் இசையும் | ஸப்தஸ்வரங்களும் |
| கேள்விகளும் | இதிஹாஸ புராணங்களும் (ஆகிய இவை) |
| எண் திக்கு எங்கும் | எட்டுத் திசைகளிலுமெல்லாம் |
| சிலம்பிய | கோஷம் செய்யப்பெற்றதும் |
| நல் பெரு செல்வம் | நல்ல அளவற்றசெல்வம் |
| திகழும் | விளங்கப்பெற்றதுமான |

நாங்கூர், திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மால்—:

* * *—வேதங்களும் வேதாங்கங்களும் இதிஹாஸபுராணங்களும் எங்குப் பார்த்தாலும் பெரிய கோஷமாக அதிகரிக்கப் பெற்றதும் இதனையே பெருஞ் செல்வமாக வுடையதுமான திருநாங்கூரில் திருத்தெற்றியம்பலத்திலுள்ள பெருமான் யாவனென்னில்; வராஹமூர்த்தியாகிப் பூமிப்பிராட்டியை உத்தரிப்பித்த பெருமான் காண்மின் என்பதாம். அண்டபித்தியிற் சார்ந்து கிடந்த பூமிப்பிராட்டியை அதனின்று ஒட்டுவிடுவித் தெடுக்கும்போது மேருமலை யானது (வராஹமூர்த்தியின்) குளம்பில் ஒடுங்கிக் கிடக்கும்படி மிகப்பெரிய வராஹத் திருவுருவெடுத்ததாகப் புராணங்கள் கூறுவதை உட்கொண்டு இப் பாசுரமருளிச் செய்யப்பட்டது. 1. "தீதறு திங்கள் பொங்கு சுடரும்பரும்ப

1. பெரியதிருமொழி 11—4—3.

ருலகேழினோடு முடனே, மாதிர மண்சுமந்த வடகுன்று நின்ற மலையாறு மேழு கடலும், பாதமர்சூழ் குளம்பினக மண்டலத்தினொருபாலொடுங்க வளர்சேர், ஆதிமுனேனமாகி அரணாய மூர்த்தியது” என விரிவாக அருளிச்செய்வது காண்க. ஸ்ரீமத் வேதாந்த தேசிகனும் வரதராஜபஞ்சாசத் ஸ்தோத்ரத்தில் “ பொ௵ாக்ஷ்ரூ௭ெதவ-௴-௴வ௵ாஶ௮ி௭வஸ்ு) யஸ்ுபெ ஹாணுசணுஷஉஃஸ-௫஡-஡ஃ௭ொ கஃ௭ெஶ। ௭௭ெவஸு)வ௭உாஃ ஹஜ கயு௦ ஷ஁ஃ-௫௭௦ வா௱ாஹஉாஷ௭ிவ ௭ொவவ௱ாஃ஡௭௦௭ெ ?” என்று வராஹாவதாரத்தின் பெருமையில் ஈடு பட்டுப் பேசின ச்லோகமுணர்க.

[சிறுபரல் சிலம்பினிடைப் போல் பெரியமேரு திருக்குளம்பில் கண கணப்ப] “ வ௱ாஉயூ)௬௭ொயஸு) ௭உ௱ஃ கணகணாய௭ெ ” என்ற புராண ச்லோகத்தை யடியொற்றி அருளிச்செய்கிறபடி. ஒரு தண்டைச் சிலம்பிலே மிகச்சிறிய பருக்காங்கல்லை யிட்டுவைத்தால் அது எப்படி கண கணவென்று ஒலிக்குமோ அப்படியே பெரிய மேருமலையானது வராஹநாயனாருடைய திருக்குளம்பிலே கணகணத்த தென்றவிதனால்—மிகப்பெரிய மேருமலையும் ஒருகுளம்பின் ஏகதேசத்திலே ஒடுங்கும்படியாக வராஹநாயனார் அத்தனைபெரிய வடிவுகொண்டாரென்பது விளக்கப்பட்டதாம்.

திருவாகாரம் குலுங்க=‘ அகலகில்லேனிறையும் ’ என்று பிராட்டியிருக்குமிருப்புக் குலுங்கும்படியாக. ... .... .... (அ)

ஏழுலகும் தாழ்வரையுமெங்குமூடி
 எண்டிசையும் மண்டலமும்மண்டி * அண்டம்
மோழையயெழுந்தாழிமிகு மூழிவெள்ளம்
 முன்னகட்டி லொடுக்கிய வெம்மூர்த்திகண்டீர் *
ஊழிதோறுமூழிதோறு முயர்ந்தசெல்வத்து
 ஓங்கியநான் மறையனைத்தும் தாங்குநாவர் *
சேழுயர்ந்த மணிமாடம் திகழுநாங்கூர்த்
 திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (கூ)

ஊழிதொறும் ஊழிதொறும் } காலம் செல்லச் செல்ல

உயர்ந்த — வளர்ந்துவருகிற

செல்வத்து — செல்வத்தையுடையராய்

ஓங்கிய நான்மறை அனைத்தும் தாங்கு நாவர் } சிறந்த வேதங்களை யெல்லாம் தாங்கிக் கொண்டிருக்கிற நாவையுடையரான வைதிகர்கள் வாழப்பெற்றதும்

சேழ் உயர்ந்த மணி மாடம் திகழும் } மிகவும் உயர்ந்த மணிமாடங்கள் விளங்கப்பெற்றதுமான

நாங்கூர், திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மால்—;

ஏழ் உலகும் — ஸப்தத்வீபங்களும்

தாள் வரையும் } பக்கத்துச்சிறுமலைகளையுடைய பெரியமலைகளும்

எங்கும் — ஆகிய எவ்விடங்களையும்

| | | | |
|---|---|---|---|
| மூடி | ஆக்கிரமித்து | ஆழி மிகும் | கடல் பெருகும்படியான |
| எண் திசையும் | எட்டுத்திக்குக்களிலும் | ஊழி வெள்ளம் | பிரளயப் பெரு வெள்ளத்தை |
| மண் தலமும் | எல்லாப் பூமியிலும் | முன் | முன்பொருகால் |
| அண்டம் | அண்டத்திலும் | அகட்டில் | திருவயிற்றில் |
| மண்டி | பரவி | ஒடுக்கிய | அடக்கிக் கொண்ட |
| மோழை யெழுந்து | மோழை கிளம்பி | எம் மூர்த்தி கண்டீர் | எமது ஸ்வாமியாவான். |

* * *—நாள்செல்ல நாள்செல்லச் செல்வம் குறைந்து போவதுண்டே பலர்க்கு ; அப்படியல்லாமல் மேன்மேலும் வளர்ந்து வரும்படியான செல்வத்தை யுடையர்களாயும் சதுர்வேதங்களையும் தரித்துக் கொண்டிருக்கிற நாவையுடையவர்களாயு மிருக்கிற அந்தணர்களால் நிறைந்த திருநாங்கூரில் திருத்தெற்றியம்பலத்திலுள்ள எம்பெருமான் பண்டு பிரளயப் பெருங்கடல் வெள்ளம் உலகமெங்கும் பரவினபோது உலகத்தையெல்லாம் திருவயிற்றின் ஒரு மூலையிலே ஒடுக்கின ஆபத்பந்துவான பெருமான் காண்மின் என்பதாம்.

"பாதா: ப்ரத்யந்தபர்வதா:" என்ற அமர நிகண்டின்படி, பெரியமலைக்கு அடுத்துள்ள சிறுமலைகள் பாதங்களாகச் சொல்லப்படுதலால், இங்கே 'தாள் வரையும்' என்றதற்கு 'பக்கத்துச் சிறு மலைகளையுடைய பெரிய மலைகளும்' என்று பொருள் கூறப்பட்டது,

மோழையெழுந்து—கீழ் வெள்ளம் மேற்கிளர்தல் மோழையெழுச்சியெனப் படும். மோழை—கீழாறு. அகடு—கீழ்வயிறு. மூர்த்தி—ஸ்வாமி. .... (௯)

சீரணிந்த மணிமாடம் திகழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலை *
கூரணிந்த வேல்வலவனாலிநாடன்
கொடிமாட மங்கையர்கோன் குறையலாளி *
பாரணிந்த தொல்புகழான் கலியன்சொன்ன
பாமாலை யிவையைந்து மைந்தும் வல்லார் *
சீரணிந்த வுலகத்து மன்னராகிச்
சேண்விசும்பில் வானவராய்த் திகழ்வர்தாமே. (௰)

| | | | |
|---|---|---|---|
| சீர் அணிந்த | சிறப்புப் பொருந்திய | என் | எனக்கு ஸ்வாமியான |
| மணி மாடம் | மணிமாடங்கள் | செம்கண் மாலை | செந்தாமரைக்கண் பெருமான் விஷயமாக, |
| திகழும் | விளங்கப் பெற்ற | கூர் அணிந்த வேல் வலவன் | கூர்மை பொருந்திய வேற்படையை ஆளுமவரும் |
| நாங்கூர் | திருநாங்கூரிலுள்ள | ஆலி நாடன் | திருவாலி நாட்டுக்குத் தலைவரும் |
| திருத் தெற்றியம் பலத்து | திருத்தெற்றியம்பலமென்னுந் திருப்பதியி லெழுந்தருளியிருக்கிற | | |

| | |
|---|---|
| கொடி மாடம் மங்கையர் கோன் | கொடிகளணிந்த மாடங்களையுடைய திருமங்கையிலுள்ளார்க்குத் தலைவரும் |
| குறையல் ஆளி | திருக்குறையலூரை ஆள்பவரும் |
| பார் அணிந்த தொல் புகழான் | பூமிக்கு அலங்காரமான தொல்புகழை யுடையவருமான |
| கலியன் | திருமங்கையாழ்வார் |
| சொன்ன | அருளிச்செய்த |
| பா மாலை இவை ஐந்தும் ஐந்தும் | இப் பத்துப் பாசுரங்களையும் |
| வல்லார் தாம் | ஓத வல்லவர்கள் |
| உலகத்து | இவ்வுலகத்தில் |
| சீர் அணிந்த மன்னர் ஆகி | அரசர்களாகி வாழ்ந்து (பிறகு) |
| சேண் விசும்பில் | பரமாகாச மென்கிற பரமபதத்திலே |
| வானவர் ஆய் | நித்ய ஸூரிகளோடு ஒத்தவர்களாய் |
| திகழ்வர் | விளங்கப் பெறுவர்கள். |

* * *—திருநாங்கூர்த் திருத்தெற்றியம்பலத் தெம்பெருமான் விஷயமாகத் திருமங்கைமன்னன் திருவாய் மலர்ந்தருளிய இப்பாசுரங்களை ஓதவல்லவர்கள் இஹலோகத்தில் உள்ள வளவும் ராஜாதிராஜர்களாய் வீறுபெற்று விளங்கி, பிறகு நித்ய விபூதியிலுஞ் சென்று நித்யகைங்கரியம் பண்ணப் பெறுவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. ... ... (௧௦)

அடிவரவு:—மாற்று, பொன், படல், வாரார், கலை, தான், பொங்கு, சிலம்பு, ஏழ், சீரணி, தூம்பு.

நான்காந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.





ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—ஐந்தாந்திருமொழி,

# தூம்புடைப்பனைக்கைவேழம்.

## திருநாங்கூர்த் திருமணிக்கூடத்திருப்பதி மங்களாசாஸனத் திருப்பதிகம்.

தூம்புடைப் பனைக்கைவேழம் துயர்கெடுத்தருளி * மன்னு
காம்புடைக் குன்றமேந்திக் கடுமழைகாத்தவெந்தை *
பூம்புனல்பொன்னிமுற்றும் புகுந்து பொன்வரண்ட * எங்கும்
தேம்பொழில் கமழுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (க)

| | |
|---|---|
| தூம்பு உடை பனை கை வேழம் | துளையையுடைத்தாய் பனைபோன்றதான துதிக்கையையுடைய கஜேந்திராழ்வானது |
| துயர் | துன்பத்தை |
| கெடுத்தருளி | போக்கியருளினவனும் |
| மன்னு காம்பு உடை குன்றம் | வேரூன்றின மூங்கில்களையுடைத்தான கோவர்த்தனமலையை |
| ஏந்தி | (குடையாக) எடுத்துப்பிடித்து |
| கடு மழை | கடிதான மழையை |
| காத்த | தடுத்தவனுமுள்ள |
| எந்தை | எம்பெருமான், (எவ்விடத்திலுள்ளானென்னில்; |
| பூ புனல் பொன்னி | அழகிய ஜலத்தையுடைத்தான காவேரியானது |
| முற்றும் புகுந்து | எங்கும்பாய்ந்து |
| பொன் | பொற்குவியல்களை |
| வரண்ட | கொண்டுவந்து தள்ளப்பெற்றதும் |
| எங்கும் | கண்டவிடமெங்கும் |
| தேம் பொழில் கமழும் | தேன்மிக்கசோலைகள் பரிமளம் வீசப்பெற்றதுமான |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| திருமணிக் கூடத்தான் | திருமணிக்கூடமென்னும் திருப்பதியிலுள்ளான். |

* * *—தாமரைப்பொய்கையிலே முதலைவாயி லகப்பட்டுத்துடித்த கஜேந்திராழ்வானது துயரைத் தொலைத்தருளினவனும், கோவர்த்தனமலையைக் குடையாகவெடுத்துக் கடுமழையில் நின்றும் கோநிரையைக் காத்தருளினவனுமான எம்பெருமான் நம்போன்றவர்களினுடைய துயரையும் தொலைப்பதற்காகத் திருநாங்கூரில் திருமணிக்கூடமென்னுந் திருப்பதியிலே வந்து தங்கிநிரா நின்றான். அத்திருநாங்கூர் எப்படிப்பட்டதென்னில்; காவிரியாற்றின் பாய்ச்சல் எங்கும் பரவிக் கண்டவிடமெங்கும் பொற்குவியல்கள் கொண்டு குவிக்கப்பெற்றிருப்பதும் தேன்மிக்க சோலைகள் கமழப்பெற்றதுமாம்.

முதலடியில், 'பணைக்கை' என்றும் பாடமுண்டு; பருத்த கையையுடைய என்றபடி. மூன்றாமடியிலும் 'முற்றும்' 'முற்றம்' என்பன பாடபேதங்கள். வரண்ட—தள்ள; 1. "மழைப்பேரருவி மணிவரண்டி வந்திழிய" என்ற திருமழிசைப்பிரான் பிரயோகமுங் காண்க. .... ... (க)

கவ்வைவாளெயிற்று வன்பேய்க் கதிர்முலை சுவைத்து * இலங்கை
வவ்விய விடும்பைதீரக் கடுங்கணை துரந்தவெந்தை *
கொவ்வைவாய்மகளிர்கொங்கைக் குங்குமம் கழுவிப்போந்த *
தெய்வநீர் கமழுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (உ)

| | |
|---|---|
| கவ்வை | ஆரவாரம்செய்பவளாய் |
| வாள் எயிறு | வாள்போன்று கூர்மையான பற்களையுடையளாய் |
| வல் பேய் | கல்நெஞ்சளான பூதனையினுடைய |
| கதிர் முலை | (விஷத்தாலே) புகர் பெற்றிருக்கிறமுலையை |
| சுவைத்து | உறிஞ்சி உண்டவனும் |
| இலங்கை வவ்விய | லங்காபுரியைப் பற்றின |
| இடும்பை | (ராக்ஷஸப்பூண்டுகள் நெருங்கியிருத்தலாகிற) கேடானது |
| தீர | தொலையும்படியாக |
| கடுங் கணை | கடுமையான அம்புகளை |
| துரந்த | (அவ்விலங்கையின்மீது) செலுத்தினவனுமுள்ள |
| எந்தை | ஸ்வாமியானவன் |
| | (எவ்விடத்துள்ளானென்னில்;)? |
| கொவ்வை வாய் மகளிர் | கொவ்வைக்கனிபோன்ற வாயையுடையரான பெண்கள் |
| கொங்கை | (தங்கள்) கொங்கைத்தடத்தினின்று |
| குங்குமம் | குங்குமச்சேறுகளை |
| கழுவி | கழுவ, |
| போந்த | (அவற்றோடுகூடிப்) பெருகுகின்ற |
| தெய்வம் நீர் | திவ்யமான தீர்த்தமானது |
| கமழும் | வாஸனைவீசப்பெற்ற |
| | நாங்கூர், திருமணிக்கூடத்தான்—. |

* * *—யசோதைப்பிராட்டிபோல் வேஷம்பூண்டு முலைகொடுத்துக் கொல்ல வந்த பூதனையின் முலையை உறிஞ்சியுண்டு அவளுயிரை மாய்த்தவனும், இலங்கையில் ராக்ஷஸப்பயல்கள் இடையறாது நெருங்கியிருத்தலாகிற கேடு தீரும்படி அம்புகளைத்துரந்து வெற்றி பெற்றவனுமான எம்பெருமான் நாங்கூர்த் திருமணிக்கூடத்திலுள்ளான்.

நாங்கூர் எப்படிப்பட்டதென்னில்; மங்கைமார் தங்கள் கொங்கைத்தடத்தில் அணிந்திருந்த குங்குமச்சேறுகளைத் தீர்த்தமாடும்போது நீரில் கழுவ, அவற்றோடுகூடிப் பெருகுகின்ற திவ்யதீர்த்தம் கமழப்பெற்றதாம்.

முன்னடிகளில் "இலங்கை மன்னிய விடும்பை தீர" "இலங்கை மன்னிய விடும்பை கூர" என்பன பாடபேதங்கள். "வவ்விய விடும்பை தீர" என்னும்

1. நான்முகன் திருவந்தாதி—39.

பாடம் பெரும்பான்மையாக வழங்கிவரக் காண்கிறோம். வியாக்கியானத்திலு முள்ளது. .... ... ... ... (உ)

மாத்தொழில் மடங்கச்செற்று மருதிறநடந்து * வன்தாள்
சேத்தொழில்சிதைத்துப் பின்னைசெவ்வித்தோள் புணர்ந்தவெந்தை *
நாத்தொழில் மறைவல்லார்கள் நயந்தறம் பயந்த * வண்கைத்
தீத்தொழில் பயிலுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே (ரு)

| | |
|---|---|
| மா | { குதிரைவடிவுகொண்டுவந்த கேசியென்னு மஸுரனுடைய |
| தொழில் | { (பராக்ரமச்) செயல்களெல்லாம் |
| மடங்க | { அடங்கும்படி செய்து (அவ்வஸுரனை) |
| செற்று | கொன்றொழித்தவனும் |
| மருது | மருதமரங்கள் |
| இற | இற்றுமுறிந்துவிழும்படி |
| நடந்து | தவழ்நடைகற்றவனும் |
| வல் தாள் | வலிய கால்களையுடைய |
| சே | (ஏழு) ரிஷபங்களினுடைய |
| தொழில் | வியாபாரத்தை |
| சிதைத்து | பங்கப்படுத்தி |
| பின்னை | { நப்பின்னைப் பிராட்டியினுடைய |
| செவ்வி தோள் | } அழகியதோள்களோடே |
| புணர்ந்த | கலவி செய்தவனுமுள்ள |
| எந்தை | எம்பெருமான் |
| | (எங்குள்ளானென்னில் ;) |
| நா தொழில் | நாவுக்கு வியாபாரமாக |
| மறை | வேதங்களை |
| வல்லார்கள் | கற்றுவல்லவர்கள் |
| நயந்து அறம் பயந்த | { ஆசையோடே தருமங்களை யனுஷ்டித்த |
| வண் கை | உதாரமான கைகளாலே |
| தீ தொழில் | அக்நிகாரியங்களை |
| பயிலும் | { இடைவிடாது செய்யப்பெற்ற |
| | நாங்கூர், திருமணிக்கூடத்தான்—. |

* * *—குதிரை வடிவுகொண்டு தன்னைக்கொல்லவந்த கேசியென்னுப் அஸுரனை யொழித்தவனும், இரட்டை மருதமரங்கள் முறிந்து விழும்படி நடை கற்றவனும், ஏழெருதுகளையடர்த்து நப்பின்னைப்பிராட்டியோடே ஸ ச்லேஷித்தவனுமான பெருமான் நாங்கூர்த்திருமணிக்கூடத்திலுள்ளான்.

ஜ்ஞாநாநுஷ்டாநங்களால் நிறைந்த வைதிகர்கள் வாழுமிடம் திருநாங்கூ என்பன பின்னடிகள். ஈற்றடியில் "தீத்தொழில் பயிலும்" என்றவிடத்து விரோதாபாஸாலங்காரம் அறியத்தக்கது. 'தீத்தொழில்' என்பதற்கு தீய தொழில் [கெட்ட காரியம்] என்றும் பொருள் படுமாதலால் அதனை முந்துற விரோதப்பொருளாகக்கொள்க; வேதமோதித் தருமங்களை யனுட்டிப்பவர்கள் என்று மூன்றாமடியில் சொல்லிவைத்து, அன்னவர்கள் தீயதொழிலைப் பயில் கின்றனரென்பது விரோதம்; ஔபாஸநம் முதலிய அக்நிகாரியங்களை நடத்து பவர்கள் என்று பொருள்கொண்டு விரோதத்தை அகற்றுக: ஆகவே விரோதா பாஸாலங்காரம் இது. ... ... ... ... (ரு)

தாங்கருஞ் சினத்துவன்தாள் தடக்கைம்மா மருப்புவாங்கி *
பூங்குருந்தோசித்துப் புள்வாய்பிளந்து எருதடர்த்த வெந்தை *
மாங்கனி நுகர்ந்தமந்தி வந்துவண்டிரிய * வாழைத்
தீங்கனி நுகருநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௬)

| | |
|---|---|
| தாங்க அரு சினத்து | (ஒருவராலும்) தாங்க முடியாத கோபத்தை யுடையதும் |
| வன் தாள் | வலிவுள்ள கால்களை யுடையதும் |
| தட கை | பெரிய துதிக்கையை யுடையதுமான |
| மா | (குவலயாபீடமென்னும்) யானையினுடைய |
| மருப்பு | தந்தத்தை |
| வாங்கி | பிடுங்கிப் போட்டவனும் |
| பூ குருந்து ஒசித்து | பூத்த குருந்தமரத்தை முறித் தொழித்தவனும் |
| புள் வாய் பிளந்து | பகாஸுரனுடைய வாயைக் கிழித்தவனும் |
| எருது அடர்த்த | ரிஷபங்களை வலியடக்கினவ னுமுள்ள |
| எந்தை | எம்பெருமான் |
| (எவ்விடத்திலுள்ளானெனில் ;) | |
| மா கனி | மாம்பழங்களை |
| நுகர்ந்த | புஜித்த |
| மந்தி | குரங்கானது |
| வந்து | (அந்த மாமரத்தினின்றும் வாழை மரத்திலே) வந்து சேர்ந்து |
| வண்டு இரிய | (அங்கிருந்த) வண்டுகள் சிதறியோடும்படியாக |
| தீம் வாழை கனி | இனிய வாழைப்பழங்களை |
| நுகரும் | புஜிக்கப் பெற்ற |
| நாங்கூர், திருமணிக்கூடத்தான்—. | |

* * *—கம்ஸனாலேவப்பட்டுச் சினமூண்டுவந்த குவலயாபீடமென்னும் மதகரியின் மருப்பையொசித்து ஒழித்தவனும், அஸுராவேசம்பெற்ற குருந்த மரத்தை முறித்துத் தள்ளினவனும், கொக்கின் வடிவுகொண்டு வந்த பகாஸுர னுடைய வாயைப் பிளந்தொழித்தவனும், எருதுகளை யடர்த்தவனுமான எம்பெருமான் நாங்கூர்த் திருமணிக்கூடத்திலுள்ளான்.

நாங்கூர் எப்படிப்பட்டதென்னில்; அவ்வூர்ச் சோலைகளில் குரங்குக ளானவை முந்துற மாம்பழங்களைப்புசித்து அந்த ரஸம் தெகுட்டவே, வேறொரு ரஸத்தினால் போதுபோக்கவேணுமென்று வாழைப்பழங்களை நுகரத்தொடங்கு கின்றன; அப்போது அவற்றில் மதுவைப் பருகுவதற்காக ஏற்கனவே படிந் திருந்த வண்டினங்கள் அஞ்சிக்கிளம்பி ஓடுகின்றன. இதுவாயிற்று அவ்வூர்ச் சோலைகளின் நிலைமை.

"எருதடர்த்த" என்றவிடத்திற்கு, நப்பின்னைப்பிராட்டிக்காக ஏழெருது களைக்கொன்ற வரலாறு தவிர மற்றொரு வரலாறுங் கொள்ளலாம்; அதாவது— கம்ஸனால் ஏவப்பட்ட அசுரர்களில் அரிஷ்டனென்பவன் எருது வடிவங் கொண்டு பசுக்களையெல்லாம் முட்டி இடைச்சேரியைப் பயப்படுத்திக்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனது திருவயிற்றின்மேற் கண்வைத்துக் கொம்புகளை நீட்டிப் பாய்ந்துவர, கண்ணபிரான் அவனைக் கொம்புகளிற்பிடித்து அசையவொட்டா

மற்செய்து தன் காலினால் அவன் வயிற்றில் ஓரிடி இடித்து அவன் கழுத்தைப் பிடித்துக் கசக்கி அவனுடைய கொம்புகளில் ஒன்றைப்பறித்து அதனாலேயே அவனை யடித்துக்கொன்றனன் என்பதாம்.

தீங்கனி—தீம்—இனிமை. ... ... ... (௪)

கருமகளிலங்கையாட்டி பிலங்கோள் வாய்திறந்து * தன்மேல்
வருமவள் செவியும்மூக்கும் வாளினால் தடிந்தவெந்தை *
பெருமகள் பேதைமங்கை தன்னொடும் பிரிவிலாத *
திருமகள் மருவுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௫)

| | | | |
|---|---|---|---|
| கருமகள் | சண்டாள ஸ்த்ரீபோல் மிகவும் தண்ணியளாய் | | (எவ்விடத்திலுள்ளானெனில்,) |
| இலங்கையாட்டி | லங்காபுரிக்கு அதிகாரம் செலுத்துமவளாய் | பெரு மகள் | பெருமைதங்கிய ஸ்த்ரீயாயும் |
| பிலம் கொள் வாய் திறந்து தன்மேல் வருமவள் | குஹைபோன்ற வாயைத் திறந்துகொண்டு தன் மேல் வந்தவளான சூர்ப்பணகையினுடைய | பேதை | (அடியாருடைய குற்றங்களை) அறியாதவளாயுமிருக்கிற |
| செவியும் மூக்கும் | காதையும் மூக்கையும் | மங்கை | பூமிப்பிராட்டியும் |
| வாளினால் | வாட்படையினால் | திரு மகள் | பெரிய பிராட்டியும் |
| தடிந்த எந்தை | அறுத்தொழித்த ஸ்வாமி | தன்னொடும் பிரிவு இலாத | தன்னைவிட்டு ஒரு நொடிப் பொழுதும் பிரியாதவர்களாய் |
| | | மருவும் | பொருந்தியிருக்கப்பெற்ற |
| | | | நாங்கூர், திருமணிக்கூடத்தான்—. |

* * *—ஸ்ரீராமபிரான் ஒருவருஷகாலம் பஞ்சவடியில் எழுந்தருளியிருக்கும்போது ஹேமந்தகாலத்தில் சூர்ப்பணகை அழகிய வடிவமெடுத்து வந்து இராகவனைக்கண்டு காமவிகாரமடைந்து தன்னை மனைவியாகக் கொள்ளுமாறு விரும்ப, இராகவன் 'எனக்கு ஒரு மனைவி இருக்கிறாள்; என் தம்பியாகிய லக்ஷ்மணனை யடைந்தாயாகில் ஸுகமடையலாம்' என்று சொல்ல, அப்படியே அவள் லக்ஷ்மணனிடம் செல்ல, 'நான் ஒருவர்க்கு வேலைக்காரன், என்னை மணந்தால் நீயும் வேலைக்காரியாவாய்; ஆகையால் அவரையே மணந்துகொள்வது உனக்கு நலம்' என்று லக்ஷ்மணன் சொல்ல, இப்படி அங்குமிங்குமாய்த் திரிந்து இஷ்டத்தைப் பெறாமல் 'நம் இஷ்டத்தை இந்த ஸீதை நிறைவேறவொட்டாமல் செய்கிறாளாகையால் இவளைத் தின்றுவிடுவோம்' என்று அவ்வரக்கி ஸீதாதேவியிடம் ஓட, உடனே இலக்குமணன் இராமபிரானது ஆஜ்ஞையினால் அவளைத்தகைந்து காதையும் மூக்கையும் அறுத்து அங்கபங்கஞ் செய்திட்டார் என்ற வரலாறு அறியத்தக்கது. இப்படி இவளை அங்கபங்கஞ் செய்தது இளையபெருமாளது செய்கையாயினும் இதனை இராமபிரான் மேலேற்றி ஆழ்வார்கள் அநுஸந்திப்பர்கள். உலகில் ஒருகாரியம் செய்வித்தவனை அது செய்தவனாகவே சொல்லுவதுண்டு; அதுபோலக்கொள்க. அன்றியும்

"ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்றபடி இராமபிரானுக்கு லக்ஷ்மணன் வலக்கையெனப்படுதலால் அங்ஙனம் கையாகிய லக்ஷ்மணனுடைய செயலை அவயவியான இராமன் செய்ததாகச் சொல்லுதலும் தகுதியே. பலராமன் செய்தருளிய ப்ரலம்பாஸுர வதத்தைக் கண்ணபிரான் செய்தருளியதாக அநுஸந்திப்பதும் இதுபோன்றதேயாம்.

இவள் மிக்க நீசஜாதியிற் பிறந்தவளென்கைக்காகக் கருமகள் எனப்பட்டது. இலங்கையாட்டி—இலங்கையாளனான இராவணனுக்கு உடன்பிறந்தவள் என்க. "ராவணனுடன் பிறந்தாளாகையாலே லங்கையிலுள்ளாரடையக் கொண்டாடும்படி யிருக்கிறவள்" என்பது வியாக்கியான வாக்கியம்.

இப்படி சூர்ப்பணகையைத் தண்டித்த இராமபிரானே ஸ்ரீதேவி பூதேவிகளுடனே நாங்கூர்த் திருமணிக்கூடத்தில் நித்யவாஸம் பண்ணுகின்றானென்றாராயிற்று. .... ... ... .... (ரு)

கெண்டையும் குறளும்புள்ளும் கேழலுமரியும்மாவும் *
அண்டமும் சுடரும் அல்லாவாற்றலுமாய வெந்தை *
ஒண்டிறல் தென்னனோட வடவரசோட்டங் கண்ட *
திண்டிறலாளர் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (சு)

| | |
|---|---|
| கெண்டையும் | மத்ஸ்யமும் |
| குறளும் | வாமநனும் |
| புள்ளும் | ஹம்ஸபக்ஷியும் |
| கேழலும் | வராஹமும் |
| அரியும் | நரஸிம்ஹமும் |
| மாவும் | ஹயக்ரீவனும் (ஆகிய இவ்வவதாரங்களை யுடையனும்) |
| அண்டமும் | ப்ரஹ்மாண்டமும், |
| சுடரும் | ஸூர்ய சந்திரர்களும் |
| அல்லா ஆற்றலும் | மற்றுமுள்ள சிறந்த வஸ்துக்களும் |
| ஆய | தானேயாயிருக்கிற |
| எந்தை | எம்பெருமான் |
| | (எவ்விடத்திலுள்ளானெனில்;) |
| ஒண் திறல் | மிக்க பலத்தையுடையனான |
| தென்னன் | பாண்டியராஜன் |
| ஓட | தோற்று ஓடும்படியாகவும் |
| வட அரசு | பாண்டிய தேசத்துக்கு வடக்கிலுள்ள சோழ தேசத்துக்கு அரசனான சோழனை |
| ஓட்டம் கண்ட | தோற்று ஓடும்படியாகவும் பண்ணின |
| திண் திறலாளர் | மஹா பலசாலிகள் வாழ்கிற |
| | நாங்கூர், திருமணிக்கூடத்தான்—. |

* * *—மத்ஸ்யாவதாரம் வாமநாவதாரம் ஹம்ஸாவதாரம் வராஹாவதாரம் நரஸிம்ஹாவதாரம் ஹயக்ரீவாவதாரம் முதலிய பல திருவவதாரங்கள் செய்தருளினவனும், சந்திரன் ஸூர்யன் முதலிய ஸகல பதார்த்தங்களும் தனக்கு ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியாய் நிற்பவனுமான எம்பெருமான் நாங்கூர்த்திருமணிக்கூடத்திலுள்ளான். அத்திருநாங்கூர் எப்படிப்பட்டதென்னில்; பண்டு ஒருஸமயத்தில் தென்திசைத் தலைவனான பாண்டியராஜன் படையெடுத்து வந்து அவ்வூரை ஆக்ரமிப்பதாகப் புகுகையில் அவனை வெருட்டி ஓட்டிவிட்

டனர் அவ்வூரிலுள்ள அந்தணர்கள்; மற்றொரு ஸமயத்தில் சோழராஜனையும் அப்படியே தோற்கடித்து ஓட்டினராம்: இப்படிப்பட்ட வீரர்கள் வாழுமிடம் திருநாங்கூர். .... ... ... .... (௬)

குன்றமும் வானும்மண்ணும் குளிர்புனல் திங்களோடு *
நின்றவெஞ் சுடரும் அல்லாநிலைகளுமாய வெந்தை *
மன்றமும் வயலுங்காவும் மாடமும் மணங்கொண்டு * எங்கும்
தென்றல்வந் துலவுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௭)

| | |
|---|---|
| குன்றமும் | மலைகளும் |
| வானும் | ஆகாசமும் |
| மண்ணும் | பூமியும் |
| குளிர் புனல் | குளிர்ச்சியே இயற்கையான நீரும் |
| திங்களோடு | சந்திரனும் |
| நின்ற | நிலைநின்ற |
| வெம் சுடரும் | ஸூர்யனும் |
| அல்லா நிலைகளும் | மற்றுமுள்ள நக்ஷத்ராதி ஸ்திதியும் |
| ஆய | தானேயாயிருக்கப்பெற்ற |
| எந்தை | எம்பெருமான் |
| (எவ்விடத்திலுள்ளானெனில்;) | |
| மன்றமும் | பெரிய வீதிகளும் |
| வயலும் | கழனிகளும் |
| காவும் | தோட்டங்களும் |
| மாடமும் | மாட மாளிகைகளும் ஆகிய |
| எங்கும் | எல்லாவிடங்களிலும் |
| தென்றல் | தென்றல் காற்றானது |
| மணம் கொண்டு | பரிமளத்தை வீசிக் கொண்டு |
| வந்து உலவும் | ஸஞ்சரிக்கப்பெற்ற |
| நாங்கூர், திருமணிக்கூடத்தான்—. | |

* * *—சேதநர்க்கு போக்யபோகோபகரண போகஸ்தாநங்களைப் பண்ணிக்கொடுக்கக் கடவனவான மலைகளும், சேதநர்க்கு அவகாசம் கொடுக்கிற ஆகாசமும், போக்யங்களைத் தருகின்ற பூமியும், குளிர்ந்த ஜலமும், சந்திரனும் ஆதித்யனும், சேதநருடைய ஜீவனத்துக்குறுப்பான நன்மை தீமைகளைத் தெரிவியாநின்றுள்ள நக்ஷத்ரங்களும் ஆகிய இவையெல்லாமாய் நிற்கிற [ஸர்வாந்தர்யாமியான] எம்பெருமான் எங்கும் தென்றல்வீசி மணநாறுகின்ற திருநாங்கூரில் திருமணிக்கூடத்திலுள்ளான்.

பின்னடிகளை இரண்டு வகையாக யோஜிக்கலாம்: பெரிய வீதிகளென்ன கழனிகளென்ன தோப்புகளென்ன மாடமாளிகைகளென்ன இவ்விடங்களிலுண்டான வாஸனைகளை ஏந்தி வீசிக்கொண்டு தென்றல் கண்டவிடமெங்கும் வீசுகின்றது என்றும்; (பொதிய மலையில்நின்று மணத்துடனே புறப்பட்ட) தென்றல் காற்றானது மன்றங்களிலும் வயல்களிலும் காவுகளிலும் மாடங்களிலும் போந்து வீசுகின்றது என்றும். ... .... .... (௭)

சங்கையுந்துணிவும் பொய்யும் மெய்யுமித்தரணி யோம்பும் *
பொங்கிய முகிலும் அல்லாப்பொருள்களுமாய வெந்தை *
பங்கய முகுத்ததேறல் பருகிய வாளைபாய *
செங்கயலுகளும் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௮)

| | | | |
|---|---|---|---|
| சங்கையும் | ஸந்தேஹமும் | (எவ்விடத்திலுள்ளானெனில்) | |
| துணிவும் | நிச்சயமும் | பங்கயம் | தாமரைப்பூவானது |
| பொய்யும் | அஸத்யமும் | உகுத்த | வெளிப்படுத்தின |
| மெய்யும் | ஸத்யமும் | தேறல் | மகரந்தத்தை |
| இத் தாணி ஓம்பும் | இப்பூமண்டலத்தை ரக்ஷிக்கின்ற | பருகிய | பானம்பண்ணின |
| பொங்கிய முகிலும் | பரம்பின மேகங்களும் | வாளை | வாளைமீன்கள் |
| அல்லா பொருள் களும் | மற்றுமுள்ள வஸ்துக்களும் | பாய | குறுக்கும் நெடுக்கும பாய்ந்துவிளையாட |
| ஆய | தானேயாயிருக்கப்பெற்ற | செம் கயல் | சிவந்த கயல்மீன்கள் |
| எந்தை | எம்பெருமான் | உகளும் | (அவற்றுக்கு அஞ்சித்) துள்ளுமிடமான |
| | | நாங்கூர், திருமணிக்கூடத்தான். | |

* * *—சங்கையாவது—'இது இப்படியோ அப்படியோ?' என்று ஸந்தேஹப்படுதல். துணிவாவது–'இது இப்படிதான்' என்று நிச்சயித்தல். ஆக, ஸம்சயரூபமான ஞானத்திற்கும் நிச்சயரூபமான ஞானத்திற்கும் எம்பெருமானே நிர்வாஹகன். உலகத்திற்கு ஹிதமான மெய்யும் அஹிதமான பொய்யும் அவனே. (அதாவது—மெய்யர்க்கே மெய்யனாகும், பொய்யர்க்கே பொய்யனாகும்—என்கை.) கைம்மாறு கருதாமல் பூமியை ரக்ஷிக்கின்ற மேகங்களும் மற்றும் இடி மின் முதலியவைகளும் அவனிட்ட வழக்கு. இப்படி ஸர்வத்துக்கும் நியாமகனாயிருக்குமெம்பெருமான் நாங்கூர்த் திருமணிக்கூடத்தான்.

தாமரைப்பூவில் தேன்வெள்ளம் அதிகமாகி அது நீரிலே பெருக அதனைப் பானம் பண்ணிக் கொழுத்த வாளைமீன் களிப்பாலே பாய, செங்கயல் அதைக் கண்டு அஞ்சித்துள்ளி வேறிடம் பெய்ரப்பெற்ற நீர்நிலைகளை யுடையதாம் நாங்கூர். 'ஶங்கா' என்ற வடசொல் சங்கையெனத் திரிந்தது. ... (அ)

பாவமு மறமும்வீடும் இன்பமும் துன்பந்தானும் *
கோவமு மருளும் அல்லாக்குணங்களுமாய வெந்தை *
மூவரிலெங்கள்மூர்த்தி இவனென முனிவரோடு *
தேவர்வந் திறைஞ்சும் நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| பாவமும் | பாபமும் | அருளும் | அநுக்ரஹமும் |
| அறமும் | புண்யமும் | அல்லா குணங்களும் | மற்றுமுள்ள ஸத்வம்முதலிய குணங்களும் |
| வீடும் | மோக்ஷமும் | ஆய | தானேயாயிருக்கிற |
| இன்பமும் | ஸுகமும் | எந்தை | எம்பெருமான் |
| துன்பம் தானும் | துக்கமும் | (எவ்விடத்திலுள்ளானென்னில்) | |
| கோவமும் | கோபமும் | | |

| | |
|---|---|
| மூவரில் | ‘ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களாகிற மூன்று மூர்த்திகளுள் |
| எங்கள் மூர்த்தி | நாங்கள் ஆச்ரயிக்கத்தக்க மூர்த்தி |
| இவன் என | இந்த விஷ்ணுவே’ என்று தெளிந்து |
| முனிவரோடு தேவர் | மஹர்ஷிகளும் தேவதைகளும் |
| வந்து இறைஞ்சும் | வந்து வணங்குமிடமான |

நாங்கூர், திருமணிக்கூடத்தான்.

* * *—செய்யக்கூடாதென்று சாஸ்திரங்களில் மறுக்கப்பட்டுள்ள காரியங்களைச் செய்வதாகிற பாவமென்ன, செய்யவேண்டுமென்று விதிக்கப்பட்டுள்ள நற்காரியங்களைச் செய்தலாகிற புண்யமென்ன இவையிரண்டும் எம்பெருமானிட்ட வழக்கு. எல்லாவற்றுக்கும் மேற்பட்டதான மோக்ஷஸுகமும் மற்றுமுள்ள ஸாமாந்ய ஸுகங்களுமெல்லாம் அவனிட்ட வழக்கு. மனங்கலங்கியிருத்தலாகிற கோவமும், தெளிந்திருத்தலாகிற அருளும் மற்றும் ஸத்வரஜஸ் தமோ குணங்களும் அவனிட்ட வழக்கு. இப்படி ஸர்வநிர்வாஹகனான எம்பெருமான் நாங்கூர்த் திருமணிக்கூடத்திலுள்ளான்.

அரி, அயன், அரன் என மூன்று மூர்த்திகளிருந்தாலும் ஸாத்விகர்கட்கு ஆச்ரயிக்கவுரிய மூர்த்தி விஷ்ணுமூர்த்தியேயென்று தெளிந்து ஸநகாதி மஹர்ஷிகளும் ப்ரஹ்மாதி தேவர்களும் வந்து ஆச்ரயிக்கப் பெற்ற தலமிது. ... (௯)

திங்கள்தோய் மாடநாங்கூர்த் திருமணிக்கூடத்தானை *
மங்கையர்தலைவன் வண்தார்க் கலியன்வாயொலிகள்வல்லார் *
பொங்குநீருலகமாண்டு பொன்னுலகாண்டு * பின்னும்
வெங்கதிர்ப் பரிதிவட்டத்தூடுபோய் விளங்குவாரே. (௧௦)

| | |
|---|---|
| திங்கள் தோய் | சந்திரமண்டலத்திலே போய்ப்படிந்திருக்கிற |
| மாடம் | மாடங்களையுடைய |
| நாங்கூர் | திருநாங்கூரிலுள்ள |
| திருமணிக் கூடத்தானை | திருமணிக்கூடமென்னுந் திருப்பதியி லெழுந்தருளியுள்ள எம்பெருமான்விஷயமாக, |
| மங்கையர் தலைவன் | திருமங்கையிலுள்ளார்க்குத் தலைவரும் |
| வண் தார் | அழகியமாலையை யணிந்தவருமான |
| கலியன் | ஆழ்வார் |
| வாய் | திருவாய்மலர்ந்தருளிய |
| ஒலிகள் | இப்பாசுரங்களை |
| வல்லார் | ஓதவல்லவர்கள், |
| பொங்கு நீர் உலகம் | கடல் சூழ்ந்த இவ்வுலகை |
| ஆண்டு | அரசாட்சிபுரிந்து (அதன் பிறகு) |
| பொன் உலகு ஆண்டு | ஸ்வர்க்கலோகத்தை அநுபவித்து |
| பின்னும் | அதற்குமேலும் |
| வெம் கதிர் பரிதி வட்டத்தூடு போய் | வெவ்விய கிரணங்களையுடையனான ஸூர்யனுடைய மண்டலத்தின் வழியேசென்று |
| விளங்குவார் | (பரமபதத்தில்) வாழப்பெறுவர். |

* * *—சந்திர மண்டலத்தளவும் ஓங்கியிருக்கின்ற மாடமாளிகைகளினால் அழகுபெற்றுள்ள திருநாங்கூரில் ஒரு பகுதியான திருமணிக்கூடத்தில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமான் விஷயமாகத் திருமங்கையாழ்வார் அருளிச்செய்த இத்திருமொழியைக் கற்குமவர்கள் தங்கள்தங்கள் விருப்பத்தின்படி இவ்வுலக வின்பங்களையும் ஸ்வர்க்கலோக ஸுகங்களையும் பரமபதாநுபவங்களையும் லபிக்கப்பெறுவர் என்று பலன்சொல்லித் தலைக்கட்டினாராயிற்று.

பரமபதத்திற்குச் செல்லவேண்டியவர்கள் ஸூர்யமண்டலத்தைப் பிளந்துகொண்டு அவ்வழியே செல்லக்கடவர்களென்று சாஸ்த்ரங்கள் கூறுதல்பற்றி “வெங்கதிர்ப் பரிதிவட்டத் தூடுபோய்” என்றார்.

வண்தார்க்கலியன்=1. ‘முள்ளிச்செழு மலரோ தாரான்’ என்கிறபடியே முள்ளிமாலையை அணிந்துள்ளவர் என்றாவது, ஸ்ரீவைஷ்ணவலக்ஷணத்துக்குத் தகுதியாகத் திருமணித்தாவடங்களை யணிந்துள்ளவர் என்றாவது பொருள்கொள்ளலாம். ... ... ... ... (கo)

அடிவரவு :—தூம்பு கவ்வை மாத்தொழில் தாங்கரும் கருமகள் கெண்டை குன்றம் சங்கை பாவம் திங்கள் தாவளந்து.

ஐந்தாந்திருமொழி உரை முற்றுப்பெற்றது.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—ஆறாந்திருமொழி,

# தாவளந்துலகமுற்றும்.



### திருநாங்கூர்க் காவளம்பாடித் திருப்பதி மங்களாசாஸனத் திருப்பதிகம்.

தாவளந்துலகமுற்றும் தடமலர்ப் பொய்கைபுக்கு *
நாவளம் நவின்றங்கேத்த நாகத்தின் நடுக்கந்தீர்த்தாய்! *
மாவளம் பெருகிமன்னு மறையவர் வாழுநாங்கை *
காவளம்பாடிமேய கண்ணனே! களைகணீயே. (க)

| | | | |
|---|---|---|---|
| (தாமரைப்பூ ஸம்பாதிப்பதற்காக) | | தடம் | பெரிதான |
| உலகம் முற்றும் | உலகமடங்கலும் | மலர் | பூக்களையுடைத்தான |
| | | பொய்கை | ஒருதடாகத்தில் |
| தாவளந்து | தட்டித்திரிந்து | புக்கு | இறங்கி |

1. சிறிய திருமடல் தனியன்.

| | | | |
|---|---|---|---|
| அங்கு | அங்கு (முதலையினுல் கவ்வப்பட்டு) | மன்னு | பொருந்தியிருக்கப்பெற்ற |
| நா வளம் | நாவுக்கு அலங்காரமான திருநாமங்களே | மறையவர் | வைதிகர்கள் |
| நவின்று | சொல்லி | வாழும் | வாழ்ந்திருக்குமிடமான |
| ஏத்த | துதிக்க | நாங்கை | திருநாங்கூரில் |
| நாகத்தின் | கஜேந்திராழ்வானுடைய | காவளம்பாடி மேய | திருக்காவளம்பாடியென்னுந்திருப்பதியில் நித்யவாஸம் பண்ணுகிற |
| நடுக்கம் | அச்சத்தை | | |
| தீர்த்தாய் | போக்கினவனே !, | கண்ணனே | கண்ணபிரானே ! |
| மா வளம் | மிக்க செல்வமானது | நீயே களைகண் | நீயே ரக்ஷகனாகவேணும். |
| பெருகி | அதிகமாகி | | |

* * *—நாள்தவறாமல் எம்பெருமானுக்குத் தாமரைப்பூப்பறித்து ஸமர்ப்பித்தே தீருவதென்று திண்ணிதான விரதங்கொண்ட ஸ்ரீகஜேந்திராழ்வான் ஒருநாள் எங்கும் தாமரைப்பூக் கிடையாமையாலே நிலவுலகம் முழுதும் தட்டித் திரிந்து எங்கேயாவது கண்டுபிடித்தே தீரவேண்டுமென்று பிடிவாதமாய் அலைந்தமையை "உலகமுற்றும் தாவளந்து" என்பதனுல் வெளியிட்டனர். அன்றியே, இதனுல் எம்பெருமான் உலகளந்தபடியைப் பேசுகின்றார் என்றும் உரைக்கலாம். உலகமுற்றும் தாவளந்து—திரிவிக்கிரமனாய் உலகங்களையெல்லாம் தாவியளந்தவனையும், தடமலர்......தீர்த்தாய்—கஜேந்திராழ்வானுடைய துன்பத்தைத் தீர்த்தவனையுமுள்ள பெருமானே ! என்று உரைக்கலாம். நாராயணாதி திருநாமங்களே நாவுக்கு அலங்காரமாதலால் திருநாமத்தை 'நாவளம்' என்ற சொல்லால் குறிப்பிட்டனர். நாகத்தின் நடுக்கம் தீர்த்தாய்—'முதலையின் வாயில் அகப்பட்டுக்கொண்டு வருந்துகின்றோமே' என்று நடுங்கிற்றிலன் கஜேந்திரன்; கையில் பறித்தபூவைச் செவ்வியழிவதற்குமுன்னே எம்பெருமான் திருவடிகளில் ஸமர்ப்பிக்கப்பெறுவோமோ பெறமாட்டோமோ வென்று நடுங்கிக்கிடந்தான்; எம்பெருமான் எழுந்தருளி அப்பூவைத் தனது திருவடிகளிலே இடுவித்துக்கொண்டதனுல் அந்த நடுக்கத்தைத் தீர்த்தானென்க.

ஆக, கஜேந்திராழ்வானைக் காத்தருளினதுபோல எம்போலியரையும் பஞ்சேந்திரியங்களாகிற ஐந்து முதலைகளின் வாயில் நின்று விடுவித்துக் காத்தருள்வதற்காகத் திருநாங்கூரில் ஒரு பகுதியான திருக்காவளம்பாடியென்னுந் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் பிரானே! எமக்கு நீயே ரக்ஷகனாகவேணும்; நீ தவிர வேறொருவனையும் யாம் ரக்ஷகனாகவுடையோமல்லோம் என்றாராயிற்று.

மண்ணிடந்தேனமாகி மாவலி வலிதொலைப்பான் *
விண்ணவர் வேண்டச்சென்று வேள்வியில் குறையிரந்தாய் !*
துண்ணென மாற்றார்தம்மைத் தொலைத்தவர் நாங்கைமேய *
கண்ணனே காவளந்தண்பாடியாய்! களைகணீயே. (உ)

| | |
|---|---|
| ஏனம் ஆகி | ஆதிவராஹமாகி |
| மண் | (அண்டபித்தியில் அழுந்திக்கிடந்த) பூமியை |
| இடந்து | பிரித்துக் கொணர்ந்தவனும் |
| மாவலி | மஹாபலியினுடைய |
| வலி | மிடுக்கை |
| தொலைப்பான் | போக்குமாறு |
| விண்ணவர் வேண்ட | தேவர்கள் யாசிக்க (அதற்கிணங்கி) |
| வேள்வியில் சென்று | (அந்த மாவலியின்) யாகபூமியில் எழுந்தருளி |
| குறை இரந்தாய் | தனக்கு வேண்டியதை யாசித்துப்பெற்றவனே !, |
| மாற்றார் தம்மை | பகைவர்களை |
| நுண்ணென | சீக்கிரமாக |
| தொலைத்தவர் | வென்று ஒழித்தவர்கள் வாழ்கிற |
| நாங்கை | திருநாங்கூரில் |
| மேய | பொருந்தியிருக்கிற |

காவளந்தண்பாடியாய் ! கண்ணனே !
நீயே களைகண்—.

* * *—இப்பொழுது நடக்கிற ச்வேதவராஹகல்பத்துக்கு முந்தின பாத்ம கல்பத்தைப்பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஏகார்ணவமான பிரளய ஜலத்தில் முழுகியிருந்த பூமியை மேலே யெடுக்கநினைத்து மஹாவராஹரூபியாகிக் கோட்டு நுனியாற் பூமியை யெடுத்துவந்தவனே!, மஹாபலியினால் நெருக்குண்ட தேவர்கள் வந்து சரணமடைந்து வேண்டிக்கொண்டதற்கிணங்கி, எப்போதும் அவாப்த ஸமஸ்தகாமனா யிருக்கச்செய்தேயும் குறையுள்ளவன்போன்று குறட்பிரமசாரியாகி மாவலியின் யாகபூமியிற்சென்று மூவடி நிலம் வேண்டிக்கொண்டவனே !, ஊரை ஆக்ரமிப்பதற்காகப் படையெடுத்துவந்த மாற்றலரைத் தொலைத்தொழித்த அந்தணர் வாழும் திருநாங்கூரில் திருக்காவளம்பாடியில் எழுந்தருளியிருப்பவனே ! நீயே ரக்ஷகனாகவேணும். ... ... (உ)

உருத்தெழு வாலிமார்பில் ஒருகணை யுருவவோட்டி *
கருத்துடைத் தம்பிக்கு இன்பக்கதிர்முடி யரசளித்தாய் ! *
பருத்தெழு பலவும்மாவும் பழம்விழுந் தொழுகுநாங்கை *
கருத்தனே ! காவளந்தண்பாடியாய் ! களைகணீயே. (ங)

| | |
|---|---|
| உருத்து | கோபங்கொண்டு |
| எழு | கிளம்பிவந்த |
| வாலி | வாலியினுடைய |
| மார்பில் | மார்பிலே |
| உருவ | தைக்கும்படி |
| ஒரு கணை | ஒரு பாணத்தை |
| ஓட்டி | பிரயோகித்து (அவனைக் கொன்று) |
| கருத்து உடை தம்பிக்கு | தன் திருவுள்ளத்திற்குப் பொருந்தினவனான ஸுக்ரீவனுக்கு |
| இன்பம் | ஆனந்தகரமான |
| கதிர் முடி | ஒளிபொருந்திய கிரீடத்தையும் |
| அரசு | ராஜ்யத்தையும் |
| அளித்தாய் | கிருபைபண்ணினவனே !, |
| பருத்து எழு | பருமனாய்க்கொண்டு முளைக்கின்ற |
| பலவும் | பலாமரங்களினுடையவும் |
| மாவும் | மாமரங்களினுடையவும் |
| பழம் | பழங்களானவை |

| | | | |
|---|---|---|---|
| விழுந்து | கீழேவிழுந்து | | காவளந்தண்பாடியாய் !—; |
| ஒழுகும் | தேன் வெள்ளமிடா நிற்கப் பெற்ற | கருத்தனே | எல்லாவற்றுக்கும் கர்த்தாவாயிருப்பவனே ! |
| நாங்கை | திருநாங்கூரிலுள்ள | | நீயே களைகண்—. |

* * *—நீ அடிபணிந்தவர்களை விட்டுக்கொடாமல் காத்தருள்வதையே விரதமாகக் கொண்டவனாதலால் சரணாகதனான ஸுக்ரீவமஹாராஜனைக் காத்தருளவேண்டி அவனது பகைவனான வாலியைக்கொன்று அவனுக்கு முடிசூட்டினதுபோல எங்களுடைய கைங்கரிய விரோதிகளையும் தொலைத்து எமக்குக் கைங்கரிய பட்டாபிஷேகம் செய்வித்தற்பொருட்டுத் திருக்காவளம்பாடியில் நித்யஸந்நிதி பண்ணியிராநின்றாய்; இப்படிப்பட்ட நீயே எமக்கு ரக்ஷகனாக வேணுமத்தனையன்றி மற்று எவரையும் எதிர்பார்ப்போமல்லோம் என்றாராயிற்று.

உருத்து=‘உரு’ என்று கோவத்திற்குப் பெயர்; அச்சொல்லடியாப் பிறந்த வினையெச்சம். ‘சற்று முன்னே சண்டைக்குவந்து தோற்றோடிப்போன பையல் மறுபடியும் வெட்கமின்றி வந்தானே!’ என்று கோபமூண்டு கிளம்பி வந்த வாலி என்றபடி. ஒருகணை உருவவோட்டி=வாலியின் மார்பிலே எத்தனையோ வீரர்கள் அம்புகளைப் பிரயோகித்ததுண்டு; அவையெல்லாம் வாய் மடிந்துபோயின வத்தனையொழிய ஒன்றேனுங் காரியஞ்செய்யவில்லை; இராமபிரானுடைய கணையே காரியஞ்செய்ததுபற்றி ‘ஒருகணை’ எனப்பட்டது.

கருத்துடைத்தம்பிக்கு=‘வாலி ஆண்ட ராஜ்யத்தை நாம் ஆளவேணும்’ என்ற கருத்துடைய ஸுக்ரீவனுக்கு—என்றாவது, தன்னோடு ஸ்நேஹங்கொண்டதனால் ஒத்த கருத்தையுடையனான ஸுக்ரீவனுக்கு என்றாவது உரைக்கலாம்.

மிகப்பெரிய பலாப்பழங்களும் மாம்பழங்களும் கனிந்து விழுந்து தேன் வெள்ளமிடப்பெற்ற திருநாங்கூரிலுள்ளது காவளம்பாடி.

‘கர்த்தா’ என்னும் வடசொல் கருத்தன் எனத்திரிந்து விளியுருபேற்றது.

முனைமுகத் தரக்கன்மாள முடிகள்பத் தறுத்துவீழ்த்து * ஆங்
கனையவற் கிளையவற்கே அரசளித் தருளினானே !
சுனைகளில் கயல்கள்பாயச் சுரும்புதேன் நுகருநாங்கை *
கனைகழல் காவளந்தண்பாடியாய்! களைகணீயே. (௬)

| | | | |
|---|---|---|---|
| முனை முகத்து | யுத்தகளத்திலே | ஆங்கு | அந்த லங்கையிலே |
| அரக்கன் | இராவணன் | அனையவற்கு இளையவற்கே | அப்படிப்பட்ட ராவணனுடைய தம்பியான விபீஷணனுக்கு |
| மாள | முடியும்படியாக | | |
| பத்து முடிகள் | (அவனது) பத்துத்தலைகளையும் | அரசு | ராஜ்யத்தை |
| அறுத்து வீழ்த்து | அறுத்துத்தள்ளி | அளித் தருளினானே | தந்தருளினவனே !, |

| | |
|---|---|
| சுனைகளில் | நீர்நிலைகளில் |
| கயல்கள் | கயல்மீன்கள் |
| பாய | அஞ்சித்துள்ளி யோடும்படியாக |
| சுரும்பு | வண்டுகளானவை |
| தேன் நுகரும் | (ஆரவாரத்துடனே) தேனைப்பருகுமிடமான |
| நாங்கை | திருநாங்கூரில் |
| கனை கழல் | ஒலிக்கின்ற வீரத்தண்டையை யுடையனாய்க்கொண்டு |

காவளந்தண்பாடியாய்!—;
நீயே களைகண்—.

* * *—போர்க்களத்திலே இராவணனைத் தலையறுத்துக்கொன்று அவனது தம்பியான விபீஷணாழ்வானுக்கு முடிசூட்டியருளின வரலாற்றினால் துஷ்டர்களையொழித்து சிஷ்டர்களைப் பரிபாலனம் செய்யும் விரதத்தை வெளியிடுவித்து அப்படியே இன்றைக்கும் துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனத்திற்காகத் திருக்காவளம்பாடியில் எழுந்தருளியிருக்கும் பிரானே! உன்னையொழிய வேறொரு ரக்ஷகனையுடையோமல்லோம் என்றதாயிற்று.

[சுனைகளில் இத்யாதி.] வண்டுகள் பூக்களிலே படிந்து மதுபானம் பண்ணும்போது பெரிய கோலாஹலமாயிருக்கும்; அது தண்ணீரிலுள்ள மீன்களின் காதுகளில்படவே அவை தம்மேலே வண்டுகள் விழுகின்றனவாக நினைத்து அஞ்சிப் பாய்கின்றனவாம். .... ... ... (௪)

படவர வுச்சிதன்மேல் பாய்ந்துபன் னடங்கள்செய்து *
மடவரல் மங்கைதன்னை மார்வகத் திருத்தினானே !*
தடவரை தங்குமாடத் தகுபுகழ் நாங்கைமேய *
கடவுளே! காவளந்தண்பாடியாய் ! களைகணீயே. (௫)

| | |
|---|---|
| படம் | (விரிக்கப்பட்ட) படங்களையுடையனான |
| அரவு | காளியநாகத்தினுடைய |
| உச்சிதன் மேல் | முடிமீது |
| பாய்ந்து | குதித்து |
| பல் நடங்கள் செய்து | அனேகவிதங்களான நர்த்தனங்களைச் செய்தவனாயும் |
| மடவரல் மங்கை தன்னை | மடமைக் குணம்வாய்ந்த பெரியபிராட்டியாரை |
| மார்வகத்து | திருமார்பிலே |
| இருத்தினானே | நித்யமாக வைத்துக் கொண்டவனாயு மிருக்கிற பெருமானே !, |
| தட வரை | பெரிய மலைகள் போன்ற |
| மாடம் | மாளிகைகள் |
| தங்கு | பொருந்தியதும் |
| தகு புகழ் | தகுதியான புகழை யுடையதுமான |
| நாங்கை | திருநாங்கூரில் |
| மேய | மேவியிருக்கின்ற |

காவளந்தண்பாடியாய் !—;

| | |
|---|---|
| கடவுளே | ஸர்வாதிகனே ! |

நீயே களைகண்—.

* * *—கண்ணபிரானே! ஒருநாள் நீ கன்றுகளை ஓட்டிக்கொண்டு ஒருவரும் ஸஞ்சரியாதவழியே போகத்தொடங்குகையில் மற்ற இடைப்பிள்ளைகள் அழைத்து 'க்ருஷ்ணா! அவ்வழி நோக்கவேண்டா; அவ்வழியிற் சென்றால்

யமுநாநதியில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடுமுழுவதையும் தன் விஷாக்நியினுற் கொதிப்படைந்த நீருள்ளதாய்ப் பானத்துக்கு அநர்ஹமாம்படி செய்த காளியனென்னும் கொடிய ஐந்தலைநாகம் குடும்பத்தோடு வாஸஞ்செய்து கொண்டு அணுகினவர்களனைவரையும் பிணமாக்கிவிடுதலால் நாங்கள் அஞ்சுகின்றோம்' என்ன, அதைக்கேட்ட நீ உடனே அக்காளிய நாகத்தைத் தண்டிக்க வேண்டுமென்ற திருவுள்ளங்கொண்டு அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளவொரு கடம்பமரத்தின் மேலேறி அம்மடுவிற் குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின்மேல் ஏறித்துவைத்து நர்த்தனஞ்செய்து நசுக்கி வலியடக்கினுய்; அக்காளியன்போன்ற கொடியவர்களை இன்றைக்கும் தண்டிக்கவேண்டித் திருக்காவளம்பாடியில் திகழ்கின்றுய்; எங்களுக்குப் புருஷகாரபூதையான பிராட்டியையும் அநவரதம் திருமார்பிலேயே அமையவைத்துக் கொண்டிராநின்றுய்; இப்படிப்பட்ட நீயே எமக்கு ரக்ஷகனுக வேணுமத்தனை என்றாராயிற்று. (ரு)

மல்லரை யட்டுமாளக் கஞ்சனை மலைந்துகொன்று *
பல்லரசவிந்துவீழப் பாரதப் போர்முடித்தாய்! *
நல்லரண் காவினீழல் நறைகமழ் நாங்கைமேய *
கல்லரண் காவளந்தண்பாடியாய்! களைகணீயே. (௬)

| | | | |
|---|---|---|---|
| மல்லரை | மல்லர்களை | நல் அரண் | நல்ல அரணுகப் போரும் படியான |
| மாள அட்டு | மாளும்படி பொசித்து | காவின் | சோலைகளினுடைய |
| கஞ்சனை | கம்ஸனை | நீழல் | நிழலிலே |
| மலைந்து | எதிரிட்டுச் சென்று | நறை கமழ் | பரிமளம் வீசப்பெற்ற |
| கொன்று | கொன்றொழித்து, | நாங்கை | திருநாங்கூரில் |
| பல் அரசு | பல்லாயிரம் ராஜாக்கள் | மேய | பொருந்தி வாழ்கிற |
| அவிந்து வீழ | நாசமடையும்படி | கல் அரண் | கல்மதிளை யுடைத்தான |
| பாரதம் போர் | பாரதயுத்தத்தை | | காவளந்தண்பாடியாய் !, |
| முடித்தாய் | நிறைவேற்றினவனே !, | | நீயே களைகண்—. |

* * *—கண்ணபிரானே! கபடமான எண்ணத்துடன் கம்ஸன் உன்னையழைத்தபோது நீ அவனது ஸபையிற் செல்லுகையில் எதிர்த்துப்பொருது கொல்லும்படி அவனுல் ஏவப்பட்டிருந்த சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர் வந்து எதிர்த்து உக்கிரமாகப் பெரும்போர் செய்ய அவர்களையும் மற்போரினுலேயே கொன்று பிறகு வேகமாக எழும்பிக் கஞ்சனது மஞ்சத்தின்மேலேறி அவனது கிரீடம் கழன்று கீழேவிழும்படி அவனைத் தலைமயிர்பிடித்துத் தரையில்தள்ளி அவன்மேல் நீ விழுந்து கொன்றிட்டாய்; 1. "மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும்

1. பெரியாழ்வார் திருமொழி 2—1—2.

பட்டழிய" என்கிறபடியே பூமிக்குச் சுமையாயிருந்த அரசர்கள் அவிந்து ஒழியும்படி பாரதயுத்தத்தை நடத்தித் தலைக்கட்டினாய்; இன்னமும் மண்ணின் பாரம் நீக்குதற்காகக்காவளம் பாடியிலே வந்து நித்யஸந்நிதி பண்ணியிராநின்றாய்; இப்படிப்பட்ட நீ தவிர எமக்கு வேறுயாரும் ரக்ஷகராவாரில்லை என்றாராயிற்று.

மூத்தவற் கரசுவேண்டி முன்பு தூதெழுந்தருளி *
மாத்தமர் பாகன்வீழ மதகரி மருப்பொசித்தாய் ! *
பூத்தமர் சோலையோங்கிப் புனல்பரந் தொழுகுநாங்கை *
காத்தனே! காவளந்தண்பாடியாய்! களைகணீயே. (எ)

| | |
|---|---|
| முன்பு | முன்பொருகால் |
| மூத்தவற்கு | பாண்டவர்களில் தலைவனான தருமபுத்திரனுக்கு |
| அரசு வேண்டி | ராஜ்யமளிக்க விரும்பி |
| தூது எழுந்தருளி | தூது சென்றவனாயும் |
| மாத்து | மத்தகத்தின் மீது |
| அமர் | பொருந்தியிருந்த |
| பாகன் | பாகனானவன் |
| வீழ | விழுந்து முடியும்படி |
| மத கரி | (குவலயாபீட மென்னும்) மதயானையினுடைய |
| மருப்பு | தந்தங்களை |
| ஒசித்தாய் | முறித்(து அந்த யானையை ஒழித்)தவனே! |

| | |
|---|---|
| பூத்து | புஷ்பித்து |
| அமர் | (வரிசையாகப்) பொருந்தியிருக்கிற |
| சோலை | சோலைகளானவை |
| ஓங்கி | உயர்ந்து வளர்ந்திருக்கப் பெற்றதும் |
| புனல் | ஜலமானது |
| பரந்து | (அச் சோலைகளைச் சுற்றி) வியாபித்து |
| ஒழுகும் | பாயா நிற்கப்பெற்றதுமான |
| | நாங்கை, காவளந்தண்பாடியாய்—; |
| காத்தனே | ரக்ஷகனே!, |
| | நீயே களைகண்—. |

* * *—துரியோதனன் தான் புதிதாய் ஒரு மண்டபங்கட்டி அதைக் காண்பதற்கென்று ஒரு வியாஜம் வைத்துப் பாண்டவர்களைத் தனது நகரமாகிய ஹஸ்திநாபுரிக்கு வரவழைத்துத் தந்திரமாகச் சகுனியைக்கொண்டு சூதாடுவிக்க அச்சூதில் தருமபுத்திரன் ராஜ்யத்தையும் தம்பியரையும் மனைவியையும் தன்னையும் தோற்றுப் பெரிய ஏழையாய்விட்டதனால் அவனுக்கு மீண்டும் ராஜ்யத்தைப் பெறுவிக்கவேண்டித் துரியோதனன் பக்கல் தூதுசென்றாய்; கம்ஸனால் கபடமாக அழைக்கப்பட்டு அரண்மனையினுள் புகும்போது உன்னைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்டிருந்த மதயானை சீறிவர, அதனையும் அதன் பாகனையும் உயிர்தொலைத்திட்டாய். இப்படி ஆச்ரிதர்கட்குப்பரிந்து காரியஞ்செய்யுங் குணமும் விரோதிகளை வதைசெய்யும் வீரமும் விளங்கக் காவளம்பாடியில் ஸந்நிதிபண்ணியிராநின்றாய்; இப்படிப்பட்ட நீயே ரக்ஷகனாக வேணும்.

மாத்தமர்பாகன்='மஸ்தகம்' என்னும் வடசொல் 'மத்தகம்' எனத் திரிந்து அது 'மாத்து' எனச்சிதைந்தது. மதகரி—வடசொல் தொடர். (எ)

ஏவிளங் கன்னிக்காகி இமையவர் கோனைச்செற்று *
காவளம் கடிதிறுத்துக் கற்பகம் கொண்டுபோந்தாய் ! *
பூவளம் பொழில்கள்சூழ்ந்த புரந்தரன் செய்தநாங்கை *
காவளம்பாடிமேய கண்ணனே ! களைகணீயே. (அ)

| | |
|---|---|
| இள கன்னிக்கு ஆகி | இளம்பெண்ணாகிய ஸத்யபாமைப் பிராட்டிக்காக |
| ஏவு | யுத்தத்திலே |
| இமையவர் கோனை | தேவேந்திரனை |
| செற்று | பங்கப்படுத்தி |
| கடிது | சீக்கிரமாக |
| கா வளம் | நந்தவனத்தின் அழகை |
| இறுத்து | அழித்து |
| கற்பகம் | கல்பவ்ருக்ஷத்தை |
| கொண்டு போந்தாய் | (த்வாரகையில்) கொண்டு வந்து நட்டவனே !, |
| பூ வளம் | புஷ்பங்களின் வளம்பொருந்திய |
| பொழில்கள் சூழ்ந்த | சோலைகளாலே சூழப்பட்டதாய் |
| புரந்தரன் செய்த | இந்திரனால் ஏற்படுத்தப்பட்டதான |
| நாங்கை | திருநாங்கூரில் |

காவளம்பாடி மேய கண்ணனே !
நீயே களைகண்—.

* * *—கண்ணபிரானே !, தேவர்களைக் குடியிருக்கவொட்டாமல் அலைக் கழித்த நரகாசுரனைத் தேவேந்திரனது வேண்டுகோளின்படி ஸத்யபாமைப் பிராட்டியோடு சென்று கொன்று, அவ்வஸுரன் வலியக் கவர்ந்து சென்றிருந்த அத்தேவேந்திரனது தாயான அதிதி தேவியின் காதணியைக் கொண்டுவந்து கொடுப்பதற்காக அந்த ஸத்யபாமையுடனே ஸ்வர்க்கலோகத்துக்குப் போனாய் ; அங்கு உங்களை வரவேற்பதற்காகத் தேவேந்திரன் தனது மனைவியான இந்திராணியுடனே வந்தான் ; அப்போது ஸத்யபாமையானவள் அவ்விந்திராணி தன் முடியில் இனிய மணமுள்ள பாரிஜாதபுஷ்பம் சூடியிருந்ததைக் கண்டு அத்தகையமலர் தனக்கு வேண்டுமென விரும்பினாள். தங்களுக்குக் குடியிருப்பை யுண்டாக்கின உங்கள் விஷயத்தில் குறிப்பறிந்து நடப்பதே தகுதியாயிருக்கவும் அவ்வாறு செய்யாமற் போனாலும் வாய்திறந்து கேட்டபின்பாவது அம்மலரைக் கொடுக்கலாமே ; அதுவுஞ் செய்யாமல், அப்போது ஸத்யபாமைக்கு உதவுதற்கு ஏற்ற பாக்கியமற்றவளாதலாலும், அம்மலர்க்கு உரிய விருக்ஷத்தையே இழக்க வேண்டிய காலம் அணுகிவிட்டதனாலும் ஸத்யபாமை கேட்டதற்கு இந்திராணி 'இது தேவர்கட்குத் தகுமேயல்லாமல் மானிடப்பெண்ணாகிய உனக்குத் தகாது' என்றனள் ; அதுகேட்ட அப்பிராட்டி தனது விருப்பத்தை உன்னிடத்தில் தெரிவிக்க, நீ அப்போது கருடனைக்கொண்டு அந்தப் பாரிஜாத விருக்ஷத்தை வேரோடு பிடுங்கி த்வாரகையில் சேர்ப்பித்து ஸத்யபாமையின் வீட்டில் நடுவித்தாய். இப்படியே நாளைக்கும் அன்பர்க்குக் காரியஞ் செய்தற்காகவே காவளம்பாடியில் வந்து பொருந்தியிராநின்றாய் ; நீயே எமக்கு ரக்ஷகனாகக் கடவை என்றாராயிற்று.

ஏவிளங்கன்னிக்காகி—ஏவு—'இந்தப் பாரிஜாத விருக்ஷத்தை என் வீட்டு

முற்றத்தில் கொண்டு நட்டுவிடு' என்று ஏவின, இளங்கன்னிக்காகி—என்று முரைக்கலாம். அம்மரத்தைக் கருடனைக்கொண்டு போருமளவில் இந்திரன் அஃதறிந்து வஜ்ராயுதத்தைத் தீட்டிக்கொண்டு போர்புரியவந்து பங்கப்பட்டுப் போயினன் என்பதும் இங்கு அறியத்தக்கது. அதுதோன்ற "இமையவர் கோனைச் செற்று" எனப்பட்டது.

புரந்தரன் செய்த நாங்கை=ஸ்வர்க்கலோகத்திற்கு உண்டான ஏற்றம் பூலோகத்திற்கு முண்டாகவேணும் என்று கருதின தேவேந்திரன் ஸ்வர்க்க லோகத்துக் கட்டளையாகவே திருநாங்கூரை அமைத்தனன் என்று ஒரு இதிஹாஸ முண்டென்பர்.

புரந்தரன்—வடசொல். .... .... ... .... ... (அ)

சந்தமாய்ச் சமயமாகிச் சமயவைம்பூதமாகி *
அந்தமா யாதியாகி அருமறை யவையுமானாய்! *
மந்தமார் பொழில்கடோறும் மடமயிலாலு நாங்கை *
கந்தமார் காவளந்தண்பாடியாய்! களைகணீயே. (கூ)

| | |
|---|---|
| சந்தம் ஆய் | சந்தஸ்ஸுக்கு நியாமகனாய் |
| சமயம் ஆகி | அவற்றின் வ்யவஸ்தைகளுக்கும் நியாமகனாய் |
| சமயம் ஐ பூதம் ஆகி | வ்யவஸ்தையோடு கூடின பஞ்ச பூதங்களுக்கும் நியாமகனாய் |
| அந்தம் ஆய் | உலக முடிவுக்குக் காரணபூதனாய் |
| ஆதி ஆகி | உலகஸ்ருஷ்டிக்கும் காரணபூதனாய் |
| அரு மறை அவையும் ஆனாய் | அருமையான வேதங்களுக்கும் நிர்வாஹகனாயிருக்கும் பெருமானே! |
| மந்தம் ஆர் | பாரிஜாதமரங்கள் பொருந்திய |
| பொழில்கள் தோறும் | சோலைகளெங்கும் |
| மடம் மயில் | அழகிய மயில்களானவை |
| ஆலும் | கூத்தாடாநிற்குமிடமான |
| நாங்கை | திருநாங்கூரில் |
| கந்தம் ஆர் | பரிமளம் நிறைந்த |
| காவளந்தண்பாடியாய்!—; நீயே களைகண்—. | |

* * *—காயத்ரீ, த்ரிஷ்டுப், ஜகதீ, அநுஷ்டுப், பங்க்தி என்றிப்படி சொல்லப்படுகிற சந்தஸ்ஸுக்களெல்லாம் நீயேயாகின்றாய்; 'இத்தனை அக்ஷரங்கள் கூடினால் இன்ன சந்தஸ், இத்தனை அக்ஷரங்கள் கூடினால் இன்ன சந்தஸ்' என்றிப்படி வ்யவஸ்தைகள் பண்ணினவனும் நீயே; ஸ்வபாவநியமத்தோடு கூடின பஞ்சபூதங்களுக்கு நியாமகனும் நீயே; காரியப்பொருள்களெல்லாம் அழிந்து கிடந்த காலத்து எல்லாம் தன் பக்கலிலே லயித்துத் தானொருவனே யென்னும் படி யிருக்குமவனும் நீயே. இவற்றையெல்லாம் விபாகம்பண்ணிக் காரியங் கொள்ள நினைத்த காலத்து இவற்றுக்கெல்லாம் காரணபூதனாக நின்றவனும் நீ: இவ்விதமாக வேதங்களால் பிரதிபாதிக்கப்படுபவனும் நீயே; இப்படிப்பட்ட நீ

காவளம்பாடியில் வந்து ஸேவைஸாதியாநின்றாய்; நீயே எமக்கு ரக்ஷகன் என்றாராயிற்று.

சமயம்—வடசொல். (ஸமயமாவது—வியவஸ்தை.) மூன்றாமடியில் 'மந்தாரம்' என்ற வடசொல் மந்தம் எனச் சிதைந்து கிடக்கிறது. கந்தம்—மணம். (௯)

மாவளம் பெருகிமன்னு மறையவர் வாழுநாங்கை *
காவளம்பாடி மேய கண்ணனைக் கலியன்சொன்ன *
பாவளம் பத்தும்வல்லார் பார்மிசை யரசராகி *
கோவிள மன்னர்தாழக் குடைநிழல் பொலிவர்தாமே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| மாவளம் | மிக்க செல்வமானது | வளம் | அழகுபொருந்திய |
| பெருகி | அபிவிருத்தியடைந்து | பா பத்தும் | இப்பாசுரங்கள் பத்தையும் |
| மன்னு | பொருந்தியிருக்கிற | வல்லார் தாம் | ஓதவல்லவர்கள் |
| மறையவர் | வைதிகர்கள் | பார் மிசை | பூமியிலே |
| வாழும் | வாழுமிடமான | அரசர் ஆகி | அரசர்களாயிருந்துகொண்டு |
| நாங்கை | திருநாங்கூரில் | கோ | (மற்றுள்ள) ராஜாக்களும் |
| காவளம்பாடி மேய கண்ணனை | திருக்காவளம்பாடியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் விஷயமாக | இள மன்னர் | இளவரசர்களும் |
| | | தாழ | வணங்குமாறு |
| கலியன் சொன்ன | திருமங்கையாழ்வாரருளிச் செய்த | குடை நிழல் | ஒற்றைக்குடை நிழலில் |
| | | பொலிவர் | விளங்கப்பெறுவர். |

* * *—எல்லையற்ற செல்வம் மேன்மேலும் கரைபுரண்டு வளரப்பெற்ற அந்தணர்கள் வேதாந்த விழுப்பொருளாகிய எம்பெருமானைக் கண்ணாலேகண்டு வாழாநின்றுள்ள திருநாங்கூரில் திருக்காவளம்பாடியிலேவந்து நித்யவாஸம் பண்ணுகிற கண்ணன் விஷயமாகக் கலியன் சொன்ன இத்திருமொழியை ஓதவல்லவர்கள் இப்பூமியில் ஸார்வபௌமர்களாய் நீடூழி வாழப்பெறுவரென்று பயனுரைத்த பாசுரம் இது.

பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு :—"மோக்ஷத்தைப் பலமாகச் சொல்லில் அதிகாரிகளைக் கிடையாதென்று, அபிமதஸாதனமென்னவே கற்பர்கள்; பின்னை மோக்ஷத்திலே கொடுபோய் மூட்டுகிறோமென்று ஐச்வர்யத்தைப் பலமாகச் சொல்லிற்று." என்று. .... .... (௧௦)

அடிவரவு :—தாவளந்து மண் உருத்து முனை படம் மல்லரை மூத்தவற்கு எவிளம் சந்தம் மாவளம் கண்ணூர்.

ஆறாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—ஏழாந்திருமொழி,

# கண்ணார் கடல்போல்.

### திருநாங்கூர்த் திருவெள்ளக்குளத்திருப்பதி மங்களாசாஸநத் திருப்பதிகம்.

கண்ணார் கடல்போல் திருமேனி கரியாய்! *
நண்ணார் முனை வென்றிகொள்வார் மன்னுநாங்கூர் *
திண்ணார் மதிள்சூழ் திருவெள்ளக் குளத்து
ளண்ணா! * அடியேனிடரைக் களையாயே. (க)

| | | | |
|---|---|---|---|
| கண் ஆர் | இடமுடைத்தான | நாங்கூர் | திருநாங்கூரில் |
| கடல்போல் | கடல்போலே | திண் ஆர் மதிள் சூழ் | திடமான மதிளாலே சூழப்பட்ட |
| திருமேனி கரியாய் | திருமேனிகறுத்திருக்கப் பெற்றவனே! | திருவெள்ளக் குளத்துள் | திருவெள்ளக்குளமென்னுந் திருப்பதியில் எழுந்தருளியிருக்கிற |
| நண்ணார் | சத்துருக்களுடைய | அண்ணா | அண்ணனே! |
| முனை | யுத்தத்திலே | அடியேன் | அடியேனுடைய |
| வென்றி கொள்வார் | வெற்றிபெறுமவர்களான அந்தணர்கள் | இடரை | துன்பங்களை |
| மன்னு | வாழ்கிற | களையாய் | ஒழித்தருளவேணும். |

* * *—திருவெள்ளக்குளத்தில் எழுந்தருளியிருக்கும் பிரானே! கடல் போன்ற திருமேனியை நீ உடையனாயிருப்பது ஸம்ஸாரத்தில் கொதிப்படைந்து கிடக்கும் எம்போலியருடைய தாபங்களைத் தணிப்பதற்கேயன்றோ? அப்படியிருந்தும் அடியேனுடைய தாபங்களை இன்னமும் அகற்றாமலிருப்பது என்னே? கடுகவே என்னிடரைக் களைந்தருளாய் என்கிறார்.

"கண்ணார் கடல்போல்" என்பதற்கு இரண்டுவகையாகப் பொருள் கொள்ளலாம்: கடலைக் கண்ணால் யார் காண்கிறார்களோ அவர்களுடைய கண் அங்குநின்றும் பேராமல் அதிலேயே பொருந்தியிருக்கும்படியான கடல் [வைத்த கண் வாங்கப்போகாதபடியான அழகிய கடல்] என்றும், விசாலமான கடல் என்றும்.

திருநாங்கூரிலுள்ள அந்தணர்கள் பகைவரை வென்றொழித்த பராக்ரமமுடையாரென்பது இரண்டாமடி.

திருவெள்ளக்குளம் என்கிற புஷ்கரிணியின் திருநாமமே திவ்யதேசத்திற்கும் திருநாமமாக வழங்கலாயிற்று. 'அண்ணன் கோயில்' என்று ப்ரஸித்தி.

கொந்தார் துளவமலர்கொண்டணிவானே !
நந்தாத பெரும்புகழ் வேதியர் நாங்கூர் *
செந்தாமரைநீர்த் திருவெள்ளக் குளத்துள்
எந்தாய் ! * அடியேனிடரைக் களையாயே. (உ

| | |
|---|---|
| கொந்து ஆர் | பூங்கொத்துக்கள் நிறைந்திருக்கிற |
| துளவம் மலர் கொண்டு | திருத்துழாய் மலர்களை |
| அணிவானே | அணிந்துகொண்டிருக்குமவனே !, |
| நந்தாத | ஒருநாளும் குறையாத |
| பெரு புகழ் | பெரியபுகழையுடையரான |
| வேதியர் | வைதிகர்கள்வாழ்கிற |
| நாங்கூர் | திருநாங்கூரில், |
| செந்தாமரை நீர் | செந்தாமரைப் பூக்களையுடைய நீர்நிலைகளையுடைத்தான |
| திருவெள்ளக் குளத்துள் | திருவெள்ளக்குளத்தி லெழுந்தருளியிருக்கி, |
| எந்தாய் | என்ஸ்வாமியே ! |
| அடியேன் | அடியேனுடைய |
| இடரை | துன்பங்களை |
| களையாய் | ஒழித்தருளவேணும். |

* * *—திருவெள்ளக்குளத் தெம்பெருமானே ! ஸர்வரக்ஷகன் என்பது விளங்கவன்றோ நீ திருத்துழாய்மாலை சாத்தியிருப்பது: நீ என்னிடரை நீக்காதொழியில் துளபமலர்மாலையணிந்திருப்பது பயனற்றதாகுமே. உன்னுடைய திருவருளுக்குப் பாத்ரபூதர்களென்று நாடெங்கும் புகழ்பெற்ற நல்ல வைதிகர்கள் நிறைந்திருக்கிற திருநாங்கூரிலன்றோ நீ நித்யவாஸம்பண்ணுவது ; அவர்களைப்போலே என்னையும் புகழுடையேனாக்கவேண்டுவது உனக்குப் பணியன்றோ ? ஆகையாலே என்னிடர்களைக் களைந்தருளி நீ உஜ்வலனாகவேணும் என்றாராயிற்று.

நந்தாத பெரும்புகழ் வேதியர்=உன் ஊரிலுள்ள வைதிகர்கள் எல்லாருடைய இடரையும் போக்கியன்றோ புகழ்பெற்றிருக்கின்றனர் ; அப்படிப்பட்ட புகழை நீயும் பெறவேண்டாவோ ? என்றவாறுமாம். ... .... (உ)

குன்றால் குளிர்மாரி தடுத் துகந்தானே ! *
நன்றாய பெரும்புகழ் வேதியர் நாங்கூர் *
சென்றார் வணங்கும் திருவெள்ளக் குளத்துள்
நின்றாய் ! * நெடியாய் ! அடியேனிடர் நீக்கே. (௩)

| | |
|---|---|
| குளிர் மாரி | (திருவாய்ப்பாடியை) வவ்வலிடப்பண்ணின மழையை |
| குன்றால் | கோவர்த்தனமலையினால் |
| தடுத்து | தடைசெய்து |
| உகந்தானே | திருவுள்ளம் மகிழ்ந்தவனே ! |
| நன்று ஆய | விலக்ஷணமான |
| பெரு புகழ் | மிக்க கீர்த்தியையுடைய |
| வேதியர் | வைதிகர்கள் வாழ்கிற

| | | | |
|---|---|---|---|
| நாங்கூர் | திருநாங்கூரில் | நெடியாய் | ஸர்வேச்வரனே!, |
| சென்றார் | வருவார் போவாரெல்லாரும் | அடியேன் | அடியேனுடைய |
| வணங்கும் | வணங்கப் பெற்ற | இடர் | துன்பங்களை |
| | திருவெள்ளக்குளத்துள்—; | நீக்கு | போக்கியருள். |
| நின்றாய் | நின்றருள்கின்ற | | |

* * *—போவார் வருவாரெல்லாம் கையெடுத்துக் கும்பிடும்படியாகத் திருவெள்ளக்குளத்தில் எளியனாய்நிற்கும் பெருமானே! இந்திரன் பசிக்கோபத்தினால் ஏழுநாள் இடைவிடாது மழைபெய்வித்தபோது கோவர்த்தனமலையைக் குடையாகவெடுத்துப் பிடித்துத் திருவாய்ப்பாடியின் இடரை நீக்கினவனன்றோ நீ; அந்த ஆயரையும் ஆநிரைகளையும் போலே உன்னையே களைகளாகக்கொண்டிருக்கு மடியேனுடைய இடரையும் நீக்கியருளவேணும் என்பதாம். (௩)

கானார் கரிகொம்பது ஒசித்த களிறே! *
நானாவகை நல்லவர் மன்னிய நாங்கூர் *
தேனார் பொழில்சூழ் திருவெள்ளக் குளத்து
ளானாய்! * அடியேனுக் கருள்புரியாயே. (௪)

| | | | |
|---|---|---|---|
| கான் ஆர் | காட்டிலே வளர்ந்து கொழுப்படைந்திருந்த | மன்னிய | பொருந்திவாழ்கிற |
| கரி | (குவலயாபீடமென்னும்) யானையினுடைய | நாங்கூர் | திருநாங்கூரில் |
| கொம்பு அது | தந்தங்களை | தேன் ஆர் பொழில் சூழ் | தேன்நிறைந்த சோலைகளால் சூழப்பட்ட |
| ஒசித்த | முறித்தொழித்த | திரு வெள்ளக் குளத்துள் | திருவெள்ளக்குளத்தில் எழுந்தருளியிருக்கிற |
| களிறே | யானைபோல் செருக்குற்ற பெருமானே!, | ஆனாய் | ஆனை போன்றவனே! |
| நானாவகை நல்லவர் | (குலம் கல்வி முதலிய) பலவகைகளினால் நன்மைபெற்றவர்கள் | அடியேனுக்கு | அடியேன்மீது |
| | | அருள்புரியாய் | கிருபைபண்ணவேணும். |

* * *—கம்ஸனாலேவப்பட்ட குவலயாபீடமென்கிற மதயானை உன்னை முடித்துவிடுவதாகச் சீறிவந்தபோது அதனை நீ முடித்து உன்னைக் காப்பாற்றிக்கொண்டது அடியேன் போல்வார்க்கு அருள்செய்வதற்கன்றோ? குலத்தாலும் ஜ்ஞானத்தாலும் அநுஷ்டானத்தாலும் ஆத்மகுணங்களாலும் மற்றுமெல்லாவற்றாலும் விலக்ஷணரான ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழ்கிற வூரிலன்றோ நீ வாழ்வது; 'அடியார்கட்கு அருள்புரிவதே தருமம்' என்கிற அர்த்தத்தை நீ அவர்கள் பக்கல் கேட்டறிந்து அநுஷ்டிக்கலாகாதோ? என்கிறார்.

கானார் கரி=கம்ஸனுடைய யானை ராஜதானியில் வளர்ந்ததாயிருக்க, அதனைக் காட்டில் வளர்ந்ததாகச் சொல்லுவதற்குக் கருத்து யாதெனில்; காட்டில் வேண்டினபடி தின்று வேண்டினபடி திரிந்து கொழுப்படைந்த யானை

போலே கொழுத்துக்கிடந்தது என்பதாம். கான்—'கானநம்' என்னும் வட சொற்சிதைவு. ... ... .... .... ... (ச)

வேடார் திருவேங்கடம் மேயவிளக்கே! *
நாடார்புகழ் வேதியர் மன்னிய நாங்கூர் *
சேடார் பொழில்சூழ் திருவெள்ளக் குளத்தாய்! *
பாடாவருவேன் வினையாயின பாற்றே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| வேடு ஆர் | வேடர்கள் மலிந்திருக்கிற | சேடு ஆர் பொழில் சூழ் | திரண்டிருக்கின்ற சோலைகளால் சூழப்பட்ட |
| திருவேங்கடம் | திருமலையிலே | திருவெள்ளக் குளத்தாய் | திருவெள்ளக்குளத்திலெழுந்தருளியிருப்பவனே!, |
| மேய | நித்யவாஸம் பண்ணுகிற | பாடா | (உன்னைப்) பாடிக்கொண்டு |
| விளக்கே | விளக்குப்போன்றவனே! | வருவேன் | வருகின்ற அடியேனுடைய |
| நாடு ஆர் புகழ் | நாடெங்கும் நிறைந்த புகழையுடையரான | வினை ஆயின | பாவங்களென்று உள்ளவையெல்லாவற்றையும் |
| வேதியர் | வைதிகர்கள் | பாற்று | சிதறவடிக்கவேணும். |
| மன்னிய | நித்யவாஸம் பண்ணுகிற | | |
| நாங்கூர் | திருநாங்கூரில், | | |

* * *—வடநாட்டுத்திருப்பதிகளில் வேங்கடமலைக்கு எவ்வளவு சிறப்பு உண்டோ அவ்வளவு சிறப்பு சோழநாட்டுத் திருப்பதிகளில் இத்திருவெள்ளக் குளத்திற்கு உண்டென்பது ப்ரஸித்தம். அங்கும் இங்கும் பிரார்த்தனைகள் விசேஷமாகச் செலுத்தப்பெறும். இவ்வொற்றுமைநயம் விளங்கவே "வேடார் திருவேங்கடம் மேயவிளக்கே!" என அபேதமாக விளிக்கின்றார். கீழ் முதற் பத்தில் திருவேங்கடமலை விஷயமான திருமொழிகளில் "கண்ணார் கடல்சூழ்" என்பது ஒரு திருமொழி; அதன் சாயையாகவே இத்திருமொழியும் அருளிச் செய்யப்படுகிறது. இரண்டு திருமொழிகளின் தொடக்கமும் ஒருவிதமாகவேயிருக்கும்படி அமையவைத்ததும் உய்த்துணரத்தக்கது.

திருமலையை ஒருநாளும் விட்டுப்பிரியாமல் அவ்விடத்தே நித்யவாஸம் பண்ணுமவர்களென்றும் திருமலையப்பனுக்குப் பரிவராயிருக்குமவர்களென்றும் வேடர்களை உகந்து 'வேடார் திருவேங்கடம்' என்கிறார். வேடு—வேடர்கள். எம்பெருமானை விளக்கு என்பது ஸ்வஸ்வரூபகுணங்களைத் தானே விளக்கிக் கொண்டு நிற்கையாலென்க.

பாடாவருவேன்=(உன்னுடைய குணங்களைப்) பாடிக்கொண்டு வருகிற என்னுடைய என்கை. பாடா—'செய்யா' என்னும் வாய்பாட்டுடன்பாட்டிறந்தகால வினையெச்சம். இனி, 'பாடு ஆ வருவேன்' என்று பிரித்து, அன்பாக வருவேனென்று முரைக்கலாம். .... ... ... (ரு)

கல்லால் கடலை அணைகட்டி யுகந்தாய் ! *
நல்லார்பலர் வேதியர் மன்னிய நாங்கூர் *
செல்வா ! திருவெள்ளக் குளத்துறைவானே ! *
எல்லா விடரும் கெடுமாறருளாயே. (சு)

| | |
|---|---|
| கல்லால் | கண்ட கற்களை யுங்கொண்டு |
| கடலை | கடலிலே |
| அணை கட்டி | ஸேதுகட்டி |
| உகந்தாய் | மகிழ்ந்தவனே ! |
| நல்லார் பலர் வேதியர் | விலக்ஷணரான பல வைதிகர்கள் |
| மன்னிய | நித்யவாஸம் பண்ணுகிற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| திருவெள்ளக் குளத்து | திருவெள்ளக்குளத்தில் |
| உறைவானே | எழுந்தருளியிருப்பவனே ! |
| செல்வா | செல்வனே ! |
| எல்லா இடரும் | (எனது) துன்பங்களெல்லாம் |
| கெடும் ஆறு | தீரும்படி |
| அருளாய் | அருள்புரியவேணும். |

* * *—திருவெள்ளக் குளத்துறையும் செல்வனே! நீ ஒரு பிராட்டிக்காகப் படாதனபட்டு அரியபெரிய காரியங்கள் செய்தாயே!; நீரிலே ஆழ்ந்து போகக்கூடிய மலைகளைக்கொண்டு சேதுபந்தம் திருத்தினாய்; பிராட்டியின் இடர்களையெல்லாம் கெடுத்தாய் ; அப்படியே அடியேனுக்கும் சிறிது அருள்செய்யலாகாதோ ? என்கிறார். ... ... .... (சு)

கோலால் நிரைமேய்த்த எங்கோவலர் கோவே ! *
நாலாகிய வேதியர் மன்னிய நாங்கூர் *
சேலார் வயல்சூழ் திருவெள்ளக் குளத்துள்
மாலே ! * எனவல்வினைதீர்த்தருளாயே. (எ)

| | |
|---|---|
| கோலால் | கோலைக்கொண்டு |
| நிரை | பசுக்கூட்டங்களை |
| மேய்த்த | மேய்த்த |
| எம் கோவலர் கோவே | எமது கோபால கிருஷ்ணனே ! |
| நாலாகிய வேதியர் | நாலு வேதங்களையும் வல்லவர்கள் |
| மன்னிய | நித்யவாஸம் செய்கிற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| சேல் ஆர் வயல் சூழ் | மீன்கள் நிறைந்த கழனிகளால் சூழப்பட்ட |
| திருவெள்ளக் குளத்துள் | திருவெள்ளக் குளத்தில் எழுந்தருளி யிருக்கிற |
| மாலே | எம்பெருமானே ! |
| என | என்னுடைய |
| வல் வினை | கொடிய பாவங்களை |
| தீர்த்தருளாய் | போக்கியருளவேணும். |

* * *—திருவெள்ளக்குளத் தெம்பெருமானே! நீ ஸங்கல்பமாத்திரத்தாலேயே ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களையும் செய்து தலைக்கட்ட வல்லவனாயிருக்கச் செய்தேயும் இடையனாய்ப்பிறந்து இடைச்சாதிக்குத்தக்க கோலைக் கையிலே கொண்டு கறவைகளின் பின்னே காடுகளிற்சென்று அவற்றைப் புல்லுந் தண்ணீருமுள்ள விடங்களிலே கொண்டு மேய்த்தாய் ; இவ்விதமாகச் செய்யாதவளவில் உனக்கு த்ருப்தி பிறவாதென்றன்றோ இவ்வளவுஞ் செய்தாய் ;

என்னுடைய வல்வினைகளைத் தீர்ப்பதற்கு இவ்வளவு ப்ரயாஸங்கள் படவேணுமோ? "ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று திருவுள்ளத்திலே நினைப்பிட்டால் போதுமே. எப்படியாவது என் வல்வினைகளைத் தீர்த்தருளவேணும்-என்கிறார். .... ... .... ... (எ)

வாராக மதாகி இம்மண்ணை யிடந்தாய்! *
நாராயணனே! நல்ல வேதியர் நாங்கூர் *
சீரார் பொழில்சூழ் திருவெள்ளக் குளத்துள் *
ஆராவமுதே! அடியேற்கருளாயே. (அ)

| | |
|---|---|
| வாராகம் அது ஆகி | மஹாவராஹமாய்த் திருவவதரித்து |
| இ மண்ணை | இப்பூமியை |
| இடந்தாய் | அண்டபித்தியில் நின்றும் ஒட்டுவிடுவித் தெடுத்தவனே!, |
| நாராயணனே!—; | |
| நல்ல வேதியர் | விலக்ஷணரான வைதிகர்கள் வாழ்கிற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| சீர் ஆர் பொழில் சூழ் | சிறந்த சோலைகள் சூழ்ந்த |
| திருவெள்ளக்குளத்துள்—; | |
| ஆரா அமுதே | ஒருநாளும் த்ருப்தி பிறவாத அமிருதம் போன்றவனே! |
| அடியேற்கு | அடியேன்மீது |
| அருளாய் | கிருபைபண்ணு. |

* * *—திருவெள்ளக்குளத் தெம்பெருமானே!, பூமியைப் பிரளயங் கொள்ள, மஹாவராஹமாகி இடந்தெடுத்தாய்; ஆகையாலே உனக்குச் செய்யக் கூடாத காரியம் ஒன்றுமில்லை; தவிரவும் நீ நாராயணனென்று பேர்பெற்றிருக்கின்றாய்; சரீரத்துக்கு நன்மைசெய்ய வேண்டுவது சரீரியான ஆத்மாவின் கடமையன்றோ? அதுபோல எனக்கு அருள்புரிவது உன் காரியமன்றோ. ஆகவே எனக்கு அருள்செய்தே தீரவேணும் என்கிறார். ... (அ)

பூவார் திருமாமகள் புல்கிய மார்பா!*
நாவார்புகழ்வேதியர் மன்னிய நாங்கூர் *
தேவா! திருவெள்ளக்குளத் துறைவானே! *
ஆவா! வடியான் இவனென் றருளாயே. (கூ)

| | |
|---|---|
| பூ ஆர் | தாமரைப் பூவில் பொருந்தி வஸிக்கிற |
| திரு மா மகள் | பெரிய பிராட்டியார் |
| புல்கிய | புணர்ந்த |
| மார்பா | திருமார்பை யுடையவனே!, |
| நா ஆர் புகழ் | (உலகத்தாருடைய) நாக்கிலே நிறைந்திருக்கிற கீர்த்தியை யுடைய |
| வேதியர் | வைதிகர்கள் |
| மன்னிய | நித்யவாஸம் பண்ணுகிற |
| நாங்கூர் | திருநாங்கூரில், |
| திருவெள்ளக்குளத்து உறைவானே!—; | |
| தேவா | பெருமானே!, |
| இவன் அடியான் | "இந்த அடியவன் |
| ஆ ஆ என்று அருளாய் | ஐயோ! ஐயோ!! (ஸம்ஸாரத்தில் நோவு படுகிறானே") என்று திருவுள்ளமிரங்க வேணும். |

* * *—திருவேங்கடமலைக்குத் திருப்பதிகம் பாடின நம்மாழ்வார் "அகல கில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கை யுறைமார்பா!" என்று பிராட்டியின் நித்யஸம்பந்தத்தையிட்டுப் பாசுரம் பேசினதுபோலவே, அத்திருமலைக்குத் தோள்தீண்டியான திருவெள்ளக்குளத்துக்குத் திருப்பதிகம் பாடுகிற இவ்வாழ்வாரும் "பூவார் திருமாமகள் புல்கிய மார்பா!" என்று பிராட்டியின் நித்ய ஸம்பந்தத்தையிட்டு இப்பாசுரம் பேசுகிறாரென்க. பிராட்டியானவள் உன்னை விட்டுப் பிரியாதிருக்கவும் நான் இழப்பது என்னோ? என்ற கருத்தையடக்கிப் 'பூவார் திருமாமகள் புல்கிய மார்பா!' என விளிக்கின்றார்.

'ஹா ஹா' என்னும் வடமொழி அவ்யயங்கள் இரண்டு சேர்ந்து ஆவா என விகாரப்பட்டது. 'ஆழ்வீர்! ஐயையோ! நீரா ஸம்ஸாரத்திலே கிடந்து இப்படி வருந்துகின்றீர்' என்று வயிறெரிந்து நோக்கவேணுமென்கை. (௯)

நல்லன்புடை வேதியர் மன்னிய நாங்கூர் *
செல்வன் திருவெள்ளக்குளத் துறைவானை *
கல்லின் மலிதோள் கலியன் சொன்னமாலை *
வல்லரென வல்லவர் வானவர் தாமே. (௰)

| | |
|---|---|
| நல் அன்பு உடை | சிறந்த பக்தியை யுடையரான |
| வேதியர் | வைதிகர்கள் |
| மன்னிய | நித்யவாஸம் பண்ணுகிற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| திரு வெள்ளக் குளத்து | திருவெள்ளக்குளமென்னுந் திருப்பதியிலே |
| உறைவான் | எழுந்தருளி யிருக்கிற |
| செல்வனை | திருமால் விஷயமாக, |
| கல்லின் | மலையைக் காட்டிலும் |
| மலி | அதிசயித்த வலிவுள்ள |
| தோள் | புஜங்களை யுடையரான |
| கலியன் | திருமங்கையாழ்வார் |
| சொன்ன | அருளிச்செய்த |
| மாலை | இச் சொல்மாலையை |
| வல்லர் என வல்லவர் தாம் | 'இவர்கள் ஸமர்த்தர்கள்' என்று (அனைவரும்) சொல்லும்படியாக ஓத வல்லவர்கள் |
| வானவர் | நித்யஸூரிகளோடு சேரப் பெறுவர். |

* * *—பரம பக்தியுக்தரான வைதிகர்கள்வாழும் திருநாங்கூரில் ஒரு பகுதியான திருவெள்ளக்குளமென்னுந் திருப்பதியில் உறையும் பெருமான் விஷயமாகக் கலியன்சொன்ன இச் சொல்மாலையை ஓதுமவர்கள் நித்யஸூரிகளோடுகூடி நித்யாநந்தம் அனுபவிக்கப்பெறுவர் என்று இத்திருமொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

வல்லரென வல்லவர்='இவர் பெரிய திருமொழிப் புலவர்' என்று பிறர் கொண்டாடும்படியாகக் கற்குமவர்கள் என்கை. ... ... ... (௰)

அடிவரவு:—கண்ணார் கொந்து குன்றால் கான் வேடு கல்லால் கோலால் வாராகமது பூவார் நல்லன்பு கவளயானை.

ஏழாந்திருமொழி உரை முற்றிற்று.



ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—எட்டாந்திருமொழி,

# கவளயானை.



உரையவதாரிகை :—ஆழ்வார் தாமான தன்மையைவிட்டுப் பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்றுவாயாலே பேசியநுபவிக்குந் திருமொழி இது. அதாவது—திருநாங்கூர்த் திருப்பார்த்தன்பள்ளித் திருப்பதியிலே தமக்குள்ள அன்பு மிகுதியைத் தாய் பாசுரத்தாலே வெளியிடுகிறார். "என் மகளான பரகாலநாயகியானவள் இரவும்பகலும் திருப்பார்த்தன்பள்ளிப் பெருமானுடைய குண சேஷ்டிதங்களையே வாய்வெருவிக்கொண்டு அத் திருப்பதியின் பெயரையே பாடாநின்றாள்" என்று சொல்லுகிற திருத்தாயார் வாயாலே தமது நிலைமையை உரைக்கின்றாரென்க. (இங்குச் சொல்லவேண்டும் விசேஷ விஷயங்களெல்லாம், இரண்டாம்பத்தில் ஏழாந் திருமொழியின் [திவளும் வெண்மதிபோல்] உரையவதாரிகையில் பன்னியுரைக்கப்பட்டுள்ளன வாதலால் அங்குக் கண்டுகொள்ளத் தக்கவை.

திருப்பார்த்தன்பள்ளிப் பெருமானை அநுபவிப்பதில் ஆழ்வார்க்குண்டான அளவற்ற அபிநிவேசம் இத்திருமொழியாகப் பரிணமித்துவிட்டதுபோலும். இத்திருமொழியோடு திருநாங்கூர்த் திருப்பதிகளின் பாடல் முற்றுப்பெறுகின்றது. ... .... ... .... ... ...

கவளயானைக் கொம்பொசித்த கண்ணனென்றும் * காமருசீர்க்
குவளைமேக மன்னமேனி கொண்டகோ னென்னானையென்றும் *
தவளமாட நீடுநாங்கைத் தாமரையாள் கேள்வனென்றும் *
பவளவாயா ளென்மடந்தை பார்த்தன்பள்ளி பாடுவாளே. (க

| | | | |
|---|---|---|---|
| பவளம் வாயாள் | பவழம்போற் சிவந்த அதரத்தை யுடையளான | காமரு சீர் | ஆசைப்படத் தகுந்த அழகையுடைய |
| என் மடந்தை | என் பெண்ணானவள் | குவளை மேகம் அன்ன | கரு நெய்தற் பூவென்ன காளமேக மென்ன இவற்றோடொத்த |
| கவளம் யானை | கபளம் கபளமாக உணவை யூட்டி மத மூட்டப்பட்ட (குவலயாபீடமென்னும்) யானையினுடைய | மேனி கொண்ட | திருமேனியையுடைய |
| கொம்பு | தந்தங்களை | கோன் (என்றும்) | ஸ்வாமியென்று சொல்லிக் கொண்டும் |
| ஒசித்த | முறித்தொழித்த | | |
| கண்ணன் என்றும் | கண்ணபிரான் என்று சொல்லிக்கொண்டும் | என் ஆனை என்றும் | என்னுடைய யானை என்று சொல்லிக்கொண்டும் |

| | |
|---|---|
| தவளம் மாடம் நீடு | வெண்மையான மாடமாளிகைகளினால் நீண்டிருக்கிற |
| நாங்கை | திருநாங்கூரில் வாழ்கிற |

| | |
|---|---|
| தாமரையாள் கேள்வன் என்றும் | லக்ஷ்மீநாதன் என்று சொல்லிக் கொண்டும் |
| பார்த்தன் பள்ளி பாடுவாள் | பார்த்தன்பள்ளி யென்னுந் திருப்பதியைப் பாடா நின்றாள். |

* * *—திருமங்கை யாழ்வாராகிற பரகாலநாயகியைப் பெற்றெடுத்த திருத்தாயார், பார்த்தன்பள்ளிப் பெருமாளிடத்தில் தன் மகள் காதல்கொண்டு இருக்கிறபடியை வெளியிடவேண்டி மகளுடைய வாய்மொழிகள் இருக்கும் படிகளை ஒவ்வொரு பாசுரத்திலும் ஒவ்வொரு வகையாகக் கூறுகின்றாள்.

என் கணவன் செய்த அருமைச் செயல்கள் உங்கட்குத் தெரியுமா? கம்ஸன் தனது மதயானையைக் கொழுப்பேற்றி என் கணவனைக் கொல்லுமாறு அரண்மனை வாயிலில் நிறுத்திவைத்தான்; இவனோ சேற்றிலிருந்து கொடியை இழுப்பவன்போல அதன் தந்தங்களை எளிதிற் பறித்திட்டு அதனை உயிர் தொலைத்திட்டான்; அப்படிப்பட்ட சூரன் காண்மின் என் கணவன்—என்கிறாள்.

அதற்குமேல் திருமேனி நிறத்தைப்பற்றிச் சொல்லத்தொடங்கி, குவளைப் பூப்போலும் காளமேகம்போலும் கறுத்துக் குளிர்ந்து கண்ணைக் கவரும் நிற மன்றோ என் கணவனது நிறம்—என்கிறாள். யானையை எத்தனை தடவை பார்த்தாலும் ஒவ்வொரு தடவையிலும் அபூர்வ வஸ்துவாகியே ஆநந்தாவஹமாயிருப்பதுபோல அப்பொழுதைக்கப்பொழுது ஆராவமுதமாயிருப்பன் என் கணவன்—என்கிறாள். அவனெழுந்தருளியிருக்கும் ராஜதானியின் சிறப்பும் பெயரும் உங்கட்குத் தெரியுமோ? வெள்ளிய சாந்திட்டுப் பளபளவென்று விளங்குகின்ற மாடமாளிகைகள் ஓங்கியிருக்கப்பெற்ற திருநாங்கூரிலே ஸ்ரீமானாய் விளங்குமவன் காண்மின் அவன்—என்கிறாள். இவ்வளவும் சொல்லிவிட்டுப் பார்த்தன்பள்ளித் திருப்பதியின் திருநாமத்தையிட்டு இசைபாடத் தொடங்கி விட்டாள்—என்று திருத்தாயார் கூறினளாயிற்று.

கவள யானை=யானையின் உணவுக்குக் கவளம் என்று பெயர்; தீனிகளையிட்டு மதமூட்டப்பட்ட யானை என்றபடி. 'காமம் தரு' என்ற இரண்டு சொற்கள் சேர்ந்து 'காமரு' என விகாரப்பட்டது; ஆசையை விளைக்கின்ற என்றபடி. தவளம்—தவலம் என்பது வடசொல்.

பார்த்தன்பள்ளி=பார்த்தனென்று அர்ஜுநனுக்குப் பெயர்; அர்ஜுநனுக்காகப் பள்ளிகொண்ட திருக்கோலமாய் ஸேவைஸாதிக்குமிடமென்பதுபற்றி இத்தலத்திற்கு இத்திருநாமமாயிற்றென்பர். .... .... .... (க)

கஞ்சன்விட்ட வெஞ்சினத்த களிறடர்த்த காளையென்றும் *
வஞ்சமேவி வந்தபேயின் உயிரையுண்ட மாயனென்றும் *
செஞ்சொலாளர் நீடுநாங்கைத் தேவதேவ னென்றென்றோதி *
பஞ்சியன்ன மெல்லடியாள் பார்த்தன்பள்ளி பாடுவாளே. (உ)

| | | | |
|---|---|---|---|
| பஞ்சி அன்ன மெல் அடியாள் | பஞ்சுபோன்று மென்மையான பாதங்களையுடைய என்மகளானவள், | உயிரை | பிராணனை |
| கஞ்சன் விட்ட | கம்ஸனால் ஏவப்பட்ட | உண்ட | முடித்த |
| வெம் சினத்த | கடூரமான கோபத்தையுடைய | மாயன் என்றும் | ஆச்சரியசக்தியுக்தன் என்று சொல்லிக் கொண்டும், |
| களிறு | (குவலயாபீடமென்னும்) யானையை | செம் சொலாளர் நீடு | செம்மையான சொற்களைக் கற்ற அந்தணர் நீண்டகாலமாக வாழப்பெற்ற |
| அடர்த்த | தொலைத்த | நாங்கை | திருநாங்கூரில் எழுந்தருளியிருக்கிற |
| காளை என்றும் | இளையோன் என்று சொல்லிக்கொண்டும், | தேவதேவன் என்று என்று ஓதி | தேவாதிதேவன் என்று பலகால் சொல்லிக் கொண்டும் |
| வஞ்சம் மேவி வந்த | கபடத்தை மேற்கொண்டு வந்த | | |
| பேயின் | பூதனையினுடைய | | பார்த்தன்பள்ளி பாடுவாள்—. |

* * *—என் கணவன் கம்ஸனுடைய மதயானையை முடித்த வுபகாரம் ஒருகாற் சொல்லிவிடக் கூடியதோ? அன்று அதனைக் கொல்லமாட்டாதொழி யில் ஜகத்தெல்லாம் அஸ்தமித்தொழிந்திருக்குமே. மிகச் சிறிவந்த் களிறோடே போர்புரிவதும் வெற்றிபெறுவதும் ஸாமாந்யமான காரியமோ என்று மறுபடி யும் அந்த வீரத்திலேயே ஈடுபட்டுக் கஞ்சன்விட்ட வெஞ்சினத்த களிறடர்த்த காளை என்கிறாள் என் மகள்; சிறிது வயது சென்றபிறகு செய்த இச்செயல் கிடக்கட்டும்; தொட்டிற்பருவத்திலேசெய்த அரும்பெருஞ்செயல் உங்கட்குத் தெரியுமோ? வஞ்சனையாகக் கொல்லவந்த பேய்ச்சியின் முலையுண்கிற வியாஜத் தாலே அவளுயிரை உறிஞ்சியுண்ட மாயனன்றோ இவன் என்கிறாள். நல்ல சாஸ்த்ரங்களை அதிகரித்தவர்கள் நிறைந்திருக்கிற திருநாங்கூரிலே தேவாதி தேவனாகத் திகழ்கின்றான் காண்மின் என்கிறாள்.

இவ்வளவுஞ் சொல்லிப் பார்த்தன்பள்ளிப்பதியின் பெயரை இசையிட்டுப் பாடத்தொடங்கிவிட்டாள்—என்கிறாள் திருத்தாய்.

பஞ்சியன்ன=பஞ்சி—பஞ்சு; போலி. .... ... (உ)

அண்டர்கோனென்றனையென்றும் ஆயர்மாதர் கொங்கைபுல்கு
சேண்டனென்றும் * நான்மறைகள் தேடியோடும் செல்வனென்றும் *
வண்டலைவு பொழில்கொள்நாங்கை மன்னுமாய னென்றென்றோதி *
பண்டுபோலன் றென்மடந்தை பார்த்தன்பள்ளி பாடுவாளே. (ங.

| | | | |
|---|---|---|---|
| என் மடந்தை | என் பெண்ணானவள் | அண்டர் கோன் (என்றும்) | பிரமாண்டத்திலுள்ளா ரெல்லார்க்கும் ஸ்வாமியென்று சொல்லிக்கொண்டும் |
| பண்டு போல் அன்று | (இப்போது) முன்போலல்ல; (என்ன செய்கின்றாளென்னில்;) | | |

என் ஆனை என்றும் — எனக்கு ஆனைபோன்றவன் என்று சொல்லிக்கொண்டும்

ஆயர் மாதர் கொங்கை புல்கு செண்டன் என்றும் — இடைப்பெண்களுடைய முலைகளோடே அணையும் இயல்வுடையவனென்று சொல்லிக்கொண்டும்

நால் மறைகள் தேடி ஓடும் செல்வன் என்றும் — நான்கு வேதங்களும் தேடிக்கொண்டு பின்தொடரப் பெற்ற ஸ்ரீமான் என்று சொல்லிக்கொண்டும்

வண்டு உலவு பொழில் கொள் — வண்டுகள் உலவுகின்ற சோலைகளையுடைய

நாங்கை — திருநாங்கூரில்

மன்னு — நித்யவாஸம் பண்ணுகிற

மாயன் என்று என்று ஓதி — ஆச்சர்யபூதன் என்று பலகால் சொல்லிக்கொண்டும்

பார்த்தன்பள்ளி பாடுவாள்—.

* * *—'அண்டர்' என்று தேவர்களுக்கும் இடையர்க்கும் பெயர். அண்டத்துக்குட்பட்டாரெல்லாரையுஞ் சொல்லும். இரட்டுற மொழிதலால்—இடையர்கட்குத்தலைவன், தேவர்கட்குத்தலைவன் என்ற இரண்டு பொருளையுங் கொண்டு, ஸௌலப்யத்திலும் பரத்வத்திலும் எல்லை காணமுடியாதவன் என்பதாகக்கொள்ளலாம்.

ஆயர் மாதர் கொங்கைபுல்கு செண்டன்=அவனிடத்தில் நான் இவ்வளவு காதல்கொண்டிருக்கச் செய்தேயும் இடைச்சிகளோடு புணருவதிலேயே அவனுக்கு நோக்கமென்று பிரணய ரோஷந்தோற்றச் சொல்லுகின்றாளெனக. 'செண்டு' என்று ஸ்வபாவத்துக்கும் பெயர்.

நான்மறைகள் தேடியோடுஞ் செல்வன்=வேதங்களெல்லாம் அவனுடைய பெருமைகளை எல்லை கண்டு சொல்லி முடித்துவிடவேணுமென்று முயன்றும் "யதோ வாசோ நிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸா ஸஹ" என்கிறபடியே அவனைப் பின்தொடர்ந்தோடி இளைத்து மீள்வனவாதலால் அவற்றுக்குப் பிடிகொடாமல் அபரிச்சிந்ந வைபவனாயிருப்பவன்.

பண்டுபோலன்று=நேற்றுவரையில் மற்ற உலகத்துப் பெண்களைப்போலே பந்தும் அம்மானையும் பாவையும் பைங்கிளியுங்கொண்டு போதுபோக்கிக்கிடந்த இவள் இன்று இப்படி விகாரப்பட்டுப் பார்த்தன்பள்ளி பாடத்தொடங்கி விட்டாள் என்கிறாள். அன்றியே, இதற்கு முன்பும் இவள் பார்த்தன்பள்ளி பாடினவளே யாகிலும் அப்போதெல்லாம் இப்படி அநுராகந்தோற்றப் பாடினாளல்லள்; இப்போதோ விலக்ஷணமாகப் பாடுகின்றாள் என்கிறாளாகவுமாம். (ங)

கோல்லையாளுள் பரிசழிந்தாள் கோல்வளையார் தம்முகப்பே *
மல்லைமுந்நீர் தட்டிலங்கை கட்டழித்த மாயனென்றும் *
செல்வமல்கு மறையோர்நாங்கைத் தேவதேவ னென்றென்றோதி *
பல்வளையா ளென்மடந்தை பார்த்தன்பள்ளி பாடுவாளே. (ச)

| | |
|---|---|
| பல் வளையாள் என் மடந்தை | பல வளைகளை அணிந்திருந்த என் பெண்ணானவள் |
| கோல் வளையார் தம் முகப்பே | அழகிய வளைகளையுடைய பெண்களின் முன்னே |
| கொல்லை ஆனாள் | வரம்பு அழிந்தவளானாள் ; |
| பரிசு அழிந்தாள் | பெண்மைக்கு உரிய மரியாதைகள் அழியப் பெற்றாள் ; |
| மல்லை முந்நீர் | செல்வம் மிக்க கடலை |
| தட்டு | அடைத்து |
| இலங்கை | லங்காபுரியை |
| கட்டழித்த மாயன் என்றும் | த்வம்ஸம் பண்ணின ஆச்சர்ய சேஷ்டிதன் என்று சொல்லிக் கொண்டும் |
| செல்வம் மல்கு மறையோர் நாங்கை | செல்வம் நிறைந்த வைதிகர்கள் வாழ்கிற திருநாங்கூரிலுள்ள |
| தேவ தேவன் என்று என்று ஓதி | தேவாதி தேவன் என்று பலகால் சொல்லிக் கொண்டும் |
| | பார்த்தன்பள்ளி பாடுவாள்—. |

* * *—நேற்றுவரையில் ஒருவரம்பிலே கிடந்தவிவள் இன்று வரம்பு கடந்தவளாயினள் ; பெண்மைக்கு உரிய நாண் மடம் அச்சம் முதலிய குணங்களைக் கைவிட்டாள் ; வேற்று மனிசரைக்கண்டால் நாணி வாய்மூடிக்கிடந்த விவள் பல பெண்டிர்களின் எதிரே தன் தலைமகனுடைய வீரச்செயல்களைச் சொல்லத் தொடங்கி, கடலிலே அணைகட்டினவன் என்றும் இலங்கை பாழ்படுத்த பெருமிடுக்கன் என்றும் சொல்லுகின்றாள். (ஒருபிராட்டிக்காகப் படாதனபட்டு அரும்பெருங் காரியங்கள் செய்தவன் என் விஷயத்திலே உபேக்ஷையாயிருக்கின்றான் என்பதாகச் சொல்லுகிறாளாகவுமாம்.)

பல்வளையாள்=பலவளைகளையிட்டு அலங்கரித்து வைத்தால் இவள் இப்படி பகவத் விஷயத்தி லீடுபட்டு உருகி உடம்பு மெலிந்து வளை கழலப்பெற்றாள் காண்மின் என்ற குறிப்பு. .... ... .... ... (சு)

அரக்கராவி மாளவன்று ஆழ்கடல்சூழிலங்கைசெற்ற *
குரக்கரசனென்றும் கோலவில்லியென்றும் * மாமதியை
நெருக்குமாட நீடுநாங்கை நின்மலனென்றென்றோதி *
பரக்கழிந்தாளென்மடந்தை பார்த்தன்பள்ளி பாடுவாளே. (ரு)

| | |
|---|---|
| என் மடந்தை | என் பெண்ணானவள் |
| அன்று | முன்பொருகாலத்தில் |
| அரக்கர் | ராக்ஷஸர்களினுடைய |
| ஆவி மாள | பிராணன் முடியும்படியாக |
| ஆழ் கடல் சூழ் இலங்கை செற்ற | ஆழ்ந்தகடலால் சூழப்பட்ட லங்காபுரியைப் பொடிபடுத்தின |
| குரங்கு | வாநர வீரர்களுக்கு |
| அரசன் என்றும் | ஸ்வாமியானவன் என்றும், |
| கோலம்வில்லி என்றும் | அழகிய வில்லையுடையவனென்றும், |
| மா மதியை | அழகிய சந்திரனை |
| நெருக்கும் | திரியவொட்டாமல் தடை செய்கிற |
| மாடம் | மாடமாளிகைகள் |
| நீடு | ஓங்கி யிருக்கப்பெற்ற |
| நாங்கை | திருநாங்கூரில் எழுந்தருளியிருக்கிற |
| நின் மலன் என்று என்று ஓதி | பரிசுத்தஸ்வபாவன் என்றும் பலகால் சொல்லிக் கொண்டு |
| பரக் கழிந்தாள் | பெரும்பழிக்கு இடமானவளாய் |
| | பார்த்தன்பள்ளி பாடுவாள்—, |

* * *—பிராட்டியைப் பிரித்த பையல் ஒரு ராவணனே யாகிலும் அவன் பிறந்துண்டான சீற்றம் ராக்ஷஸஜாதி முழுவதிலும் ஏறிப்பாய்ந்து, வாநரப் படைகளைக்கொண்டு கடல்சூழ்ந்த இலங்கையைச் சுடுகாடாக்கினவன் என் தலைமகன் என்கிறாள். ஆண்பிள்ளைத்தனத்துக்கு அபிமானிகளா யிருப்பா ரெல்லாரும் தோற்று மதிக்கும்படி அழகிய வில்லைக் கையிலேயுடையவன் என்கிறாள். சந்திரமண்டலத்தளவும் ஓங்கியிருக்கிற மாடமாளிகைகள் நிறைந்த திருநாங்கூரில் பார்த்தன்பள்ளித் திருப்பதியைப் பாடுவதே இவளுக்குப்பணி யாய்விட்டது.

பரக்கழிந்தாள்=‘பரக்கு அழிந்தாள்’ என்று பிரித்து, பரக்கு என்பதற்கு அடக்கமென்று பொருள்கூறி, ‘அடக்கங்கெட்டாள்’ என்றுரைப்பர் சிலர். அதுநிற்க: கம்பராமாயணத்தில் கிட்கிந்தாகாண்டத்து வாலிவதைப் படலத் தில்—(79) “அரக்கரோ ரழிவுசெய்து கழிவரேலதற்கு வேறோர், குரக்கினத் தரசைக்கொல்ல மனுநெறி கூறிற்றுண்டோ? இரக்கமெங்குகுத்தாயென்பால் எப்பிழை கண்டாயப்பா, பரக்கழி யிதுநீபூண்டாற் புகழையார் பரிக்கற் பாலார்?” என்ற செய்யுளில் ‘பரக்கழி’ என்னும் பதத்தின் பிரயோகம் காண் கிறது; அவ்விடத்துரையில் “பரக்கழி=பெருநிந்தை; பெருந்தீங்குமாம்” என்றிருக்கக்காண்கிறோம். ஆகவே இங்கே பரக்கழிந்தாள் என்பதற்கு—‘பெரும் பழி விளையப்பெற்றாள்’ எனப் பொருள்கொள்ளுதல் பொருந்தும். பெரிய வாச்சான்பிள்ளையும் பலவிடங்களில் இங்ஙனமே வியாக்கியான மருளிச்செய்யக் காண்கிறோம். நாச்சியார் திருமொழியில் (12-3.) “கொந்தளமாக்கிப் பரக்கழித் துக் குறும்பு செய்வானோர் மகனைப்பெற்ற” என்றவிடத்தில், ‘பரக்கழிக்கை—பழிவிளைக்கை’ என்பது வியாக்கியானம். ... .... .... (ரு)

ஞாலமுற்று முண்டுமிழ்ந்த நாதனென்றும் * நானிலஞ்சூழ்
வேலையன்ன கோலமேனி வண்ணனென்றும் * மேலெழுந்து
சேலுகளும் வயல்கொள்நாங்கைத் தேவதேவ னென்றென்றோதி *
பாலின் நல்லமென்மொழியாள் பார்த்தன்பள்ளி பாடுவாளே. (சு)

| | |
|---|---|
| பாலின் நல்ல மென் மொழியாள் | பாலைக்காட்டிலும் மதுரமாய் மிருதுவான சொற்களை யுடையவளான என் பெண்ணானவள், |
| ஞாலம் முற்றும் | உலகம் முழுவதையும் |
| உண்டு உமிழ்ந்த | (பிரளயத்தில்) திருவயிற்றி லடக்கி (ப் பிறகு) வெளிப்படுத்திய |
| நாதன் என்றும் | ஸ்வாமி என்றும், |
| நானிலம் சூழ் | பூமியைச் சுற்றிக் கொண்டிருக்கிற |
| வேலை அன்ன | கடல்போன்ற |
| கோலம் | அழகியதான |
| மேனி வண்ணன் என்றும் | திருமேனி நிறமுடையவ னென்றும், |
| சேல் | மீன்கள் |
| மேல் எழுந்து | மேலே எழும்பி |
| உகளும் | துள்ளா நிற்கப்பெற்ற |
| வயல் கொள் | கழனிகளையுடைய |
| நாங்கை | திருநாங்கூரில் எழுந்தருளி யிருக்கிற |
| தேவ தேவன் என்று என்று ஓதி | தேவாதி தேவன் என்றும் பலகால் சொல்லிக் கொண்டு |
| | பார்த்தன்பள்ளி பாடுவாள்—. |

* * *—என் தலைமகன் உலகங்கட்கெல்லாம் ஆபத்துக்குத் துணை நின்று உதவுமவனன்றோ? உலகத்தையெல்லாம் பிரளயப் பெருவெள்ளம் உண்டு போகப் புகுந்த காலத்து எல்லாவற்றையும் திரட்டித் திருவயிற்றிலே வைத்து நோக்கிப் பிறகு வெளிப்படுத்தினவன் காண்மின் என்கிறாள்; பூமியைச் சூழ்ந்து கொண்டிருக்கிற கடல்போன்ற திருமேனி நிறமுடையவன் என்று நேரிற் கண்டவள்போலக் கூறுகின்றாள். இவள் பேசுகிற பேச்சுக்களெல்லாம் பாலைவிட பரம போக்யமாயிருக்கின்றன; திருநாங்கூர்த் தேவதேவனென்றும் பார்த்தன் பள்ளியென்றும் இவள் பாடுகிற பாடல்களை என்சொல்வேன்? என்கிறாள் திருத்தாய்.

நானிலம்=நான்காகிய நிலங்களையுடையதெனப் பூமிக்குக் காரணப்பெயர். நால்வகை நிலங்களாவன—முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்பன. காடும் காடுசார்ந்த இடமும் முல்லையெனப்படும்; மலையும் மலைசார்ந்தஇடமும் குறிஞ்சியெனப்படும். நாடும் நாடுசார்ந்த இடமும் மருதமெனப்படும். கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தலெனப்படும். மற்றொன்றாகிய பாலைநிலம் பிராணி ஸஞ்சாரத்திற்கு உரியதன்றென்று இங்கு விலக்கப்பட்டது. அது நீரும் நிழலுமில்லாத கொடுநிலம். பாலைக்குத் தனியே நிலமில்லை யென்பதும் நால்வகை நிலங்களும் தத்தம் தன்மை கெட்டவிடத்தே பாலையாமென்பதும் சில ஆசிரியர் கொள்கை. நானிலமென்றது—ஸாமாந்யமாக இங்கே பூமியைச் சொல்லக் கடவது. ... .... ... ... ... ... ... .... (சு)

நாடியென்ற னுள்ளங்கொண்ட நாதனென்றும் * நான்மறைகள்
தேடியென்றும் காணமாட்டாச் செல்வனென்றும் * சிறைகொள்வண்டு
சேடுலவு பொழில்கொள்நாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பாடகஞ்சேர் மெல்லடியாள் பார்த்தன்பள்ளி பாடுவாளே. (எ

| | |
|---|---|
| பாடகம் சேர் மெல் அடியாள் | பாதச்சிலம்பு அணிந்த மிருதுவான அடிகளையுடைய என் பெண்ணானவள் |
| நாடி என்தன் உள்ளம் கொண்ட நாதன் என்றும் | தேடிவந்து என் மனதை இருப்பிடமாகக்கொண்ட ஸ்வாமி யென்றும், |
| நால் மறைகள் | நான்கு வேதங்கள் |
| தேடி | ஆராய்ந்து பார்த்து |
| என்றும் | ஒருநாளும் |
| காணமாட்டா | காண முடியாத |
| செல்வன் என்றும் | ஸ்ரீமான் என்றும், |
| சிறை கொள் வண்டு | சிறகுகளை யுடைய வண்டுகள் |
| சேடு உலவு | திரள்திரளாகஉலாவப்பெற் |
| பொழில் கொள் | சோலைகளை யுடைத்தான |
| நாங்கை | திருநாங்கூரில் எழுந்தருளியிருக்கிற |
| தேவ தேவன் என்று என்று ஓதி | தேவாதி தேவன் என்றும் பலகால் சொல்லிக்கொண்டு |

பார்த்தன்பள்ளி பாடுவாள்—.

* * *—எத்தனையோ ஜன்மங்களாகத் தேடிப்பிடித்து என்னெஞ்சைத் தன் இருப்பிடமாக்கிக்கொண்ட நாதன் என்கிருள். அவனுக்கு என்னெஞ்சு அகப்பட்டது போல அவன் ஆர்க்கேனும் அகப்படுவனோ வென்னில்; நான்கு வேதங்களுங்கூடித் தேடிப்பார்த்தாலும் அவற்றுக்கும் அகப்படாதபடி தூரஸ்தமான விபவம் வாய்ந்தவன் என்கிருள். "அவ்ருநாஶ்ருவஶிரஸா ஓஹாஹ் ஹஸ்" (வரதராஜஸ்தவம்) என்கிறபடியே. இப்படி வேதங்களுக்கும் விஷயமாகாதவன் பரமயோக்யமான திருநாங்கூரில் திருப்பார்த்தன்பள்ளியில் அனைவர் கண்ணுக்கும் விஷயபூதனுய்க் கொண்டு தேவாதிதேவனுக விளங்கா நின்றானென்று சொல்லி அத்திருப்பதியைப் பாடுகின்றுளென்மகள் என்கிருள் திருத்தாய்.

"பாதகடகம்" என்னும் வடசொல் பாடகம் எனச் சிதைந்தது; காலணிக்குப் பெயர். ... .... ... .... ... .... .... (எ)

உலகமேத்து மோருவனேன்றும் ஒண்சுடரோ டும்பரேய்தா *
நிலவுமாழிப் படையனேன்றும் நேசனேன்றும் * தேன்திசைக்குத்
திலதமன்ன மறையோர்நாங்கைத் தேவதேவ னேன்றேன்றோதி *
பலருமேச வேன்மடந்தை பார்த்தன்பள்ளி பாடுவாளே. (அ)

என் மடந்தை — என் பெண்ணனவள்
உலகம் எத்தும் ஒருவன் என்றும் — லோகமெல்லாம் கொண்டாடும்படியுள்ள ஒருவன் என்றும்,
ஒண் சுடரோடு — விளங்குகின்ற சந்த்ர ஸூர்யர்களாலும்
உம்பர் — மற்றுமுள்ள தேவர்களாலும்
எய்தா நிலவும் — கிட்ட முடியாமல் ஜ்வலிக்கிற
ஆழி — திருவாழியாழ்வானை
படையன் என்றும் — ஆயுதமாக வுடையவன் என்றும்,
நேசன் என்றும் — (அடியார்பக்கல்) அன்புடையவன் என்றும்,
தென் திசைக்கு — தெற்குத் திக்குக்கு
திலகம் அன்ன — திலகம்போலே யிருக்கிற
மறையோர் — வைதிகர்கள் வாழ்கிற
நாங்கை — திருநாங்கூரில் எழுந்தருளியிருக்கிற
தேவ தேவன் என்று என்று ஓதி — தேவாதி தேவன் என்றும் பலகால் சொல்லிக் கொண்டு
பலரும் எச — எல்லாரும் பழிக்கும்படியாக
பார்த்தன்பள்ளி பாடுவாள்—,

* * *—"உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே" (தொல்காப்பியம்.) என்கிறபடியே உலக மென்னுஞ் சொல் உயர்ந்தாரைச் சொல்லுவதாகக் கொண்டு, ஞானம் முதலியவற்றுற் சிறந்த பெரியோர்களால் புகழப்படுபவன் என்று கொள்ளலாம்; அன்றி, ஸாமாந்யமாக ஸகல லோகங்களாலும் புகழப்படுமவன் என்கிறதாகவுமாம்.

[ஒண்சுடரோடு இத்யாதி.] ஸூர்யன் முதலான சுடர்ப் பொருள்களின் சோதியையும் வென்று விளங்குஞ் சுடரமைந்த திருவாழியாழ்வானைத் திவ்யாயுதமாக வுடையவன் என்கை. "ஒண்சுடரோடு உம்பரெய்தா" என்கிற விசே

ஷணம் ஆழிப்படையில் அந்வயிக்கவுமாம், ஆழிப் படையனான எம்பெருமா னிடத்து அந்வயிக்கவுமாம். ஸூர்ய சந்த்ராதி தேவர்களால் திருவாழியாழ்வா னும் அணுக முடியாதவன், எம்பெருமானும் அணுக முடியாதவன். நேசன்— அடியவர்கள் திறத்தில் அன்புதானே ஒருவடிவு கொண்டவன். 'ஸ்நேஹ'மென் னும் வடசொல் நேசமெனத் திரியும்.

"தென்திசைக்குத் திலதமன்ன" என்கிற விசேஷணம் மறையோரிடத் தும் நாங்கையிடத்தும் அந்வயிக்கும்.

பலருமேச=உண்டியே உடையே உகந்தோடும் ஸம்ஸாரிகளினிடையே எம்பெருமா னுகந்தருளின நிலத்தைப் பாடுவது ஏசுகைக்கு இடமாகுமன்றோ. கூறைவேணும், சோறு வேணுமென்று பாடினலன்றோ பலரும் உகப்பர்கள்; பார்த்தன்பள்ளி பாடவே பலரும் ஏசும்படியாயிற்று. ஸம்ஸாரிகளுடைய காரி யங்களெல்லாம் பகவத் பக்தர்கட்குப் பரிஹாஸகரமா யிருப்பதுபோல, பகவத்பக்தர்களுடைய காரியங்களும் ஸம்ஸாரிகளுக்குப் பரிஹாஸகரமா யிருக்குமே. ... .... ... ... ... ... ... (௮)

கண்ணனென்றும் வானவர்கள் காதலித்து மலர்கள்தூவும் *
எண்ணனென்று மின்பனென்றும் ஏழுலகுக் காதியென்றும் *
திண்ணமாட நீடுநாங்கைத் தேவதேவ னென்றென்றோதி *
பண்ணினன்ன மென்மொழியாள் பார்த்தன்பள்ளி பாடுவாளே. (௯)

பண்ணின் அன்ன மென்மொழியாள் — இசைப்பாட்டோடு ஒத்த மிருதுவான பேச்சை யுடையளான என் மகளானவள்,
கண்ணன் என்றும் — ஸ்ரீ கிருஷ்ணன் என்றும்,
வானவர்கள் — தேவர்கள்
காதலித்து — பக்தியோடு கூடி
மலர்கள் தூவும் எண்ணன் என்றும் — புஷ்பங்களை ஸமர்ப்பிக்கும் படியாக அவர்களுடைய எண்ணத்திலே வஸிப்ப வன் என்றும்,
இன்பன் என்றும் — ஆனந்தமளிப்பவ னென்றும்,
ஏழ் உலகுக்கு ஆதி என்றும் — எல்லாவுலகங்களுக்கும் காரணபூதன் என்றும்
திண்ணம் மாடம் நீடு நாங்கை — திடமான மாடமாளிகைகள் ஓங்கி யிருக்கப்பெற்ற திருநாங்கூரில் எழுந் தருளி யிருக்கிற
தேவ தேவன் என்று என்று ஓதி — தேவாதி தேவன் என்றும் பலகால் சொல்லிக் கொண்டு
பார்த்தன்பள்ளி பாடுவாள்—.

* * *—உலகத்தில் எல்லாருடைய வாயிலும் கண்ணன் என்னுந் திரு நாமம் வந்தாலும் என்மகளின் வாயில் அத்திருநாமம் வருமழகு விலக்ஷணமா யிருக்கும்; தேவர்கள் பரம பக்தியுடனே புஷ்பங்களைக் கொண்டு பணிமாறப் பெற்றவன் என்கிறாள்; ஆனந்தமே ஒரு வடிவெடுத்திருப்பவன் என்கிறாள்; "ஆநந்தோ ப்ரஹ்ம" என்று உபநிஷத்து சொன்னதை அநுபவித்துப் பேசு கிறாள். உலகங்கட்கெல்லாம் எனது நாயகனேயன்றோ காரணபூதன் என்கி றாள்; "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே" என்கிற உபநிஷத்தை

யெடுத்து உபந்யஸிக்கிருள். தன் பெருமையெல்லாம் விளங்கத் திருநாங்கூரிலே விளங்குகின்றுனென்று சொல்லிப் பார்த்தன்பள்ளியைப் பாடுமழகை என் சொல்லுவேன். .... ... ... .... ... .. .... (௯)

பாருள்நல்ல மறையோர்நாங்கைப் பார்த்தன்பள்ளிச் செங்கண்மாலை *
வார்கோள்நல்ல முலைமடவாள் பாடலைத்தாய் மொழிந்தமாற்றம் *
கூர்கோள்நல்ல வேல்கலியன் கூறுதமிழ் பத்தும்வல்லார் *
ஏர்கோள்நல்ல வைகுந்தத்துள் இன்பநாளு மெய்துவாரே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| பாருள் | பூமியிலே | தாய் | தாயானவள் |
| நல்ல | விலக்ஷணராயுள்ள | மொழிந்த | சொன்ன |
| மறையோர் | வைதிகர்கள் வாழ்கிற | மாற்றம் | வார்த்தையாக, |
| நாங்கை | திருநாங்கூரில் | கூர்கொள் நல்ல வேல் கலியன் கூறு | கூர்மைபொருந்திய நல்ல வேற்படையை யுடைய திருமங்கையாழ்வார் அருளிச்செய்த |
| பார்த்தன் பள்ளி | திருப்பார்த்தன்பள்ளியென்னுந் திருப்பதியி லெழுந்தருளி யிருக்குமவனாய் | தமிழ் பத்தும் | இத் தமிழ்ப் பாசுரங்கள் பத்தையும் |
| செம் கண் | செந்தாமரைக் கண்ணனை | வல்லார் | ஓத வல்லவர்கள் |
| மாலை | எம்பெருமானைக் குறித்து | ஏர் கொள் நல்ல வைகுந்தத்துள் | மிகச் சிறந்த திருநாட்டிலே |
| வார் கொள் நல்ல முலை மடவாள் பாடலை | கச்சணிந்த அழகிய ஸ்தனங்களை யுடையளான (பரகால நாயகியாகிய) பெண் பாடின பாசுரங்களை (உட்கொண்டு) | நாளும் இன்பம் எய்துவார் | நித்யாநந்தம் அநுபவிக்கப் பெறுவர். |

* * *—திருநாங்கூர்ப் பார்த்தன்பள்ளிப் பெருமானிடத்துப் பரகால நாயகி ஈடுபட்டுப் பேசின பேச்சுக்களைத் திருத்தாயார் எடுத்துரைப்பதாக அமைக்கப்பட்ட இத்திருமொழியை ஓதுமவர்கள் எம்பெருமானை ஒரு நொடிப் பொழுதும்பிரியாது அநுபவிக்கு மிடமாகிய திருநாட்டிலே நித்யாநந்தம் அநுபவிக்கப் பெறுவர்களென்று இத் திருமொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டிற்றாயிற்று. .... .... ... ... ... ... ... (௧௦)

அடிவரவு:—கவளம் கஞ்சன் அண்டர் கொல்லை அரக்கர் ஞாலம் நாடி உலகம் கண்ணன் பாருள் நும்மை.

எட்டாந்திருமொழிஉரை முற்றுப்பெற்றது.

ஜீயர்திருவடிகளே சரணம்.

---



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—ஒன்பதாந்திருமொழி,

# நும்மைத்தொழுதோம்.

உரையவதாரிகை:—இத்திருமொழியின் போக்யதை விலக்ஷணமாயிருக்கும். இதனிற் பாசுரங்களைச் சொன்னாலும் செவியுற்றாலும் நெஞ்சு நீர்ப்பண்டமாயுருகும். திருவிந்தளூர்ப் பரிமளரங்கப் பெருமாளைக் கண்ணாரக் காணவேணுமென்றும் கையாரத் தொழவேணுமென்றும் ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமைகள் செய்யப் பெறவேணுமென்றும் எவ்வளவோ பாரித்துக்கொண்டு வந்தார் ஆழ்வார். அப்பெருமானோவென்னில், திருக்கண்களாலே குளிர நோக்குதல் வாரியணைத்தல் வினவுதல் அத்தாணிச் சேவகத்திலே ஏவுதல் ஒன்றுஞ்செய்திலன்; நிரங்குச ஸ்வதந்த்ரனான அவனது திருவுள்ளத்தை அறியவல்லாரார்? ஆழ்வாருடைய உருக்கமான பாசுரங்களைக் கேட்கவேணுமென்று பிச்சேறினான்போலும்; கோபுர வாசற்கதவையு மடைத்துக் கொண்டு கிடந்தான்போலும். ஆழ்வார் துடிக்கிற துடிப்பை என்சொல்ல வல்லோம்!. பெண்ணுடையுடுத்துப் பாசுரமிட்டுக் காட்டுகிற துடிப்பை ஆணுடையிலேயே காட்டுந்திருமொழியன்றோ இது. நம்மாழ்வார் "மின்னிடை மடவார்கள்" என்னுந் திருவாய்மொழியிலும், குலசேகரப்பெருமாள் "ஏர் மலர்ப்பூங்குழல்" என்னுந் திருமொழியிலும், இவ்வாழ்வார் தாம் (பத்தாம் பத்தில்) "காதில் கடிப்பிட்டு" என்னுந் திருமொழியிலும் பெண்ணுடையுடுத்து வெளியிட்ட பரிதாபத்தையெல்லாம் இத்திருமொழியில் ஆண்மை மாறாதே அருளிச்செய்யுமழகு அற்புதம்.

திருமேனிநிறத்தையுங் காட்டாதே ஒளிப்பாயோ பிரானே!; என்னை இப்படி பட்டினியடித்து நீயே வயிறுவளர்க்கக் கருதினாயே!; "உலகுதன்னை வாழநின்ற நம்பீ!" என்கிறபடியே உலகத்தை வாழ்வித்து நீ ஸத்தைபெற வேண்டியிருக்க, உலகத்தைப் படுகொலையடிப்பதே உனக்கு வாழ்ச்சியாய் விட்டது; நீயே வாழ்ந்துபோ என்று திருவுள்ளம் நொந்து பேசுகிறார் திருவிந்தளூர்த்திருமாலை நோக்கி. ... ... .... ...

நும்மைத்தொழுதோம் நுந்தம்பணிசெய்திருக்கும் நும்மடியோம் *
இம்மைக் கின்பம்பெற்றோம் எந்தாய்! இந்தளூரீரே! *
எம்மைக்கடிதாக்கரும மருளி ஆவா! வென்றிரங்கி *
நும்மை யொருகால்காட்டிநடந்தால் நாங்க ளுய்யோமே. (க)

| | |
|---|---|
| இந்தளூரீர் | திருவிந்தளூரில் எழுந்தருளி யிருக்கிற |
| எந்தாய் | ஸ்வாமியே !. |
| நும்மை தொழுதோம் | தேவரீரை ஆச்ரயித்தோம் ; |
| நும் தம் பணி செய்து இருக்கும் நும் அடியோம் | உமக்குக் கைங்கரியம் செய்தே ஸத்தைபெறக் கூடிய அடியவர்களாயிருக்கின்றோம் ; |
| இம்மைக்கு | இப்பிறவியிலே |
| இன்பம் பெற்றோம் | உம்மைப்பற்றின உணர்வாகிற ஆனந்தத்தைப் பெற்றிருக்கிறோம் ; |
| எம்மை | இப்படிப்பட்ட எங்கள் விஷயத்திலே |
| ஆ ஆ என்று இரங்கி | ஐயோவென்று திருவுள்ளமிரங்கி |
| கடிது ஆ | சீக்கிரமாக |
| கருமம் அருளி | ஏதேனுமொரு கைங்கரியத்தை நியமித்து |
| நம்மை | தேவரீரை |
| ஒருகால் | ஒரு தடவையாவது |
| காட்டி | ஸேவைஸாதிப்பித்து |
| நடந்தால் | எமது கண்வட்டத்திலே உலாவினால் |
| நாங்கள் உய்யோமே | நாம் உஜ்ஜீவிக்க மாட்டோமா ?. |

* * *—பெருவிடாய்ப்பட்டவன் ஒருகால் நாக்கு நனைக்கத் துளிதீர்த்தம் கிடைத்தால் போதும் என்பதுபோல இவ்வாழ்வார் திருவிந்தளூர்ப் பெருமானுடைய வடிவழகை ஒருகால் காணப்பெற்றால் போதுமென்கிறார். ஒருகால் கண்டமாத்திரத்தில் தமக்குப் பூர்ணத்ருப்தி பிறந்துவிடும் என்று பொருளன்று; கண்ணில் சிறிது காணப்பெறுவோமாகில் பிறகு வளைத்துக்கொள்ளலாம் என்ற கருத்தாம். "[illegible]" [இஷ்ட வஸ்துவைக் கண்ணில் காண்பதற்கு முன்னே ஒருகால் காணப்பெற்றால் போதும் என்றிருக்கும்; காணப்பெற்றபின் அணையவேணுமென்று விரும்பலாகும்; அணையவும் பெற்றபின் இரண்டு சரீரமும் வெவ்வேறாயிருக்கையன்றியே ஒற்றுமையை அடைந்துவிடாதா என்று பாரிக்கலாகும்] என்ற ச்லோகம் இங்கு உணரத்தக்கது.

நும்மைத்தொழுதோம்=இதற்குப் பலபடியாகப் பொருள்கொள்ளலாம்; தேவதாந்தரங்களுக்கு அந்தராத்மாவாக இருக்கும் நிலையிலே யாம் ஆச்ரயித்தோமல்லோம்; அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனான உன்னையன்றோ ஆச்ரயித்தோம். அந்தர்யாமியான நிலையிலே ஆச்ரயித்தாலன்றோ காலவிளம்பம் பொறுக்கலாவது; ஸாக்ஷாத்தாக உன்னையே ஆச்ரயித்துவைத்தும் இப்படி விளம்பமாகத் தகுமோ? என்கை. அன்றியே; விஷயாந்தரங்களைப் பற்றினோமாகில் உகந்த விஷயங்களைப் பிரிந்தாலும் சூதாடியோ சதுரங்கமாடியோ ஒருவிதமாகப் போதுபோக்கலாம்; அவற்றையெல்லாம் விட்டு, வேறுவகையான போது போக்குகளில் ருசியைத்தவிர்க்கவல்ல உன்னையன்றோ யாம் பற்றியிருப்பது; உன்னைப்பிரிந்து ஆறியிருக்க வழியில்லையே! என்றபடியுமாம்.

நுந்தம் பணிசெய்திருக்கும் நும்மடியோம்=உனக்குக் கைங்கரியம் பண்ணிக்கொண்டிருக்கிறோம் என்று பொருளன்று; 'ஒரு கைங்கரியத்திலும் நம்மை

நியமித்தருளவில்லையே' என்று வருந்திக்கிடக்குமிவர் அப்படியருளிச்செய்ய ப்ரஸக்தியில்லை; உனக்குப் பணிவிடைசெய்தே ஸத்தை பெறும்படியான குடியிலேயன்றோ நான் பிறந்திருக்கின்றேன் என்றவாறு. அடியேனை ஒரு கைங்கரியத்தில் நியமித்தருளவேணும் என்ற பிரார்த்தனை உள்ளுறை.

இம்மைக்கு இன்பம் பெற்றோம்=மிக்க பரிதாபம் தோற்றச்சொல்லும் பாசுரத்தில் இன்பம் பெற்றோமென்கிறவிது கூடாது; ஆனால் இதற்குப் பொருளென்? என்னில்; "ந ஞாநாதிகம் ஸுகம்" [அறிவுக்கு மேற்பட்ட ஆனந்தமில்லை] என்று ஞானிகள் கூறியிருப்பதனால் ஆநந்தகரமான ஞானம் பெற்றிருக்கிறேன்—நீர் சேஷியென்றும் நான் சேஷபூதனென்றும், அடிமை செய்கையே முறையென்றும் ஸ்வரூபஜ்ஞாநலாபம் பெற்றிருக்கிறேன் என்கை. முறையறியாதவனாயிருந்திட்டேனாகில் ஆறியிருப்பேன்; முறையறியப் பெற்றவனாதலால் துடிக்க வேண்டியதாயிருக்கிறது என்றபடி. "இம்மைக்கு இன்பம் பெற்றோம்" என்றவிதனை எதிர்மறை யிலக்கணையாகக்கொண்டு உரைக்கவுமாம். சோறிடாத வொருவனைநோக்கி 'அழகாகச் சோறிட்டாய்' என்பது போலவும், கல்லாத மூடனை நோக்கி 'வெகு அழகாகக் கற்றாய்' என்பது போலவும், 'யாம் வெகு அழகாக ஆனந்தம் பெற்றோம்' என்கிறாராய் ஆனந்தம் பெறாமையைக் காட்டினாராகக்கொள்க. இங்கே பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி காண்மின்:—"அடிமையாலே ஸ்வரூபலாபமாம்படி யிருக்கிற எங்களுக்கு அழகிதாக விடாய்த்தவிடத்தே தண்ணீர் வார்த்தீர்" என்பதாம். எம்மை இன்பம் பெறாதபடி செய்திட்டீர் என்று நொந்து சொல்லுகிறபடி.

எந்தாய் இந்தளூரீரே!=பரமபதத்தைவிட்டு இவ்வூரிலேவந்து ஸந்நிதி பண்ணினது இப்படி யென்னைப் படுகொலை யடிப்பதற்கேயோ? என்று கேட்கிறபடி.

ஆக, முன்னடிகளால் தமது வயிற்றெரிச்சலை வெளியிட்டு, இனி பின்னடிகளால் இவ்வெரிச்சல் தணியும்வகை விண்ணப்பஞ் செய்கிறார். எம்மைக்கடிதாக் கருமமருளி=சேஷத்வஞானத்தைப் பிறப்பித்தருளின தேவரீரே சேஷத்வத்துக்குத் தகுதியான ஒரு குற்றேவலிலே என்னை நியமித்தருளவேணும்என்கிறார் மூன்றாமடியால். பிரானே! உன்னைக் கண்ணில் காண்பதே அருமைப்பட்டிருக்கும்போது கைங்கர்ய ப்ரார்த்தனை பண்ணுகிறேனே! இஃது என்ன பேதைமை!; முந்துறமுன்னம் ஒருகால் ஸேவைஸாதிக்கத் திருவுள்ளமாயின் அவ்வளவிலே நான் உஜ்ஜீவித்துப்போவேனே என்கிறார் ஈற்றடியால்.

"ஆவாவென்றிரங்கி" என்றமையால் நம்முடைய பிரார்த்தனைகளெல்லாங் கிடக்க, அவனுடைய திருவுள்ளத்தில் இரக்கமே கார்யகரம் என்கிற சாஸ்த்ரார்த்தம் வெளியாம். "தொழுதோம் என்று வளைப்பிட வொண்ணாதுகாணும்; அபிமதம் பெறும்போது அவனுடைய இரக்கமே வேணும்" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி.

ஈற்றடியில் நம்மை என்றது தேவரீரை என்ற பொருளில் வந்தது. "நம்ம வீட்டில் குழந்தைகள் க்ஷேமமா?" என்கிற உலகவழக்கம் நோக்குக. தன்மை

யில் முன்னிலையும் முன்னிலையில் தன்மையும் வியவஹரிப்பதுண்டு. ஒருகால் நம்மைக்காட்டி—என்னைக் காணும்படியாகச்செய்து [எனக்கு ஸேவைஸாதித்து] என்று உரைக்கலாமாயினும் அது சுவைக்கேடு. 'காட்டினால்' என்னாமல் "காட்டி நடந்தால்" என்றதனால் புறப்பாடு ஸேவிக்கையிலே காதல் கொண்டனர் போலும். .... ... .... .... .... (க)

சிந்தைதன்னுள் நீங்காதிருந்த திருவே! மருவினிய
மைந்தா! * அந்தணாலி மாலே! சோலை மழகளிறே! *
நந்தாவிளக்கின் சுடரே! நறையூர்நின்ற நம்பீ! * என்
எந்தாய்! இந்தளூராய்! அடியேற்கிறையு மிரங்காயே. (உ)

| | |
|---|---|
| சிந்தை தன்னுள் | நெஞ்சிலே |
| நீங்காது இருந்த | ஒரு நொடிப்பொழுதும் விட்டுப் பிரியாமல் இருக்கிற |
| திருவே | செல்வமே! |
| மருவ | அநுபவிக்க அநுபவிக்க |
| இனிய | போக்யனாயிருக்கிற |
| மைந்தா | நித்யயுவாவே!, |
| அம் தண் ஆலி மாலே | அழகிய குளிர்ந்த திருவாலி நகர்ப் பெருமானே!, |
| சோலை மழ களிறே | சோலைக்குள்ளே வளர்ந்த வொரு யானைக்குட்டி போன்றவனே! |
| நந்தா விளக்கின் சுடரே | ஒரு நாளுமணையாத விளக்குச் சோதிபோல் திகழுமவனே! |
| நறையூர் நின்ற நம்பீ | திருநறையூரில் எழுந்தருளியிருக்கிற பரிபூர்ணனே! |
| இந்தளூராய் என் எந்தாய் | திருவிந்தளூரில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானே! |
| அடியேற்கு | அடியேன் விஷயத்தில் |
| இறையும் | சிறிதும் |
| இரங்காயே | கிருபை செய்கிறாயில்லையே!. |

* * *—கீழ்ப்பாசுரம் மிக்க தீநஸ்வரத்தோடே பேசியிருக்கச் செய்தேயும் இந்தளூரெம்பிரான் திருவுள்ளமிரங்கக் கண்டிலர்; பிரானே! கடலிலே நீர் வற்றுவதுண்டோ? உன் திருவுள்ளத்திலும் இரக்கம் மாறுவதுண்டோ? இப்படியும் என்னைப் படுகொலை யடிக்கலாமோ? பாவியேனுக்குச் சிறிதும் இரங்கியருளமாட்டாயோ? என்கிறார்.

சிந்தை தன்னுள் நீங்காதிருந்த திருவே!=இப்படி என்னை உபேக்ஷிக்க எண்ணமாகில் என் சிந்தையிலேவந்து இடைவிடாது பொருந்தியிருப்பானேன்? என் கண்ணுக்கு விஷயமாகாததுபோலவே சிந்தைக்கும் விஷயமாகாதிருந்தால் நான் இப்பாடு படவேண்டியிராதே; என்னை இங்ஙனே வருத்துவதற்கேயோ சிந்தைதன்னுள் நீங்காதிருக்கிறது என்றவாறு. எப்படி நிர்ஹேதுகக்ருபையினால் என் சிந்தையில் வந்து புகுந்தாயோ அப்படியே நிர்ஹேதுகமாகவே கட்புலனுக்கும் இலக்காகவேணு மென்றவாறுமாம். திருவுக்குந் திருவாகிய செல்வனாகையாலே திருவே! என்றார்.

மருவினிய மைந்தா!=மருவமருவ இனிய மைந்தா! என்க. கண்ணாலே கண்டு களிக்கப்பெறும் அநுபவத்தை நீ வஞ்சித்தாயாகிலும் மாநஸாநுபவம்

பண்ணப்பண்ண இனிதா யிருக்கிறதே; இவ்வினிமையை உன்னால் தவிர்க்க முடியாதே என்றவாறு.

“சிந்தைதன்னுள் நீங்காதிருந்த திருவே மருவினிய மைந்தா!” என்றதும் கீழே மூன்றும்பத்தில் வயலாலி மணவாளனை யநுபவிக்குமிடத்து 1. “வந்துன தடியேன்மனம் புகுந்தாய் புகுந்ததற்பின் வணங்கும் என் சிந்தனைக் கினியாய் திருவே என்னுருயிரே” என்று பேசின அநுபவம் ஆழ்வார்க்கு அப்படியே நினைவுக்கு வந்துவிட்டது; அதனால் இந்தளூரெம்பெருமானை வயலாலி மணவாளனாகவே பாவித்து “அந்தணாலிமாலே!” என விளிக்கிறார்.

சோலை மழகளிறே!=சோலைக்குள்ளே வளர்ந்த வொரு இளயானைக் கன்றுபோலே இனியனா யிருப்பவனே!. திருமாலிருஞ் சோலையில் திகழும் யானைக் குட்டியே! என்று முரைக்கலாம்.

நந்தாவிளக்கின் சுடரே! விளக்கில் திரியும் எண்ணெயும் புகையுமான அழுக்கு இன்றியே புகர்தான் ஒருவடிவு கொண்டதோ என்னும்படியாக ஜ்ஞாநஸ்வரூபனாய்ப் பிரகாசிப்பவனே! என்கை. இறையும் இரங்காய்=சிறிதேனும் இரங்கவேணும் என்றும் பொருளாம். .... ... (உ)

பேசுகின்ற திதுவே வையமீரடியாலளந்த *
மூசிவண்டு முரலும் கண்ணிமுடியீர்! * உம்மைக்காணு
மாசையென்னும் கடலில்வீழ்ந்திங்கயர்த்தோம் * அயலாரு
மேசுகின்ற திதுவேகாணும் இந்தளூரீரே!. (ந)

| | |
|---|---|
| வையம் | உலகங்களை |
| ஈர் அடியால் அளந்த | இரண்டு அடிகளாலே அளந்து கொண்டவராயும் |
| வண்டு | வண்டுகளானவை |
| மூசி | மொய்த்துக்கொண்டு |
| முரலும் | ரீங்காரம் செய்யப்பெற்ற |
| கண்ணி | மாலையை |
| முடியீர் | திருமுடியில் அணிந்து கொண்டவராயு மிருக்கிற |
| இந்தளூரீர் | திருவிந்தளூர் நாதரே!, |
| இங்கு | இவ்வுலகில் |
| உம்மை காணும் ஆசை என்னும் கடலில் வீழ்ந்து | உம்மை ஸேவிக்க வேணுமென்கிற ஆசையாகிற கடலிலே விழுந்து |
| அயர்த்தோம் | அறிவு கெட்டோம்; |
| அயலாரும் | பிறரும் |
| ஏசுகின்றது | பரிஹஸிப்பது |
| இதுவே காணும் | இவ்விஷயத்தைப் பற்றியே கிடீர்; |
| பேசுகின்றது இதுவே | உமக்கொரு பழியில்லாம லிருக்கவேணு மென்பதே நாம் சொல்லுவது. |

* * *—இந்தளூரெம்பிரானே! உன்னை நான் ஸேவித்தாலும் ஸேவிக்கிறேன், இழந்தாலும் இழக்கிறேன்; இஃது ஒரு பெரிய விஷயமன்று; முக்கியமாக ஒன்று சொல்லுகிறேன் கேளாய்; நீ குணசாலியென்று பேர்படைப்பதற்

1. (3—5—1.)

குப் படாதபாடுகள் பட்டிருக்கிறாய்; மாவலியிடம் குறளுருவாய்ச்சென்று மூவடிமண் இரந்துபெற்று த்ரிவிக்ரமனாகி மூவுலகங்களையுமளந்து இத்தனை பாடுகள்பட்டுப் பெரிய குணம் ஸம்பாதித்தாய்; என்னொருவனை உபேக்ஷிப்பதனால் அக்குணத்தை இழக்கப்போகிறாய்; ஒருவரும் அபேக்ஷியாதிருக்கச் செய்தேயும் எல்லார் தலையிலும் திருவடியை வைத்தருளின நீ, பல்பன்னிரண்டுங் காட்டி யாசிக்கின்ற என்னுடைய விருப்பத்தை [1]நிறைவேற்றாவிடில் குணக்கேடு விளையாதோ? இதனை ஆராய்ந்தருள் என்கிறார்.

பேசுகின்றது இதுவே=உனக்கு ஒரு குணக்கேடு விளையாமல் நோக்கிக் கொள்ளவேணுமென்பதொன்றே அடியேன் சொல்லுவது என்கை. "𑌅𑌭𑍂𑌤𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌮𑌮 𑌭𑌾𑌵𑌿 𑌕𑌿𑌂𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌹𑍇 𑌮𑍇 𑌸𑌹𑌜𑌂𑌹𑌿 𑌦𑍁𑌃𑌖𑌮𑍍। 𑌕𑌿𑌂𑌤𑍁 𑌤𑍍𑌵𑌦𑌗𑍍𑌰𑍇 𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑌰𑌾𑌭𑌵𑍋 𑌨𑌾𑌥। 𑌨 𑌤𑍇𑌽𑌨𑍁𑌰𑍂𑌪𑌃." என்ற ஆளவந்தார் ஸ்தோத்ரம் இங்கு ஸ்மரிக்கத்தகும்.

மூசி வண்டு முரலுங் கண்ணிமுடியீர்='நான் உலகுக்கெல்லாம் சேஷி; எல்லாரையும் நான் குளிர நோக்கக்கடவேன்' என்று தீக்ஷிதனாய்த் தனிமாலையிட்டிருக்கிற நீ என்னை நோக்காதொழியலாமோ? என்றவாறு. மூசுகை— மொய்க்கை.

உம்மைக் காணுமாசை யென்னுங் கடலில் வீழ்ந்து இங்கு அயர்த்தோம்= 'திருமங்கைமன்னன் திருவிந்தளூர்ப் பெருமானைக்காண ஆசைப்பட்டு அது பெறாதே முடிந்தான்' என்று நாற்சந்தியிலே வார்த்தை கிளம்பினால் இதனில் மிக்க அவத்யமுண்டோ? 'அயலார் ஏசுகின்றதும் இதுவே, நான் பேசுகின்றதும் இதுவே' என்று முடிவையும் முதலையுங்கூட்டி யோஜித்துக்கொள்க: 'ஒருவர் ஆசைப்பட்ட அழகையும் ஒருவர் அந்த ஆசைக்கு முகங்காட்டின அழகையும் என்ன சொல்லுவோம்!, ஸர்வரக்ஷகன்படி இப்படியன்றோ இருப்பது!' என்று அயலார் ஏசுவர்களே; அப்படிப்பட்ட ஏச்சுக்கு இடமாகும்படி நடந்து கொள்ளவேண்டா என்பதே அடியேன் சொல்லுவது. .... ... (௩)

ஆசைவழுவாதேத்தும் எமக்கிங் கிழுக்காய்த்து * அடியோர்க்குத்
தேசமறிய உமக்கேயாளாய்த் திரிகின்றோமுக்கு *
காசினொளியின் திகழும்வண்ணம் காட்டீரெம்பெருமான்! *
வாசிவல்லீரிந்தளூரீர்! வாழ்ந்தேபோம் நீரே. (௪)

| | | | |
|---|---|---|---|
| இங்கு | இந்நிலத்தில் | தேசம் அறிய | உலகமெல்லாம் அறியும்படியாக |
| ஆசை வழுவாது | ஆசை குன்றாமல் | உமக்கே ஆளாய் திரிகின்றோமுக்கு அடியோர்க்கு | உமக்கே தொண்டராய்த் திரிகின்ற எமக்கு |
| ஏத்தும் எமக்கு | துதிக்கின்ற எமக்கு | | |
| இழுக்கு ஆய்த்து | (இத் துதிசெய்தல்) அவத்யமாய் வந்து முடிந்தது; | காசின் ஒளியின் | பொற்காசின் ஒளியைக் காட்டிலும் |

| | | | |
|---|---|---|---|
| திகழும் | மிக விளங்குகின்ற | வாசி வல்லீர் | தாரதம்யம் பாராட்டுகின்றீர்; |
| வண்ணம் | வடிவழகை | நீரே வாழ்ந்து போம் | உம்முடம்பை நீரே கட்டிக்கொண்டு வாழ்ந்துபோம். |
| காட்டீர் | காட்டுகின்றிலீர்; | | |

எம்பெருமான்! இந்தளூரீர்!!—,

* * *—உலகத்திலே, உகந்தாரை ஒருவன் அலக்ஷியஞ்செய்தால் அவனிடத்தில் உகப்பு குறைந்துபோவதுண்டு; 'நம்மை அலக்ஷியஞ்செய்கிற அவன் மீது நமக்கு ஆசை எதுக்கு' என்று வெறுப்படைந்து விட்டிடுவதுண்டு; எனக்கும் உன்விஷயத்திலே அப்படியேயன்றோ ஆசை குறையவேண்டும்; ஆனால் அது குறைகின்றதில்லை; நீ உபேக்ஷிக்க வுபேக்ஷிக்க அதுவே எருவாக ஆசை வளர்கின்றது; அவ்வாசையினால் உன்னைத் துதிக்கின்றேன்; இப்படி நான் துதித்தால் 'சேஷபூதர் சேஷியைத்துதிப்பது முறையன்றோ' என்று எல்லாரும் நினைத்திருக்கவேண்டுவது ப்ராப்தமாயிருந்தும் அப்படி நினையாமல் இதனைப் பரிஹாஸமாகப் பேசாநின்றார்கள். (அதாவது—'கதறிக்கதறிக் கூப்பிடுகிற கலியனுக்குக் காட்சிகொடாதே யிருக்கிறானே; இவன் ஸர்வலோக சரண்யனாம்; திருநாமம் அழகாயிருக்கிறது!' என்று உன்னைப்பற்றிப் பரிஹஸிப்பார் சிலரும், 'பல்லைக்காட்டிப் பலகால் வேண்டினவிடத்திலும் வாய் திறவாதே யிருக்கிறவொருவனை நாணங்கெட்டு ஏத்துகிறானே இவன்!' என்று என்னைப்பற்றிப் பரிஹஸிப்பார் சிலருமாயிருக்கையாலே இழுக்காயிற்று.)

இந்தளூரீரே! உலகமறிய உமக்கே அநந்யார்ஹராயிருக்கிற எங்களுக்குப் பொன்னொளியிற் காட்டிலும் மிகவிளங்காநின்றுள்ள வடிவழகைக் காட்டமாட்டேனென்கிறீரே; "ஸ்வார்த்தம் ஸ்வாகாரமஸ" என்கிறபடியே எங்களுக்கென்றே கொண்டிருக்கிற திருமேனியை எமக்குக் காட்டாதேயிருப்பது என்னோ?

[வாசிவல்லீர்] 'மிகச்சிறந்த நமது திருமேனியை நித்யஸூரிகள் போல்வார் காணவேணு மத்தனையல்லது அற்பனான இவன் காணலாகாது' என்று நீர் நினைக்கின்றீர் போலும்; ஸர்வஸாதாரணமான திருமேனியை இன்னார்க்குத் தான் காட்டலாம், இன்னார்க்குக் காட்டலாகாது என்று ஒருவாசி யிட்டுக் கொள்ளலாமோ? [இந்தளூரீர்!] நித்யஸூரிகளுக்குக் காட்சிதரும் வடிவை நித்ய ஸம்ஸாரிகளுக்கும் ஸர்வஸ்வதானம் பண்ணுகைக்காகவன்றோ திருவிந்தளூரிலே வந்து நிற்கிறது. வாசியற முகங்கொடுக்க வந்து நிற்கிறவிடத்திலே வாசிவைக்கின்றீரே. [வாழ்ந்தே போம் நீரே.] உம்முடைய உடம்பு உம்மை ஆசைப்பட்டவர்களுக்காக ஏற்பட்டது என்று நினைத்திருந்தோம்; அப்படியன்றாகில், உம்முடம்பை நீரே கண்டுகொண்டு நீரே தொட்டுக்கொண்டு நீரே மோந்துகொண்டு நீரே கட்டிக்கொண்டு நீரே வாழ்ந்துபோம்.

"காசினொளியிற்றிகழும் வண்ணம்" என்றவிடத்து "சுட்டுரைத்த நன்பொன் உன் திருமேனியொளி யொவ்வாது" என்ற (3—1—2) திருவாய்மொழி அநுஸந்திக்கத்தக்கது. .... ... .... ... (ச)

தீயெம்பெருமான் நீரெம்பெருமான் திசையு மிருநிலனு
மாய் * எம்பெருமானாகி நின்றால் அடியோங் காணோமால் *
தாயெம்பெருமான் தந்தைதந்தையாவீர் * அடியோமுக்
கேயெம்பெருமா னல்லீரோ நீர் இந்தளூரீரே !. (ரு)

| | |
|---|---|
| இந்தளூரீர் | திருவிந்தளூர்ப்பெருமானே! |
| நீர் | தேவரீர் |
| தீ எம் பெருமான் | தேஜஸ்தத்வத்திற்கு அந்தர்யாமியான எம்பெருமானாகவும் |
| நீர் எம் பெருமான் | ஜலதத்வத்திற்கு அந்தர்யாமியான பெருமானையும் |
| திசை எம் பெருமான் ஆயும் இரு நிலன் எம் பெருமான் ஆகியும் நின்றால் | திசைகளுக்கு அந்தர்யாமியான பெருமானையும் விசாலமான பூமிக்கு அந்தர்யாமியான பெருமானையும் நின்றால் |
| அடியோம் | (அஜ்ஞரான) அடியோங்கள் |
| காணோம் | தேவரீரைக் காணமாட்டாதவர்களா யிருக்கிறோம்; |
| ஆல் | ஐயோ !; |
| தாய் | தாயாகவும் |
| எம்பெருமான் | ஸ்வாமியாகவும் |
| தந்தை தந்தை | பிதாவுக்கும் பிதாவாகவும் |
| ஆவீர் | இருக்கின்ற பெருமானே ! |
| நீர் அடியோமுக்கே எம் பெருமான் அல்லீரோ | தேவரீர் எமக்கே அஸாதாரணரான ஸ்வாமியல்லவோ ? |

* * *—"நீர்வானம் மண்ணெரிகாலாய்நின்ற நெடுமால்" என்றும் "குன்றமும் வானும்மண்ணுங் குளிர்புனல் திங்களோடு நின்றவெஞ்சுடரும் அல்லா நிலைகளு மாயவெந்தை" என்றும் நாம் கண்ணால் காண்கிற பொருள்களெல்லாம் எம்பெருமான் வடிவேயென்று இவர் துணிந்திருப்பவராதலால், 'இத்துணிவு இல்லாதவரன்றோ வருந்தவேண்டும்; இத்துணிவுடையார்க்கு எம்பெருமானுடைய ஸாக்ஷாத்காரம் எப்போதும் குறையற்றிருக்கின்றதன்றோ; ஆகையாலே இவர் வீணாக வருந்துகின்றார்' என்று திருவிந்தளூர்ப்பெருமான் திருவுள்ளம் பற்றி யிருப்பதாகக்கொண்டு, பிரானே! நீ எல்லாப்பொருளுமாக நிற்கின்றாய் என்கிற சாஸ்த்ரார்த்தம் அடியோமுக்குத் தெரியாமையில்லை; "சங்கும் சக்கரமும் சிரித்தமுகமும் தொங்கும் பதக்கங்களும்" என்றாற்போலே அஸாதாரண திவ்யமங்கள விக்ரஹ வேஷத்தைக் கண்டுகளிக்க ஆவல்கொண்டிருக்கிற அடியோமுக்கு ஜகத் ஸ்வரூபனாயிருக்குமிருப்பு என்ன பயனளிக்கும்? தீ நீர் முதலானவையெல்லாம் உன்வடிவே என்று அநுஸந்தித்துக்கொள்வதில் யாதொரு ஆக்ஷேபமுமில்லை. அப்படி அநுஸந்திப்பதனால் அவற்றில் உனது அஸாதாரணத்திருமேனியைக் காண்போமோ யாம்; காணமாட்டோம்; நாங்கள் கண்டு களிப்பதற்கன்றோ நீ திருவிந்தளூரிலே வந்து நிற்கிறது என்கிறார்.

அடியோமுக்கே எம்பெருமானல்லீரோ நீர்=பரவாஸுதேவனாயிருக்குமிருப்பு நித்யமுக்தர்களின் அநுபவத்திற்காக. வியூஹநிலை பிரமன் முதலானோருடைய கூக்குரல் கேட்கைக்காக. ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்கள் அக்காலத்தி லிருந்தவர்கட்கா யொழிந்தன. அந்தர்யாமியா யிருக்குமிருப்பு ப்ரஹ்லாதாழ்வான் போல்வார்க்குப் பயனளித்தும், அர்ச்சாவதார நிலை

யொன்றே அடியோங்களுக்கு ஜீவனம். ஸம்ஸாரிகளுக்கு முகங்கொடுக்கைக் காகவேயன்றோ இது ஏற்பட்டது. குருடர்க்கு ஏற்பட்ட இடத்திலே விழி கண்ணர் புகுரலாமோ? விழிகண்ணர்க்கு ஏற்பட்ட இடம் குருடர்க்கு உதவுமோ?.

திருவாய் மொழியில் (6-9-1) "நீராய் நிலனாய்த் தீயாய்க்காலாய் நெடுவானாய், சீரார்சுடர்களிரண்டாய் சிவனாயயனாய்" என்று ஜகத்ஸ்வரூபனாயிருக்குமிருப்பை யருளிச்செய்து அதில் தமக்குத் திருப்தியில்லாமையையும் அஸாதாரண விக்ரஹஸேவையே வேண்டுமென்பதையும் "கூராராழி வெண்சங் கேந்திக் கொடியேன்பால் வாராய், ஒருநாள் மண்ணும் விண்ணும் மகிழவே" என்ற பின்னடிகளால் வெளியிட்டருளினமை இங்கு நினைக்கத்தக்கது. விச்வரூபங்கண்ட அர்ஜுநனும் இங்ஙனே ப்ரார்த்தித்தமை பகவத்கீதையில் காணத் தக்கது. .... ... ... ... (ரு)

சொல்லாதொழியகில்லேன் அறிந்தசொல்லில் * நும்மடியா
ரெல்லாரோடுமொக்க எண்ணியிருந்தீ ரடியேனை *
நல்லாரறிவீர் தீயாரறிவீர் நமக்கிவ் வுலகத்தில் *
எல்லாமறிவீ ரீதேயறியீர் இந்தளூரீரே !. (சு)

இந்தளூரீர் !—;
சொல்லாது ஒழிய கில்லேன் — (அடியேன் சொல்ல நினைத்ததைச்) சொல்லாதிருக்க முடியவில்லை ;
அறிந்த — நான் அறிந்தவற்றை
சொல்லில் — சொல்லத் தொடங்கினால்
(இதனைச் சொல்லுகிறேன் கேளீர் ;)
அடியேனை — (உம்மைப் பிரிந்து தரிக்க மாட்டாத) அடியேனை
நும் அடியார் எல்லாரோடும் ஒக்க எண்ணி இருந்தீர் — உம்முடைய மற்ற அடியவர்களெல்லாரோடும் ஸமமாக நினைத்திருக்கிறீர் ;
நல்லார் அறிவீர் — நல்லவர்களையும் தெரிந்து கொண்டிருக்கிறீர் ;
தீயார் அறிவீர் — தீயவர்களையுந் தெரிந்து கொண்டிருக்கிறீர் ;
இ உலகத்து எல்லாம் அறிவீர் — இவ்வுலகநடை யெல்லாமும் தெரிந்து கொண்டிருக்கிறீர் ;
நமக்கு ஈதே அறியீர் — என்னுடைய தன்மை யொன்றையே அறிய மாட்டாதவராயிருக்கிறீர்.

* * *—பெரியோர் கருத்தைப் பின்சென்று சிறியோர் நடந்துகொள்ள வேணுமென்பது உமக்குத் தெரியாததன்றே ; நீர் சேஷபூதர் ; நான் சேஷி. என்னை நிர்ப்பந்தித்துக் காரியங்கொள்வது உம்முடைய ஸ்வரூபத்திற்குச் சேராது என்பது உமக்குத் தெரிந்ததுதானே ; அப்படியிருக்க 'அவன் செய்வன செய்துகொள்க' என்றிராமல் மீண்டு மீண்டும் நிர்ப்பந்திக்கின்றீரே ; ஆழ்வீர் ! இஃது உமக்குத்தகாது என்று எம்பெருமான் திருவுள்ளமாக, அதற்கு ஆழ்வார் விண்ணப்பஞ் செய்கிறார்.

இந்தளூரீர் ! அடியேன் விண்ணப்பஞ் செய்ய நினைத்த விஷயத்தைக் கூசாமல் விண்ணப்பஞ் செய்துவிடுகிறேன் ; சேஷபூதன் சேஷியை நிர்ப்பந்திக்கலா

காது என்று முறையறிந்து இருக்க மாட்டுகின்றிலேன்; ஸர்வஜ்ஞரான உமக்கும் தெரியாதவிஷயம் ஒன்றுண்டு என்று அடியேன் நினைத்திருக்கிறேன். உமக்குப் பல்லாயிரம் பேர்கள் அடியாருண்டு. 'மற்ற அடியார்களெல்லாரையும் போலே இக்கலியனும் ஓரடியான்' என்று நீர் நினைத்திருக்கின்றீரத்தனையல்லது எனக்குள்ள வாசியைச் சிறிதும் அறிகின்றிலீர். "ஊர்த்வம் மாஸாந்ந ஜீவிஷ்யே" [ஒரு மாதம்வரையில் உயிர் தரித்திருப்பேன்] என்று சொன்ன அசோகவனிகைப் பிராட்டியையும் என்னையும் ஒருதட்டாக நினைத்திருக்கிறீரே யொழிய 'ஒரு நொடிப்பொழுதும் நம்முடைய பிரிவைப் பொறுக்கமாட்டாத ஸுகுமார ஸ்வபாவன் இவன்' என்று என்னுடைய வாசியை அறிந்திலீர் என்கிறார்.

[நல்லாரறிவீர் தீயாரறிவீர்] உம்மைவிட்டுப் பிரிந்து தரிக்கமாட்டாதாருடைய தன்மையும் அறிவீர், உம்மையொழிந்தும் ஜீவித்திருப்பாருடைய தன்மையும் அறிவீர். இப்படி பிரித்துச் சொல்லுவானேன்? [இவ்வுலகத்து எல்லாமறிவீர்] "அஜ்ஞாதம் நாஸ்தி தே கிஞ்சித் த்ரிஷு லோகேஷு ராகவ!" என்று ஸ்ரீராமாயணத்தில் முறையிட்டது அறிவோம். நீர் அத்தனை ஸர்வஜ்ஞராயிருந்துவைத்தும் [ஈதேயறியீர்] 'திருமங்கை மன்னனுடைய ப்ரக்ருதி லோக விலக்ஷணம்' என்பதை மாத்திரம் தெரிந்துகொண்டிலீர். [இந்தளூரீரே] நீர் திருவிந்தளூரிலே வந்துநிற்கிற காரியத்தை மறந்தீரே.

முதலடியில் 'அறிந்த' என்பது பெயரெச்சமன்று; பலவின்பால் வினையாலணையும் பெயர்: அறிந்தவற்றை என்றபடி. ... .... ... (௬)

மாட்டீரானீர் பணிநீர்கொள்ள எம்மைப் பணியறியா
வீட்டீர் * இதனை வேறேசொன்னோம் இந்தளூரீரே!*
காட்டீரானீர் நுந்தமடிக்கள்காட்டில் * உமக்கிந்த
நாட்டேவந்துதொண்டரான நாங்களுய்யோமே? (எ)

இந்தளூரீர்!—;

- நீர் — தேவரீர்
- பணி கொள்ள — (எம்மிடத்தில்) கைங்கரியங் கொள்ள
- மாட்டீர் ஆனீர் — விரும்பாதவராயிருக்கின்றீர்;
- எம்மை — அடியோங்களுக்கு
- பணி அறியா — சேஷத்வத்தை உணர்த்திவிட்டு
- வீட்டீர் — கைவிட்டுவிட்டீர்;

(இதெல்லாம் கிடக்கட்டும்:)

- இதனை வேறே சொன்னோம் — மேற்சொல்லப் போகிற விஷயத்தை முக்கியமாக விண்ணப்பஞ் செய்கிறோம்;
- நுந்தம் அடிக்கள் — தேவரீருடைய திருவடிகளை
- காட்டீர் ஆனீர் — காட்டாமல் போனீர்;
- காட்டில் — காட்டியருளினால்,
- இந்த நாட்டே — இந்த நாட்டிலே
- வந்து — உம்முடைய அடிமைக்கு இசைந்துவந்து
- உமக்கு தொண்டர் ஆன நாங்கள் — உமக்கு அடிமைப்பட்டவர்களான நாங்கள்
- உய்யோமே — உஜ்ஜீவித்துப் போகமாட்டோமோ?

* * *—கீழ்ப்பாட்டில் எம்பெருமானுடைய ஸர்வஜ்ஞத்வத்திற்குக் குறை கூறினார்; அவனுடைய ஸர்வ சக்தித்வத்திற்கும் குறைகூறுகின்றாரிப்பாட்டில். [நீர் பணிகொள்ள மாட்டீரானீர்] பெருமாளே! நீர் ஸர்வ சக்தராயிருந்து வைத்தும் என்னிடத்திலிருந்து ஒரு கைங்கரியங்கொள்ள சக்தியற்றவரானீர். இந்த நீசனால் என்ன கைங்கரியம் பண்ணமுடியும் என்று நினைத்து உபேக்ஷிக்கின்றீரேயன்றி, நிறையொன்றுமிலாத நீசனேனையும் கைங்கரியங்களுக்கு ஆளாம்படி திருத்திப் பணிகொள்ள உமக்கு சக்தியில்லையே!. அடியோடே எமக்கு அறிவேயில்லாதபடி மண்கட்டியாகப் படைத்துவைத்தாலும் ஒருவாறு ஆறியிருக்கலாம். சேதந கோடியிலே படைத்துவைத்தீர்; சேஷத்வமே ஸ்வரூபமென்று உணர்த்திவைத்தீர்; கைங்கரியம் செய்யாவிடில் சேஷத்வம் நிறம்பெறாது என்றும் உணர்த்திவைத்தீர். இவ்வளவு அறிவைப் பிறப்பித்துவைத்து ஒன்றுக்கு முதவாதபடி தள்ளிவைத்திருக்கிறீர். கைங்கரியங் கொள்ளாவிடினும் திருவடியையாவது ஸேவைஸாதிப்பிக்கலாமே; அந்த பாக்கியமும் பெற்றிலேன்; திருவடியையுங் காட்டாதொழிந்தீர். பிறர்க்கென்றே ஏற்பட்டிருக்கிற திருவடிகளையும் உமக்காகக் கொண்டிருக்கிறீர்போலும். இக்கொள்கையைத் தவிர்ந்து திருவடிகளை ஸேவை ஸாதிப்பித்தீராகில் இந்த ஸம்ஸார மண்டலத்திலேயே அடியேன் உஜ்ஜீவித்துப் போகமாட்டேனோ? என்கிறார்.

முதலடியில், "பணி அறியா வீட்டீர்" என்றவிடத்து, அறியா என்றது பிறவினையில் வந்ததன்வினை; அறிவித்து என்றபடி.

இரண்டாமடியில் "இதனை வேறே சொன்னோம்" என்றது-அடியேன் விண்ணப்பஞ்செய்கிற வார்த்தை உலகில் மற்றையோர் சொல்லுகிற வார்த்தை போலன்று; நான் சொல்லுகிற மற்ற வார்த்தைகளைப் போலுமன்று என்றபடி. ... ... ... ... (எ)

முன்னைவண்ணம் பாலின்வண்ணம் முழுதும் நிலைநின்ற *
பின்னைவண்ணம் கொண்டல்வண்ணம் வண்ணமெண்ணுங்கால் *
பொன்னின்வண்ணம் மணியின்வண்ணம் புரையுந் திருமேனி *
இன்ன வண்ணமென்று காட்டீர் இந்தளூரீரே! (அ)

இந்தளூரீர்!—;
வண்ணம் { தேவரீருடைய திருமேனி நிறத்தை
எண்ணுங்கால் ஆராயுமளவில்,
முன்னை வண்ணம் { முதலதான கிருதயுகத்தில் கொண்ட நிறம்
பாலின் வண்ணம் { பாலின்நிறமான வெண்மையாயிருக்கும்;
முழுதும் நிலை நின்ற பின்னை வண்ணம் } எப்போதும் நிலைநிற்பதாயும் பிந்தின கலியுகத்திற் கொண்டதாயுமுள்ள நிறம்
கொண்டல் வண்ணம் } காளமேகத்தின் நிறமான கருமையாம்;
பொன்னின் வண்ணம் மணியின் வண்ணம் புரையும் திருமேனி } பொன்னிறத்தையும் நீலமணிநிறத்தையு மொத்திருக்கின்ற (தேவரீருடைய) திருமேனி
இன்ன வண்ணம் என்று காட்டீர் } (கீழ்ச்சொன்ன நிறங்களுள்) இன்ன நிறமுடையதென்று தெரியக் காட்டியருளவேணும்.

* * *—எம்பெருமான் ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு நிறத்தைக் கொள்வன்; கிருத யுகத்திலுள்ளவர்கள் ஸத்வகுணம் நிறைந்தவர்களாய் சுத்தமான நிறத்தை உகக்குமவர்களாகையாலே அவர்கட்காகப் பால்போன்ற நிறத்தைக் கொள்வன்; த்ரேதாயுகத்திலே சிவந்த நிறத்தைக்கொள்வன்; த்வாபர யுகத்தில் பசுமைநிறத்தைக் கொள்வன்; கலியுகத்தில் எந்த நிறங்கொண்டாலும் ஈடுபடுவா ரில்லாமையாலே இயற்கையான நீலநிறத்தைக் கொள்வன். (இது "பாலினீர்மை செம்பொனீர்மை" என்ற திருச்சந்தவிருத்தப் பாசுரத்திலும் "நிகழ்ந்தாய் பால்பொன்பசுப்புக் கார்வண்ணம் நான்கும்" என்ற நான்முகன் திருவந்தாதிப் பாசுரத்திலும் திருமழிசைப் பிரானால் அருளிச் செய்யப்பட்டுள்ளது.)

இந்தளூரீர்! உமக்குப் பல நிறங்கள் உள்ளனவாக சாஸ்த்ரங்களில் விளங்கா நின்றது; இங்கு அர்ச்சையாக எழுந்தருளியிருக்கு மிருப்பிலே எந்த நிறம் கொண்டிருக்கிறீர் என்பதை அடியேன் அறிய வேண்டாவோ? "இதோ பாராய், இதுவே என்வண்ணம்" என்று சொல்லி வடிவைக் காட்டியருளீர் என்கிறார். ... .... .... ... (அ)

எந்தை தந்தைதம்மானென்றென்று எமரேழளவும் *
வந்துநின்ற தொண்டரோர்க்கே வாசிவல்லீரால் *
சிந்தைதன்னுள் முந்திநிற்றிர் சிறிதுந் திருமேனி *
இந்தவண்ண மென்றுகாட்டீர் இந்தளூரீரே! (கூ)

இந்தளூரீர்!—;

| | |
|---|---|
| எந்தை தந்தை தம்மான் என்றுஎன்று | என்தகப்பனார் அவர்தகப்பனார் அவர்தகப்பனார் என்கிற முறைமையில் |
| எமர் எழ் அளவும் | எமதுமுன்னோர்கள் ஏழுதலைமுறையாக |
| வந்து நின்ற | தேவரீருடைய கைங்கரியத்திற்கு இசைந்து வந்திருக்கின்ற |
| தொண்டரோர்க்கே | அடியோங்கள் விஷயத்திலேயே |
| வாசி வல்லீர் | கணக்குப் பார்க்கின்றீர்; |
| ஆல் | ஐயோ!; |
| சிந்தை தன்னுள் | எமது நெஞ்சுக்குள்ளே |
| முந்தி நிற்றிர் | முற்பட்டுவந்து நிற்கின்றீர்; |
| திருமேனி இந்த வண்ணம் என்று | திருமேனியின் நிறம் இன்னதென்று |
| சிறிதும் | சிறிதேனும் |
| காட்டீர் | காட்டுகின்றிலீர். |

* * *—"எந்தை தந்தை தந்தை தந்தைதம் மூத்தப்பனேழ்படிகால் தொடங்கி, வந்து வழிவழிஆட் செய்கின்றோம்" என்றாற் போலே ஏழேழு தலைமுறையாகவந்து அடிமைசெய்யுங் குடியிலே பிறந்த அடியேன் விஷயத்திலே இவ்வளவு ஆலோசிக்கின்றீரே! இது தகுதியோ? 'நம்முடைய திருமேனியை ஸேவிப்பதற்கு இவன் தகுந்தவனோ? தகாதவனோ?' என்று வாசி பார்க்கிறீரே! இது பொருந்துமோ? திருமேனியைக் கண்ணில் காட்டுவதற்கு இவ்வளவு ஆலோசிக்கிற நீர் ஒரு ஆலோசனையும்பண்ணாமல் நெஞ்சிலேவந்து முந்தி நின்று

விட்டீரே, அது ஏன் செய்தீர்? நெஞ்சில் பிரகாசிக்கிறாப் போலவே கண்ணிலும் பிரகாசிக்கவாவது வேணும்; அல்லது, கண்ணில் பிரகாசியாததுபோல நெஞ்சிலும் பிரகாசியாமலாவது இருந்திடவேணும்; ஒன்றுக்கு ஆலோசனை பண்ணாதவர் ஒன்றுக்கு மாத்திரம் ஆலோசனை பண்ணுவது என்னே? திருமேனியின் நிறத்தைச் சிறிதும் காட்டாமலிருக்கிறீரே. [இந்தளூரீரே.] நித்யஸூரிகளுக்குக் காட்சிகொடுக்கும் வடிவை இங்குள்ளார்க்கு முழுக்கக் காட்சி கொடுக்கைக்காகவன்றோ இங்குவந்து நிற்கிறது. ... .... ... (௯)

ஏரார்பொழில்சூழ் இந்தளூரிலெந்தை பெருமானை *
காரார்புறவின் மங்கைவேந்தன் கலியனொலிசெய்த *
சீராரின் சொல்மாலை கற்றுத்திரிவா ருலகத்தில் *
ஆராரவரே அமரர்க்கென்று மமரராவாரே. (௰)

| | |
|---|---|
| ஏர் ஆர் பொழில் சூழ் | அழகிய சோலைகளாலே சூழப்பட்ட |
| இந்தளூரில் | திருவிந்தளூரில் எழுந்தருளியிருக்கிற |
| எந்தை பெருமானை | எம்பெருமான் விஷயமாக, |
| கார் ஆர் புறவின் மங்கை வேந்தன் | மேகங்கள்படிந்த தோப்புகளையுடைய திருமங்கை நகர்க்குத் தலைவரான |
| கலியன் | ஆழ்வார் |
| ஒலி செய்த | அருளிச்செய்த |
| சீர் ஆர் இன் சொல் மாலை | சிறந்த மதுரமான இச் சொல்மாலையை |
| கற்று | ஓதி |
| திரிவார் | திரிகின்றவர்கள் |
| உலகத்து ஆர் ஆர் | இவ்வுலகத்தில் எவரெவருண்டோ, |
| அவரே | அவர்களே |
| என்றும் | எக்காலத்திலும் |
| அமரர்க்கு | நித்யஸூரிகளுக்கும் |
| அமரர் ஆவார் | கௌரவிக்கத்தக்கவராவர். |

* * *—திருவிந்தளூர்ப் பெருமான் விஷயமாகத் திருமங்கையாழ்வா ரருளிச்செய்த இத்திருமொழியை ஓதுமவர் எவராயினும் நித்யஸூரிகளால் சிரஸாவஹித்துக் கொண்டாடப்படுவர்களென்று பயனுரைத்தாராயிற்று.

1. "இராமானுசனை...மேவும் நல்லோர் எக்குற்றவாளர் எது பிறப்பு ஏதியல்வாக நின்றோர், அக்குற்றமப்பிறப்பு அவ்வியல்வே நம்மையாட்கொள்ளுமே" என்று எம்பெருமானாரை அடிபணிந்தவர்கள் எக்குற்றவாளராயிருப்பினும் எவ்விழிபிறப்பாளராயினும் எவ்வியல்வினரா யிருப்பினும் எம்பெருமானாரை ஆச்ரயிக்கப்பெற்ற பெருமையினால் மிகச் சீரியவரேயாவர் என்றாற்போலே, இத்திருமொழியை ஓதுமவர்களும் எத்தன்மையரா யிருப்பினும் இந்த ஸ்ரீஸூக்தியை அதிகரிக்கப்பெற்ற பெருமையினால் சிறந்தவரேயாவர் என்க. "உலகத்து ஆரார் அவரே" என்றதனால் இப்பொருள் விளங்கும். ... ... (௧௦)

அடிவரவு:—நும்மை சிந்தை பேசுகின்றது ஆசை தீ சொல்லாது மாட்டீர் முன்னை எந்தை ஏரார் ஆய்ச்சியர்.

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று.

1. இராமாநுச நூற்றந்தாதி—26.

ஸ்ரீ

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—பத்தாந்திருமொழி,

# ஆய்ச்சியரழைப்ப.

உரையவதாரிகை :—கீழ்த்திருமொழியில் பட்ட பரிதாபங்களெல்லாம் தீரும்படி திருவெள்ளியங்குடியிலே முகங்காட்டுகின்றோம், வாரும் என்று எம்பெருமானழைக்க, மனந்தேறி அங்குச்சென்று அநுபவித்துப் பேசுகிறார்.

வாழைப்பழத்துக்கு அழுகிற குழந்தைகளைத் தாய்மார் மரப்பாச்சியைத் தந்து ஆற்றிவிடுவதுமுண்டே. .... ... ...

ஆய்ச்சியரழைப்ப வெண்ணெயுண்டோருகால்
ஆலிலைவளர்ந்த வெம்பெருமான் *
பேய்ச்சியை முலையுண்டிணைமருதிறுத்துப்
பெருநிலமளந்தவன் கோயில் *
காய்த்தநீள்கமுகுங் கதலியுந்தெங்கும்
எங்குமாம் பொழில்களினடுவே *
வாய்த்த நீர்பாயும் மண்ணியின் தென்பால்
திருவெள்ளியங்குடி யதுவே. (க)

| | |
|---|---|
| ஆய்ச்சியர் | இடைச்சிகள் |
| அழைப்ப | முறையிடும்படியாக |
| வெண்ணெய் உண்டு | வெண்ணெயை (த்திருடி) அமுதுசெய்தவனும் |
| ஒருகால் | பிரளயகாலமாகிற ஒருஸமயத்தில் |
| ஆல் இலை | ஆலந்தளிரில் |
| வளர்ந்த | திருக்கண் வளர்ந்தருளினவனும் |
| பேய்ச்சியை முலை உண்டு | பூதனையினுடைய முலைப்பாலுண்டவனும் |
| இணை மருது | இரட்டை மருதமரங்களை |
| இறுத்து | முறிந்துவிழச் செய்தவனும் |
| பெரு நிலம் அளந்தவன் | விசாலமான பூமியை (த்ரிவிக்ரமனாய்) அளந்துகொண்டவனுமாயிருக்கிற |
| எம் பெருமான் | எம்பெருமானுடைய |
| கோயில் | இருப்பிடம் (எது வென்றால்) |
| காய்த்த நீள் | காய்கள்நிறைந்து ஓங்கியிருக்கின்ற |
| கமுகும் | பாக்குமரங்களும் |
| கதலியும் | வாழைமரங்களும் |
| தெங்கும் | தென்னைமரங்களும் |
| எங்கும் ஆம் | எல்லாவிடங்களிலும் மலிந்திருக்கிற |

| | | | |
|---|---|---|---|
| பொழில்களின் நடுவே | சோலைகளினிடையே | தென்பால் | தென்கரையிலுள்ள |
| வாய்த்த நீர் பாயும் | போதுமான ஜலம் பாயாநிற்கிற | திரு வெள்ளியங் குடி அது | திருவெள்ளியங்குடியாகிய அத்தலமாம். |
| மண்ணியின் | மண்ணியாற்றின் | | |

* * *—ஐந்துலக்ஷங் குடிகள் நிறைந்த திருவாய்ப்பாடியிலே 'என் வீட்டில் வெண்ணெய் போயிற்று, என் வீட்டில் நெய் போயிற்று' என்றாற்போலே ஒவ்வொரு இடைச்சியும் கூவிக்கதறும்படி கவ்யங்களைக்களவாடி அமுதுசெய்தவனும், பிரளயங்கொள்ளாதபடி உலகங்களையெல்லாம் வயிற்றினுள்ளே அடக்கி வைத்து ஒரு சிற்றாலந்தளிரில் கண்வளர்ந்தவனும், தீயகருத்துடன் வந்த பூதனையை முலையுண்கிற வியாஜத்தாலே உயிர்முடித்தவனும், தவழ்நடையிலே யமளார்ஜுநங்களை முறித்துத்தள்ளினவனும், மஹாபலியாலே அபஹரிக்கப்பட்டிருந்த பூமியை இரப்பாளனாய்ச்சென்று பெற்று அளந்துகொண்டவனுமான எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடம், திருவெள்ளியங்குடி.

காய்கள் நிறைந்து ஓங்கிக்கிடக்கிற பாக்குமரங்களும் வாழைமரங்களும் தென்னைமரங்களும் எங்குப்பார்த்தாலும் மலிந்திருக்கப்பெற்ற சோலைகளிலே சென்று பாய்கிற மண்ணியாற்றின் தென்கரையிலுள்ளதாம் இத்தலம்.

காய்த்த, நீள் என்ற அடைமொழிகள் கமுகுக்கும் கதலிக்கும் தெங்குக்கும் அந்வயிக்கவுரியன. க்ரமுகமென்ற வடசொல் கமுகு எனத்திரிந்தது. கதலீ—வடசொல்.

சுக்கிரன் தவம்புரிந்து பேறுபெற்ற தலமென்பதுபற்றி இத்தலத்திற்கு வெள்ளியங்குடியென்று திருநாமமாயிற்றென்பராம். ... .... (க)

ஆநிரைமேய்த் தன்றலைகடலடைத்திட்டு
அரக்கர்தஞ் சிரங்களையுருட்டி *
கார்நிறைமேகங் கலந்ததோருருவக்
கண்ணனார் கருதியகோயில் *
பூநிரைச்செருந்தி புன்னைமுத்தரும்பிப்
பொதும்பிடை வரிவண்டு மிண்டி *
தேனிரைத்துண் டங்கின்னிசைமுரலும்
திருவெள்ளியங்குடி யதுவே. (உ)

| | | | |
|---|---|---|---|
| அன்று | முற்காலத்தில் | அரக்கர்தம் | ராக்ஷஸர்களுடைய |
| ஆ நிரை மேய்த்து | (கோபாலகிருஷ்ணனாய்ப் பிறந்து) பசுக்கூட்டங்களை மேய்த்தவனாயும் | சிரங்களை | தலைகளை |
| | | உருட்டி | அறுத்துத்தள்ளினவனாயும் |
| அலை கடல் அடைத்திட்டு | அலையெறிகின்ற கடலிலே அணைகட்டி (இலங்கையிற் சென்று) | கார் நிறை மேகம் கலந்தது | கார்காலத்தில் திரண்டெழுந்த மேகத்தோடொத்த |

| | |
|---|---|
| ஓர் உருவம் | விலக்ஷணமான வடிவை யுடையனாயுமிருக்கிற |
| கண்ணனார் | கண்ணபிரான் |
| கருதிய கோயில் | திருவுள்ளமுவந்த திவ்யதேசம் (எது வென்றால்) |
| நிரை பூ | வரிசை வரிசையாகப் பூத்திருக்கிற |
| செருந்தி | ஸுரபுன்னை மரங்களினுடையவும் |
| முத்து அரும்பி | முத்துப்போன்ற மொக்குகள் அரும்பியிருக்கிற |
| புன்னை | புன்னை மரங்களினுடையவும் |
| பொதும்பிடை | பொந்துகளிலே |
| வரி வண்டு | அழகிய வண்டுகள் |
| மிண்டி | நெருங்கியிருந்து |
| அங்கு | அவ்விடத்தில் |
| தேன் | மதுவை |
| இரைத்து உண்டு | ஆரவாரத்தோடே பருகி |
| இன் இசை முரலும் | மதுரமான இசைகளைப் பாடாநிற்கப்பெற்ற |
| | திருவெள்ளியங்குடி அதுவே—. |

* * *—தன் மேன்மைபாராதே பசுக்களையும் கன்றுகளையும் இனிது மறித்து நீரூட்டிவிட்டுக்கொண்டு விளையாடினவனும், கடலிலே அணைகட்டி இலங்கையிற்சென்று ராக்ஷஸருடைய தலைகளை உருட்டினவனும், கார்காலத்திலே நிறைந்த மேகம்போலே வடிவுடையனுமாயிருக்கிற எம்பெருமான் தான் திருவுள்ளமுவந்து வர்த்திக்கிறவிடம் திருவெள்ளியங்குடி.

நிறையப் பூத்திருக்கிற ஸுரபுன்னை மரங்களென்ன மொக்குவிட்டுக் கிடக்கிற புன்னை மரங்களென்ன இவற்றினுடைய பொந்துகளினிடையே வண்டுகள் நெருங்கிக்கொண்டு, மதுவனத்தில் புகுந்த வானரமுதலிகளைப்போலே பெரிய ஆரவாரத்தோடே மதுபானம்பண்ணி, பருகின மது வெறுமனிருக்க வொட்டாமையாலே இசைபாடப்பெற்ற சோலைகளையுடையதாம் இத்தலம். (௨)

கடுவிடமுடைய காளியன்தடத்தைக்
கலக்கிமுன் னலக்கழித்து * அவன்றன்
படமிறப்பாய்ந்து பன்மணிசிந்தப்
பல்நடம் பயின்றவன் கோயில் *
படவரவல்குல் பாவைநல்லார்கள்
பயிற்றிய நாடகத்தொலிபோய் *
அடைபுடைதழுவி யண்டநின்றதிரும்
திருவெள்ளியங்குடி யதுவே. (௩)

| | |
|---|---|
| முன் | முன்பொருகால், |
| கடு விடம் உடைய | மிகக் கொடிதான விஷத்தையுடைத்தான |
| காளியன் தடத்தை | காளியநாகம் கிடந்த பொய்கையை |
| கலக்கி | கலங்கச்செய்து (அந்த நாகத்தை) |
| அலக்கழித்து | வருந்தும்படிபண்ணி |
| அவன் தன் | அக்காளியனுடைய |
| படம் | படங்களானவை |
| இற | முறியும்படியாக |
| பாய்ந்து | (கடம்ப மரத்திநின்று) பாய்ந்து |

| | | | |
|---|---|---|---|
| பல் மணி சிந்த | (படத்திலுள்ள) மணிகளெல்லாம் சிந்தும்படியாக | பயிற்றிய நாடகத்து | பழகிய நடனத்தினுடைய |
| பல் நடம் பயின்றவன் கோயில் | (அப்படங்களின்மீதுநின்று) பலவகை நர்த்தனங்களைப் பண்ணின பெருமான் ஸந்நிதி (எதுவென்னில்) | ஒலி | ஓசையானது |
| | | அடை புடை போய் தழுவி | அடுத்தபக்கங்களிலெங்கும் சென்றுபரவி |
| படம் அரவு அல்குல் | படமெடுத்த பாம்போடொத்த நிதம்பத்தையுடையரான | அண்டம் நின்று அதிரும் | ஆகாசத்திலுஞ் சென்று அதிரப்பெற்ற |
| பாவை நல்லார்கள் | அழகிய மாதர்கள் | | திருவெள்ளியங்குடி அதுவே—. |

* * *—நாலைந்து காதவழிக்கு அப்பால் பறக்கிற பக்ஷிகளும் சிறகு எரிந்து விழும்படியாக அத்தனை க்ரூரமான விஷத்தையுடைய காளியநாகங் கிடந்த பொய்கையிலே அஞ்சாமல் சென்று புகுந்து அப்பொய்கைமுழுதும் குழம்பாகும்படி கலக்கி அந்த நாகத்தையும் 'இனி வேறு யமயாதனை வேண்டா' என்னும்படியாக வருத்தமுறுத்தி, கரையிலேநிற்கிற கடம்பமரத்தினுச்சியிலேறி அவனுடைய படங்கள் இறும்படியாகப்பாய்ந்து, படங்களிலுள்ள பலவகைப் பட்ட ரத்னங்கள் சிதறிவிழும்படியாகப் பலவிதமான நடனங்களைச்செய்த கண்ணபிரான் விரும்பி யெழுந்தருளியிருக்குமிடம், திருவெள்ளியங்குடி.

[படவரவல்குல் இத்யாதி.] திருவெள்ளியங் குடியிலுள்ள அழகிய பெண்டிர்கள் நாடகப்பயிற்சி செய்கின்றனர்; அப்போது உண்டாகிற தொனியானது நாற்றிசைகளிலும் மேலுலகங்களிலும் வியாபித்து அதிர்கின்றதாம்.

அடைபுடை=அடை—அடுத்திருக்கிற, புடை—பக்கங்களிலெல்லாம் என்று பொருளுரைக்கப் பட்டது. பெரியவாச்சான்பிள்ளை யருளிய வியாக்கியானத்தில் "[அடைபுடை தழுவி] அஹோராத்ரமணைந்து ஆகாசத்திலே நின்று கோஷியா நிற்குமாய்த்து" என்று காணப்படுதலால் "அடைபுடை" என்பதற்கு 'இரவும் பகலும்' என்று பொருள் கொள்ளப்பட்டதாகத் தெரிகின்றது; இச்சொல் இப்பொருளில் சில நாடுகளில் வழங்கப்படுவதாக இருந்தது போலும். .... .... ... ... (ஈ)

கறவைமுன் காத்துக் கஞ்சனைக்காய்ந்த
காளமேகத் திருவுருவன் *
பறவைமுன்னுயர்த்துப் பாற்கடல்துயின்ற
பரமனார் பள்ளிகொள்கோயில் *
துறைதுறை தோறும் பொன்மணி சிதறும்
தொகுதிரை மண்ணியின் தென்பால் *
செறிமணிமாடக் கோடிகதிரணவும்
திருவெள்ளியங்குடி யதுவே. (ச)

| | |
|---|---|
| முன் | முற்காலத்தில் |
| கறவை | பசுக்களை |
| காத்து | ரக்ஷித்தவனையும் |
| கஞ்சனை காய்ந்த | கம்ஸனைச் சீறி முடித்தவனையும் |
| காள மேகம் திரு உருவன் | காளமேகம்போன்ற திருமேனியை யுடையனையும் |
| பறவை | பெரிய திருவடியை |
| முன் உயர்த்து | முன்னே கொடியாக வெடுத்தவனையும் |
| பாற்கடல் | திருப்பாற் கடலிலே |
| துயின்ற | பள்ளி கொள்பவனையுமிருக்கிற |
| பரமனார் | ஸர்வேச்வரன் |
| பள்ளி கொள் கோயில் | சாய்ந்தருளுமிடம் (எதுவென்றால்) |
| துறை துறை தோறும் | எல்லாத் துறைகளிலும் |
| பொன் மணி சிதறும் | பொன்களையும் மணிகளையும் கொழிக்கின்ற |
| தொகு திரை | திரண்ட அலைகளை யுடைத்தான |
| மண்ணியின் தென்பால் | மண்ணியாற்றின் தென்கரையிலே, |
| செறி மணி மாடம் | நெருங்க இழைக்கப்பட்ட மாணிக்கங்களை யுடைத்தான மாடமாளிகைகளிலுள்ள |
| கொடி | த்வஜங்கள் |
| கதிர் அணவும் | ஸூர்யமண்டலத்தை ஸ்பர்சித்திருக்கப்பெற்ற |

திரு வெள்ளியங்குடி அதுவே—.

* * *—தான் பராத்பரனாயிருக்கு மிருப்பைச் சிறிதும் கணிசியாமல், அறிவு கெட்டவர்களில் எல்லைநிலமான இடையர்குலத்திலே பிறந்து பசுக்களை மேய்த்துக் காத்தவனும், கம்ஸனைச் சீறி முடித்தவனும், நீர் கொண்டெழுந்த காளமேகம்போன்ற திருநிற முடையவனும், பெரிய திருவடியைக் கொடியாக வுடையவனும், பிரமன் முதலானாருடைய கூக்குரல் கேட்கும்படியாகத் திருப்பாற்கடலிலே திருக்கண் வளர்ந்தருள்பவனுமான ஸர்வேச்வரன் வந்து சாய்ந்தருளுமிடம் திருவெள்ளியங்குடி. துறைகள்தோறும் நவரத்னங்களைக் கொண்டுவந்து தள்ளுகிற அலைகளையுடைத்தான மண்ணியாற்றின் தென்கரையிலுள்ளது இத்தலம். ஸூர்யமண்டலத்தளவும் ஓங்கியிருக்கின்ற மணி மாடங்களை யுடையதுமாம். .... ... ... ... ... (௪)

பாரினையுண்டு பாரினையுமிழ்ந்து
பாரதம் கையெறிந்து * ஒருகால்
தேரினையூர்ந்து தேரினைத் துரந்த
செங்கண்மால் சென்றுறை கோயில் *
ஏர்நிறை வயலுள் வாளைகள் மறுகி
எமக்கிட மன்றிதென்றெண்ணி *
சீர்மலி பொய்கை சென்றணைகின்ற
திருவெள்ளியங்குடி யதுவே. (௫)

| | |
|---|---|
| ஒரு கால் | ஒரு சமயத்தில், |
| பாரினை உண்டு | உலகங்களை வயிற்றினுள்ளே அடக்கிவைத்தவனையும் |
| (மற்றொரு சமயத்தில்) | |
| பாரினை உமிழ்ந்து | அவ்வுலகங்களை வெளிப்படுத்தினவனையும் |

| | | | |
|---|---|---|---|
| பாரதம் கையெறிந்து | பாரதயுத்தத்தில் கையு மணியும் வகுத்தவனும் | வயலுள் | கழனிகளிலுள்ள |
| தேரினை ஊர்ந்து | (அர்ஜுநனுடைய) தேரை நடத்தி | வாளைகள் | வாளை மீன்கள் |
| தேரினை ஆர்ந்த | (எதிரிகளினுடைய) தேர்களைப் பங்கப் படுத்தினவனுமுள்ள | மறுகி | அஞ்சி |
| செம் கண் மால் | புண்டரீகாக்ஷன் | இது எமக்கு இடம் அன்று என்று எண்ணி | 'இந்த வயலானது நாம் வஸிக்கத் தக்கதன்று' என்று நினைத்து |
| சென்று உறை கோயில் | வந்து நித்யவாஸம் பண்ணுகிற ஸந்நிதி (எதுவென்றால்); | சீர் மலி பொய்கை | அழகுமிக்க தடாகங்களிலே |
| ஏர் நிரை | உழுகிறவர்களின் வரிசையையுடைய | சென்று அணைகின்ற | சென்று சேரப்பெற்ற |
| | | | திருவெள்ளியங்குடி அதுவே—. |

* * *—பூமியைப் பிரளயங் கொள்ளாதபடி திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்தவனும், பிரளயம் கழிந்தபின் வெளிப்படுத்தினவனும், பாரதயுத்தத்திலே கையுமணியும் வகுத்தவனும், அர்ஜுநனுக்குத் தேர்ப்பாகனாயிருந்து நடத்தினவனும், பீஷ்மன் முதலானோர் தேரைவிட்டு ஓடும்படி அவர்களைப் பங்கப்படுத்தினவனும், அடியார் திறத்திலுள்ள வாத்ஸல்யமடங்கலும் திருக்கண்களிலே தோற்றும்படி யிருப்பவனுமான பெருமான் வந்து வாழுமிடம் திருவெள்ளியங்குடி.

இத்தலத்து வயல்கள் எப்போதும் ஏர்கொண்டு உழப்படுவதால் 'இப்படி அபாயங்களுக்குக் காரணமான இவ்விடம் நமக்கு வாஸயோக்யமல்ல' என்று கருதின வாளைமீன்கள் நிர்ப்பயமாக வாழவேண்டிச் சிறந்த பொய்கைகளிலே சென்று சேர்கின்றனவாம். இதனால் எப்போதும் ஏருழும்படியான நிலவளம் சொன்னபடி. ஸம்ஸாரத்தில் வாழ்ச்சி ஆபத்துக்களுக்கு இடமென்று துணிந்து அதனைவிட்டு நித்யாநந்தமான பரமபதத்தில் வாஸத்தைக் கருதுகின்ற முமுக்ஷுக்களின்படியை இங்ஙனே யெடுத்துக் காட்டினரென்ப. ... (ரு)

காற்றிடைப்பூளை கரந்தன வரந்தை
யுறக் கடலரக்கர் தம்சேனை *
கூற்றிடைச் செல்லக் கொடுங்கணை துரந்த
கோலவில்லிராமன் தன்கோயில் *
ஊற்றிடை நின்ற வாழையின் கனிகள்
ஊழ்த்து வீழ்ந்தன வுண்டு மண்டி *
சேற்றிடைக் கயல்க ளுகள் திகழ் வயல்சூழ்
திருவெள்ளியங்குடி யதுவே. (சா)

| | | | |
|---|---|---|---|
| பூளை | பூளைப்பூவானது | அரக்கர் தம் | ராக்ஷஸருடைய |
| காற்று இடை | பெருங்காற்றிலே | கடல் சேனை | கடல்போன்றசேனையானது |
| கரந்தன | உருமாய்ந்து ஒழிவதுபோல | அரந்தை உற | துன்ப மடையும்படியாகவும் |

| | |
|---|---|
| கூற்று இடை செல்ல | யமனிடம்சென்று சேரும்படியாகவும் |
| கொடு கணை துரந்த | கொடிய அம்புகளைப் பிரயோகித்த |
| கோலம் வில் | அழகிய வில்லையுடைய |
| இராமன் தன் கோயில் | இராமபிரானுடைய ஸந்நிதி (எதுவென்றால்); |
| ஊற்று இடை நின்ற | நீரூற்று உள்ள நிலங்களிலே முளைத்திருக்கிற |
| வாழையின் | வாழை மரங்களினுடைய |
| ஊழ்த்து இற்றன கனிகள் | (கனியப்பழுத்து) இற்று உதிர்ந்த பழங்களை |
| கயல்கள் | கயல் மீன்கள் |
| மண்டி உண்டு | மேல்விழுந்து புஜித்து |
| சேற்றிடை | சேற்று நிலங்களிலே |
| உகள் | துள்ளி விளையாடப்பெற்ற |
| திகழ் வயல் சூழ் | விளங்குகின்ற கழனிகளால் சூழப்பட்ட |

திருவெள்ளியங்குடி அதுவே—.

* * *—பூளைப்பூக்கள் என்று சில காட்டுப்பூக்களுண்டு; காற்றடித்தவாறே அவை பறந்து உருமாய்ந்து இன்னவிடம் போயினவென்று தெரியாதபடி போய்விடும்; அவ்விதமாகவே இலங்கையரக்கர் சேனைகளெல்லாம் உருமாய்ந்து ஒழியும்படியாகக் கொடிய அம்புகளைப் பிரயோகித்தான் இராமபிரான்-என்பன முன்னடிகள்: அப்படிப்பட்ட பராக்ரமம்வாய்ந்த கோதண்டபாணிப் பெருமானது திருக்கோயில் திருவெள்ளியங்குடி.

நீர்நிலங்களிலே பயிர்செய்யப்பட்டுச் செழித்துவளர்ந்துள்ள வாழைகளானவை முற்றிப்பழுக்கும்; அந்தப் பழங்கள் இற்றுக் கீழேவிழும். மீன்கள் அவற்றை மேல்விழுந்து புஜித்துச் செருக்கித் துள்ளிவிளையாடப்பெற்ற வயல்கள் சூழ்ந்ததாம் இத்தலம்.

கரந்தன—'கரந்தாலன்ன' என்பதன் தொகுத்தல். கரத்தல்—உருத்தெரியாது போதல். அரந்தை—துன்பம். கூற்று—யமன்; உடலையும் உயிரையும் வேறு கூறுக்குபவன் என்ற காரணம்பற்றிவந்த பெயர். ஊழ்த்தல்—உதிர்தல்.

ஒள்ளிய கருமம் செய்வனென் றுணர்ந்த
மாவலி வேள்வியில் புக்கு *
தெள்ளிய குறளாய் மூவடிகொண்டு
தீக்குற வளர்ந்தவன் கோயில் *
அள்ளியம் பொழில்வாயிருந்துவாழ் குயில்கள்
அரியரி யென்றவை யழைப்ப *
வெள்ளியர் வணங்க விரைந்தருள்செய்வான்
திருவெள்ளியங் குடியதுவே. (எ)

| | |
|---|---|
| ஒள்ளிய கருமம் செய்வன் என்று உணர்ந்த | (வேண்டுவோர்க்கு வேண்டினபடி கொடுப்பதாகிற) சிறந்த காரியத்தைச் செய்யக் கடவேனென்று ஸங்கல்பித்துக்கொண்ட |
| மாவலி | மஹாபலியினுடைய |
| வேள்வியில் | யாகத்திலே |
| தெள்ளிய குறள் ஆய் புக்கு | தெளிவுள்ள வாமநமூர்த்தியாய்க்கொண்டு பிரவேசித்து |
| மூ அடி கொண்டு | (அந்த மாவலியிடமிருந்து) மூவடி நிலத்தை இரந்து பெற்று |

| | | | |
|---|---|---|---|
| திக்கு உற வளர்ந்தவன் கோயில் | எல்லாத் திசைகளிலும் வியாபிக்கும்படியாக வளர்ந்த பெருமான் வாழுமிடம் (எதுவென்றால்); | அரி அரி என்று அழைப்ப | ‘ஹரிர் ஹரி:’ என்று கூவப்பெற்றதாய், |
| அள்ளி அம் பொழில் வாய் | தாதுகளை யுடையனவாய் அழகியவான சோலைகளிலே | வெள்ளியார் வணங்க விரைந்து அருள் செய்வான் | சுக்கிரன் வந்து உபாஸனைபண்ண அவனுக்கு விரைவில் அருள்செய்த பெருமானுடையதான |
| இருந்து வாழ் | இருந்துகொண்டு மகிழ்கிற | | திரு வெள்ளியங்குடி அதுவே—. |
| குயில்கள் அவை | குயில்களானவை | | |

* * *—‘யாகம் செய்தல்’ என்றொரு வியாஜத்தையிட்டு ‘என்னுடைய ஸர்வஸ்வத்தையும் பிறர்க்கு உரித்தாக்கக்கடவேன்’ என்று ஸங்கல்பித்துக் கொண்ட மஹாபலியின் யஜ்ஞபூமியில் வாமநப்ரஹ்மசாரியாய்ச்சென்று மூவடி நிலம் இரந்து பெற்றுத் திசைகளெல்லாம் விம்மவளர்ந்த பெருமான் வாழுமிடம் திருவெள்ளியங்குடி.

முதலடியில் ‘உணர்ந்து’ என்றும் பாடமுண்டு; அப்போது, ‘மாவலியானவன் வேண்டுவார்க்கு வேண்டினபடி கொடுப்பதாகிற நற்காரியஞ் செய்கிறானென்று தெரிந்துகொண்டு அவனது வேள்விக் கெழுந்தருளி’ என்று பொருளாம்.

[அள்ளியம்,. பொழில்வாய் இத்யாதி.] எதுகைநயம் நோக்கி அல்லியை அள்ளியென்றதாகக் கொள்க. அன்றியே, ‘அளி’ என்பதை அள்ளியென்று விரித்துக் கிடப்பதாகவுங் கொள்வர்: குளிர்ச்சிபொருந்திய என்றபடி. திவ்ய தேசத்தில் வாழுங் குயில்களாகையாலே அங்குள்ள பாகவதர்களின் அநுஸந்தானமே அவற்றுக்கும் அமைந்து ‘ஹரிர்ஹரி: ஹரிர்ஹரி:’ என்று சோலைத் தடங்களிலே கூவுகின்றனவாம்.

வெள்ளியார் வணங்க விரைந்தருள் செய்வான்=1. “என்னை வெள்ளுயிராக்கவல்ல” என்னுமாபோலே சுத்தஸாத்விகர்களை வெள்ளியாரென்றதாகக் கொண்டு, அவர்கள்வந்து ஆச்ரயிக்க அவர்கட்கு விரைவில் அருள் செய்பவன் வாழுமிடம் என்பதாகக் கொள்ளலாம். அன்றியே, அஸுரகுருவான சுக்கிரன் இத்தலத்தே உபாஸித்துப் பேறு பெற்றானென்று இதிஹாஸம் சொல்லிப்போருவதுண்டாகையாலே அதற்குச்சேர, வெள்ளியார் என்பதற்கு, ‘சுக்கிரன்’ என்று பொருள் கொள்ளவுமாம். அங்ஙனுமன்றியே, உடலில் நீறு பூசி வெளுத்திருப்பவனான ருத்ரனைச் சொல்லிற்றாய் அவனுடைய பாதகத்தைப் போக்கினபடியைக் கூறுவதாகவு முரைப்பர். ... ... .... (எ)

முடியுடை யமரர்க்கிடர்செய்யும்
அசுரர்தம் பெருமானை * அன்றரியாய்
மடியிடைவைத்து மார்வை முன்கீண்ட
மாயனார் மன்னிய கோயில் *

1. திருப்பல்லாண்டு—8.

படியிடைமாடத் தடியிடைத் தூணில்
பதித்தபன் மணிகளினொளியால் *
விடிபகலிர வென்றறிவரிதாய
திருவெள்ளியங் குடியதுவே. (அ)

முடி உடை அமரர்க்கு — கிரீடம் பூண்டிருக்கிற தேவர்களுக்கு
இடர் செய்யும் — துன்பங்களைச் செய்துகொண்டிருந்த
அசுரர்தம் பெருமானை — இரணியாசுரனை
முன் அன்று — முற்காலத்தில்
அரி ஆய் — நரசிங்கமாகி
மடியிடை வைத்து — மடிமேல் வைத்துக்கொண்டு
மார்வை கீண்ட — மார்பைக்கிழித்து முடித்தவனான
மாயனார் மன்னிய கோயில்—;

படியிடை — பூமியிலே உண்டான
மாடத்து — மாடங்களில் (நடப்பட்டிருக்கிற)
தூண் அடியிடையில் — தூணடியிலே
பதித்த — அழுத்தியுள்ள
பல் மணிகளின் ஒளியால் — பலவகைப்பட்ட ரத்னங்களின் ஒளியாலே
விடி பகல் இரவு என்று அறிவு அரிது ஆய — விடியற்காலமென்றும் பகற்காலமென்றும் இராக்காலமென்றும் அறியக் கூடாமலிருக்கிற
திரு வெள்ளியங்குடி அதுவே—.

* * *—எங்களில் மேற்பட்டாரில்லையென்று அஹங்காரங்கொண்ட முடி கவித்திருந்த தேவஜாதிக்கெல்லாம் துன்பங்களை விளைத்துக்கொண்டிருந்த இரணியாசுரனைத் தொலைக்கவேண்டி நரஸிம்ஹமூர்த்தியாய்த் தூணில்தோன்றி அவனை மடிமீது ஏறிட்டுக்கொண்டு மார்வைக் கிழித்தெறிந்த மாயன் மன்னுமிடம் திருவெள்ளியங்குடி.

மடியிடைவைத்து என்றசொல் அநுதாபந்தோற்ற விருக்குமென்று பட்டரருளிச்செய்வராம்; அதாவது—அநுகூலனான என்னை மடியிலேற்றிக்கொண்டு மகிழ்விக்கவேண்டியிருக்க அது செய்யாதே பிரதிகூலர்களில் தலைவனான அப்பாவிக்கு மடியிடங் கொடுப்பதே! என்ற வயிற்றெரிச்சல் உள்ளுறை. இரணியன் வரம் பெறுமிடத்து 'பூமியிலும் வானத்திலும் சாகக்கடவேனல்லேன்' என்று பெற்ற வரம் பழுதுபடாமைக்காக மடிமீதுவைத்துக் கொன்றனன் என்பது உணரத்தக்கது.

இத்தலத்தின் திருமாளிகைகளெல்லாம் நவமணிகள் அழுத்தப்பெற்றிருத்தலால் அவற்றின் ஒளி இடைவிடாது விளங்காநின்றமையால் 'இப்போது பகல், இப்போது இரவு' என்று அறியக்கூடவில்லையென்பன பின்னடிகள். இங்ஙனே வருணித்தல் பொய்யுரையாகாதோவென்று சிலர் சங்கிப்பர்; இத்தலம் இப்படிப்பட்ட அதிசயம் வாய்ந்ததாக அமையவேணும் என்னுமாவல் ஆழ்வார்க்கு உள்ளதாதலால் அதுதோன்ற இங்ஙனே அருளிச்செய்யப்பட்டதென்க. ஆதராதிசயத்தினால் சிறப்பித்துக் கூறுதல் தகும். ... (அ)

குடிகுடியாகக் கூடிநின் றமரர்
  குணங்களே பிதற்றி நின்றேத்த *
அடியவர்க் கருளி யரவணைத் துயின்ற
  ஆழியா னமர்ந்துறை கோயில் *
கடியுடைக் கமல மடியிடை மலரக்
  கரும்பொடு பெருஞ்செந்நெ லசைய *
வடிவுடை யன்னம் பெடையொடுஞ் சேரும்
  வயல் வெள்ளியங்குடி யதுவே. (கூ)

| | |
|---|---|
| அமரர் | பிரமன் முதலிய தேவர்கள் |
| குடி குடி ஆக கூடி நின்று | குடும்பம் குடும்பமாகச் சேர்ந்திருந்து |
| குணங்களே | (தனது) திருக் கல்யாண குணங்களையே |
| பிதற்றி நின்று | சொல்லிக் கொண்டு |
| ஏத்த | துதிக்கப்பெற்று |
| அடியவர்க்கு அருளி | அடியார் திறத்தில் கிருபை பண்ணிக்கொண்டு |
| அரவு அணை துயின்ற | சேஷசயனத்தில் திருக்கண் வளர்ந்தருள் கின்ற |
| ஆழியான் அமர்ந்து உறை கோயில்—; | |
| கடி உடை | பரிமளத்தை யுடைத்தான |
| கமலம் | தாமரைப் பூக்கள் |
| அடியிடை மலர | (கரும்புகளினுடையவும் செந்நெற்பயிர்களி னுடையவும்) அடி நிலங்களிலே மலரப் பெற்றதும், |
| கரும்பொடு | கரும்புகளும் |
| பெரு செந்நெல் | பெருத்த செந்நெற் கதிர்களும் |
| அசைய | அசைந்து கொண்டிருக்கப் பெற்றதும் |
| வடிவு உடை அன்னம் | அழகிய வடிவையுடைய அன்னப்பறவைகள் |
| பெடையொடும் சேரும் | பேடையோடு கூடப் பெற்றதுமான |
| வயல் | கழனிகளையுடைய |
| வெள்ளியங் குடியதுவே— | |

* * *—பிரமன் சிவனிந்திரன் முதலிய தேவர்கள் திரள்திரளாகவந்து சேர்ந்து, ‘எம்பெருமானுடைய பரத்வம் என்னே!’ என்று பரத்வகுணத்தைப் பற்றிப் பேசுவன சில திரள்களும், ‘எம்பெருமானுடைய ஸௌலப்யம் என்னே!’—‘எம்பெருமானுடைய ஸௌசீல்யம் என்னே!’—‘எம்பெருமானுடைய வாத்ஸல்யம் என்னே!’—என்றிப்படி ஓரோகுணத்திலே யீடுபட்டுப் பேசுவன சிலசில திரள்களுமாய்க் கொண்டு பல குழாங்கள் கூடி நின்றேத்த அடியவர்க்கு அருள்செய்து கொண்டு திருப்பாற்கடலில் துயில்கொள்ளுமெம்பெருமானே திருவெள்ளியங் குடியில் ஸந்நிதிபண்ணி யிராநின்றானென்கிறார். ஆழியான்—திருவாழி யாழ்வானைத் திருக்கையிலுடையவன். அன்றியே, ஆழியென்று கடலுக்கும் பேராகையாலே திருப்பாற்கடலை இடமாகவுடையவன் என்றுமாம்.

[கடியுடைக்கமலம் இத்யாதி.] நறுமணம் மிக்க தாமரைமலரானது கரும்புக்கும் செந்நெலுக்கு மடியிலே மலர்கின்றது; கரும்பும் பெருஞ்செந்நெலும் அத்தாமரைமலரின் இருபுறத்திலும் அசைகின்றன; அம்மலரின்மீது அன்னம்

பேடையோடு கூடிவாழ்கின்றது—என்று அருளிச்செய்கிற இதற்கு ஒரு உட்கருத்து உரைக்கலாம்; அதாவது—தாமரைமலரென்பது ஒரு ஸிங்காசனம்; இருபக்கத்திலும் கரும்பும் செந்நெலும் அசைவது சாமரம் வீசுவதொக்கும்; தாமரை மலரின்மீது அன்னம் பேடையோடுகூடி வாழ்வது பெருமாளும் பிராட்டியும் கூடி வாழ்வதொக்கும் என்பதாம். மஹிஷியோடே கூட ராஜபுத்ரனிருக்கும் படிக்கு ஸ்மாரகமென்னவுமாம். .... .... .... (௯)

பண்டுமுனேனமாகி யன்றொருகால்
 பாரிடந் தெயிற்றினில் கொண்டு *
தெண்டிரை வருடப் பாற்கடற் றுயின்ற
 திருவெள்ளியங்குடி யானை *
வண்டறைசோலை மங்கையர் தலைவன்
 மானவேற்கலியன் வாயொலிகள் *
கொண்டிவை பாடுந் தவமுடையார்கள்
 ஆள்வரிக் குரைகட லுலகே. (௰)

| | |
|---|---|
| பண்டு முன் அன்று ஒருகால் | முன்பொருகாலத்தில் |
| ஏனம் ஆகி | வராஹரூபியாய்த் திருவவதரித்து |
| பார் | பூமியை |
| இடந்து | குத்தியெடுத்து |
| எயிற்றினில் கொண்டு | கோட்டின் மேற் கொண்டவனும் |
| தெண் திரை | தெளிந்த அலைகள் |
| வருட | (திருவடிகளின்மேல்) மோதும்படி |
| பால் கடல் | திருப்பாற்கடலிலே |
| துயின்ற | திருக்கண்வளர்ந் தருள்பவனும் |
| திரு வெள்ளியங் குடியானை | திருவெள்ளியங்குடியில் திருக்கோயில் கொண்டிருப்பவனுமான எம்பெருமான் விஷயமாக, |

| | |
|---|---|
| வண்டு அறை சோலை | வண்டுகள் முரலும் சோலைகளை யுடைய |
| மங்கையர் | திருமங்கை நாட்டில் உள்ளவர்களுக்கு |
| தலைவன் | ஸ்வாமியும் |
| மானம் வேல் | பெருமை தங்கிய வேற்படையை யுடையவருமான |
| கலியன் | ஆழ்வாருடைய |
| வாய் ஒலிகள் இவை | ஸ்ரீஸூக்தியாகிய இத்திருமொழியை |
| கொண்டு | நாவில் கொண்டு |
| பாடும் தவம் உடையார்கள் | பாடும் பாக்கிய முடையவர்கள், |
| குரை கடல் இவ்வுலகு | கோஷிக்கின்ற கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தை |
| ஆள்வர் | ஆளப்பெறுவர்கள். |

* * *—வராஹகல்பத்தின் ஆதியிலே அண்டபித்தியில் ஒட்டின பூமி உருமாய்வதற்கு முன்னே மஹாவராஹமாய்ப் பூமியை இடந்து திருஎயிற்றிலே கொண்டு அந்த விடாய்தீருமாறு கடல்திரைகளின் குறுந்திவலைகள் துடைகுத்தி யுறக்கத் திருப்பாற்கடலில் திருக்கண்வளர்ந்தருளின பெருமானே திருவெள்ளி

யங் குடியிலுள்ளான்; அப்பெருமான் விஷயமாக ஆழ்வாரருளிச் செய்த இத் திருமொழியைப் பண்ணிலே அமைத்துப் பாடும் பாக்கியமுடையார் எவரோ, அவர்கள் கடல்சூழ்ந்த மண்ணுலகைத் தாங்களிட்ட வழக்காக ஆளப்பெறுவர் கள்—என்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

ஹேயமான ஐச்வர்யம் அருளிச்செயல் கற்கைக்குப் பயனாகச் சொல்லத் தகுமோவென்னில்; இவ்வாழ்வார் படைத்த பெருஞ் செல்வமெல்லாம் பகவத் பாகவத கைங்கரியங்களிலே உதவப்பெற்று உத்தேச்ய கோடியில் புகக் கண்டத னால் எல்லார்க்கு மிங்ஙனேயாகக் கடவதென்று திருவுள்ளம்பற்றி யருளிச் செய் கிறாரென்னலாம். ஐச்வர்யார்த்திகளும் தம் ஸ்ரீஸூக்தியை இழக்கலாகாதென்று அவர்களையும் ஆகர்ஷிப்பதற்கு அருளிச்செய்தாராகவுமாம். இவ்வருளிச்செயல் ஐஹிக புருஷார்த்தத்தோடு ஆமுஷ்மிக புருஷார்த்தத்தோடு வாசியற எல்லா வற்றுக்கும் ஸாதநம் என்பது விளங்கும். ... ... ... (௧௦)

அடிவரவு:—ஆய்ச்சியர் ஆநிரை கடு கறவை பாரினை காற்று ஒள்ளிய முடி குடி பண்டு அறிவது.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிச்செய்த
திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்
பெரியதிருமொழி நான்காம் பத்து
முற்றுப்பெற்றது.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.
ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருமங்கைமன்னன் திருவாய் மலர்ந்தருளிய

# பெரிய திருமொழியில்

ஐந்தாம்பத்து—முதல் திருமொழி.

## அறிவதரியான்.

திருப்புள்ளம் பூதங்குடி மங்களாசாஸநத் திருப்பதிகம்.

அறிவதரியா னனைத்துலகு முடையான் என்னையாளுடையான் *
குறியமாணியுருவாய கூத்தன் மன்னி யமருமிடம் *
நறியமலர்மேல் சுரும்பார்க்க எழிலார்மஞ்ஞை நடமாட *
பொறிகொள் சிறைவண் டிசைபாடும் புள்ளம்பூதங் குடிதானே. (க)

| | |
|---|---|
| அறிவது அரியான் | (ஒருவர்க்கும் தம் முயற்சியாலே) அறியக் கூடாதவனும் |
| அனைத்து உலகும் உடையான் | எல்லாவுலகங்கட்கும் ஸ்வாமியானவனும் |
| என்னை ஆள் உடையான் | அடியேனை அடிமை கொண்டவனும் |
| குறிய மாணி உரு ஆய | வாமநப்ரஹ்மசாரி வேஷங் கொண்டவனும் |
| கூத்தன் | (அவ்வேஷத்தோடு மாவலி வேள்வியிலெழுந்தருளும் போது) விலக்ஷணமான நடையிட்டு எழுந்தருளினவனுமான பெருமான் |
| மன்னி அமரும் இடம் | இடைவிடாது நித்யவாஸம் பண்ணுமிடமாவது ;— |
| சுரும்பு | 'சுரும்பு' என்னுஞ் சாதிவண்டுகள் |
| நறிய மலர் மேல் | மணம்மிக்க புஷ்பங்களின் மீது (இருந்துகொண்டு) |
| ஆர்க்க | ரீங்காரம் செய்யப் பெற்றதும் |
| எழில் ஆர் | அழகுபொருந்திய |
| மஞ்ஞை | மயில்கள் |
| நடம் ஆட | கூத்தாடப் பெற்றதும் |
| பொறி சிறை கொள் வண்டு | வரியையும் சிறகையுமுடைய வண்டினங்கள் |
| இசை பாடும் | இசைபாடப் பெற்றதுமான |
| புள்ளம் பூதங்குடி | திருப்புள்ளம் பூதங்குடியென்னுந் திருப்பதியாம். |

* * *—அறிவதரியான்=அறிய முடியாதவன் என்றால், 'ஒருவராலும் அறிய முடியாதவன்' என்று பொருளா? அன்றி, 'சிலரால் அறிய முடியாதவன்? என்று பொருளா?' என்று கேள்விபிறக்கும் ; ஒருவராலும் அறிய முடியாதவன் என்றால் முயற்கொம்பு, மலடிமகன், ஆகாசத்தாமரை முதலிய பொருள்கள் போல எம்பெருமானும் அடியோடு இல்லாதவன் என்றதாகும்;

ஆகையாலே அது பொருளன்று; 'பகவத்ஸ்வரூபத்தை நாமே முயன்று அறிந்திடுவோம்' என்று முயல்பவர்களால் அறியக் கூடாதவன் என்று பொருள் கொள்க. அவன்தானே தன் இன்னருளாலே தன் ஸ்வரூபஸ்வபாவங்களைக் காட்டிக்கொடுக்க அப்போது அறியலாகுமேயன்றி வேறுவிதமாக அறியலாகாதென்கை. "𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌦𑌦𑌾𑌮𑌿 𑌤𑍇 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍—திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே யோகமைச்வரம்" என்று அர்ஜுநனுக்குக் காட்டிக் கொடுத்தாற் போலக் காட்டிக் கொடுக்கில் காணவழியுண்டு.

அனைத்துலகு முடையான்—எம்பெருமானுடைய மற்ற ஸ்வரூப ஸ்வபாவங்கள் அறிய முடியாதவையாயினும் 'ஸகலஜகத்துக்கும் அவனே ஸ்வாமி' என்னுமிது அனைவருமெளிதிலறியத் தகுந்ததேயாம். என்னையாளுடையான்—ஆட்கொள்ளுந்திறத்து உலகமெல்லாம் ஒரு தட்டும் நானொரு தட்டுமாயிருக்கும் அவனுக்கு என்கை. எம்பெருமானார் சரணாகதிகத்யத்திலே "𑌅𑌖𑌿𑌲𑌜𑌗𑌤𑍍𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌨𑍍—அகில ஜகத் ஸ்வாமிந்!" என்று அநுஸந்தித்தவுடனே "𑌅𑌸𑍍𑌮𑌤𑍍𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌨𑍍—அஸ்மத் ஸ்வாமிந்!" என்று தம்மைப் பற்றித் தனிப்பட அநுஸந்தித்தமை காண்க.

குறியமாணியுருவாய கூத்தன்—'அனைத்துலகு முடையான் தானே' என்பதை ஸ்தாபிப்பித்துக் கொள்வதற்கு அடியிட்டமை சொல்லுகிறது. "குறிய மாணுருவாகிய" என்றே பலரும் ஓதுவர்களேனும் இவ்விடத்திற்கு அது பாடமன்று; திருவாய்மொழியில் (4-10-10) "திருக்குருகூரதனுள், குறியமாணுருவாகிய" என்றது இங்கும் வந்து நுழைந்தது போலும்; "குறிய மாணியுருவாய" என்றபாடமே இவ்விடத்திற்குச் சேரும்; பெரியோர் ஓதுவது மிப்பாடமே.

இத்தலத்தின் சோலைச் சிறப்பைக் கூறுவன பின்னடிகள். வண்டுகளின் பாட்டும் மயில்களின் ஆட்டமும் நிறைந்த சோலைகள் சூழ்ந்த தென்கை.

சுரும்பு—வண்டுகளில் ஒரு ஜாதி.

ஜடாயுவாகிய புள் பரிசுத்திபெற்ற தலமாதல்பற்றி இது புள்ளம் பூதங்குடியென வழங்கப்பட்டதென்ப. .... .... ... (க)

கள்ளக்குறளாய் மாவலியை வஞ்சித்து உலகம் கைப்படுத்து *
பொள்ளைக்கரத்த போதகத்தின் துன்பம் தவிர்த்த புனிதனிடம் *
பள்ளச்சேறுவில் கயலுகளப் பழனக்கழனி யதனுள்போய் *
புள்ளுப்பிள்ளைக் கிரைதேடும் புள்ளம்பூதங்குடிதானே. (உ)

| | | | |
|---|---|---|---|
| கள்ளம் குறள் ஆய் | கபடமுள்ள வாமந ரூபியாகி | பொள்ளை கரத்த போதகத்தின் | துளைக்கையை யுடைய கஜேந்திரனது |
| மாவலியை | மஹாபலியை | துன்பம் | துயரத்தை |
| வஞ்சித்து | ஏமாத்தி | தவிர்த்த | போக்கியருளின |
| உலகம் | ஸகல லோகங்களையும் | | |
| கைப்படுத்து | ஸ்வாதீனப்படுத்திக் கொண்டவனும் | புனிதன் | பரம பவித்திரனுமான பெருமான் எழுந்தருளியிருக்கின்ற |

இடம் — இடமாவது ;—
பள்ளம் செறுவில் — தாழ்ந்திருக்கின்ற கழனிகளில்
கயல் — மீன்களானவை.
உகள — துள்ளித் துள்ளி விளையாடாநிற்க,
புள்ளு — பக்ஷிகளானவை.
பழனம் கழனி அதனுள் போய் — நீர்நிலைகளையுடைய கழனிகளினுள்ளே போய்
பிள்ளைக்கு — தம் தம் குட்டிகளுக்கு
இரை தேடும் — உணவாகக்கூடிய சிறு மீன்களைத் தேடப்பெற்ற
புள்ளம் பூதங்குடி—.

* * *—மாயாவாமந மூர்த்தியாய் மாவலிபக்கற் சென்று மண்ணிரந்து அவனைவஞ்சித்து மூவுலகையும் தன் தாளின்கீழ்க் கொண்டவனும், கஜேந்திராழ்வான் 'ஆதிமூலமே!' என்றழைக்க, அரைகுலையத் தலை குலைய மடுவின் கரைக்கே ஓடிவந்து அதன் துயரைத் தவிர்த்தவனுமான பவித்திரன் வாழுமிடம் திருப்புள்ளம் பூதங்குடி. போள்ளை—துளை ; யானையின் துதிக்கை த்வாரமுள்ளதாதலால் போள்ளைக்கர மெனப்பட்டது. "போதகத்தின் துன்பந் தவிர்த்த" என்றால் போறாதோ? "போள்ளைக்கரத்த" என்ற அடைமொழி ஏதுக்கு? என்னில்; யானைக்குத் துதிக்கை நீரில் மூழ்கிப் போகாதவரையில் அபாயமில்லை; துதிக்கையும் மூழ்கிப் போனால் உடனே அபாயம் திண்ணம் என்பது ப்ரஸித்தமாதலால், இங்குத் துதிக்கையும் மூழ்கும்படியான பரமவிபத்து நேர்ந்ததென்று காட்டுதற்காகப் பொள்ளைக்கரத்தை யெடுத்துப் பேசினதென்னலாம். போதகம்—யானை. துன்பந்தவிர்த்த='கையில் பறித்தபூ செவ்வியழிவதற்கு முன்னே திருவடியில் ஸமர்ப்பிக்க முடியாமல் இழக்க நேர்ந்துவிடுகிறதோ' என்று கஜேந்திரன் கொண்டிருந்த துன்பத்தைத் தவிர்த்தானென்க. புனிதன்—இங்கே எம்பெருமானுக்குப் பரிசுத்தியாவது—யானையின் துயரைத் தீர்த்ததைத் தன்துயர்தீர்த்துக்கொண்டதாகவே நினைக்கையாம்.

இத்தலத்தின் வயல்வளங் கூறுவன பின்னடிகள். முற்காலத்தில் ஆலவாயுடையான் என்பானொரு தமிழன் பட்டரிடம் வந்து இப்பாட்டில் ஒருகேள்வி கேட்டான் ;—"பள்ளச்செறுவில் கயலுகள" என்றபோதே அவ்விடத்து வயல்களில் மீன்கள் அளவற்றுக் கிடக்கின்றமை வெளிவந்து விட்டது; அப்படியிருக்க, ஈற்றடியில் "புள்ளுப் பிள்ளைக்கு இரைதேடும்" என்று எங்ஙனே சொல்லலாம்? மீன் அருமைப்பட்டிருந்தாலன்றோ இரை தேடவேண்டும்; கொள்வார் தேட்டமாம்படி குறையற்றுக் கிடக்கும்போது தேடிப்பிடிப்பதாகச் சொல்லுவது பொருந்தாதன்றோ? என்று கேட்டான் ;—இதற்குப் பட்டர் அருளிச்செய்ததாவது—பிள்ளாய்! நீ கற்றவனாயினும் சொற்போக்கு அறிந்திலை; "பிள்ளைக்கு இரை தேடும்" என்றுள்ளது காண்; அங்குள்ள மீன்கள் நிலமிதியாலே தூணும் துலாமும்போலே தடித்திருக்கும்; அவை பறவைக் குட்டிகளின் வாய்க்குப் பிடிக்கமாட்டாவாகையால் உரிய சிறியமீன்கள் தேடிப்பிடிக்க வேண்டுமத்தனை யன்றோ? என்றாராம்.

புள்ளு என்றவிடத்து உகரம்—சாரியை. .... .... ... (உ)

மேவாவரக்கர் தென்னிலங்கை வேந்தன்வீயச் சரந்துரந்து *
மாவாய்பிளந்து மல்லடர்த்து மருதம்சாய்த்த மாலதிடம் *
காவார்தெங்கின் பழம்வீழக் கயல்கள்பாயக் குருகிரியும் *
பூவார்கழனி யெழிலாரும் புள்ளம்பூதங்குடி தானே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| மேவா | பகையே இயற்கையான | இடம் | இருப்பிடமாவது ;— |
| அரக்கர் | ராக்ஷஸர்கள் நிறைந்த | கா ஆர் | தோட்டங்களில் நிறைந்திருக்கிற |
| தென் இலங்கை | தென்னிலங்காபுரிக்கு | தெங்கின் | தென்னை மரங்களினின்றும் |
| வேந்தன் | அரசனை இராவணன் | பழம் | தேங்காய்கள் (இற்று) |
| வீய | முடியும்படி | வீழ | கீழே விழுந்ததனுலே |
| சரம் | அம்புகளை | கயல்கள் | மீன்களானவை |
| துரந்து | பிரயோகித்தவனும் | பாய | (அஞ்சி) துள்ளி அப்பால் ஓடப்பெற்றதும் |
| மா | குதிரை வடிவுடன் வந்த கேசி யென்னு மசுரனுடைய | குருகு | நாரைகளானவை |
| வாய் | வாயை | இரியும் | சிதறியோடப் பெற்றதும் |
| பிளந்து | கிண்டொழித்தவனும் | பூ ஆர் | தாமரைமுதலிய பூக்கள் நிறைந்த |
| மல் அடர்த்து | மல்லர்களை வென்றவனும் | கழனி | கழனிகளினுல் |
| மருதம் சாய்த்த | இரட்டை மருத மரங்களை முறித்துத் தள்ளினவனுமான | எழில் ஆரும் | அழகு மிக்கதுமான |
| மாலது | எம்பெருமானுடைய | | புள்ளம் பூதங்குடி—. |

* * *—முதலடியில் ராமாவதார சரிதையையும் இரண்டாமடியில் கிருஷ்ணாவதார சரிதைகளையும் ஒருங்கே அநுபவிக்கிருர். 'மேவாவரக்கர்' என்றது இயற்கையாகவே த்வேஷமே வடிவாயிருக்கிற ராக்ஷஸர் என்றபடி. அன்னவர் திரண்டுவாழப் பெற்ற இலங்கைக்கு இறைவனை இராவணன் நீறும்படி அம்புகளைச் செலுத்தினவனும், கம்ஸனுடைய ஏவுதலாலே குதிரை வடிவமெடுத்து நலிய வந்த கேசி யென்னுமசுரனுடைய வாயைக் கிழித்தொழித்தவனும், சாணூரன் முஷ்டிகன் முதலிய மல்லர்களை மடிவித்தவனும், இரட்டை மருதமரங்களை முறித்து வீழ்த்தவனுமான பெருமான் வாழுமிடம் திருப்புள்ளம் பூதங்குடி.

அவ்விடத்து வயல்களில் நிகழும் அதிசயத்தைக் கூறுவன பின்னடிகள். செறிந்த சோலைகளில் தேங்காய்கள் இற்று முறிந்து வீழ்கின்றன; அதனைக் கண்ட மீன்கள் 'நம்மைக் கொள்ளை கொள்வதற்கு ஏதோவொரு வலிய பறவை நீரிற் குதித்தது போலும்' என்றெண்ணித் துள்ளிச் சிதறுகின்றன; அதனைக் கண்ட குருகுகள் 'இக்கயல்கள் நம்மையும் கபளீகரிக்க வருகின்றன கொல்' என மருண்டு சிதறியோடுகின்றனவாம். தமக்கு இரையாகத்தக்க கயல்களினின்று குருகுகள் அஞ்சுகின்றனவாகச் சொன்னவிதனுல் அக்கயல்களின் வலிமை கூறப்

பட்டதாம். தேங்காய்கள் விழுந்ததைக் கண்டே குருகுகளும் இரிந்தனவாகக் கொள்ளுதலுமாம். .... ... ... .... .... (ங.)

வெற்பால்மாரி பழுதாக்கி விறல்வாளரக்கர் தலைவன்றன் *
வற்பார் திரள்தோள் ஐந்நான்கும் துணித்தவல்விலிராமனிடம் *
கற்பார்புரிசை செய்குன்றம் கவினார்கூடம் மாளிகைகள் *
பொற்பார்மாட மெழிலாரும் புள்ளம்பூதங்குடி தானே. (ச)

| | | | |
|---|---|---|---|
| வெற்பால் | கோவர்த்தன மலையினால் | இராமன் இடம் | இராமபிரான் வாழுமிட மாவது ;— |
| மாரி | பெருமழையை | கற்பு ஆர் | சிறந்த வேலைப்பாடுகள் பொருந்திய |
| பழுது ஆக்கி | (தடுத்து) வீணாக்கினவனும் | புரிசை செய் | திருமதில்களாகச் செய்யப் பட்டிருக்கிற |
| விறல் | பலிஷ்ட்டனான | குன்றம் | மலைகளினாலும் |
| வாள் அரக்கர் தலைவன் தன் | இராவணனுடைய | கவின் ஆர் கூடம் | அழகிய க்ருஹங் களினாலும் |
| வற்பு ஆர் | திண்மை பொருந்திய | மாளிகைகள் | மாளிகைகளினாலும் |
| திரள் | திரண்ட | பொற்பு ஆர் மாடம் | அழகிய மண்டபங்களி னாலும் |
| ஐ நான்கு தோளும் | இருபது தோள்களையும் | எழில் ஆரும் | சோபை பொருந்திய |
| துணித்த | அறுத்தொழித்த | | புள்ளம் பூதங்குடி—. |
| வல் வில் | வலிய சார்ங்கத்தை யுடையனான | | |

* * *—பசுக்களையும் கன்றுகளையும் இடையர்களையும் பரிசழிக்க வேணு மென்று இந்திரன் கறுக்கொண்டு, ஏழுநாள் விடாமழை பெய்வித்தபோது கோவர்த்தனமலையைக் குடையாக வெடுத்துப்பிடித்து அம்மழையை வியர்த்த மாக்கினவனும், இராவணனது வலிமிக்க இருபது புயங்களையும் துணித்தவனு மான சார்ங்கபாணி வாழுமிடம் திருப்புள்ளம்பூதங்குடி. மதிள்களும் மாட மாளிகைகளும் மண்டபங்களும் மலிந்து அழகுபெற்றிருப்பதாமிது. கவின்— அழகு. ... .... .... .... ... ... (ச)

மையார்தடங்கண் கருங்கூந்தல் ஆய்ச்சிமறைய வைத்ததயிர் *
நெய்யார்பாலோடமுதுசெய்த நேமியங்கை மாயனிடம் *
செய்யாரார லிரைகருதிச் செங்கால்நாரை சென்றணையும் *
பொய்யாநாவின் மறையாளர் புள்ளம்பூதங்குடி தானே. (௫)

| | | | |
|---|---|---|---|
| மை ஆர் தட கண் | மையணிந்த விசாலமான கண்களையுடையவளும் | மறைய வைத்த | கண் படாதபடி மறைத்து வைத்த |
| கரு கூந்தல் | கறுத்த கூந்தலை யுடையவளுமான | தயிர் | தயிரையும் |
| | | நெய் | நெய்யையும் |
| ஆய்ச்சி | யசோதைப்பிராட்டி | ஆர் | குடம் நிறைந்த |

| | | | |
|---|---|---|---|
| பாலோடு | பாலையும் | ஆரல் | ஆரல் மீன்களை |
| அமுது செய்த | (களவு வழியினால்) அமுது செய்த | இரை கருதி | ஆஹாரமாகக் கொள்ள நினைத்து |
| நேமி அம் கை மாயன் இடம் | ஸுதர்சநஹஸ்தனான மாயோன் எழுந்தருளி யிருக்குமிடமாவது ;— | சென்று அணையும் | (அங்கே) சென்று சேரப்பெற்றதும் |
| செம் கால் நாரை | சிவந்த கால்களை யுடைய நாரைகள் | பொய்யா நாவில் மறை ஆளர் | பொய்சொல்லி யறியாத நாக்கிலே வேதங்களைத் தாங்குமவரான அந்தணர் (வாழப்பெற்றதுமான) |
| செய் | கழனிகளில் | | புள்ளம் பூதங்குடி—. |
| ஆர் | நிறைந்திருக்கிற | | |

* * *—தான் அவாப்தஸமஸ்த காமனாயிருக்கச் செய்தேயும் குறையுற்றவன் போன்று திருவாய்ப்பாடியில் தயிர் நெய் பால் முதலியவற்றைக் களவுவழியால் வாரியமுது செய்த ஆழியங்கையன் வாழுமிடம் திருப்புள்ளம் பூதங்குடி. ஆரல் என்னுஞ் சாதிமீன்களைப் பிடித்துண்ணக் கருதின செங்கால் நாரைகள் வந்து சேர்ந்திருக்கப்பெற்ற கழனிகளையுடையதும் வைதிக ப்ராஹ்மணர்கள் மலிந்த திருவீதிகளை யுடையதுமாம் இத்தலம். பொய்யா—ஸத்யவாதிகளான.

மின்னினன்ன நுண்மருங்குல் வேயேய்தடந்தோள் மெல்லியற்கா *
மன்னுசினத்த மழவிடைகள் ஏழன்றடர்த்த மாலதிடம் *
மன்னுமுதுநீ ரரவிந்தமலர்மேல் வரிவண் டிசைபாட *
புன்னை பொன்னேய் தாதுதிர்க்கும் புள்ளம்பூதங்குடிதானே. (௩)

| | | | |
|---|---|---|---|
| மின்னின் அன்ன | மின்னலோடு ஒத்த | அடர்த்த | வென்றொழித்த |
| நுண் | நுட்பமான | மாலது | பெருமானுடைய |
| மருங்குல் | இடையை யுடையவளும் | இடம் | இருப்பிடமாவது ;— |
| வேய் ஏய் தட தோள் | மூங்கில்போன்று பருத்த தோள்களை யுடையவளுமான | மன்னு முது நீர் | ஒருநாளும் தண்ணீர் வற்றாத ஆழ்ந்த நீர்நிலைகளிலுள்ள |
| மெல்லியற்கா | இளம்பெண்ணாகிய நப்பின்னைப் பிராட்டிக்காக, | அரவிந்தம் மலர் மேல் | தாமரைப் பூக்களிலே |
| அன்று | முன்பொருகாலத்தில் | வரி வண்டு | வரிவண்டுகள் |
| மன்னு சினத்த | மாறாத கோபத்தை யுடைய | இசை பாட | இசைபாடப் பெற்றதும், |
| ஏழ் மழ விடைகள் | ஏழு இளங்காளைகளை | புன்னை | புன்னை மரங்கள் |
| | | பொன் ஏய் தாது உதிர்க்கும் | பொன்னிறமான தாதுகளை உதிர்க்கப் பெற்றதுமான |
| | | | புள்ளம் பூதங்குடி—. |

* * *—மின்னோடொத்து நுட்பமான இடையையும் வேய்போன்று பருத்த தோளையுமுடையளான நப்பின்னைப் பிராட்டியை மணம்புணர்ந்து கொள்ளவேண்டி, அவளது தந்தை கந்யாசுல்கமாகக் குறித்திருந்தபடி மிக்க

கொடிய ரிஷபங்களையும் வலியடக்கின திருமால் திகழுமிடம் திருப்புள்ளம் பூதங்குடி.

முதலடியின் வியாக்கியானத்திலே "கருமாரிபாய்ந்தும் அணையவேண்டுமாய்த்து (நப்பின்னைப் பிராட்டியின்) வடிவழகு" என்று பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியுள்ளது: கருமாரி பாய்தலென்பது, கச்சிமாநகரில் காமாட்சியம்மனாலயத்தில் குளத்திலே நாட்டப்பட்டிருந்த மிகக் கூர்மையான இரண்டு சூலங்களினிடையே குதித்தலாம். பண்டைக்காலத்தில் எதேனும் இஷ்டஸித்தி பெற வேண்டுவார் இவ்வருந்தொழில்செய்வது வழக்கமாம்: குடல்கிழிந்து சாக வேண்டும்படியான இவ்வருந்தொழிலை வெகு சாதுரியமாகச் செய்து அபாயமொன்றுமின்றியே உயிர்தப்பி இஷ்டஸித்தி பெறுமவர்கள் மிகச்சிலரேயாவர். மிகக் கடினமான இக்காரியத்திற்குத் துணிந்தார்களென்றால் இதனால் அவர்கள் பெற விரும்பியவஸ்து மிகச் சிறந்ததென்பது விளங்குமன்றோ. அப்படியே, நப்பின்னை திருமேனியின் சிறப்பை விளக்கவந்தது இவ்வாக்கிய மென்க.

புன்னை பொன்னேய்தாதுதிர்க்கும் = திருச்சந்த விருத்தத்தில் "காண்டமாடு பொய்கையுள் கரும்பனைப் பெரும்பழம், புரண்டுவீழ வாளைபாய் குறுங்குடி நெடுந்தகாய்" என்றருளிச் செய்திருப்பதை அடியொற்றி அவ்விடத்துக் குளக்கரையில் இற்றைக்கும் ஒரு பனைமரம் வளர்க்கப்பட்டுவருதல் போல இங்கும் "புன்னை பொன்னேய்தா துதிர்க்கும்" என்ற ஆழ்வார் திருவாக்கைப் பேணித் திருப்புள்ளம் பூதங்குடி ஸந்நிதியில் இற்றைக்கும் ஒரு திருப்புன்னை மரம் வளர்க்கப்பட்டுவருதல் அறியத்தக்கது. .... ... ... ... (சு)

குடையாவிலங்கல் கொண்டேந்தி மாரிபழுதா நிரைகாத்து *
சடையானோட வடல்வாணன் தடந்தோள்துணித்த தலைவனிடம் *
குடியாவண்டு கள்ளுண்ணக் கோலநீலம் மட்டுகுக்கும் *
புடையார்கழனி யெழிலாரும் புள்ளம்பூதங்குடிதானே. (எ)

| | | | |
|---|---|---|---|
| விலங்கல் | (கோவர்த்தன) மலையை | துணித்த | அறுத்தெறிந்தவனுமான |
| குடை ஆ கொண்டு | குடையாகக் கொண்டு | தலைவன் | பெருமானுடைய |
| ஏந்தி | தரித்து | இடம் | இருப்பிடமாவது ;— |
| மாரி பழுது ஆ | மழை பழுதாம்படி செய்து | வண்டுகள் | வண்டுகளானவை |
| நிரை | பசுக்கூட்டங்களை | குடி ஆ | கூட்டங் கூட்டமாக விருந்து |
| காத்து | ரக்ஷித்தருளினவனும் | உண்ண | உண்ணும்படி |
| சடையான் | ருத்ரன் | கோலம் நீலம் | அழகிய நீலமலர்கள் |
| ஓட | (போரில் முதுகுகாட்டி) ஓடினபின் | மட்டு | தேனை |
| அடல் வாணன் | செருச் செய்யவந்த பாணாஸுரனுடைய | உகுக்கும் | பெருக்காநின்ற |
| தட தோள் | விசாலமான புஜங்களை | புடை ஆர் கழனி எழில் ஆரும் | நாற்புறமும் சூழ்ந்த கழனிகளினால் அழகு வாய்ந்த |
| | | | புள்ளம் பூதங்குடி—, |

* * *—இந்திரன் பெய்வித்த பெருமழைக்குப் பரிஹாரமாக மலையைக் குடையாக வெடுத்துத் தரித்து நின்றவனும், பாணபுரத்தைக் காத்துக் கொண்டிருந்த தேவதாந்தரங்களை முதுகுகாட்டி யோடும்படி செய்து பாணாஸுர னுடைய தோள்களைத் திருவாழியினு லறுத்தெறிந்தவனுமான எம்பெருமான் தேனுண்ணும் வண்டுகள் நிறைந்த வயல் சூழ்ந்த திருப்புள்ளம் பூதங்குடியி லுள்ளான்.

இதில், ஒன்று, இரண்டு, நான்காமடிகளில் இரண்டா மெழுத்து டைகாரமா யிருப்பதற்கிணங்க மூன்றுமடியிலும் 'குடையா' என்றிருக்கலா மென்பர் சில பெரியோர். அப்போது, 'செய்யா' என்னும் வாய்பாட் டுடன்பாட் டிறந்த கால வினையெச்சமாய், 'குடைந்து' என்று பொருளாகும்: வண்டுகள் உட் புகுந்து கள்ளுண்ண என்றபடியாம். 1. "குடைந்து வண்டுண்ணுந் துழாய் முடி யானை" என்று திருவாய்மொழியிலு முள்ளது. ஆனாலும் இவ்விடத்துப் பெரிய வாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில்—"புத்ர பௌத்ராதிகளோடும் பார்யாதிக ளோடுங் கூட வண்டுகளானவை மதுபானத்தைப் பண்ண" என்று உள்ளதனால் 'குடியா' என்ற பாடமே பொருந்து மென்க.

'வண்டுகள், உண்ண' என்றும் 'வண்டு, கள், உண்ண' என்றும் பிரிக்க லாம்; முந்தின பக்ஷத்தில், விரித்தல் செய்யுளின்பம் நோக்கியது. ... (எ)

கறையார்நெடுவேல் மறமன்னர்வீய விசயன் தேர்கடவி *
இறையான் கையில்நிறையாத முண்டம்நிறைத்த வெந்தையிடம் *
மறையால் முத்தீயவைவளர்க்கும் மன்னுபுகழால் வண்மையால் *
பொறையால்மிக்க வந்தணர்வாழ் புள்ளம்பூதங்குடிதானே. (அ)

| | | | |
|---|---|---|---|
| கறை ஆர் | ரத்தக்கறை மாறாதே பொருந்தியிருக்கிற | நிறைத்த | (பிச்சையிட்டு) நிறைத்தவனுமான |
| நெடு வேல் | நீண்ட வேற்படையை யுடையவர்களான | எந்தை | எம்பெருமானுடைய |
| | | இடம் | இருப்பிடமாவது :— |
| மறம் மன்னர் | (துரியோதனுதி) பகை மன்னவர்கள் | மறையால் | வேதங்களாலும் |
| வீய | ஒழியும்படி | முத்தீ அவை வளர்க்கும் | நித்யாக்நிஹோத்ரம் செய்வதனாலுண்டான |
| விசயன் | அர்ஜுநனுடைய | மன்னு புகழால் | நிலைநின்ற கீர்த்தியினாலும் |
| தேர் | தேரை | வண்மையால் | ஔதார்யத்தினாலும் |
| கடவி | நடத்தினவனும், | பொறையால் | பொறுமையினாலும் |
| இறையான் | ருத்ரனுடைய | மிக்க | மேன்மைபெற்ற |
| கையில் | கையில் ஒட்டிக்கொண்டதாய் | அந்தணர் | பிராமணர்கள் |
| நிறையாத | ஒன்றாலும் நிரம்பாதிருந்த | வாழ் | வாழப்பெற்ற |
| முண்டம் | கபாலத்தை | | புள்ளம் பூதங்குடி—. |

1. திருவாய்மொழி 1—7—11.

* * *—எப்போதும் பகைவருடைய உடல்களிலே வியாபரித்துக் கொண்டே யிருத்தலால் ரத்தக்கறை கழுவ அவகாசமில்லாமையாலே மாறாத கறையை யுடைய வேற்படையை யுடையரான துர்வம்சக்ஷத்ரர்கள் முடியும்படி அர்ஜுநனுக்குத் தேரை நடத்திப் பார்த்தஸாரதி யென்று பேர் பெற்றவனும், ப்ரஹ்மஹத்யை பண்ணின ருத்ரன் கையில் ஒட்டிக் கொண்டதாய் 1 "கண்ட கடலும் மலையு முலகேழும் முண்டத்துக்காற்றா" என்கிறபடியே பலவகைப் பொருள்களை யிட்டு நிறைக்கப் பார்த்தாலும் நிறையாதிருந்ததான தலையோட்டைத் தனது திருமேனியில் ஜலபிந்துவாலே நிறைத்தவனுமான எம்பெருமான் வைதிகப்ராஹ்மணர்கள் வாழும் புள்ளம்பூதங்குடியிலுள்ளான்.

விசயன்—அர்ஜுநனது நாமங்களில் இஃது ஒன்று. இறையான்—ருத்ரனுக்கு வடமொழியில் 'ஈச்வரன்' என்று பெயருள்ளது.

திருப்புள்ளம்பூதங்குடியில் வாழும் அந்தணர்களின் சிறப்பைக் கூறுவன பின்னடிகள்; அவர்கள் மறையால் மிக்கவர்கள், முத்தீயவைவளர்க்கும் மன்னு புகழால் மிக்கவர்கள், வண்மையால் மிக்கவர்கள், பொறையால் மிக்கவர்கள். "மறையால் முத்தீயவை வளர்க்கும்" என்று சேர்த்து அந்வயித்து, வேதங்களைக்கொண்டு அனலோம்புகிறவர்கள் என்றுரைத்தலுமாம். .... (அ)

துன்னிமண்ணும் விண்ணுடும் தோன்றாதிருளாய் மூடியநாள் *
அன்னமாகி யருமறைகள் அருளிச்செய்த வமலனிடம் *
மின்னுசோதி நவமணியும் வேயின்முத்தும் சாமரையும் *
பொன்னும் பொன்னி கொணர்ந்தலைக்கும் புள்ளம்பூதங்குடிதானே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| மண்ணும் | மண்ணுலகமும் | இடம் | இருப்பிடமாவது ;— |
| விண்ணுடும் | விண்ணுலகமும் | மின்னு சோதி | விளங்குகின்ற தேஜஸ்ஸை யுடைய |
| தோன்றாது | ஒன்றும் தெரியாதபடி | நவமணியும் | நவரத்நங்களையும் |
| இருள் ஆய் | அந்தகாரமேயாய் | வேயின் முத்தும் | மூங்கில் முத்துக்களையும் |
| துன்னி | நெருங்கி | சாமரையும் | சாமரங்களையும் |
| மூடிய நாள் | மூடிக்கிடந்த வளவிலே | பொன்னும் | பொன்களையும் |
| அன்னம் ஆகி | ஹம்ஸரூபியாய் அவதரித்து | பொன்னி | காவேரியானது |
| அரு மறைகள் | அருமையான வேதங்களை | கொணர்ந்து | தள்ளிக் கொண்டுவந்து |
| அருளிச் செய்த | மீண்டும் வெளிப்படுத்தி யருளின | அலைக்கும் | அலையெறியப் பெற்ற |
| அமலன் | பவித்திரனை பெருமானுடைய | | புள்ளம் பூதங்குடி—. |

* * *—முன் ஒரு கல்பத்தின் அந்தத்தில் சதுமுகன் துயிலுகையில் அவன் முகங்களினின்று வெளிப்பட்டுப் புருஷரூபத்துடன் உலாவிக் கொண்டிருந்த நான்கு வேதங்களையும் மஹாபலிஷ்டனாய், அருந்தவங்கள் செய்து பெரு

1. பெரியாழ்வார் திருமொழி 1—8—8.

வரங்கள் பெற்ற சோமுகனென்னுமசுரன் கவர்ந்து கொண்டு மூவுலகங்களையு மிருள்மூடப் பண்ணிப் பிரளய வெள்ளத்தினுள் மறைந்து செல்ல, அதனை யுணர்ந்து ஒரு பெருமீனாகத் திருவவதரித்து அப்பெருங்கடலினுட்புக்கு அவ்வஸுரனைத் தேடிப்பிடித்துக் கொன்று அவன் கவர்ந்துசென்ற வேதங்களை மீட்டுக் கொணர்ந்து, ஸாரத்தையும் அஸாரத்தையும் பிரிக்குந்தன்மையுள்ள ஹம்ஸமாய்த் தோன்றிப் பிரமனுக்கு உபதேசித்த பெருமான் திருப்புள்ளம் பூதங்குடியிலுள்ளான். நவரத்னங்களையும் முத்துக்களையும் சாமரங்களையும் பொன்களையும் கொழித்துக் கொண்டுவந்து அலைக்கின்ற திருக்காவிரிநீர் பாயப் பெற்றதாம் இத்தலம்.

வேயின்முத்தும்=மூங்கில்களினின்றும் முத்து உதிர்வதாகச் சொல்லுவர்கள். "மின்னுசோதி நவமணியும்" என்று சொல்லிவைத்து நவமணிகளுட் சேர்ந்த முத்தையும் பொன்னையும் தனிப்படவுஞ் சொல்லியிருப்பதால் இவையிரண்டும் திருக்காவிரியில் அதிகமாகக் கொணரப்படும் என்றுணர்க. பின்னடிகட்குப் பொருத்தமாக "[illegible] காவேரீ [illegible]." என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவச்லோகம் அநுஸந்திக்கத் தகும் .... ... (கூ)

கற்றாமறித்துக் காளியன்தன் சென்னிநடுங்க நடம்பயின்ற *
பொற்றாமரையாள்தன் கேள்வன் புள்ளம்பூதங்குடிதன்மேல் *
கற்றார்பரவும் மங்கையர்கோன் காரார்புயற்கைக் கலிகன்றி *
சொல்தானீரைந்திவைபாடச் சோரநில்லா துயர்தாமே. (ய)

| | |
|---|---|
| கன்று ஆ | கன்றுகளோடு கூடின பசுக்களை |
| மறித்து | மடக்கி மேய்த்தவனும், |
| காளியன் தன் சென்னி | காளிய நாகத்தின் தலையிலே |
| நடுங்க | (அந்த நாகம்) நடுங்கும்படி |
| நடம் பயின்ற | கூத்தாடினவனும் |
| பொன் தாமரையாள் தன் கேள்வன் | அழகிய தாமரைப்பூவிற் பிறந்த பிராட்டிக்கு வல்லபனுமான பெருமானுடைய |
| புள்ளம்பூதங் குடி தன்மேல் | திருப்புள்ளம் பூதங்குடி விஷயமாக, |
| கற்றார் பரவும் | கற்றவர்களால் கொண்டாடப் படுபவரும் |
| மங்கையர் கோன் | திருமங்கையிலுள்ளார்க்குத் தலைவரும் |
| கார் ஆர் புயல் கை | காளமேகம்போன்ற உதாருமான |
| கலிகன்றி | கலியனுடைய |
| சொல் | ஸ்ரீஸூக்தியாகிய |
| இவை ஈர் ஐந்து | இப்பத்துப் பாசுரங்களையும் |
| பாட | பாடப்பெற்றால் |
| துயர் | துன்பங்கள் |
| சோர | (இவ்வாத்மா) சோர்வு அடையும்படி |
| நில்லா | தங்கியிருக்கமாட்டா. |

* * *—கன்றுகளையும் பசுக்களையும் மேய்த்துவருங் காலத்திலே காளிய நாகத்தைத் தண்டிக்கவேண்டி அதுகிடந்த பொய்கையிலே சென்று குதித்து

அதன் படத்தின்மேல் அடியிட்டுக் கூத்தாடி அதனைச் செருக்கழித்த திருமால் திருவுள்ளமுவந்து வாழுமிடமான திருப்புள்ளம் பூதங்குடி விஷயமாகக் கலியனுரை செய்த இத்திருமொழியைப் பாடவல்லவர்கள் துயரற்றவராவர்—என்று இத்திருமொழி கற்றார்க்குப் பயனுரைத்த பாசுரம், இது. கன்று + ஆ, கற்று. (க0)

அடிவரவு:—அறிவது கள்ளம் மேவா வெற்பால் மையார் மின்னனின் குடை சுறை துன்னி கற்று தாம்.

முதல் திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஐந்தாம்பத்து—இரண்டாந் திருமொழி.

# தாந்தம் பெருமையறியார்.

### திருக்கூடலூர் மங்களாசாஸனத் திருப்பதிகம்.

தாம்தம் பெருமையறியார் * தூது
வேந்தர்க்காய வேந்தரூர்போல் *
காந்தள்விரல் மென்கலை நன்மடவார் *
கூந்தல்கமழும் கூடலூரே. (க)

| | | | |
|---|---|---|---|
| தம் பெருமை | தமது பெருமேன்மையை | காந்தள் விரல் | செங்காந்தள் மலர்போன்ற விரல்களையுடையவரும் |
| தாம் அறியார் | தாமும் அறியாதவரும் | | |
| வேந்தர்க்கு | (பாண்டவ) மன்னர்கட்கு | மென் கலை | அழகிய ஆடையணிந்தவர்களுமான |
| தூது ஆய | தூதனாய்ச் சென்றவருமான | நல் மடவார் | நல்ல பெண்டுகளினுடைய |
| வேந்தர் | தேவாதி தேவருடைய | கூந்தல் | கூந்தல்களானவை |
| | | கமழும் | பரிமளம் வீசப்பெற்ற |
| ஊர் | திவ்யதேசம் (எதுவென்றால்), | கூடலூர் | திருக்கூடலூராகும். |

* * *—எம்பெருமான் தான் ஸர்வஜ்ஞனென்றும் ஸர்வசக்தனென்றும் வேத வேதாந்தங்களினால் ஓதப்பட்டாலும் அவன் தன் பெருமையைத் தானறிய வல்லனல்லன்; 'உனக்கு இவ்வளவு பெருமையுண்டு' என்று பிறர் சொல்லக் கேட்பவனேயன்றி, தன்பெருமை தானறியானவன்.

அவனுக்குப் பெருமையாவது பரத்வம்பொலிய நிற்குமதன்று; ஏவிக் காரியங் கொள்ளலாம்படி தன்னைத் தாழவிட்டுக் கொண்டிருக்குமிருப்பு இங்குப் பெருமை யெனப்படுகிறது. இப்பெருமையை மூதலிக்கிறார் "தூது வேந்தர்க்காய வேந்தர்" என்பதனால். பாண்டவர்களுக்காகக் கழுத்திலே ஓலைகட்டித் தூது சென்று பாண்டவதூதனென்று பேர் பெற்றான்; இப்படி இவன் இழிதொழில் செய்தாலும் 'பராத்பரனாயிருப்பவன் இப்படி இழிதொழில் செய்யப்பெறுவதே!' என்று அறிவிற்சிறந்தோர் ஈடுபடும்படி யிருக்குமத்தனையன்றி இழிவாகக்கருத இடமில்லையே; ராஜாதிராஜன் என்கிற பெருமையும் மிக்குத்தோன்றுமென்கிறார்—"வேந்தர்க்குத் தூதாய வேந்தர்" என்பதனால். இப்படி பரத்வ ஸௌலப்யங்கள் விகல்பிக்கலாம்படியுள்ள எம்பெருமான் திருக்கூடலூரிலுள்ளான். அவ்வூர் எத்தகையதென்னில்; செங்காந்தள் மலர்போன்ற விரல்களையுடையரும் மெல்லிய அழகிய ஆடைகளை அணிந்தவர்களுமான நன்மடவார்களின் கூந்தல் மணம் கமழப்பெற்றதாம்.

நூற்றெட்டுத் திருப்பதிகளுள் திருக்கூடலூர் இரண்டு உண்டு; ஒன்று பாண்டிநாட்டிற் சேர்ந்தது; அதுவே தென்மதுரை யெனப்படும். மற்றொன்று சோழநாட்டிற் சேர்ந்தது: அது 'ஆடுதுறைப் பெருமாள்கோயில்' என வழங்கப்படும். இத்தலமே இத்திருமொழிக்கு விஷயம். தேவர்கள் கூட்டமாகக்கூடி எம்பெருமானை வணங்கி வாழ்த்தப்பெற்ற தலமென்பதுபற்றி இதற்குக் கூடலூர் என்று திருநாமமாயிற்றென்பர். .... .... .... ... .... (க)

செறுந்திண் திமிலேறுடைய * பின்னை
பெறுந்தண்கோலம் பெற்றாரூர்போல் *
நறுந்தண்டீம் தேனுண்டவண்டு *
குறிஞ்சிபாடும் கூடலூரே. (உ)

| | | | |
|---|---|---|---|
| செறும் | மேல்விழுவனவாய் | பெற்றார் | (ஏறுதழுவி) மணஞ் செய்துகொண்ட பெருமானுடைய |
| திண் திமில் | திடமான முசுப்புக்களையுடையனவான | ஊர் | திவ்யதேசம் (எதுவென்றால்), |
| ஏறு | ரிஷபங்களை | நறு | மணம்மிக்கதாய் |
| உடைய | (சுல்கமாக) உடையவளாயிருந்த | தண் | குளிர்ந்ததாய் |
| பின்னை | நப்பின்னைப் பிராட்டியினுடைய | தீம் | இன்மையான |
| பெறு | பெறுதற்கு விரும்பத்தகுந்தான | தேன் | தேனை |
| | | உண்ட | பருகின |
| | | வண்டு | வண்டுகள் |
| தண் | அழகிய | குறிஞ்சி | குறிஞ்சிப்பண்ணை |
| கோலம் | திருமேனியை | பாடும் | பாடப்பெற்ற |
| | | | கூடலூர்—. |

* * *—நப்பின்னைப் பிராட்டியை மணம்புணர்வதற்காக, கொழுத்த எழு காளைகளை வலியடக்கின மைந்தன் வாழுமிடம் மதுரமான தேனைப் பருகின வண்டுகள் குறிஞ்சியென்னும் பண்ணைப் பாடப்பெற்ற கூடலூராம்.

ஏறு உடைய பின்னை=ரிஷபங்களை யுடையளான நப்பின்னை என்றது—ரிஷபங்களின் வலியடக்குதலைத் தனக்கு சுல்கமாகவுடைய நப்பின்னை என்றபடி. கோலம்—அழகுக்கும் உடம்புக்கும் பெயர்.

மூன்றாமடியில் 'தண்டீன்' என்று பலரும் ஓதுவது பொருந்தாது. 'தண்டீம்' என்றே ஓதுக தண் + தீம், தண்டீம். தீம்—இனிமை ... ... (உ)

பிள்ளையுருவாய்த் தயிருண்டு * அடியே
னுள்ளம்புகுந்த ஒருவரூர்போல் *
கள்ளநாரை வயலுள் * கயல்மீன்
கொள்ளை கொள்ளும் கூடலூரே. (ங)

| | | | |
|---|---|---|---|
| பிள்ளை உரு ஆய் | (கண்ணனுகிற) சிறுபிள்ளையாயிருந்துகொண்டு | ஊர் | திவ்யதேசம்,— |
| தயிர் உண்டு | தயிரை அமுதுசெய்தவனும் | கள்ளம் நாரை | வஞ்சநெஞ்சுடைய நாரைகள் |
| அடியேன் | அடியேனுடைய | வயலுள் | கழனிகளிலே |
| உள்ளம் | ஹ்ருதயத்திலே | கயல்மீன் | கயல்மீன்களை |
| புகுந்த | புகுந்தவனுமான | கொள்ளை கொள்ளும் | கபளீகரிக்கப்பெற்ற |
| ஒருவர் | ஒரு பெருமானுடைய | | கூடலூர்—. |

* * *—ஸர்வேச்வரனை யிருந்துகொண்டு தயிருண்ணப் பார்த்தால் அவ் விருப்பம் நிறைவேறாதென்று அதற்காகப் பிள்ளைவடிவுகொண்டு தயிரமுது செய்து, இப்படி ஆச்ரிதருடைய ஹஸ்தஸ்பர்சம் பெற்ற த்ரவ்யத்தாலன்றி வேறொன்றாலும் செல்லாத நீர்மையைக்காட்டி என்னெஞ்சை வசப்படுத்திக் கொண்ட விலக்ஷணபுருஷன் விரும்பியுறையுமிடம் திருக்கூடலூர்.

[கள்ளநாரை யித்யாதி.] நாரைகள் நீர்நிலைகளிற் சென்று உட்கார்ந்திருக்கும்; அவற்றின் காலின்மேலே சிறுமீன்கள் வந்து குத்தும்; குத்ினாலும் "உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாங் கொக்கு" என்றாப்போலே அவற்றை அநாதரித்திருந்து தாம்விரும்பி உட்கொள்ளும் பெருமீன்கள்வந்து கிட்டினவாறே மேல் விழுந்து கொள்ளைகொள்ளும்.

இந்த வர்ணனைக்கு ஒரு கருத்துண்டு; யசோதைப்பிராட்டி தயிர்கடைந்து வெண்ணெய் திரட்டும்போது 1. "ஓராதவன் போலுறங்கி" என்கிறபடியே கள்ளத்தூக்கங் கொண்டிருந்து அவள் அப்பால் சென்றவாறே யதேச்சமாகக் கொள்ளை கொள்ளும்படிக்குப் போலி சொல்லுகிறார் போலும். "பிள்ளையுருவாய்த் தயிருண்டு" என்றிறே முதலடியில் ப்ரஸ்தாவித்தது. ... (ங)

1. சிறிய திருமடல்.

கூற்றேருருவின் குறளாய் * நிலம்நீர்
ஏற்றான் எந்தைபெருமானூர்போல் *
சேற்றேருழவர் கோதைப்போதூண் *
கோல்தேன்முரலும் கூடலூரே. (ச)

| | |
|---|---|
| கூறு ஏர் உருவின் | கொண்டாடுவதற்குத் தகுந்த ரூபத்தையுடைய |
| குறள் ஆய் | வாமநமூர்த்தியாகி |
| நிலம் நீரேற்றான் | பூமிதானம் வாங்கிக் கொண்ட |
| எந்தை பெருமான் ஊர் | எம்பெருமானுடைய திவ்யதேசம் ;— |
| சேறு | சேறுகளிலே |

| | |
|---|---|
| ஏர் உழவர் | ஏர்கட்டி உழுகின்றவர்களது |
| கோதை | மயிர்முடியிலேவைக்கப்பட்ட |
| போது | பூக்களிலுள்ள தேனை |
| ஊண் | உணவாகவுடைய |
| கோல் தேன் | சோலைவண்டுகள் |
| முரலும் | இசைபாடப் பெற்ற |
| | கூடலூர்—. |

* * *—'இப்படியும் விலக்ஷணமானதொரு வாமநவேஷம் உலகிலுண்டோ' என்று கண்டாரடங்கலுங் கொண்டாடத்தகுந்த வாமநமூர்த்தியாய் மாவலிபக்கலிற் சென்று பூமிதாநம் வாங்கின பெருமான் வாழுமிடம் திருக்கூடலூர்.

[சேற்றேருழவர் இத்யாதி.] அவ்விடத்து ஏர்பிடித்து உழுகின்றவர்களும் முடியிற் பூவணிந்திருப்பர்களென்று காட்டியவாறு. க்ஷேத்ரவைபவங்களில் இதுவுமொன்றாம். "கோதைப் போதுண்" என்ற பாடத்தில், 'உண்—உண்கிற' என்று பொருளாம். 'போதூண்' என்றபாடத்தில், ஊண் முதனிலைதிரிந்த தொழிற்பெயர்.

கோல் தேன்—மரக் கொம்புகளிலே தட்டித்திரியும் வண்டுகள் என்கை. இவை தமக்கு வாய்த்த இடங்களை விட்டிட்டு, சேற்றேருழவர்களது தலைப்பூக்களிலே மதுவில் நசையாலே திரிகின்றனவாம். .. ... ... (ச)

தொண்டர்பரவச் சுடர்சென்றணவ *
அண்டத்தமரும் அடிகளூர்போல் *
வண்டலலையுள் கெண்டைமிளிர *
கொண்டலதிரும் கூடலூரே. (ரு)

| | |
|---|---|
| தொண்டர் | ஆச்ரிதர்கள் |
| பரவ | துதிக்கும்படியாக |
| சுடர் சென்று அணவ | (திருமேனி) ஸூர்ய மண்டலத்தளவும் போய் ஸ்பர்சிக்க வளர்ந்து |
| அண்டத்து | ஆகாசாவகாச முள்ள இடமெல்லாம் |
| அமரும் | வியாபித்த |
| அடிகள் | ஸ்வாமியினுடைய |
| ஊர் | திவ்யதேசம் ;— |

| | |
|---|---|
| வண்டல் அலையுள் | வண்டல் பாய்ந்திருப்பதாய் அலைகளையுடைத்தான நீர்நிலங்களிலே |
| கெண்டை | கெண்டை மீன்கள் |
| மிளிர | (தமது ஒளியாலே) மின்னுநிற்க (அதைக் கண்டு) |
| கொண்டல் | மேகங்களானவை |
| அதிரும் | முழக்கம் செய்யப் பெற்ற |
| | கூடலூர்—. |

* * *—'தொண்டர்பரவ' என்றது உலகளக்கும் காலத்தில் ஆங்காங்குள்ள தொண்டர்கள் ஏத்தினபடியைச் சொன்னவாறு. 'சுடர் சென்றணவ' என்றது மேலே ஜ்யோதிர்மண்டலத்தளவும் ஓங்கினபடியைச் சொன்னவாறு. 'அண்டத்து அமரும்' என்றது திசைப்பரப்பெல்லாம் வியாபித்தபடியைச் சொன்னவாறு. ஆகவிப்படி ஓங்கியுலகளந்த வுத்தமன் வாழுமிடம் திருக்கூடலூர்.

[வண்டலலையுள் இத்யாதி.] வண்டலிட்டிருக்கும் நீர்நிலங்களிலே கெண்டை மீன்கள் செருக்காலே துள்ளும்போது அவற்றின் உடல் மின்னல் மின்னினாற் போலேயிருக்கும்; அதனைக்கண்ட மேகங்கள் தம்மிடத்து மின்னுகின்ற மின்னலின் ஒளியே யென்று நினைத்து மின்னலுக்கு அடுத்தபடியாக வுண்டாகவேண்டிய கர்ஜனையைச் செய்கின்றனவாம். .... .... ... .... (௫)

தக்கன்வேள்வி தகர்த்ததலைவன் *
துக்கம்துடைத்த துணைவரூர்போல் *
எக்கலிடு நுண்மணல்மேல் * எங்கும்
கோக்கின்பழம்வீழ் கூடலூரே. (௬)

| | | | |
|---|---|---|---|
| தக்கன் | தக்ஷப்ரஜாபதியினுடைய | ஊர் | திவ்யதேசம்;— |
| வேள்வி | யாகத்தை | எக்கல் இடு | வண்டல்படிந்த |
| தகர்த்த | அழித்தவனான | நுண் மணல் மேல் எங்கும் | நுட்பமான மணல்களுள்ள விடமெங்கும் |
| தலைவன் | சிவபிரானுடைய | கொக்கின்பழம் | மாம்பழங்கள் |
| துக்கம் | துயரத்தை | வீழ் | விழுந்திருக்கப்பெற்ற |
| துடைத்த | போக்கின | | கூடலூர்—. |
| துணைவர் | ஆபத்பந்துவான பெருமானுடைய | | |

* * *—சங்கரன் கொண்ட சாபத்தைத் தீர்த்த பெருமான் வாழுமிடம் திருக்கூடலூர். [எக்கல் இத்யாதி.] வண்டலிட்ட நுண்ணிய மணல்களில் மாம்பழங்கள் விழுந்து வரிசையாகக் கிடக்கிறபடியைப் பார்த்தால் பழுக்கைக்குப் பதித்துவைத்தாற் போன்றுள்ளதென்னலாம்.

சிவன் தக்கன் வேள்வி தகர்த்த வரலாறு:—முன்பொருகால் தக்ஷப்ரஜாபதி யென்பவர் ஒரு யஜ்ஞஸதஸ்ஸிலே செல்ல, அப்போது அங்கிருந்த தேவர்களும் மஹர்ஷிகளு மெல்லாரும் சடக்கென எழுந்து கௌரவிக்க, பிரமனும் சிவனும் எழுந்திராமல் இருந்தபடியேயிருக்க, தக்ஷன் பிரமனை 'லோககுரு' என்னும் பிரதிபத்தியாலே நமஸ்கரித்துவிட்டு, தன்னுடைய பெருமை விளங்குமாறு சிவன் தன்னை வணங்கி வழிபாடுகளொன்றுஞ் செய்திலனென்று சீற்றங்கொண்டவனாய் 'இந்த ருத்ரன் எனக்கு மாப்பிள்ளையானபோதே எனக்கு சிஷ்யனாய்வைத்து இங்ஙனே ஸ்தப்தனாய்க் கிடக்கிறானே, இவனில் மிக்க பாபி உலகி

னுண்டோ? க்ருத்யாக்ருத்ய விவேகசூந்யனான இந்த மூர்க்கனுக்கு அநியாய மாய் அருமருந்தன்ன பெண்ணைக் கொடுத்துக் கெட்டேனே!' என்று பலவாறாக நிந்தித்து, "அயம் து தேவயஜநே இந்த்ரோபேந்த்ராதிபிர்பவ:| ஸஹ பாகம் ந லபதாம் தேவைர் தேவகணாதம:" [இந்த ருத்ரன் யாகங்களில் தேவதைகளோடுகூட ஹவிர்ப்பாகம் அடையக் கடவனல்லன்] என்று சபித்து விட்டு மஹா கோபத்துடனே எழுந்து தன்னிருப்பிடம் போய்ச் சேர்ந்தான்: பிறகு நெடுநாளைக்கப்பால் அந்த தக்ஷன் ப்ருஹஸ்பதிஸவ மென்னொரு யஜ்ஞம் பண்ணத் தொடங்கின செய்தியைப் பார்வதி கேள்விப்பட்டு 'தந்தை நிகழ்த்தும் வேள்வியின் விபவங்களை நாமும் கண்டுவருவோம்' என விரும்பிப் புறப்பட, ருத்ரன் பழைய வைரத்தை நினைத்து 'அங்கே நீ போகலாகாது' என்று தடுத்தவளவிலும் அவள் கேளாதே குதூஹலாதிசயத்தினால் விரைந்து புறப்பட்டுத் தந்தையின் மாளிகையில் வந்துசேர, அங்கே இவளைக்கண்டு தந்தை நல்வரவு கூறுதல் யோகக்ஷேமம் வினவுதல் ஒன்றுஞ்செய்யாது விமுகனாயிருக்கு மிருப்பையும் ருத்ரபாகமில்லாமல் யாகம் நடைபெறுவதையும் கண்டு அளவு கடந்த கோபமடைந்தவளாய் 'இந்த மஹாபாபியான தக்ஷனிடத்தில் நின்று முண்டான இந்த என் சரீரம் இனி முடிந்துபோவதே நன்று' என்று அறுதியிட்டு யோகபலத்தினால் ஒரு அக்நியையுண்டாக்கி அது தன்னிலே சரீரத்யாகம் பண்ணிவிட, இங்ஙனே பார்வதி அவமாநம் பொறுக்ககில்லாமல் இறந்தொழிந்தா ளென்றுணர்ந்த சடையான் மிகச் சினந்து தக்கன் வேள்வியைப் பலபடிகளாலும் தகர்த்துவிடக் கடவோமென்று நிச்சயித்துத் தனது சடையில் நின்றும் ஒருமயிரையெடுத்துக் கீழே எறிய, அதில் நின்றும் கோரரூபியான வீரபத்ரன் கிளம்பி ருத்ரனுடைய ஆஜ்ஞையைப்பெற்று தக்ஷயாக பூமியிலேசென்று வாசாமகோசரமான சேஷ்டைகளை யுண்டுபண்ண, ருத்ரனும் கூடச்சென்று தக்ஷனைத் தலையறுத்து ஸ்வாஹாகாரங்களை யெல்லாம் ஹாஹாகாரமாக்கி, 'தக்ஷாத்வரத்வம்ஸீ' என்றும் 'தக்கன் வேள்விதகர்த்த தலைவன்' என்றும் பெயர் பெற்றானென்கிற வரலாறு ஸ்ரீ பாகவதத்தில் நான்காம் ஸ்கந்தத்தின் ஆதியில் விரித்துரைக்கப்பட்டுள்ளது. ... .... ... .... ... (சு)

கருந்தண்கடலும் மலையு முலகும் *
அருந்து மடிகள் அமரு மூர்போல் *
பெருந்தண்முல்லைப் பிள்ளையோடி *
குருந்தந்தழுவும் கூடலூரே. (எ)

| | | | |
|---|---|---|---|
| கரு தண் கடலும் | கறுத்துக் குளிர்ந்த கடல்களையும் | அடிகள் | ஸ்வாமி |
| மலையும் | மலைகளையும் | அமரும் ஊர் | நித்யவாஸம் பண்ணுமிடம்;— |
| உலகும் | (மற்றும்) லோகங்களையும் | பெரு தண் | பெருத்தும் குளிர்ந்துமிருக்கிற |
| அருந்தும் | (ப்ரளயத்தில்) அமுதுசெய்த | | |

| | | | |
|---|---|---|---|
| முல்லைப் பிள்ளை | முல்லைக் கொடி | குருந்தம் | குருந்தமரத்தை |
| ஓடி | படர்ந்து | தழுவும் | தழுவியிருக்கப் பெற்ற |
| | | | கூடலூர்—. |

* * *—கடல்கள் மலைகள் முதலானவற்றோடு கூடிய லோகங்களை யெல்லாம் பிரளயங் கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்து நோக்கின ஸர்வேச்வரன் வாழுமிடம் திருக்கூடலூர். முல்லைக் கொடிகள் குருந்த மரத்தை முட்டாக்கிட்டுப் படர்ந்திருக்கின்றனவாம் அங்கு. ... ... ... (எ)

கலை வாழ்பிணையோடணையும் * திருநீர்
மலைவா ழெந்தை மருவுமூர்போல் *
இலைதாழ்தெங்கின் மேல்நின்றிளநீர்க்
குலைதாழ்கிடங்கின் கூடலூரே. (அ)

| | | | |
|---|---|---|---|
| கலை | ஆண்மான்கள் | இலை தாழ் | மட்டைகள் தழைத்திருக்கிற |
| பிணையோடு | பெண்மான்களோடு | தெங்கின் மேல் நின்ற | தென்னைமரங்களின் மேலிருக்கிற |
| அணை வாழும் | சேர்ந்து வாழும்படியான | | |
| திருநீர்மலை | திருநீர்மலையிலே | இளநீர் குலை | இளநீர்க் குலைகள் |
| வாழ் | வாழ்கின்ற | தாழ் | (தம்மேல்) தாழ்ந்திருக்கப் பெற்ற |
| எந்தை | எம்பெருமான் | | |
| மருவும் | பொருந்திவாழப் பெற்ற | கிடங்கின் | நீர்நிலைகளை யுடைய |
| ஊர் | திவ்யதேசம் ;— | | கூடலூர்—. |

* * *—விபவாவதாரங்களில் தர்மி ஐக்கியம் உள்ளது போல அர்ச்சாவதாரங்களிலும் தர்மி ஐக்கியம் உள்ளமையால் [—அதாவது, மத்ஸ்ய கூர்மாதி அவதாரங்கள் செய்தபெருமானே ராமக்ருஷ்ணாதி அவதாரங்கள் செய்தானென்பது போல, திவ்யதேசங்களில் ஆங்காங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமான்களும் ஒரு வ்யக்தியே என்பவாதலால்] திருநீர்மலையி லெழுந்தருளியுள்ள பெருமானே திருக்கூடலூரிலுள்ளான் என்கிறாரிதில். 'கலைவாழ் பிணையோடணையும்' என்பது திருநீர்மலைக்கு விசேடணம். ஆண்மானும் பெண்மானும் கூடிக் களித்து வாழுமிடமான திருநீர்மலையில் என்கை. கீழே திருநீர்மலைத் திருப்பதிகத்தில் "அன்றாயர் குலக் கொடியோடு அணிமாமலர்மங்கையொடு அன்பளவி" என்று தொடங்கின ராதலால் திவ்யதம்பதிகளின் அச்சேர்த்தி ஆழ்வார்திருவுள்ளத்தில் ஊன்றி யிருந்து அதுவே இங்கு அந்யாபதேசத்தால் கூறப்பட்டது போலும்.

[இலைதாழ் இத்யாதி.] படர்ந்த இலைகளையுடைய தென்னைமரங்கள் குளங்களின் கரையிலே நிற்கும்; அவற்றிலுண்டான இளநீர்க் குலைகளானவை தாழ்ந்து நிற்கிற போது, குளங்களை இளநீராலே நிறைத்து இலைகளாலே மறைத்துவைத்தாற்போலே யிருக்குமாயிற்று. நின்ற + இளநீர், நின்றிளநீர்; தொகுத்தல். ... ... ... ... ... ... ... (அ)

பெருகுகாதலடியேனுள்ளம் *
உருகப்புகுந்த ஒருவனூர்போல் *
அருகுகைதைமலர * கெண்டை
குருகென்றஞ்சும் கூடலூரே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| பெருகு காதல் | வளர்ந்துவரும் ஆசையை யுடையேனுடைய | கைதை | தாழைகள் |
| அடியேன் | அடியேனுடைய | மலர | மலர்ந்திருக்க (அதனைக் கண்டு) |
| உள்ளம் | மனமானது | கெண்டை | கெண்டை மீன்கள் |
| உருக | கரையும்படியாக | குருகு என்று அஞ்சும் | (தம்மைப் பிடித்துண்ண வந்திருக்கிற) நாரைகளென்றெண்ணி அஞ்சுமிடமான |
| புகுந்த | உள்ளே பிரவேசித்திருக்கிற | | கூடலூர்—. |
| ஒருவர் | விலக்ஷண புருஷனுடைய | | |
| ஊர் | திவ்யதேசம் ;— | | |
| அருகு | ஸமீபத்திலே | | |

* * *—நாட் செல்ல நாட் செல்ல ஆற்றுப் பெருக்குப்போலே பெருகா நின்றுள்ள காதலைக் கொண்ட அடியேனுடைய ஹ்ருதயம் உருகும்படியாக உட்புகுந்த பெருமான் வாழுமிடம் திருக்கூடலூர். அங்கே வாய்க்காற் கரைகளில் தாழம்பூக்கள் மலர்ந்திருக்கும்; அவற்றைக் கண்ட கெண்டை மீன்கள் 'குருகுகள் நம்மை இரை கொள்வதற்காக வந்து ஸ்தப்தமாய் நிற்கின்றன போலும்' என்றெண்ணி அஞ்சி யொளிக்கின்றனவாம்.

கைதை—'கேதகி' என்னும் வடசொல்விகாரம். குருகு—கொக்கு. .... (கூ)

காவிப் பெருநீர்வண்ணன் * கண்ணன்
மேவித்திகழும் கூடலூர்மேல் *
கோவைத்தமிழால் கலியன்சொன்ன *
பாவைப்பாடப் பாவம்போமே. (ய)

| | | | |
|---|---|---|---|
| காவி | கருநெய்தற் பூப்போலவும் | கலியன் | திருமங்கைமன்னன் |
| பெரு நீர் | கடல்போலவும் | கோவை தமிழால் | ஒழுங்கான தமிழினால் |
| வண்ணன் | நிறமுடையனான | | |
| கண்ணன் | எம்பெருமான் | சொன்ன | அருளிச்செய்த |
| மேவி | பொருந்தி | பாவை | இப்பாசுரங்களை |
| திகழும் | விளங்கப்பெற்ற | பாட | பாடவே |
| கூடலூர்மேல் | கூடலூர் விஷயமாக | பாவம் போம் | பாவங்கள் தொலைந்துபோம். |

* * *—காவிமலர் போலவும் கருங்கடல் போலவும் வடிவுபடைத்த பெருமான் பொருந்திவாழுமிடமான திருக்கூடலூர் விஷயமாகக் கலியனருளிச்செய்த இத்திருமொழியை ஓதவல்லார் பாவங்கள் தொலையப் பெறுவர் என்றாயிற்று.

காவி—நீலோற்பலம். காவிப் பெருநீர்—உம்மைத் தொகை. கோவைத் தமிழ்—ஒழுங்கான தமிழ். கோக்கப்பட்ட மாலைக்கும் கோவை யென்று பெயராதலால், மாலைபோல் போக்கியமான தமிழ் என்னவுமாம். ... ... (கo)

அடிவரவு:—தாம் செறும் பிள்ளை கூற்றேர் தொண்டர் தக்கன் கருந்தன் கலை பெருகு காவி வென்றி.

## இரண்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஐந்தாம்பத்து—மூன்றாந் திருமொழி,

# வென்றிமா மழுவேந்தி.

## திருவெள்ளறை மங்களாசாஸநத் திருப்பதிகம்.

---

வென்றிமாமழுவேந்திமுன்மண்மிசை மன்னரைமூவெழுகால்
கொன்றதேவ ! * நின்குரைகழல் தொழுவதோர்வகை எனக்கருள்புரியே *
மன்றில்மாம்பொழில் நுழைதந்து மல்லிகை மௌவலின்போதலர்த்தி *
தென்றல்மாமணம் கமழ்தரவரு திருவெள்ளறை நின்றானே. (க)

| | |
|---|---|
| தென்றல் | தென்றல் காற்றானது |
| மன்றில் | இடை வெளிகளிலே யுள்ள |
| மாம்பொழில் | மாந்தோப்புகளிலே |
| நுழைதந்து | நுழைந்தும் |
| மல்லிகை போது | மல்லிகைப் பூக்களையும் |
| மௌவலின் போது | முல்லைப்பூக்களையும் |
| அலர்த்தி | மலரச்செய்தும் |
| மா மணம் கமழ்தர வரு | மிக்க பரிமளம் வீச வந்துலாவப் பெற்ற |
| திரு வெள்ளறை | திருவெள்ளறையிலே |
| நின்றானே | நின்றருளும் பெருமானே !, |
| மூன் | முன்பொருகால் |
| வென்றி | ஜயசீலமான |
| மா | பெரிய |
| மழு | கோடாலிப்படையை |
| ஏந்தி | தரித்து |
| மண் மிசை மன்னரை | பூமியிலுள்ள அரசர்களை |
| மூவெழுகால் | இருபத்தொரு தலைமுறை |
| கொன்ற | கொலைசெய்த |
| தேவ | தேவனே !, |
| நின் | உன்னுடைய |
| குரை கழல் | ஆபரண வொலிபொருந்திய திருவடிகளை |
| தொழுவது ஓர் வகை | வணங்கப் பெறும் ஒருபாயத்தை |
| எனக்கு | அடியேனுக்கு |
| அருள்புரி | அருளவேணும். |

* * *—இத் திருமொழியில் பாசுரங்கள் தோறும் 'அருள்புரியே' என்று அருளை வேண்டுகின்றார்; பிரானே! உனது திருவடித்தாமரைகளில் எனக்குப் பரிபூர்ணமான பக்திப் பெருங்காதல் உண்டாகும்படியும் உனக்கு நான் அத்தாணிச் சேவகஞ் செய்து கொண்டு போதுபோக்கும்படியும் கிருபை பண்ணியருளவேணு மென்று பிரார்த்தித்தல் இத்திருமொழியின் ப்ரமேயம்.

பரசுராமனாய்த் திருவவதரித்து உலகில் க்ஷத்ரியப் பூண்டு ஒழியுமாறு செய்த பெருமானே! பரமபோக்யமான திருவெள்ளறையில் நின்றருளுமவனே! உனது திருவடிகளில் ஸ்வரூபமான வ்ருத்திவிசேஷத்தைப் பண்ணும் பரிசு நானறியேன், நீயே க்ருபைபண்ணி அதனை யருளவேணு மென்கிறார்.

உலகத்திலே எவரும் அழிப்பவரில்லாமையால் கொழுத்துத் திரிந்து கொடுமை இயற்றிவந்த க்ஷத்ரிய வம்சங்கள் பலவற்றை நாசஞ் செய்தற் பொருட்டு நாராயணமூர்த்தி ஜமதக்நி முனிவரது மனைவியான ரேணுகையிடம் இராமனாய்த் திருவவதரித்துப் பரசு என்னுங் கோடாலிப்படையை ஆயுதமாகக் கொண்டு அதனாற் பரசுராமனென வழங்கப்பெற்று வருகையில், ஒருநாள் கார்த்த வீர்யார்ஜுநனும் அவனது குமாரர்களும் ஜமதக்நியின் ஆச்ரமத்தில் இளைப்பாறப் புகுந்தகாலத்து, அங்கே அம்முனிவனது ஹோமதேநுவானது வேண்டின வஸ்துக்களையெல்லாம் யதேஷ்டமாக அளித்துக்கொண்டிருப்பதைக் கண்ட இவர்கள் அப்பசுவைக் கொள்ளைகொள்ள விரும்பி அதனைக்கவர்ந்து அம்முனிவனையுங் கொன்றிட்டது காரணமாக (ப்பரசுராமன்) அக்கார்த்த வீர்யார்ஜுநனையும் அவனது குமாரர்களையுங் கொன்று அதனாலேயே க்ஷத்ரியவம்சம் முழுவதன்மேலும் கோபாவேசங்கொண்டு உலகத்திலுள்ள அரசர்கள் பலரையும் இருபத்தொரு தலைமுறை பொருது ஒழித்திட்டான். இப்பரசுராமன் ஏழு சிரஞ்ஜீவிகளில் ஒருவன். இவனது வலிமையும் வெற்றியும் அற்புதமானது. சிவபிரானது கைலாஸகிரியைப் பெயர்த்தெடுத்த இராவணன் மிக வலியவனென்றும், அவனிலும் கார்த்தவீரியன் வலியவனென்றும், அவனிலும் பரசுராமன் வலியவனென்றும் இதிஹாஸங்களால்விளங்கும். சிவனோ விஷத்தையுண்டு கங்கையைத்தரித்து மேரு வில்வளைத்துத் திரிபுரமெரித்து மன்மதனை நீறுபடுத்தி யமனையுதைத்து ஸம்ஹாரத் தொழில்நடத்தும் பேராற்றலையுடைய உக்ரமூர்த்தியாவான்; அக்கடவுள் வீற்றிருக்கின்ற கைலாஸகிரியை இராவணன் ஒருகால் வேரோடு பெயர்த்தனன்; அங்ஙனம் மிக வலியவனாய் திக்விஜயஞ்செய்து திக்கஜங்களையும் வென்ற இராவணனைக் கார்த்த வீர்யார்ஜுநன் கட்டிச் சிறையிலிட்டனன்; அன்னவனைப் பரசுராமபிரான் தோள்துணித்துத் தொலைத்திட்டனனென்றால் இவனது ஆற்றல் பேச்சுக்கு நிலமன்றே. எம்பெருமானது தசாவதாரங்களுள் ஆறும் அவதாரமாயிருப்பன் இப்பரசுராமன்.

இப்படிப்பட்ட பரசுராமன் ஏழாமவதாரமான தசரதராமன்மீது கோபித்தலும், இவ்விருவரும் ஒருவரோடொருவர் போர்செய்தலும், ஒருவர் மற்றொருவரை வெல்லுதலும் பொருந்துமோவெனின்; துஷ்டர்களாய்க் கொழுத்துத்

திரிந்த அரசர்களைக் கொல்லும் பொருட்டுப் பரசுராமனிடத்தில் ஆவேசித்திருந்த விஷ்ணுசக்தி விசேஷம் அக்காரியம் முடிந்தபின்பு அவ்விஷ்ணுவின் அம்சாவதாரமான தசரதராமனால் கவர்ந்து கொள்ளப்பட்டதாகையால் பொருந்துமென்க. இதனால் ஆவேசாவதாரத்திற்காட்டிலும் அம்சாவதாரத்திற்கு உள்ள ஏற்றம் விளங்கும்.

ஸ்ரீமந்நாராயணனது விபவாவதாரங்கள் அளவற்றவை; அவை முக்கியம் அமுக்கியமென இருவகைப்படும். இவற்றில் முந்தியது சிறந்தது. பிந்தியது அதனிலும் தாழ்ந்தது. முக்கியமாவது ஸாக்ஷாதவதாரம். அமுக்கியமாவது ஆவேசாவதாரம். ஆவேசம் ஸ்வரூபாவேசமென்றும் சக்தியாவேசமென்றும் இருவகையதாம். ஸ்வரூபாவேசமாவது—சேதநருடைய சரீரங்களில் எம்பெருமான் தன்னுடைய ரூபத்துடன் ஆவேசித்துநிற்பது. பரசுராமன், பலராமன் போல்வார் இத்திறத்தார்கள். சக்தியாவேசமாவது—சேதநர்பக்கல் காரியகாலத்திலே எம்பெருமான் சக்திமாத்திரத்தால் தோன்றி விளங்குதல். கார்த்தவீர்யார்ஜுநன், அர்ஜுநன், வியாஸர்போல்வார் இத்திறத்தார். இவற்றில் சக்தியாவேசத்தைவிட ஸ்வரூபாவேசம் பிரபலம். இவற்றின் உண்மை நிலையை விஷ்வக்ஸேநஸம்ஹிதை முதலிய ஸ்ரீபாஞ்சராத்ரஸம்ஹிதைகளிலும் தத்வத்ரயத்திலும் அதன் வியாக்கியானத்திலும் பரக்கக் காணலாம். பரசுராமாவதாரம் ஸ்வரூபாவேசாவதாரம்.

முமுக்ஷுக்களுக்குப் பரசுராமாவதாரம் உபாஸநைக்கு உரியதன்றாகிலும் விரோதிகளைக் களைந்தொழித்த உபகாரத்துக்குத் தோற்றுத் துதிப்பதுமாத்திரமுண்டு. இங்கு "வேன்றிமா மழுவேந்தி முன் மண்மிசைமன்னரை மூவெழுகால் கொன்ற தேவா" என்று இவ்வாழ்வார் அருளிச்செய்வதும், "மன்னடங்கமழு வலங்கைக்கொண்ட விராமநம்பீ" என்று பெரியாழ்வாரருளிச் செய்வதும், "கோக்குலமன்னரை மூவெழுகால் ஒரு கூர்மழுவால், போக்கிய தேவனைப் போற்றும் புனிதன்.......இராமாநுசன்" என்று அமுதனார் (இராமாநுச நூற்றந்தாதியில்) அருளிச்செய்வதும் விரோதி நிரஸநஸ்வபாவத்துக்குத் தோற்றுத் துதித்த மாத்திரமேயென்க.

"நின்குரைகழல் தொழுவதோர் வகையெனக் கருள்புரியே" என்று சொல்லிப் பின்னடிகளில் தென்றலின் இயல்வைச் சொன்னதற்குக் கருத்துண்டு; தென்றலானது ஸ்வார்த்தமாகவன்றியே பரார்த்தமாகவே யிருப்பதுபோல அடியேனையும் "தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" என்னும்படியே அத்தலைக்கே உறுப்பாகக் கொள்ளவேணும் என்பதாம். தேன்றல்—தென்திசையில் நின்றும் வந்து வீசுங்காற்று.

வேள்ளறை—வெண்மையான பாறைகளாலியன்ற மலை; [அறை—பாறை.] இத்தலம், வடமொழியில் 'ச்வேதாத்ரி' எனப்படும். ... ... (க)

வசையில்நான் மறைகெடுத்த அம்மலரயற்கருளி முன்பரிமுகமாய் *
இசைகொள்வேதநூ லென்றிவைபயந்தவனே எனக்கருள்புரியே *
உயர்கொள் மாதவிப் போதொடுலாவிய மாருதம் வீதியின்வாய் *
திசையெல்லாம் கமழும்பொழில்சூழ் திருவெள்ளறை நின்றானே. (௨)

| | |
|---|---|
| உயர்கொள் | ஓங்கிவளர்கின்ற |
| மாதவி | குருக்கத்திமரங்களிலுள்ள |
| போதொடு உலாவிய | புஷ்பங்களோடே அணைந்த |
| மாருதம் | காற்றானது |
| வீதியின் வாய் | வீதிகள்தோறும் (வீசும்போது) |
| திசை எல்லாம் | திக்குக்களெல்லாம் |
| கமழும் | பரிமளம் பரவப்பெற்றதும் |
| பொழில் சூழ் | சோலைகள் சூழ்ந்திருக்கப் பெற்றதுமான |
| திரு வெள்ளறை, நின்றானே!—; | |
| முன் | முன்பொருகால், |
| வசை இல் | குற்றமற்ற |
| நால் மறை | நான்குவேதங்களையும் |
| கெடுத்த | போக்கடித்துக் கொண்டு வருந்திநின்ற |
| அ மலர் அயற்கு | மலரில் தோன்றின அப்பிரமனுக்கு |
| அருளி | அருள்புரிந்து |
| பரி முகம் ஆய் | ஹயக்ரீவாவதார மெடுத்து |
| இசை கொள் வேதநூல் இவை என்று | "ஸ்வரப்ரதானமான வேத சாஸ்த்ரங்கள் இவை காண்" என்று சொல்லி |
| பயந்தவனே | அவற்றை அவனுக்கு உபதேசித்துத்தந்தவனே! |
| எனக்கு அருள்புரி | என்மீது கிருபைபண்ண வேணும். |

* * *—குருக்கத்திச் செடிகளிலே படிந்து அங்குள்ள பரிமளங்களை முகந்துகொண்டு எங்கும் வீசுகின்ற தென்றலினால் மணங் கமழப்பெற்ற திருவெள்ளறையில் நின்றருளும் பெருமானே! முன்பு உன்பக்கலிலே வேதங்களையெல்லாம் பெற்று, பிறகு அவற்றை அசுரர்கொள்ளப் பறிகொடுத்து 'கண்ணிழந்தேன், தனமிழந்தேன்' என்று கதறின நான்முகனுக்குக் கருணைகூர்ந்து ஹயக்ரீவாவதாரம் செய்து அவ்வேதங்களை மீட்டுக்கொணர்ந்து அவனுக்கு உபகரித்தருளினவனல்லையோ நீ? அப்படிப்பட்ட அருமையான உபகாரம் ஏதேனும் செய்யவேணுமென்று நான் இரக்கிறேனோ? ஏதேனுமொரு குற்றேவலிலே அடியேனை நியமித்துப் பணிகொண்டருளலாகாதோ? என்கிறார்.

இத்திருமொழியில் சில பாசுரங்களில் "எனக்கு அருள்புரியே" என்று வந்தாலும், முதற்பாட்டில் "நின்குரைகழல் தொழுவதோர் வகையெனக் கருள்புரியே" என்றும், இடையிடையே சில பாசுரங்களில் "நின்காதலை யருளெனக்கு" "நின்னடிமையை அருளெனக்கு" என்று முள்ளதனால் அவற்றுக்குப்பொருந்தப் பொருள் கொள்ளவேணும். ஆகவே, எனக்கு அருள்புரியே என்றது—உனக்குநான் தொண்டனாம்படி அருள்செய்ய வேணுமென்றபடி. மாதவீ—வடசொல். ... .... ... .... ... (௨)

வெய்யனாயுலகேழுடன்நலிந்தவன் உடலகமிருபிளவா *
கையில்நீளுகிர்ப் படையதுவாய்த்தவனே எனக்கருள்புரியே *
மையினார்தரு வராலினம்பாய வண்தடத்திடைக் கமலங்கள் *
தெய்வநாறுமொண்பொய்கைகள்சூழ் திருவெள்ளறை நின்றானே. (௩)

| | | | |
|---|---|---|---|
| மையின் ஆர் தரு | கருநிறத்தினால் பூர்ணமான | வெய்யன் ஆய் | மிகவும் க்ரூரனாயிருந்து கொண்டு |
| வரால் இனம் | வரால் மீன்களின் திரள் | உலகு ஏழ் | ஸப்தலோகங்களையும் |
| வண் தடத்திடை | அழகிய தடாகங்களிலே | உடன் | ஒருங்கே |
| பாய | துள்ளிவிளையாடப் பெற்றதும், | நலிந்தவன் | ஹிம்ஸித்துக் கொண்டிருந்த இரணியனுடைய |
| கமலங்கள் | தாமரைப் பூக்கள் | உடலகம் | மார்பு |
| தெய்வம் நாறும் | திவ்யமான வாஸனை வீசாநின்ற | இரு பிளவு ஆ | இரண்டு கூறும்படி |
| ஒண் பொய்கைகள் | அழகிய பொய்கைகளினால் | கையில் | திருக்கைகளில் |
| சூழ் | சூழப்பட்டதுமான | நீள் உகிர் | நீண்ட நகங்களையே |
| | திருவெள்ளறை, நின்றானே !—; | படை அது | ஆயுதமாக |
| | | வாய்த்தவனே | பெற்றவனே ! |
| | | எனக்கு அருள்புரி | அடியேன்மீது க்ருபை பண்ணவேணும். |

* * *—திருவெள்ளறை நின்ற பெருமானே ! பண்டொருகால் ப்ரஹ்லாதாழ்வானுக்கு அருள் செய்யவேண்டிப் படாதபாடுகள்பட்டாய் ; அதிக்ரூரஸ்வபாவனாய் ஏழுலகுக்குந் தீங்கு செய்துகொண்டிருந்த இரணியனுடைய மார்பை உகிரால் பிளந்து இப்பாடுபட்டு அவனுக்கு அருள்செய்தாய் ; எனக்காக நீ இப்படிப்பட்ட அருமைகளொன்றும் படவேண்டா ; தொண்டனுக்கி யருளவேணும் மத்தனை என்கிறார்.

இரணியன் தான் வரங்கொள்ளும்போது " அஸ்த்ரசஸ்த்ரங்களொன்றினாலும் சாகக்கடவேனல்லேன் " என்றும் " ஈரமுள்ளதனாலும் ஈரமில்லாததனாலும் சாகக்கடவேனல்லேன் " என்றும் வரம்பெற்றனனாதலால் அந்த வரம் பழுதுபடாமைக்காகக் கையில் நகங்களையே ஆயுதமாகக் கொண்டமை தோன்ற " நீளுகிர்ப் படையது வாய்த்தவனே !" என்றார்.

வரால்—மத்ஸ்யவிசேஷம். ... .... .... ... .... (௩)

வாம்பரியுகமன்னர் தமுயிர்செக ஐவர்கட் கரசளித்த *
காம்பினார் திருவேங்கடப்பொருப்ப நின்காதலை யருளெனக்கு *
மாம்பொழில் தளிர்கோதியமடக்குயில் வாயதுதுவர்ப்பெய்த *
தீம்பலங்கனித் தேனதுநுகர் திருவெள்ளறை நின்றானே. (௪)

| | | | |
|---|---|---|---|
| மாம்பொழில் | மாந்தோப்புகளிலே | தீம் | இனிமையான |
| தளிர் | அவற்றின் தளிர்களை | பலங்கனி | பலாப் பழங்களிலுள்ள |
| கோதிய | கொந்தி உண்ட | தேன் அது | மதுவை |
| மட குயில் | அழகிய குயில்கள் | நுகர் | பானம்பண்ணப் பெற்ற |
| | | | திருவெள்ளறை, நின்றானே !—; |
| வாய் அது துவர்ப்பு எய்த | தமது வாய் துவர்த்துப்போக (அந்தரஸத்தை மாற்றுகைக்காக) | வாம் பரி | (பாரதப்போர்ச் சேனைகளிலே) மேல்விழுந்து வருகிற குதிரைகள் |

| | |
|---|---|
| உக | மாளும்படியாகவும் |
| மன்னர்தம் | (எதிரிகளான) அரசர்களினுடைய |
| உயிர் | பிராணன் |
| செக | அழியும்படியாகவும் செய்து |
| ஐவர்கட்கு | பஞ்ச பாண்டவர்களுக்கு |
| அரசு | ராஜ்யத்தை |
| அளித்த | உபகரித்தருளினவனும், |
| காம்பின் ஆர் திரு வேங்கடம் பொருப்ப | மூங்கில்களாலே நிறைந்த திருவேங்கடமலையிலுள்ளவனுமான பெருமானே! |
| நின் காதலை | உன்விஷயமான பரமபக்தியை |
| எனக்கு அருள் | அடியேனுக்குப் பிறப்பித்தருளவேணும். |

* * *—திருவெள்ளறை நின்றருளும் பிரானே! பஞ்சபாண்டவர்கட்கு அருள் செய்யவேண்டிப் படாதனபட்டாய்; பாரதப்போரைமூட்டி * மலைபுரை தோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய, நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன் சிலைவளையத் திண்டேர்மேல் முன்னின்றாய்; இப்படி ஏதேனும் அருமைப்படவேணுமோ எனக்காக? உனது அடிமையிலே எனக்கு ருசியைப் பிறப்பிக்கு மித்தனையன்றோ நான் வேண்டுவது என்கிறார்.

"வாம்பரி" என்றது 'வாவும் பரி' என்றபடி. "செய்யுமெனச்ச வீற்றுயிர்மெய் சேறலும்" என்ற நன்னூற் சூத்திரத்தினால் எச்சத்து உயிர்மெய் கெட்டது. (வாவுதல்—தாவுதல்.) திருவேங்கடமலையில் நிற்பவனும் திருவெள்ளறையில் நிற்பவனும் ஒரு வ்யக்தியே என்பது தோன்ற "காம்பினார் திருவேங்கடப் பொருப்ப—திருவெள்ளறை நின்றானே!" என்றார்.

"நின்காதலை யருளெனக்கு" என்றவிடத்து வியாக்கியான ஸ்ரீஸூக்தி:— "தேவர் திருவடிகளிலுண்டான கைங்கர்யத்துக்குப் பூர்வ க்ஷணவர்த்தியான பரமபக்தியை எனக்குப் பண்ணியருளவேணும்."

[மாம்பொழில் இத்யாதி.] மாஞ்சோலையிலே போய்ப்புகுந்து அங்குள்ள தளிர்களைத்தின்ற பெண்குயில் வாய் துவர்ப்படைந்துபோக, அத்துவர்ப்பை வேறு ரஸத்தாலே மாற்றவேண்டி இனிய பலாப்பழத்திலே சென்று வாய்வைக்கின்றதாம். .... ... .... ... ... (ச)

மானவேலோண் கண்மடவரல் மண்மகளழுங்க முந்நீர்ப்பரப்பில் *
ஏனமாகியன் றிருநிலமிடந்தவனே எனக்கருள்புரியே *
கானமாமுல்லை கழைக்கரும்பேறி வெண்முறுவல்செய்தலர்கின்ற *
தேனின்வாய்மலர் முருகுகுக்கும் திருவெள்ளறை நின்றானே. (ரு)

| | |
|---|---|
| கரும்பு கழை ஏறி | கரும்புநுனியளவும் சென்று படர்ந்து |
| வெண் முறுவல் செய்து அலர்கின்ற | வெண்மையான புன்சிரிப்பைச் செய்வனபோல் விகஸியா நின்ற |
| மா கானம் முல்லை மலர் | பெரியகாட்டு முல்லைப் பூக்கள் |
| தேனின் வாய் | வண்டுகளின் வாய்களிலே |
| முருகு | தேனை |
| உகுக்கும் | பெருக்காநிற்கப் பெற்ற திருவெள்ளறை, நின்றானே!—; |
| மானம் | பெருமைதங்கிய |
| வேல் | வேற்படை போன் |
| ஒண் | அழகிய |

கண் — கண்களையுடையளாய்
மடவரல் — பெண்டிர்க்குரிய குணங்களையுடையளான
மண்மகள் — பூமிப் பிராட்டி
அழுங்க — (பிரளயக்கடலில்) மூழ்கிக் கிடக்க,
அன்று — அக்காலத்து,
முந்நீர் — (அந்தப் பிரளயக்) கடலினுடைய
பரப்பில் — மஹாஜலத்திலே
ஏனம் ஆகி — மஹாவராஹரூபியாகி (இழிந்து)
இரு நிலம் — விசாலமான பூமியை
இடந்தவனே — அண்டபித்தியில் நின்றும் குத்தியெடுத்து வந்தவனே!
எனக்கு அருள்புரி — அடியேன்மீது கிருபைபண்ணாய்.

* * *—தேஹகுணத்தாலும் ஆத்மகுணத்தாலும் சிறந்தவளான பூமிப் பிராட்டியானவள் பிரளயப் பெருவெள்ளத்திலே புக்கு அழுந்தினவளவிலே நீர்க்கும் சேற்றுக்கும் பின்வாங்காத மஹாவராஹ வடிவைக்கொண்டு அண்டபித்தியிலே ஒட்டிக்கிடந்த அப்பூமியை இடந்தெடுத்துக் கொண்டேறினவனே! வாய்திறந்து வேண்டவும்மாட்டாத பூமியை ரக்ஷித்தவுனக்கு, வாய்திறந்து வேண்டுகின்ற என்னுடைய ரக்ஷணம் பண்ணுகை பெரியபணியோ? என்கிறார்.

பெரிய காட்டுமுல்லைக் கொடிகள் கரும்புகளின் மேலேறிப்படர்ந்து வெண்ணிறமான பூக்களைப் புஷ்பிக்கின்றன; அவற்றிலே வண்டுகள் மொய்க்கும்போது அவற்றின்வாயிலே தேன் பெருகுகின்றதாம். .... ... .... (ரு)

பொங்குநீண்முடி யமரர்கள்தொழுதெழ அமுதினைக் கொடுத்தளிப்பான் *
அங்கோராமையதாகியவாதி நின்னடிமையை யருளெனக்கு *
தங்குபேடையோடூடியமதுகரம் தையலார் குழலணைவான் *
திங்கள்தோய் சென்னிமாடஞ் சென்றணை திருவெள்ளறைநின்றானே. (சு)

தங்கு — பூவிலே தங்கியிருந்த
பேடையோடு — பெண்வண்டோடு
ஊடிய — பிரணயகலஹங் கொண்ட
மதுகரம் — ஆண்வண்டு
தையலார் — ஸ்த்ரீகளினுடைய
குழல் — கூந்தல்களை
அணைவான் — சென்று கிட்டி அங்கே மறைந்திருக்கைக்காக,
திங்கள் தோய் — சந்திரமண்டலத்திலே படிந்திருக்கிற
சென்னி — சிகரங்களையுடைய
மாடம் — மாளிகைகளை
சென்று அணை — சென்று சேர்ந்திருக்கப் பெற்ற
திருவெள்ளறை, நின்றானே!—;
பொங்கு — விளங்குகின்ற
நீள் முடி — நீண்ட கிரீடத்தையுடையரான
அமரர்கள் — தேவர்கள்
தொழுது எழ — (தன்னை) வணங்கியாச்ரயிக்க (அவர்களுக்கு இரங்கி)
அமுதினை — அமிருதத்தை
கொடுத்து அளிப்பான் — தந்தருள்வதற்காக
அங்கு — அப்போது
ஓர் — விலக்ஷணமான
ஆமை அது ஆகிய — கூர்மமாகத் திருவவதரித்த
ஆதி — காரணபூதனே!
நின் அடிமையை — உனக்கு நான் அடியனாயிருக்கப்பெறுவதை
எனக்கு அருள் — எனக்கு அருளவேணும்.

* * *—துர்வாஸ முனிவனுடைய சாபத்தினால் தேவர்களின் செல்வம் யாவும் ஒழியவே அசுரர்வந்து பொருது அமரரை வென்றபோது இந்திரன் தேவர்களோடு கூடவந்து உன்னைச் சரணமடைந்து உன்னால் அபயம்பெற்று அசுரர்களையுந் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாகநாட்டி வாஸுகியென்னும் மகாநாகத்தைக் கடைகயிறாகப் பூட்டிப் பாற்கடலைக் கடைந்தபோது மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்களின் வேண்டுகோளினால் நீ பெரியதோர் ஆமைவடிவமெடுத்து அம்மலையின்கீழே சென்று அதனை முதுகின்மீது கொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமல் கடைதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தாய்; இவ்வாறாக அந்த ப்ரயோஜநாந்தரபரர்கட்கு நீபட்ட வருத்தங்கள் அடியேனுக்காகப் படவேண்டா; உனது திருவடிகளில் நான் அடிமைசெய்வேனும்படி எனக்கு அருளினால் போதும் என்கிறார்.

[தங்குபேடையோடு இத்யாதி.] வண்டுகள் ஆணும்பெண்ணுமாய்ப் பூவிலே படுத்திருந்தன; தம்பதிகளுக்குப் பிரணயகலஹம் இயற்கையாகையாலே ஊடல் உண்டாயிற்று; உடனே ஆண்வண்டானது பேடைக்குத் தெரியாததோரிடந் தேடி மறையவேணு மென்றெண்ணி ஸ்த்ரீகளினுடைய கூந்தலிலே மறையக்கோலி, சந்த்ர மண்டலத்தளவுஞ் சென்றோங்கின சிகரத்தையுடைய மாடங்களிலே சென்றணைகின்றதாம் திருவெள்ளறையில். .... ... .... (சு)

ஆறிஞ்டோருநான்குடைநெடுமுடி அரக்கன்தன் சிரமெல்லாம் *
வேறுவேறுக வில்லதுவளைத்தவனே எனக்கருள்புரியே *
மாறில்சோதிய மரதகப்பாசடைத் தாமரை மலர்வார்ந்த *
தேறல்மாந்திவண் டின்னிசைமுரல் திருவெள்ளறை நின்றானே. (எ)

மாறு இல் சோதிய { ஒப்பற்ற ஒளியையுடையனவாய்
மரதகம் மரதகம் போன்ற
பாசு அடை பச்சிலைகளை யுடையனவான
தாமரை தாமரைகளினுடைய
மலர் பூக்களில் நின்றும்
வார்ந்த பெருகின
தேறல் மகரந்தத்தை
மாந்தி பானம்பண்ணி
வண்டு வண்டுகள்
இன் இசை முரல் { இனிய பண்களைப் பாடாநிற்கப்பெற்ற
திருவெள்ளறை, நின்றானே!—;

அரக்கன் தன் இராவணனுடைய
நெடு முடி உடை { நீண்ட கிரீடங்களையணிந்த
ஆறிஞ்டு ஒரு நான்கு சிரம் எல்லாம் } பத்துத்தலைகளும் ஒன்று தப்பாமல்
வேறு வேறு உக { தனித்தனியே அற்று விழும்படி
வில் அது சார்ங்கத்தை
வளைத்தவனே { வளைத்து அம்பெய்த பெருமானே!,
எனக்கு அருள்புரி { என்விஷயத்தில் கிருபை பண்ணு.

* * *—திருவெள்ளறைநின்ற பெருமானே! பிராட்டியானவள் உன்னைப் பிரிந்து பத்து மாஸம் பொறுத்திருந்தாள்; நானோ ஒரு நொடிப்பொழுதும் உன்னைப் பிரிந்து பொறுக்ககில்லாமல் துடிக்கிறேன்: ஆகையாலே அப்பிராட்டியிற்காட்டிலும் எனக்கு நெடுவாசியுண்டு; இருந்தாலும் அவளுக்காக நீ செய்த அருந்தொழில்களில் ஆயிரத்திலொருகூறும் எனக்காக நீ செய்யவேண்டுவதில்லை; இராவணனுடைய தலைகளையறுக்கப் பட்டபாடு பெரிதுமுண்டே; அப்பாடு ஒன்றும் எனக்காகப் படவேண்டா; 'இவன் நம் தொண்டன்' என்று திருவுள்ளம்பற்றினால் போதும் பிரானே! என்கிறார். .... .... (எ)

முன்னிவ்வேழுலகுணர்வின்றி இருள்மிக வும்பர்கள்தொழுதேத்த *
அன்னமாகி யன்றருமறைபயந்தவனே எனக்கருள்புரியே *
மன்னுகேதகைசூதகமென்றிவை வனத்திடைச் சுரும்பினங்கள் *
தென்னவென்னவண் டின்னிசைமுரல் திருவெள்ளறை நின்றானே. (அ)

| | |
|---|---|
| மன்னு | மாறாதே பூத்திருக்கிற |
| கேதகை | தாழைகளென்ன |
| சூதகம் | மாமரங்களென்ன |
| என்ற இவை | இத்யாதி வ்ருக்ஷங்களை யுடைத்தான |
| வனத்து இடை | சோலைகளின் நடுவே |
| சுரும்பு இனங்கள் | 'சுரும்பு' என்னுஞ்சாதி வண்டுகளின் கூட்டம் |
| தென்ன என்ன | 'தென்னதென்ன' என்றுபாட, |
| வண்டு | (சாதாரண)வண்டுகளானவை |
| இன் இசை | இனிமையான இசைப் பாட்டுக்களை |
| முரல் | பாடாநிற்கப்பெற்ற |

திருவெள்ளறை, நின்றானே!—;

| | |
|---|---|
| முன் | முன்பொருகால் |
| இ ஏழ் உலகு | இவ்வுலகங்களெல்லாம் |
| உணர்வு இன்றி | அறிவு கெட்டு |
| இருள் மிக | அஜ்ஞாநாந்தகாரம் மேலிட்டவளவிலே |
| உம்பர்கள் | தேவர்கள் |
| தொழுது ஏத்த | வணங்கித் துதிக்க |
| அன்று | அப்போது |
| அன்னம் ஆகி | ஹம்ஸரூபியாகி |
| அரு மறை | அருமையான வேதங்களை |
| பயந்தவனே | ஸம்பாதித்துக் கொடுத்தவனே! |

எனக்கு அருள்புரி—.

* * *—நான்முகனிடத்தில்நின்றும் வேதங்களைக் கொள்ளைகொண்டு போன அசுரர்களுக்காக ஹயக்ரீவாவதாரம் செய்தருளினபடியைக் கீழ் இரண்டாம்பாட்டில் அநுஸந்தித்தார். அப்படி ஹயக்ரீவாவதாரஞ்செய்து கடலினுட்புகுந்து மதுகைடபரென்னு மசுரர்களைத்தேடிக் கண்டுபிடித்துக் கொன்று வேதங்களை மீட்டுக்கொணர்ந்து ஹம்ஸரூபியாய்ப் பிரமனுக்கு உபதேசித்தருளினனாதலால், அன்னமாகி யருமறை பயந்த அவ்வரலாற்றை இப்பாட்டில் அநுஸந்திக்கிறார். அப்படிப்பட்ட அருமையான காரியமொன்றும் என்திறத்துச் செய்யவேண்டுவதில்லை; அந்த வேதங்களிலே புருஷார்த்தமாகக் கூறப்பட்டுள்ள கைங்கரியத்தை அடியேனுக்குப் பெறுவித்தருளினால் போதுமென்கிறார்.

சுரும்பு என்பதும் வண்டு என்பதும் பரியாயமென்று பலர் நினைத்திருப்பதுண்டு: பரியாயமென்று கொள்ளலாமாயினும் ஜாதிபேதமுண்டு. இதனையறியாமல், இப்பாட்டில் மூன்றாமடியில் 'சுரும்பினங்கள்' என்று வந்திருக்க, மீண்டும் நான்காமடியில் 'வண்டு' என வருவது ஒவ்வாதென்றெண்ணிச் சிலர் பாடத்தை மாறுபடுத்தினர்—"தென்னதென்னவென்றின்னிசை முரல்" எனத் திருத்தினர். அதுவேண்டா; "தென்னவென்ன, வண்டின்னிசை முரல்" என்ற ஆன்றோர்பாடமே கொள்ளத்தக்கது. சுரும்பு சாதி வேறு, வண்டுசாதி வேறு என்க. கீழ் (5-1-1.) "அறிவதரியான்" என்ற பாட்டில் "நறிய மலர்மேல் சுரும்பார்க்க......சிறை வண்டிசைபாடும்" என வந்ததும் குறிக்கொள்ளத்தக்கது.

கேதகை, சூதகம்—வடசொல் விகாரங்கள். ... ... (அ)

ஆங்குமாவலிவேள்வியி லிரந்துசென்று அகலிட முழுதினையும் *
பாங்கினால்கொண்டபரம நிற்பணிந்தெழுவேன் எனக்கருள்புரியே *
ஓங்குபிண்டியின் செம்மலரேறி வண்டுழிதர மாவேறி *
தீங்குயில் மிழற்றும்படப்பைத் திருவெள்ளறை நின்றானே. (௯)

| | | | |
|---|---|---|---|
| ஓங்கு | உயர்ந்து வளர்கின்ற | வேள்வியில் | யாகபூமியில் |
| பிண்டியின் | அசோகமரத்தினுடைய | சென்று | எழுந்தருளி |
| செம் மலர் | சிவந்த புஷ்பங்களின்மேலே | இரந்து | (மூவடிமண்) யாசித்து |
| வண்டு | வண்டுகள் | ஆங்கு | அப்போதே |
| ஏறி | ஏறி | அகல் இடம் முழுதினையும் | பூமிப் பரப்பெல்லாவற்றையும் |
| உழிதர | ஸஞ்சரிக்க, | பாங்கினால் | முறைமையினால் |
| தீம் குயில் | மதுரஸ்வரமுள்ள குயில்கள் | கொண்ட | ஸ்வாதீனப்படுத்திக்கொண்ட |
| மா ஏறி | மாமரங்களின்மேலேறிநின்று | பரம | புருஷோத்தமனே! |
| மிழற்றும் | கூவுதல் செய்யப்பெற்ற | நின் | உன்னை |
| படப்பை | கொடித் தோட்டங்களையுடைத்தான | பணிந்து எழுவேன் எனக்கு | வணங்கி யெழுகின்ற என் விஷயத்திலே |
| திருவெள்ளறை, நின்றானே!—; | | | |
| மாவலி | மஹாபலியினுடைய | அருள்புரி | க்ருபை பண்ணியருள். |

* * *—திருவெள்ளறைநின்ற பிரானே! தேவேந்திரன் கண்ணீர்விட்டழுதுகொண்டு தலைகுனிய நின்று திருவடிவாரத்திலே பிரார்த்தித்தா னென்பதுவேகொண்டு, கண்டவர்களெல்லாரும் ஏசும்படியான வாமன வேஷத்தைக் கொண்டு மாவலி வேள்வியிற்சென்று மூவடியிரந்து மூவுலகுமளந்துகொண்ட பரமபுருஷனாகிய வுன்னைப் பணிந்தெழுகின்ற என் விஷயத்தில் பரமக்ருபை செய்தருளவேணும் என்கிறார். ப்ரயோஜநாந்தரத்தை விரும்பிவந்து பணிந்த இந்திரனுக்குக் காரியஞ்செய்த நீ அநந்யப்ரயோஜநனான வடியேனுக்கு இரங்க

லாகாதோ? இந்திரனுக்குச் செய்ததுபோலே எனக்கும் ஏதேனும் ஆயாஸமுற்றுக் காரியஞ்செய்ய வேண்டிற்றுண்டோ? 'இவன் நம் தொண்டன்' என்று திருவுள்ளம் பற்று மத்தனையேயன்றோ வேண்டுவது—என்பது உள்ளுறை.

[தூங்குபிண்டியின் இத்யாதி.] 'பிண்டி' என்று அசோகமரத்துக்குப் பெயர். ஆகாசாவகாசம் வெளியடையும்படி வளர்ந்த அசோகமரம் செக்கச்செவேலென்று பூத்த பூக்களினால் நிறைந்திருக்கின்றது; அப்புஷ்பங்களை வண்டுகள் பார்த்து 'இவை மலர்களல்ல, நெருப்பாம்' என மயங்கி அங்குச் செல்ல அஞ்சிச் சிலசமயங்களில் ஒதுங்கித்திரியும். (கீழ் முதற்பத்தில் [1-2-9] "தாதுமல்கிய பிண்டி விண்டலர்கின்ற தழல்புரையெழில் நோக்கிப், பேதை வண்டுகள் எரியெனவெருவரு பிரிதிசென்றடை நெஞ்சே!" என்ற பாசுரமும் அவ்விடத்து உரையும் நோக்கத்தக்கது. பக்கம்—50.) அசோகமலர்களை அக்நியாக ப்ரமித்து அஞ்சி அப்பால் செல்லுமியல்வினவான வண்டுகள் சில ஸமயங்களில் அந்த ப்ரமம்நீங்கி 'இவை மலர்களே', என்று துணிந்து அவற்றிலே மதுவுண்ணச்செல்வது முண்டாகையாலே, அப்படி அவை மதுவுண்ண அசோக மலர்களில் ஏறியிருப்பதைக்கண்டு அருகே மாமரங்களிலுள்ள குயில்கள் 'அந்தோ! இவ்வண்டுகள் நெருப்பிலே அகப்பட்டனவே!' என்று பரிதாபந் தோற்ற அநக்ஷரரஸமாகக் கூப்பிடுகின்றனபோலும். இப்படிப்பட்ட சோலைகளினாற்சூழப்பெற்றது திருவெள்ளறை. ... .... ... (கூ)

மஞ்சுலா மணிமாடங்கள்சூழ் திருவேள்ளறையதன்மேய *
அஞ்சனம்புரையுந் திருவுருவனை ஆதியை யமுதத்தை *
நஞ்சுலாவிய வேல்வலவன் கலிகன்றிசொல் ஐயிரண்டும் *
எஞ்சலின்றிநின் றேத்தவல்லார் இமையோர்க்கர சாவர்களே (கo)

| | |
|---|---|
| மஞ்சு உலாம் | மேகங்கள் படிந்து உலாவப்பெற்ற |
| மணி மாடங்கள் | நவரத்நங்கள் பதித்த மாளிகைகளினால் |
| சூழ் | சூழப்பட்ட |
| திரு வெள்ளறை அதன் மேய | திருவெள்ளறையில் நித்ய வாஸம் செய்பவனும் |
| அஞ்சனம் புரையும் திரு உருவனை | மைபோன்ற திவ்யமான வடிவையுடையவனும் |
| ஆதியை | ஸகல ஜகத்காரண பூதனும் |
| அமுதத்தை | அமுதம்போல் போக்யனுமான எம்பெருமானை, |
| நஞ்சு உலாவிய வேல் வலவன் | விஷம்தங்கிய வேற்படையைச்செலுத்தவல்லவரான |
| கலிகன்றி | திருமங்கையாழ்வார் |
| சொல் | அருளிச்செய்த |
| ஐ இரண்டும் | இப்பத்துப் பாசுரங்களைக் கொண்டு |
| எஞ்சல்இன்றி | குறைவின்றி |
| நின்று | மனம் நிலைபெற்று |
| ஏத்த வல்லார் | துதிக்க வல்லவர்கள் |
| இமையோர்க்கு | நித்யஸூரிகளுக்கும் |
| அரசு ஆவர்கள் | ஆதரிக்கத் தக்கவராவர்கள். |

* * *—மேகமண்டலத் தளவுஞ்சென்று ஓங்கியிருக்கின்ற மணிமாடங்கள் சூழ்ந்த திருவெள்ளறையில் நித்தியவாஸஞ்செய்தருளும் புண்டரீகாக்ஷப்

பெருமாள் விஷயமாகக் கலியனருளிச்செய்த இத்திருமொழியை ஓதவல்லவர்கள் ஸ்ரீவைகுண்டத்திலே செல்லப்பெற்று நித்யஸூரிகளால் மிகவுங் கொண்டாடப் பெறுவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டிற்றாயிற்று. .... (க0)

அடிவரவு:—வென்றி வசை வெய்யன் வாம்பரி மானவேல் பொங்கு ஆறு முன் ஆங்கு மஞ்சு உந்திமேல்.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஐந்தாம்பத்து—நான்காந்திருமொழி,

# உந்திமேல் நான்முகனை.

## திருவரங்கம் பெரியகோயில் மங்களாசாஸநத்திருப்பதிகம்.

உந்திமேல் நான்முகனைப்படைத்தான் உலகுண்டவ
னெந்தைபெம்மான் * இமையோர்கள்தாதைக்கு இடமென்பரால் *
சந்திேனாடுமணியுங் கொழிக்கும் புனல்காவிரி *
அந்திபோலும் நிறத்தார்வயல்சூழ் தென்னரங்கமே. (க)

| | | | |
|---|---|---|---|
| சந்தினோடு | சந்தனக்கட்டைகளையும் | உந்தி மேல் | (தனது) திருநாபியிலே |
| மணியும் | நவரத்னங்களையும் | நான்முகனை | பிரமனை |
| கொழிக்கும் | தள்ளிக்கொண்டு பெருகுகின்ற | படைத்தான் | ஸ்ருஷ்டித்தவனும் |
| புனல் | தீர்த்தத்தை யுடைத்தான | உலகு உண்டவன் | (பிரளயகாலத்தில்) லோகங்களை அமுது செய்தவனும் |
| காவிரி | திருக்காவிரி நதியாலும், | எந்தை பெம்மான் | எம் குலத்துக்கு நாதனானவனும் |
| அந்தி போலும் நிறத்து ஆர் வயல் | ஸந்தியாகாலம்போன்ற வர்ணத்தையுடைய கழனிகளினாலும் | இமையோர்கள் தாதைக்கு | நித்யஸூரிகளுக்குத் தலைவனுமான பெருமானுக்கு |
| சூழ் | சூழப்பட்ட | இடம் | வாஸஸ்தலம், |
| தென் அரங்கம் | திருவரங்கமானது,— | என்பர் | என்று சொல்லுவர்கள். |

* * *—உலகங்களைப் படைக்கவேண்டித் தனது திருநாபிக்கமலத்தில் நான்முகக்கடவுளைப்படைத்து அவன் மூலமாகக் காரியப்பொருள்களைப் படைத்தருள்பவனும், படைக்கப்பட்ட உலகங்கள் பிரளயவெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டு அழிவதாயிருக்கையில் அவற்றைத் திருவயிற்றிலே வைத்து நோக்கு

பவனும், இப்படிப்பட்ட குணங்களைக்காட்டி எம்மை ஆட்படுத்திக்கொள்பவனும், நித்யஸூரிகளுக்கு நாதனுமான பெருமான் எழுந்தருளியிருக்குமிடம் எதுவென்றால், சந்தனமரங்களையும் நவமணிகளையும் கொழித்துத் தள்ளிக்கொண்டு பெருவெள்ளமாகப் பெருகுகின்ற திருக்காவிரியாலும் அந்த நதியினால் வளம்பெற்ற வயல்களாலும் சூழப்பட்ட திருவரங்கம் பெரிய கோயிலாம்.

தாதை—'தாதஃ' என்ற வடசொல் விகாரம். சந்து—'சந்தநம்' என்ற வடசொற்சிதைவு.

அந்திபோலும் நிறத்தார்வயல்=அந்தியென்றது ஸாயம் ஸந்தியாகாலத்தை; அது இருள்மூடிக் கறுத்துத் தோற்றமாதலால் "கருநெல்சூழ் கண்ணமங்கை" என்னுமாபோலே கருவடைந்த பயிர்களாலே வயல்கள் கறுத்துத் தோன்றுகின்றனவாம். இனி, ஸாயம் ஸந்தியாகாலத்தைச் செந்நிறமாக வருணிப்பார்களாதலால் அதற்குச் சேரப்பொருள்கொள்ளவேண்டில் 'நுனிநெல் பழுத்த வயலாலே சூழப்பட்ட' என்றுரைத்துக்கொள்க. .... ... (க)

வையமுண் டாலிலைமேவுமாயன் மணிநீண்முடி *
பைகொள் நாகத்தணையான் பயிலுமிடமேன்பரால் *
தையனல்லார் குழல்மாலையும் மற்றவர்தடமுலை *
செய்யசாந்துங் கலந்திழிபுனல்சூழ் தென்னரங்கமே. (உ)

| | |
|---|---|
| நல் தையலார் | நல்ல ஸ்த்ரீகளினுடைய |
| குழல் மாலையும் | தலையிலணிந்த பூமாலைகளும் |
| மற்று | இன்னமும் |
| அவர் | அந்த ஸ்த்ரீகளினுடைய |
| தட முலை | முலைத்தடங்களில் (பூசப்பட்ட) |
| செய்ய சாந்தும் | சிவந்த சந்தனமும் (ஆகிய இவற்றோடு) |
| கலந்து | சேர்ந்து கலங்கி |
| இழி | பிரவஹிக்கின்ற |
| புனல் | (காவிரித்) தீர்த்தத்தினால் |
| சூழ் | சூழப்பட்ட |

| | |
|---|---|
| தென் அரங்கம் | திருவரங்கம்,— |
| வையம் உண்டு | (பிரளயத்தில்) பூமியையெல்லாம் அமுதுசெய்து |
| ஆல் இலை | ஆலந்தளிரிலே |
| மேவும் | பொருந்திக் கண்வளர்கின்ற |
| மாயன் | ஆச்சர்ய சக்தியுக்தனும், |
| மணி நீள் முடி | மணிமயமான நீண்ட கிரீட மணிந்தவனும் |
| பை கொள் நாகத்து அணையான் | படங்கொண்ட திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடையனுமானபெருமான் |
| பயிலும் இடம் என்பர் | நித்யவாஸம்பண்ணுகிற இடமென்று சொல்லுவர். |

* * *—பிரளயத்திலே அழுந்தாதபடி பூமிப்பரப்பையடங்கலும் எடுத்துத் திருவயிற்றிலே வைத்து நோக்கி ஒரு சிற்றாலந்தளிரிலே திருக்கண்வளர்ந்தருளின ஆச்சர்ய சக்தியுக்தனும், 'யாங்கடவுளென்றிருக்கு மெவ்வுலகிற் கடவுளர்க்கும் ஆங்கடவுள் தானே' என்பது நன்கு விளங்க மணிமயமான திருவபிஷேகத்தை அணிந்துள்ளவனும், இனத்துத்தியணி பணமாயிரங்களார்ந்த அரவரசப் பெருஞ்சோதியனந்தனென்னு மணிவிளங்கு முயர்வெள்ளையணையைமேவிப் பள்ளிகொள்பவனுமான பெருமான் ஒருநாளும் விடாதே

வர்த்திக்கிற திவ்யதேசம் எதுவென்றால், காவிரிசூழ்ந்த தென்னரங்கம். அக்காவிரியாறு எப்படிப்பட்டதென்னில், குழலிலே பூக்களையணிந்து முலைகளைக் குங்கும பங்கத்தாலே அலங்கரித்திருக்கும் மாதர் நீராட இழிவர்கள்; அப்போது அவர்களது குழலில் மாலையும் குங்குமச்சேறுமாய்க் கலங்கியோடா நிற்கும்.

தையல் நல்லார்—தையல்—அழகு. அழகுடையவர்களுக்கு ஆகுபெயர். 'நல்தையலார்' என மாறுதலுமாம். .... ... ... (உ)

பண்டிவ்வையமளப்பான்சென்று மாவலிகையில்நீர்
கொண்ட * ஆழித்தடக்கைக் குறளனிடமென்பரால் *
வண்டுபாடும் மதுவார்புனல் வந்திழிகாவிரி *
அண்டநாறும் பொழில்சூழ்ந்து அழகார்தென்னரங்கமே. (ங)

| | | | |
|---|---|---|---|
| வண்டு பாடும் | வண்டுகள் பாடப்பெற்ற | இ வையம் | இப்பூமியை |
| மது வார் | தேன் ஒழுகுகின்ற | அளப்பான் | அளந்து வசப்படுத்திக் கொள்வதற்காக |
| புனல் | தீர்த்தமானது | | |
| வந்து இழி | வந்து பிரவஹிக்கின்ற | சென்று | போய் |
| காவிரி | திருக்காவேரியினாலும் | மாவலி | மஹாபலியினுடைய |
| அண்டம் நாறும் பொழில் | ஆகாச மெங்கும் பரிமளிக்கின்ற சோலைகளாலும் | கையில் | கையில் நின்றும் |
| | | நீர் | தாந ஜலத்தை |
| சூழ்ந்து | சூழப்பட்டு | ஆழி தடம் கை கொண்ட | திருவாழியை யேந்தவல்ல தடக்கையாலே ஏற்றுக் கொண்ட |
| அழகு ஆர் | அழகுபொருந்தியதான | | |
| தென் அரங்கம்—; | | குறளன் | வாமநமூர்த்தியினது |
| பண்டு | முன்பொருகால் | இடம் என்பர்—. | |

* * *—மஹாபலியாலே அபஹரிக்கப்பட்ட பூமியை மீட்டுக்கொள்ளுகைக்காக அவனது வேள்விச்சாலையிற் சென்று, அலம்புரிந்த நெடுந்தடக்கையாலே உதகதானம் வாங்கின வாமநமூர்த்தி வாழுமிடம் எதுவென்றால், திருக்காவிரியாலும் திருச்சோலைகளாலுஞ் சூழப்பட்ட தென்னரங்கம். காவிரி எப்படிப்பட்டது?—வண்டு பாடும் மதுவார்புனல் வந்திழியப்பெற்றது; திருக்காவிரித் தீர்த்தம் மதுவோடுகூடிப் பெருகும்; மதுவில் நசையாலே வண்டுகள் வந்து மொய்க்கும்: 1. "ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிகந்து, ஊக்கமேமிகுந்து உள்தெளிவின்றியே, தேக்கெறிந்து வருதலிற்றீம்புனல், வாக்கு தேனுகர் மாக்களை மானுமே" என்றது காண்க. ... ... ... (ங)

விளைத்தவெம்போர்விறல்வாளரக்கன் நகர்பாழ்பட *
வளைத்தவல்வில்தடக்கையவனுக்கு இடமென்பரால் *
துளைக்கையானைமருப்புமகிலும் கொணர்ந்துந்தி * முன்
திளைக்குஞ்செல்வப் புனல்காவிரிசூழ் தென்னரங்கமே. (ச

1. கம்பராமாயணம் பாலகாண்டம் ஆற்றுப்படலம்—21.

| | | | |
|---|---|---|---|
| துளைக்கை யானை | துதிக்கையையுடைய யானைகளின் | வெம் போர் விளைத்த | கடுமையான யுத்தத்தை உண்டாக்கின |
| மருப்பும் | தந்தங்களையும் | விறல் | பலிஷ்டனான |
| அகிலும் | அகில் மரங்களையும் | வாள் அரக்கன் | வாட்படை வல்லனான இராவணனுடைய |
| கொணர்ந்து | அடித்துக் கொண்டுவந்து | நகர் | நகரமாகிய லங்கை |
| முன் உந்தி | முன்னே தள்ளி | பாழ்பட | பாழாகும்படியாக |
| திளைக்கும் | லீலாரஸமனுபவிக்கின்ற | வளைத்த | வளைக்கப்பட்ட |
| செல்வம் புனல் | திவ்யமான தீர்த்தத்தையுடைய | வல் வில் தட கையவனுக்கு | வலியவில்லைத் தடக் கையிலே உடையவனான பெருமானுக்கு |
| காவிரி | காவேரியினால் | | |
| சூழ் | சூழப்பட்ட | | |
| தென் அரங்கம்—; | | இடம் என்பர்—. | |

* * *—பெரும்போரையூட்டின பெருமிடுக்கனான இராவணனுடைய இலங்காபுரியானது பாழ்பட்டுப்போம்படியாகப் பெருவில்லைவளைத்த பெருவீரன் வாழுமிடம் காவிரிசூழ்ந்த திருவரங்கம். காவிரி எப்படிப்பட்டது?— யானைத்தந்தங்களையும் அகில்மரங்களையும் தள்ளிக்கொண்டுவந்து விளையாடுவது போன்றுள்ளதாம். ... ... ... ... (சு)

வம்புலாங்கூந்தல்மண்டோதரிகாதலன் வான்புக *
அம்புதன்னால்முனிந்த அழகனிடமேன்பரால் *
உம்பர்கோனு முலகேழும் வந்தீண்டிவணங்கும் * நல்
செம்பொனாரும் மதிள்சூழ்ந்து அழகார்தேன்னரங்கமே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| உம்பர் கோனும் | தேவர்களுக்கு நிர்வாஹகனான பிரமனும் | வம்பு உலாம் கூந்தல் | வாஸனை உலாவுகின்ற கூந்தலையுடையளான |
| உலகு ஏழும் | ஸப்த லோகங்களும் | மண்டோதரி | மந்தோதரிக்கு |
| வந்து | கிட்டி | காதலன் | கணவனான இராவணன் |
| ஈண்டி | திரண்டு | வான் புக | வீரஸ்வர்க்கமடையும்படியாக |
| வணங்கும் | வணங்கப்பெற்றதாய் | அம்பு தன்னால் | பாணங்களினால் |
| நல் செம் பொன் ஆரும் மதிள் சூழ்ந்து | நல்ல செம்பொன்னோடு ஒத்த மதிள்களால் சூழப்பட்டு | முனிந்த | சீறிக் கொன்றொழித்த |
| அழகு ஆர் | அழகு பொருந்தியதான | அழகன் | வீரச்ரீயையுடையனான இராமபிரானது |
| தென் அரங்கம்—; | | இடம் என்பர்—. | |

* * *—தனக்கு வாய்த்த மனைவியான மந்தோதரியோடே தான் போக மனுபவித்து வாழலாயிருக்க, விபரீதமான எண்ணங்கொண்ட இராவணன் போர்க்களத்திலே மடிந்து வீரஸ்வர்க்கம் அடையுமாறு அம்புகளைச்செலுத்திச் சித்ரவதஞ்செய்த சக்ரவர்த்தி திருமகன் வாழுமிடம் தென்னரங்கம். அஃது

எப்படிப்பட்டதென்னில், தேவர்களுக்கு நிர்வாஹகனை பிரமனும், அவனாலே படைக்கப்பட்ட ஜகத்தில் உள்ளாரும் திரண்டு வந்து ஆச்ரயிக்கும்படியானது; உள்ளே சாய்ந்தருளும் பெருமானுக்கு அரணாகப் போரும்படியான திருமதிள்களாலே சூழப்பட்டது. ... ... ... ... (ரு)

கலையுடுத்த வகலல்குல் வன்பேய்மகள்தாயென *
முலைகொடுத்தாளுயிருண்டவன் வாழிடமென்பரால் *
குலையெடுத்தகதலிப் பொழிலூடும்வந்துந்தி * முன்
அலையெடுக்கும் புனல்காவிரிசூழ் தென்னரங்கமே. (சா)

| | |
|---|---|
| குலை எடுத்த | குலைகள் ஓங்கியிருக்கப்பெற்ற |
| கதலி பொழில் ஊடும் | வாழைத்தோப்புகளினுள்ளே |
| வந்து | புகுந்து (அம்மரங்களை வேரோடே பறித்துக்கொண்டு) |
| முன் உந்தி | முன்னே தள்ளி |
| அலை எடுக்கும் | அலைவீசியடியாநின்ற |
| புனல் | தீர்த்தத்தையுடைத்தான |
| காவிரி சூழ் | காவேரியினால் சூழப்பட்ட தென் அரங்கம்—; |
| கலை உடுத்த | பட்டாடையணிந்த |
| அகல் அல்குல் | அகன்ற நிதம்பத்தையுடையளான |
| தாய் என | தாயாகிய யசோதைபோல (வந்து) |
| முலை கொடுத்தாள் | முலையுண்ணக் கொடுத்தவளான |
| வன் பேய்மகள் | வலிய (பூதனையென்னும்) பேய்ச்சியினுடைய |
| உயிர் | பிராணனை |
| உண்டவன் | உறிஞ்சி உண்ட கண்ணபிரான் |
| வாழ் இடம் | வாழும் திவ்யதேசம் |
| என்பர் | என்றுசொல்லுவர். |

* * *—யசோதைப் பிராட்டிபோலே அலங்கரித்துக் கொண்டு பட்டாடையுடுத்து வஞ்சனை வழியாலே நஞ்சு தீற்றிய முலையை வாயிலே உண்ணக் கொடுத்துக் கொல்லவந்த பூதனை யென்னும் பேய்ச்சியின் உயிரைப் பாலுண்கிற பாவனையிலே உறிஞ்சிக் கவர்ந்துண்ட கண்ணபிரானே ஸ்ரீரங்கநாதனாய்க் கொண்டு வாழுமிடம் காவிரி சூழ்ந்த திருவரங்கம்.

காவிரி எப்படிப்பட்டதென்னில்; ஓங்கின குலைகளை யுடைத்தா யிருந்துள்ள வாழைச் சோலைக்குள்ளே வந்து புகுந்து அவ்வாழை மரங்களை யெல்லாம் வேரோடு பறித்துக்கொண்டு வந்து சுமைதள்ளுவாரைப் போலே தள்ளாநின்றுள்ள நீர்ப்பெருக்கை யுடையது.

கதலி—வடசொல். ... ... ... ... (சா)

கஞ்சனெஞ்சுங் கடமல்லரும் சகடமுங்காலினால் *
துஞ்சவென்றசுடராழியான் வாழிடமென்பரால் *
மஞ்சுசேர்மாளிகை நீடகில்புகையும் * மாமறையோர்
செஞ்சொல்வேள்விப்புகையுங்கமழும் தென்னரங்கமே. (எ)

| | |
|---|---|
| மஞ்சு சேர் | மேகமண்டலத்தை அளாவியிருக்கிற |
| மாளிகை | மாளிகைகளிலுண்டான |
| நீடு அகில் புகையும் | அதிகமான அகிற்புகையும், |
| மா மறையோர் | சிறந்த வைதிகப்ராமணர்கள் |
| செம் சொல் வேள்வி | வேதங்களில் விதித்தபடியே நடத்துகிற யாகங்களிலுண்டான |
| புகையும் | ஹோமதூமமும் (சேர்ந்து) |
| கமழும் | பரிமளிக்கப்பெற்ற |
| தென் அரங்கம் | திருவரங்கமானது,— |
| கஞ்சன் நெஞ்சும் | கம்ஸனுடைய மனமும் |
| கடு மல்லரும் | கடிய மல்லர்களும் |
| சகடமும் | சகடாஸுரனும் |
| அஞ்ச | தொலையும்படி |
| காலினால் | திருவடியாலே |
| வென்ற | வென்றொழித்த |
| சுடர் ஆழியான் | உஜ்வலமான திருவாழியையுடைய பெருமான் |
| வாழ் இடம் என்பர் | நித்யவாஸம் பண்ணுமிடம் என்று சொல்லுவர்கள். |

* * *—பலவகைகளிலும் தன்னைக் கொல்லப் பாரித்திருந்த கம்ஸனுடைய கொடிய நெஞ்சைக் கெடுத்தவனும், அக்கஞ்சனால் ஏவப்பட்டு மேல்விழுந்து வந்த மல்லர்களைப் பொடிபடுத்தினவனும், அக்கம்ஸனால் ஏவப்பட்ட அஸுரன் ஆவேசித்திருந்த சகடத்தைச் சிதைத்தவனுமான ஆழியான் வாழுமிடம் தென்னரங்கம். அங்குக் கோயிலில் சாய்ந்தருளா நின்ற "ஸர்வ்வகந்தஃ--ஸர்வகந்தஃ" என்னப்பட்ட பெருமாளுடைய பரிமளத்துக்கு மேலே திருமாளிகைகளின் அகிற்புகையின் பரிமளமும் யாகங்களிலுண்டாகும் ஓமப்புகையின் பரிமளமும் விஞ்சி விளங்குகின்றதாம்.

முன்னடியில் 'காலினால்வென்ற' என்றது—மூன்றிலும் அந்வயிக்கும். சகடத்தைத் திருவடியாற் சிதைத்தது ப்ரஸித்தம்; மல்லர்களையும் மற்போரினாலே வென்றனனாதலால், மற்போராவது ஆயுதங்களின் ஸஹாயமின்றியே தேஹவலிமையே கொண்டு நிகழ்த்தும் போராதலால் அவர்களையும் திருவடிகளினாலுதைத்து வென்றனனாயிற்று. இனி, கஞ்சனுடைய நெஞ்சைத் திருவடியினாலுதைத்து வென்றதாகச் சொன்னது எங்ஙனே கூடுமென்னில், கம்ஸனுடைய கருத்தைத் திருவடியினாற் சிதைத்தானென்பது கம்ஸனைக் காலினாலுதைத்து வென்றமையைக் கூறினவாறேயாம். அன்றியே, நெஞ்சு என்று மார்விடத்தைச் சொன்னதாகவுங் கொள்ளலாம். மஞ்சத்தின்மீது வீற்றிருந்த கம்ஸன்மேல் வேகமாக எழும்பி அவனது கிரீடம் கழன்று கீழே விழும்படி அவனைத் தலைமயிர் பிடித்துத் தரையில்தள்ளி அவன்மேல் தான் விழுந்து நன்றாகவுதைத்துக் கொன்றிட்டனனென்ற வரலாறு அறியத்தக்கது. (எ)

ஏனமீனாமையோடு அரியுஞ்சிறுகுறளுமாய் *
தானுமாய தரணித்தலைவனிட மென்பரால் *
வானும்மண்ணும்நிறையப் புகுந்தீண்டிவணங்கும் * நல்
தேனும்பாலுங் கலந்தன்னவர்சேர் தென்னரங்கமே. (அ)

| | |
|---|---|
| வானும் | விண்ணுலகத்திலுள்ளாரும் |
| மண்ணும் | மண்ணுலகத்திலுள்ளாரும் |
| நிறைய புகுந்து | ஏராளமாக வந்து சேர்ந்து |
| ஈண்டி | ஒன்றாகத்திரண்டு |
| வணங்கும் | வணங்கப்பெற்றதும், |
| நல் தேனும் பாலும் | மதுரமான தேனும் பாலும் |
| கலந்தன்னவர் | ஒன்றாகச் சேர்ந்தாற்போலே ஏகரஸரா யிருக்கிற பக்தர்கள் |
| சேர் | சேர்ந்திருக்கப் பெற்றதுமான |
| | தென் அரங்கம்—; |
| ஏனம் மீன் ஆமையோடு அரியும் சிறு குறளும் ஆய் | வராஹமாகவும் மத்ஸ்ய கூர்மமாகவும் நரஸிம்ஹ மாகவும் வாமநனாகவும் திருவவதரித்தவனாய் |
| தானும் ஆய | ஸ்ரீராமபிரானாகவும் திருவவதரித்தவனான |
| தரணி தலைவன் | ஸர்வலோகேச்வரனுடைய |
| | இடம் என்பர்—. |

* * *—பிரளயவெள்ளம் அபஹரித்துக்கொண்டுபோன பூமிப்பிராட்டியை மீட்டுக் கொணருகைக்காக மஹாவராஹமூர்த்தியாய்த் திருவவதரித்தவனும், வேதங்களைக் கவர்ந்து சென்ற அஸுரனைக் கொன்று அவ்வேதங்களை மீட்டுக் கொணருகைக்காக மத்ஸ்யமூர்த்தியாய்த் திருவவதரித்தவனும், அமரர்க்கு அமுதளிக்கக் கடல்கடையும்போது மத்தாகநாட்டின மந்தரமலை கடலில் அழுந்திவிடாதபடி அதனைத் தாங்குவதற்காகக் கூர்மரூபியாய்த் திருவவதரித்தவனும், 'தூணிலுமுளன் துரும்பிலுமுளன்' என்று சொன்ன ப்ரஹ்லாதனுடைய வார்த்தையை மெய்ப்பிக்கும்பொருட்டுத் தூணில் நரஸிம்ஹமூர்த்தியாய்த் திருவவதரித்தவனும், இந்திரனது வேண்டுகோளுக்கிணங்கி மாவலியின் செருக்கடக்க வாமநமூர்த்தியாய்த் திருவவதரித்தவனும், துஷ்ட நிக்ரஹமும் சிஷ்டபரிபாலநமும் தர்ம ஸம்ஸ்தாபநமும் செய்தருள ஸ்ரீராமபிரானாய்த் திருவவதரித்தவனுமான முழுமுதற் கடவுள் வாழுமிடம் திருவரங்கம். பரமபதத்திலுள்ள நித்யஸூரிகளும் பூமியிலுள்ள ஸம்ஸாரிகளும் நெருங்கிப் புகுந்து பணியுமிடம் இது. ஸமரஸர்களாய் வாழ்கின்ற பரமபாகவதர்கள் கூடிக்களிக்குமிடமும் இதுவே.

இரண்டாமடியில், "தானுமாய" என்றது ஸ்ரீராமாவதாரத்தை புட்கொண்டதேயாம். மேலே எட்டாம்பத்தில் தசாவதாரங்களையும் சேர்த்துச் சொல்லுகிற பாசுரத்தில் "மீனோடாமை கேழலரி குறளாய் முன்னுமிராமனாய்த் தானாய்ப், பின்னுமிராமனாய்த் தாமோதரனாய்க் கற்கியுமானான்றன்னை" என்றதில் ஸ்ரீராமனைச் சொல்லவேண்டுமிடத்துத் 'தானாய்' என்றதும் குறிக்கொள்ளத் தக்கது.

தேனும் பாலுங் கலந்தன்னவர்=தேனும் தேனும் கலந்தாற்போலும் பாலும் பாலும் கலந்தாற்போலும் வேற்றுமையின்றியே ஏகரஸமாகக் கலந்திருக்கின்ற பரமரஸிகர்கள் என்றவாறு. 'கலந்தாலன்னவர்' என்பது 'கலந்தன்னவர்' எனத் தொக்கது.

இவ்விடத்து வியாக்கியானத்திலே பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்வது காண்மின்:—" நித்யஸூரிகள் ஸம்ஸாரிகள் என்கிற வாசி தெரியாதே ஒரு

நீராய்ப் பரிமாறு நிற்பர்கள். தேசாந்தரங்களில் முன்பு கண்டறியாதார் வந்து போகப்புக்கால் 'பிரிந்துபோகா நின்றேமே!' என்று கண்ணுங் கண்ணீருமா யிறே யிருப்பது." என்று .... ... ... ... (அ)

சேயனென்றும் மிகப்பெரியன் நுண்ணேர்மையனாய * இம்
மாயையாருமறியாவகையான் இடமென்பரால் *
வேயின்முத்தும் மணியுங்கொணர்ந்து ஆர்புனல்காவிரி *
ஆயபொன்மாமதிள்சூழ்ந்து அழகார்தென்னரங்கமே. (௬)

| | |
|---|---|
| வேயின் முத்தும் | மூங்கில்களில் நின்று முதிர்ந்த முத்துக்களையும் |
| மணியும் | ரத்னங்களையும் |
| கொணர்ந்து | தள்ளிகொண்டுவந்து |
| ஆர் | நிறைந்திருக்கிற |
| புனல் | தீர்த்தத்தையுடைய |
| காவிரி | திருக்காவேரியாலும் |
| ஆய | தகுதியான |
| பொன் மா மதிள் | அழகிய பெரிய திருமதிள்களாலும் |
| சூழ்ந்து | சூழப்பட்டு |
| அழகு ஆர் | அழகுபொருந்தியிருப்பதான |
| தென் அரங்கம்—; | |

| | |
|---|---|
| என்றும் | எந்நாளும் |
| சேயன் | எட்டாமலிருப்பவன் |
| மிக பெரியன் | மஹாபுருஷன், |
| நுண் நேர்மையன் | ஸூக்ஷ்மமான பொருள்களிற் காட்டிலும் ஸூக்ஷ்மத்தன்மை வாய்ந்தவன், |
| ஆய | என்றிப்படி சொல்லக் கூடியதான |
| இ மாயை | இவ்வாச்சரியத்தை |
| ஆரும் அறியா வகையான் | ஒருவரும் அறியக் கூடாதபடி யிருப்பவனான ஸர்வேச்வரனுடைய |
| இடம் என்பர்—. | |

* * *—சேயனென்று ஆய இம்மாயை ஆருமறியாவகையான்,—மிகப் பெரியனென்று ஆய இம்மாயை ஆருமறியாவகையான்.—நுண்ணேர்மையன் என்று ஆய இம்மாயை ஆருமறியாவகையான் — என்று இங்ஙனே கூட்டி மூன்றுவாக்கியமாக அநுஸந்தித்தால் பொருள் நன்கு விளங்கும். சேயன் என்றால் தூரத்திலிருப்பவன் என்று பொருள்; பரமபதத்தில் வீற்றிருக்கு மிருப்பைச் சொல்லுகிறது. இவ்விருப்பின் ஆச்சரியத்தை யாரும் அறிய முடியாமை சொன்னபடி. மிகப்பெரியன் என்றது — "ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷஸ்ஸஹஸ்ரபாத்। ஸ பூமிம் விஶ்வதோ வ்ருத்வா" என்றும், "விஶ்வதஶ்சக்ஷுருத விஶ்வதோமுகோ விஶ்வதோஹஸ்த உத விஶ்வதஸ்பாத்।" என்றும், "தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க் கண்களாயிரத்தாய், தாள்களாயிரத்தாய்" என்றும் சொல்லப்பட்ட விராட் ஸ்வரூப நிலைமையைச் சொன்னபடி. இவ்வாச்சரியமும் ஒருவராலுமறிய முடியாதபடி உள்ளவன் என்கை.

நுண்ணேர்மையன் என்றது ஸூக்ஷ்ம வஸ்துக்களிற் காட்டிலும் மிகவும் ஸூக்ஷ்ம ஸ்வரூபனாக வுள்ளவன் என்றபடி. 1. "பரந்த தண்பரவையுள் நீர்

1. திருவாய்மொழி 1—1—10.

தொறும் பரந்துளன், பரந்த வண்டமிதென நில விசும்பொழிவறக், கரந்த சிலி டந்தொறும் இடந்திகழ் பொருள்தொறும், கரந்தெங்கும் பரந்துளன்" என்கிற படியே அதிஸூக்ஷ்மமான பதார்த்தங்களெங்கும் புக்கு வியாபித்துத் தரித்துக் கொண்டு நிற்கையாகிற இந்த சக்தியோகமும் ஆர்க்கும் அறிய வொண்ணாத தென்கை. நேர்மை—நுட்பம். ("நுண்ணேர்மையினை" என்று ஓதுவர்.) இப்படிப்பட்ட விசித்ர சக்தியுக்தனை பெருமான் வாழுமிடம் தென்னரங்கம். நவமணிகளைக் கொண்டு தள்ளுகின்ற திருக்காவிரியாலும் அழகிய திருமதிள்க ளாலும் சூழப்பெற்றதாம் இது. .... .... ... (கூ)

அல்லிமாதரமரும் திருமார்வ னரங்கத்தை *
கல்லின்மன்னுமதிள் மங்கையர்கோன் கலிகன்றிசொல் *
நல்லிசைமாலைகள் நாலிரண்டுமிரண்டுமுடன் *
வல்லவர்தாமுலகாண்டு பின்வானுலகாள்வரே. (கo)

| | |
|---|---|
| அல்லி மாதர் அமரும் | பூவிற் பிறந்த பெரிய பிராட்டியார் பொருந்தி வாழப்பெற்ற |
| திரு மார்வன் | திருமார்வையுடையனை ஸர்வேச்வரனுடைய |
| அரங்கத்தை | திருவரங்கம்விஷயமாக,— |
| கல்லின் | கல்லாலே கட்டப்பட்ட |
| மன்னு | திடமாயிருக்கிற |
| மதிள் | மதிளையுடைத்தான |
| மங்கையர் | திருமங்கை நகரில் உள்ளவர்களுக்கு |
| கோன் | தலைவரான |
| கலிகன்றி | ஆழ்வார் |
| சொல் | அருளிச்செய்த |
| நல் இசை | நல்ல இசையோடு கூடின |
| மாலைகள் | சொல்மாலையாகிய |
| நாலிரண்டும் இரண்டும் | இப்பத்துப் பாட்டுக்களையும் |
| உடன் | கருத்தோடுகூட |
| வல்லவர் தாம் | ஓதவல்லவர்கள் |
| உலகு ஆண்டு | இவ்வுலகில் (கோயில் வாழ்ச்சியை) அநுபவித்து |
| பின் | இவ்வுடல் நீங்கினபிறகு |
| வான் உலகு ஆள்வர் | பரமபதாநுபவத்தைப் பெறக்கடவர். |

* * *—பூவிற்பிறந்த பெரிய பிராட்டியார் அப்பூவை விட்டிட்டு, போக்ய தாதிசயத்தைக் கண்டு ஈடுபட்டு நித்யவாஸஸ்தலமாகக் கொண்ட திருமார்பு படைத்த பெருமானுறையுமிடமான திருவரங்கம் பெரியகோயில் விஷயமாகத் திருமங்கையாழ்வார் திருவாய் மலர்ந்தருளிய இத்திருமொழியை அர்த்தா நுஸந்தாநத்தோடு கற்பவர்கள் உபய விபூதியையும் ஆளப்பெறுவர் என்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

ஈற்றடியில் 'உலகாண்டு' என்றதற்கு—"கோயிலிலேயிருந்து அநு பவித்து" என்று பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானமருளினர். திருவரங் கத்தில் வாழ்ச்சியே உலகாட்சியாம் என்று திருவுள்ளம்.

நாலிரண்டு—நாலாலே பெருக்கப்பட்ட இரண்டு; எனவே எட்டு ஆயிற்று.

அடிவரவு:—உந்தி வையம் பண்டு விளைத்த வம்பு கலை கஞ்சன் ஏனம் சேயன் அல்லி வெருவாதாள்.

நான்காந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஐந்தாம்பத்து—ஐந்தாந்திருமொழி,

# வெருவாதாள்வாய்வெருவி.

அவதாரிகை :—கீழ்த்திருமொழியும் இத்திருமொழியும் மேல்மூன்று திருமொழிகளும் ஆக ஐந்து திருமொழிகள் திருவரங்கம் பெரியகோயில் மங்களாசாஸநத் திருப்பதிகங்கள். கீழ்த்திருமொழி தாமான தன்மையிலே அருளிச்செய்யப்பட்டது. இத்திருமொழி அந்யாபதேசத்தாலே அமைந்தது. அதாவது—தாம் ஒரு பெண்பிள்ளையின் நிலைமையை அடைந்தாராய் [பரகாலநாயகியென்று பேர்பெற்று]த் தம்முடைய செய்திகளையும் ஸ்ரீரங்கநாதன் திறத்தில் தமக்குண்டான ப்ராவண்யத்தையும் திருத்தாயார் எடுத்துரைப்பதான ஸந்நிவேசத்திலே இத்திருமொழி அமைக்கப்பட்டது.

அழகிய மணவாளனை அநுபவிப்பதில் ஆழ்வார்க்கு உண்டான அளவற்ற அபிநிவேசம் இத்திருமொழியாகப் பரிணமித்துவிட்டதுபோலும். ...

வெருவாதாள் வாய்வெருவி வேங்கடமே! வேங்கடமே! என்கின்றாளால் *
மருவாளாலென்குடங்கால் வாள்நெடுங்கண்துயில்மறந்தாள் * வண்டார் கொண்ட
லுருவாளன் வானவர்தமுயிராளன் ஒலிதிரைநீர்ப்பௌவம் கொண்ட
திருவாளன் * என்மகளைச்செய்தனகள் எங்ஙனம் நான்சிந்திக்கேனே? (க)

| | |
|---|---|
| (என் பெண் பிள்ளையானவள்) | |
| வெருவாதாள் | அஞ்சாதவளாய்க் கொண்டு |
| வாய் வெருவி | வாய்பிதற்றுகின்றவளாய் |
| வேங்கடமே வேங்கடமே | என்கின்றாள்—; |
| என்குடங்கால் | எனதுமடியில் |
| மருவாள் | பொருந்துகின்றிலள் ; |
| வாள் நெடு கண் | வாள்போன்று நீண்ட கண்களிலே |
| துயில் | உறக்கத்தை |
| மறந்தாள் | மறந்துவிட்டாள் ; |
| வண்டு | வண்டுபோலவும் |
| ஆர்கொண்டல் | பூர்ண மேகம்போலவும் |
| உரு ஆளன் | திருவுருவமுடையவனும் |
| வானவர் தம் உயிர் ஆளன் | நித்யஸூரிகளுக்கு உயிராயிருப்பவனும் |
| ஒலி திரை நீர் | கோஷிக்கின்ற அலைநீர் பொருந்திய |
| பௌவம் | கடலில் நின்றும் |
| கொண்ட | கொள்ளப்பட்ட |
| திரு ஆளன் | பிராட்டியை ஆள்பவனுமான எம்பெருமான் |
| என் மகளை | எனது பெண்பிள்ளை திறத்து |
| செய்தனகள் | செய்தவகைகளை |
| நான் எங்ஙனம் சிந்திக்கேன் | நான் நினைக்கத்தான் முடியுமோ ? |

* * *—திருமங்கையாழ்வாராகிற பரகாலநாயகியைப் பெற்றெடுத்த திருத்தாயார், திருவரங்கநாதன் திறத்திலே தன் மகள் காதல்கொண்டு பித்

தேறிக்கிடக்கும்படியை ஒவ்வொரு பாட்டில் ஒவ்வொரு வகையாகப்பேசி 'இப்பாடு படுத்தினனே எம்பெருமான்' என்பதாய்ச் செல்லுகிறது.

இப்போது அழகிய மணவாளன் விஷயமாக ப்ராவண்யம் செல்லாநிற்க, திருவேங்கட மலையின் ப்ரஸ்தாவத்துக்குக் காரணமில்லையே; 'வேங்கடமே வேங்கடமே யென்கின்றாளால்' என்றன்றோ மூலமிருக்கிறது; இது திருவரங்கப் பதிகமேயன்றித் திருவேங்கடப் பதிகமன்றே; அப்படியிருக்க, 'வேங்கடமே வேங்கடமே' யென்கைக்கு நிதானமேது? என்று சங்கை பிறக்கக்கூடும்; கேண்மின்:—மேலுலகத்திலுள்ள ஸ்ரீவைகுண்ட திவ்யநகரமே இம்மண்ணுலகில் திருவரங்கமாகவும், அவ்விடத்துள்ள விராஜாநதியே திருக்காவேரியாகவும், பரவாஸுதேவனே ஸ்ரீரங்கநாதனாகவும் அவதரித்ததாக மஹர்ஷிகளும் நம் பூருவர்களும் சொல்லுவர்கள்; பரமபதநாதன் திருவரங்கத்திலே வந்து புகுவதற்காக அங்கு நின்றும் பயணமெடுத்துவிட்டு எழுந்தருளுமடைவிலே திருவேங்கடமலையிலே சிறிது இளைப்பாறநின்று, பின்பு திருவரங்கத்திலேவந்து சாய்ந்தருளினதாக நிர்வஹிப்பதொரு புடையுண்டு: திருப்பாணாழ்வார் அருளிச்செய்த அமலனாதிபிரான் திவ்ய ப்ரபந்தத்தில் முதற்பாட்டில் "விண்ணவர்கோன் விரையார் பொழில் வேங்கடவன்" என்றார்; இதனால், விண்ணவர்கோனான தன்மையில் நின்றும் வேங்கடவனான தன்மைக்கு வந்தமை சொல்லிற்று. மேல் மூன்றாம் பாட்டில் "மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்றான் அரங்கத்தரவினணையான்" என்றார்; இதனால் திருவேங்கடமலையில் நின்றும் திருவரங்கத்திலேவந்து பொருந்தினமை சொல்லிற்று. மேலும், திருவேங்கடமுடையான் நின்ற திருக்கோலமாக ஸேவைஸாதிக்கின்றமையால் 'வெளிப்பயணத்துக்காக நிற்கிறாப்போலிருக்கிறது' என்று தோற்றக்கூடியதாதலாலும், திருவரங்கத்தில் பள்ளிகொண்ட திருக்கோலமாக ஸேவைஸாதிக்கின்றமையால் 'இனி எங்கும் போக நினைவில்லை' என்று தோற்றக்கூடியதாதலாலும், பரமபதத்திலிருந்து வருமடைவிலே திருமலையிலேநின்று கோயிலிலேவந்து சாய்ந்தானென்று நிர்வஹிப்பதில் பொருத்தம் நன்கேயுள்ளது. ஆக, திருவரங்கத்துக்கும் மூலகந்தம் திருமலையாதலால் இப்போது திருவரங்கத்திலே ஆழ்வார்க்குண்டான ப்ராவண்யாதிசயம் அதற்கு வேர்ப்பற்றான திருமலையளவும் சென்றதனால் 'வேங்கடமே வேங்கடமே' என்றது பிரகிருதத்திற்குப் பொருந்தவற்றே. இதனைப் பெரியவாச்சான்பிள்ளை தமது வியாக்கியானத்தில் சுருங்க வருளிச்செய்த அழகு காண்மின்—"[வெருவாதாளித்யாதி.] பெரிய பெருமாளுடைய இங்குத்தை வரவாறே பிடித்து ஆற்றாமைக் குடலாம்படி காணும் பிறந்த ப்ராவண்யாதிசயம்." என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி.

வெருவாதாள்வாய்வெருவி=வெருவுதல்—அஞ்சுதல்; சிறிதும் அஞ்சாமல் வேங்கடமே வேங்கடமேயென்று வாய் பிதற்றுகின்றாளாம்; கணவனுடைய ஊரின் பேரை வாய்விட்டுச் சொல்லுவதற்குக் கூச்சங்கொள்ளவேண்டியிருக்க, இவள் கூசாமல் சொல்லுகின்றாளே! இஃது என்ன ஸாஹஸம்!! என்கை.

'வேங்கடமே' என்று சொல்லி வேங்கடவனையும் சொல்லாமே இவள் ; வேங்கடவன் வரையில் போகமாட்டுகின்றிலள் இவள். 'வேங்கடமே வேங்கடமே என்று பலகாலும் திருமலையையே சொல்லிக் கதறுகின்றாள். ஆல்—பெண்பிள்ளையினுடைய வாய்வெருவுதலின் இனிமையைக் காட்டும் இவ்விடைச் சொல்.

பட்டர் அடிக்கடி 'அழகிய மணவாளப்பெருமாள்!' என்றும், அனந்தாழ்வான் 'திருவேங்கடமுடையான்!' என்றும் அநுஸந்தித்துக்கொண்டிருப்பர்களாம். அவ்வநுஸந்தாநத்தில் அவர்களுடைய ஊற்றமெல்லாம் நன்கு விளங்காநிற்குமாம் ; அதுபோலவே பரகாலநாயகியின் 'வேங்கடமே வேங்கடமே' என்ற அநுஸந்தாநத்திலும் விலக்ஷணமான போக்யதை பொலியநிற்குமென்னுமிடம் ஆல் என்பதில் தோன்றும்.

என் குடங்கால் மருவாளால்=இவளை மடியிலே எடுத்துவைத்துக்கொண்டு லௌகிகப்பேச்சுகளாலே இவளது நினைவைமாற்றி ஆற்றுவோமென்று பார்த்தாலும் இவள் என் மடியில் பொருந்தமாட்டுகின்றிலள், என் மடியிலே யிருப்பதுதவிர வேறொன்றையு மறியாதிருந்த விவளுக்கு இப்போது என்மடி நெருப்புப்போலாயிற்றே! என்ற வருத்தந்தோன்ற இங்கு ஆல் என்றது.

வாள்நெடுங்கண் துயில்மறந்தாள்=இவள் நமது மடியில் பொருந்தாவிடினும் இவளைப் படுக்கையிலேகிடத்தி உறங்கப்பண்ணியாவது நினைவைத் தவிர்ப்போம் என்று பார்த்தாலோ, உறக்கங்கொள்வதை அடியோடு மறந்திட்டாள். 1. "தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே" என்னும்படியாக ஆனாள். உறக்கம் என்னுங் காரியத்தை இனி இவளுக்குப் புதிதாகக் கற்பிக்கவேண்டியதாயிற்று.

ஆக முன்னடிகளாற் சொல்லிற்றாயிற் றென்னென்னில் ; நான் ஒருவர்க்கு மஞ்சாமலும் ஒரு நொடிப்பொழுதும் கண்ணுறங்காமலும் ஆபாஸபந்துக்களிடத்துப் பற்று வையாமலும் திருவேங்கடமலை தன்னையே வாய்வெருவிக்கொண்டிருக்கிறேனென்று ஆழ்வார் தமது நிலைமையைத் தாம் வெளியிட்டுக் கொண்டாராயிற்று.

தமக்கு இப்படிப்பட்ட பகவத் விஷய ப்ராவண்யம் வாய்த்ததற்கு அவனுடைய வைலக்ஷண்யமே காரணம் ; அவனே இதற்கு க்ருஷிபண்ணினானென்பன பின்னடிகள். வண்டார்கொண்ட லுருவாளன்=எம்பெருமானுடைய திருவுருவத்திற்கு வண்டையும் உவமை கூறுவதுண்டாதலால் வண்டுபோலவும் ஆர்ந்த மேகம் போலவும் வடிவுபடைத்தவன் என்கிறது. அன்றியே, உள்ளுள்ள நீரின் போக்யதையினால் கிட்ட இழுக்கப்பட்ட வண்டுகள் மொய்க்கப்பெற்ற மேகம் போலு முருவத்தன் என்னவுமாம். பௌவங்கொண்ட திருவாளன் என்மகளை=தன்னுடைய விலக்ஷணமான வடிவைக்காட்டி முன்பு திருப்பாற்கடலில் நின்றும் ஒரு பெண்பிள்ளையைக் கொள்ளை கொண்டான், இன்று ஸம்ஸாரக் கடலில்

1. திருவிருத்தம் 97.

நின்றும் என் பெண்பிள்ளையைக் கொள்ளை கொண்டான். எப்போதும் இவனுக்குப் பெண் பிள்ளைகளைக் கொள்ளை கொள்வதே பணிபோலும்.

[இப்பெண் இப்போது தாய்வசத்தில்தானேயிருக்கிறாள், கொள்ளைகொண்டதாக எங்ஙனே சொல்லலாம்? என்னில், முன்னடிகளிற் கூறிய நிலைமைகளை விளைத்ததற்கு மேற்பட, கொள்ளை கொள்வதென்பது வேறொன்றுண்டோ? ஸம்ஸாரத்துக்கு ஆளாகாதபடி செய்யுமத்தனையே கொள்ளை கொண்டவாறும்.]

எங்ஙனம் நான் சிந்திக்கேனே?—எம்பெருமானுடைய ஸ்வீகாரத்திற்கு இவள் இலக்காகப் பெற்ற பெருமை ஒருவரால் இன்னவிதமென்று சிந்திக்கக் கூடியதோ? நெடுநாளாக நடந்துவருகின்ற ஸம்ஸாரத்திலே இன்று இப்படிப் பட்ட பகவத் விஷயீகாரம் வாய்த்ததென்றால் இதற்குக்காரணம் அந்தப் பகவானும் அறியான்; இப்பெண்ணுமறியாள்; கரையிலே நிற்கிற நான் எங்ஙனே அறிவேன்? என்கிறாள்போலும் தாய். ... .... ... ... (க)

கலையாளா வகலல்குல் கனவளையுங்கையாளா வென்செய்கேன் நான்? *
விலையாளா வடியேனை வேண்டுதியோ? வேண்டாயோ வென்னும் * மெய்ய
மலையாளன் வானவர்தந்தலையாளன் மராமரமே ழெய்தவென்றிச்
சிலையாளன் * என்மகளைச்செய்தனகள் எங்ஙனம் நான்சிந்திக்கேனே? (உ)

| | | | |
|---|---|---|---|
| அகல் அல்குல் | அகன்ற நிதம்பமானது | வேண்டாயோ | மாட்டாயோ?" |
| கலை | வஸ்த்ரத்தை | என்னும் | என்கிறாள்; |
| ஆளா | தரிக்கின்றதில்லை; | மெய்யம் மலை ஆளன் | திருமெய்யமலையை இருப்பிடமாக வுடையவனும் |
| கை | கைகளானவை | வானவர் தம் தலையாளன் | நித்யஸூரிகளுக்குத் தலைவனுயிருப்பவனும் |
| கனம் வளையும் ஆளா | பொன் வளைகளை ஆள்கின்றனவில்லை; | ஏழ் மராமரம் எய்த | ஸப்தஸாலவ்ருக்ஷங்களைத் துளைத்த |
| நான் என் செய்கேன் | (இதற்கு) நான் என்ன பண்ணுவேன்?: | வென்றி | ஜய சீலமான |
| அடியேனை | "அடியவளாகிய என்னை | சிலை ஆளன் | அம்பை உடையனுமான பெருமான் |
| விலை ஆள் ஆ | பிறர்க்கு விற்கவும் உரிய வேலைக்காரியாக (க் கொள்ள) | என் மகளை செய்தனகள் எங்ஙனம் | |
| வேண்டுதியோ | திருவுள்ளம் பற்றுவாயோ? | நான் சிந்திக்கேன்—. | |

* * *—உலகத்திலே ஸாமாந்யனை ஒரு க்ஷத்ரபுருஷனிடத்தில் காதல் கொண்ட மாதர் அவனுடைய விரஹத்தினுல் மேனி மெலிந்து வருந்துவதாகக் காணும்போது ஸாக்ஷாத் புருஷோத்தமனிடத்தில் பெரும் பித்துக்கொண்ட போன்பர்க்கு அந்த எம்பெருமானுடைய விரஹத்தில் சரீரம் க்ருசமாயொழியக் கேட்கவேணுமோ? அப்படி சரீரம் மெலிந்தமை கூறுவது முதலடி. உடல் மெலிந்துபோகவே அரையில் வஸ்த்ரமும் கையில்வளைகளும் தங்கமாட்டாமல்

கழன்றொழியுமாதலால் அதனைச்சொன்ன முகத்தால் மேனிமெலிவு சொல்லிற்றாயிற்று. ஒருபேச்சுப் பேசவும் சக்தியில்லாதபடி மேனி மெலிந்திருக்கச் செய்தேயும் இவளுடைய வாய்ப்பேச்சின் வீறு இருக்கும்படி காண்மின்—'விலையாளாவடியேனை வேண்டுதியோ வேண்டாயோ?' என்கிறாள் எம்பெருமானை முன்னிலைப்படுத்தி. அதாவது—'என்னை உனக்கே அற்றுத்தீர்ந்த அடியவளாக ஆக்கிக்கொள்ள எண்ணமுண்டா இல்லையா? சொல்லிவிடு' என்று துணிவாகக் கேட்கிறாள். 'விலையாளாவடியேனை' என்பதற்கு இரண்டுபடியாகப் பொருள் கொள்ளலாம் ;—'அடியேனை விலையாளா வேண்டுதியோ?' என்று அந்வயித்து, 1. "கேசவா புருடோத்தமா கிளர்சோதியாய் குறளாவென்று, பேசுவாரடியார்கள் எந்தம்மை விற்கவும் பெறுவார்களே" என்றும் 2. "ஹாஸிஜக்ஷதாஸ்ஸூரஸிகாஃ வாஸ்வாஸம் க்ஷயவிக்ரயாஹஷமயா ஸஜ்ஜநதே" என்றும் சொல்லுகிறபடியே பிறர்க்கு விலைக்குவிற்கவுமாம்படி உரிமைப்படுவதே சேஷத்வ காஷ்டையாகையால் அப்படிப்பட்ட அடியவர்க்கு 'விலையாள்' என்று பெயர் என்றுகொண்டு அடியேனை விலையாளாக வைத்துக்கொள்ளத் திருவுள்ளமுண்டோ? இல்லையோ? என்று கேட்பதாகக் கொள்க அன்றியே விலையாளா என்பதை நேரே அடியேனுக்கு விசேஷணமாக்கி, விலையாளாவடியேனை=பிறர்க்கு விலைக்கு ஆட்படமாட்டாத அடியேனை—பிறர்க்கு இழிதொழில்செய்து கூலிபெற்று வயிறுவளர்க்கின்ற மற்றவர்களைப் போலல்லாத அடியேனை, வேண்டுதியோ வேண்டாயோ—திருவுள்ளமுவந்து பற்றுவாயோ மாட்டாயோ? என்கிறாள் என்பதாகவுங் கொள்ளலாம்.

இப்படி இவள் மேனிமெலிந்து போகவும் பெரியபெரிய பேச்சுக்கள் பேசவும் நேர்ந்தது அப்பெருமான் படுத்தினபாடு என்கிறது பின்னடிகளில். (உ)

மானையமென்னோக்கி வாள்நெடுங்கண்ணீர்மல்கும்வளையும்சோரும் *
தேனையநறுந்துழாயலங்கலின் திறம்பேசி யுறங்காள்காண்மின் *
கானயன்கடிமனையில் தயிருண்டுநெய்பருக நந்தன்பெற்ற
ஆனயன் * என்மகளைச்செய்தனகள் அம்மனைமீர்! அறிகிலேனே. (ங)

| | | | |
|---|---|---|---|
| மான் ஆய மென் நோக்கி | மானின் நோக்குப்போன்ற அழகியநோக்கை உடையளான என்மகள், | நறு துழாய் | மணம்மிக்க திருத்துழாயினாலாகிய |
| | | அலங்கலின் | மாலையினுடைய |
| வாள் நெடு கண் நீர் மல்கும் | ஒளிபொருந்திய நீண்ட கண்கள் நீர் நிரம்பப் பெற்றிருக்கின்றாள் ; | திறம் | பரிசுகளை |
| | | பேசி | சொல்லிக்கொண்டு |
| | | உறங்காள் | உறக்கமற்றிருக்கின்றாள் ; |
| வளையும் | (இவளது) வளைகளும் | காண்மின் | (இந்நிலைமையைக்) கண்கொண்டுபாருங்கள் ; |
| சோரும் | (கையில் நின்று) நழுவாநின்றன ; | கான் ஆயன் | காட்டிலே திரியுமவனும் |
| தேனைய | தேனைக்கொண்ட | கடி மனையில் | காவலுள்ள வீடுகளிலும் |

1. பெரியாழ்வார் திருமொழி. 4—4—10. 2. யதிராஜஸப்ததி.

தயிர் உண்டு — தயிரை உட்கொண்டு
நெய் பருக — நெய்யைக் குடிக்கும்படியாக
நந்தன் பெற்ற — நந்தகோபர் பெற்ற
ஆன் ஆயன் — { கோபாலக்ருஷ்ணனுமான பெருமான்
என் மகளை செய்தனகள் — { என் பெண்பிள்ளையைப் பண்ணினபடிகளை
அம்மனைமீர் அறிகிலேன்—.

* * *—இப் பெண்பிள்ளையின் கண்ணழகை நான் என்சொல்வேன் !; இக்கண்ணழகிலே யீடுபட்டு அப்பெருமான் ஊணுமுறக்கமுமில்லாமல் வருந்த வேண்டியிருக்க, அவன் திறத்திலீடுபட்டு இவள் வருந்துகிறாளே, திருமலையருவி போலே கண்களில் நீர் தாரைதாரையாகப் பெருகுகின்றமை காண்மின் ; கைவளைகள் கழன்றொழிவது காண்மின் ; 'பெண்ணே! படுக்கையிற்கிடந்து உறங்கு ; உறங்கினையாகில் கண்ணீர்ப் பெருக்கு மாறும்' என்று நான் சொன்னாலும், என் பேச்சைச் சிறிதும் செவியேற்காது "எம்பெருமான் அணிந்துள்ள திருத்துழாயின் தேன்வெள்ளத்தை என்சொல்வேன் ! அதன்செவ்வியை என்சொல்வேன் ! அதன் தொடையழகை என்சொல்வேன் ! அதன் குளிர்த்தியை என்சொல்வேன் ! அதன் பரிமளத்தை என்சொல்வேன் !" என்றிப்படி அவனது திருத்துழாயின் திறங்களை வாய்வெருவிக் கொண்டிருக்கின்றாளே யன்றிச் சிறிதும் கண்ணுறங்கப் பெறுகின்றிலள்.

இவளை இப்பாடுபடுத்தினவன் கோபாலகிருஷ்ணனென்கிறாள் பின்னடிகளில். கானயன்—"கறவைகள் பின்சென்று கானஞ்சேர்ந்துண்போம்" என்கிறபடியே கற்றாநிரைகளை யோட்டிக்கொண்டு காட்டிலே திரியவேண்டிய சாதியிற் பிறந்தவன். (இவ்விடத்தில் ஆயன் என்பது இடையனென்ற பொருளில் வந்ததன்று ; கானயன்—காட்டிலேயானவன் என்று பொருள்.) "கானயர் கடிமனையில்" என்று பாடமிருப்பின் அழகியதாம்; வியாக்கியானமும் பெரியோர்களின் பாடமும் அப்படிக்கில்லை-என்று அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்யும்படி.

மனைகள்தோறும் களவுவழியிற்புகுந்து தயிர் நெய் பால் முதலியவற்றைத் திருடி யுண்டு வயிறு வளர்ப்பதற்காகக் கண்ணனை நந்தகோபன் பிள்ளையாகப் பெற்றானென்று கேட்டிருந்தேன் ; அப்படியில்லைபோலும் ; என் மகளை இப்பாடு படுத்துவதற்கென்றே நந்தன் நோன்பு நோற்றுப் பிள்ளை பெற்றான் போலும் ! என்ற கருத்துத்தோன்றத் "தயிருண்டு நெய்பருக நந்தன்பெற்ற ஆனயனென்மகளைச் செய்தனகள்" எனப்பட்டது. 'கண்ணனுக்குக் காட்டிலே திரியவும் கவ்யங்களைத் திருடியுண்ணவுமே தெரியும் ; வேறொரு நாகரிகத்தன்மையும் தெரியாது' என்றிருந்தேன் ; இன்றுதான் 'அவனுக்கு இவ்வளவு வல்லமையுண்டு, ரஸிக்யமுண்டு, ச்ருங்கார விலாஸ ஸாமர்த்தியமுண்டு' என்றுணர்ந்தேன் என்பதாகவும் இதில் தொனிக்கும். கடிமனை=கட்டுங் காவலுமான மனை என்றபடி. அம்மனைமீர்! என்றது அயல்வீட்டுப் பெண்களை. .... (ங)

தாய்வாயிற்சொற்கேளாள் தன்னுயத்தோ டணையாள் தடமென்கொங்கை
யே * ஆரச்சாந்தணியாள் எம்பெருமான் திருவரங்க மெங்கேயென்னும் *
பேய்மாயமுலையுண் டிவ்வுலகுண்டபெருவயிற்றன் பேசில்நங்காய்! *
மாமாயனென்மகளைச்செய்தனகள் மங்கைமீர்! மதிக்கிலேனே. (சு)

நங்காய்!, மங்கைமீர்!—;

| | |
|---|---|
| தாய் வாயில் சொல் | தாயாகிய என்னுடைய வாய்ச் சொல்லை |
| கேளாள் | (என்மகள்) கேட்பதில்லை; |
| தன் ஆயத்தோடு | தனது தோழிமார்களுடனே |
| அணையாள் | கூடுவதில்லை; |
| தட மென் கொங்கையே | பருத்து மெல்லிதான (தனது) முலைகளையும் |
| ஆர | அழகாக |
| சாந்து | சந்தனத்தினால் |
| அணியாள் | (முன்புபோல) அலங்கரிக்கின்றாளில்லை; |
| எம்பெருமான் திரு அரங்கம் எங்கே என்னும் | ‘என் ஸ்வாமி யெழுந்தருளியிருக்கிற திருவரங்கம் எங்கே?’ என்கிறாள்; |
| பேய் | பேய்ச்சியான பூதனை |
| மாய | முடியும்படியாக |
| முலை உண்டு | (அவளது) முலைப்பாலைப் பருகி |
| இ உலகு உண்ட பெரு வயிற்றன் | இவ்வுலகங்களையும் அமுது செய்த பெ’ய திருவயிற்றையுடையனான |
| மா மாயன் | மிக்க ஆச்சர்ய பூதன் |
| என் மகளை செய்தனகள் | என் பெண்பிள்ளைக்குச் செய்தவற்றை |
| பேசில் | சொல்லப்புகுந்தால் |
| மதிக்கிலேன் | அளவிட்டுச் சொல்ல மாட்டுகின்றிலேன். |

* * *—நேற்றுவரையில் இவளுடைய போதுபோக்கு ஒருவகையாயிருந்தது; இன்று வேறுபட்டுவிட்டது. என் வார்த்தையில் இவள் வைத்திருந்த மதிப்பு சொல்லிமுடியாது; நான் காலாலே ஏவினதைத் தலையாலே செய்து தீரும்படி அவ்வளவு கௌரவம் என் பேச்சில் வஹித்திருந்த விவள் இன்று என் வார்த்தையைச் செவி தாழ்த்துக் கேட்பதுஞ் செய்கின்றிலள். என்னிலும் மிக்க அன்பு பாராட்டி யிருந்தாள் தோழிமார் பக்கல்; அவர்களைவிட்டு ஒரு நொடிப்பொழுதும் பிரியாதிருந்த விவளுக்கு இப்போது ‘தோழிமார்’ என்றால் விஷமாயிராநின்றதே. ஆகவே, தோழிமாரைக்கொண்டு இவளைத் திருத்திக்கொள்வோம் என்று நினைக்கவும் அவகாசமில்லையாயிற்று. ஆயம்—தோழியர்.

தடமென்கொங்கையே ஆரச்சாந்தணியாள்=அழகுபெறத் தன்னை அலங்கரித்துக் கொள்வதிலும் விருப்பமற்றாள். ‘நமது கணவன் நம்மை இப்படி உபேக்ஷித்திருக்க நமக்கு அலங்காரமேதுக்கு?’ என்று வெறுப்புற்றுக் கிடக்கிறாளென்கை. எம்பெருமான் திடீரென்று தன்னோடு ஸம்ச்லேஷிக்க வந்து சேர்ந்தால் அப்போது அவனது திருவுள்ளமுகக்கும்படி முன்னடியே முலைத்தடங்களை அலங்கரித்து வைத்துக்கொள்ளவேண்டியிருந்தும் விரஹவ்யஸநத்தினால்

அது செய்யமாட்டாதே கிடக்கிறாளென்கை. மென்கொங்கை=ஸ்தநங்களுக்கு வன்மை இலக்கணமாயிருக்க மென்மையையிட்டுக் கூறினதென்? என்னில், இங்குச்சொன்ன மென்மையாவது விரஹத்தைப் பொறுத்திருக்கமாட்டாமை. 'இவன் ஸுகுமாரன்' என்றால் 'பசி பொறுக்கமாட்டாதவன்' என்று பொருள்படுதல்போல. (இரண்டாமடியின் முதலிலுள்ள ஏகாரம்-பாதம் பூரிப்பது.)

பேய்மாயமுலையுண்டு=பேய்ச்சியினுடைய மாயமுலையை—விஷந்தடவப் பெற்று க்ருத்ரிமமான முலையை, என்றுமுரைக்கலாம். எம்பெருமானால் தன் மகளுக்கு நேர்ந்த நிலைமைகளை முதலில் ஒருத்தியோடே சொல்லத் தொடங்கி 'நங்காய்' என ஒருமையாக விளித்துச் சொல்லிக்கொண்டிருக்கையில் க்ரமேண பல மாதர் வந்து கூடி நின்றமையால் 'மங்கைமீர்!' எனப் பன்மையாக விளித்து முடித்தாள் திருத்தாய். ... ... ... ... (௪)

பூண்முலைமேல்சாந்தணியாள் பொருகயற்கண்மையெழுதாள் பூவைபேணாள் *
ஏணறியாளெத்தனையும் எம்பெருமான் திருவரங்க மெங்கேயென்னும் *
நாண்மலராள் நாயகனாய் நாமறிய வாய்ப்பாடிவளர்ந்தநம்பி *
ஆண்மகனாயென்மகளைச்செய்தனகள் அம்மனைமீர்! அறிகிலேனே. (௫)

| | |
|---|---|
| பூண் முலை மேல் | ஆபரணங்களணிந்த முலையின்மேல் |
| சாந்து | சந்தனத்தை |
| அணியாள் | பூசுகின்றாளில்லை; |
| பொரு கயல் கண் | ஒன்றோடொன்று சண்டை செய்யுமிரண்டு மீன்கள் போன்றுள்ள கண்களிலே |
| மை எழுதாள் | மையிட்டுக் கொள்ளுகிறாளில்லை; |
| பூவை பேணாள் | (தான் வளர்த்துக் கொண்டிருந்த) பூவைப் பட்சியையும் ஆதரிக்கின்றாளில்லை; |
| எத்தனையும் | எந்த வஸ்துவையும் |
| ஏண் அறியாள் | நெஞ்சினால் நினைக்கின்றாளில்லை; |
| எம் பெருமான் திரு அரங்கம் எங்கே என்னும் | 'என்ஸ்வாமியின் திருவரங்கம் எங்கே?' என்பதொரு வார்த்தையையே சொல்லிக் கொண்டிருக்கிறாள்; |
| நாள் மலராள் நாயகன் ஆய் | செவ்வித்தாமரைப்பூவிற் பிறந்த பிராட்டிக்கு வல்லபனானவனும் |
| நாம் அறிய ஆய்ப்பாடி வளர்ந்த நம்பி | நமக்கெல்லாம் தெரியும்படியாகத் திருவாய்ப்பாடியில் வளர்ந்தவனுமான பெருமான் |
| ஆண் மகன் ஆய் | பெரிய ஆண்பிள்ளையாய்க் கொண்டு |

என் மகளை செய்தனகள் அம்மனைமீர் அறிகிலேன்—.

* * *—சிறுமிகட்கு லக்ஷணமாக முலைத்தடத்தில் சந்தனமணிந்துகொள்வதும் கண்களில் மையிட்டுக்கொள்வதும் விளையாட்டுக் கருவிகளினால் போது போக்குவதும் என் மகட்கு மாறிவிட்டது. எம்பெருமான் விரும்பிவந்து அணையப்பெறாத இம்முலைகட்கு அலங்காரம் வேணுமோ? என்று வெறுப்புற்றுப் பூண்முலைமேல் சாந்தணியாள்; அல்லும்பகலும் அழுதுகொண்டே போதுபோக்கும்படியாக நம்மை எம்பெருமான் செய்துவிட்டனனாதலால் அழுங்

கண்களுக்கு அஞ்சனமில்லாமை ஒரு குறையோவென்று மனம் நொந்து போரு கயற்கண்மையெழுதாள்.

பூவைபேணுள் = பூவையென்று—கிளி, குயில், நாகணவாயப்புள்—இவற்றுக் குப் பெயர். சிறுமியர் லீலார்த்தமாகச் சில பறவைகளை வளர்த்துப் போது போக்குவதுண்டு. நேற்றுவரையில் இப்பாகாலநாயகியும் அங்ஙனமே போது போக்கா நின்றிருந்தவள் இன்று அதனருகுஞ் செல்கின்றிலள். விஷத்தைப் பார்ப்பதுபோல் அதனைப் பார்க்கிருள். எத்தனையும் ஏணறியாள் = இந்த லோகத் தைப்பற்றின சிந்தையே இவளுக்கில்லை என்றபடி. ஏண்—எண்ணுதல்; முத னிலை திரிந்த தொழிற்பெயர். 'எம்பெருமான் திருவரங்கமெங்கே?' என்கிற வார்த்தையொன்றே தொடர்ந்து வருகின்றது.

இவளை இப்பாடு படுத்தினவன் ஆரென்ன, 'ச்ரிய:பதி' என்று ஒருபெண் மகளைக்கொண்டே தன்னை நிரூபிக்கவேண்டும்படி யிருப்பவனுய், நமக்கெல்லாம் நன்கு தெரியும்படியாகத் திருவாய்ப்பாடியில் தயிர் நெய் வாரி விழுங்கி மச் சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்புதுகிலவைகீறி நிச்சலும் தீமைகள்செய்து திரிந்தவொருவனே இன்று பெரிய ஆண்பிள்ளைத்தனங்காட்டி என்மகளை இங்ஙனே செய்தானென்கிருள் திருத்தாய். ... .... ... ... .... (ரு)

தாதாடுவனமாலை தாராளே? என்றென்றேதளர்ந்தாள் காண்மின் *
யாதானுமொன்றுரைக்கில் எம்பெருமான் திருவரங்கமென்னும் * பூமேல்
மாதாளன் குடமாடிமதுசூதன் மன்னர்க்காய் முன்னம்சென்ற
தூதாளன் * என்மகளைச்செய்தனகள் எங்ஙனம் நான்சொல்லுகேனே? (சு)

| | |
|---|---|
| தாது ஆடு வனமாலை | 'தாதுகள் நிரம்பிய வனமாலையை |
| தாராளே | எனக்குத் தந்தருளமாட்டாளே?' |
| என்று என்று | என்று பலகால்சொல்லி |
| தளர்ந்தாள் | சோர்வடைந்தாள்; |
| யாதானும் ஒன்று உரைக்கில் | (அவளுக்கு அடக்க முண்டாகும்படி நாம்) ஏதாவதொரு வார்த்தை சொன்னால் (அதற்கு மறுமொழியாக) |
| எம் பெருமான் திரு அரங்கம் என்னும் | 'எம்பெருமான் திருவரங்கம்' என்கிற வார்த்தையொன்றே சொல்லுகின்ருள்; |

| | |
|---|---|
| பூ மேல் மாது ஆளன் | பூவிற்பிறந்த பிராட்டிக்கு வல்லபனும் |
| குடம் ஆடி | குடக்கூத்தாடினவனும் |
| மதுசூதன் | மது வென்னுமசுரனைக் கொன்றவனும் |
| முன்னம் | முன்பொருகால் |
| மன்னர்க்கு ஆய் | பஞ்சபாண்டவர்களுக்காக |
| தூது சென்ற | தூதுநடந்தவனுமான |
| ஆளன் | ஸ்வாமி |

என்மகளை செய்தனகள் நான் எங்ஙனம் சொல்லுகேன்?—.

* * *—என் மகள் ஓச்சலொழிவின்றியே கலகலவென்று ஏதையேனும் பேசிக்கொண்டிருப்பளே; அப்படிப்பட்ட இவளுடைய பேச்செல்லாம் ஓய்ந்து

விட்டது; 1. "அவன் மார்வணிந்த வனமாலை வஞ்சியாமே தருமாகில் மார்வில் கொணர்ந்து புரட்டீரே" என்றாற்போலே அவ்வளவு வார்த்தையும் சொல்ல மாட்டாதாளாய் 'வனமாலை தாராரோ?' என்கிற இவ்வளவு வார்த்தையே சொல்லிக்கொண்டு தளர்கின்றாள். 'நங்காய்! இப்படிப்பட்ட தளர்ச்சி உனக்குத் தகாது' என்று ஹிதமாக நாம் ஏதாவது சொல்லத் தொடங்கினால் நம் வார்த்தை காதில் விழவொண்ணாதபடி காதைமூடிக்கொண்டு 'திருவரங்கம், பெரிய கோயில்' என்று கம்பீரமாக மிடற்றோசை செய்கின்றாள்.

வனமாலை=" ஆஜாநுலம்பிநீ மாலா ஸர்வர்த்து குஸுமோஜ்ஜ்வலா—மத்யே ஸ்தூலகதம்பாட்யா வநமாலேதி ஸா ம்ருதா" என்பர் வடநூலார்; திருமாலின் திருத்தோளிலிருந்து திருவடியளவும் தொங்குகின்ற மாலை வனமாலை யெனப்படும். இனி, வனம் என்பதற்குள்ள பல பொருள்களில், அழகு என்னும் பொருளையும் துளவம் என்னும் பொருளையும் விவக்ஷித்து, 'அழகிய மாலை' என்றாவது 'திருத்துழாய்மாலை' என்றாவது பொருள் கொள்வதும் நன்றே. 'வனம்' என்ற வடசொல்லுக்குக் 'காடு' என்று பொருளாதலால், காட்டுப் பூக்களினால் தொடுத்தமாலை என்றும் கொள்ளலாம். இது கண்ணபிரானுக்கு அமைவது. "காடுகளூடுபோய்....கார்க்கோடல் பூச்சூடி வருகின்ற தாமோதரா."

இவளை இங்ஙனே செய்வித்தவன் யாவனென்னில்; பூமேல் மாதாளன்= பரமஸுகுமாரமான தாமரைப்பூவின்மேல் வாழ்ந்துகொண்டிருந்த பிராட்டி 'இது நெருப்பு' என்று அந்த மலரை விட்டிட்டுத் தன் மார்விலே வந்து சேரும்படியாக அவளை அபஹரித்துக் கொண்டவன். குடமாடி='நமக்கு ஒருத்தி போருமோ? ஊரிலுள்ள பெண்களெல்லாரும் வேண்டாவோ' என்று குடக்கூத்தாடுகிற வியாஜத்தாலே திருவாய்ப்பாடிப் பெண்களையெல்லாம் (அக் கூத்திலே தோற்பித்து) வசப்படுத்திக் கொண்டவன்; மன்னர்க்காய்முன்னஞ் சென்ற தூதாளன்='செருப்பாக வுழைத்துக் காரியஞ்செய்யவல்லேன்' என்று தன்னுடைய விதேயத்வத்தைக் காட்டிக்கொள்ளுமவன். மதுசூதன்='என்னை யடுத்தவர்களுக்கு எப்படிப்பட்ட விரோதிகள் இருந்தாலும் அநாயாஸமாகப் பொடி படுத்திவிடுவேன்' என்று வீரத்தையும் காட்டிக்கொள்பவன். ஆக விப்படிப்பட்ட மேன்மையும் நீர்மையுமான தனது பண்புகளை யெல்லாம் காட்டி என்மகளை இப்பாடுபடுத்தினானொருவன் என்றாளாயிற்று. ... (சு)

வாராளுமிளங்கொங்கை வண்ணம் வேறாயினவாறெண்ணாள் * எண்ணில்
பேராளன் பேரல்லால்பேசாள் இப்பெண்பெற்றேனென்செய்கேன் நான்?
தாராளன் தண்குடந்தை நகராளன் ஐவர்க்காயமரிலுய்த்த
தேராளன் * என்மகளைச்செய்தனகள் எங்ஙனம் நான்செப்புகேனே?. (எ)

வார் ஆளும் {கச்சை யிட்டுக்கட்டி ஆளக்கடவதான} இள கொங்கை (தனது) இளமுலைகள் | வண்ணம் வேறு ஆயின ஆறு எண்ணாள் {நிறம் வேறுபட்ட விதத்தை நினைக்கின்றாளில்லை;}

1. நாச்சியார் திருமொழி 13-3.

| | |
|---|---|
| எண்ணில் | ஏதேனுமொன்றை எண்ணப்புகுந்தால் |
| பேராளன் பேர் அல்லால் பேசாள் | ஸர்வேச்வரனது திருநாமங்களைத் தவிர வேறொன்றையும் பேசுகின்றாளில்லை ; |
| இ பெண் பெற்றேன் நான் | இப்படிப்பட்ட பெண்ணைப் பெற்ற நான் |
| என் செய்கேன் | என்னபண்ணுவேன் ?; |

| | |
|---|---|
| தார் ஆளன் | திருமாலைசாத்திக் கொண்டிருப்பவனும் |
| தண் குடந்தை நகர் ஆளன் | குளிர்ந்த திருக்குடந்தை நகரை ஆள்பவனும் |
| ஐவர்க்கு ஆய் அமரில் | பஞ்சபாண்டவர்களுக்காக (பாரதப்) போரில் |
| உய்த்த தேராளன் | நடத்தப்பட்ட தேரையுடையனுமான பெருமான் |

என் மகளை செய்தனகள் எங்ஙனம் நான் செப்புகேன்—.

* * *—என்மகளுக்கு அறிவு அடியோடேபோயிற்று ; ‘வீணாக நாம் இப்படி ஒருவிஷயத்திலே ஆசைவைத்ததனால் மனோவியாதிகாரணமாகக் கொங்கை நிறம் வேறுபட்டதே !’ என்று இதனையறியவும் மாட்டுகின்றிலள் ;

[வண்ணம் வேறாகையாவது பசலைநிறங் கொள்ளுகை ; பசலை நிறத்தைப் பற்றிக் குறுந்தொகையில் ஒரு செய்யுளுண்டு ; அதாவது—“ ஊருண்கேணி யுண்டுறைத் தொக்க பாசியற்றே பசலை, காதலர் தொடுவுழித் தொடுவுழிநீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்தலானே ” (399) என்பதாம். ஊரிலுள்ள ஜனங்களாலே நீருண்ணப் பெறுகிற கேணியினுள்ளே படர்ந்துகிடக்கும் பாசிபோன்றது பசலைநிறம் ; தண்ணீரில் நாம் கைவைத்தோமாகில் கைபட்டவிடங்களில் பாசி நீங்கும் ; கையை எடுத்துவிட்டோமாகில் அவ்விடமெல்லாம் பாசி மூடிக்கொள்ளும். அதுபோல, கணவனுடைய கைபடுமிடங்களில் பசலைநிறம் நீங்கும். (இயற்கையான அழகியநிறமே இருக்கும்.) அணைத்தகை நெகிழ்த்தவாறே அப் பசலைநிறம் படரும் ; ஆதலால் பாசிபோன்றது பசலைநிறம் என்றபடி. (தொடுவுழித்தொடுவுழி—தொட்டவிடங்கள் தோறும். விடுவுழி விடுவுழி—விட்டவிடங்கள்தோறும். பரத்தலான்—வியாபிக்கிறபடியினாலே.) ]

எண்ணில் பேராளன் பேரல்லால் பேசாள்=இவளுக்கு இவ்வுலகைப்பற்றின சிந்தையும் தன்னைப்பற்றின சிந்தையும் கழிந்ததேயன்றி, பகவத் விஷயமான சிந்தை மாறவில்லை ; ஸர்வேச்வரனுடைய திருநாமங்கள் இவளது வாயில் வந்தபடியே யிருக்கின்றன.

இப்பெண் பெற்றேன் என்செய்கேன் நான்=இதற்கு இரண்டுவகைப் பொருள் : இப்படி என்வார்த்தை கேளாத அடங்காப்பெண்ணைப் பெற்றேனே ! இவளை இழந்தேனே ! அநியாயமாய்க் கெட்டேனே ! என்னசெய்வேன்—என்று வருந்திச் சொல்வதாகப் பிறர் நினைக்கவேணும் ; தனக்குள்ளே பெருமகிழ்ச்சி ; என்னைப்போலே பெண் பெற்றாருண்டோ ? இத்தனை சிறுபிராயத்திலே பகவத் விஷயத்தில் ஆழங்காற்படும்படியான பாக்கியம்வாய்ந்த பெண்ணைப்பெற்ற நான் என்ன நோன்பு நோற்றேனோ ? என்னும் மகிழ்ச்சியும் தொனிக்கும்.

[தாராளனித்யாதி.] 'எல்லாரையும் ரக்ஷிப்பவன் நான்' என்று தனிமாலையிட்டிருப்பவன் என்மகளை இப்படி அழிக்கிறானே; திருக்குடந்தையிலே சாய்ந்தருளி லோகரக்ஷணம் பண்ணுகிறவன் இவளை இப்படி அழிக்கிறானே; 'பார்த்தஸாரதி' என்று பேர்பெற்று அன்பர்க்குக்காரியஞ்செய்தவன் இவளுக்குக் காரியஞ் செய்யாதொழிகிறானே யென்கை. ... .... .... (எ)

உறவாதுமிலளென்றென்று ஒழியாது பலரேசுமலராயிற்றால் *
மறவாதே யெப்போழுதும் மாயவனே! மாதவனே! என்கின்றாளால் *
பிறவாதபேராளன் பெண்ணாளன்மண்ணாளன் விண்ணோர்தங்க
ளறவாளன் * என்மகளைச்செய்தனகள் அம்மனைமீர்! அறிகிலேனே. (அ)

| | |
|---|---|
| உறவு ஆதும் இலள் | 'தாய் தந்தையர் என்கிற உறவுமுறைகளைச் சிறிதும் உடையளல்லள்' |
| என்று என்று | என்று பலகால் சொல்லி |
| பலர் | பலபேர்கள் |
| ஒழியாது | எப்போதும் |
| ஏசும் அலர் ஆயிற்று | குறை கூறும்படியான பழி விளைந்திட்டது; |
| (இப்பெண்பிள்ளையோ வென்னில்) | |
| மறவாதே | மறவாமல் |
| எப்பொழுதும் | ஸர்வகாலமும் |
| மாயவனே! மாதவனே! என்கின்றாள்—; | |
| பிறவாத | கருமங்காரணமான பிறப்பையுடையனாகாத |
| பேராளன் | பெருமைபொருந்தியவனும் |
| பெண் ஆளன் | பெண்பிறந்தாரைத் தனக்காகவுடையவனும் |
| மண் ஆளன் | மண்ணுலகத்தவர்களை ஆள்பவனும் |
| விண்ணோர் தங்கள் அறவாளன் | நித்யஸூரிகளுக்குப் பரமதார்மிகனாயிருப்பவனுமான பெருமான் |
| என் மகளை செய்தனகள் அம்மனைமீர் அறிகிலேன்—. | |

* * *—'தாய் என்றும் தந்தையென்றும் பல உறவுமுறையார் இருக்கும் போது அவர்களையெல்லாம் த்ருணமாக நினைத்துத் தள்ளிவிட்டுத் 1. "தெளிவிலாக்கலங்கல் நீர்சூழ் திருவரங்கத்துள் ஓங்கும், ஒளியுளார்தாமேயன்றே தந்தையும் தாயுமாவார்" என்று ஒரு $ பரபுருஷனையே ஸகலவித பந்துவுமாகக் கொண்டுவிட்டாளே இச்சிறுமி' என்று நாட்டார் பழிதூற்றும்படியாயிற்று— என்று தாய் சொல்லுமிப்பேச்சில் வெறுப்பும் உவப்பும் விளங்கும். 'என்மகள் அலர் தூற்றலுக்கு ஆளாய்விட்டாளே?, நற்குடிக்குப் பெரும்பழி விளைந்திட்டதே!' என்று வருந்திச் சொல்லுவதாக நாட்டார்க்குப் பொருள்படும். ஆபாஸ பந்துக்களை யெல்லாம் விட்டிட்டு "மாதா பிதா ப்ராதா நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்கதிர் நாராயண:" என்றும் 2. "சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய்தந்தையும் அவரேயினியாவாரே" என்றும் ஆப்தபந்துவாகச் சொல்லப்பட்ட ஸ்ரீமந் நாராயணனையே 3. "உன்றன்னோடுறவேல் நமக்கு இங்கொழிக்க வொழியாது" என்னும்படியே ஸ்திரமான உறவாக்க் கொண்டாளே! என்கிற உவப்பு உள்ளுறையும்.

1. திருமாலை. 2. திருவாய்மொழி 5—1—8. 3. திருப்பாவை 28.
$ பரபுருஷன்—அசல்புருஷன் என்றும் புருஷோத்தமன் என்றும் விவக்ஷிதம்.

பழிச்சொல் மிகமிக, அபிநிவேசமும் மிகுமாதலால் நாட்டாருடைய பழிப்பே காரணமாக என்மகளுக்கு பகவத் விஷயப்ராவண்யம் அதிகரித்துச் செல்லுகின்றதென்கிறாள் இரண்டாமடியில். மறவாதே=ஒருகால் என்மகள் எம்பெருமானை மறந்திருந்தாலும், ஓயாதே அலர் தூற்றுமவர்கள் அவனையும் இவளையுஞ்சேர்த்துச் சொல்லிப் பழிக்கையினால் அதுகாரணமாக அவனுடைய ஸ்மரணம் இவளுக்கு மாறுவதில்லை; மறக்கவொட்டாமல் செய்பவர்கள் பழி தூற்றும் நாட்டார் என்க. 'ஆச்சரியமான குணசேஷ்டிதங்களை யுடையோனே! பிராட்டியை அநுபவிக்கும் பரமரஸிகனே!' என்று சொல்லிக்கொண்டே போதுபோக்குகின்றாளென்மகள்.

பிறவாத பேராளன்=இதற்கு மூன்றுவகையாகப் பொருள் கொள்ளலாம்; பேராளன்—பெருமையுடையவன்; ஸர்வேச்வரன் என்றபடி. நாமெல்லாம் கருமம் காரணமாகப் பிறப்பதுபோலே பிறவாத ஸர்வேச்வரன்; "அஜாயமாநோ பஹுதா விஜாயதே। தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம்॥" என்கிறபடியே தன்னுடைய அநுக்ரஹமே காரணமாகப் பிறப்பவனேயன்றிக் கருமமடியாகப் பிறவாதவன் என்கை; (அன்றியே,) "எங்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர் தலைவா!" என்கிறபடியே நமக்காகப் பலபல பிறவிகளெடுத்தும் பரிச்ரமங்கள் பட்டும் நம்மிடத்துள்ள வ்யாமோஹாதிசயத்தினால் 'இவர்களுக்கு நாம் ஒன்றுஞ் செய்யவில்லையே, ஒரு பிறவியும் பிறக்கவில்லையே நாம்!' என்று நினைப்பவனுகையாலே, அப்படிப்பட்ட அவன் கருத்தாலே 'பிறவாத பேராளன்' என்கிறதாகவுமாம். (அன்றியே,) பேராளன் என்றதற்குத் 'திருநாமங்களையுடையவன்' என்று பொருளாய், பிறவாத என்றதைப் பேர்க்கு விசேஷணமாகக்கொண்டு, ஆச்ரிதருடைய பிறப்பை அறுப்பதற்குக்காரணமான திருநாமங்களையுடையவன் என்னவுமாம்.

பெண்ணாளன்—பெண்பிறந்தாரையெல்லாம் இப்படி பிச்சேற்றித் தனக் காக்கிக்கொள்ளுமவன் என்கை. விண்ணோர் தங்கள் அறவாளன்=நித்யஸூரிகளால் கொண்டாடப்படுகிற திருக்குணங்களையுடையவன் என்று கருத்து. (அ)

பந்தோடுகழல்மருவாள் பைங்கிளியும்பாலூட்டாள் பாவைபேணாள் *
வந்தானோ! திருவரங்கன் வாரானோ! என்றேன்றேவளையுஞ்சோரும் *
சங்தோகன்பௌழியன் ஐந்தழலோம்பு தைத்திரியன் சாமவேதி *
அந்தோ! வந்தேன்மகளைச்செய்தனகள் அம்மனைமீர்! அறிகிலேனே. (கூ)

| (என் மகள்) | | | |
|---|---|---|---|
| பந்தோடு | பந்தையும் | பாவை பேணாள் | (விளையாட்டுக்கருவியான) மரப்பாச்சியை நோக்குவது மில்லை; |
| கழல் | கழற்காய்களையும் | | |
| மருவாள் | தொடுகிறதுமில்லை; | | |
| பை கிளியும் பால் ஊட்டாள் | (தனது) பசுமைதங்கிய கிளிக்குப் பாலூட்டுகிறது மில்லை; | திரு அரங்கன் | "ஸ்ரீரங்கநாதன் |

| | |
|---|---|
| வந்தானோ வாரானோ என்று என்றே | வந்துவிட்டானோ? என்றும் வரமாட்டானோ?" என்றும் சொல்லிக் கொண்டு |
| வளையும் சோரும் | கைவளைகள் கழல நிற்கின்றாள்; |
| சந்தோகன் | சாந்தோக்ய உபநிஷத்தினால் ப்ரதிபாத்யனும் |
| பௌழியன் | கௌஷீதகிப்ராஹ்மணத்தினால் ப்ரதிபாத்யனும் |
| ஐந்து அழல் ஓம்பு | பஞ்சாக்நிகளினால் ஆராதிக்கப் படுபவனும் |
| தைத்திரியன் | தைத்திரீய உபநிஷத்தினால் பிரதிபாதிக்கப் படுபவனும் |
| சாமவேதி | ஸாமவேதப்ரதிபாத்யனுமான பெருமான் |
| வந்து | இவ்விடம் வந்து |

என் மகளை செய்தனகள் அம்மனைமீர்! அறிகிலேன், அந்தோ!—.

* * *—பந்தும் கழலும் சிறு பெண்களுக்கு விளையாட்டுக் கருவிகளாயிருப்பன; உறங்கும்போதும் அவற்றைக் கைவிடாதே விரல்களில் இடுக்கிக் கொண்டே உறங்குவது வழக்கம்; நேற்றுவரையில் இவளும் அப்படியேயிருந்தவள் இன்று அவற்றைக் கண்ணெடுத்துப்பார்ப்பதும் தவிர்ந்தாள். ஏது தவிர்ந்தாலும் தான் வளர்க்கும் கிளிக்குப் பாலூட்டுவது தவிராதிருந்தவள் அக்காரியத்தை அடியோடே மறந்தாள்; கிளிக்குப் பாலூட்டுவது எப்போதோவொருகாலாகையாலே அதுபோலல்லாமல் ஸர்வகாலமும் பேணிக்கொண்டிருப்பதற்குறுப்பான பாவையுண்டு—பதுமை, அதனைக் கண்ணெடுத்துப் பார்ப்பதும் செய்கின்றிலள். பின்னை இவள் செய்வது என்னென்னில்; ஸர்வகாலமும் திருவரங்கனையே சிந்தைசெய்து கொண்டிருக்கையாலே அந்தப் பாவனை முற்றி அவன் அருகே வந்தானாக நினைத்து 'வந்தானோ திருவரங்கன்' என்பது, அவனோடே தழுவி முழுசிப்பரிமாற நினைத்துக் கைகயை நீட்டினவாறே அவனைக் காணாமையாலே 'ஓ! நான் பிரமித்தேன் போலும், அவனேது வருகிறதேது? வாரானோ' என்பதாய் மேனி மெலிந்து வளைகழலப்பெறுகின்றாள். "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:—ஸகல வேதங்களுக்கும் நானே பொருள்" என்றபடியே ஸகல வேதப்ரதிபாத்யனாயிருக்குமவன் என் மகளை இப்பாடு படுத்தினான் காண்மின்—என்றாளாயிற்று. .... ... (௯)

சேலுகளும் வயல்புடைசூழ் திருவரங்கத்தம்மானைச் சிந்தைசெய்த *
நீலமலர்க்கண் மடவாள்நிறையழிவைத் தாய்மொழிந்த வதனை * நேரார்
காலவேல்பரகாலன் கலிகன்றியொலிமாலை கற்றுவல்லார் *
மாலைசேர்வெண்குடைக்கீழ் மன்னவராய்ப் பொன்னுலகில் வாழ்வர்தாமே. (௧௦)

| | |
|---|---|
| சேல் உகளும் | மீன்கள் துள்ளிவிளையாடப் பெற்ற |
| வயல் | கழனிகளினால் |
| புடை சூழ் | சுற்றும் சூழப்பட்ட |
| திரு அரங்கத்து | திருவரங்கத்திலுள்ள |
| அம்மானை | எம்பெருமானை |
| சிந்தை செய்த | தியானித்துக் கொண்டிருக்கின்ற |
| நீலம் மலர் கண் மடவாள் | கருநெய்தல்போன்ற கண்களையுடையளான பரகால நாயகியினது |
| நிறை அழிவை | அடக்கம் அழிந்தமையைக் குறித்து |

| | |
|---|---|
| தாய் மொழிந்த அதனை | தாய்பேசின பாசுரமாக, |
| நேரார் காலன் | பகைவர்க்கு யமன்போன்றவரும் |
| வேல் | வேற்படையையுடையரும் |
| பரகாலன் | பரகாலனென்ற திருநாமமுடையவருமான |
| கலிகன்றி | திருமங்கையாழ்வார் |
| ஒலி | அருளிச்செய்த |
| மாலை | இச் சொல்மாலையை |
| கற்று வல்லார்தாம் | ஓதி உணரவல்லவர்கள், |
| மாலை சேர் வெண் குடைக் கீழ் | புஷ்பமாலைகள் தொங்கவிடப் பெற்ற வெண்குடை நிழலில் |
| மன்னவர் ஆய் | அரசர்களாயிருந்துகொண்டு (இஹலோக ஐச்வர்யங்களை யநுபவித்துப் பின்பு) |
| பொன் உலகில் வாழ்வர் | பரமபதத்தில் நித்யாநுபவம் பண்ணப்பெறுவர். |

* * *—கீழ் ஒன்பது பாட்டும் தாய் பாசுரமாகச்சென்றன; தாமான தன்மையிலே நின்று இத்திருமொழி கற்றார்க்குப் பலன்சொல்லித் தலைக்கட்டும் பாசுரம் இது. திருவரங்கத்தம்மான் பக்கல் பக்திப்பெருங்காதல் கொண்ட பரகாலநாயகி அடக்கங்கெட்டு அலமருகின்றமையைத் திருத்தாயார் எடுத்துரைப்பதாகத் திருமங்கையாழ்வாரால் அமைக்கப்பட்ட இத்திருமொழியைக் கற்றுணருமவர்கள் வேண்டியவளவு இஹலோகத்தில் ஸாம்ராஜ்ய போகங்களை யநுபவித்துப் பின்னை ஸ்ரீவைகுண்ட நாதனுக்கு நித்ய கைங்கரியம் பண்ணப் பெறுவர்களென்றவாறு.

கீழ் ஒன்பது பாட்டும் வேற்றுவாயாலேபேசி, இதில் 'பரகாலன் கலி கன்றியோலிமாலை" என்கையாலே தம்முடைய பக்திப் பெருங்காதலைத் தாமே அந்யாபதேசத்தாலே பேசிக்கொண்டாரென்பது விளங்கும்.

நேரார்காலன் என்ற அடைமொழி வேலுக்குமாகலாம், பரகாலனுக்குமாகலாம். 'மாலைசேர்' என்னும் அடைமொழி மன்னவர்க்கும் ஆகலாம். (கo)

அடிவரவு:—வெருவாதாள் கலை மான் தாய் பூண் தாதாடு வாராளும் உறவு பந்தோடு சேல் கைம்மானம்.

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.





ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஐந்தாம்பத்து—ஆறுந்திருமொழி,

# கைம்மானமழகளிற்றை.

### இதுவும் திருவரங்க மங்களாசாஸநத் திருப்பதிகம்.



கைம்மானமழகளிற்றைக் கடல்கிடந்த கருமணியை *
மைம்மானமரதகத்தை மறையுரைத்த திருமாலை *
எம்மானை எனக்கென்றுமினியானைப் பனிகாத்த
வம்மானை * யான்கண்டது அணிநீர்த்தென்னரங்கத்தே. (க)

| | | | |
|---|---|---|---|
| மானம் கை | நீண்ட கையையுடைய | எம்மானை | எனக்கு ஸ்வாமியானவனும் |
| மழ | இளமைதங்கிய | எனக்கு என்றும் இனியானை | எனக்கு எக்காலத்திலும் போக்யனு யிருப்பவனும் |
| களிற்றை | யானைபோன்றவனும் | பனி காத்த அம்மானை | மழையில்நின்றும் (ஆநிரை யைக்) காத்தருளினவனு மான பெருமானை |
| கடல் கிடந்த | கடலிலேகண்வளர்ந்தருள்கிற | யான் கண்டது | அடியேன் ஸேவிக்கப் பெற்றது (எவ்விடத்திலென்னில்) |
| கரு மணியை | நீலமணிபோன்றவனும் | அணிநீர்தென் அரங்கத்து | அழகிய தீர்த்தம்பொருந்திய திருவரங்கத்திலே. |
| மை மானம் மரதகத்தை | பசுமைநிறம் மிக்கிருக்கப் பெற்ற மரதகப் பச்சை போன்றவனும் | | |
| மறை உரைத்த திருமாலை | வேதங்களாலே பிரதி பாதிக்கப்பட்ட ச்ரிய: பதியானவனும் | | |

* * *—ஆழ்வார் கீழ்த்திருமொழியில் பட்ட வ்யஸநமெல்லாந் தீர்ந்து மகிழ்ந்துபேசுந் திருமொழியாயிற்று இது. என்னுதனைத் திருவரங்கத்தில் காணப்பெற்றேனென்கிறார்.

கைம்மான மழகளிற்றை=ஓர் ஆனை கைகளையும் கால்களையும் பரப்பிக் கொண்டு கிடப்பதுபோலப் பள்ளிகொண்டிருக்கு மழகில் ஈடுபட்டுச் சொல்லு கிறபடி. நீண்ட துதிக்கையையுடைத்தாய்ப் பருவத்தாலே இளையதாயிருப்ப தொரு ஆனை சாய்ந்தாற்போலே யிருக்கின்றவனையென்கை. "களிறுபோன்ற வனை" என்னுது களிற்றை என்று ஐக்கியமாகச் சொன்னது உவமவாகுபெயர். "தென்னுனாய் வடவானாய் குடபாலானாய் குணபால மதயானாய்" என்று திருநெடுந்தாண்டகத்திலு மருளிச்செய்வர். "என்னானை யென்னப்ப னெம்பெருமான்" என்றார் நம்மாழ்வாரும் திருவாய்மொழியில். யானைக்கும் எம்பெருமானுக்கும் பலபடிகளாலே ஸாம்யமுண்டு ;—

1. யானை, எத்தனை தடவை பார்த்தாலும் பார்க்கும்போதெல்லாம் அபூர்வ வஸ்துபோலவேயிருந்து பரமாநந்தத்தைத் தரும்; எம்பெருமானும் "அப்பொழுதைக்கப்பொழுதென் னாராவமுதமே" என்னும்படியிருப்பன்.

2. ஆனையின்மீது ஏறவேண்டியவன் ஆனையின் காலைப்பற்றியே ஏற வேண்டும்; எம்பெருமானிடம் சென்று சேரவேண்டியவர்களும் அவனது திருவடியையேபற்றிச் சேரவேண்டும்.

3. ஆனை தன்னைக்கட்டத் தானே கயிறு கொடுக்கும்; "எட்டினோ டிரண்டெனுங் கயிற்றினால்" (திருச்சந்தவிருத்தம்) என்றபடி எம்பெருமானைக் கட்டுப்படுத்தும் பக்தியாகிற கயிற்றை அவன்றானே தந்தருள்வன். "[illegible]." "மதிநலமருளினன்."

4. யானையை நீராட்டினாலும் அடுத்த க்ஷணத்திலே அழுக்கோடே சேரும்; எம்பெருமான் சுத்த ஸத்வமயனுப் பரமபவித்திரனாயிருக்கச்செய்தேயும் * பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கு மழுக்குடம்பு முடைய நம்போல்வாரோடே சேரத் திருவுள்ளமாயிருப்பன் வாத்ஸல்யத்தாலே. "[illegible]." என்கிற ஸ்ரீரங்கராஜஸ்தவ ச்லோகத்தின் படியுமாம்.

5. யானையைப் பிடிக்கவேண்டில் பெண்யானையைக் கொண்டே பிடிக்க வேண்டும்; பிராட்டியின் புருஷகாரமின்றி எம்பெருமான் வசப்படான்.

6. யானை, பாகனுடைய அநுமதியின்றித் தன் பக்கல் வருமவர்களைத் தள்ளிவிடும்; எம்பெருமானும் 1. "வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்றபடி பாகவதர்களை முன்னிட்டுப் புகாதாரை அங்கீகரித்தருளான்.

7. யானையின் பாஷை யானைப்பாகனுக்கே தெரியும்; எம்பெருமானுடைய பாஷை திருக்கச்சிநம்பி போல்வார்க்கே தெரியும். பேரருளாளனோடே பேசுமவரிறே நம்பிகள்.

8. யானையினுடைய நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதல் முதலிய தொழில்கள் பாகனிட்டவழக்கு; எம்பெருமானும் 2. "கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி மணிவண்ணா நீ கிடக்கவேண்டா—உன்றன் பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்" என்றும், 3. "கிடந்தவாறெழுந்திருந்து பேசு" என்றுஞ் சொல்லுகிற திருமழிசைப்பிரான் போல்வார்க்கு ஸர்வாத்மநா விதேயனிறே.

9. யானை உண்ணும்போது இறைக்கும் அரிசி பலகோடி நூறாயிர மெறும்புகளுக்கு உணவாகும். எம்பெருமான் அமுதுசெய்துசேஷித்த ப்ரஸாதத்தாலே பலகோடி பக்தவர்க்கங்கள் உஜ்ஜீவிக்கக் காண்கிறோமிறே.

---

1. திருவாய்மொழி 4—6—8. 2. திருமழிசைப்பிரான் வைபவத்திற் பாசுரம்.
3. திருச்சந்தவிருத்தம் 61.

10. யானைக்குக் கை நீளம்; எம்பெருமானும் அலம்புரிந்த நெடுந்தடக்கையனிறே. "நீண்ட அத்தக்கருமுகிலை யெம்மான்றன்னை."

11. யானை இறந்தபின்பும் உதவும்; எம்பெருமானும் தீர்த்தம் ஸாதித்துத் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளினபின்பும் இதிஹாஸபுராணங்கள் அருளிச்செயல்கள் மூலமாகத் தனது சரிதைகளை உணர்த்தி உதவுகின்றானிறே.

12. யானைக்கு ஒருகையே உள்ளது; எம்பெருமானுக்கும் கொடுக்குங் கையொழியக் கொள்ளுங்கை இல்லையிறே. "ஐயி-ஃதாயஂ-ஃ வரிஹா நஜீஷிதழ."

13. பாகனுக்கு ஜீவனங்கள் ஸம்பாதித்துக் கொடுக்கும் யானை; எம்பெருமானும் அர்ச்சக பரிசாரகர்களுக்கு.

இங்ஙனே மற்றும்பல உவமைப் பொருத்தங்கள் கண்டு கொள்க.

கடல்கிடந்த கருமணியை—ஒரு நீலரத்னம் சாய்ந்தாற்போலே திருப்பாற்கடலிலேகிடந்தவனை என்கை. மைம்மான மரதகத்தை—பசுமை, நீலம், கருமை என்ற நிறங்களை அபேதமாகக் கூறுவது கவிமரபாதலால் எம்பெருமானுடைய காளமேகத் திருவுருவத்திற்குக் கருமணியையும் மரதகத்தையும் உவமை கூறினர். மறையுரைத்த என்பதற்கு—'வேதங்களை உபதேசித்தருளின' என்றும் 'வேதங்களால் பிரதிபாதிக்கப்பட்ட' என்றும் இரண்டுவகையாகப் பொருள் ஆகும். பிந்தினபொருள் பாங்கு. "ஹ்ரீஶ்ச தெலக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" இத்யாதி வேத வாக்கியங்களினால் திருமாலாகப் பிரதிபாதிக்கப்பட்டவனை என்றவாறு. பனி காத்தது—கிருஷ்ணாவதாரத்தில் கோவர்த்தனமலையைக் குடையாகவெடுத்து. கீழ்ச்சொன்ன திருக்குணங்களெல்லாம் விளங்கத் திருவரங்கம் பெரிய கோயிலிலே காணப்பெற்றேனென்றாராயிற்று. .... ... .... .... (க)

பேரானைக் குறுங்குடியெம்பெருமானை * திருத்தண்கா
லூரானைக் கரம்பனூருத்தமனை * முத்திலங்கு
காரார்திண்கடலேழும் மலையேழிவ்வுலகேழுண்டும் *
ஆராதேன்றிருந்தானைக் கண்டது தென்னரங்கத்தே. (உ)

| | |
|---|---|
| பேரானை | திருப்பேர் நகரில் உறைபவனும் |
| குறுங்குடி எம் பெருமானை | திருக்குறுங்குடியி லெழுந்தருளியிருக்கும் ஸ்வாமியானவனும் |
| திருத்தண்கா லூரானை | திருத்தண்காலில் நித்ய வாஸம் பண்ணுமவனும் |
| காம்பனூர் | திருக்காம்பனூரில் |
| உத்தமனை | உத்தமனாய் விளங்குபவனும், |
| முத்து இலங்கு கார் ஆர் திண் கடல் எழும் | (உள்ளே) முத்துக்கள் ஒளி விடாநிற்பனவும் கருநிறம் மிக்கவையும் திடமுள்ளனவுமான ஸப்த ஸமுத்ரங்களையும் |
| எழ் மலை | ஸப்த குலாசலங்களையும் |
| இ எழ் உலகு | இவ்வேழுலகங்களையும் (பிரளயகாலத்தில்) |
| உண்டும் | அமுதுசெய்தும் |
| ஆராது என்று இருந்தானை | த்ருப்திபெறாதவனா யிருந்தவனுமான பெருமானை |

கண்டது தென் அரங்கத்து—.

* * *—'அப்பக்குடத்தான்ஸந்நிதி' என்று ப்ரஸித்திபெற்ற திருப்பேர்நகரில் ஸேவை ஸாதிப்பவனும், திருக்குறுங்குடியில் பேருளாளப் பெருமாளாய் ஸேவை ஸாதிப்பவனும், திருத்தண்காவில் ஊராரோடு தானுமொருவனாக இருப்பவனும், திருக்கரம்பனூரில் உத்தமனென்கிற திருநாமத்தோடே ஸேவை ஸாதிப்பவனும், கடல்களேழும் மலைகளேழும் உலகங்களேழுமாகிய ஸகலபதார்த்தங்களையும் திருவயிற்றுக்கு இரையாக்கியும் 'அந்தோ! என்வயிறு நிறையவில்லையே, இன்னமும் அவகாசம் பெரிதுமுண்டே, என்செய்வேன்?' என்று அத்ருப்தியே காட்டியிருப்பவனுமான பெருமானைத் திருவரங்கத்திலே கண்டேன்.

"கரம்பனூருத்தமனை" என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் காண்மின்:—"வழிக்கரையிலே திருவாசலுக்கு ஒரு கதவிடாதே வந்து கிடக்கிறவனை." இதற்கு அரும்பதவுரை இட்டஒருவர்—"எல்லாரும் நடக்கும் வழியாகையாலே ஸேவிப்பார் மிகுகையால் கதவிட அவஸரமில்லையென்று கருத்து" என்றெழுதிவைத்தார்; அது பொருளன்று; அவ்விடத்துக் கோபுரவாசலுக்குக் கதவு இல்லாதிருந்தமை சொன்னபடி. அதனை ஸௌலப்யபரமகாஷ்டைக்கு அநுகுணமாகத் திருவுள்ளம்பற்றி ஶாடூக்தியாகப் பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்தபடி. இப்படிப்பட்ட ஸௌலப்யத்தைக் கணிசித்தே உத்தமன் என்று திருநாமமிடப் பெற்றான்போலும் என்பதும் தொனிக்கும்.

ஆராதேன்றிருந்தானை = ஜகத்ரக்ஷணம் எவ்வளவு பண்ணினாலும் ஒன்றும் செய்திலனாக நினைத்திருக்குமிருப்பைச் சொன்னபடி. ... .... (உ)

ஏனாகியுலகிடந்து அன்றிருநிலனும் பெருவிசும்பும் *
தானாயபெருமானைத் தன்னடியார் மனத்தேன்றும் *
தேனாகி யமுதாகித்திகழ்ந்தானை மகிழ்ந்தொருகால் *
ஆனாய னானைக் கண்டது தென்னரங்கத்தே. (௩)

| | |
|---|---|
| அன்று | வராஹகல்பத்தின் தொடக்கத்தில் |
| ஏன் ஆகி | மஹாவராஹரூபியாய்த் திருவவதரித்து |
| உலகு | பூமியை |
| இடந்து | (அண்டபித்தியில் நின்றும்) குத்தியெடுத்துக் கொணர்ந்தவனும் |
| இரு நிலனும் | விசாலமான மண்ணுலகமும் |
| பெரு விசும்பும் | பரந்த விண்ணுலகமும் |
| தான் ஆய | தனக்கு உடலாக இருக்கப்பெற்ற |
| பெருமானை | ஸ்வாமியாயும், |

| | |
|---|---|
| தன் அடியார் மனத்து | தன் அடியவர்களது நெஞ்சிலே |
| என்றும் | எப்போதும் |
| தேன் ஆகி | தேன்போலவும் |
| அமுது ஆகி | அமிருதம்போலவும் |
| திகழ்ந்தானை | விளங்குமவனையும், |
| ஒருகால் | முன்பொருகாலத்திலே |
| மகிழ்ந்து | திருவுள்ள முவந்து |
| ஆன் ஆயன் ஆனானை | பசுக்களை மேய்க்குமிடையனாய்ப் பிறந்தவனாயுமுள்ள எம்பெருமானை |

கண்டது தென் அரங்கத்தே—.

* * *—பூமியைப் பிரளயங் கொண்டகாலத்து மஹா வராஹரூபியாய்த் திருவவதரித்து அப்பூமியைப் பழையபடியே ஸ்தானத்திற் கொண்டுசேர்த்தவனும், நிலவுலகம் வானுலகம் முதலான ஸகல பதார்த்தங்களும் 'தான்' என்கிற சொல்லிலே அடங்கும்படி அனைத்தையும் தனக்கு ப்ரகாரமாகவுடையவனும், தனக்கே அற்றுத் தீர்ந்திருக்குமடியவர்களுக்கு ஸகலவித போக்ய வஸ்துக்களும் தானேயாயிருப்பவனும், இடக்கை வலக்கையறியாத இடைச்சாதியிலும் பிறந்து ஸத்தை பெற்றவனுமான பெருமானைத் தென்னரங்கத்திலே ஸேவிக்கப்பெற்றேனென்றாராயிற்று.

பூமியை ஹிரண்யாக்ஷனென்னு மசுரன் பாயாகச் சுருட்டிக் கவர்ந்துபோனதும் ஒன்றுண்டு; பிரளயவெள்ளம் கொள்ளை கொண்டுபோனதும் ஒன்றுண்டு, பிந்திய வரலாறே பெரும்பாலும் ஆழ்வார்களநுஸந்திப்பதாம். மேல் எட்டாம் பத்தில் "பாராயதுண்டுமிழ்ந்த ... பாரளவும் முது முந்நீர்ப்பரந்த காலம் வளைமருப்பில், ஏராருருவத் தேனமாயெடுத்த வாற்றலம்மானை" (8—8—3.) என்ற பாசுரத்தினால் இது விளங்கும். .... .... .... .... (௩)

வளர்ந்தவனைத் தடங்கடலுள் வலியுருவில் திரிசகடம் *
தளர்ந்துதிர வுதைத்தவனைத் தரியாதன் றிரணியனைப்
பிளந்தவனை * பெருநிலமீரடிநீட்டிப் பண்டொருநாள்
அளந்தவனை * யான்கண்டது அணிநீர்த் தென்னரங்கத்தே. (௪)

| | |
|---|---|
| தடங் கடலுள் | விசாலமான கடலிலே |
| வளர்ந்தவனை | திருக்கண் வளர்ந்தருள்பவனும் |
| வலி உருவின் | வலிவுள்ள சரீரத்தையுடைத்தாய்க்கொண்டு |
| திரி | ஊர்ந்துவந்த |
| சகடம் | (அஸுரனாலாவேசிக்கப்பட்ட) சகடமானது |
| தளர்ந்து | கட்டுக்குலைந்து |
| உதிர | சிந்நபிந்நமாகும்படி |
| உதைத்தவனை | (அதனைத்) திருவடியாலுதைத்தவனும் |
| அன்று | ஒருகாலத்தில் |
| தரியாது | பொறுத்திருக்கமாட்டாமல் |
| இரணியனை | இரண்யாசுரனை |
| பிளந்தவனை | கிழித்துப்போட்டவனும், |
| பண்டு ஒருகால் | மற்றுமொருகாலத்தில் |
| ஈர் அடி நீட்டி | இரண்டு திருவடிகளைப் பரப்பிவைத்து |
| பெரு நிலம் அளந்தவனை | விசாலமான பூமியையெல்லாம் அளந்துகொண்டவனுமான பெருமானை |

யான் கண்டது அணி நீர் தென் அரங்கத்தே.

* * *—அவதாரங்களுக்கு நாற்றங்காலாக விசாலமான கடலிலே திருக்கண் வளர்ந்தருள்பவனும், பிறகு 'அசுரர்கள் மிகவுங் கொழுத்துவிட்டார்கள்' என்றறிந்து வந்து பிறந்தருளி, அஸுராவேசத்தாலே திண்ணிய வடிவையுடையதாய்க் கொண்டு ஊர்ந்துவந்த சகடம் சிந்நபிந்நமாய் ஒழியும்படி திருவடியாலுதைத்தவனும், ப்ரஹ்லாதாழ்வான் திருநாமஸங்கீர்த்தனம் பண்ணினதே குற்றமாக இரணியன் அவனைக் கடலிலே தள்ளுவதும் மலையில் நின்றுருட்டுவதுஞ்

மாய்ப் பலவகை நலிவுகள் செய்யப்புகுந்தவாறே பொறுக்கிறுக்கமாட்டாமல் நரஸிம்ஹமூர்த்தியாய்த் தூணில் தோன்றி அவ்வசுரனைப் பிளந்தொழித்தவனும், பெருநில மடங்கலும் இரண்டடியிலே அடங்கும்படி திருவடிகளை நீட்டியளந்துகொண்டவனுமான எம்பெருமானைத் தென்னரங்கத்தே காணப்பெற்றேனென்றுராயிற்று.

இரண்டாமடியில் 'உதிர' என்றும் 'அதிர' என்றும் பாடபேதமுண்டு; அதிர—அதிர்ச்சியுண்டாம்படி.

தரியாது—தன்விஷயத்திலே எத்தனை தீங்குசெய்தாலும் தரித்திருப்பன் எம்பெருமான்; தனது உயிர்நிலையான அடியவர் திறத்தில் தீங்கு செய்தால் ஒருநொடிப்பொழுதும் தரித்திருக்கமாட்டானென்க. இவ்வர்த்தத்தை "வரத்தால் வலிநினைந்து மாதவ! நின்பாதம், சிரத்தால் வணங்கானே யென்றே— உரத்தினால் ஈரரியாய் நேர்வலியோனாயவிரணியனை, ஓரரியாய் நீயிடந்ததூன்" (முதல்திருவந்தாதி.) என்ற பாசுரத்தில் பொய்கையாழ்வார் உள்ளுறையாகவும், "யதவாராயவஹஸ்ரஜஹஸ்ரஜம் கவயி ஶரணு! ஹிரணு உவாவஹஸ। வாகதெந விரம் கவவிக்ரியொ விக்ரதிஜஹக்கநிஹஜநாதஹா:" [வரதராஜஸ்தவம்] என்றச்லோகத்தில் கூரத்தாழ்வான் ஸ்பஷ்டமாகவும் அநுஸந்தித்தருளினர். .... .... .... .... (ச)

நீரழலாய் நெடுநிலனாய் நின்றானை * அன்றரக்க
னூரழலாலுண்டானைக் கண்டார் பின்காணாமே *
பேரழலாய்ப் பெருவிசும்பாய்ப் பின்மறையோர் மந்திரத்தின் *
ஆரழலாலுண்டானைக் கண்டது தென்னரங்கத்தே. (ரு)

- நீர் ஆய் — ஜலஸ்வரூபியாயும்
- அழல் ஆய் — அக்நிஸ்வரூபியாயும்
- நெடு நிலன் ஆய் — விசாலமான பூமிஸ்வரூபியாயும்
- நின்றானை — இருப்பவனும்,
- அன்று — ஸ்ரீராமனாய்த் திருவவதரித்த காலத்து
- அரக்கன் ஊர் — இராவணனுடைய நகரமான இலங்கையை
- கண்டார் பின் காணாமே — முன்பு கண்டவர்கள் பின்பு காணவொண்ணாதபடி
- அழலால் உண்டானை — அக்நிக்கு இரையாக்கினவனும்,
- பேர் அழல் ஆய் — பெரிய படபாக்நி ஸ்வரூபியும்
- பெரு விசும்பு ஆய் — பரமபதத்துக்கு நிர்வாஹகனும்
- பின் — அதற்குமேலே
- மறையோர் மந்திரத்தின் ஆர் அழலால் உண்டானை — வைதிகப்ராஹ்மணர்களினுடைய மந்த்ரபூதமான ஹவிஸ்ஸை அக்நிமுகத்தாலே அமுதுசெய்பவனுமான பெருமானை
- கண்டது தென் அரங்கத்தே—.

* * *—நீர் அழல் நிலன் என்று மூன்று பூதங்களைச் சொன்னது—காற்று, விசும்பு என்னும் மற்ற இரண்டு பூதங்களுக்கும் உபலக்ஷணமாகும். பஞ்சபூதங்களுக்கும் நியாமகன் என்றவாறு. "நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய்

நெடுவானாய்'' என்ற திருவாய்மொழியுங் காண்க. ஸகல சேதநா சேதநங்களையும் எம்பெருமான் சரீரமாகக் கொண்டவனாதலால் இங்ஙனே சொல்லக் குறையில்லை யென்க.

**கண்டார் பின்காணுமே அரக்கனூர் அழலாலுண்டானை**=“மன்னு தண் பொழிலும் வாவியும் மதிளும் மாடமாளிகையும் மண்டபமும்” என்று திவ்ய தேசங்களை வருணிப்பதுபோலவே இலங்கையின் ஸந்நிவேசமும் இருந்தது: அனுமான் அதனைக்கண்டு ஆச்சரியப்பட்டமை ஸ்ரீராமாயண ப்ரஸித்தம்; **“𑌯𑌦𑍍𑌯𑌧𑌰𑍍𑌮𑍋 𑌨 𑌬𑌲𑌵𑌾𑌨𑍍𑌸𑍍𑌯𑌾𑌦𑌯𑌂 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍇𑌶𑍍𑌵𑌰𑌃। 𑌸𑍍𑌯𑌾𑌦𑌯𑌂 𑌸𑍁𑌰𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌸𑌶𑌕𑍍𑌰𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌾”** [இந்த இராவணனிடத்தில் அதர்மம் ஒன்று மாத்திரம் இல்லாதிருந்தால் தேவலோகத்தையும் அடக்கியாளக்கூடியவனாய் இவன் இருப்பன்] என்று திருவடி மதித்த ஐச்வரியமுண்டே அவனுக்கு. அப்படிப்பட்ட செல்வமெல்லாம் ஒருநொடிப் பொழுதில் நீறாகி யொழியும்படி தீக்கு இரையாக்கினவனென்கை.

**பேரழலாய்**—கடலில் உறைகின்ற பாடபாக்நி ஸ்வரூபியாயிருப்பவனென்கை. அன்றியே, **𑌅𑌯𑌮𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑍋 𑌯𑍋𑌽𑌯𑌮𑌨𑍍𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍇 𑌯𑍇𑌨𑍇𑌦𑌮𑌨𑍍𑌨𑌂 𑌪𑌚𑍍𑌯𑌤𑍇”** என்று சுருதியிலும் $ **“𑌅𑌹𑌂 𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌦𑍇𑌹𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃। 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑌚𑌾𑌮𑍍𑌯𑌨𑍍𑌨𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑌮𑍍”** என்று பகவத்கீதையிலும் (15-14.) சொல்லுகிறபடியே கடித்தும் உறிஞ்சியும் குடித்தும் நக்கியும் நம்மால் உட்கொள்ளப்படுகிற அன்னங்களைப் பசநம் செய்வதற்காக உள்ளே உறைகின்ற ஜாடராக்நியும் எம்பெருமானேயென்று கூறப்படுதலால் அதனைச் சொல்லிற்றாகவுமாம்.

**பெருவிசும்பாய்**—வடமொழியில் '**பரமாகாசம்**' என்று பரமபதம் சொல்லப்படுதலால் அதுவே தமிழில் '**பெருவிசும்பு**' என்ற சொல்லால் சொல்லப்படுகிறது; நித்யவிபூதிக்கு நியாமகனாயிருப்பவன் என்கை.

**மறையோர் மந்திரத்தின் ஆரழலாலுண்டானை**=அந்தணர்கள் இயற்றும் வேள்விகளில் இந்திரன், ஸோமன், வருணன் என்று பலபல தேவதைகளின் பெயர்களைச்சொல்லி ஆஹுதிகள் செய்தாலும் **“𑌯𑍇𑌽𑌪𑍍𑌯𑌨𑍍𑌯𑌦𑍇𑌵𑌤𑌾 𑌭𑌕𑍍𑌤𑌾 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇-**தேபி மாமேவ கௌந்தேய! யஜந்தி'' என்றும் **“𑌅𑌹𑌂 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾**—அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா'' என்றும் கீதையில் பெருமான்தானே பணித்தபடியே அந்த ஆஹுதிகளெல்லாம் எம்பெருமான்றனக்கே சென்று சேர்கின்றனவாதலால் இவனே ஸர்வயஜ்ஞஸமாராத்யன் என்கை. ஆக இப்படிப்பட்ட எம்பெருமானைத் திருவரங்கத்திலே காணப்பெற்றேனென்றாராயிற்று. .... .... .... .... .... .... (ரு)

---

$ நானே ஜாடராக்நியாயிருந்துகொண்டு எல்லாப் பிராணிகளினுடையவும் உடலினுள் உறைபவனாய் அவர்களால் உண்ணப்படும் உணவைப் பசநஞ் செய்கிறேனென்று பகவத் வாக்யம்.

தஞ்சினத்தைத் தவிர்த்தடைந்தார் தவநெறியை * தரியாது
கஞ்சனைக்கொன்று அன்றுலகமுண்டுமிழ்ந்த கற்பகத்தை *
வெஞ்சினத்த கொடுந்தொழிலோன் விசையுருவை யசைவித்த *
அஞ்சிறைப்புட்பாகனை யான்கண்டது தென்னரங்கத்தே. (௯)

| | |
|---|---|
| தம் சினத்தை | தங்களுடைய த்வேஷத்தை |
| தவிர்த்து | நீக்கிவிட்டு |
| அடைந்தார் | தன்னை வந்து பற்றினவர்களுக்கு |
| தவம் நெறியை | உபாயமார்க்கமாயிருப்பவனும், |
| தரியாது | (தீம்புகளைப்) பொறுத்திருக்கமாட்டாமல் |
| கஞ்சனை கொன்று | கம்ஸனைக் கொன்றொழித்தவனும், |
| அன்று | முன்பொருகாலத்தில் |
| உலகம் | உலகங்களை |
| உண்டு உமிழ்ந்த கற்பகத்தை | உண்பதும் வெளிப்படுத்துவதும் செய்த உதாரனும், |
| வெம் சினத்த கொடும் தொழிலோன் | வெவ்விய கோபத்தினால் செய்யக்கூடியஸம்ஹாரத் தொழிலையுடையனான ருத்ரனுடைய |
| விசை உருவை | மிக்க வேகத்தோடு கூடின வடிவை |
| அசைவித்த | (பாணாஸுரயுத்தத்தில்) சலிக்கச்செய்தவனும் |
| அம் சிறை புள் பாகனை | அழகிய சிறகுடைய பெரிய திருவடியை ஏறி நடத்துபவனுமான பெருமானை |

யான் கண்டது தென் அரங்கத்தே—.

* * *—தம் சினத்தைத் தவிர்த்தடைந்தார் தவநெறியை—'ஸ்ரீமந்நாராயணன்' என்ற சொல் மாத்திரம் செவிப்பட்டாலும் பகை பாராட்டி நிந்தை பண்ணுவார் பல்லாயிரம் பேர்களுண்டே; அப்படிப்பட்ட த்வேஷத்தை நீங்கினால் போதும்; பகவானிடத்தில் பக்திஉண்டாகவேணுமென்பதில்லை; பகவானுடைய திருநாமத்தைக் கேட்டவளவிலே தௌர்ப்பாக்யமே காரணமாக ஒரு த்வேஷம் உண்டாகிறதே அது தொலைந்தால் போதும்; அத்வேஷமுடையவர்களையே பரம பக்தராகக்கொண்டு அவர்களுக்கும் இரங்கியருள்வனும் எம்பெருமான்; "**தஞ்சினத்தைத் தவிர்த்தடைந்தார்**" என்றவிதற்கு—'த்வேஷத்தை நீக்கிக்கொண்டு தன்னைப்பற்றுமவர்களுக்கு' என்று பொருள் கொள்வதிற் காட்டிலும், 'த்வேஷத்தைத் தவிர்த்துக்கொள்வதாகிற பஜநத்தைச் செய்பவர்களுக்கு' என்று பொருள்கொள்ளுதல் மிகச் சிறக்குமென்று அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்வர். முந்தின பொருளிற்காட்டில் பிந்தின பொருளுக்கு வாசி என்னென்னில்; த்வேஷத்தை நீக்கிக்கொள்ளுதலாகிற ஒரு காரியமும் ஆச்ரயிப்பதாகிற ஒரு காரியமும் ஆகஇரண்டு காரியங்கள் சொல்லப்பட்டனவாகத்தேறும் முந்தின பொருளில்; அத்வேஷமாத்ரத்தையே கொண்டு எம்பெருமான் அருள் புரிகின்றானென்கிற ஸ்வாரஸ்யம் பிந்தின பொருளில் விளங்கும். ஆச்ரயணமென்று தனியே ஒன்று வேண்டா; த்வேஷத்தைத் தவிர்த்துக்கொள்வதையே ஆச்ரயணமாகத் திருவுள்ளம் பற்றுவன் எம்பெருமான் என்க. '**தவிர்த்து**' என்ற வினையெச்சம் இங்ஙனம் பொருள்கொள்வதற்குத் தடையாகுமென்று சங்கிக்கவேண்டா; பிரயோக முறைமை யுண்டாதலால்.

**தவநெறியை**—*அப்படிப்பட்டவர்கள் தன்னைப் பெறுதற்குரிய உபாயங்களைத் தானே நிர்வஹித்துக்கொள்வன் என்பது கருத்து. தவமாவது தபஸ்ஸு; உபாயத்தைச் சொன்னபடி.*

**தரியாது கஞ்சனைக்கொன்று**—*அத்வேஷமுடையார்க்கு அநுக்ரஹிக்கும்படியைக் கீழ் விசேஷணத்தாலருளிச் செய்தார்; த்வேஷமுடையாரைத் தொலைத் தொழிக்கும்படியை இதனாலருளிச் செய்கிறார். கம்ஸன் வில்விழவுக்கென்றழைத்து யானையையிட்டுக் கொல்லப்பார்ப்பதும் மல்லர்களையிட்டு முடிக்கப் பார்ப்பதும் செய்தமையால் இனி இப்பாவியை உயிரோடு வைத்திருக்கலாகாதென்று உயரவிருந்த மஞ்சத்தினின்றும் மயிரைப் பிடித்திழுத்து அவனை நிலத்திலே தள்ளிக் கொன்றாயிற்று.*

**வெஞ்சினத்த கொடுந்தொழிலோன் விசையுருவை யசைவித்த அஞ்சிறைப் புட்பாகனை**=*ருத்ரன் ஸம்ஹாரத்தொழிற் கடவுளாதலால் ‘வெஞ்சினத்தகொடுந் தொழிலோன்’ என்று அவனைச் சொல்லுகிறது; பாணாஸுர யுத்தத்தில் அவன் பட்டபாடு இங்கு அநுஸந்திக்கத்தக்கது. [ஸ்ரீ விஷ்ணுபுராணம் ஐந்தாவது அம்சம் முப்பத்துமூன்றும் அத்யாயம் நோக்குக.]*

*இங்கு “வெஞ்சினத்த கொடுந்தொழிலோன்” என்று (பெயரொன்றுமின்றியே) பொதுப்படையாயிருத்தலால் பாணாஸுரனென்றும் நரகாஸுரனென்றும் பொருள் கொள்ளலாமென்பர்.* .... .... .... .... (௬)

**சிந்தனையைத் தவநெறியைத் திருமாலை * பிரியாது**
**வந்தெனது மனத்திருந்த வடமலையை * வரிவண்டார்**
**கொந்தணைந்தபொழிற் கோவல் உலகளப்பானடிநிமிர்த்த ***
**அந்தணனை யான்கண்டது அணிநீர்த் தென்னரங்கத்தே.** (எ)

| | |
|---|---|
| சிந்தனையை | (எனது) மனோரதத்திற்கு விஷயமானவனும் |
| தவம் நெறியை | உபாயமார்க்கமா யிருப்பவனும் |
| திரு மாலை | திருமகள் கொழுநனும் |
| வடமலையை | திருவேங்கட மலைக்கு நிர்வாஹகனும் |
| (அப்படியிருந்தும் அவ்விடத்தை விட்டு) | |
| வந்து | எழுந்தருளி |
| எனது மனத்து | என்னுடைய நெஞ்சிலே |
| பிரியாது இருந்த | ஒரு நொடிப்பொழுதும் விட்டுப்பிரியாமல் எழுந்தருளி யிருப்பவனும், |
| வரிவண்டு ஆர் | அழகிய வண்டுகள் படிந்த |
| கொந்து | பூங்கொத்துக்கள் |
| அணைந்த | நெருங்கியிருக்கப் பெற்ற |
| பொழில் | சோலைகளையுடைத்தான |
| கோவல் | திருக்கோவலூரில் |
| உலகு அளப்பான் அடி நிமிர்த்த அந்தணனை | உலகங்களை அளப்பதற்காகத் திருவடிகளை நீட்டின ஸ்வாமியாக ஸேவை ஸாதிப்பவனுமான பெருமானை |
| யான் கண்டது அணி நீர் தென் அரங்கத்தே. | |

* * *—**சிந்தனையை**—"ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டுநாம்" என்றாற்போலே உண்டாகிற கைங்கரிய மனோரதங்களுக்கு இலக்கானவன் எம்பெருமானிறே. **தவநெறியை**—மநோரதித்தபடியே கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைப் பெறுவிக்கும் உபாயபூதனும்தானே என்கை. கஜேந்திராழ்வான் கமலபுஷ்பார்ச்சனையாகிற கைங்கரியத்தைப் பண்ணப் பாரித்தும் அவனுடைய முயற்சி பயன்படவில்லையே; எம்பெருமானேயன்றோ பிரதிபந்தக நிவ்ருத்தியைச்செய்து கைங்கரியத்தை நிறைவேற்றுவித்துக்கொண்டான். ஆகையாலே உபாயமும் அவனே யென்கிறது.

[**பிரியாது இத்யாதி.**] திருவேங்கடமலையைத் தனக்கு வாஸஸ்தாநமாக வுடையனாயிருக்கச் செய்தேயும் அதனைவிட்டு என்னெஞ்சிலே நிரந்தரவாஸம் செய்தருள்பவனென்றவாறு. தேன் மாறாத சோலைசூழ்ந்த திருக்கோவலூரில் உலகளந்த திருக்கோலத்துடனே ஸேவைஸாதிப்பவனுமான பெருமானைத் திருவரங்கத்திலே கண்டேனென்றாராயிற்று.

'**சிந்தநா**' என்ற வடசொல் **சிந்தனை**யெனத் திரிந்தது. '**கோபால வாடீ**' என்ற வடசொல் '**கோவல்**' எனச் சிதைந்தது. **அந்தணன்**—அழகிய தண்மை பொருந்தியவன்; பரமதயாளு என்றபடி. .... .... (எ)

**துவரித்தவுடையவர்க்கும் தூய்மையில்லாச் சமணர்க்கும் ***
**அவர்கட்கங்கருளில்லா வருளானை * தன்னடைந்த**
**எமர்கட்குமடியேற்கும் எம்மாற்குமெம்மனைக்கும் ***
**அமரர்க்கும்பிரானாரைக் கண்டது தென்னரங்கத்தே.** (அ)

| | |
|---|---|
| துவரித்த உடையவர்க்கும் | காவித்துணி கட்டித் திரியும் பௌத்தர்களும் |
| தூய்மை இல்லா சமணர்க்கும் அவர்கட்கு | பரிசுத்தியற்றவர்களான ஜைநர்களுமான அந்த அவைதிகர்கள் விஷயத்தில் |
| அருள் இல்லா | அருள் செய்யாதவனும் |
| அருளானை | (வைதிகர் திறத்தில்) அருள் செய்பவனும், |
| தன் அடைந்த | தன்னையே ஆச்ரயித்த |
| எமர்கட்கும் | என்னைச்சேர்ந்தவர்களுக்கும் |
| அடியேற்கும் | அடியேனுக்கும் |
| எம்மாற்கும் | எனது தகப்பனுக்கும் |
| எம்அனைக்கும் | எனது தாய்க்கும் |
| அமரர்க்கும் | நித்ய ஸூரிகளுக்கும் |
| பிரானாரை | ஸ்வாமியாயிருப்பவனுமான பெருமானை |

கண்டது, தென்அரங்கத்தே—.

* * *—கீழ்ப்பாட்டில் எம்பெருமானை '**அந்தணன்**—பரமதயாளு' என்றார்; வைதிகர்களிடத்தில் தயை உள்ளவனேயன்றி வேதபாஹ்யர்களான புறமதத்தவர்களிடத்தில் தயையுள்ளவனல்லன் என்கிறார் இப்பாட்டில். '**துவரித்த வுடையவர்**' என்று காஷாயதாரிகளான பௌத்தர்களைச் சொல்லுகிறது. ஸ்ரீவைஷ்ணவ ஸந்ந்யாஸிகளுக்கும் காஷாய வஸ்த்ரதாரணம் உண்டேயாகிலும் அவர்களை இங்கு விவக்ஷிப்பதில்லை; கேவலம் காவித்துணி யுடுத்த மாத்திரத்தினால் வேஷதாரிகளென்று வசைச்சொல் பெற்றவர்களான பௌத்தர்களுக்கே

'துவரித்தவுடையவர்' என்று லக்ஷண நாமதேயம் போலும். அப்படிப்பட்டவர்கள் திறத்திலும் தூய்மையற்றவர்களான ஜைநர் திறத்திலும் அருளற்றவன்-அதாவது, அவர்களை நிக்ரஹித்து நரகத்திலே வீழ்த்துமவன் என்றவாறு.

1. "கேசவன் தமர் கீழ்மேலெமரேழெழுபிறப்பும் மாசதிரிதுபெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா" என்கிறபடியே தம் பக்கலிலும் தம்மைச் சேர்ந்தவர்கள் பக்கலிலும் எம்பெருமானருள் ஏறிப்பாய்கின்றமையைப் பின்னடிகளில் அருளிச்செய்கிறார். ஆகவிப்படி பாஹ்யரை நிக்ரஹித்து அந்தரங்கரை அநுக்ரஹிக்கும் பெருமானைத் தென்னரங்கத்தில் கண்டேனென்றாராயிற்று.

போய்வண்ணம் மனத்தகற்றிப் புலனைந்தும் சேலவைத்து *
மெய்வண்ணம் நினைந்தவர்க்கு மெய்ந்நின்ற வித்தகனை *
மைவண்ணம் கருமுகில்போல் திகழ்வண்ண மரதகத்தின் *
அவ்வண்ணவண்ணனை யான்கண்டது தென்னரங்கத்தே. (கூ)

| | |
|---|---|
| பொய் வண்ணம் | ப்ராக்ருதி ப்ராக்ருதங்களை |
| மனத்து | மனத்தில் நின்றும் |
| அகற்றி | ஒழித்துவிட்டு |
| புலன் ஐந்தும் | பஞ்சேந்திரியங்களையும் |
| செலவைத்து | அப்பாற்படுத்தி |
| மெய்வண்ணம் | உண்மையாக |
| நினைந்தவர்க்கு | தன்னைச்சிந்திப்பவர்களுக்கு |
| மெய் நின்ற | தன் ஸ்வரூபத்தை உள்ளபடியே காட்டிக் கொடுக்கின்ற |

| | |
|---|---|
| வித்தகனை | ஆச்சர்யபூதனும், |
| மை வண்ணம் | அஞ்சனத்தின் நிறம் போன்ற நிறத்தையும் |
| கரு முகில் போல் திகழ் வண்ணம் மரதகத்தின் அவ் வண்ணம் | காளமேகம் போல் விளங்குகின்ற நிறத்தையுடைய மாதகப் பச்சையின் அப்படிப்பட்ட நிறத்தையும் |
| வண்ணனை | தனக்கு நிறமாக வுடையனுமான பெருமானை |

யான் கண்டது தென் அரங்கத்தே—.

* * *—**போய்வண்ணம் மனத்தகற்றி**=காண்கின்ற பிரபஞ்சமெல்லாம் மாயைத்தோற்றம்—பொய்—என்கிறார்கள் அத்வைதிகள்; அங்ஙனல்ல; 'நிலை நில்லாதவை' என்னும் பொருளிலும் 'பொய்' என்கிற சொல்லைப்பிரயோகிப்பதுண்டு; ஆகவே நிலைநில்லாத [-அஸ்திரங்களான] ப்ராக்ருத பதார்த்தங்களே இங்குப் **போய்வண்ண**மெனப்படுகின்றன; அவற்றை நெஞ்சிற் கொள்ளாமல், பஞ்சேந்திரியங்களையும் விஷயக்ராமங்களில் செல்லாதபடி தடுத்துத் தன்னையே உண்மையாகச் சிந்திப்பவர்கள் யாரோ, அவர்கட்குத் தன் ஸ்வரூபஸ்வபாவங்களை உள்ளபடி காட்டித் தந்தருள்பவன் எம்பெருமான் என்கிறது முன்னடிகளில். அன்னவர்களுக்குக் காட்டிக்கொடுக்கும் திவ்யமங்கள விக்ரஹத்தைப் பரமபோக்யமாக வாயாரப் பேசுகிறார் பின்னடிகளில். அஞ்சனம் போலவும் காளமேகம்போலவும் மாகதம்போலவும் ஆகர்ஷகமான திருநிறம்பெற்ற பெருமானைத் திருவரங்கத்திலே கண்டேனென்றாராயிற்று. .... .... .... .... (கூ)

1. திருவாய்மொழி 2-7-1.

ஆமருவி நிரைமேய்த்த அணியரங்கத்தம்மானை *
காமருசீர்க் கலிகன்றி ஒலிசெய்தமலிபுகழ்சேர் *
நாமருவு தமிழ்மாலை நாலிரண்டோ டிரண்டினையும் *
தாமருவி வல்லார்மேல் சாரா தீவினை தானே. (கo)

| | | | |
|---|---|---|---|
| ஆ நிரை | பசுக்கூட்டங்களை | மலி புகழ் சேர் | நிரம்பிய கீர்த்தியை யுடையதும் |
| மருவி மேய்த்த | விரும்பி மேய்த்தவனாய் | நா மருவு | நாவுக்குப் பொருந்தி யிருப்பதுமான |
| அணி அரங்கத்து அம்மானை | திருவரங்கத்தி லெழுந் தருளியிருப்பவனான பெருமானைக் குறித்து, | தமிழ் மாலை நாலிரண் டோடு இரண் டினையும் | இத்தமிழ்ப் பாசுரங்கள் பத்தையும் |
| காமரு சீர் கலிகன்றி ஒலிசெய்த | விரும்பத்தக்க சீர்மையை யுடைய திருமங்கை யாழ்வார் அருளிச் செய்ததும் | தாம் மருவி வல்லார் மேல் | தாமே விரும்பிக் கற்கு மவர்களிடத்து |
| | | தீ வினை சாரா | பாவங்கள் அணுகமாட்டா. |

* * *—உஜ்ஜீவனத்துக்குத் தம்பக்கல் ஒரு கைம்முதலுமில்லாத பசுக்களையும் அவற்றோடே பொருந்தி ரக்ஷித்தருளின கண்ணபிரானே பசுமேய்த்த விடாய்தீரத் திருவரங்கத்தில் உபயகாவேரி மத்யத்தில் அரவணையில் இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்றானும்; அப்பெருமான் விஷயமாகத் திருமங்கையாழ்வாரருளிச்செய்த இத்திருமொழியை ஓதவல்லவர்கட்கு ஒருவகைத்தீங்கும் வாராதென்று இத்திருமொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

நாலிரண்டோடு=இரண்டினால் பெருக்கப்பட்ட நான்கு—எட்டு. .... (கo)

**அடிவரவு**:—கைம்மானம் போரானை ஏனாகி வளர்ந்தவனை நீர் தம் சிந்தனை துவரித்த பொய் ஆமருவி பண்டை.

ஆறாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஐந்தாம்பத்து—ஏழாந்திருமொழி,

# பண்டை நான்மறை.

[இதுவும் திருவரங்கம் பெரியகோயில்
மங்களாசாஸநத் திருப்பதிகம்]

பண்டை நான்மறையும் வேள்வியும் கேள்விப்
பதங்களும் பதங்களின் பொருளும் *
பிண்டமாய்விரிந்த பிறங்கொளியனலும்
பெருகிய புனலொடு நிலனும் *
கொண்டல் மாருதமும் குரைகடலேழும்
ஏழுமாமலைகளும் விசும்பும் *
அண்டமுந் தானாய்நின்ற வெம்பெருமான்
அரங்கமா நகரமர்ந்தானே. (க)

| | |
|---|---|
| பண்டை நால் மறையும் | அநாதியாகவுள்ள நான்கு வேதங்களும் |
| வேள்வியும் | யாகங்களும் |
| கேள்வி பதங்களும் | கேட்டறியவேண்டிய வியாகரணமும் |
| பதங்களின் பொருளும் | அந்தந்த பதங்களினு லறியப்படுகிற ஜீவஸமஷ்டியும், |
| பிண்டம் ஆய் விரிந்த | (காரியப்பொருள்களுக் கெல்லாம் காரணமாய்க் கொண்டு) பிண்ட ரூபமாயிருந்து பிறகு விரிவுபெற்றவை களான |
| பிறங்கு ஒளி அனலும் | மிக்க காந்தியையுடைய அக்நியென்ன |
| பெருகிய புனலொடு | த்ரவரூபமான ஜலமென்ன |
| நிலனும் | பூமியென்ன |
| கொண்டல் | மேகமென்ன |
| மாருதமும் | வாயுவென்ன |
| குரை கடல் ஏழும் | ஆரவாரிக்கின்ற ஸப்த ஸாகரங்களென்ன |
| ஏழு மா மலைகளும் | ஏழுகுலபர்வதங்களென்ன |
| விசும்பும் | ஆகாசமென்ன |
| (ஆகிய இவற்றோடு கூடின) | |
| அண்டமும் | பிரமாண்டமும் |
| தான் ஆய் நின்ற எம் பெருமான் | ‘தான்’ என்கிற சொல்லுக் குள்ளே அடங்கும்படி தனக்கு ப்ரகாரமா யிருக்கப் பெற்ற எம்பெருமான் |
| அரங்கம் மா நகர் அமர்ந்தான் | திருவரங்கம் பெரிய கோயிலில் எழுந்தருளி யுள்ளான். |

* * *—பண்டைநான்மறையும் தானாய் நின்ற வெம்பெருமான், வேள்வியும் தானாய்நின்ற வெம்பெருமான், கேள்விப்பதங்களும் தானாய்நின்ற வெம்பெருமான்.......என்றிங்ஙனே யோஜிப்பது. எம்பெருமானே பண்டை நான்மறை

யாக நிற்கையாவது என்னெனில்; நான்கு வேதங்களையும் தானே வெளியிட்டவன் என்கையும், நான்கு வேதங்களாலும் ப்ரதிபாதிக்கப்படுபவன் தானே என்கையுமாம்.

**வேள்வியும் தானாய் நிற்கை**யாவது—அந்த வேதங்களில் சொல்லப்பட்டுள்ள யாகங்களெல்லாவற்றாலும் தானே ஆராதிக்கப்படுபவனாயிருக்கை. வேதங்களில் பலபல தேவதைகள் யஜ்ஞங்களுக்கு விஷயமாகச் சொல்லப்பட்டிருந்தாலும் அந்தந்த தேவதைகளுக்கு அந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணனே ஆங்காங்கு விவக்ஷிதன் என்ற பரமைகாந்தி ஸித்தாந்தம் உணரத்தக்கது.

**கேள்விப்பதங்களும் தானாய்நிற்கை**யாவது—வியாகரண சாஸ்த்ரத்திற்கு ப்ரவர்த்தகன் தானேயாயிருக்கை. "பதரூபத்தாலும் அக்ஷரரூபத்தாலும் ச்ரவணம் பண்ணி யறியவேண்டும்படி யிருக்கிற வ்யாகரண சாஸ்த்ரமும்........" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி.

**பிண்டமாய் விரிந்த**=உலகில், குடம் பானை மடக்கு முதலிய காரியப் பொருள்களுக்கு மூலகாரணம் மண்ணுண்டையாகும்; அதற்குப் பிண்டமென்று வடமொழிப்பெயர்; ஆகவே பிண்டமென்கிற சொல் காரணாவஸ்தைக்கு வாசகமாக நிற்கும். முதலில் அவ்யக்தமென்கிற பெயரோடே காரணாவஸ்தமாயிருந்து, பிறகு மஹதாதி ரூபத்தாலே காரியப்பொருளாக விரியுந்தன்மையைச் சொன்னவாறு—"**பிண்டமாய் விரிந்த**" என்று. அவை எவையென்னில், "**பிறங்கொளி யனலும்**" என்று தொடங்கிச் சொல்லப்பட்டவை. இவையெல்லாம் தனக்கு சரீரமாகும்படி தான் சரீரியாயிருக்கின்ற எம்பெருமான் நம்போல்வாருடைய கண்களும் குளிரும்படி விலக்ஷணமான திவ்ய மங்கள விக்ரஹத்தைப் பரிக்ரஹித்துத் திருவரங்கம் பெரியகோயிலிலே சாய்ந்தருளா நின்றான் என்றாராயிற்று.

**நால்மறை**=ருக்கு, யஜுஸ், ஸாமம் அதர்வணம் என்பன; தைத்திரியம், பௌடியம், தலவகாரம் சாமம் எனவிவையென்றலுமுண்டு. (சில சாதியார்க்கும் பெண்பாலர்க்கும் ஓதுவிக்கவும் ஓதவும் கேட்கவு மாகாதென்று) மறுக்கப்படுதல் பற்றியும், எளிதிலுணரலாகாதபடி மறைந்த பொருளை யுடைமைபற்றியும் **மறை** யென்று வேதத்திற்குப்பெயர். .... .... .... (க)

**இந்திரன் பிரமனீசனென்றிவர்கள்**
**எண்ணில் பல்குணங்களே யியற்ற ***
**தந்தையுந் தாயும் மக்களும் மிக்க**
**சுற்றமும் சுற்றி நின்றகலாப்**
**பந்தமும் * பந்தமறுப்பதோர் மருந்தும்**
**பான்மையும், பல்லுயிர்க்கெல்லாம் ***
**அந்தமும் வாழ்வுமாய வெம்பெருமான்**
**அரங்கமா நகரமர்ந்தானே.** (உ)

| | |
|---|---|
| இந்திரன் பிரமன் ஈசன் என்ற இவர்கள் | இந்திரன் பிரமன் ருத்ரன் எனப்படுகிற இத்தேவர்கள் |
| எண் இல் | கணக்கில்லாத |
| பல் குணங்களே இயற்ற | பலதிருக்குணங்களையும் சொல்லித்துதிக்க (ப் பெற்றவனாய்), |
| பல் உயிர்க்கு எல்லாம் | ஜீவராசிகளுக்கெல்லாம் |
| தந்தையும் | தகப்பனும் |
| தாயும் | மாதாவும் |
| மக்களும் | பிள்ளைகளும் |
| மிக்க சுற்றமும் | அளவிறந்த ஜ்ஞாதிகளும் |
| சுற்றி நின்று அகலா பந்தமும் | சூழ்ந்து கொண்டிருந்து விட்டுப்பிரிய மாட்டாத பந்துவர்க்கமும் |
| பந்தம் அறுப்பது ஓர் மருந்தும் | ஸம்ஸாரபந்தத்தை அறுக்கவல்ல ஒரு மருந்தும் |
| பான்மையும் | (ஸம்ஸாரபந்தமற்றபின் விளையக்கூடிய) நிர்மல ஸ்வபாவமும் |
| அந்தமும் | விநாசமும் |
| வாழ்வும் | வாழ்ச்சியும் |
| ஆய | தானேயாயிருப்பவனை |
| எம் பெருமான் | ஸ்வாமியானவன் |

அரங்கம் மா நகர் அமர்ந்தான்—.

* * *—"இந்திரன் பிரமனீசனென் றிவர்கள் எண்ணில் பல் குணங்களே யியற்ற அரங்கமா நகர் அமர்ந்தான்" என்று அந்வயிப்பது. இந்திரனென்றும் நான்முகனென்றும் பரமசிவனென்றும் சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற தேவர்கள் அஹங்காரமொழிந்தவர்களாய்ப் பல திருக்குணங்களையும் சொல்லித் துதித்துக்கொண்டு ஆச்ரயிக்கத் திருவரங்கத்திலே சயனித்தருளும் பெருமான் எப்படிப்பட்டவனென்னில்; பிராணிகளுக்கெல்லாம் ஹிதமே நடத்தக்கடவனை பிதாவும், ப்ரியத்தையே நடத்தக்கடவளான தாயும், நரகத்தைக்கடத்தும் புத்திரர்களும், அளவிறந்திருந்துள்ள ஜ்ஞாதிவர்க்கமும், பக்கம்விட்டு நீங்காத பந்துவர்க்கமுமாக எல்லா வுறவுமுறையாயிருப்பவன்; மாறிமாறிப் பலபிறப்பும் பிறப்பதாகிற இந்த ஸம்ஸாரபந்தத்தை அறுக்கவல்ல மருந்தாயிருப்பவன்; இந்த ஸம்ஸாரபந்தம் அற்றால் இருக்கக்கூடிய நிஷ்கள ஸ்வபாவமாயிருப்பவன்; ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் கடவனாயிருப்பவன்.

ஈசன் என்கிற ருத்ரனை முதலில் குறிப்பிடாமல் இந்திரனைக் குறிப்பிட்டதற்குக் கருத்து—இந்திரனுக்குப் போலவே மற்றையோர்க்கும் பரத்துவம் இல்லை என்பதாம். எம்பெருமானை வணங்கி வழிபடுந்தன்மையில் இந்திரனோடு பிரமனோடு ஈசனோடு வாசியில்லை யென்றவாறு.

**பந்தம்**—'ப³ந்த⁴:' என்ற வடசொல் விகாரம். **பான்மை**—வந்தேறியல்லாத ஸ்வபாவம். .... .... .... (உ)

**மன்னுமாநிலனும் மலைகளுங் கடலும்**
**வானமுந் தானவருலகும் ***
**துன்னுமாயிருளாய்த் துலங்கொளி சுருங்கித்**
**தொல்லை நான்மறைகளும் மறைய ***

பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கிப்
பிறங்கிருள் நிறங்கெட * ஒருநாள்
அன்னமாயன்றங் கருமறை பயந்தான்
அரங்கமா நகரமர்ந்தானே. (௩)

| | | | |
|---|---|---|---|
| மன்னு மா நிலனும் | ஸ்தாவரமான பெரிய பூமியும் | தொல்லை நால் மறைகளும் மறைய | பழைய நால்வேதங்களும் மறைந்து போக, |
| மலைகளும் | மலைகளும் | பின்னும் | மீண்டும் |
| கடலும் | ஸமுத்ரங்களும் | வானவர்க்கும் | தேவர்களுக்கும் |
| வானமும் | ஆகாசமும் | முனிவர்க்கும் | ரிஷிகளுக்கும் |
| தானவர் உலகும் | அசுரர்களினிருப்பிடமும் (ஆகிய இவையெல்லாம்) | நல்கி | அருள்கூர்ந்து |
| துன்னு மா இருள் ஆய் | நெருங்கிய பேரிருள் மூடப் பெற்றனவாய் | பிறங்கு இருள் நிறம் கெட | நிபிடமான இருள் நீங்கும்படியாக |
| | | அன்று ஒருநாள் அங்கு—; | |
| துலங்கு ஒளி சுருங்கி | விளங்கும் பிரகாசம் மழுங்கி | அரு மறை பயந்தான் | அரிய வேதங்களை உபகரித் தருளினவன் |
| | | அரங்கம் மா நகர் அமர்ந்தான்—, | |

* * *—ஹம்ஸரூபியாய் அவதரித்து வேதங்களை உபகரித்த பெருமான் அரங்கமா நகரமர்ந்தானென்கிறார். அன்னமா யவதரிப்பானேன்? என்னில்; முன்னொருகாலத்தில் மதுகைடபரென்ற அசுரர்கள் பிரமதேவனிடத்திலிருந்து வேதங்களை அபஹரித்துக்கொண்டு கடலில் முழுகி மறைந்துவிட, ஞானவொளியைத்தரும் பெருவிளக்கான வேதங்கள் ஒழிந்தமைபற்றி உலகமெங்கும் பேரிருள்மூடி நலியாநிற்க, பிரமன் முதலியோரனைவரும் கண்கெட்டவர்போல யாதொன்றும் செய்யவறியாமல்திகைத்து வருந்துவதுகண்டு திருவுள்ள மிரங்கித் திருமால் கடலினுட்புக்கு அவ்வசுரர்களைத்தேடிக் கண்டுபிடித்துக் கொன்று வேதங்களை மீட்டுக்கொணர்ந்து ஹம்ஸரூபியாய்ப் பிரமனுக்கு உபதேசித்தருளினன் என்ற வரலாறு அறிக. இவ்வரலாறு சிறிது வேறுபடக் கூறுதலுமுண்டு.

பிரமன் வேதங்களைப் பறிகொடுத்து நின்ற காலத்திலே உலகமெல்லாம் இருள்மூடிக்கிடந்தமையை முன்னிரண்டடிகளாலருளிச் செய்தார். (௩)

மாயிருங் குன்றமொன்று மத்தாக
மாசுணமதனோடுமளவி *
பாயிரும்பௌவம் பகடு விண்டலறப்
படுதிரை விசும்பிடைப்பட *
சேயிருவிசும்பும் திங்களுஞ் சுடரும்
தேவரும் தாமுடன் திசைப்ப *
ஆயிரந்தோளாலலைகடல் கடைந்தான்
அரங்கமா நகரமர்ந்தானே. (௪)

| | |
|---|---|
| மா இரு குன்றம் ஒன்று | அகன்றும் உயர்ந்துமிருக்கிற (மந்தரமென்னும்) ஒருமலையை |
| மத்து ஆக | மத்தாகக் கொண்டு |
| அதனொடும் | அம்மலையிலே |
| மாசுணம் | (வாஸுகியென்னும்) நாகத்தை |
| அளவி | சுற்றி, |
| பா இரு பௌவம் | பரந்தும் நீண்டுமிருக்கிற ஸமுத்ரம் |
| பகடு விண்டு அலற | யானைபிளிறுமாபோலே பிளிறவும் |
| படு திரை | உண்டான அலைகள் |
| விசும்பிடை படர | ஆகாசத்திலே சென்றுகிட்டி வியாபிக்கவும் |
| சே இரு விசும்பும் | மிக்க உயரத்திலுள்ள ஸ்வர்க்காதி லோகங்களும் |
| திங்களும் | சந்திரனும் |
| சுடரும் | (மற்றுமுள்ள) தேஜஸ் பதார்த்தங்களும் |
| தேவர் தாமும் | தேவதைகளும் |
| உடன் | ஏககாலத்திலே |
| திசைப்ப | ஆச்சரியப்படவும் |
| அலை கடல் | அலையெறிகின்ற கடலை |
| ஆயிரம் தோளால் | பல திருக்கைகளினால் |
| கடைந்தான் | கடைந்தருளினவன் |

அரங்கம் மா நகர் அமர்ந்தான்—.

* * *—அமரர்கட்கு அமுதமளிக்கக் கடல்கடைந்தருளின பெருமான் அரங்கமா நகரமர்ந்தானென்கிறார். முன்னொருகாலத்தில் ஒரு வித்யாதரமகள் விஷ்ணுலோகத்துச்சென்று திருமகளைப்புகழ்ந்து பாடி அவளால் ஒரு பூமாலை ப்ரஸாதிக்கப்பெற்று மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன் கைவீணையில் தரித்துக் கொண்டு பிரமலோகவழியாய் மீண்டுவந்தாள். அப்போது துர்வாஸ மஹா முனி எதிர்ப்பட்டு அவளை வணங்கித்துதிக்கவே அவள் அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள். அதன் பெருமையை யுணர்ந்து அதனைச் சிரமேற் கொண்ட அம்முனிவன் ஆனந்தத்தோடு தேவலோகத்திற்கு வந்து அப்பொழுது அங்கு வெகு உல்லாஸமாக ஐராவத யானையின்மேற் பவனி வந்துகொண்டிருந்த இந்திரனைக்கண்டு அவனுக்கு அம்மாலையைக் கைநீட்டிக்கொடுத்தான்; அவன் அதனை மாவட்டியினால் வாங்கி அந்த யானையின் பிடரியின்மேல் வைத்தவளவில் அம்மதயானை அதனைத் துதிக்கையாற் பிடித்திழுத்துக் கீழெறிந்து காலால் மிதித்துத் துவைத்தது. அதுகண்டு முனிவரன் கடுங்கோபங்கொண்டு இந்திரனை நோக்கி 'இவ்வாறு செல்வச்செருக்குக்கொண்ட உன்னுடைய ஐச்வரியங்களெல்லாம் கடலில் ஒளிந்துவிடக்கடவன' என்று சபிக்க, உடனே தேவர்களின் செல்வம்யாவும் ஒழிந்தன; ஒழியவே அசுரர் வந்து பொருது அமரரை வென்றனர். பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி அசுரர்களையுந் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாகநாட்டி வாஸுகியென்னும் மஹாநாகத்தைக் கடைகயிறுகப் பூட்டிப் பாற்கடலைக் கடையலாயினர்: அப்பொழுது வாஸுகியின் வாலைப் பிடித்துக்கொண்ட தேவர்களும் தலையைப் பிடித்துக்கொண்ட அசுரர்களுமாகிய இருதிறத்தாரும் அதனை வலியப்பிடித்து இழுத்துக் கடையவல்ல வலிமையில்லாதவராய் நிற்க, அது நோக்கி அத்திருமால் தான் ஒரு திருமேனியைத் தரித்துத் தேவர்கள் பக்கத்திலேயும் வேறொரு திருமேனியைத்தரித்து அசுரர்கள் பக்கத்தி

லேயும் நின்று வாஸுகியின் வாலையும் தலையையும் பிடித்து வலமும் இடமுமாக இழுத்துக்கடைந்தனன் என்ற வரலாறு இங்கு அறியத்தக்கது.

**பகடு விண்டு அலற**—'பகடு' என்னுஞ் சொல்லுக்கு உள்ள பல பொருள்களில் 'யானை' என்னும் பொருள் இங்குக்கொள்ளவுரியது. உவமவுருபு தொக்கியிருக்கின்றதென்க. **விண்டு**—வாய்விரிந்து.

**"ஆயிரந்தோளால் அலைகடல் கடைந்தான்"** என்கிறாரே, இப்படி உண்டோ? என்னில்; "நாலு தோள்கொண்டு வ்யாபரித்தபடிதான் ஆயிரந் தோள்கொண்டு வ்யாபரித்தானென்னலாம்படியாய்த்து" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்திகண்டு தெளிக. .... .... .... .... .... (௪)

**எங்ஙனேயுய்வர்? தானவர் நினைந்தால்**
**இரணியனிலங்கு பூணகலம் ***
**பொங்குவெங்குருதி பொன்மலை பிளந்து**
**பொழிதருமருவியொத் திழிய ***
**வெங்கண்வாளெயிற்றோர் வெள்ளிமாவிலங்கல்**
**விண்ணுறக் கனல்விழித் தெழுந்தது ***
**அங்ஙனேயொக்க வரியுருவானான்**
**அரங்கமா நகரமர்ந்தானே.** (௫)

| | |
|---|---|
| தானவர் | அசுரர்கள் |
| நினைந்தால் | (இரணியன் பட்டபாட்டைச்) சிந்தித்தார்களாகில் |
| எங்ஙனே உய்வர் | எப்படி உயிர்தரித் திருப்பார்கள்!; |
| இரணியன் | ஹிரண்யாஸுரனுடைய |
| பூண் இலங்கு அகலம் | ஆபரணங்கள் விளங்கப் பெற்ற மார்வில் நின்றும் |
| பொங்கு வெம் குருதி | பொங்குகின்ற உஷ்ணமான ரத்தமானது |
| பொன் மலை பிளந்து பொழிதரும் அருவி ஒத்து | மேருமலையைப் பிளந்து கொண்டு வெள்ள மிடுகின்ற அருவி போன்று |
| இழிய | பெருகும்படியாக, |
| வெம் கண் | தீக்ஷணமான கண்களையும் |
| வாள் எயிறு | வாள்போன்ற பற்களையும் உடையதாய் |
| மா | பெரிதான |
| ஓர் வெள்ளி விலங்கல் | ஒரு வெள்ளிமலையானது |
| விண் உற | ஆகாசத்தைக்கிட்டி |
| கனல் விழித்து | தீவிழிவிழித்து |
| எழுந்தது அங்ஙனே ஒக்க | எழுந்தால் எப்படி யிருக்குமோ அப்படிப் பட்டதான |
| அரி உரு ஆனான் | நரஸிம்ஹாவதார மெடுத்தவன் |
| அரங்கம் மா நகர் அமர்ந்தான்—. | |

* * *—சிறுக்கனைக் காத்தருள நரசிங்கவுருக்கொண்டு இரணியனுடலைப் பிளந்த பெருமான் அரங்கமா நகரமர்ந்தா னென்கிறார்.

இவ்வவதார ப்ரக்ரியையை வாய்விட்டுச் சொல்லுவதற்கு முன்னே **"எங்ஙனே உய்வர் தானவர் நினைந்தால்"** என்றருளிச்செய்த அழகு வியக்கத்

தக்கது. நம்மைப்போலே அநுகூலித்து, ப்ரஹ்லாதனைப்போலே 'இது நமக்காகச் செய்த செயல்' என்றிருப்பார் உஜ்ஜீவித்துப்போவர்கள்; சத்ருபக்ஷமான அஸுரவர்க்கம் இவ்வரலாற்றை நெஞ்சால் நினைத்தமாத்திரத்திலே இடிவிழுந்தாற்போலே உக்கிப்போவர்கள் என்றவாறு.

இரணியனுக்குப் பொன்னன் என்று பெயருண்டு; அவனுடம்பு பொன்னிறமாயிருக்கும்; அதில் நின்று ரத்தவெள்ளம் பாய்வதானது பொன்மலை பிளந்து அருவிபெருகுவதொக்குமென்கிறார்.

நரஸிம்ஹமூர்த்தி வெண்ணிறங்கொண்டதாதலால் அதற்குவெள்ளிமலையை உவமைகூறினர். .... .... .... .... .... (கு)

ஆயிரங்குன்றம் சென்று தொக்கனைய
அடல்புரை யெழில் திகழ் திரடோள் *
ஆயிரந்துணிய வடல் மழுப்பற்றி
மற்றவ னகல்விசும் பணைய *
ஆயிரம்பெயராலமரர் சென்றிறைஞ்ச
அறிதுயி லலைகடல் நடுவே *
ஆயிரஞ்சுடர்வாயரவணைத்துயின்றான்
அரங்கமா நகரமர்ந்தானே. (அ)

| | |
|---|---|
| ஆயிரம் குன்றம் சென்று தொக்கனைய | ஆயிரம்மலைகள் நெருங்கச் சேர்ந்தாற்போலே யிருக்கப்பெற்றவையும் |
| அடல் புரை | யுத்தத்திற்குத் தகுதியானவையும் |
| எழில் திகழ் | அழகு பொலிந்தவையும் |
| திரள் தோள் ஆயிரம் | திரண்டவையுமான (கார்த்தவீர்யார்ஜுநனுடைய) தோள்களாயிரமும் |
| துணிய | அறும்படியாக |
| அடல் மழு பற்றி | தீக்ஷ்ணமான மழுப்படையைக் கையிற் கொண்டு |
| மற்றவன் | அந்தக்கார்த்தவீரியார்ஜுநனை |
| அகல் விசும்பு அணைய | விசாலமான வீரஸ்வர்க்கத்தையடையச் செய்து (அதன்பின்) |
| அமரர் | தேவர்கள் |
| சென்று | கிட்டி |
| ஆயிரம் பெயரால் இறைஞ்ச | ஸஹஸ்ரநாமங்களைச் சொல்லித் துதிக்க |
| அலை கடல் நடுவே | அலையெறிகின்ற ஸமுத்ரமத்யத்தில் |
| சுடர் | ஒளிபொருந்திய |
| ஆயிரம் வாய் | ஸஹஸ்ரமுகங்களையுடைய |
| அரவு அணை | திருவனந்தாழ்வானாகிற திருப்பள்ளியிலே |
| அறிது துயில் துயின்றான் | யோகநித்திரை புண்ணும பெருமான் |

அரங்கம் மா நகர் அமர்ந்தான்—.

* * *—உலகத்திலே எவரும் அழிப்பவரில்லாமையால் கொழுத்துத் திரிந்து கொடுமையியற்றி வந்த க்ஷத்ரிய வம்சங்கள் பலவற்றை நாசஞ்செய்யும்பொருட்டு நாராயணமூர்த்தி ஜமதக்நி முனிவரது மனைவியான ரேணுகையினிடம் இராம

னாய்த் திருவவதரித்துப் பரசு என்னும் கோடாலிப்படையை ஆயுதமாகக் கொண்டு அதனாற் பரசுராமனென வழங்கப்பெற்ற பெருமான் அரங்கமாநக ரமர்ந்தான் என்கிறார்.

கார்த்தவீர்யார்ஜுநனைப் பற்றிப் பேசுகிறார் முதலடியில். இவ்வர்ஜுநன் ஒருகாலத்தில் ஸேனையுடனே வனத்திற்சென்று வேட்டையாடிப் பரசுராமரது தந்தையான ஜமதக்நி முனிவரது ஆச்ரமத்தை யடைந்து அவரனுமதியால் அங்கு விருந்துண்டு மகிழ்ந்து மீளுகையில், அவரிடமிருந்த காமதேநு அவர்க்குப் பல வளங்களையும் எளிதில் சுரந்தளித்தமை கண்டு அதனிடம் ஆசை கொண்டு அப்பசுவை அவரனுமதியில்லாமல் வலியக் கவர்ந்துபோக, அதனை யறிந்த அப்பார்க்கவராமர் பெருங்கோபங்கொண்டு சென்று கார்த்த வீரியனுடன் போர்செய்து அவனது ஆயிரந்தோள்களையும் தலையையும் தமது கோடாலிப்படையால் வெட்டி வீழ்த்தி வெற்றிகொண்டனரென்ற வரலாறு முன்னடிகட்கு அறியத்தக்கது.

முதலடியில் கார்த்தவீரியனது வலிமையை மிகவும் பாராட்டிக் கூறியிருத்தல் நன்கு பொருந்தும்; பெருவீரனென்று பேர்பெற்ற இராவணனையும் பங்கப்படுத்தின பெருந்தோள் வலியுடையானன்றோ இவன். இராவணன் திக்விஜயஞ் செய்து வருகிறபொழுது கார்த்தவீர்யார்ஜுநனது மாஹிஷ்மதி நகரத்திற்குச் சென்று போர்செய்ய முயலுகையில் அங்குள்ளார் 'எங்களரசன் தனக்கு உரிய மாதர்களுடனே போய் நர்மதா நதியில் ஜலக்ரீடை செய்கின்றான்' என்றுசொன்னதனால், உடனே இராவணன் அங்கிருந்து நர்மதாநதியைச் சேர்ந்து அதில் நீராடிக் கரையில் மணலாற் சிவலிங்கத்தையமைத்துப் பிரதிஷ்டை செய்து பூஜிக்கும்போது, அந்த நதியில் மேற்கே இறங்கியுள்ள கார்த்தவீரியன் தனது நீர்விளையாட்டுக்கு அந்நீர்ப்பெருக்குப் போதாதென்ற கருத்தால் அந்நீரைத் தனது ஆயிரங்கைகளுள் ஐந்நூற்றினால் தடுத்து அந்நீரை மிகுவித்து மற்றை ஐந்நூறு கைகளைக்கொண்டு பல்வகை விளையாட்டுக்கள் நிகழ்த்துகின்றதனால் எதிர் வெள்ளமாகப் பொங்கிவருகின்ற நீர்ப்பெருக்குத் தனது [இராவணனது] சிவலிங்கத்தை நிலைகுலையச் செய்ததுபற்றிக் கடுங்கோபங்கொண்டு ராக்ஷஸ ஸேனையுடனே சென்று அவ்வர்ஜுநனை எதிர்த்துப் போர்செய்ய, அவன் தனது ஆயிரங்கைகளுள் இருபதினால் இராவணனது இருபது கைகளைப் பிடித்துக் கொண்டு மற்றைய கைகளால் அவனைப் பலவாறு வருத்தித் தனது ஆற்றலால் எளிதிற்கட்டித் தனது பட்டணத்திற் கொண்டுபோய்ச் சிறையில் வைத்திட்டனனென்ற வரலாற்றினால் இவனது பராக்ரமம் ப்ரஸித்தம்.

**அகல் விசும்பு அணைய**=பெருமான்கையினால் போரில் உயிர்துறந்தவன் வீரஸ்வர்க்கம் சேரக்கடவனென்க.

தேவர்களையுமுட்பட நலிந்துகொண்டு கொழுத்துக்கிடந்த இவன் மாண்டு போகவே, பின்பு தேவர்கள் மனமகிழ்ந்து திருப்பாற்கடலிற் சென்று பெரு

மானைத் துதிக்கக் கேட்க வேணுமோ? அது சொல்லுகிறது பின்னடிகளில். திருவாய்மொழியில் " ஐந்தலைப் பைந்தலையாடரவணைமேவிப் பாற்கடல் யோகநித்திரை, சிந்தைசெய்த வெந்தாய் " என்கிறார் நம்மாழ்வார்; இவர் " ஆயிரஞ்சுடர் வாயரவணைத் துயின்றான் " என்கிறார்; இவ்வெண்ணில் ஒரு நிர்ப்பந்தமில்லை; திருவனந்தாழ்வானுக்கு மகிழ்ச்சியின் மிகுதியினால் வாய்கள் பல்லாயிரமாகவும் பணைக்குமென்பு. .... .... .... (௬)

சுரிகுழல் கனிவாய்த் திருவினைப்பிரித்த
கொடுமையிற் கடுவிசையரக்கன் *
எரிவிழித்திலங்கு மணிமுடி பொடிசெய்து
இலங்கை பாழ்படுப்பதற்கெண்ணி *
வரிசிலைவளைய வடுசரந் துரந்து
மறிகடல் நெறிபட * மலையால்
அரிகுலம்பணிகொண்டலைகட லடைத்தான்
அரங்கமா நகரமர்ந்தானே. (எ)

| | |
|---|---|
| சுரி குழல் | சிறந்த கூந்தலையும் |
| கனி வாய் | கொவ்வைக்கனிபோன்ற அதரத்தையும் உடையளான |
| திருவினை | பிராட்டியை |
| பிரித்த | வேறுபடுத்தின |
| கொடுமையில் கடு விசை | கொடுமையில் பெரிய வேகத்தையுடையனான |
| அரக்கன் | இராவணனுடைய |
| எரி விழித்து இலங்கு மணி முடி | அக்கிபோன்று விளங்கின மணிகளழுத்தின கிரீடங்களை |
| பொடி செய்து | பொடிபடுத்தி |
| இலங்கை | லங்காபுரியை |
| பாழ்படுப்பதற்கு எண்ணி | பாழாக்கிவிடவேணுமென்று ஸங்கல்பித்து |
| (கடலைக் கடக்கவேண்டிக் கடலரசனைநோக்கி) | |
| வரி சிலை வளைய | அழகியவில்லைவளைத்து |
| அடு சரம் துரந்து | கொலையம்புகளைப் பிரயோகித்து, (அவ்வளவிலே) |
| மறி கடல் நெறிபட | அலைமடிகின்ற கடல் வழிபட்டு அமைந்திட |
| அரி குலம் பணி கொண்டு | வாநரஸமூஹங்கள் கைங்கரியம் செய்யப்பெற்று |
| அலை கடல் | அலைகடலை |
| மலையால் | மலைகளினால் |
| அடைத்தான் | அணைகட்டின பெருமான் |
| அரங்கம் மா நகர் அமர்ந்தான்—. | |

* * *—இராவணன் முடிய இலங்கை பாழ்பட வானரமுதலிகளைத் துணைகொண்டு கடலில் அணைகட்டின பெருமான் அரங்கமாநகரமர்ந்தான் என்கிறார்.

**சுரிகுழல்கனிவாய்த் திரு**=பிராட்டியின் அழகைக்கண்டால் 'இவ்வஸ்து புருஷோத்தமன் அநுபவிக்கத்தகும்' என்றிருக்க வேண்டியிருக்க, பாவி தனக்கென்றபிமானித்துக் கெட்டானே! என்கிற வருத்தம் தோன்றும்.

**திருவினைப் பிரித்த**=பிராட்டி தன்னைப்பற்றிச் சொல்லிக் கொள்ளும்போது " அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா—அநந்யா ராகவேணு

ஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" [ஸூர்யனும் ஒளியும்போலே நானும் இராமனும் ஏகதத்துவம்] என்றாள்; பிராட்டியைப் பற்றி இராமபிரான் சொல்லும் போதும் "அநந்யாஹி மயா ஸீதா—அநந்யாஹி மயா ஸீதா" [பிராட்டி என்னில் வேறுபடாதவள்] என்றான்; ஆக இருவர் கருத்தாலும் ஏகதத்துவமாகிய இத்திவ்ய தம்பதிகளைப் பத்துமாதம் பிரித்து வைத்தானே பாவி!. இவனிலும் மிக்க கொடியானுண்டோவுலகில். இப்படிப்பட்ட கொடியவன் தலைசாயவும் இலங்கை சுடுகாடாகவும் கடலை வழிப்படுத்திச் சென்று பெருமான் அந்த ச்ரமமெல்லாம் தீரத் திருவரங்கத்தரவணையில் திருக்கண் வளர்கின்றானென்றாராயிற்று.

**வரிசிலைவளைய அடுசேரந்துரந்து**—கடல் கடக்கவேண்டிய பெருமாள் அக்கடலரசனாகிய வருணனைப் பிரார்த்தித்து அங்கே தர்ப்பசயனத்தில் படுத்து ஏழு நாள்வரையில் ப்ராயோபவேசமாகக் கிடக்கவும் ஸமுத்ரராஜன் அப்பெருமானது மஹிமையை அறியாமல் உபேக்ஷையாயிருக்க ஸ்ரீராமன் அதுகண்டு கோபங்கொண்டு அனைவரும் நடந்து செல்லும்படி கடலை வற்றச் செய்வேனென்று ஆக்நேயாஸ்த்ரத்தைத் தொடுத்தனனே, அதனைச் சொல்லுகிறது. ஆகவே '**சரந்துரந்து**' என்றது பாணப்ரயோகஞ் செய்ய முயன்று என்றபடி.

**அரிகுலம்**—'ஹரிகுலம்' என்ற வடசொல்திரிபு. ஹரி—குரங்கு. .... .... .... .... (எ)

ஊழியாயோமத்துச்சியாய் ஒருகா
லுடையதே ரொருவனாய் * உலகில்
சூழிமால் யானைத்துயர்கெடுத்து
இலங்கைமலங்க வன்றடுசரந்துரந்து *
பாழியால்மிக்க பார்த்தனுக்கருளிப்
பகலவனொளிகெட * பகலே
ஆழியாலன்றங் காழியைமறைத்தான்
அரங்கமா நகரமர்ந்தானே. (அ)

| | |
|---|---|
| ஊழி ஆய் | காலம்முதலிய ஸகல பதார்த்தங்களுக்கும் நிர்வாஹகனாய் |
| ஓமத்து உச்சி ஆய் | யஜ்ஞங்களுக்குத்தலைவனாய் |
| ஒருகால் உடையதேர் ஒருவன் ஆய் | ஒற்றைச்சக்கரத்தேர் வலவனான ஸூர்யனுக்கு அந்தராத்மாவாய் |
| உலகில் | இவ்வுலகத்திலே, |
| சூழி மால் யானை | முகபடாத்தையுடைத்தாய்ப் பெரிதான ஸ்ரீகஜேந்திரத்தினுடைய |
| துயர் | துன்பத்தை |
| கெடுத்து | போக்கினவனாய், |
| அன்று | முன்பொருகால் |
| இலங்கை | லங்காபுரியானது |
| மலங்க | பங்கமடையுமாறு |
| அடு சரம் | கொலையம்புகளை |
| துரந்து | பிரயோகித்தவனாய், |
| | அன்று அங்கு—; |

| | | | |
|---|---|---|---|
| பாழியால் மிக்க பார்த்தனுக்கு அருளி | வலிமைமிகுந்த அர்ஜுந னுக்கு அருள்கூர்ந்து | பகலே | பகற்போதிலேயே |
| | | ஆழியால் | சக்ராயுதத்தினால் |
| | | ஆழியை | ஸூர்யனை |
| பகலவன் ஒளி கெட | ஸூர்யன் ஒளிமழுங்கும்படி | மறைத்தான் | மறைத்தவனான பெருமான் அரங்கம் மா நகர் அமர்ந்தான்—. |

* * *—எவ்வமையத்திலும் ஆச்ரிதரைக் காத்தருள்வதிலேயே நோக்குடைய பெருமான் அரங்கமாநகரமர்ந்தானென்கிறார். மஹாபாரத யுத்தத்தில் பதின்மூன்றாநாளிலே அர்ஜுந புத்ரனான அபிமன்யுவைத் துரியோதனனது உடன்பிறந்தவள் கணவனான ஸைந்தவன் கொன்றுவிட, அங்ஙனம் தன்மகனைக் கொன்ற அந்த ஜயத்ரதனை மற்றைநாள் ஸூர்யாஸ்தமனத்திற்குள் தான் கொல்லாவிடின் தீக்குதித்து உயிர்விடுவதாக அர்ஜுநன் சபதஞ்செய்ய, அதனையறிந்த பகைவர்கள் பதினான்காநாட் பகல் முழுவதும் ஜயத்ரதனை வெளிப்படுத்தாமல் ஸேனையின் நடுவே நிலவறையில் மறைத்து வைத்திருக்க, அர்ஜுநனது சபதம் பொய்த்துவிடுமேயென்று சிந்தித்த கண்ணபிரான் ஸூர்யனை அஸ்தமிப்பதற்குச் சில நாழிகைக்கு முன்னமே தன் சக்ராயுதத்தால் மறைத்துவிட, அப்பொழுது எங்கும் இருளடைந்ததனால் அர்ஜுநன் அக்நிப்ரவேசஞ் செய்யத் தொடங்க, அதனைக்களிப்போடு காணுதற்குத் துரியோதனாதியருடனே ஜயத்ரதன் வந்து எதிர்நிற்க, அச்சமயத்திற் கண்ணன் திருவாழியை வாங்கிவிடவே, பகலாயிருந்ததனால் உடனே அர்ஜுநன் ஜயத்ரதனைத் தலைதுணித்தனனென்ற கதை பின்னடிகட்கு அறியத்தக்கது.

**ஓமத்து உச்சியாய்**=ஓமம்—ஹோமம்; யாகமென்றபடி. **உச்சி** என்றது—பிரதானன் என்றபடி. "**அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா**—அஹம்ஹி ஸர்வ யஜ்ஞாநாம் போக்தா" என்றும் "**போக்தாரம் யஜ்ஞதபஸாம்**—போக்தாரம் யஜ்ஞதபஸாம்" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வயஜ்ஞ ஸமாராத்யன் என்றவாறு.

**ஒரு காலுடையதேரொருவனாய்**=ஒற்றைச்சக்கரம் பூண்ட தேரையேறி நடத்துமவன் ஸூர்யன்; அவனுக்கு அந்தர்யாமி. "**த்யேயஸ்ஸதா ஸவித்ருமண்டல மத்யவர்த்தீ**" என்பது முணர்க.

**சூழி மால்யானை**=சூழியாவது முகபடாம். பிங்கல நிகண்டில் 1287 காண்க. யானையின் முகப்போர்வை. காட்டில் திரிந்து கொண்டிருந்த கஜேந்திராழ்வானுக்கு முகபடாம் இராதாயினும் உரிமைபற்றிய விசேஷணமிடுதல் தமிழ்வழக்காம். (அ)

பேயினார்முலையூண் பிள்ளையாயொருகால்
　　பெருநிலம் விழுங்கி * அதுமிழ்ந்த
வாயனாய் மாலாயாலிலைவளர்ந்து
　　மணிமுடி வானவர் தமக்குச்
சேயனாய் * அடியேற்கணியனாய்வந்து
　　என்சிந்தையுள் வெந்துய ரறுக்கும் *
ஆயனாயன்று குன்றமொன் றெடுத்தான்
　　அரங்கமா நகரமர்ந்தானே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| பேயின் | பூதனையென்னும் பேய்ச்சியினுடைய | மணி முடி வானவர் தமக்கு | மணிமுடி யணிந்த தேவதைகளுக்கு |
| ஆர் | (விஷம்) நிறைந்த | சேயன் ஆய் | எட்டாதவனாய் |
| முலை | முலையை | அடியேற்கு | அடியேனுக்கு |
| ஊண் | உணவாகக் கொண்ட | அணியன் ஆய் வந்து | கிட்டவந்து |
| பிள்ளை ஆய் | பேதையாய் | என் சிந்தையுள் | எனது நெஞ்சிலுள்ள |
| ஒருகால் | (பிரளயம் நேர்ந்த) ஒரு காலத்தில் | வெம் துயர் | வெவ்விய துக்கங்களை |
| பெரு நிலம் | விசாலமான பூமியை | அறுக்கும் | போக்குமவனாய் |
| விழுங்கி | உட்கொண்டு (பிறகு ஸ்ருஷ்டிகாலத்தில்) | அன்று | முன்பொருகால் |
| அது | அந்தப்பூமியை | ஆயன் ஆய் | கோபால க்ருஷ்ணனாகத் திருவவதரித்து |
| உமிழ்ந்த | வெளிப்புறப்படவிட்ட | குன்றம் ஒன்று எடுத்தான் | கோவர்த்தனமலையைக் குடையாக வெடுத்தவனை பெருமான் |
| வாயன் ஆய் | திருப்பவளத்தையுடையனாய், | | அரங்கம் மா நகர் அமர்ந்தான்—. |
| மால் ஆய் | ஸர்வேச்வரனாய், | | |
| ஆல் இலை வளர்ந்து | ஆலந்தளிரில் கண்வளர்ந்தருளினவனாய் | | |

* * *—பேய்வடிவை மறைத்துத் தாய் வடிவுகொண்டு நஞ்சுதீற்றிய முலைப் பால் கொடுத்துக் கொல்லவந்த பூதனையை முலையுண்கிற பாவனையிலே முடித்தவனும், பிரளயகாலத்திலே உலகங்களை உண்டு பிறகு ஸ்ருஷ்டித்வாரா அவற்றை வெளிப்படுத்துமவனும், பிரளயகாலத்திலே உலகையெல்லாம் திருவயிற்றிலே வைத்துச் சிறு குழவியாய் ஆலந்தளிரிற் கண்துயில்பவனும், 'நாம் பெரியோம்' என்று மார்பு நெறித்திருக்கும் பிரமன் சிவன் முதலிய தேவர்களுக்கு எட்டாதவனாய் அடியவர்களான நமக்குக் கையாளா யிருப்பவனும், இப்படிப்பட்ட தனது நிலைமையைத் திருவாய்ப்பாடியில் க்ருஷ்ணாவதாரத்தில் கோவர்த்தனோத்தரண முகத்தால் வெளியிட்டவனுமான பெருமான் அரங்கமாநகரமர்ந்தான் என்றாராயிற்று.

சேயன்—'சேய்மை' என்னும் பண்படியாப் பிறந்த பெயர். .... (௯)

பொன்னு மாமணியும் முத்தமுஞ்சுமந்து
    பொருதிரை மாநதி புடைசூழ்ந்து *
அன்னமாடலவுமலைபுனல் சூழ்ந்த
    அரங்கமா நகரமர்ந்தானை *
மன்னுமாமாட மங்கையர்தலைவன்
    மானவேற் கலியன்வா யொலிகள் *
பன்னியபனுவல் பாடுவார் நாளும்
    பழவினை பற்றறுப்பாரே. (௧௦)

| | |
|---|---|
| பொன்னும் | பொன்களையும் |
| மா மணியும் | சிறந்த ரத்னங்களையும் |
| முத்தமும் | முத்துக்களையும் |
| சுமந்து | திரட்டிக்கொண்டு |
| திரை பொரு | அலையெறிந்துகொண்டு வருகின்ற |
| மா நதி | பெரியநதியாகிய திருக்காவேரியினால் |
| புடை சூழ்ந்து | இருபக்கமும் சூழப்பெற்றும் |
| மாடு | பக்கங்களிலே |
| அன்னம் | அன்னப்பறவைகள் |
| உலவும் | உலாவப்பெற்ற |
| அலை புனல் சூழ்ந்த | அலைகொண்ட தடாகங்களினால் சூழப்பெற்றுமிருக்கின்ற |
| அரங்கம் மா நகர் | திருவரங்கம் பெரிய கோயிலில் |
| அமர்ந்தானை | பொருந்தியுள்ள பெருமானைக்குறித்து, |
| மன்னு மா மாடம் மங்கையர் தலைவன் | சாச்வதமான பெரிய மாடங்களையுடைய திருமங்கையிலுள்ளார்க்குத் தலைவரும் |
| மானம் வேல் | சிறந்த வேலாயுதத்தையுடையவருமான |
| கலியன் | ஆழ்வார் |
| வாய் ஒலிகள் பன்னிய | விஸ்தரித்தருளிச்செய்த |
| பனுவல் | இப்பாசுரங்களை |
| பாடுவார் | பாடுமவர்கள் |
| நாளும் | எந்நாளும் |
| பழ வினை பற்று அறுப்பார் | கல்மஷஸம்பந்த மற்றிருப்பர்கள். |

* * *—*நவமணிகளையுங் கொழித்துக்கொண்டு அலையெறிந்து வருகின்ற திருக்காவேரியினால் சூழப்பட்டதும் அன்னப்பறவைகள் களித்து விளையாடப் பெற்ற சந்த்ரபுஷ்கரிணி முதலிய தீர்த்தங்களால் சூழப்பட்டதுமான திருவரங்கம் பெரியகோயிலில் திருக்கண் வளர்ந்தருளாநின்ற பெருமானைக் குறித்துத் திருமங்கையாழ்வாரருளிச் செய்த இப்பாசுரங்களைப் பாடுமவர்கள் முன்னைத் தீவினைகளை முற்றும் வேரறுத்திடுவர்கள்—எம்பெருமானுக்கு நித்யகைங்கரியம் பண்ணப் பெறுவர்களென்றவாறு.*

**பொன்னும் மாமணியும் முத்தமும்**—*பொன்னும் முத்தும் நவமணிகளிற் சேர்ந்தவையே; அப்படியிருக்க இடையே தனித்துச் சொன்னது—அவ்விரண்டுந்தவிர மற்ற ரத்னங்களுக்கு வாசகமாக. இங்ஙனம் கொள்ளுதலை வடநூலார்* **கோபலீவர்த-ந்யாய** *மென்பர். பெரியாழ்வார் திருமொழியில்* (2—1—2) *"மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர்குலைய* **நூற்றுவரும் பட்டழிய**" *என்றவிடத்து ஸ்ரீமணவாள மாமுனிகள் வியாக்கியானத்திலும் இது காண்க.* .... .... .... .... (கo)

**அடிவரவு:—பண்டை இந்திரன் மன்னு மாயிரும் எங்ஙனே ஆயிரம் சுரி ஊழி பேயினர் பொன்னும் ஏழை.**

**ஏழாந்திருமொழி உரை முற்றிற்று.**

*ஜீயர் திருவடிகளே சரணம்.*

---



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஐந்தாம்பத்து—எட்டாந்திருமொழி.

# ஏழையேதலன்.



**அவதாரிகை:**—எம்பெருமான் அன்பர்களை ஆதரித்த வரலாறுகளில் ஒவ்வொன்றைப் பாசுரந்தோறும் எடுத்துக்கூறி இத்திருமொழியால் திருவரங்கநாதன் திருவடிகளிலே சரணம் புகுகின்றார் ஆழ்வார். குஹப்பெருமாள், சிறியதிருவடி, கஜேந்திராழ்வான், ஸுமுகன், கோவிந்தஸ்வாமி, மார்க்கண்டேயன், ஸாந்தீபிநிமுனிவன், வைதிகன், தொண்டைமான் சக்ரவர்த்தி—ஆகிய இவர்கள் உன்றன் திருவருளுக்கு இலக்கானதுபோல அடியேனும் ஆகவேணுமென்று திருவருளை வேண்டுகிறாராயிற்று.

ஏழை யேதலன் கீழ்மகனென்னா
　　திரங்கி மற்றவற்கின்னருள்சுரந்து *
மாழைமான் மடநோக்கி யுன்தோழி
　　உம்பி யெம்பியென்றொழிந்திலை * உகந்து
தோழன் நீயெனக்கிங்கொழியென்ற
　　சொற்கள் வந்து அடியேன்மனத்திருந்திட *
ஆழிவண்ண நின்னடியிணை யடைந்தேன்
　　அணிபொழில் திருவரங்கத்தம்மானே. (க)

ஆழி வண்ண — கடல்வண்ணனே!

அணிபொழில் திரு அரங்கத்து அம்மானே — அழகிய சோலைகள் சூழ்ந்த திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானே!,

ஏழை ஏதலன் கீழ் மகன் என்னாது — ‘(இவன்) அறிவில்லாதவன், கொலைத்தொழில் புரிகின்றவன், நீசஜாதியிற் பிறந்தவன்’ என்று (குஹனுடைய தாழ்வுகளைக்) கருதாமல்

இரங்கி — (அவன்மீது) கிருபைபண்ணி [அவனை உயிர்த்தோழனாக அங்கீகரித்து]

மற்று — அதற்குமேலே

அவற்கு — அந்தக் குஹப்பெருமாள் விஷயத்தில்

இன் அருள் சுரந்து — இனிமையான கருணை மேன்மேலுமுண்டாகப் பெற்றவனாய்

(அக்குஹனை நோக்கி)

மாழை மான் மட நோக்கி — ‘பேதைமைக்குணமுள்ள மானின் பார்வைபோன்ற கபடமற்ற கண் பார்வையை உடையளான என்மனைவியாகிய இந்த ஸீதை

உன் தோழி — உனக்குத் தோழியாவள்;

| | |
|---|---|
| எம்பி | என் தம்பியான லக்ஷ்மணன் |
| உம்பி | உன் தம்பியாவன் ; |
| என்று | என்றுசொல்லி |
| ஒழிந்திலை | இவ்வளவோடு நீவிட்டிடாதவனாய் |
| உகந்து | மகிழ்ச்சி கொண்டு |
| நீ எனக்கு தோழன் | ' நீ எனக்கு நண்பன் |
| இங்கு ஒழி | இங்கே நின்றிடுவோயாக ' |
| என்ற | என்றும் (நீ ஸ்ரீராமாவதாரத்திற்) சொல்லியருளிய |
| சொற்கள் | வார்த்தைகள் |
| வந்து | கர்ணபரம்பரையாய் என் கேள்விக்கு வந்து |
| அடியேன் மனத்து இருந்திட | அடியேனுடைய நெஞ்சிலே பொருந்தியிருக்க, |
| | (நான் அவற்றில் ஈடுபட்டு) |
| நின் அடி இணை அடைந்தேன் | உனது திருவடிகளிரண்டையும் சரணமாகப் பற்றினேன். |

* * *—ஸ்ரீராமாவதாரத்தில் குஹப்பெருமாள் திறத்தில் நீ செய்தருளின திருவருள் என்னெஞ்சை விட்டு அகலாது என்னை உருக்குகின்றது ; அப்படிப்பட்ட திருவருள் அடியேன் மேலும் செய்தருளத்தக்கது காண் என்கிறார் இம்முதற்பாட்டில்.

கங்கையில் ஓடம்விடுபவனும் ஆயிரம் ஓடங்கட்குத் தலைவனும், கங்கைக் கரையிலுள்ள ச்ருங்கிபேர புரத்திற்கு அதிபதியுமாகிய ஒருவேடர் தலைவனது நாமம் **குஹன்** என்பது ; இராமபிரான் ஸீதாலக்ஷ்மணர்களோடு கூட வநவாஸமெழுந்தருளுங்காலத்து அயோத்திமாநகரை நீங்கிக் கங்கைத்துறை சேர்கையில், மேற்குறித்த குஹன் ஸ்ரீராமனைக் காணும்பொருட்டுக் காணிக்கைகளுடன் அருகில்வந்து சேர்ந்து வணங்கிநிற்க, ஸ்ரீராமன் அவனை நண்பனாக ஏற்று ' இங்கு இரு ' என்று சொல்லி, மிக்க அன்புடன் அவன் கொணர்ந்த காணிக்கைகளையும் உகந்து ' இன்று நீ உனது ஊர்க்குச்சென்று நாளை உதயத்தில் கங்கை கடப்பதற்கு ஓடங்கொண்டுவா ' என்று நியமிக்க, அன்பிற் சிறந்தவனான குஹன் ஸ்ரீராமபிரானை விட்டுப்பிரியமாட்டாதவனாய் ' இங்கேயேயிருந்து இயன்ற அடிமைசெய்வேன் ' என்ன, இராமன் அதற்கு இணங்கி அநுமதிசெய்ய, குஹன் தன் ஸேனைகளுடன் இராமனைச் சூழ்ந்து வில்லுங்கையுமாகப் பாதுகாவல்செய்து நின்றனன் ; மறுநாளுதயத்தில் இராமன் குஹனை ஓடம் கொண்டுவரச் சொன்னபோது, குஹன் பணிந்து ' நாங்கள் பல பணிவிடைகள் செய்ய நீங்கள் இவ்விடத்திலேயே வஸித்தருள வேண்டும் ' என்றுவேண்ட, அதற்கு இராமன் உடன்படாது ' புண்யநதிகளின் ஸ்நானமும் மஹர்ஷிகளின் ஸேவையும் செய்துகொண்டு சிலகாலம் கழிந்தபின்பு மீண்டு உன்னிடம் வருவேன் ' என்று சொல்லி பிறகு, குஹன் கொணர்ந்த ஓடத்திலேறிக் கங்கைகடந்து அப்பாற் செல்லத் தொடங்குகையில் குஹன் மிக்க பரிவுடன் வணங்கி ' அடியேனும் பணிவிடைகள் செய்துகொண்டு உடன்வந்து உதவுவேன் ' என்று விண்ணப்பஞ் செய்ய, ஸ்ரீராமன் அதற்கு இணங்காமல் ' என் மனைவியான இந்த ஸீதை உன் தோழி ; என்தம்பியான இந்த லக்ஷ்மணன் உன் தம்பியே ' என்றும், ' நீ எனது உயிர்த்

தோழன்' என்றும், 'இதுவரை நாங்கள் உடன் பிறந்தோர் நால்வராயிருந்தோம்; இப்பொழுது உன்னுடன் ஐந்துபேராயினோம்' என்றும் ஒற்றுமை நயந்தோன்றக்கூறி, 'உன் சுற்றத்தார் என் சுற்றத்தார்; அவர்கள் உன்னைப் பிரிந்து வருந்தலாகாதாதலால் நீ இங்கேயேயிருந்து அவர்களை மகிழ்விக்கக் கடவாய்; அன்றியும், அயோத்தியாபுரி கெடாமைக்காக அங்குப் பரதனை வைத்தோம்; வழியடி கெடாதபடி இங்கே நீ நில், நான்மீண்டு வடக்குநோக்கி வரும்பொழுது உன்னிடம் வருவேன்' என்றுஞ்சொல்லிக் குஹனை வலியில் நிறுத்திப் பிராட்டியும் இளையபெருமாளுந் தானுமாகச் சித்திரகூடபர்வதத்தை நோக்கிச் சென்றனனென்பது ஸ்ரீராமாயண வரலாறு.

க்ஷத்ரிய ஜாதியில் ஸூர்யகுலத்தில் இக்ஷ்வாகு வம்சத்தில் திருவவதரித்தவனும் சக்ரவர்த்தியின் திருக்குமாரனும் ஸகலைச்வர்ய ஸம்பந்நனும் மஹாபுத்திமானும் பகைவரிடத்தும் அன்பு கொள்பவனுமான இராமபிரான் குஹனை நோக்குங்கால், இவன் இழிவான வேடச்சாதியனென்றும் அதனால் பகுத்தறிவில்லாத அவிவேகியென்றும் அச்சாதிக்கு இயல்பான கொடுமையினால் எல்லாவுயிர்களோடும் பகைமை கொள்பவனென்றும் இகழ்ச்சி கொள்ளவேண்டியது ப்ராப்தமாயிருந்தும் அங்ஙனம் இகழ்ச்சி கொள்ளாது தனது பெருமைக் குணங்களையும் பாராமல் அவனுடன் கலந்து பரிமாறின கருணையை இங்ஙனம் பாராட்டியெடுத்துக்கூறி, ஆழ்வார், 'அவ்வாறே அடியேனிடமுள்ள இழிகுணங்களையும் பொருள்செய்யாது என்னையும் ஆட்கொண்டருள்வன் எம்பெருமான்' என்னும் நம்பிக்கைகொண்டு தாம் அவன் திருவடிகளிற் சரண்புகுந்தமையை வெளியிட்டார்.

**ஏழை, ஏதலன், கீழ்மகன்** என்றவை பேன்மேலும் ஒன்றினும் ஒன்றுமிக்க இழிவாம். "ஏழையேதலன் கீழ்மகனென்னாது" என்ற சொற்போக்கினால், கைவிடுகைக்கு இவ்விழிகுணங்களில் ஒன்றே அமைவதாயிருக்க, அவை பலவும் உளவென்று கண்டும் குஹனிடம் உபேக்ஷைகொள்ளாதிருந்தவன் அருட்கடலான பெருமான் என அவனது நீர்மையின் ஏற்றத்தை விளங்க வைத்தனர். குலத்திலும் செயலிலும் குணத்திலும் குறையொன்றையும் பாராதே தன்பக்கல் அவன்கொண்ட அன்பே காரணமாக அவனிடம் இரங்கியருளினனென்க.

"**ஏழையேதலன் கீழ்மகனென்னாதிரங்கி**" என்பதற்கு "நீசனேன் நிறையொன்றுமிலேன்" என்றாற்போல, 'யான் ஏழை, யான் ஏதலன், யான்கீழ்மகன்' என்று தனது இழிவைப் புலப்படுத்தும் மொழிகளைக் குஹன் கூறுத முன்னமே அவன் பக்கல் இரக்கங்கொண்டு—என்று பொருள் கொள்வதுமுண்டு.

**ஏழை**—அறிவில்லாதவன். இச்சொல்லுக்கு இப்பொருள் எங்ஙனே கிடைக்குமென்னில், "நுண்ணுணர்வின்மை வறுமை அஃதுடைமை, பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்" என்பவாதலால் 'ஏழை' என்ற சொல் அறிவுகேடனென்னும் பொருளதாகும். திருமகள் கணவனும் ஸகலலோகநாதனும் சக்ரவர்த்தி திருமகனுமான ஸ்ரீராமபிரானை நோக்குமிடத்து ச்ருங்கிபேர புராதிபதி

யான வேடர் தலைவனை தரித்ரனென்று சொல்லத் தட்டில்லையாதலால் 'ஏழை' என்ற சொல்லுக்கு—பொருளில்லாத தரித்ரன் என்ற அர்த்தமும் இங்குஏற்றதே யாம்.

**ஏதலன்**—ஏது அலன்; யாதொரு ஸம்பத்துமுடையனல்லாதவன்; இது-அயலானுக்கும் பகைவனுக்கும் வழங்கும். வேடன் பலவுயிர்களையும் கொலை செய்வதையே சாதித் தொழிலாக வுடையனாதலால் பலர்க்கும் ஏதலனாவன்.

**அவற்கு இன்னருள் சுரந்து**—தன் கன்று அணுகுகையிற் பசு இனிய பாலைச் சுரக்குமாறுபோலத் தனது அடியவன் அணுகியவளவில் இனிய கருணையைச் சுரந்தனன் இறைவனென்க.

அருள்சுரந்து பேசின பேச்சின் வரிசை கூறுவது இரண்டாமடி.

**மாழைமான் மடநோக்கி உன்தோழி உம்பி எம்பி**=கள்ளம் கபடமின்றிக் கவலையையும் அச்சத்தையுங் கொள்ளும் மகளிர் கண்ணோக்கிற்கு—வெருண்ட மானின் மருண்ட பார்வையை உவமை கூறுதல் மரபு. இங்கு இது கூறியதனால், குஹனைக்கண்ட வளவில் பிராட்டி மருண்ட நோக்குடையளாயினளென்பது தோன்றும். முன்னே குஹனைப் பார்ப்பதும் உடனே இராமனைப் பார்ப்பதுமாக மான்பார்வைபோலக் கொண்ட சபலமான பார்வைகளால் குஹனை அன்பனாக அங்கீகரிக்கக் குறிப்பிட்டனள் பிராட்டி என்பதும் இங்குத்தோன்றும். அடியார்களைக் கடாக்ஷித்தருள்வதிற் பெருமானைக் காட்டிலும் புருஷகாரமான பிராட்டிக்கு உள்ள முற்பாடு இதில் தோன்றுமென்னலாம். "பேதைமையென்பது மாதர்க்கு அணிகலம்" ஆதலால் பெண்ணரசியான பிராட்டியின் நோக்கம் 'மடநோக்கு' எனப்பட்டது. மடமை—எல்லாம் அறிந்தும் ஒன்றும் அறியாது போலிருக்குந் தன்மை: இது பெண்மைக் குணங்களிலொன்று. மடநோக்கு—மடப்பம் தோன்றும்படியான நோக்கு என்க. **மாழை**—அறிவின்மை, அழகுமாம். "**மடநோக்கி உன்தோழி**" என்றது முதலிய சொற்களால், இராமபிரான் குஹனைத் தனக்குச் சமானனாகக் கொண்டனனென்பது விளங்கிற்று.

**உம்பி, எம்பி** என்றவற்றில் முறையே நீர் யாம் என்ற பகுதிகள் உம் எம் என்று விகாரப்பட்டன. [நன்னூல் உருபு—8.] **பி**—முறைப்பெயர் விகுதி. **ஒழிந்திலை**—முன்னிலையொருமை யிறந்தகால முற்றெச்சம்: ஒழிந்தாயில்லையாய் என்கை. '**இருந்திட**' என்ற செயவெனெச்சம் காரணப் பொருளது; என் மனத்தில் இருத்தலால் என்கை.

ஆக இப்பாட்டால்—கானவரில் தலைவனான குஹப்பெருமானுக்கு வானவரில் தலைவனான இராமபிரான் திருவருள் புரிந்தமையை முன்னிட்டுத் திருவரங்கநாதன் திருவடிகளிற் சரணம் புகுந்தாராயிற்று. .... .... (க)

**வாதமாமகன் மற்கடம் விலங்கு**
**மற்றோர்சாதியென் றொழிந்திலை * உகந்து,**
**காதலாதரம் கடலினும் பெருகச்**
**செய்தகவினுக்கில்லை கைம்மாறென்று ***

கோதில் வாய்மையினுயோடுமுடனே
உண்பன் நானென்ற வொண்பொருள் * எனக்கும்
ஆதல்வேண்டுமென்றடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே. (௨)

| | | | |
|---|---|---|---|
| அணி பொழில் திரு அரங்கத்து அம்மானே!—; | | கைம்மாறு இல்லை | பிரதியுபகாரம் இல்லை' |
| வாதம் மா மகன் | வாயுதேவனதுபெரிய குமாரனான அனுமான் | என்று | என்று திருவுள்ளம்பற்றி |
| மற்று ஓர் சாதி விலங்கு மற்கடம் என்று ஒழிந்திலை | வேறுஜாதியிற் பிறந்தவனென்றும், அதிலும் பகுத்தறிவில்லாத மிருகமென்றும், அதிலும் பலவகைப் பொல்லாங்குகளையுடைய குரங்கென்றும் (அவனது இழிகுணங்களைப் பாராட்டி) விட்டிடாதவனாய் | கோது இல் வாய்மையினனொடும் உடனே உண்பன் நான் | 'குற்றமற்ற மெய்ம்மொழிகளையுடையனான உன்னோடு உடனிருந்து உண்பேன்யான்' |
| | | என்ற | என்று (அவ்வனுமானைக் குறித்துக்) கூறியருளின |
| உகந்து | அவனிடம் அன்புவைத்து | ஒண் பொருள் | சிறந்த விஷயம் |
| காதல் ஆதரம் கடலினும் பெருக | அன்பும் ஆசையும் கடலைக் காட்டிலும் அதிகமாக வளர | எனக்கும் ஆதல் வேண்டும் என்று | எளியனான அடியேன் விஷயத்திலும் உண்டாக வேண்டுமென்றெண்ணி |
| செய் | (நமக்கு இவன்) செய்த | | |
| தகவினுக்கு | உபகாரங்களுக்கு | | அடி இணை அடைந்தேன்—. |

* * *—சக்ரவர்த்தி திருமகன் சிறியதிருவடியை ஆதரித்தவரலாற்றை முன்னிட்டுக்கொண்டு சரணம் புகுகிறாரிதில். கீழ்ப்பாட்டில்—மநுஷ்யஜாதியிலே குலத்தாலும் குணத்தாலும் குறையநின்ற குஹனிடத்துப் பெருமாள் பேரன்பு காட்டினதைக் கூறிய ஆழ்வார், அப்படி ஸமாநஜாதியுமன்றி விஷமஜாதியாயுள்ள இலங்கைபுமுட்பட அதன் இழிவு பாராதே ஆட்கொண்டு அதன் பக்கல் விசேஷ கடாக்ஷஞ்செய்த பொருளை இப்பாட்டில் எடுத்துக்கூறி ஈடுபடுகிறார். நீ அனுமனிடத்து வரம்புகடந்து அருள்செய்ததுபோல அடியேனிடத்தும் என் இழிவு பாராதே பேரருள் புரியவேண்டுமென்று பிரார்த்திக்கின்றனர்.

ராவணஸம்ஹாரமான பின்பு விபீஷணன் முதலிய அரக்கர்களோடும் ஹநுமான் ஸுக்ரீவன் முதலிய வாநரர்களோடும் ஸீதாலக்ஷ்மணர்களுடனும் புஷ்பக விமானத்திலேறி ஸ்ரீராமபிரான் ஆகாயமார்க்கமாக அயோத்தி நோக்கி மீண்டெழுந்தருளும்போது கங்காநதியும் யமுநாநதியும் சேருமிடமான பிரயாகையில் வஸிக்கின்ற பரத்வாஜமுனிவரது விருப்பத்தின்படி அவராச்ரமத்திலிறங்கி ஸேனைகளுடன் அங்கு விருந்துண்ணச் சம்மதித்து நின்றவளவிலே பரத்வாஜ முனிவர் தமது தவப்பெருமையால், அத்திரளிலுள்ளா ரெல்லார்க்கும் வேண்டிய வளவு உண்கலங்களையும் உணவுகளையும் தெய்விகமாக வருவித்து வெகு ஸம்ப்ரமமாக விருந்து செய்தனர்: அங்ஙனம் இராமனும் அவனைச்சார்ந்தவரனைவரும் தம்

தமக்கென்று பரிமாறிய வாழையிலையில் உண்ணுகின்றபொழுது, எற்கனவே தவணை கடந்துவிடுகின்றதென்று பரதன் வருந்தித் தீக்குதித்து உயிர்துறந்து விடுவனே யென்பதைச் சிந்தித்து, தாம் மீண்டுவந்த செய்தியைப் பரதனிடஞ் சொல்லி அவன் கருத்தை உணர்ந்துகொண்டு விரைந்துவருமாறு அனுப்பப்பட்டுப் பரதனிடஞ் சென்றிருந்த அனுமான் செய்தி கூறி மீண்டனனாக, அச்சமயத்தில் அனுமானுக்காக முனிவன் தனியே இலையை மறுபடியும் வருவிக்க வேண்டாதபடி ஸ்ரீராமன் அனுமானைத் தனது எதிரில் இருந்து தனது இலையிலேயே ஒருபகுதியில் உண்ணும்படி நியமித்து அங்ஙனமே அவனுடன் சிலபழங்களை ஸஹபோஜனஞ் செய்தனன் என்ற வரலாறு இங்கு அறியத் தக்கது.

முன்பெல்லாம் வாழையிலையில் தாமரையிலையிற் போலவே இடை நரம்பு இல்லாமலிருந்த தென்றும், இப்பொழுது இராமன் அனுமனைத் தமது எதிரில் உட்காரவைத்துத் தனது இலையின் ஒரு பாதியிலேயே அவன் உண்ணுமாறு அவ்விலை நடுவில் தனது கையால் ஒருவரையறை கீறினனாக, அது முதற் சங்கற்பத்தால் அவ்விலையில் இடைநரம்பு ஏற்பட்டதென்றும் கூறுவதுண்டு. பரதனிடஞ் சென்ற அனுமான் மீண்டு பரத்வாஜாச்ரமத்திற்கு வந்ததாக ஆதிகாவ்யமாகிய ஸ்ரீவால்மீகி ராமாயணத்தில் இல்லையாயினும் புராணாந்தரங்களிலுண்டு. இங்ஙனம் மாறுபடுகின்ற இடங்களில் "இதிஹாஸாந்தர புராணாந்தரங்களிலேயாதல் கல்பாந்தரத்திலேயாதல் உண்டென்று கொள்ளவேணும்; மயர்வற மதிநலமருளப் பெற்ற ஆழ்வார் இப்படி அருளிச்செய்கையாலே" என்று பெரியோர் ஸமாதானங் கூறுதல் உணரத்தக்கது. மற்றோர் இதிஹாஸமாகிய மஹாபாரதத்திலும் பாத்மம் வைஷ்ணவம் கூர்மம்முதலிய புராணங்களிலும் அத்யாத்மராமாயணம்முதலிய நூல்களிலும் ஸ்ரீராமசரித்ரம் சிற்சிலவிடத்து வேறுபடக் கூறியிருத்தல் காணலாம். பரத்வாஜாச்ரமத்திலிருந்து இராமனாற் பரதனிடம் அனுப்பட்ட அனுமான் அங்குச் செய்தி சொல்லிவிட்டு மீண்டு பரத்வாஜாச்ரமத்திற்கு வந்தபின்பு இராமன் அம்முனிவனளித்த விருந்தை ஏற்றனனென்று பாத்மபுராணம் கூறுகின்றது. ஒட்டக்கூத்தர் உத்தரகாண்டத்து அசுவமேதயாகப் படலத்தில் இராமாயண வரலாற்றைச் சுருக்கிக் கூறுமிடத்து "வரதனு மனுமன் தன்னை வரன்முறை யேவலோடும், பரதனை யெரிபுகாமற் பண்ணினன் மீண்ட பின்னர், எரிமணி விமானத்தேறி யவனிநாயகனோடும், அரிமலர்க் குழலினாளு மிராமனுமயோத்தி சேர்ந்தார்" என்றதுங் காண்க.

இராமபிரான் அனுமானுடன் ஸஹபோஜனஞ் செய்த செய்தி வாஸிஷ்ட ராமாயணத்திலுள்ள தென்பர்; (அந்நூல் ஜ்ஞாநவாஸிஷ்டத்திலும் வேறானது; ச்லோகந்தோறும் காயத்ரியின் அக்ஷரங்களை முறையே முதலெழுத்தாகக் கொண்டு தொடங்குவது.)

ஆசார்யஹ்ருதயத்தில் "ம்லேச்சனும் பக்தனானால்" இத்யாதியான பெரிய ஸூத்ரத்தில்—"தூது மொழிந்து நடந்து வந்தவர்களுடைய ஸம்யக் ஸகுண,

**ஸஹபோஜநமும்**" என்ற விடத்து வியாக்கியானத்தில் '**உபகாராய ஸுக்ரீவோ ராஜ்யகாங்க்ஷீ விபீஷண:। நிஷ்காரணாய ஹநுமாந் தத்துல்யம் ஸஹ போஜநம்**=உபகாராய ஸுக்ரீவோ ராஜ்யகாங்க்ஷீ விபீஷண:, நிஷ்காரணாய ஹநுமாந் தத்துல்யம் ஸஹபோஜநம்' என்று திருவுள்ளம்பற்றிக் கோதில் வாய்மையினேடு முடனே யுண்பனேனென்ற பெருமாளோடு பண்ணின ஸஹபோஜநமும்" என்று மணவாள மாமுனிகளருளிச் செய்த ஸ்ரீஸூக்தியில் உதாஹரிக்கப் பட்டுள்ள வசநம் வாஸிஷ்டராமாயணத்திலோ பாத்மோத்தரத்திலோ உள்ள தென்று பெரியோர் கூறுவர். அந்த வசனத்தின் கருத்தாவது—ஸுக்ரீவன் விபீஷணன் முதலானவர்கள் ஒவ்வொரு பிரதிப்ரயோஜநத்தை விரும்பிச் செய் தார்கள்; அங்ஙனன்றியே அனுமான் ஒருவனே அநந்யப்ரயோஜநனுக உதவின னுதலால் அவனேடு உடனுண்பதே நமக்கு ஏற்றது என்பதாம். ஆசார்ய ஹ்ருதயத்தி லருளிச்செய்யும் ரீதியைநோக்குமிடத்து ஸ்ரீராமன் அனுமனேடு ஸஹ போஜநம் செய்தருளினதாகவே நன்கு விளங்கும்.

இப்பாசுரத்தின் வியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளை, "கோதில் வாய்மையினேடு முடனே யுண்பன்நான் என்ற ஒண்பொருள்" என்பதற்கு— ஒருகலத்திலுண்பார்போல உன்னுடனே ஒருநிகராகச் சுகதுக்கங்களை யநுபவிக் கக்கடவேன் யானென்று ஒற்றுமை நயந்தோன்றக்கூறி அவ்வனுமனைத் தழுவிக் கொண்ட சிறந்தவிஷயமென்று வியாக்கியானஞ் செய்தருளினர். இந்த யோஜனை வால்மீகி ராமாயணத்திற்கு இணங்கியதாகும்.

கேஸரியென்னும் வாநரவீரனது மனைவியாகிய அஞ்சநாதேவியின் வயிற்றில் வாயுதேவனருளால் தோன்றியவனுதலால் அனுமான் **வாதமாமகன்** எனப்பட் டான். மற்றொருசமயத்தில் பீமஸேநன் வாயுவினருளால் குந்தியினிடந்தோன்றி யமைபற்றி அவன் வாயுவின் இளையகுமாரனுதலால் அவனைவிலக்க '**மாமகன்**' என்றூர் என்னலாம். மாமகன்=சிறந்த மகன் என்றலுமாம்.

**மற்கடம்**—வடசொல்; பிறர் கைப்பொருளை வலியக் கவர்தல் முதலிய அதன் தன்மைகளையும், உணவு உறவு முதலியன கொள்வதில் யாதொரு நியதி யுங் கொள்ளாது ஞானசிலங்களினின்று விலகி வேண்டியபடி யெல்லாம் ஒழுகுஞ்சாதியிற் பிறந்த தென்பதையும் பாராட்டாமல் அநுக்ரஹஞ்செய்தபடி என்னே! என்கிறூர்.

**காதலாதரம் கடலினும் பெருகச் செய்தகவினுக்குக் கைம்மாறு இல்லை யென்று**=பெருமாளும் பிராட்டியும் பிரிவுத்துயரால் மரணவேதனைப்படுகின்ற ஸமயத்தில் அனுமான் தக்க பல உதவிகள் செய்து இடையூறுகளை யெல்லாம் ஒழித்து அவ்விருவரையும் சேர்த்துவைத்தமை ப்ரஸித்தம். அனுமனுக்குத் தன்பக்கல் உண்டாகிவளர்கின்ற அன்புமிகுதியை இராமபிரான் பாராட்டிக் கூறுவ தாகவும், (அன்றி) அனுமனிடத்து இராமபிரானுக்கு உண்டாகி வளர்ந்த ப்ரீதி விசேஷத்தை ஆழ்வார் பாராட்டிக் கூறுவதாகவும் கொள்ள இடமுண்டு. 'எனக் கும் பிராட்டிக்கும் பிரிவாற்றுமையால் காதலும் ஆதரமும் கடலைக்காட்டிலும்

பெருகுகிற நிலையிலே இவன் செய்த உபகாரத்திற்கு' என்று பெருமாள் திருவுள்ளமாக்கியுரைத்தலும் தகும். **தகவு**—தகுதியான உதவி. "**செய்தகவினுக்கில்லைகைம்மாறு**" என்று சேஷிவிஷயமாக சேஷபூதன் சொல்லவேண்டும் வார்த்தையைத் தலைவனான இராமபிரான் அடியவனான அநுமன்விஷயமாகக் கூறினது, அப்பெருமானது நீர்மைமிகுதியைக் காட்டும்.

**கோதில்வாய்மையினாயொடும்**=வாய்மைக்குக் கோதில்லாமையாவது-கடுமையின்றிச் செவிக்கினிய செஞ்சொல்லாயிருத்தலும் தீமைவிளைக்காமல் நன்மை விளைத்தலும் தனக்கென்று ஒருபயன் கருதாமையுமாம். தன்னிடத்தும் பிராட்டியினிடத்தும் ஸுக்ரீவன் முதலானோரிடத்தும் அநுமன்பேசிய பேச்சுக்களை யெல்லாம் பாராட்டி 'கோதில்வாய்மையினாயொடும்' என்றார். **வாய்மையினாய்**=முன்னிலையொருமைக் குறிப்பு வினையாலணையும் பெயர்; ஆய்—விகுதி; இன்—சாரியை. ஒடும் என்ற உம்மை இசைநிறை.

**ஒண்பொருள் எனக்குமாதல் வேண்டுமென்று அடியிணையடைந்தேன்**=திருவடி பெற்ற பெரிய பேற்றை எளியனாயானும் பெற விரும்புவது வெறும் ஆசையின் காரியமேயாயினும் சரணாகதியினால் ஸாத்யமாகாதது எதுவுமில்லை யென்று தாம் கருதியமை தோன்றும். .... .... .... .... .... (உ)

கடிகொள் பூம்பொழில் காமருபொய்கை
வைகுதாமரை வாங்கிய வேழம் *
முடியும்வண்ணமோர் முழுவலி முதலை
பற்ற மற்றது நின்சரண்நினைப்ப *
கொடிய வாய்விலங்கி னுயிர்மலங்கக்
கொண்ட சீற்றமொன் றுண்டுளதறிந்து * உன்
அடியனேனும் வந்தடியிணையடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே!. (ங)

அணி பொழில் திரு அரங்கத்து அம்மானே ;-

| | |
|---|---|
| கடி கொள் பூ பொழில் | நறுமணங்கொண்ட மலர்கள் நிறைந்த சோலைகளாற் சூழப்பட்ட |
| காமரு பொய்கை | அழகிய பொய்கையிலே |
| வைகு | பொருந்திய |
| தாமரை | தாமரை மலரை |
| வாங்கிய | (அர்ச்சனைக்காகப்) பறித்த |
| வேழம் | யானையானது |
| முடியும் வண்ணம் | மிகுந்த ஆபத்தையடையும்படி |
| ஓர் முழு வலி முதலை பற்ற | மிக்க வலிமையையுடையதொரு முதலையானது பிடித்துக்கொள்ள |
| அது | அதனால் வருந்திய அந்த யானையானது |
| நின் சரண் நினைப்ப | (தன் வலிமையால் விடுவித்துக்கொள்ள முடியாமல்) உனது திருவடிகளைத் தியானிக்க, |
| | (அப்பொழுது நீ) |

| | |
|---|---|
| கொடிய வாய் விலங்கின் உயிர் மலங்க | கொடுந்தன்மையுள்ள வாயை யுடைய முதலையின் பிராணன் சிதையும்படி |
| கொண்ட | வருவித்துக்கொண்ட |
| சீற்றம் ஒன்று | ஒரு கோபம் |
| உண்டு உளது | உண்டாயுள்ளதை |
| அறிந்து | தெரிந்து கொண்டு |

உன் அடியனேனும் வந்து அடிஇணை அடைந்தேன்—.

* * *—கஜேந்திராழ்வானுக்கு அருள்செய்தமையை முன்னிட்டுக் கொண்டு சரணம் புகுகிறாரிதில். மஹாவிஷ்ணு பக்தனான கஜேந்திரன் அர்ச்சனைக்காகப் பூப்பறிக்க ஒரு பெரிய பொய்கையிற் சென்றிழிந்ததும் அங்கு முதலையின் வாயில் அகப்பட்டு வருந்தியதும், பிறகு 'ஆதிமூலமே!' என்று கூவியழைக்க, உடனே திருமால் கருடாரூடனாய் அங்கு எழுந்தருளித் தனது சக்ராயுதத்தைப் பிரயோகித்து முதலையைத் துணித்து யானையை அதன்வாயினின்று விடுவித்து இறுதியில் அதற்கு முக்தியளித்ததும் உலகப்பிரசித்தம். இவ்வரலாற்றை எடுத்துக் கூறியது, உயர்திணையோடு அஃறிணையோடு வாசிபற அடிமைப்பட்ட உயிர்களை அன்போடு துயர்தீர்த்துப் பாதுகாத்தருள்கின்ற எம்பெருமானது கருணை மிகுதியைக் காட்டும். அங்ஙனம் தனது அடிமையான பிராணியினிடத்துத்தான் வைத்த அருளினால், அதற்குத் துன்பஞ்செய்த ஜந்துவின் விஷயமாகப் பெருமான் தனது குளிர்ந்த திருவுள்ளத்திலே கொடிய கோபத்தைக் கொண்டருளிய மஹாகுணத்திலீடுபட்டு இங்ஙனங் கூறினர். அவ்வாறே எனக்கு எதிர் செய்கின்ற ஐம்பொறிகளையும் அடக்கி என்னைக் காத்தருளவேண்டு மென்றவாறும்.

'**கொண்ட**சீற்றம்' என்றதனால் எம்பெருமானுக்குக் கோபம் இயற்கைக் குணமல்லாமல் செயற்கையாகக் காரியகாலங்களில் வேண்டுமென்று வருவித்து ஏறிட்டுக் கொண்ட தென்பது தோன்றும். கடல்கடக்க உபாயஞ் சொல்லவேணு மென்று சரணாகதிபண்ணின விடத்தும் விமுகனாயிருந்த கடலரசன் விஷயத்தில் பெருமான் கோபங்கொண்டதைச் சொல்லுமிடத்து "**𑌕𑍍𑌰𑍋𑌧𑌮𑌾𑌹𑌾𑌰𑌯𑌤𑍍𑌤𑍀𑌵𑍍𑌰𑌂**-க்ரோதமாஹாரயத்தீவ்ரம்" [கடுங்கோபத்தை வரவழைத்துக்கொண்டார்] என்று வான்மீகி பணித்தது இங்கு ஸ்மரிக்கத்தகும்.

தனது அடியாரின் எதிரிகள் விஷயமாகப் பெருமான் கொள்ளுங் கோபத்தையே ஆழ்வார் தாம் வாழ்வதற்குச் சாதனமாக ஆபத்தனம் போலக் கருதியமைதோன்ற "கொண்ட சீற்ற **மொன்றுண்டுளதறிந்து**" என்றார். கஜேந்திராழ்வானைக் காத்தருளும் பொருட்டு மடுவின்கரைதேடி ஓடிவந்தது போல வரவேண்டாமல், நானிருக்கிற இந்த நிலவுலகத்திலே கோயில் கொண்டுள்ளாயென்பார் 'அணி பொழில் திருவரங்கத்தம்மானே!' என விளித்தார்.

கஜேந்திராழ்வான் தானிருக்கின்ற வனத்திலே நெடுநாள் மழைபொழியாமையால் தாமரைக் குளங்களெல்லாம் வறண்டமைபற்றி எங்குந் தாமரைமலர் கிடைக்கப் பெறாமல் சிலநாளாக அர்ச்சனைதவிர்ந்து அதனாலாகிய வருத்தத்தினால் உணவு கொள்ளாமற் பட்டினிகிடந்து ஏங்கி மலர் தேடுகின்றபோது தெய்

விகமாக ஒரு நறுமணத்தை மோப்பஞ்செய்து அதனையே பிடித்துக் கொண்டு அது வந்தவழியால் விரைந்து செல்லுகையில் ஒருமலையின் மீது திவ்யமான ஒரு சோலையையும் அதன் நடுவே ரமணீயமான ஒரு தடாகத்தையும் கண்டு அதில் நிறைந்திருக்கின்ற தாமரை மலர்களைப் பார்த்தனால் மிகமகிழ்ந்து அவற்றினிடத் திற் கொண்ட ஆதராதிசயத்தால் அம்மடுவில் முதலை யிருப்பதைப் பாராமலே விரைந்திறங்கி மலர்கொய்வதாயிற்றென்பது விளங்க "**கடிகொள் பூம் பொழிற் காமரு பொய்கை வைகுதாமரை வாங்கிய வேழம்**" என்றார். அங்ஙனம் மலர் கொய்யும்போது முதலைவாய்ப்பட்ட யானை வெகுகாலமளவும் 'இச்சிறுகாரியத் திற்காக எம்பெருமானை அழைப்பானேன்?' என்றெண்ணித் தன்வலிமை கொண்டே முதலையை வென்று மீளுதற்கு முயன்று பார்த்து அதுமுடியாத பின்னர் எம்பெருமானைக்கூவியழைத்துப் பிறகு தளர்ச்சியாற் குரலெழாமல் த்யானமாத்திரத்தோடு நின்ற வமயத்திலே யென்பது "**அது நின்சரண் நினைப்ப**" என்றதன் தாத்பரியம். முதலை பசைமையினால் உணவுக்காக யானையின் காலைக்கவ்வியது; அது தனது $ சாபநிவ்ருத்தியின் பொருட்டு முன்பு தேவல முனிவர் சொன்னபடி பாகவதோத்தமனான கஜேந்திராழ்வானது திருவடியைப் பற்றிக் கொண்டதாகு மென்க.

**கோடியவாய்விலங்கு**=யானையின் காலையே யன்றி அதற்கு இறைவனான எம்பெருமானது மனத்தையும் புண்படுத்திய கொடியவாயையுடையதொரு திர்யக் ஜாதி என்றபடி.

பாட்டடியில், **கடி**—உரிச்சொல். **காமரு**='காமந்தரு' என்பது 'காமரு' என மருவிற்று. காமம்— விருப்பம்; விருப்பத்தைத் தருகின்ற என்றது-எல்லா ராலும் விரும்பப்படுந் தன்மைவாய்ந்த என்றவாறு. எனவே, அழகிய என்ற தாயிற்று. 'காமமருவு' என்பது 'காமரு' என விகாரப்பட்டதென்பாருமுளர். இலக்கணையால், எல்லாராலும் விரும்பப்படுந்தன்மையாகிய அழகு பொருந்திய என்கை. **பொய்கை**—மானிடராக்காத நீர்நிலை. "நெடும்புனலுள் வெல்லும் முதலை" என்றபடி தனது இடமாகிய நீரில் முதலைக்கு உள்ள பூர்ணபலம்விளங்க '**முழுவலி முதலை**' எனப்பட்டது. ஆனதுபற்றியே, அது மிக்கவலிமையுள்ள பெரிய யானையையும் தப்பவொண்ணாதபடி வாயினாற் பற்றியிழுக்கலாயிற்று. **சரண்**—சரணமென்ற வடசொல்லின் விகாரம். "முதலையும் மூர்க்கனும் கொண்டது விடா" என்றபடி வாயினாற் பிடித்தபிடி விடாத கொடிய இயல்பினதாதலால் '**கோடியவாய் விலங்கு**' எனப்பட்டது.

"விலங்கின்னுயிர் மலங்க" என்று விரித்தல் விகாரமான பாடம் ஓசை நயத்திற்குச் சேரும். .... .... .... .... .... .... (ஈ)

$ முன்பு நீர்நிலையில் நின்று தவஞ்செய்துகொண் டிருந்த தேவலனென்னும் முனிவனது காலைப் பற்றியிழுத்து அதனாற் கோபங்கொண்ட அவனது சாபத்தால் பெரிய முதலையாய்க் கிடப்பவன் ஹூஹூ என்னுங் கந்தர்வன் என்ற வரலாறு நினைக்கத்தக்கது.

நஞ்சுசோர்வதோர் வெஞ்சினவரவம்
வெருவிவந்து நின்சரணெனச்சரணா *
நெஞ்சில்கொண்டு நின்னஞ்சிறைப் பறவைக்கு
அடைக்கலம் கொடுத்தருள்செய்ததறிந்து *
வெஞ்சொலாளர்கள் நமன்தமர்கடியர்
கொடியசெய்வனவுள * அதற்கடியேன்
அஞ்சிவந்து நின்னடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே ! (௪)

அணி பொழில் திருஅரங்கத்து அம்மானே—;
நஞ்சு சோர்வது — விஷத்தை உமிழ்வதும்
வெம் சினம் — கொடிய கோபத்தை யுடையதுமான
ஓர் அரவம் — (சுமுகனென்னும்) ஒரு பாம்பானது
வெருவி — (தன்னைக்கொல்ல விருக்கின்றகருடனுக்கு) அஞ்சி
வந்து — உன்னிடத்தில் வந்து
நின் சரண் என — 'உனக்கு அடைக்கலப் பொருளாகின்றேன் யான்' என்றுசொல்லி உன்னைச்சரணமடைய,
சரண் ஆய் — நீ அதற்கு ரக்ஷகனாகி
நெஞ்சில் கொண்டு — (அவனுக்கு நேர்ந்த துன்ப நிலையையும் அவன்சொல்லையும்) உன் திருவுள்ளத்திற்கொண்டு
நின் அம் சிறை பறவைக்கு அடைக்கலம் கொடுத்து அருள் செய்தது — உனது அடியவனான அழகிய இறகுகளையுடைய கருடனிடத்தில் (அப்பாம்பை) அடைக்கலப் பொருளாக நீ ஒப்பித்துப் பாதுகாத்தருளிய திறத்தை
அடியேன் அறிந்து — அடியேன் தெரிந்துகொண்டு,
வெம் சொலாளர்கள் — கொடிய சொற்களைச் சொல்பவர்களான
நமன் தமர் — யமதூதர்கள்
கடியர் — பயங்கரமான தோற்றமுடையவர்களாய்
செய்வன — (மரணகாலத்திலும் மறுமையிலும்) செய்பவையான
கொடிய — கொடுந்தொழில்கள்
உள — பலவுளவன்றோ;
அதற்கு அஞ்சி வந்து நின் அடி இணை அடைந்தேன்—.

* * *—ஸுமுகனென்னும் நாககுமாரனை எம்பெருமான் பாதுகாத்தருளியதை முன்னிட்டுக்கொண்டு சரணம் புகுகிறாரிதில். ஸுமுகனுக்குக் கருடனால்வந்த அச்சத்தைத் தவிர்த்தருளியதுபோல, அடியேனுக்கு யமபாதை நிமித்தமாக நேர்ந்த அச்சத்தைத் தவிர்த்தருளவேணுமென்கிறார். சரணமடைபவர் தம்தமது தாழ்வுகளை முன்னிட்டுக்கொண்டு சரணம் புகுதல் இயல்பு; அவ்வாறே தமது தீவினைப் பயனாய்வரும் யமதண்டனையைச் சொல்லிக்கொண்டு அடைக்கலமடைகின்றனர்.

தேவேந்திரனுக்கு நண்பனும் மந்திரியும் ஸாரதியுமான மாதலியானவன் அழகிலும் குணத்திலும் மிகச்சிறந்த தன் புத்திரியான குணகேசியென்னுங் கன்னிகைக்குத் தக்க வரனைத் தேடுபவனாய்ப் புறப்பட்டு வழியில் நாரதமுனிவரைச் சந்தித்துத் துணையாகக்கொண்டு பலவுலகங்களிற் சென்றுபார்த்துத் தக்க வரனைக் காணாமல் பாதாளலோகத்தில் வாஸுகியினாலாளப்படுகின்ற போகவதி

யென்னுஞ் சிறந்த நகரத்தையடைந்து அங்கேயிருக்கின்ற அநேக நாககுமாரர் களைப் பார்க்கின்ற பொழுது ஸுமுகனென்னும் நாககுமாரனை நோக்கி அவனது ரூபலாவண்யங்களில் ஈடுபட்டு அவனுக்குத் தன்மகளைக் கொடுக்கக்கருதி அவனது பாட்டனரைக்கண்டு பேச, அவர் மகிழ்ச்சியோடு துயரமுங் கொண்டவராய் 'இவனது தந்தையைக் கருடன் பக்ஷித்து இந்த ஸுமுகனையும் ஒருமாதத்திற்குள் பக்ஷிப்பேனென்று சொல்லியிருக்கின்றானாதலால் இவனுக்கு மணஞ்செய்தல் ஏற்ற தன்று' என்று தெரிவித்தார். அது கேட்ட மாதலி 'என்னால் மருமகனாக வரிக் கப்பட்ட உனது பௌத்திரன் எங்களுடன் வந்து தேவேந்திரனைக் காண்பனா யின் இவனுக்கு ஆயுளைத் தந்து கருடனைத்தடுக்க முயல்வேன்' என்று சொல்லி ஸுமுகனை யழைத்துக்கொண்டு இந்திரனிடஞ் சென்று சேர, அங்கு இந்திர னுடனே உபேந்திர மூர்த்தியான திருமாலும் வீற்றிருக்கையில், நிகழ்ந்த செய்திகளையெல்லாம் நாரதமுனிவர் சொல்லக் கேட்ட திருமால் இந்திரனை நோக்கி 'இவனுக்கு அமிர்தத்தைக் கொடுக்கலாம்; அதனால் இவர்கள் இஷ்ட ஸித்தியடைந்தவராவர்' என்று சொல்லியருள, இந்திரன் கருடனது பராக்ர மத்தை ஆலோசித்துத் திருமாலை நோக்கி 'தேவரீரே இவனுக்கு அமுதத்தை யும் ஆயுளையுந் தந்தருள்க' என்றதற்கு, திருமால் 'ஸகலலோகாதிபதியான நீ கொடுப்பதே போதும்; அதனை மாற்றுபவர்யார்?' என்று கூற, பிறகு இந்திரன் ஸுமுகனுக்கு அமிர்தமுண்பியாமல் நீண்ட ஆயுளை வரமளிக்க, உடனே மாதலி ஸுமுகனுக்குத் தன்மகளை மணம்புரிவித்தான். இச்செய்தியைக் கேள்வியுற்ற கருடன் கோபங்கொண்டு இந்திரனோடு மாறுபட்டுத் தனது இரையை அவன் தடுத்துவிட்டதற்காகப் பலபல நிஷ்டூரவார்த்தைகள் கூறுகையில், ஸுமுகன் தான் நீண்ட ஆயுளை வரம்பெற்றிருந்தாலும் கருடனுடைய கறுவுதலைக்கண்டஞ் சிப் பாம்புவடிவமாய்த் திருமாலினருகிற் சேர்ந்து அப்பெருமானது கட்டிலின் காலைக்கட்டிக்கொண்டு சரண்புக, பின்பு கருடன் திருமாலை நோக்கி 'ஸகல தேவர்களினுள்ளும் மஹாபலசாலியானவுன்னைச் சிறிதும் சிரமமின்றி இறகு முனையாற் சுமக்கின்ற என்னினும் வலிமையுடையார் யார்? இதனைச்சற்று ஆலோ சித்துப்பார்' என்று செருக்கிப்பேச, அக்கடுஞ்சொற்கேட்ட திருமால் கருடனை நோக்கி 'மிகவும் துர்ப்பலனை நீ தன்னைத்தானே மஹாபலசாலியாக எண்ணி எமது முன்னிலையில் தற்புகழ்ச்சி செய்துகொண்டது போதும்; மூவுலகமும் எனது உடம்பை வஹிக்கமுடியாதே; யானே எனது சக்தியால் என்னை வஹித் துக்கொண்டு உன்னையும் வஹிக்கின்றேன்; எனது இந்த வலக்கையொன்றை மாத்திரமாவது நீ தாங்கவல்லையாயின் உனது செருக்குமொழி பயன்பட்ட தாகும்' என்று சொல்லிக் கருடனது தோளில் தனது வலக்கையை வைத்த மாத்திரத்தில் அவன் அதன் அதிபாரத்தைத் தாங்கமாட்டாமல் வருந்தி வலிமை யொழிந்து மூர்ச்சித்து விழுந்து, பின்னர் அரிதில் தெளிந்து திருமாலை வணங்கிப் பலவாறு பணிமொழிகூறி 'என்பிழையைப் பொறுத்தருளவேண்டு' மென்று பிரார்த்திக்க, திருமால் திருவுள்ளமிரங்கி அவனுக்கு ஸமாதானங்கூறித் தனது

திருவடியின் பெருவிரலால் ஸுமுகனையெடுத்துக் கருடன் தோளிலிட்டு 'இவனை நீ உனது அடைக்கலமாகக்கொண்டு பாதுகாக்கக்கடவை' என்று குறிப்பிக்க, அது முதல் கருடன் ஸுமுகனோடு நண்புகொண்டு அவனைத் தோளில்தரிக்க, அவனும் அச்சமின்றி 'கருடா! ஸுகமா?' என்று க்ஷேமம் விசாரிப்பவனாயினன் என்ற வரலாறு இங்கு அறியத்தக்கது. முதல்திருவந்தாதியில் "அடுத்த கடும்பகைஞற்கு" என்ற பாட்டிலும், நான்முகன் திருவந்தாதியில் "பதிப் பகைஞற்காற்றாது" என்ற பாசுரத்திலும் இந்த இதிஹாஸம் அருளிச்செய்யப் பட்டமையுங் காண்க.

"நஞ்சுசோர்வது" "வெஞ்சினம்" என்ற அடைமொழிகள் பாம்பின் இயற்கைக் கொடுமையை விளக்குவன. இதனால், சரணாகதிசெய்ய அதிகாரிக ளாகாதாரில்லை யென்பது தோன்றும்.

**நெஞ்சில்கொண்டு**='இவனுக்கு நாமல்லது வேறுகதியில்லை' என்பதைத் திருவுள்ளத்திற்கொண்டு என்னவுமாம். இது எம்பெருமானது குளிர்ந்த திரு வுள்ளத்தைக்காட்டும்.

'எனது அடியாரின் எதிரிகளை ஒருகாலும் க்ஷமிக்கமாட்டேன்' என்றும் 'என்னைச் சரணம்புக்கவரை எவ்விதத்திலும் கைவிடேன்' என்றும் எம்பெருமான் கொண்டுள்ள ஸங்கல்பமிரண்டும் மாறுபடாமல் நிறைவேறுமாறு, அப்பெருமான் தன்னைச்சரணமடைந்த ஸுமுகனைத் தான் நேரில் ரக்ஷியாமல் அவனுக்குப் பகையான கருடன் கையிலேயே காட்டிக்கொடுத்து அவனைக்கொண்டே பாது காத்தருளிய அருமைத்திறத்தைப் பாராட்டி "**நின் அஞ்சிறைப்பறவைக்கு அடைக்கலங் கொடுத்து அருள்செய்தது**" என்றார். முன்பு தமக்குள் பகைமை யிருந்தாலும் எம்பெருமானைச் சரணமடைந்தாற் பின்பு அப்பகைமை தவிர்ந்து நண்பராவரென்ற உண்மை இங்குப்புலனாம்.

**வெஞ்சொலாளர்கள்**=யமபடர் தாம் செய்யும் தண்டனைகளைக்காட்டிலும் சொல்லும் கடுஞ்சொற்கள் மிகக்கொடியவையா யிருக்குமென்க. தமது தீவினைகள் பலவென்பது தோன்ற "**கொடிய செய்வனவுள**" என்று பன்மையாகக்கூறினார்; பாபங்களின் பன்மைக்குத்தக்கபடி தண்டனைகளுக்கும் பன்மையுண்டே. **கொடிய செய்வன**=கொடியவையாகச் செய்பவை. அவை பலவற்றையுந் தொகுத்துச் சாதியொருமையால் '**அதற்கு**' என்றனர்: அவர்கள் செய்யும் கொடுந்தொழில் களுக்கு என்றபடி.

**அடியேன் அஞ்சிவந்து** என்ற சொற்சேர்க்கையினால்—உனக்கு அடிமைப் பட்டபின்பும் யான் யமனுக்கு அஞ்சலாமோ? என்பது குறிப்பிடப்பட்டதாகும்.

**அடைக்கலம்**—பாதுகாக்கப்படும் பொருள்; ரக்ஷ்யவஸ்து. .... (ச)

மாகமாநிலமுழுதும் வந்திறைஞ்சும்
மலரடிக்கண்ட மாமறையாளன் *
தோகைமாமயி லன்னவரின்பம்
துற்றிலாமையிலத்த! இங்கொழிந்து *

போகம் நீயெய்திப்பின்னும் நம்மிடைக்கே
போதுவாயென்ற பொன்னருள் * எனக்கும்
ஆகவேண்டுமென்றடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே. (ரு)

அணி பொழில் திருஅரங்கத்து அம்மானே!—;
மா கம் — பரமாகாசமெனப் படுகிற பரமபதத்திலுள்ளாரும்
மா நிலம் — விசாலமான இப்பூமண்டலத்திலுள்ளாரும்
முழுதும் — மற்றுமுள்ள சராசரங்களடங்கலும்
வந்து இறைஞ்சும் — வந்து வணங்கப்பெற்ற
மலர் அடி — (உனது) திருவடித் தாமரைகளை
கண்ட — ஸாக்ஷாத்கரித்த
மா மறையாளன் — (கோவிந்தஸ்வாமி யென்னும்) மஹாவைதிக ப்ராமணனொருவனைக்குறித்து
அத்த — 'அப்பா!,
நீ
தோகை மா மயில் அன்னவர் இன்பம் துற்றிலாமையில் — பெண்டிர்களாலுண்டாகும் விஷய போக ஸுகங்களை அநுபவியாமையால்
இங்கு ஒழிந்து — (சிலகாலம்) இவ்விபூதியிலேயிருந்து
போகம் எய்தி — விஷயபோகங்களையநுபவித்து
பின்னும் — அதன்பிறகு
நம் இடைக்கே போதுவாய் — நம்மிடம் வந்து சேரக்கடவாய்'
என்ற — என்றருளிச்செய்த
பொன் அருள் — சிறந்த கிருபையானது
எனக்கும் ஆகவேண்டும் என்று
அடி இணை அடைந்தேன்—.

* * *—கோவிந்தஸ்வாமியினுடைய கருத்தறிந்து காரியஞ்செய்ததுபோல அடியேனுக்கும் கருத்தறிந்து காரியஞ்செய்யவேணுமென்று அவனுடைய விருத்தாந்தத்தை முன்னிட்டுக்கொண்டு சரணம்புகுகிறார்.

கோவிந்தஸ்வாமி யென்பானொரு பிராமணன் இதிஹாஸ புராணங்களைப் பலகாலுங்கேட்டு அதனாலே கண்ணபிரானுடைய பால்ய சேஷ்டிதங்களையும் ராஸக்ரீடை [குரவைகோத்தல்] முதலிய திருவிளையாடல்களையும் ஸாக்ஷாத்தாகக் கண்டு களிக்கக் கருத்துக்கொண்டவனாய், 'இதை எம்பெருமான் பக்கல் நாம் பிரார்த்தித்தால் அப்பெருமான் அருள்செய்யக்குறையில்லை' என்றெண்ணி * ஊன்வாடவுண்ணாது உயிர்காவலிட்டு உடலிற் பிரியாப்புலனைந்தும் நொந்து தான்வாடவாடத் தவஞ்செய்கையில், எம்பெருமான் இவனது நினைவின்படியே க்ருஷ்ணவதார க்ருத்யங்களையெல்லாம் அவ்வண்ணமே ஸாக்ஷாத்கரிப்பித்து 'இன்னமும் உனக்கு வேண்டுவதென்?' என்று கேட்டருளினன்; அதற்கு இவன் 'தேவரீரோடு கூடவே அத்தாணிச்சேவகனாயிருந்து நித்யாநுபவம் பண்ணிக்களிக்க விரும்பியிருக்கின்றேன்' என்றான்; இவன்றான் வாயாலே இங்ஙனே கூறினனாயினும் * உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறியு மெம்பெருமான் அவனுடைய நாபியிலுள்ள உண்மைக்கருத்தை உள்ளபடியே கண்டறியவல்லவனாதலால் 'இவனுக்கு நம்மோடு நித்யாநுபவம் பண்ணுகைதான்

உண்மையான விருப்பமோ?' என்று ஆராய்ந்து பார்த்தான்; பார்த்ததில், 'இவனுக்கு சப்தாதிவிஷயபோகங்களில் இன்னமும் நசை விட்டபாடில்லை' என்றறிந்து, 'அந்தணா! நீ இன்னம் சிறிதுகாலம் இந்நிலத்திலேயேயிருந்து விஷயபோகங்களை ஆசைதீரச்செய்து தலைக்கட்டி, பின்பு நம்மோடே வரக்கடவாய்' என்றருளிச்செய்து அந்தர்த்தான மடைந்ததாக ஒரு இதிஹாஸமுண்டு; அஃது இப்பாட்டில் அருளிச்செய்யப்படுகிறது. இவ்வரலாறு எந்தப் புராணத்திலுள்ளதென்று ஆனமட்டும் ஆராய்ந்து பார்த்தும் ஆகரம் கண்டறிந்திலேன்; வேறு ஆழ்வார்களுமிதனை அருளிச்செய்திலர். ஸ்தலமாஹாத்மியங்கள் கூறும் புராணங்களில் திருவேங்கடமலை மாஹாத்மியங் கூறுமிடத்து இவ்வரலாறு விரித்துரைக்கப்பட்டுளதாக ஒரு நண்பர் கூறக்கேட்டேன்.

கண்ணபிரானும் நம்பி மூத்தபிரானும் அக்ரூரரால் அழைத்துச் செல்லப்பட்டு மதுராபுரிக்கெழுந்தருளினவளவிலே மாலாகாரர் திருமாளிகையிலே புக்கு அவரால் ஆராதிக்கப்பெற்றபோது, கண்ணபிரான் அவரை அநுக்ரஹித்துப் பேசும் புடையிலே "𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌚 𑌵𑌿𑌪𑍁𑌲𑌾𑌨𑍍 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 𑌤𑍍𑌵𑌮𑌨𑍍𑌤𑍇 𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌤𑌃। 𑌮𑌮𑌾𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌲𑍋𑌕𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 = புக்த்வா ச விபுலாந் போகாந் த்வமந்தே மத்ப்ரஸாததஃ, மமாநுஸ்மரணம் ப்ராப்ய திவ்யம் லோகமவாப்ஸ்யஸி" [இவ்விடத்தில் அநுபவிக்கவேண்டிய போகங்களையெல்லாம் பெருக்க நீ அநுபவித்து, தேஹ முடிவுகாலத்தில் என்னருளால் என்னைச்சிந்தித்து திவ்யலோகமடைவாய்] என்றருளியது இங்கு ஸ்மரிக்கத்தக்கது.

"**இங்கொழிந்து போகம் நீ யெய்திப்பின்னும் நம்மிடைக்கே போதுவாயென்ற பொன்னருள் எனக்குமாகவேண்டும்**" என்றவிதனால், கோவிந்த ஸ்வாமிக்குப்போலே தமக்கும் விஷயபோகங்களில் போதுபோக்காகும்படி அருள் செய்யவேணுமென்று ஆழ்வார் பிரார்த்திப்பதாகப் பொருள்கொள்ளவேண்டா; 'வாணிலா முறுவல் சிறுநுதற் பெருந்தோள் மாதரார் வனமுலைப்பயனே பேணினேன், அதனைப் பிழையெனக்கருதிப் பேதையேன் பிறவி நோயறுப்பானேணிலேனிருந்தேன் எண்ணினேனெண்ணி இளையவர் கலவியின் திறத்தை நாணினேன்" என்றும், "சாந்தேந்து மென்முலையார் தடந்தோள் புணரின்ப வெள்ளத்தாழ்ந்தேன் அருநரகத் தழுந்தும் பயன்படைத்தேன், போந்தேன் புண்ணியனே! உன்னையெய்தி என் தீவினைகள் தீர்ந்தேன்" என்றும் விஷயாந்தரங்களைக் காறியுமிழ்ந்து பேசுமிவ்வாழ்வார்க்கு அந்த நினைவு கனவிலுந் தோன்ற ப்ரஸக்தியில்லை. ஆகையாலே, நித்யகைங்கரிய விரோதியான இந்த தேஹஸம்பந்தத்தை அறுத்துத் தந்தருளவேணுமென்பதே இப்போது இவர்க்குப்பிரார்த்தனையாகும். இப்படியாகில், அந்தரங்கத்தில் விஷயபோகங்களில் நசையுள்ளவனாயிருந்த கோவிந்தஸ்வாமியை உதாஹரணமாயெடுத்துக்காட்டியது எதுக்கென்னில்; அவனுடைய உட்கருத்தைக் கண்டறிந்து அவனுக்கு அருள் செய்ததுபோல அடியேனுக்கும் உட்கருத்தையறிந்து அருளவேணுமென்னுமித்தனையே இங்கு விவக்ஷிதம். (இப்பெரிய திருமொழியின் ஈற்றுத்திருப்பதி

க்மான "மாற்றமுள" என்னுந் திருமொழியில் இவ்வாழ்வாரது உத்தேசயம் நன்கு விளங்கக் காண்க.)

**மாகம் மாநிலம் முழுதும்வந்திறைஞ்சும் மலரடி**=கண்ணபிரானுடைய திருவடிகளைச் சொன்னபடி. உபய விபூதியிலுள்ளாரும் வந்து வணங்கப்பெற்ற பெருமை க்ருஷ்ணாவதாரத்திலே விஞ்சியிருக்கும். திருவாழி திருச்சங்கென்னும் திவ்யாயுத ஸூரிகளும் கர்ப்பவாஸம்பண்ணி உடன்பிறந்த பிறவியிறே. திருவனந்தாழ்வான், பெரிய திருவடி முதலான ஸூரிகளும் உடனிருந்து பரிந்து காத்த வரலாறுகள் அறியத்தக்கன. இடையரோடு இடைச்சியரோடு கன்றுகளோடு பசுக்களோடு பீஷ்மர் முதலிய மஹான்களோடு வாசியற அனைவரும் ஆச்ரயித்து உய்ந்தமைபற்றி '**மாநிலம் முழுதும் வந்திறைஞ்சும்**' எனப்பட்டது. "மாகம் முழுதும் மாநிலம் முழுதும்" என்றும் அந்வயிக்கலாம். ஒருநாள் நடுநிசியிலே கண்ணபிரான் பாலமுதுசெய்து சாய்ந்தருளப் புகுகிறவளவிலே இந்திரன் ஓடிவந்து புகுந்து 'நரகாஸுரன் என்னை நெருக்காநின்றான், பொறுக்ககில்லேன், பிரானே! போந்தருள்' என்று கண்ணீர்சொரிந்து நிற்க, 'கையைத்தா' என்று சொல்லிக் கைப்பிடி பெற்றெழுந்து ஸத்யபாமைப் பிராட்டியோடுங் கூடப் பெரியதிருவடி தோளிலேயேறி எழுந்தருளி நரகாஸுரவதம் பண்ணி மீண்டான்—என்றிப்படிப்பட்ட வரலாறுகள் க்ருஷ்ணாவதாரத்திற் பல்லாயிரமுண்டு.

ஆகவிப்படி உபய விபூதியிலுள்ளாராலும் வணங்கப்பட்ட திருவடிகளை மஹாபாக்ய விசேஷத்தினால் கண்ணெதிரே காணப்பெற்ற சிறப்புவாய்ந்த பிராமணனை நோக்கிக் கண்ணபிரான் 'உனக்கு என்னவிருப்பம்?' என்றுகேட்க, 'உன்னோடுகூடவே வரவிரும்புகிறேன்' என்ன, 'அது இப்போதன்று; பின்னை ஆகலாம்' என்று பெருமான் பணிக்க, 'ஏன்?' என்று அவன்கேட்க, 'நீ தபஸ்ஸு பண்ணுகிறபோது விஷயாந்தர போகங்களிலே உனக்கு ஆசையிருக்கச் செய்தேயும் அவற்றைப் புஜியாமல் இந்திரியங்களைச் செறுத்து வருந்தினாய்; இப்போது அந்தப் போகங்களையெல்லாம் நீ புஜிக்கக்கடவாய்' என்றானாம் கண்ணபிரான்.

இங்கே ஒரு சங்கை உதிப்பதுண்டு; எம்பெருமானென்னில் தன்னடி சேரவிரும்புவார் ஆரேனுமுண்டோ? என்று ஆள்பார்த்துத் திரிகிறவன்; மோக்ஷத்தில் ருசியில்லாதவர்களுக்கும் எவ்வகையினாலேனும் ருசியைப் பிறப்பித்து நித்ய கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைத் தந்தருள்பவனென்று ப்ரஸித்தனாயிருப்பவன். இப்படிப்பட்ட எம்பெருமான், 'உன்னோடுகூடவே வரவிரும்புகிறே'னென்று சொல்லும் ஒரு மஹாநுபாவனைப் பெற்றால் பெருமகிழ்ச்சி கொண்டு 'அப்பா! வாராய்; உன்னையே தேடித் திரிகின்றேன்; கடுக வா, போவோம்' என்று ஆதரித்து அழைத்துக்கொண்டு போகவுரியவனே யன்றி, கெட்டவழியைக் காட்டி ஒழிந்துபோ என்னத் தக்கவனல்லன்; அப்படியிருந்தும், கூட வருவேனென்ற கோவிந்தஸ்வாமியைப் பெருமான் உபேக்ஷித்து வார்த்தை

சொன்னது ஏன்? என்று சங்கிக்கலாம். இதற்கு நாம் என் சொல்லவல்லோம்; எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியம் விசித்திரமானது; ஸம்ஸாரத்தில் பற்று சிறிதுமில்லாதவர்களை ஸம்ஸாரத்தில் வீழ்த்தவும், மோக்ஷருசி யில்லாதவர்களை மோக்ஷத்திற்குக் கொண்டு சேர்க்கவும் தனக்குள்ள ஸ்வாதந்திரியத்தைச் சில வ்யக்திகள் திறத்தில் அவன் காட்டுவதுண்டு. இங்கே வியாக்கியான வாக்கியங் காண்மின்:—"ஈச்வரன் நினைத்தால் விஷய ப்ரவணரையும் இவ்வாஸனையறுத்துக் கொண்டுபோக சக்தனென்னுமிடமும், எத்தனையேனும் பகவத் ப்ரவணரையும் தேஹ ஸம்பந்தத்தின் வழியே கொண்டுபோய் விநாசத்தைப் பலிப்பிக்குமென்னுமிடமும் வெளியிட்டது. ஸாதுக்களுக்கடைய உபமாநபூமியாயிருக்கிற ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுமிறே எதிரம்பு கோத்தான்."

**தோகைமாமயிலன்னவரின்பம்**=மாதர்க்கு மயிலை உவமை கூறுவதுண்டு; மயில் தோகைபோன்ற கூந்தல்வளம் வாய்ந்தவர் என்கை. **போகம்—ஹோ ஃ** என்ற வடசொல் விகாரம். .... .... .... .... (௫)

மன்னுநான்மறை மாமுனிபெற்ற
மைந்தனை மதியாத வெங்கூற்றந்
தன்னையஞ்சி * நின்சரணெனச் சரணாய்த்
தகவில்காலனை யுகமுனிந்தொழியா *
பின்னையென்றும் நின்திருவடி பிரியாவண்ணம்
எண்ணியபேரருள் * எனக்கும்
அன்னதாகுமென் றடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே! (௬)

அணி பொழில் திரு அரங்கத்து அம்மானே!—;

| | |
|---|---|
| மன்னு | நிலைபெற்ற |
| நால் மறை மா முனி பெற்ற மைந்தனை | நான்குவேதங்களையும் ஓதியுணர்ந்த சிறந்த ம்ருகண்டுமுனிவன் பெற்றகுமாரனாகிய மார்க்கண்டேயனை, |
| மதியாத வெம் கூற்றம் தன்னை அஞ்சி நின் சரண் என | ஒருவரையும் லக்ஷியஞ் செய்யாத கொடிய யமனுக்குப்பயந்து 'உனது அடைக்கலப் பொருளாவேன் யான்' என்று சொல்லி அவன் உன்னைச்சரணமடைந்த போது |
| சரண் ஆய் | (அவனுக்கு நீ) ரக்ஷகனாகி |
| தகவு இல் காலனை உக முனிந்து | இரக்கமில்லாத யமனை வலியொழியும்படி கோபித்து |
| ஒழியா | அவ்வளவோடு விட்டிடாமல் |
| பின்னை | அதற்குமேலே |
| என்றும் நின் திருஅடி பிரியா வண்ணம் எண்ணிய | எந்நாளும் (அம்முனி குமாரனை) உன் திருவடிகளை விட்டுப் பிரியாமலிருக்கும்படி திருவுள்ளம் பற்றிய |
| பேர் அருள் | (உனது) சிறந்த திருவருளானது |
| எனக்கும் அன்னது ஆகும் | என்விஷயத்திலும் அப்படி உண்டாகவேணும் |
| என்று | என்றுநினைத்து |

அடி இணை அடைந்தேன்—,

* * *—மார்க்கண்டேயனுக்கு எம்பெருமான் திருவருள் புரிந்ததை முன்னிட்டுக்கொண்டு, சரணம்புகுகிறாரிதில். மார்க்கண்டேயனுக்கு யமபயத்தை யொழித்து எப்பொழுதும் உன் திருவடிகளைப் பிரியாதபடியான பேற்றைத்தந் தருளியதுபோல, அடியேனுக்கும் பிறவித்துன்பங்கட்குப்பயப்படுதலையொழித்து என்நாளும் உன் திருவடிகளைப் பிரியாதபடியான பேற்றைத் தந்தருளவேணு மென்று பிரார்த்திக்கிறார்.

ம்ருகண்டுவென்னும் முனிவர் பிள்ளையில்லாக் குறையால் பிரமனைக்குறித் துத் தவஞ்செய்தபோது, பிரமன் ப்ரத்யக்ஷமாகி 'முனிவரே! அறிவில்லாமை யும் அங்கஹீநத்வமும் பெரும்பிணியும் தீய குணங்களுமுடையனாய் நூறு பிராயம் உயிர்வாழ்பவனான புத்திரனை விரும்புகின்றீரோ? அன்றி, கூர்மையான புத்தியும் அழகுபொலிந்த வடிவமும் ஆரோக்யமும் நற்குணமுமுடையனாய்ப் பதினாறு பிராயமே வாழ்பவனான குமாரனை விரும்புகின்றீரோ? சொல்லும்' என்ன; முனிவர் 'ஆயுள் சிறிதேனும் அறிவும் அழகுங் குணமும் சிறந்து பிணியிலனாகும் ஸத்புத்ரனையே வேண்டுகின்றேன்' என்று தம் கருத்தைக்கூற நான்முகக்கடவுள் அவ்வாறே $ அநுக்ரஹித்தனர். அங்ஙனம் ஊழ்வினையாற் பதினாறு பிராயம் பெற்றுப் பிறந்த புத்திரனான மார்க்கண்டேயன் தனது அல்பாயுஸ்ஸைக்குறித்து வருந்திய தாய்தந்தையரைத் தேற்றித் தான் விதியைக் கடந்து வருவதாகச்சொல்லி, தீர்க்காயுஸ்ஸு பெறுதற்பொருட்டுத் தினந் தோறும் சிவபூஜை செய்துவருகையில், ஒருநாள் யமன் தூதரையனுப்ப, அவர் கள் மார்க்கண்டேயனது தவக்கனலால் அவனை அணுகமாட்டாது அவன் செய்யும் சிவபூஜைச் சிறப்பைக்கண்டஞ்சி வெருண்டோடி யமனிடஞ் செய்தி சொல்ல, யமனும் கோபித்துத் தனது மந்திரியான காலனை ஏவ, அவன் வந்து நயபயங்களாலழைக்கவும் மார்க்கண்டேயன் வரமாட்டேனென்று சொல்லிவிட, பிறகு யமன் மிகக்கொதித்துத் தானே நேரில்வந்து மார்க்கண்டேயனைக் கால பாசத்தாற் கட்டியிழுக்கத்தொடங்குகையில் அம்முனிகுமாரன் சிவலிங்கத்தைத் தழுவிக்கொள்ள, யமன் சிவலிங்கமுமுட்பட வலித்திழுக்கும்போது சிவபிரான் ஸ்ரீமந்நாராயணனைச் சிந்தைசெய்து அவனது திருவருள்பெற்று அங்கு நின்று வெளிப்பட்டு யமனைக் காலாலுதைத்துத்தள்ளி முனிமகனுக்கு என்றும் பதினாறு பிராயமாகவே அநேக கல்பகாலமளவும் இனிது வாழும்படி தீர்க்காயுஸ்ஸைக் கொடுத்தருளினன் என்பது ப்ரஸித்தம்.

---

$ புராணபேதத்தால் இக்கதை சிறிது பேதப்படுவது முண்டு. பிரமனுடைய அநுக்ர ஹத்தினால் ம்ருகண்டுமுனிவர்க்குப் பிள்ளைபிறந்ததாகவும், அப்பிள்ளை ஒருநாள் வீதியில் விளையாடிக்கொண்டிருக்கு மிருப்பைத் தாய்தந்தையர் ஆநந்தமாகக் கண்டுகொண்டிருக்குங்கால் 'இப்பிள்ளைக்கு ஆயுள்குறுகிற்று' என்று ஆகாசவாணியொன்று செவிப்பட, அதனால் அத்தாய் தந்தையர் மிக்க வருத்தங்கொண்டதாகவும், அதுகண்ட மார்க்கண்டேயன் 'இதற்கு நீங்கள் வருந்தவேண்டா; இவ்வாபத்தை நானே போக்கிக்கொள்ளுகிறேன்' என்று அவர் களைத்தேற்றித் தான் சிவபூசை செய்யத்தொடங்கின னென்பதாகவும் சில புராணங்கள் கூறும்.

இங்ஙனம் சிவபிரான் மார்க்கண்டேயனுக்கு அருள்செய்தது திருமாலி னருளால் தான்பெற்ற சக்தியினாலேயே யென்பதும், அச்சிவபிரானுக்கு அந்த ராத்மாவாய் நின்று தொழில்செய்தவன் ஸர்வேச்வரனான ஸ்ரீமந்நாராயணனே என்பதுமாகிய உண்மைபற்றி அவ்வரலாற்றை ப்ரயோஜககர்த்தாவின் காரியம் போலத் திருமாலின்மேலேற்றிக் கூறியதாகச் சிலர் கொள்வர். சில புராணங்க ளில் மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது பரமசிவனே மார்க்கண்டேயனுக்கு அபயமளித்ததாகக் காணப்படினும், மஹாபாரதத்தில் ஆரண்ய பர்வத்தில் நூற்றுத் தொண்ணூற்றிரண்டா மத்யாயத்தில் மார்க்கண்டேயன் தானே தரும புத்திரரை நோக்கிச் சொல்லுமளவில் ஸ்ரீமந்நாராயணனுடைய வார்த்தைகளை அநுவதிக்குமிடத்து "பித்ருவத் த்ராஹி மாம் விஷ்ணோ! த்வாமஹம் ஶரணம் கத:" என்றுள்ள ச்லோகத்தினால் இவன் ஸ்ரீமந்நாராயணனைச் சரணம்புகுந்தவனென் பது நன்கு விளங்கும். ஸ்ரீபாகவதத்திலும் பன்னிரண்டாம் ஸ்கந்தத்தில் எட்டாமத்தியாயத்தில்—"ஆராத்ய ஹ்ருஷீகேஶம் ஜிக்யே ம்ருத்யும் ஸுதுர்ஜயம்" [ஸ்ரீமந்நாராயணனை ஆராதித்து, வெல்லவொண்ணாத யமனை வென் றொழித்தான்] என்று ஸ்பஷ்டமாகச் சொல்லிற்று.

மார்க்கண்டேயன் இங்ஙனம் நெடுநாள் வாழ்ந்துவருகையில், மஹாப்ரளயத் தைத் தான் காணவேணுமென்று ஆசைகொண்டு எம்பெருமானைப்போற்றிப் பிரார்த்தித்து அங்ஙனம் காணும்போது, மஹாப்ரளயத்தில் திருமாலொருவனை யன்றி மற்றைத் தேவரெவரையும் பிழைத்திருக்கக் காணாதவனாய் அப்பெருமா னது திருவயிற்றினுள்ளே அனைவரையுங்கண்டு, முடிவில்தான் நற்கதிபெறுதற் பொருட்டுத் திருமாலையே சரணமடைய, அப்பெருமான் அவனைத் தனது திருவடிகளிற் சேர்த்துக்கொண்டருளினனென்பது மூன்றாமடியிற் குறித்தது.

1. "புக்கடிமையினால் தன்னைக்கண்ட மார்க்கண்டேயனவனை, நக்கபிரானு மன்றுய்யக்கொண்டது நாராயணனருளே" 2. "நிறுத்திநும் முள்ளத்துக் கொள்ளுந் தெய்வங்களும்மை உய்யக்கொள், மறுத்துமவனோடே கண்டீர் மார்க்கண்டேயனுங்கரியே" 3. "கண்டுதெளிந்துங்கற்றார் கண்ணற்காளன்றி யாவரோ, வண்டுண்மலர்த்தொங்கல் மார்க்கண்டேயனுக்கு வாழுநாள், இண்டைச் சடைமுடி யீசனுடன் கொண்டு உசாச்செல்லக், கொண்டங்குத் தன்னொடுங் கொண்டுடன் சென்றதுணர்ந்துமே" என்ற திருவாய்மொழிப் பாசுரங்களும்,

> "நீங்கள் ஆச்ரயிக்கிற தேவதைகள் உங்களை ரக்ஷிப்பதும் அவன் பக்க லிலே கொண்டு சென்று காட்டிக்கொடுத்தாயிற்று; ஆனபின்பு அவனையே ஆச்ரயிக்கப்பெறில் அழகிது"

என்ற வியாக்கியான வாக்கியமும் நோக்கத்தக்கன.

"நான்மறை மன்னுமாமுனி" என்று மொழிமாற்றி, வேதங்களை ஓதி யுணர்தலிலே நிலைபெற்றவென்று பொருள் கொள்ளவுமாம். உயர்குடியிற் பிறந் தவனுக்கு அருள்செய்த நீ தாழ்ந்த குலத்தவனான எனக்கும் அருள்செய்ய வேண்டுமென்று காட்ட '**எனக்கும்**' என்கிறார்.

1. திருவாய்மொழி 4-10-8, 2. திருவாய்மொழி 5-2-7, 3. திருவாய்மொழி 7-5-6.

குலம் அறிவு ஒழுக்கம் கல்வி செல்வம் அதிகாரம் அழகு வலிமை இளமை முதலியவற்றில் எதனையும் பொருள்செய்யாது தனது அதிகாரத்தை எங்கும் ஒரு நிகராகத் தடையின்றிச் செலுத்துபவன் யமன் என்பது '**மன்னு நான் மறை மாமுனிபெற்ற மைந்தனை மதியாத வெங்கூற்றம்**' என்ற தொடரால் தோன்றும். கீழ் "ஏழை யேதலன்கீழ்மகன்" என்றும் "வாதமாமகன் மற்கடம் விலங்கு மற்றோர்சாதி" என்றும் "நஞ்சு சோர்வதோர் வெஞ்சினவரவம்" என்றும் இழிவுகூறியவர் இங்கு "மன்னுநான்மறை மாமுனிபெற்றமைந்தன்" என்று உயர்வுகூறியதனால், இழிவு உயர்வு இரண்டும் சரணாகதிக்குப் பயன்படுவனவல்ல வென்பது குறிப்பிக்கப்பட்டதாகும். **மைந்து**—இளமை, வலிமை அழகு: அதனையுடையவன் மைந்தன். 'மாமுனிபெற்ற மைந்தனை நின் திருவடி பிரியாவண்ணமெண்ணிய' என்று அந்வயிக்கும். .... .... (௬)

**ஓதுவாய்மையுமுவனியப் பிறப்பும்**
**உனக்கு முன்தந்த வந்தணனொருவன் ***
**காதலென்மகன் புகலிடங் காணேன்**
**கண்டுநீதருவா யெனக்கென்று ***
**கோதில்வாய்மையினானுனைவேண்டிய**
**குறைமுடித்தவன்சிறுவனைக் கொடுத்தாய் ***
**ஆதலால்வந்துன்னடியிணை யடைந்தேன்**
**அணிபொழில் திருவரங்கத்தம்மானே !** (எ)

அணி பொழில் திருஅரங்கத்து அம்மானே !-;

| | |
|---|---|
| ஓது | ஓதியுணர்தற்கு உரிய |
| வாய்மையும் | ஸத்யவசநமான வேதத்தையும் |
| உவனியம் பிறப்பும் | (அதனை ஓதுதற்கு அதிகாரமுண்டாம்படி) உபநயனஞ் செய்தலால் வரும் (இரண்டாவது) பிறப்பையும் |
| முன் | முன்பு |
| உனக்கு தந்த | உனக்கு அளித்தவனும் |
| கோது இல் வாய்மையினான் | (சாபாநுக்ரஹ சக்தியினால்) பழுதுபடுதலில்லாத மெய்ம்மொழிகளையுடையவனுமான |
| அந்தணன் ஒருவன் | (ஸாந்தீபிநியென்னும்) ஒரு பிராமணன் |
| காதல் என் மகன் புகல் இடம் காணேன் | '(எனது) அன்புக்கு இடமான புத்திரன் சென்ற இடத்தை அறியேன்; |
| கண்டு நீ எனக்கு தருவாய் என்று | நீ (அவனிருக்கின்ற இடத்தைத்) நாடியுணர்ந்து அந்த மகனை எனக்குக் கொடுக்க வேணும்' என்று |
| உனை வேண்டிய | உன்னைப் பிரார்த்தித்த |
| குறை | அவனது வேண்டுகோளை |
| முடித்து | நீ தலைக்கட்டி |
| அவன் சிறுவனை கொடுத்தாய் | அவன் மகனை (அவனுக்குக்) கொணர்ந்து கொடுத்தருளினாய்; |
| ஆதலால் | (இங்ஙனம் செயற்கரிய செயல் செய்து அன்பர் குறையைத்தீர்த்து அவர் வேண்டியதை வேண்டியபடி தந்தருள்பவன் நீ) ஆகையால் |

வந்து உன் அடி இணை அடைந்தேன்—

* * *—ஸாந்தீபிநிக்கு எம்பெருமான் திருவருள்செய்ததை முன்னிட்டுக் கொண்டு சரணம்புகுகிறாரிதில். ஸாந்தீபிநியின் வேண்டுகோளைப் பூர்த்தி செய்ததுபோல அடியேன் வேண்டுகோளையும் நிறைவேற்ற வேண்டுமென வேண்டுகின்றாராயிற்று.

ஸ்ரீக்ருஷ்ணன் கம்ஸனைக்கொன்று உக்ரஸேநனுக்கு முடிசூட்டியபின்பு, அவந்திநகரத்திலிருந்த ஸாந்தீபிநியென்னும் ப்ராஹ்மணோத்தமர் பக்கல் சென்று ஸகல சாஸ்த்ரங்களையும் அத்யயநம்பண்ணிப் பிறகு குருதக்ஷிணை ஸமர்ப்பிக்கப் பார்க்கிறவளவிலே, அவ்வாசிரியர் கண்ணனுடைய சக்திவிசேஷத்தை யறிந்தவராகையால் 'பன்னிரண்டு வருஷத்திற்கு முன்பு மேல்கடலில் ப்ரபாஸதீர்த்த கட்டத்திலே நீராடும்போது முழுகிப்பிறந்துபோன என்புத்திரனைக் கொண்டு வந்து தரவேண்டும்' என்று அபேக்ஷிக்க கண்ணபிரான் 'அப்படியே செய்கிறேன்' என்று சொல்லிக் கடற்கரை சேர்ந்து, சங்கினுருவங்கொண்டு ஸமுத்ர ஜலத்தில் வஸிக்கின்ற பஞ்சஜநனென்கிற அசுரனே அவ்வந்தணச்சிறுவனைக் கொண்டுபோயினனென்பதை அங்கு வருணன் சொல்லக்கேட்டுக் கடலில் ப்ரவேசித்து அவ்வஸுரனைக்கொன்று அவனுடலாகிய பாஞ்சஜந்யத்தையெடுத்து வாயில்வைத்து முழக்கிக்கொண்டே யமபட்டணத்திற்கு எழுந்தருளி, அங்கு யாதனையிற்கிடந்த அக்குமாரனைப் பூர்வதேஹத்தில் சிறிதும் பேதமில்லாதபடி கொணர்ந்து கொடுத்தருளினனென்பது இப்பாட்டிற் குறித்த கதை. "மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை, ஓதுவித்ததக்கணையா உருவுருவே கொடுத்தான்" என்றார் பெரியாழ்வாரும்.

இடைப்பிள்ளையான கண்ணபிரான் ஸாந்தீபிநியிடத்தில் வேதமோதினனென்பதும் உபநயநஸம்ஸ்காரம் பெற்றனனென்பதும் எங்ஙனே சேருமென்று சிலர் சங்கிப்பர்; * ஒருத்திமகனாய்ப்பிறந்து ஓரிரவிலொருத்திமகனாயொளித்து வளர்ந்தவனான கண்ணன் க்ஷத்ரிய ஜாதியிற் பிறந்தவன். பிராமணர் க்ஷத்ரியர் வைசியர் என்னும் மூன்று ஜாதியாரும் தேஹோத்பத்தியாகிய இயற்கைப் பிறப்புடனே செயற்கைப்பிறப்பாக உபநயநமென்கிற ஸம்ஸ்காரத்தாலாகும் ஜ்ஞாநஜந்மத்தையுங்கொண்டு இருபிறப்பாளராய் 'த்விஜர்' எனப்படுவரென்க.

**உவனியம்**—உபநயநமென்ற வடசொல்லின் சிதைவு. பூணூல்தரிக்குஞ் சடங்கு. மாணுக்கனை ஆசாரியன் தன்னிடத்தே வைத்துக்கொள்ளுதல் என்று பதப்பொருள்.

"அந்தணனொருவன்" என்றவிடத்துப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்திலே—"முற்பட த்வயத்தைக்கேட்டு இதிஹாஸ புராணங்களையு மதிகரித்து, பரபக்ஷப்ரதிக்ஷேபத்துக்குடலாக ந்யாயமீமாம்ஸைகளு மதிகரித்து, போதுபோக்கும் அருளிச்செயலிலே யாம்படி $ பிள்ளையைப்போலே அதிகரிப்பிக்க வல்லவனையிறே 'ஒருவன்' என்பது" என்றருளிச் செய்யப்பட்டுள்ள வாக்கியம் நெஞ்சிலே தேனூறி யெப்பொழுதும் தித்திக்கும்.

---

$ பிள்ளை—'நம்பிள்ளை' என்கிற ஜகதாசார்யர்.

**காதல் என்மகன்=** எனது அன்பே ஒருருவங்கொண்டதென்னும்படியான புத்திரன் என்றுரைக்கவுமாம். **என்மகன் புகலிடம் காணேன்=**என்புத்திரன் கடலிலே புக்கான்; அவன் நரகத்திலிருக்கின்றானோ? கர்ப்பத்திலிருக்கின்றானோ? எங்கேபோயிருக்கின்றானென்று அறிகின்றிலேன் என்றவாறு.

கடலில் மூழ்கிய குமாரனை மீட்டுக்கொடுத்தருளியதுபோல, ஸம்ஸாரஸாகரத்தில் மூழ்கிய என்னை மீட்டுப் பாதுகாத்தருள வேண்டுமென்பது இப்பாட்டுக்குக் கருத்தாகக் கொள்ளத்தகும். .... .... (எ)

**வேதவாய்மொழி யந்தணனொருவன்**
**எந்தை! நின்சரணென்னுடைமனைவி ***
**காதல்மக்களைப் பயத்தலுங் காணாள்**
**கடியதோர் தெய்வம் கொண்டொளிக்கு மென்றழைப்ப ***
**ஏதலார்முன்னே யின்னருளவற்குச்செய்து**
**உன்மக்கள்மற்றிவ ரென்றுகொடுத்தாய் ***
**ஆதலால்வந்துன்னடியிணை யடைந்தேன்**
**அணிபொழில் திருவரங்கத்தம்மானே!** (அ)

அணி பொழில் திருஅரங்கத்து அம்மானே!;

வேதம் வாய் மொழி — வேதங்களையே வாய்ப்பேச்சாகவுடையவனான

அந்தணன் ஒருவன் — ஒரு வைதிகப்ராம்மணன் (உன்னை அடுத்து)

எந்தை — ‘எமது தலைவனே!

நின் சரண் — உனக்கு அடைக்கலப் பொருளாகிறேன் யான்;

என்னுடை மனைவி — எனது மனைவியானவள்

காதல் மக்களை — தான் ஆசையுடன் பெறுகின்ற பிள்ளைகளை

பயத்தலும் காணாள் — பெற்றவளவிலே காணப் பெறுகின்றாளில்லை;

கடியது ஓர் தெய்வம் — கொடுந்தன்மையுடையதான ஒரு தெய்வமானது

கொண்டு ஒளிக்கும் — (அப்பிள்ளைகளைக்) கொண்டு போய் ஒளித்து விடுகின்றது’

என்று — என்று (தன் குறையைச்) சொல்லி

அழைப்ப — அதற்குப் பரிஹாரம் செய்வதற்கு உன்னையழைக்க,

ஏதலார் முன்னே — (அவனைப் பரிஹஸித்துக் கொண்டிருந்த) பகைவர்களது முன்னிலையிலே

அவற்கு — அந்த வைதிகனுக்கு

இன் அருள் செய்து — இனிமையான கருணையைச் செய்து

இவர் உன் மக்கள் என்று கொடுத்தாய் — ‘நான் அழைத்துக் கொண்டு வந்த இவர்கள் உன் பிள்ளைகள்’ என்று சொல்லிக் கொணர்ந்து கொடுத்தருளினாய்;

ஆதலால் — (இப்படி செயற்கரியன செய்து சரணாகதரக்ஷணம் செய்தருள்பவன் நீ) ஆகையால்

வந்து உன் அடி இணை அடைந்தேன்—.

* * *—வைதிகனொருவனுக்கு எம்பெருமானருள்செய்ததை முன்னிட்டுக் கொண்டு சரணம் புகுகிறாரிதில். வைதிகனது வேண்டுகோளை அருளினாற்போல என் வேண்டுகோளையும் அருள்வாய் என வேண்டுகின்றார்.

ஒரு பிராமணனுக்கு முறையே பிறந்த மூன்றுபிள்ளைகள் பிறந்த அப்பொழுதே பெற்றவளுமுட்பட முகத்தில் விழிக்கப்பெறாதபடி இன்னவிடத்திலே போயிற்றென்று தெரியாமல் காணவொண்ணாது போய்விடுகையாலே நான்காம் பிள்ளையை ஸ்த்ரீ ப்ரஸவிக்கப் போகிறவளவிலே அந்த அந்தணன் கண்ணபிரானிடம் வந்து 'இந்த ஒருபிள்ளையையாயினும் தேவரீர் பாதுகாத்துத் தந்தருள வேண்டும்' என்று பிரார்த்திக்க, கிருஷ்ணன் 'அப்படியே செய்கிறேன்' என்று அநுமதிசெய்தபின்பு, ஒருயாகத்திலே தீக்ஷிதனுயுள்ள கண்ணபிரான் எழுந்தருளக் கூடாதென்பதுபற்றி அர்ஜுநன் 'நான்போய்ரக்ஷிக்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞைபண்ணி, ப்ராஹ்மணனையுங் கூட்டிக்கொண்டுபோய், ப்ரஸவிக்கிற க்ருஹத்தைச் சுற்றும் காற்றுமுட்படப் பிரவேசிக்கவொண்ணாதபடி சரக்கூடங்கட்டிக் காத்துக்கொண்டு நிற்கையில் பிறந்த பிள்ளையும் வழக்கப்படியே பிறந்தவளவிற் காணவொண்ணாது போய்விடவே, ப்ராஹ்மணன் வந்து அர்ஜுநனை மறித்து 'க்ஷத்ரியாதமா! உன்னாலேயன்றோ என் பிள்ளை போம்படியாயிற்று; க்ருஷ்ணன் எழுந்தருளிக் காப்பதை நீயன்றோதடுத்தாய்!' என்று நிந்தித்துக் கிருஷ்ணன் பக்கலிலே இழுத்துக்கொண்டுவர, கண்ணபிரான் கண்டு புன்சிரிப்புக்கொண்டு 'அவனை விடு; உனக்குப் பிள்ளையை நான் கொண்டுவந்து தருகிறேன்' என்றருளிச் செய்து, ப்ராஹ்மணனையும் அர்ஜுநனையும் தன்னுடன்கொண்டு தேரிலேறி, அர்ஜுநனைத் தேர்செலுத்தச் சொல்லி, அத்தேர்க்கும் இவர்கட்கும் திவ்யசக்தியைத் தனது ஸங்கல்பத்தால் கற்பித்து, இவ்வண்டத்துக்கு வெளியே நெடுந்தூரமளவுங் கொண்டுபோய், அங்கு ஓரிடத்தில் தேருடனே இவர்களை நிறுத்தி, தேஜோரூபமான பரமபதத்திலே தன்நிலமாகையாலே தானேபோய்ப் புக்கு, அங்கு நாச்சிமார் தங்கள் ஸ்வாதந்திரியங் காட்டுகைக்காகவும் கண்ணபிரானது திவ்ய ஸௌந்தர்யத்தைக் கண்டு களிக்கைக்காகவும் அழைப்பித்து வைத்த அந்தப் பிள்ளைகள் நால்வரையும் அங்குநின்றும் பூர்வரூபத்தில் ஒன்றுங்குலையாமற் கொண்டு வந்து கொடுத்தருளினனென்றவரலாறு இப்பாசுரத்திற் குறித்தது. "தப்பின பிள்ளைகளைத் தன மிகுசோதிபுகத் தனியொரு தேர்கடவித்தாயொடு கூட்டிய, என்னப்பன்" என்றும் "பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும் இறைப்பொழுதிற் கொணர்ந்துகொடுத் தொருப்படுத்த வுறைப்பன்" என்றும் பெரியாழ்வாரும், "இடரின்றியே யொருநாளொரு போழ்தி லெல்லாவுலகுங்கழியப், படர்புகழ்ப் பார்த்தனும் வைதிகனுமுடனேறத் திண்டேர் கடவிச், சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில் வைதிகன்பிள்ளைகளை, உடலொடுங் கொண்டு கொடுத்தவன்" என்று நம்மாழ்வாரும் அருளிச்செய்த பாசுரங்கள் இங்குக் குறிக்கொள்ளத் தக்கன.

**வேதவாய்மொழியந்தணன்**—"பொய்ம்மை மொழி புகன்றறியேன் புகல மன மெண்ணுகினும், மெய்ம்மையலதுரையாநா வேதநவில்பயிற்சியால்" என்றாற்போலக் கொள்ளலாம். வேதமோதினவனாகையாலே வாய்மை [ஸத்யம்] பொருந்திய மொழிகளை யுடையான் என்கை. வேதம்போலப் பயன்நிறைந்த வார்த்தைகளையுடையான் என்றுமாம்.

**எந்தை**—இயல்பாகிய அண்மைவிளி; எனது பரமபிதாவே! என்றபடி. புத்திரனைப் பிதா காப்பதுபோல என்னை நீ காக்கக்கடவை என்ற குறிப்பு. **காதல் மக்களை**=மறுமையில் தாய்தந்தையர்க்கு 'புத்' என்ற நரகத்தை இல்லாதபடி செய்தலும், இம்மையிலும் "மக்கள் மெய்தீண்டலுடற்கின்பம் மற்று அவர் சொற்கேட்ட லின்பஞ்செவிக்கு" என்றபடி பலவகையின்பந்தருதலும் பற்றி விரும்பப்படுகின்ற புதல்வர் என்கை. **மக்கள்**—பன்மைப்பெயர். **பயத்தலும்**—இறந்தகாலவினையெச்சம்.

**கடியதோர் தெய்வங்கொண்டொளிக்கும்**=இப்படியிருப்பதொரு தேவதையை இதுக்கு முன்பு நான் கண்டறியேன். யமனும் உடலை இங்கேவிட்டு உயிரையன்றோ கவர்ந்துகொண்டு போவது; பெற்று முகத்திலே விழிப்பதற்கு முன்னே உடலோடே கொண்டுபோய் ஒளியாநின்ற தெய்வம் இன்னதென்று தெரியவில்லையே! என்றான். "கடியதோர்தெய்வம்" என்னாதே 'கடியதெய்வம்' என்னும் பாடமும் வழங்கிவருகின்றது; இது நன்கு பொருந்தும்; முன் பின்னடிகளோடு அளவொத்ததாம்.

**ஏதலார்முன்னே**—ஏதலார் என்று சத்துருக்களுக்குப் பேர்: எப்படிப்பட்ட அருமையான காரியமும் எம்பெருமானருளால் கைகூடுமென்கிற கருத்தின்றியே அஹங்கார மமகாரமுடையராய்த் தம் முயற்சியாலேயே யாவும் ஆகுமென்னும் எண்ணமுடையாரை இங்கு சத்துருக்களென்கிறது. "பிறந்தகுழந்தைகள் செத்து எத்தனையோ வருஷங்களாயினவாம்; அவை இன்னவிடத்திலே போயினவென்று தெரியாதாம்; இப்படியிருக்க கிருஷ்ணனைக் கொண்டு மீட்டுக்கொள்ளப் புகுகிறானும்" என்று ஏசுகின்றவர்கள் கண்முன்னே என்றவாறு. .... (அ)

**துளங்கு நீண்முடியரசர் தங்குரிசில்**
**தொண்டை மன்னவன் திண்டிறலொருவற்கு ***
**உளங்கொளன்பினோ டின்னருள்சுரந்து**
**அங்கோடு நாழிகையேழுடனிருப்ப ***
**வளங்கொள்மந்திரம் மற்றவற்கருளிச்**
**செய்தவாறு அடியேனறிந்து * உலக**
**மளந்தபொன்னடியே யடைந்துய்ந்தேன்**
**அணிபொழில் திருவரங்கத்தம்மானே!** (கூ)

அணி பொழில் திருஅரங்கத்து அம்மானே!—;

| | |
|---|---|
| துளங்கு | விளங்குகின்ற |
| நீள் முடி | நீண்ட கிரீடத்தை யுடைய |
| அரசர் தம் குரிசில் | அரசர்கட்கு அரசனாகிய |
| திண் திறல் | மிக்க வலிமையையுடைய |
| தொண்டை மன்னவன் ஒருவற்கு | தொண்டை நாட்டரசனொருவனிடத்தில் |
| உளம் கொள் அன்பினோடு இன் அருள் சுரந்து | (நீ உன்) திருவுள்ளத்திற் கொண்ட அன்புடனே இனிமையான கருணையை மிகுதியாகச்செய்து, |

| | | | |
|---|---|---|---|
| அங்கு ஓடு நாழிகை ஏழுடன் இருப்ப | அரசாளுதலாகிய இம்மைச் செல்வத்திலே வீணே கழிகின்ற அவனது நாழிகையானது (அங்ஙனம் கழியாது) ஏழு தத்துவப்பொருள்களுடனே கூடியிருக்கும்படி | அவற்கு அருளிச் செய்த | அத் தொண்டைமான் சக்ரவர்த்திக்கு உபதேசித்தருளிய |
| வளம் கொள் மந்திரம் | சிறப்புக்கொண்ட பெரிய திருமந்திரத்தையும் | ஆறு | வகையை |
| மற்று | மற்றும் அதன்பொருளையும் | அடியேன் அறிந்து | அடியேன் தெரிந்து கொண்டு |
| | | உலகம் அளந்த பொன்அடியே அடைந்து உய்ந்தேன்—. | |

* * *—தொண்டைமான் சக்ரவர்த்திக்கு எம்பெருமான் திருவருள் செய்ததை முன்னிட்டுக்கொண்டு சரணம் புகுகிறாரிதில். உன்னையல்லது அறியாத மஹாபக்தனை தொண்டைமான் சக்ரவர்த்திக்கு நீ மந்திரோபதேசஞ் செய்து மெய்யுணர்வை யுண்டாக்கி யருளியதுபோல எனக்கும் மெய்யுணர்வையுண்டாக்கி யருளவேணும் என்று பிரார்த்திக்கிறபடி. இவர் முன்னே எம்பெருமான் பக்கல் திருமந்திரோபதேசம் பெற்று மெய்யுணர்வுடையராயினும் பணிவினால் தமது தத்துவஞானத்தைப் பாராட்டாது இங்ஙனம் வேண்டுகின்றார்.

சோழநாட்டரசனுடைய குமாரனும் தொண்டைநாட்டரசனுமான தொண்டைமான் சக்கரவர்த்தி திருவேங்கடமலையில் எம்பெருமானையடுத்து மிக்கபக்தியுடனே சிந்தித்து வந்தித்து வாழ்த்தி வழிபாடுசெய்ய, திருவுள்ளமுகந்த அத் திருவேங்கடமுடையான் மெய்த் தொண்டனை அவ்வரசனை நண்பனாகக் கொண்டு அவன் வரும்பொழுதெல்லாம் தனது அர்ச்சாவதார வரம்பைக்கடந்து அவனுடன் பேசுவனாயினனென்றும், அவ்வரசனுக்கு அஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தையும் அதன் அருமையான பொருள்களையும் மற்றும் பல ஹிதங்களையும் உபதேசித்தருளினதுமன்றி, அவனுக்குப் பகை வெல்லுதற் பொருட்டுத் தனது சங்குசக்கரங்களையுங் கொடுத்தருளினனென்றும், அவ்வரசன் அந்தப் பெருமானுக்குக் கோபுரம் மண்டபம் திருமதில் முதலிய பல திருப்பணிகளைச் செய்து மஹாவிபவத்துடன் நித்ய நைமித்திக உத்ஸவங்களையெல்லாம் நடத்திவைத்ததுமன்றி நாள்தோறும் ஸ்வர்ணமயமான ஆயிரத்தெட்டுத் தாமரைகளைக் கொண்டு ஸ்ரீநிவாஸனுக்கு ஸஹஸ்ரநாமார்ச்சனை செய்துவந்து இறுதியில் அப்பரமனருளால் பரகதியடையந்தன னென்றும் அறிக.

**துளங்குமுடி**=தனது நாட்டில் எந்தப்பிராணிகளுக்கும் பரஸ்பர விரோதமுண்டாகாதபடி அரசாட்சி செலுத்திய சிறப்பினால் ஒளிபெற்ற கிரீடம். **நீள்முடி**=தொன்று தொட்டுப் பரம்பரையாக வந்த கிரீடம். **அரசர்தம்குரிசில்**—ராஜாதிராஜன்; சக்ரவர்த்தி. **அரசர்தம்குரிசில் தொண்டைமன்னவன்**=தொண்டை நாட்டில் முடிசூட்டப் பெற்றவனாய்த் திக்விஜயஞ்செய்து நிலவுலக முழுவதையும் தனது அதிகாரத்தின் கீழ்ஆக்கி ஆள்பவன். அங்ஙனம் அரசனை

வரையும் வெல்லுதற்குக் காரணமான அவனது மஹாபலத்தைக் கொண்டாடி **'திண்திறலொருவன்'** என்றார். குரிசில்—ஆண்பாற் சிறப்புப் பெயர்.

**தொண்டைமான்** என்பது அக்குலத்து அரசரில் ஒருவனது பெயராயிருந்து பிறகு அந்நாட்டரசர்க்கெல்லாம் வழங்குகின்றதென்றும் தொண்டைமானது நாடு தொண்டைநாடென வழங்கலாயிற்றென்றுங் கூறுவர். தொண்டைமானென்ற பெயரின்காரணம்:—தொண்டைநாட்டின் ராஜதானியான காஞ்சிபுரத்திலிருந்த தொண்டைமானிளந்திரையனைக் குறித்துப் பாடப்பட்ட பெரும்பாணாற்றுப் படையில், "அந்நீர்த் திரைதருமரபின்....பல்வேல் திரையன்" என்றவிடத்து நச்சினார்க்கினியருரையில்—"நாகப்பட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தே சென்று நாககன்னிகையைப் புணர்ந்தகாலத்து அவள் 'யான்பெற்ற புதல்வனை என் செய்வேன்?' என்ற பொழுது, 'தொண்டையை [தொண்டை—ஓர் கொடி.] அடையாளமாகக் கட்டிக் கடலிலேவிட, அவன் வந்து கரையேறின் அவற்குயான் அரசவுரிமையை எய்துவித்து நாடாட்சி கொடுப்பன்' என்று அவன்கூற, அவளும் புதல்வனை அங்ஙனம்வரவிட, திரைதருதலின் திரையனென்று பெயர்பெற்ற கதை கூறினார்" என்றும், "தொண்டையோர் மருக" என்றவிடத்து உரையில் 'தொண்டையைச் சூடினோருடைய குடியிலுள்ளவனே!' என்றும் உரைத்தவாற்றால் விளங்கும். இனி, பூமியாகிய பெண்ணுக்குத் தொண்டை (கழுத்து) ஸ்தானமாயிருப்பதால் தொண்டை நாடென்றும், "தொண்டை நன்னாடு சான்றோருடைத்து" என்றபடி எம்பெருமானது தொண்டர்கள் பலர் வஸிக்கின்ற நாடு தொண்டை நாடு என்றும் காரணங்கூறுதலுமுண்டு. மேற்குப் பவளமலை வேங்கடம் நேர்வடக்காம், ஆர்க்குமுவரி யணி கிழக்குப்—பார்க்குளுயர் தெற்குப் பினாகி திகழிருபதின்காதம், நற்றொண்டை நாடெனவே நாட்டு" என்றதனால் தொண்டை நாட்டின் எல்லையை உணர்க.

**திண்திறல்**—ஒருபொருட் பன்மொழி. **உளங்கோளன்பினோடு இன்னருள் சுரந்து**=உளம்—உள்ளம்; அகத்துறுப்பு; அந்தஃகரணம். நச்சினார்க்கினியர் "அன்பு என்பது அருட்குமுதலாகி மனத்தில் நிகழும் நேயம்; அஃது உடையார்க்குப் பிறர்கண் துன்பங்கண்ட வழிக் கண்ணீர்விழுமாகலின் அவ்வருளானே அவ்வன்புடைமை விளங்குமென்பது" என்றும், "அளியாவது—அன்புகாரணத்தால் தோன்றும் அருள்" என்றும் உரைத்துள்ளதனால் அன்புக்கும் அருளுக்குமுள்ள வேறுபாடு விளங்கும். [**உளங்கோளன்பு.**] அவனுக்கு ஹிதோபதேசம் பண்ணவேணுமென்று குளிர்ந்த திருவுள்ளத்திற் கொண்ட அன்பு. **'சுரந்து'** என்றசொல்லாற்றலால் அருளாகிய பாலமுதின் மிகுதி தோன்றும்; திருவுள்ளத்திலுள்ளது அங்கு அடங்காது சுரந்தது, அன்றீன்ற கன்றுக்குச் சுரக்கும் பசுவின் பால்போல வென்க.

**அங்கோடு நாழிகை யேழுடனிருப்ப**='**அங்கோடு**' என்று பலரும் ஓதுவர்களாயினும், அதற்குச்சேர அரும்பதவுரைகாரர், "ஓடு என்றது குறுகிக் கிடக்கிறதாய், ஓடுகிற—கழிகிற........" என்று உரைப்பராயினும் அப்பாடம் மறுக்கத்

தக்கது. "விரித்தல் தொகுத்தல் வருஞ்செய்யுள் வேண்டுழி" என்றன்றோ இலக்கண முள்ளது; 'ஓடு' என்பது 'ஒடு' எனக்குறுகிய தென்று கொள்ளப்பொருத்தமே யில்லை; பொருட்குப் பொருந்தாமையோடு யாப்புக்கும் பொருந்தாது. ஓடு என்ற பாடமே பொருட்குப் பொருந்துவதோடு முன்பின்னடிகட்கு அளவொத்ததுமாம்.

அங்கு ஓடுநாழிகை ஏழுடன் இருப்ப—அந்த ராஜ்ய பரிபாலந காரியத்தில் வீணாய் [ஓடுகின்ற] கழிகின்ற காலங்களிலே ஒருயாமப் பொழுது தன்னுடன் அத் தொண்டைமான் சக்ரவர்த்தி தினந்தோறும் இருந்து இனிது கழிக்க, என்றவது, ஏழு அர்த்தங்கள் நெஞ்சில்பட இம்மெய்ப்பொருளுணர்வுட னிருக்கும் படி என்றுவது பொருள் கொள்ளலாம். ஏழு அர்த்தங்களாவன—தேஹமே ஆத்மா என்கிற ப்ரமம் நீங்குதல் 1, தான் ஸ்வதந்த்ரனென்னுங் கொள்கை நீங்குதல் 2, தேவதாந்தரங்கட்குத் தானடியவ ராகாமை 3, பேற்றின்பொருட்டுத் தன்முயற்சி தவிர்தல் 4, உறவினரல்லாதாரை உறவினராகக் கொள்ளாமை 5, ஐம்புலவாசையொழிதல் 6, பாகவத சேஷத்வம் 7—என்பன. இந்த ஏழுதத்துவப்பொருள்களும் திருமந்திரத்திலடங்கியவை யென்பதும், திருமந்த்ர மந்த்ரார்த்தங்களின் உபதேசத்தால் அடியார்க்கு இவ்வியல்புகள் அமையுமென்பதும் ஸம்ப்ரதாயம்.

வளங்கொள் மந்திரம்—"நமோநாராயணு யேதி மந்த்ரஸ் ஸர்வார்த்த ஸாதகঃ" என்றும் "குலந்தருஞ் செல்வந்தந்திடும்........நாராயணு வென்னும் நாமம்" என்றும் சொல்லுகிறபடியே எல்லாப் பலன்களையு மளிக்கவல்ல ஔதார்யம் பொருந்திய திருமந்திரம். "ஸர்வம் அஷ்டாக்ஷராந்தஸ்ஸ்தம்—ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்ஸ்தம்" என்கிறபடியே எல்லாப் பொருள்களையும் தனக்குள்ளே அடக்கியிருக்கின்ற திருமந்திர மெனினுமாம்.

உய்ந்தேன்—உன் திருவடிகளையே அடைந்ததனால் இனி உஜ்ஜீவித்துப் போவேன் என்னவேண்டுமிடத்து இறந்தகாலமாக அருளிச்செய்தது—தெளிவும் விரைவும்பற்றிய காலவழுவமைதி. .... .... (கூ)

மாடமாளிகைசூழ் திருமங்கை
மன்னன் ஒன்னலர்தங்களை வெல்லும் *
ஆடல்மாவலவன் கலிகன்றி
அணிபொழில் திருவரங்கத்தம்மானை *
நீடுதோல்புக ழாழிவல்லானை
எந்தையை நெடுமாலை நினைந்த *
பாடல்பத்திவை பாடுமின்தொண்டீர்!
பாட நும்மிடைப் பாவம் நில்லாவே. (கo)

| | |
|---|---|
| மாடம் மாளிகை சூழ் | உபரிகைகளை யுடைய வீடுகள் எங்கும் நிறைந் திருக்கப் பெற்ற |
| திரு மங்கை | திருமங்கை யென்னும் நாட்டுக்கு |
| மன்னன் | அரசரும் |
| ஒன்னலர் தங்களை வெல்லும் | பகைவர்களை வெல்லுகின்ற |
| ஆடல் மா | ஆட்டத்திற் சிறந்த குதிரையை ஏறிச் செலுத்துதலில் |
| வலவன் | வல்லவருமான |
| கலிகன்றி | ஆழ்வார் |
| அணி பொழில் திரு அரங்கத்து அம்மானை | அழகிய சோலைகள் சூழ்ந்த ஸ்ரீரங்கத்திற் பள்ளி கொண்டருள் கின்ற ஸ்வாமியும் |
| தொல் | தொன்றுதொட்டு வருகிற |
| நீடு புகழ் | மிக்க கீர்த்தியையுடைய |
| ஆழி | திருவாழியாழ்வானைப் பிரயோகித்தலில் |
| வல்லானை | வல்லவனும் |
| எந்தையை | எமது தலைவனுமா— |
| நெடு மாலை | பெருமையையுடைய ஸ்ரீமந்நாராயணனை |
| நினைந்த | மனத்தினால் அநுபவித்து அருளிச்செய்த |
| இவை பத்து பாடல் | இந்தப் பத்துப் பாசுரங்களையும் |
| தொண்டீர் | எம்பெருமானடியார்களே! |
| பாடுமின் | நீங்கள் ஓதுங்கள்; |
| பாட | அங்ஙனம் ஓதவே |
| நும்மிடை பாவம் நில்லா | உங்களிடத்திற் பாவங்கள் நிற்கமாட்டா. |

* * *—தொண்டர்காள்! திருமங்கையாழ்வார் திருவரங்கநாதனைப் பாடிய இத்திருமொழியின் பாசுரங்களைப் பாடுங்கள்; பாடினால் உங்கள் பாவங்களெல்லாம் கழியும் என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். இத்திருமொழியைக் கற்பவர் தீவினைதீர்ந்து எம்பெருமானருளாற் பரமபதமடைவரென்பது கருத்து.

"**ஒன்னலர் தங்களை வெல்லும்**" என்பது ஆடல்மாவுக்கும் விசேஷணமாகலாம், ஆடல்மாவல்லவனுக்கும் ஆகலாம். ஒன்னலர்—'ஒன்றலர்' என்பதன் மரூஉ; சேராதவர் என்பது பொருள்; பகைவர்க்குக் காரணக்குறி. எதிர்மறை வினையாலணையும் பெயர். **ஆடல்மா**—ஆழ்வார் தனதாகக்கொண்டு ஏறிச்செலுத்திய சிறந்த குதிரைக்கு இப்பெயர் வழங்கும். வலவன்—வல்லவன்; ஸமர்த்தன். பாகன் என்றபடி.

**நெடுமாலை நினைந்தபாடல்**=எம்பெருமானது திருக்குணங்களை மனத்தினால் நினைக்க அவ்வநுபவம் உள்ளடங்காமல் வெளியே பாடல்களாகப் பொசிந்ததென்க. ஆதியோடந்தமாகச் சரணாகதியையே பொருளாகக்கொண்டு கூறிய இத்திருமொழி அங்ஙனம் அடிமைப்பட்ட மெய்யடியார் அநுஸந்திப்பதற்குச் சிறந்ததென்பது தோன்ற "பாடல்பத்திவை பாடுமின் **தொண்டீர்**" என்றார்.

**பாட நும்மிடைப்பாவம் நில்லாவே**=பால்குடிக்க நோய்தீருமாபோலே இவருடைய பாசுரத்தைச் சொல்ல ப்ராப்திப்ரதிபந்தகங்கள் தன்னடையே விட்டுப்போம் என்ப. ஆழ்வார் எம்பெருமானை நினைத்துப் பாடிய இப்பாடல்களை நீங்கள் எம்பெருமானை நினையாமலே பாடினாலும் ஆழ்வார்க்குப் போலவே உங்

கட்கும் ஸர்வபாபங்களும் அற்றுப்போம் என்று பாசுரங்களின் மஹிமையைக் கூறுகின்ற நோக்கம் 'நெடுமாலே நினைந்த பாடல்பத்திவைபாடுமின்' என்ற சொற்போக்கினால் தோன்றுகின்றது. .... .... .... (கo)

அடிவரவு :—ஏழை வாதம் கடி நஞ்சு மாகம் மன்னு ஓது வேதம் துளங்கு மாடம் கை.

## எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஸ்ரீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஐந்தாம்பத்து—ஒன்பதாந்திருமொழி

# கையிலங்காழிசங்கன்.

அவதாரிகை:—கீழ்த்திருமொழியில் திருவரங்கநாதன் திருவடியிணையில் ப்ரபத்திபண்ணினார் ஆழ்வார். இவ்விருள்தருமா ஞாலத்தி விருப்பைப்போக்கி நித்யவிபூதியில் நித்யகைங்கரியத்திற்கு ஆளாக்கிக்கொள்ளவேணுமென்பதே அந்த ப்ரபத்திக்குக் கருத்தாயினும், எம்பெருமான் தன் ஸ்வாதந்திரியத்தின் படியே செய்யக்கடவனன்றோ; (கீழ்த்திருமொழியில் ஐந்தாம்பாட்டிற் படியே) கோவிந்தஸ்வாமி யென்பவன் பிரார்த்தித்தது ஒன்றும் அவனுக்குப் பணித்தது வேறொன்றுமாயன்றோ நிகழ்ந்தது; அவரவர்களுடைய உட்கருத்தை நன்கறிந்து காரியஞ்செய்ய வல்லவனான எம்பெருமான் கோவிந்தஸ்வாமியை விஷயபோகங்களில் மூட்டுவதே உரியது என்று கருதிச் செய்ததுபோல, இவ்வாழ்வார்க்கும் இங்ஙனே திவ்யதேசங்களை யநுபவிப்பதில் உள்ளுறை அபிநிவேசமிருக்கும்படியை உணர்ந்து, 'ஆழ்வீர்! இந்நிலத்திலும் பரமபதத்திற்குப் போலியான திருப்பதிகள் பலவுண்டாயிருக்க, அவற்றை அநுபவிக்கவேணு மென்கிற விருப்பமும் உமக்குக் குறையற்றிராநிற்க, பரமபத ப்ராப்திக்கு இப்போதாக ஒரு அவஸரமில்லைகாணும்; அது நாமே ஸமயம்பார்த்துச் செய்யக் கடவோம்; இன்னமும் ஆநந்தமாகத் திருப்பதிகளிலே மண்டி அநுபவித்துப் போதுபோக்கும்' என்றருளிச்செய்ய, 'அப்பக்குடத்தான் ஸந்நிதி' என்று ப்ரஸித்தமான தென்திருப்பேர் நகரிலே புக்கு வாயாரப்பேசி அநுபவித்து இனியராகிறார் இத்திருமொழியில். .... .... .... ....

கையிலங்காழி சங்கன் கருமுகில் திருநிறத்தன் *
பொய்யிலன் மெய்யன் தன்தாளடைவரேல் அடிமையாக்கும் *
செய்யலர்கமலமோங்கு செறிபொழில் தென்திருப்பேர் *
பையரவணையான் நாமம் பரவிநானுய்ந்தவாறே !. (௧)

| | |
|---|---|
| கை இலங்கு ஆழி சங்கன் | திருக்கையிலே விளங்குகின்ற திருவாழி திருச்சங்கை யுடையனும் |
| கரு முகில் திரு நிறத்தன் | காளமேகம்போன்ற திருநிறத்தை யுடையவனும் |
| பொய் இலன் | (சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டுள்ள வைலக்ஷண்யங்களில்) பொய்யில்லாதவனும் |
| மெய்யன் | (அந்த வைலக்ஷண்யங்களைத் தன்னடியார்கட்கு) மெய்யே காட்டிக் கொடுப்பவனும் |
| தன் தாள் அடைவர் ஏல் அடிமை ஆக்கும் | (யாராவது) தன் திருவடிகளைப் பணிவாராகில் (அவர்களை) நித்ய கைங்கரிய நிஷ்டராக ஆக்கிக் கொள்பவனும், |
| அலர் கமலம் ஓங்கு செய் | மலர்ந்த தாமரைகள் உயர்ந்திருக்கப்பெற்ற கழனிகளையும் |
| செறி பொழில் | அடர்ந்த சோலைகளையும் உடைத்தான |
| தென் திருப்பேர் | தென் திருப்பேர் நகரில் |
| பை அரவு அணையான் | பரந்த படங்களையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடையனுமான பெருமானுடைய |
| நாமம் | திருநாமங்களை |
| நான் பரவி | நான் சொல்லி |
| உய்ந்த ஆறு ஏ | உஜ்ஜீவித்தபடி என்னே !. |

* * *—அநுகூலர்க்குப் பல்லாண்டு பாடுதற்குப் பாங்காகவும் பிரதிகூலர்க்குக் கொலைத்தொழில் செய்ய உறுப்பாகவும் திருக்கைகளிலே திருவாழி திருச்சங்காழ்வார்களை ஏந்தியிருப்பவனும், நீர்கொண்டெழுந்த காளமேகம்போன்ற திருநிறத்தையுடையவனும், தன்னைப்பற்றி சாஸ்த்ரங்களிலே சொல்லப்பட்டுள்ள வைபவங்களில் ஈஷத்தும் பொய்யாகாமேயிருப்பவனும், அந்த வைபவங்களையெல்லாம் பக்தர்கட்கு மெய்யேகாட்டித் தந்தருள்பவனும், தன் திருவடிகளிலே வந்து பணிகின்றவர்களுக்கு * ஒழிவில்கால மெல்லாமுடனாய் மன்னிவழுவிலா வடிமைசெய்யும் பேற்றைத்தந்தருள்பவனுமான எம்பெருமான் பரமபோக்யமான திருப்பேர்நகரில் அரவணையில் கண்வளர்ந்தருளாநின்றான்; அன்னவனுடைய திருநாமங்களை நான் வாயாரச்சொல்லி உய்வுபெற்றவிதம் என்னால் பாசுரமிட்டுச் சொல்லப்போகாது என்கை.

பொய்யிலன்=“ அபயம் ஸர்வ பூதேப்யோ ததாமி ” என்று கடற்கரையிலும் “ அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி ” என்று திருத்தேர்த்தட்டிலும் நின்று சொன்ன சொற்களை அநுஷ்டாநத்திற் கொண்டுவருமதில் பொய்ம்மையில்லாதவன் என்னவுமாம்: ஆச்ரிதரக்ஷணம் தவறாதவன் என்றபடி.

‘பொய்யிலன்’ என்ற விசேஷணத்திலேயே ‘மெய்யன்’ என்பது அர்த்தாத் ஸித்தமாயினும் தனிப்படவும் சொல்வது உறைப்பைக்காட்டும். “ ஞாநம்

ஊாநுஷம் ஒந்ரு—ஆத்மாநம் மாநுஷம் மந்யே" என்றபடியே மநுஷ்யபாவனையே மிக்கு அவதரித்த விடத்திலும் ஜடாயுவைநோக்கி "ஹுலொகாநநுத ஊாநு—நல்ல உலகத்திற்குப் போய்ச்சேர்" என்று விடைகொடுத்தருளினது எங்ஙனே சேரும்? என்றால், "ஸதுந லொகாநு ஜயதி...ராவவஃ—ஸத்ய வாக்கு உள்ளதனால் எல்லாவுலகமும் இராகவனிட்ட வழக்காயிருக்கும்" என்றிருப்பதனாலே சேரும் என்று ஸமாதாந முரைக்கவேண்டும்படியான ஸத்ய வாக்குறுதி விசேஷித்திருப்பதுண்டிறே. .... .... .... (க)

வங்கமார்கடல்களேழும் மலையும்வானகமு மற்றும் *
அங்கண்மா ஞாலமெல்லா மமுதுசெய்துமிழ்ந்த வெந்தை *
திங்கள்மாமுகிலணவு செறிபொழில் தென்திருப்பேர் *
எங்கள்மாலிறைவன் நாமம் ஏத்திநானுய்ந்தவாறே !. (உ)

| | | | |
|---|---|---|---|
| வங்கம் ஆர் | மரக்கலங்கள் நிறைந்திருக்கப்பெற்ற | திங்கள் மா முகில் அணவு | சந்திர மண்டலத்தையும் மேக மண்டலத்தையும் அளாவியிருக்கிற |
| கடல்கள் ஏழும் | ஸப்த ஸாகரங்களும் | செறி பொழில் | நெருங்கிய சோலைகளையுடைத்தான |
| மலையும் | குலபர்வதங்களும் | தென் திருப்பேர் | தென் திருப்பேர் நகரில் எழுந்தருளியிருக்கிற |
| வானகமும் | ஆகாசமும் | எங்கள் மால் | எம்பெருமானுமாகிய |
| மற்றும் | அதற்குமேலே | இறைவன் | ஸர்வேச்வரனுடைய |
| அம் கண் மா ஞாலம் | அழகிய இடமுடைத்தான பரந்தபூமியும் (ஆகிய) | நாமம் | திருநாமங்களை |
| எல்லாம் | எல்லாவற்றையும் | ஏத்தி | துதித்து |
| அமுதுசெய்து | (பிரளயகாலத்தில்) விழுங்கி | நான் உய்ந்த ஆறு ஏ | நான் வாழ்ந்தவிதம் என்னே !. |
| உமிழ்ந்த | பிறகு வெளிப்படுத்தின | | |
| எந்தை | ஸ்வாமியும், | | |

* * *—கடல்களும் மலைகளுமான மண்ணுலகமும் விண்ணுலகமுமெல்லாம் பிரளயவெள்ளத்தில் அழியப்புகுமளவில் அவற்றையெல்லாந் திரட்டித் திருவயிற்றினுள்ளே வைத்துக் காத்தருள்வதும் பிறகு வெளிப்படுத்துவதும் செய்கின்ற பெருமான் அந்த ச்ரமஹரமான பரமபோக்யமான திருப்பேர்நகரில் திருக்கண்வளர்ந்தருளா நின்றான்; அப்பெருமானுடைய திருநாமங்களை வாயாரப் புகழ்ந்து உய்ந்தேன் என்றாராயிற்று.

**வங்கம்**=இதைத் தமிழ்ச்சொல்லாகவே கொண்டால் 'கப்பல்' என்று பொருளாம்: "ஊம்ஹ்யாநம் ஊதிவஹ்" என்ற அமரகோசத்தின்படியே, '**பங்க**ஃ' என்ற வடசொல்லின் விகாரமாகக் கொண்டால் 'அலை' என்று பொருளாம்: இரண்டும் ஒக்குமிங்கு.

**திங்கள்மாமுகில்**—சந்திரன் தோன்றுகிற மேகமண்டலம் என்னவுமாம். (உ)

**ஒருவனையுந்திப் பூமேலோங்குவித்து, ஆகந்தன்னால் ***
**ஒருவனைச்சாபம் நீக்கி உம்பராளென்று விட்டான் ***
**பெருவரை மதிள்கள்சூழ்ந்த பெருநகரரவணைமேல் ***
**கருவரைவண்ணன்தன்பேர் கருதிநானுய்ந்தவாறே !.** (ரு)

| | |
|---|---|
| ஒருவனை | நான்முகனாகிய ஒருவனை |
| உந்தி பூ மேல் | திருநாபிக் கமலத்தில் |
| ஓங்குவித்து | உண்டாக்கினவனும் |
| ஒருவனை | ருத்ரனாகிய ஒருவனை |
| ஆகம் தன்னால் | (தனது) திருமார்பிலுண்டான ஸ்வேதஜலத்தாலே |
| சாபம் நீக்கி | (அவனுடைய) பிரமஹத்தி சாபத்தைத் தொலைத்து |
| உம்பர் ஆள் | ‘(நீ முன்போலவே) மேலுலகங்களை ஆளக்கடவாய்’ |
| என்று விட்டான் | என்று விடை கொடுத்தவனும், |
| பெரு வரை மதில்கள் சூழ்ந்த | பெரிய மலைகள் போன்ற திருமதிள்களாலே சூழப்பட்ட |
| பெரு நகர் | திருப்பேர் நகரில் |
| அரவு அணை மேல் | சேஷசயனத்தின்மீது |
| கரு வரை வண்ணன் தன் பேர் | கரியமலை யொன்று சாய்ந்தாற்போன்றுள்ளவனுமான பெருமானுடைய திருநாமங்களை |
| கருதி | சிந்தித்து |
| | நான் உய்ந்த ஆறு ஏ—. |

* * *—பதினான்கு லோகங்களுக்கும் நிர்வாஹகனாகையாலே ‘அத்விதீயன்’ என்று சொல்லத்தக்கவனான நான்முகக்கடவுளைத் திருநாபிக்கமலத்தில் தோன்றுவித்தவனும், மற்றொரு கடவுளான சிவனுக்கு நேர்ந்த ப்ரஹ்மஹத்யா சாபத்தைத்தொலைத்து ‘தேவஜாதிக்கெல்லாம் நியாமகனாயிருக்கும் பெருமையில் ஒன்றுங்குறையாதபடி நடந்துகொள்’ என்று நியமித்து விடுத்தவனுமான பெருமான் மலைபோன்ற மதிள்கள் சூழ்ந்த திருப்பேர்நகரில் சேஷசாயியாய் விளங்காநின்றான்; அப்பிரானுடைய திருநாமங்களை யநுஸந்தித்து நான் வாழ்ந்தேனென்றாராயிற்று.

**ஆகந்தன்னால்**—‘ஆகம்’ என்று உடம்புக்கும் மார்வுக்கும் பெயர்; இங்கு இலக்கணையால் மார்விலுண்டான நீரைச்சொல்லுகிறது. மார்வில் நீரையெடுத்துப் பிச்சையிட்டுச் சாபந்தீர்த்தனனென்க. “என்எந்தாய்! சாபந்தீரென்ன இலங்கமுதநீர் திருமார்பில் தந்தான்” என்றார் இவர் தாமே கீழ்; “ஈனமர்சாபம் நீக்காயென்ன வொண்புனலை யீந்தான்” என்பர்மேல். திருச்சந்த விருத்தத்தில் “கீறுதிங்கள் வைத்தவன் கைவைத்தவன் கபால்மிசை, ஊறுசெங்குருதியால் நிறைத்த” என்றதனால், திருமார்வைக்கீறி ரத்தத்தையெடுத்துப் பிச்சையிட்டதாகவும் உண்டு.

**அரவணைமேல் கருவரைவண்ணன்**—ஒரு வெள்ளிமலையின்மேல் அஞ்சனகிரிசாய்ந்தாற்போன்ற பரபாக அழகு காண்க. .... .... .... (ரு)

**ஊனமர்தலையொன்றேந்தி உலகெலாந்திரியுமீசன் ***
**ஈனமர்சாபம்நீக்கா யென்ன ஒண்புனலை யீந்தான் ***
**தேனமர் பொழில்கள்சூழ்ந்த செறிவயல் தென்திருப்பேர் ***
**வானவர்தலைவன் நாமம் வாழ்த்திநானுய்ந்தவாறே !.** (சு)

| | |
|---|---|
| ஊன் அமர் தலை ஒன்று | மாம்ஸம் நிறைந்ததொரு பிரமகபாலத்தை |
| ஏந்தி | கையில் தரித்துக்கொண்டு |
| உலகு எல்லாம் | எல்லாலோகங்களிலும் |
| திரியும் | (பிச்சையெடுத்துத்) திரிந்துகொண்டிருந்த |
| ஈசன் | ருத்ரனானவன் |
| ஈன் அமர் சாபம் நீக்காய் என்ன | ‘தண்மையை விளைப்பதான சாபத்தை நீக்கியருள்’ என்று பிரார்த்திக்க |
| ஒண் புனலை | அழகிய ஸ்வேதஜலத்தை |
| ஈந்தான் | கொடுத் (து அந்தசாபத்தைத் தீர்த்) தவனும், |
| தேன் அமர் பொழில்கள் சூழ்ந்த | வண்டுகள்நிறைந்த சோலைகளால் சூழப்பட்டதும் |
| செறி வயல் | நெருங்கின கழனிகளையுடையதுமான |
| தென் திருப்பேர் | தென்திருப்பேர் நகரில் எழுந்தருளியிருக்கிற |
| வானவர் தலைவன் | தேவாதிதேவனுமான பெருமானுடைய |
| நாமம் | திருநாமங்களை |

நான் வாழ்த்தி உய்ந்த ஆறு—.

* * *—பிரமனுடைய தலையொன்றைக் கிள்ளியெடுத்ததனால் அக்கபாலம் அப்படியே கையில் ஒட்டிக்கொள்ள, அப்பாவந்தொலைய அக்கபாலம் நிறையப் பிச்சையெடுக்கவேண்டு மென்றறிந்து பலகாலம் பலதலங்களிலுஞ் சென்று பிச்சையேற்று வருந்தித்திரிந்தும் அக்கபாலம் நிறையாது நீங்காதாக, ஒருநாள் பதரிகாச்ரமத்தையடைந்து நாராயணமூர்த்தியான தன்னை வணங்கிப் பிரார்த்தித்தபோது தனது திருமார்பினின்று ஸ்வேதஜலத்தை யெடுத்து ‘அக்ஷயம்’ என்று பிக்ஷையிட்டு அக்கபாலத்தை நிறைத்து அக்கபாலத்தைக் கையைவிட்டகலச்செய்தருளின பெருமான் பரமபோக்யமான திருப்பேர்நகரில் தேவாதிதேவனாய் விளங்குகின்றான்; அவனது திருநாமங்களை வாழ்த்தி நான் உய்வு பெற்றேனென்றாராயிற்று.

ஈனமர்சாபம்—கண்டவர்களடங்கலும் ‘இவன் பிரமஹத்திக்காரன்’ என்று பழிக்கும்படியாகவுள்ள பாவம் என்றவாறு. ‘ஹீநம்’ என்ற வடசொல் ‘ஈன்’ எனச்சிதைந்தது. .... .... .... .... .... (௪)

வக்கரன் வாய்முன்கீண்ட மாயனே யென்றுவானோர்
புக்கு * அரண்தந்தருளாயென்னப் பொன்னாகத்தானை *
நக்கரியுருவமாகி நகங்கிளர்ந்திடந்துகந்த *
சக்கரச்செல்வன் தென்பேர்த் தலைவன் தாளடைந்துய்ந்தேனே. (௫)

| | |
|---|---|
| முன் | முன்பொருகால் |
| வானோர் | தேவதைகள் |
| வக்கரன் வாய் கீண்ட மாயனே என்று | ‘தந்தவக்ரனுடைய வாயைக் கிழித்துப் போட்ட மாயவனே!’ என்று (துதித்துக்கொண்டு) |
| புக்கு | வந்து சேர்ந்து |
| அரண் தந்தருளாய் என்ன | ‘(எங்களுக்கு) ரக்ஷை கொடுத்தருளவேணும்’ என்று பிரார்த்திக்க |
| பொன் ஆகத்தானை | இரணியாசுரனை, |
| அரி உருவம் ஆகி | நரஸிம்ஹரூபியாகி |

| | | | |
|---|---|---|---|
| நக்கு | சிரித்து | தென் பேர் தலைவன் | தென்திருப்பேர் நகரிலெழுந்தருளி யிருப்பவனுமான பெருமானுடைய |
| கிளர்ந்து | வளர்ச்சியடைந்து | தாள் | திருவடிகளை |
| நகம் | நகங்களினால் | அடைந்து | ஆச்ரயித்து |
| இடந்து | கிழித்துப்போட்டு | உய்ந்தேன் | உஜ்ஜீவிக்கப்பெற்றேன். |
| உகந்த | திருவுள்ளம் மகிழ்ந்தவனும் | | |
| சக்கரம் செல்வன் | திருவாழியாலே அழகு பெற்றவனும் | | |

* * *—அளவற்ற வரங்கள் பெற்றதனாலும் தேஹவலிமையினாலும் செருக்குற்ற இரணியனாலுண்டான நலிவுகளைப் பொறுக்கமாட்டாத தேவர்கள் அஞ்சி வந்து 'பிரானே! தந்தவக்ரனைக் கொன்றொழித்ததுபோல் இப்பாவியையும் தொலைத்தருளவேணும்' என்று பிரார்த்திக்க, அந்தப்பிரார்த்தனையைத் திருவுள்ளத்திற் கொண்டிருந்து பிறகு ஒருஸமயத்தில் ப்ரஹ்லாதாழ்வானை நலிந்ததே ஹேதுவாக நரங்கலந்த சிங்கமாய்த்தோன்றி நகங்களால் அவன் மார்வைப் பிளந்தொழித்து 'ஆச்ரிதவிரோதி தொலையப்பெற்றோம்' என்று திருவுள்ள முவந்த பெருமான் திருப்பேர்நகர்க்குத் தலைவனாய் விளங்குகின்றான்; அப்பிரானுடைய திருவடிகளிலே தலையை படுத்து உஜ்ஜீவித்தே னென்றாராயிற்று.

**வக்கரன்**—'தந்தவக்ரன்' என்ற பெயரின் ஏகதேசம். கண்ணபிரான் ருக்மிணிப்பிராட்டியை ஸ்வீகரித்தருளினபோது எதிர்த்து வந்து போர்செய்து மாண்டொழிந்த அரசர்களில் இவனொருவன்.

நரஸிம்ஹாவதாரத்திற்கு மிகவும் பிற்பட்டதான க்ருஷ்ணாவதாரத்தில் கொல்லப்பட்ட வக்கரனைப்பற்றி நரஸிம்ஹாவதாரத்திற்குமுன் வானோர் எடுத்துக்கூறினரென்றால் இது பொருந்துமோ? என்று சங்கிக்கவேண்டா; எம்பெருமானுடைய திருவவதாரங்கள் பன்முறை நிகழ்ந்தனவாக நூல்கள் கூறும். அன்றியும், இரணியனால் தகர்ப்புண்ட தேவர்கள் ஏதோ சில வாக்கியங்களைச்சொல்லி எம்பெருமானைத் துதித்திருந்தாலும் '**வக்கரன் வாய்முன் கீண்ட மாயனே!**' என்று ஆழ்வார் அருளிச்செய்யக் குறையில்லை. "தேனுகனும் முரனும் திண்டிறல் வெந்நரகனென்பவர்தாம் மடியச் செருவதிரச் செல்லும், ஆனை! எனக்கொருகாலாடுக செங்கீரை ஆயர்கள் போரேறே ஆடுகவாடுகவே" என்று கண்ணபிரானுடைய இளம்பிராயத்தில் யசோதைப்பிராட்டி கூறுவதாகப் பெரியாழ்வா ரருளிச்செய்த பாசுரமும் இதுபோன்ற மற்றும்பல பாசுரங்களும் இங்கு ஸ்மரிக்கத்தக்கன.

**பொன்னாகத்தான்**—பொன்னுடம்பினன்; இரணியன். '**நக்கரி**' என்று விடத்து, நகு+அரி, நக்கரி என்றுங்கொள்ளலாம்; வாய்திறந்துகொண்டே தோன்றின நரசிங்கம் என்கை.

**சக்கரச்செல்வன்**—விரோதிகளைக் கொலைபுரியும் விஷயம் வந்தால் திருவாழியாழ்வான் தான் முற்படுவது வழக்கம்; ஹிரண்யாஸுரவத ஸமயத்தில் அவ்வசுர

னுடைய உடல் நரஸிம்ஹ மூர்த்தியின் திருநகங்களுக்கே இரைபோதாமையாலே திருவாழியாழ்வான் வியாபரிக்க அங்கு அவகாசமே இல்லையாயிற்று; ஆகவே, தான் அழகுக்கு உடலாக அமைந்தானத்தனை; அதைச்சொல்லுகிறதாம் **சக்கரச்செல்வன்** என்று. செல்வு—அழகு. .... .... (௫)

**விலங்கலால்கடலடைத்து விளங்கிழைபொருட்டு * வில்லால்**
**இலங்கைமாநகர்க் கிறைவன் இருபதுபுயம் துணித்தான் ***
**நலங்கொள் நான்மறைவல்லார்கள் ஓத்தொலியேத்தக் கேட்டு ***
**மலங்குபாய்வயல் திருப்பேர் மருவிநான் வாழ்ந்தவாறே!** (௬)

| | |
|---|---|
| விளங்கு இழை பொருட்டு | விளங்குகின்ற ஆபரணங்களை அணியத்தகுந்தவளான பிராட்டிக்காக |
| விலங்கலால் | மலைகளினால் |
| கடல் | தெற்குஸமுத்ரத்தை |
| அடைத்து | அணைசெய்து |
| | (இலங்காபுரியிற் புகுந்து) |
| இலங்கை மா நகர்க்கு இறைவன் | (அந்த) இலங்கையென்னும் பெரியபட்டணத்திற்குத் தலைவனான இராவணனுடைய |
| இருபது புயம் | இருபதுதோள்களை |
| வில்லால் | (தனது) சார்ங்கத்தினால் |
| துணித்தான் | அறுத்தொழித்த பெருமான் (எழுந்தருளியிருக்கப் பெற்ற),— |
| நலம் கொள் | நல்லொழுக்கமுடையராய் |
| நால் மறை வல்லார்கள் | நான்குவேதங்களிலும் வல்லவர்களான அந்தணர்கள் |
| ஓத்து ஒலி ஏத்த | வேதகோஷங்களைச் செய்து கொண்டிருக்க |
| கேட்டு | அவ்வொலியைக் கேட்டு |
| மலங்கு | மீன்களானவை |
| பாய் | அஞ்சித் துள்ளியோடப் பெற்ற |
| வயல் | கழனிகளையுடைத்தான |
| திரு பேர் | திருப்பேர்நகரை |
| மருவி நான் வாழ்ந்த ஆறு | அடைந்து நான் வாழ்ச்சி பெற்றவிதம் என்னே!. |

* * *—நீரிலே ஆழ்ந்துபோகவேண்டிய மலைகளைக்கொண்டு கடலிலே அணைகட்டி அவ்வழியால் இலங்கைசென்று இராவணனது இருபது தோள்களையுந் துணித்தொழித்த பெருமான் இன்றைக்கும் அங்ஙனொத்த ஆச்ரிதவிரோதிகளைத் தொலைப்பதற்குத் திருப்பேர்நகரைத் தனக்கிருப்பிடமாகக் கொண்டுள்ளான்; அத்திருப்பதியைப் பொருந்தி நான் வாழ்ந்தேனென்கிறார்.

**விலங்கல்**—மலை; பால்பகா அஃறிணைப்பெயராதலால் 'மலைகள்' என்று பன்மைப்பொருள் கொள்ளப்பட்டது. **விளங்கிழை**—விளங்குகின்ற ஆபரணங்களையுடையவள் எனப்பொருள் படுதலால் அன்மொழித்தொகை. அசோகவனத்திலிருந்த பிராட்டி ஆபரணங்கள் விளங்கப்பெற்றிருக்கவில்லையே, அப்படியிருக்க அவளை 'விளங்கிழை' என்று எங்ஙனே சொல்லலாமென்று சங்கிக்க வேண்டா; வடமொழியில் பொதுப்படையாய் ஸ்த்ரீகளுக்கு வாசகமாக '**ஸுததீ, ஸுப்ரூ:**' இத்யாதி பதங்களுள்ளது போல் தமிழிலும் 'விளங்கிழை, மையார் கருங்கண்ணி, குவளையங்கண்ணி, பூங்குழலி' இத்யாதிகளான

சொற்கள் உள்ளன; அவயவார்த்தத்தை நோக்காமலே பொதுவாய் 'ஸ்த்ரீ' என்று பொருள் கொள்வது: ஆகவே, **விளங்கிழை பொருட்டு**—(ஸீதையாகிற) ஸ்த்ரீ நிமித்தமாக என்கை. எப்போதும் ஆபரணங்கள் விளங்குதற்கு உரியளான பிராட்டிக்காக என்னவுமாம். அன்றியே, இராமபிரான் பிராட்டியின் ஆபரணாலங்காரவகைகளில் தோற்று அவற்றையே சிந்தித்திருப்பவனாதலால் அவனுடைய ஸமாதியாலே **விளங்கிழை** யென்றதாகவுங் கொள்வர்.

**புயம்**—ஹுஜமென்ற வடசொல் விகாரம்.

[**நலங்கோள் நான்மறை** இத்யாதி.] 'நலங்கொள்' என்பதை நான்மறைக்கும் விசேஷணமாக்கி யுரைக்கலாம். அபௌருஷேயமாகையாலே தோஷமற்ற நான்மறைகளென்க. வைதிகர்கள் உரக்க வேதகோஷஞ்செய்வதைக்கேட்ட மீன்கள் தங்களை வெருட்டுஞ்சொற்களென்று ப்ரமித்துத் துள்ளியோடுகின்றனவாம் வயல்களில். குளக்கரையில் வைதிகப்ராஹ்மணர்கள் ப்ரஹ்மயஜ்ஞ ப்ரச்நம் உச்சரிக்கும்படியான வைதிகலக்ஷ்மி விளங்கும் திவ்யதேசமென்று குறிப்பிட்டவாறு.

**மலங்கு**—மீன்களில் ஓர்வகைச்சாதி. .... .... .... (கூ)

**வெண்ணெய் தானமுதுசெய்ய வெகுண்டு மத்தாய்ச்சியோச்சி ***
**கண்ணியார் குறுங்கயிற்றால் கட்ட வெட்டெடன்றிருந்தான் ***
**திண்ணமாமதிள்கள் சூழ்ந்த தென்திருப்பேருள் * வேலை**
**வண்ணனார் நாமம் நாளும் வாய்மொழிந் துய்ந்தவாறே!** (எ)

| | |
|---|---|
| தான் | யசோதை நோன்பு நோற்றுப் பெற்ற பிள்ளையாகிய தான் |
| வெண்ணெய் அமுதுசெய்ய | வெண்ணெயை (அளவில்லாதபடி திருடி) உண்டவளவிலே |
| ஆய்ச்சி | யசோதையானவள் |
| வெகுண்டு | சீற்றங்கொண்டு |
| மத்து ஓச்சி | தயிர்கடையும் மத்தினால் அடிப்பதாக ஓங்கி |
| கண்ணி ஆர் குறு கயிற்றால் கட்ட | முடிச்சுகள் நிறைந்த சிறியதாம்பினால் கட்டிவைக்க |
| வெட்டெடன்றிருந்தான் | இசைந்திருந்தவனும்,— |
| திண்ணம் மா மதிள்கள் சூழ்ந்த | திடமான பெரிய மதிள்களாலே சூழப்பட்ட |
| தென் திருப்பேருள் | தென்திருப்பேர் நகரில் எழுந்தருளியிருக்கிறவனும் |
| வேலை வண்ணனார் | கடல்போன்ற நிறத்தை யுடையனுமான பெருமானுடைய |
| நாமம் | திருநாமங்களை |
| நாளும் | நாள்தோறும் |
| வாய் மொழிந்து | சொல்லி |
| உய்ந்த ஆறு எ | நான் உஜ்ஜீவித்தபடி என்னே!—. |

* * *—"திருவாய்ப்பாடியில் தயிர் நெய் பால் வெண்ணெய் முதலியன பாழ்போகலாகாது, இவற்றை உட்கொள்வதற்கு ஒரு பிள்ளைவேணும்" என்றே நோன்பு நோற்றுப் பிள்ளைபெற்றிருந்தாலும், கண்ணபிரான் அவற்றை அளவ

கடந்து உண்கையாலே திருமேனிக்குத் தீங்காகுமோ என்றஞ்சின யசோதைப் பிராட்டி கோபத்தை ஏறிட்டுக்கொண்டு மத்தினால் புடைப்பதாக வெருட்டிக் கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்ட, அதற்கு இசைந்திருந்தானாம் கண்ணபிரான்; (ஏனென்னில்;) தனது ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஆச்ரிதபாரதந்திரியம் முதலிய சீலங்களை வெளியிடுதற்கென்றே பரத்வநிலையைத் தவிர்ந்து மநுஷ்ய ஸஜாதீயனாக அவதரித்திருக்கிற தான் உரலோடு கட்டுண்டிருக்கை முதலிய இவ்வகைகளால்தான் அக்குணங்களை விளங்கச்செய்து கொள்ளவேணுமென்று கொண்டு.

ஸ்ரீமதுரகவிகள் அருளிச்செய்யும்போது "கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ட பெருமாயன்" என்னாமல் "**கட்டுண்ணப்பண்ணிய** பெருமாயன்" என்றதும் நோக்குக. ஒரு சுற்றுக்குப்போராத தாம்பு இரண்டு மூன்று சுற்றுக்குப் போரும்படி திருமேனியைச்சுருக்கி அமைத்துக்கொண்டதனாலன்றோ 'கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன்' என்னவேண்டிற்று. அல்லாவிடில் சில குணங்கள் விளங்காவே.

**கண்ணி ஆர்குறுங்கயிற்றால் கட்ட**=கண்ணபிரான் வெண்ணெய் களவு செய்கிற தன்னை யசோதைப்பிராட்டி அடிக்கடி தாம்பினால் கட்டி வருத்துகிறாளென்று வீட்டிலுள்ள கயிறுகளையெல்லாம் துண்டுதுண்டாக அறுத்துவைத்திட்டே வெண்ணெய் திருடச்செல்வது வழக்கம்; விதிவசத்தால் பிடியுண்ட அவனை ஒரு கையாலே பிடித்துக்கொண்டு, கட்டிவைக்கத் தாம்பு தேடப்போவள் யசோதை; துண்டுதுண்டான தாம்புகளே கிடைக்கும்; அவற்றை அவள் ஒன்றோடொன்று முடிபோட்டு ஒரு கயிறு வடிவமாக்கி அது கொண்டு கண்ண பிரானைக் கட்டுவள்; ஆனதுபற்றிக் **கண்ணியார் குறுங்கயிறு** எனப்பட்டது. வெட்டென்றிருக்கை—'செய்வன செய்து கொண்மின்' என்று ஸம்மதித்திருக்கை. இப்படிப்பட்ட ஸௌலப்ய ஸௌசீல்ய குணங்களை விளக்கிக்கொண்டு திருப்பேர்நகரிலே காட்சி தந்தருள்கின்றான்; அவனது திருநாமங்களை வாயாரச் சொல்லி வாழ்ந்தேனென்றாராயிற்று. .... .... .... (எ)

அம்பொனாருலக மேழுமறிய ஆய்ப்பாடிதன்னுள் *
கொம்பனார்பின்னை கோலம் கூடுதற்கேறு கொன்றான் *
செம்பொனார் மதிள்கள்சூழ்ந்த தென்திருப்பேருள் மேவும் *
எம்பிரான்நாமம் நாளும் ஏத்தி நானுய்ந்தவாறே! (அ)

| | |
|---|---|
| அம் பொன் ஆர் உலகம் ஏழும்அறிய | அழகிய பொன்போற் சிறந்த ஏழுலகங்களும் அறியும்படியாக |
| ஆய்ப்பாடி தன்னுள் | திருவாய்ப்பாடியிலே |
| கொம்பு அன்னார் பின்னை | வஞ்சிக் கொம்புபோன்ற நப்பின்னைப் பிராட்டியினுடைய |
| கோலம் | திருமேனியை |
| கூடுதற்கு | அணைவதற்காக |

| | | | |
|---|---|---|---|
| ஏறு | எருதுகளை | எம்பிரான் | எம்பெருமானுடைய |
| கொன்றான் | கொன்றொழித்தவனும் | நாமம் | திருநாமங்களை |
| செம் பொன் ஆர் மதிள்கள் சூழ்ந்த | செவ்விய பொன்போல் அழகிய திருமதிள்களாலே சூழப்பட்ட | நாளும் | நாள்தோறும் |
| தென் திருப்பேருள் | தென் திருப்பேர்நகரில் | ஏத்தி | ஸங்கீர்த்தநம்பண்ணி |
| மேவும் | பொருந்திவாழ்பவனுமான | நான் உய்ந்த ஆறு ஏ | நான் உஜ்ஜீவித்தவிதம் என்னே !. |

* * *—நப்பின்னைப்பிராட்டியை மணந்துகொள்வதற்கு இடையூறாயிருந்த கொழுத்த காளைகளேழையும் ஸர்வலோகப்ரஸித்தமாகக் கொன்றொழித்து வெற்றிபெற்ற பெருமான் அந்த மணவாளக்கோலம் விளங்கத் திருப்பேர்நகரில் ஸேவைஸாதிக்கின்றான் ; அப்பெருமானது திருநாமங்களை நாடோறும் வாழ்த்தி வாழ்ந்தே னென்கை. .... .... .... .... (அ)

நால்வகைவேதம் ஐந்துவேள்வி யாறங்கம்வல்லார் *
மேலை வானவரில்மிக்க வேதியராதிகாலம் *
சேலுகள்வயல் திருப்பேர்ச் செங்கண்மாலோடும் வாழ்வார் *
சீலமாதவத்தர் சிந்தையாளி என்சிந்தையானே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| நால் வகை வேதம் | நான்கு வேதங்களிலும் | செம் கண் மாலோடும் | செந்தாமரைக்கண்ணனை ஸர்வேச்வரனோடுகூட |
| ஆறு அங்கம் | ஆறு வேதாங்கங்களிலும் | வாழ்வார் | நித்யவாஸம் பண்ணுமவராய் |
| ஐந்து வேள்வி | பஞ்சமஹாயஜ்ஞங்களிலும் | சீலம் மா தவத்தர் | நற்குணமும் நல்லொழுக்கமுமுடையரான பிராமணருடைய |
| வல்லார் | ஸமர்த்தர்களாய், | சிந்தை ஆளி | உள்ளத்தை (த்தனக்குஇருப்பிடமாகக்கொண்டு) ஆள்கின்ற எம்பெருமான் |
| மேலை வானவரில் மிக்க வேதியர் | மேலுலகத்திலுள்ள தேவர்களிற்காட்டிலும் மேம்பட்ட பிராமணரைத் தமராய், | என் சிந்தையான் | என்னுடைய ஹ்ருதயத்தில் நித்யவாஸம் பண்ணுமவன். |
| ஆதி காலம் | வெகுகாலந்தொடங்கி | | |
| சேல் உகள் வயல் திருப்பேர் | மீன்கள் துள்ளுங் கழனிகளை யுடைய திருப்பேர் நகரில் | | |

* * *—வேதவேதாங்கங்களை வரியடைவே அதிகரித்து, பஞ்சமஹாயஜ்ஞாதி அநுஷ்டாநத்திலும் சிறந்து, நான்முகன் முதலான தேவர்களிற்காட்டிலும் சீரியரென்று புகழ்பெற்றவர்களாய், நெடுநாளாகவே அப்பக்குடத்தானோடு ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமைசெய்து போருமவர்களான மஹாத்மாக்களின் சிந்தையிற் பொருந்திவாழும் பெருமானே என்சிந்தையிலும் பொருந்தி வாழ்கின்றானென்கிறார். வைதிகப்ராஹ்மணர்கள் உடனிருந்து பணிவிடைகள் செய்யப்பெற்ற அப்பக்குடத்தானைத் தியானிக்கின்றேனென்றவாறு.

ஐந்து வேள்விகளாவன—பிரமயஜ்ஞம் தேவயஜ்ஞம் பூதயஜ்ஞம் பித்ரு யஜ்ஞம் மநுஷ்யயஜ்ஞ மென்பனவாம். பிரமயஜ்ஞமாவது—வேதத்தில் நித்யம் ஒரு ப்ரச்நமோதுவது. தேவயஜ்ஞமாவது—அக்நிஹோத்திரஞ் செய்வது. பூதயஜ்ஞமென்பது—பிராணிகட்குப் பலியிடுவது. பித்ருயஜ்ஞமென்பது—பித்ருக்களை யுத்தேசித்துத் தர்ப்பணம் விடுவது. மநுஷ்யயஜ்ஞமென்பது—விருந்தாளிகளுக்கு உணவு முதலியன கொடுப்பது. .... .... (௯)

வண்டறைபொழில் திருப்பேர் வரியரவணையில் * பள்ளி
கொண்டுறைகின்ற மாலைக் கொடிமதிள் மாடமங்கை *
திண்டிறல் தோள்கலியன் செஞ்சொலால் மொழிந்தமாலை *
கொண்டிவைபாடியாடக் கூடுவர் நீள்விசும்பே. (௧0)

| | |
|---|---|
| வண்டு அறை பொழில் | வண்டுகள் ஒலிசெய்யப் பெற்ற சோலைகளை யுடைய |
| திருப்பேர் | திருப்பேர் நகரில் |
| வரி அரவு அணையில் | வரிகளையுடைய ஆதிசேஷனாகிற படுக்கையிலே |
| பள்ளி கொண்டு | சயனித்துக் கொண்டு |
| உறைகின்ற மாலை | நித்யவாஸம்பண்ணுகிற ஸர்வேச்வரனைக்குறித்து, |
| கொடி மதிள் மாடம் மங்கை | கொடிகள் விளங்கப் பெற்ற மதிள்களையும் மாளிகைகளையுமுடைத்தான திருமங்கையில் அவதரித்தவராய் |
| திண் திறல் தோள் கலியன் | மிக்க வலிமைகொண்ட திருத்தோள்களை யுடையரான ஆழ்வார் |
| செம் சொலால் | அழகிய சொற்களைக் கொண்டு |
| மொழிந்த | அருளிச்செய்த |
| மாலை இவை | இச்சொல்மாலையை |
| கொண்டு | அதிகரித்து |
| பாடி ஆட | பாடவுமாடவும் பெற்றால் |
| நீள் விசும்பு கூடுவர் | பரமபதம் சென்று சேரப்பெறுவர்கள். |

* * *—தேன்மிகுந்த சோலைகள் சூழ்ந்த திருப்பேர்நகரில் திருவனந்தாழ்வானாகிற திருப்பள்ளி மெத்தையின்மீது திருக்கண்வளர்ந்தருளு மெம்பிரான் விஷயமாக ஆழ்வாரருளிச்செய்த இத்திருமொழியை ஓதி, அர்த்தஜ்ஞானத்தாலே களித்துக் கூத்தாடுமவர்கள் திருநாட்டிற்சென்று நித்யகைங்கரியம் பண்ணப்பெறுவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. .... (௧0)

அடிவரவு :—கை வங்கம் ஒருவனை ஊன் வக்கரன் விலங்கலால் வெண்ணெய் அம்பொன் நால்வகை வண்டறை தீதறு.

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஐந்தாம்பத்து—பத்தாந்திருமொழி,

# தீதறு நிலத்தொடு.

[நந்திபுர விண்ணகர மங்களாசாஸநத் திருப்பதிகம்.]

தீதறுநிலத்தொடெரிகாலினொடு நீர்கெழுவிசும்பு மவையாய் *
மாசறுமனத்தினொடுறக்கமொடிறக்கை அவையாயபெருமான் *
தாய் செறவுளைந்து தயிருண்டுகுடமாடு தடமார்வர், தகைசேர் *
நாதனுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே ! (க)

| | |
|---|---|
| தீது அறு நிலத்தொடு | குற்றமற்ற [சிறந்த] பூமியும் |
| எரி | அக்நியும் |
| காலினொடு | வாயுவும் |
| நீர் | ஜலமும் |
| கெழு விசும்பும் அவை ஆய் | சிறந்த ஆகாசமும் ஆகிய பஞ்சபூதங்களுக்கு அந்தராத்மாவாயிருப்பவனும் |
| மாசு அறு | குற்றமற்ற |
| மனத்தினொடு | மநஸ்ஸும் |
| உறக்கமொடு | உறக்கமும் |
| இறக்கை அவை ஆய | மரணமும் ஆகியஇவற்றுக்கு நிர்வாஹகனும் |
| பெருமான் | பெருமைதங்கியவனும் |
| தாய் | தாயாகியயசோதைப்பிராட்டி |
| செற | சீறித் தாம்பெடுக்க |
| உளைந்து | அதற்கு நடுங்கிக்கிடந்தும் (பின்னையும் ஸமயம்பார்த்து) |
| தயிர் உண்டு | தயிரை(த் திருடி) உட்கொண்டு |
| குடம் ஆடு | கூடக்கூத்தாடினவனும் |
| தடம் மார்வர் | விசாலமான திருமார்பை யுடை யவனும் |
| தகை சேர் | அருள்பொருந்தியவனுமான |
| நாதன் | ஸ்வாமி |
| உறைகின்ற நகர் | நித்யவாஸம் பண்ணப்பெற்ற திருப்பதியாகிய |
| நந்திபுர விண்ணகரம் | நந்திபுரவிண்ணகரத்தை |
| மனமே நண்ணு | நெஞ்சே! அடைந்திடுவாயாக. |

* * *—நெஞ்சமே ! நம்முடைய நாதன் நித்யவாஸம் பண்ணுமிடமான நந்திபுர விண்ணகர மென்னுந் திருப்பதியை நண்ணுவாயாக ; அங்கு எழுந்தருளி யிருக்கு மெம்பெருமான் எப்படிப்பட்டவனென்னில் ; நிலம் நீர் எரி கால் விசும்பு என்று சொல்லப்படுகிற பஞ்சபூதங்களுக்கும் அந்தராத்மாவா யிருப்பவன் ; ஸகல சேதநர்களுடையவும் மநோவ்ருத்திக்கு நிர்வாஹகன் [அதாவது—எல்லா ருடையவும் ஹ்ருதயத்தினுள்ளே உறைந்திருந்து நல்வழியிலோ தீயவழியிலோ நெஞ்சை முயல்விப்பவன்]; உறக்கத்துக்கும் இறப்புக்கும் நிர்வாஹகன் ; (ஆக இவ்வளவும் ஸாமாந்யா காரத்தைச் சொன்னபடி. இனி அவதாரவிசேஷ க்ருத்யத் தைச் சொல்லுகிறது மூன்றாமடியில்.) கோபாலக்ருஷ்ணனாகத் திருவவதரித்

திருந்தகாலத்து, தயிர் வெண்ணெய் முதலியவற்றைக் களவுகொள்வதாகத் தான் முயலுமளவில் தாயாகிய யசோதைப் பிராட்டிகண்டு வெருட்ட, அதற்கு நடுங்கினவன்போல் பாவனை செய்துவிட்டு, அந்த வஸ்துக்களை உண்ணுமல் தரித்திருக்கமாட்டாமையினாலே பின்னையும் ஸமயம்பார்த்து அவற்றை வாரியுண்டு அதனாலுண்டான மகிழ்ச்சிக்குப் போக்கு வீடாகக் குடக்கூத்தாடினவன்; இப்படிப்பட்ட எம்பெருமானுறையுமிடம் நந்திபுரவிண்ணகரமென்க.

முதலடியில், நிலத்திற்குத் '**தீதறு**' என்று விசேஷணமிட்டது—பூமியின் சிறப்பைக் காட்டினபடி. போகங்களையும் மோக்ஷத்தையும் விளைத்துக் கொள்வதற்குப் பாங்காயிருத்தலாகிற சிறப்பு உண்டிறே பூமிக்கு.

மூன்றாமடியில், **செற**=செறுதலாவது கோபித்தல். 'சிற' என்னும் பாடத்தில், 'சீற' என்பதன் குறுக்கல் விகாரமென்ன வேண்டும்.

**நாதனுறைகின்ற நகர்**—இத்திருப்பதி '**நாதன்கோயில்**' என்றும் வழங்கப்படுதல் உணர்க. 'நந்தி' என்னு மோரரசன் பணிவிடைகள் செய்யப் பெற்ற நகரமென்பது பற்றி '**நந்திபுரவிண்ணகரம்**' எனத்திருநாம மாயிற்றென்ப. மேல் ஏழாம்பாட்டில் "நந்திபணிசெய்தநகர் நந்திபுரவிண்ணகர நண்ணு மனமே!" என்றது காண்க. .... .... .... (க)

**உய்யும்வகையுண்டு சொனசெய்யில் உலகேழுமொழியாமைமுனநாள் ***
**மெய்யினளவே யமுதுசெய்யவல ஐயனவன் மேவுநகர்தான் ***
**மையவரி வண்டுமதுவுண்டு கிளையோடு மலர்கிண்டி யதன்மேல்**
**நைவளம்நவிற்று பொழில் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே!** (உ)

மனமே! — நெஞ்சே!,
சொன செய்யில் — நான் சொல்வதைச் செய்தால்
உய்யும் வகை உண்டு — உஜ்ஜீவிக்கவுபாயமுண்டு.
(சொல்லுகிற காரியமேதென்னில், சொல்லுகிறேன், கேள்;–)
முனநாள் — முன்பொருகால்
உலகு ஏழும் ஒழியாமை — ஸப்த லோகங்களில் ஒன்றுந் தவறாதபடி
மெய்யின் அளவே — (அவ்வுலகமெல்லாம் தனது சிறிய) திருமேனியளவாக (ஒடுங்கும்படி)
அமுது செய்ய வல — அமுதுசெய்வதில் ஸமர்த்தனாயிருந்த
ஐயன் அவன் தான் — அப்பெருமான்
மேவும் நகர் — பொருந்திவாழும் திவ்ய தேசமாயிருப்பதும்
மைய வரி வண்டு — கரிய அழகிய வண்டுகள்
கிளையோடு — தமது பந்துவர்க்கங்களோடு கூட
மது உண்டு — தேனைப்பருகி
மலர் கிண்டி — பூக்களைக்கோதி
அதன் மேல் — அதன்பிறகு
நைவளம் — ராகவிசேஷங்களை
நவிற்று — பாடப்பெற்ற
பொழில் — சோலைகளையுடையதுமான
நந்திபுரவிண்ணகரம், நண்ணு—.

* * *—நெஞ்சே! நீ ஸ்வதந்திரனாய் எவ்வளவோ காரியங்கள் செய்கிறாய்; நான் சொல்லுகிற ஒரு காரியத்தைச் செய்வாயாகில் உஜ்ஜீவநம் பெறவழியுண்டு;

நந்திபுர விண்ணகரத்தை நண்ண வேணுமென்பதே நானுனக்குச் சொல்லும் காரியமாகும். முன்பு ஊழிவெள்ளத்தில் உலகமெல்லாம் அழியப்புக, அவற்றைத் திருவயிற்றினுள்ளே அடக்கி நோக்கின பெருமான் நித்யவாஸம்பண்ணப் பெற்ற தலமாம் இது; சோலைகளிலே வண்டுகள் திரள் திரளாகவிருந்து மதுபானம் பண்ணி மலர்களையுங் கோதிக் களிப்புக்குப் போக்குவீடாக இசைபாடப் பெற்றதுமாம்.

**சோன**—'சொன்ன' என்பதன் தொகுத்தல்; பலவின்பால் வினையாலணையும் பெயர்: சொன்னவற்றை என்றபடி. **மெய்யினளவே யமுதுசெய்கை**யாவது—இத்தனைபெரிய உலகமெல்லாம் அத்தனைசிறிய திருமேனியிலே ஒடுங்கும்படி அமுது செய்கை. **வல**—வல்ல. **நைவளம்**—ஓர்பண். .... ... (உ)

**உம்பருலகேழு கடலேழுமலையேழும் ஒழியாமைமுனநாள் ***
**தம்பொன்வயிறாரளவுமுண்டவையுமிழ்ந்த தடமார்வர் தகைசேர் ***
**வம்புமலர்கின்ற பொழில் பைம்பொன்வருதும்பி மணி கங்குல்வயல்சூழ் ***
**நம்பனுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே!** (ங)

| | |
|---|---|
| முனநாள் | முன்பொருகால் |
| உம்பர் உலகு ஏழும் | மேலுலகங்களேழையும் |
| கடல் ஏழும் | ஸப்தஸாகரங்களையும் |
| மலை ஏழும் | ஸப்தகுலபர்வதங்களையும் |
| ஒழியாமை | ஒன்றும்விடாமல் |
| தம் பொன் வயிறு ஆரளவும் | தனது திருவயிறு நிறையுமளவும் |
| உண்டு | அமுதுசெய்து |
| அவை | அவ்வுலகங்களை |
| உமிழ்ந்த | (பிறகு ஸ்ருஷ்டி முகத்தால்) வெளிப்படுத்தினவனும் |
| தட மார்வர் | விசாலமான திருமார்பையுடையவனும் |
| தகை சேர் | பெருமை பொருந்தியவனும் |
| நம்பன் | விச்வாஸயோக்யனுமான எம்பெருமான் |
| உறைகின்ற நகர் | நித்யவாஸம் பண்ணுமிடமானதும்,— |
| வம்பு மலர்கின்ற பொழில் | புதிதுபுதிதாக மலர்ந்துகொண்டேயிருக்கின்ற (பூக்களையுடைய) சோலைகளிலே |
| பை பொன் வரு தும்பி | பசும்பொன்போன்ற நிறங்கொண்டு திரிகின்ற தும்பிகளினால் |
| மணி | அழகுபெற்றதும் |
| கங்குல் வயல் சூழ் | (கருவடைந்ததனால்) இருண்டிருக்கின்ற கழனிகளால் சூழப்பட்டதுமான |

நந்திபுரவிண்ணகரம், மனமே! நண்ணு—.

* * *—கீழ்ப்பாட்டில் "உலகேழு மொழியாமை மெய்யினளவே யமுது செய்யவல" என்றதை விரித்துரைக்கின்றார். ஸப்தலோகங்கள், ஸப்தஸாகரங்கள், ஸப்தகுலபர்வதங்கள் என்றிவைமுதலான அனைத்தையும் பிரளயத்திலே உண்டு ஸ்ருஷ்டிகாலத்திலே வெளிப்படுத்தின பெருமானுறையுமிடம் நந்திபுர விண்ணகரம்.

**உம்பருலகேழு**மென்று மேலேழுலகங்களைச் சொன்னது கீழேழுலகங்கட்கும் உபலக்ஷணம். மேலேழுலகங்களாவன—பூ:, புவ:, ஸுவ:, மஹ:, ஜந:, தப:,

ஸத்யம் என்னப்பட்டவை. கீழேழுலகங்களாவன—அதல விதல ஸுதல நிதல தராதல ரஸாதல மகாதலங்களென்னப்பட்டவை.

**ஏழ்கடல்**களாவன—உப்புக்கடல் கருப்பஞ்கடல் தேன்கடல் நெய்க்கடல் தயிர்க்கடல் பாற்கடல் புனற்கடல் என்பன.

**ஏழ்மலை**களாவன—இமயம் மந்தரம் கைலாஸம் வடவிந்தம் நிடதம் ஏமகூடம் நீலகிரி என்பன.

**கங்குல்வயல்**—எப்போதும் கருவடைந்தபயிரேயா யிருக்கையாலே வயல்கள் இரவுபோலே இருண்டிருக்கு மென்கை.

**நம்பன்**—எந்த ஸமயத்திலும் நம்மைக் கைவிடான் என்று நம்புதற்கு உரியவன். .... .... .... .... .... .... (௩)

**பிறையினொளி யெயிறிலகமுறுகி யெதிர்பொருதுமென வந்தவசுரர் ***
**இறைகளவை நெறுநெறெனவெறியவவர்வயிறழல நின்றபெருமான் ***
**சிறைகொள்மயில் குயில்பயில மலர்களுக வளிமுரல அடிகொள்நெடுமா ***
**நறைசெய்பொழில் மழைதவழும் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே! (௪)**

| | | | |
|---|---|---|---|
| பிறையின் ஒளி எயிறு | பாலசந்திரன் போன்று ஒளிபெற்ற கோரைப் பற்கள் | பெருமான் | ஸர்வேச்வரன் (எழுந்தருளியிருக்கப்பெற்றதாய்,) |
| இலக | விளங்க | சிறை கொள் | (சிறந்த) சிறகுகளையுடைய |
| முறுகி | மேலிட்டுவந்து | மயில் குயில் | மயில்களும் குயில்களும் |
| எதிர் பொருதும் என வந்த | எதிரிட்டுச் சண்டை போடுவோமென்று வந்த | பயில | நெருங்கிவாழப் பெற்றனவும் |
| அசுரர் | அஸுரர்களுடைய | மலர்கள் உக | பூக்கள் (எங்கும்) சிந்தியிருக்கப்பெற்றனவும் |
| இறைகள் அவை | சரீரங்களானவை | அளி முரல | வண்டுகள் ரீங்காரம் செய்யப் பெற்றனவும் |
| நெறு நெறு என | நெறுநெறு வென்று முறிந்தொழிய | அடி கொள் நெடு மா நறை செய் | கீழேவேரூன்றி மேலே நீண்டுள்ள மா மரங்கள் மணம் வீசப்பெற்றனவுமான |
| வெறிய அவர் | வெறுங்கையரான அவ்வசுரர்கள் | பொழில் | சோலைகளிலே |
| வயிறு அழல நின்ற | வயிறெரியும்படி (வெற்றி பெற்று) நின்ற | மழை தவழும் | மேகங்கள் உலாவப் பெற்றதான |
| | | நந்திபுரவிண்ணகரம், மனமே! நண்ணு—. | |

* * *—பயங்கரமான பற்களைக் கொண்ட அசுரர்கள் செருக்குக் கொண்டு எதிரிட்டுப் போர்புரிவதாக யுத்தரங்கத்தில் திரண்டவாறே அம்புகளைப் பொழிந்தோ திருவாழியாழ்வானைப் பிரயோகித்தோ அவ்வசுரர்களின் உடல்களை நெறுநெறுவென்று முறித்து, அவர்கள் கையிலிருந்த ஆயுதங்களையும் சிதைத்து வயிறெரியச் செய்த பெருமானுறையுமிடம் நந்திபுரவிண்ணகரம்.

**'இறைகளவை'** என்பதற்கு—சரீரங்கள் என்று வியாக்கியானத்தில் பொருளுரைக்கப்பட்டது; மண்டலபுருடனது நிகண்டில்—" **இறை** சிவன் கடன் வேந்

தன் கையிறையிறுப்பிறை சிறந்தோன், சிறுமை புள்ளிறகு தங்கல், **கர்பிமார் சென்னி** கூனிறப் பிராறே" என்றதில் காண்கிற பன்னிரண்டு பொருள்களில் 'தலை' என்னும் பொருளும் இங்குக் கொள்ளக்கூடியதே.

**வெறிய அவர்** = "வ்யாது வாவணு உ-ஜொவ வீரா:" [இராவணன் நடுங்கினன், வில்லையும் கைவிட்டான்] என்றாற்போலே ஆயுதங்களை யொழிந்தவர்கள் என்கை. 'எறிய' என்றும் பிரிக்கலாம். அசுரர்கள், **இறைகளவை**—அம்புகளை, நெறு நெறென **எறிய** + —பிரயோகிக்க, (அதன்பிறகு) அவர்வயிறழல நின்ற பெருமான் என்னவுமாம்.

அவ்விடத்துச் சோலைகளின் ஒருபுறத்தில் மயில்களாடவும் மற்றொருபுறத்தில் குயில்கள் கூவவும் மற்றொருபுறத்தில் வண்டினம் முரலவும் கண்ட விடமெங்கும் பூக்கள் சிந்தியிருக்கவும் மாமரங்களின் நறுமணம் கமழவும் மேகங்கள் படிந்திருக்கவும் பெற்றதாம் இத்தலம். .... .... .... .... (சு)

மூளவெரிசிந்தி முனிவெய்தி யமர்செய்துமென வந்தவசுரர் *
தோளுமவர்தாளும் முடியோடுபொடியாக நொடியாமளவெய்தான் *
வாளும்வரிவில்லும் வளையாழிகதை சங்கமிவை அங்கையுடையான் *
நாளுமுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே! (ரு)

| | |
|---|---|
| மூளஎரி சிந்தி | (கண்டவிடமெங்கும்) புகையும்படியாக நெருப்புகளைக்கொட்டி |
| முனிவு எய்தி | கோபங்கொண்டு |
| அமர்செய்தும் என வந்த அசுரர் அவர் | 'யுத்தம் செய்வோம்' என்று வந்த அசுரர்களினுடைய |
| தோளும் தாளும் முடியோடு | தோள்களும் கால்களும் தலைகளும் |
| பொடி ஆக | பொடிபொடியாம்படி |
| நொடி ஆம் அளவு | ஒருநொடிப்பொழுதில் |
| எய்தான் | அம்புகளைச் செலுத்தினவனும் |
| வாளும் வரி வில்லும் வளை ஆழி கதை சங்கம் இவை அம் கை உடையான் | நந்தகவாள், அழகியசார்ங்கம், மண்டலாகாரமான ஸுதர்சநம், கௌமோதகி, பாஞ்சஜந்யம் ஆகிய இப்பஞ்சாயுதங்களை அழகிய திருக்கையில் ஏந்தியுள்ளவனுமான பெருமான் |
| நாளும் | எப்போதும் |
| உறைகின்ற நகர் | எழுந்தருளியிருக்குந் திருப்பதியான |

நந்திபுரவிண்ணகரம், மனமே! நண்ணு—.

* * *—அசுரர்கள் போர்க்கு வரும்போது கண்டவிடமெங்கும் நெருப்புகளை வாரிக் கொட்டுவதும் கோபாவேசங்கொண்டு கோலாஹலங்கள் பண்ணுவதும் வழக்கம்; அங்ஙனம் வருமசுரர்களின் தோளுந் தாளுந் தலையும் ஒரு நொடிப் பொழுதில் பொடிபட்டொழியும்படி அம்புகளைச் செலுத்தி வெற்றி பெற்ற பெருமான் இன்னமும் அப்படிப்பட்ட ஆஸுரப்ரக்ருதிகளை யழிப்பதற்காகப் பஞ்சாயுதங்களையும் உடன் கொண்டவனாகி நந்திபுர விண்ணகரத்திலே நித்யவாஸம் பண்ணுகிறானென்க. .... .... .... (ரு)

தம்பியோடு தாமொருவர்தன்துணைவி காதல்துணையாக முனநாள் *
வெம்பியெரிகானக முலாவுமவர்தாம் இனிதுமேவு நகர்தான் *
கொம்புகுதிகொண்டு குயில்கூவமயிலாலுமெழிலார்புறவுசேர் *
நம்பி யுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே! (௬)

| | |
|---|---|
| முன நாள் | முன்பொருகால் |
| தாம் ஒருவர் | லோகவிலக்ஷணராகத் திருவவதரித்த ஸ்ரீராம பிரானாகிய ஒருவர் |
| தம்பியொடு | தம்பியான லக்ஷ்மணனும் |
| தன் காதல் துணைவி | தனது காதலே வடிவெடுத்த பத்னியான ஸீதையும் |
| துணை ஆக | ஸஹாயமாகக் கூடவர, |
| வெம்பி எரி கானகம் | தீக்ஷ்ணமாய்ப் பற்றி யெரி கின்ற காட்டிலே |
| உலாவும் அவர் தாம் | உலாவினவர் |
| இனிது மேவு | போக்யமாகப் பொருந்தி வர்த்திக்கப்பெற்ற |
| நகர் தான் | திவ்யதேசமாயும் |
| குயில் | குயில்களானவை |
| கொம்பு | கிளைகளில் நின்றும் |
| குதிகொண்டு | குதித்து |
| கூவ | கூவுதல்செய்ய (அதனைக் கேட்டு) |
| மயில் ஆலும் | மயில்கள் கூத்தாடப்பெற்ற, |
| எழில் ஆர் | அழகுபொருந்திய |
| புறவு சேர் | சோலைகளை யுடையதாயும் |
| நம்பி | ஸகலகல்யாணகுண பூர்ணனான எம்பெருமான் |
| உறைகின்ற நகர் | நித்யவாஸம்பண்ணுமிடமாயுமிருக்கிற |
| நந்திபுரவிண்ணகரம் | மனமே! நண்ணு—. |

* * *—கீழிரண்டுபாட்டிலும் ஆஸுரப்ரக்ருதிகளைக் கொன்றொழிக்கும் படியைப் பேசவே ஸ்ரீராமாவதாரத்தில் ஈடுபாடு உண்டாகி இப்பாசுரமருளிச் செய்கிறார். வநவாஸஞ் செல்லுமாறு ஸ்ரீராமபிரானொருவனுக்கே நியமநமாயி னும், 'நான் பதினாலுவருஷம் வநவாசஞ்செய்து வருகிறேன்; அதுவரையில் நீ தசரதர்க்கும் கௌசலையார்க்கும் ஒரு குறைவுவாராமல் பரிசர்யை செய்து கொண்டிரு' என்று பிராட்டியை நோக்கிக்கூற, அதுகேட்ட அவள் மிகவுங் கோபித்து 'என்தகப்பனார் உம்மை ஒரு ஆண்பிள்ளையாக எண்ணி என்னை உமக்குக் கொடுத்தார்; ஒரு பெண்பெண்டாட்டியைக் கூடக் கூட்டிக்கொண்டு போய்க் காப்பாற்றி ஆளத்தக்க வல்லமையற்ற உம்மை அப்போது அவர் அறிந் திலர்; இப்போது அவர் இச்செய்தியைக் கேட்டால் உம்மை நன்றாக வெகு மானிப்பர்; ஒரு பெண்பிள்ளை ஆணுடை யுடுத்துவந்து நம்பெண்ணைக் கைக் கொண்டுபோய்த்துக் காண் என்று நினைப்பர்' என்று ப்ரணயரோஷந் தோற்ற வார்த்தைசொல்லித் தன்னையுங் கூட்டிக்கொண்டு போகவேணுமென்று நிர்ப்பந் தித்துத் தானுங் கூடப்போக ஒருப்பட்டாள். ஆதிமுதல் நொடியளவும் பிரி யாமல் பணிவிடைசெய்து போரும் இளையபெருமாள் இவர்களிருவருங் காட்டுக் குப்போவதாக ஒருப்பட்டதைக்கண்டு ஸ்ரீராகவனுடைய அடியிணையை அவலம் பித்துக்கொண்டு ஸீதாதேவியையும் இராகவனையுங் குறித்து 'ஸ்வாமிந்!, உயி ரைப்பிரிந்த உடலும் ஒருவஸ்துவாக நிலைநிற்பதுண்டோ?, என்னை இங்கு விட்டு விட்டு நீர் காட்டுக்குப்போமளவில் நான் ஜீவிக்கும் வகை என்? ஆகையால் என்

னையுங் கூட்டிக்கொண்டே எழுந்தருளவேணும்; அடியேன் உடனாய் மன்னி வழுவிலாவடிமைகள் செய்யவேணும்' என்று பிரார்த்தித்துத் தானும் உடன் புறப்பட்டான் என்ற வரலாறு அறிக.

**வெம்பியெரி கானகம்**—"மாதிரங்கள் மின்னுருவில் வெண்டேர் திரிந்து வெளிப்பட்டுக், கல் நிரைந்து தீந்து கழையுடைந்து கால்சுழன்று, பின்னுந்திரை வயிற்றுப் பேயே திரிந்துலவாக், கொன்னவிலும் வெங்கானம்" என்று அக் காட்டின் கொடுமையைப் பெரிய திருமடலில் விரித்துரைத்தார்.

இப்பாட்டில் '**நகர்**' என்றசொல் இரண்டாமடியிலும் ஈற்றடியிலுமாக இரு முறை வந்திருக்கின்றது: **தம்பியோடு........கானகமுலாவுமவர்தாம் இனிதுமேவு நகர்**—அயோத்திமாநகர், அல்லது பரமபதம் என்று கொண்டு, அதுபோன்றதாய் நம்பியுறைகின்ற நகராகிய நந்திபுரவிண்ணகரம் என்று முரைக்கலாம்.

"குதிகொண்டு" என்பதில், **குதி**—முதனிலைத் தொழிற்பெயர்; குதித்தலைச் செய்துகொண்டு என்கை. .... .... .... (சு)

**தந்தைமனமுந்து துயர்நந்த விருள்வந்த விறல்நந்தன் மதலை ***
**எந்தையிவனென் றமரர்கந்தமலர் கொண்டு தொழநின்ற நகர்தான் ***
**மந்தமுழவோசை மழையாகவெழுகார் மயில்களாடு பொழில்சூழ் ***
**நந்திபணிசெய்தநகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே !.** (எ)

| | | | |
|---|---|---|---|
| தந்தை | தகப்பனாராகிய நந்தகோபருடைய | கந்தம் மலர் கொண்டு தொழ | மணம்மிக்க பூக்களைப் பணிமாறி ஆச்ரயிக்கும்படியாக |
| மனம் | மனத்தை | நின்ற | எழுந்தருளியிருக்கிற |
| உந்து | சோரப்பண்ணுகின்ற | நகர் தான் | திவ்யதேசமாயும், |
| துயர் | துக்கமானது [புத்திரனில்லையே யென்கிற சோகம்] | முழவு | வாத்யங்களினுடைய |
| நந்த | தொலையும்படி | மந்தம் ஓசை | மந்தமான த்வநியை |
| இருள் வந்த | (ஒருவர்க்குந் தெரியாதபடி மதுரையில் நின்றும்) இரவிலே (திருவாய்ப்பாடிக்கு) வந்து சேர்ந்த | மழை ஆக | மேகமுழக்கமாகக் கருதி |
| | | கார் | கார்காலத்தில் |
| | | எழு | கிளர்கின்ற |
| | | மயில்கள் | மயில்கள் |
| விறல் | பெருமிடுக்கனை | ஆடு | கூத்தாடுமிடமான |
| நந்தன் மதலை | நந்தகோப குமாரனை கண்ணபிரான் | பொழில் | சோலைகளினால் |
| | | சூழ் | சூழப்பெற்றதாய் |
| அமரர் | தேவர்கள் | நந்தி பணிசெய்த நகர் | நந்தியென்னும் ஓரரசன் கைங்கரியங்கள் செய்யப் பெற்றதலமான |
| இவன் எந்தை என்று | 'இவனே எமக்குஸ்வாமி' என்று சொல்லிக்கொண்டு | | |

நந்திபுரவிண்ணகரம், மனமே! நண்ணு—

* * *—'ஒருத்திமகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்திமகனாயொளித்து வளர்ந்த கண்ணபிரானே எமக்குத் தலைவன்' என்று கொண்டு பிரமன் சிவனிந்திரன் முதலான தேவர்கள் புஷ்பங்களைப் பணிமாறி வணங்குமாறு எம்பெருமான் ஸந்நிதிபண்ணியிருக்குமிடமான நந்திபுரவிண்ணகரத்தை மனமே! நண்ணு என்கிறார்.

திருமால் தேவகியிடம் எட்டாவது கர்ப்பத்தில் ஸ்ரீகிருஷ்ணனாய்த் திருவவதரிக்க, (அப்போதே வஸுதேவ தேவகிகளின் கால்விலங்கு இற்று முறிந்து விழ) அக்குழந்தையைக் கம்ஸன் கொல்லக்கூடுமென்ற அச்சத்தினால் தாய் தந்தையர் அத்தெய்வக் குழவியின் அநுமதிபெற்று அந்தச்சிசுவை அதுபிறந்த நடு நிசியிலேயே, திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்க்கெல்லாம் தலைவரான நந்தகோபரது திருமாளிகையிலே ரஹஸ்யமாகக் கொண்டு சேர்த்துவிட்டனர் என்ற வரலாறு முதலடிக்கு அறியத்தக்கது. நந்தகோபரைத் **தந்தை** யென்றது வளர்த்தது பற்றி. அவர்க்கிருந்த மனத்துயராவது—'எம்பெருமான் நமக்கு ஸந்தானமொன்றும் ஸங்கல்பிக்கவில்லையே!' என்ற துக்கமாம்; அது தீர அவனிடம் சென்று சேர்ந்தனன் கண்ணபிரானென்க.

**விறல்நந்தன் மதலை**—'விறல்' என்ற விசேஷணம் நந்தனுக்குமாகலாம், நந்தன் மதலைக்குமாகலாம். நந்தனுக்கு ஆகில் 1. "கூர்வேற் கொடுந்தொழிலன் நந்தகோபன்" என்றாற்போலே, முன்பெல்லாம் பரமஸாதுவாயிருந்தவர் கண்ணன் பிறந்த பிறகு அவனிடத்துள்ள பரிவினால், ஒரு சிற்றெறும்பு ஊர்ந்தாலும் அதன்மேல் வேல்கொண்டு பாயும்படியாகவுண்டான மிடுக்கு என்க. கண்ணனுக்கு விசேஷணமாகில், தொட்டிற்பருவமே பிடித்துப் பூதநாநிரஸநம், சகடாஸுரபங்கம் முதலாகச் செய்த சிறுச்சேவகங்களுக்கீடான மிடுக்கு என்க. இரண்டாமடியில், **கந்தம்**—ஈரம்; பரிமளம்.

இத்திருப்பதியில் மந்தமான வாத்ய கோஷத்தைச் சோலையிலுள்ள மயில்கள் செவியுற்று, மேகங்கள் முழங்குகின்றனவென்றெண்ணிச் சிறை விரித்தாடுகின்றனவாம்.

**நந்திபணிசெய்த நகர்**—திருவல்லிக்கேணியில் தொண்டையர்கோன் போலவும், பரமேச்சுரவிண்ணகரத்தில் பல்லவன் மல்லையர்கோன் போலவும், அட்டபுயகரத்தில் வயிரமேகன் போலவும், திருநறையூரில் செங்கணான்கோச் சோழன் போலவும் இத்திருப்பதியில் **நந்திவர்ம**னென்னு மோரரசன் சில திருப்பணிகள் செய்தனனாகச் சொல்லிப் போருவர்கள். .... .... .... .... (எ)

**எண்ணில் நினைவெய்தியினியில்லை யிறையென்று முனியாளர் திருவார் ***
**பண்ணில்மலி கீதமொடுபாடி அவராடலொடு கூடவெழிலார் ***
**மண்ணிலிதுபோல நகரில்லையென வானவர்கள்தாம் மலர்கள்தூய் ***
**நண்ணி யுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே!.** (அ)

| | |
|---|---|
| எண்ணில் | ஆராயுமளவில் |
| நினைவு எய்தி இறை | தியானத்திற்கு இலக்காகக் கூடிய ஸ்வாமி |
| இனி இல்லை என்று | இவனைக்காட்டிலும் வேறொருவனில்லை யென்று (நிச்சயித்து) |
| முனியாளர் | மஹாமுனிகள் |
| திரு ஆர் பண்ணில் மலி | அழகுமிக்க இசையினால் நிறைந்த |
| கீதமொடு பாடி | பாடல்களோடு கூட ஸ்துதிகள் செய்ய, |
| அவர் ஆடலொடு கூட | அந்த முனிவர் (தங்கள் பாட்டுக்குச் சேரத் தாங்களே செய்கின்ற) நர்த்தனங்களுக்குத் தகுதியாக, |
| வானவர்கள் தாம் | தேவர்கள் |
| எழில் ஆர் மண்ணில் | ‘சிறந்த இப்பூலோகத்தில் |
| இது போலும் நகர் இல்லை என | இத்திருப்பதியைப் போன்ற நகரம் (எங்கும்) இல்லை’ என்று கொண்டாடி |
| மலர்கள் தூய் | புஷ்பங்களைப் பணிமாறி |
| நண்ணி | ஆச்ரயித்து |
| உறைகின்ற | நித்யவாஸமும் செய்யப் பெற்ற |
| நகர் | திவ்யதலமாகிய |

நந்திபுரவிண்ணகரம், மனமே! நண்ணு—.

* * *—ஸநகஸநந்தநாதி மஹர்ஷிகள் ‘இப்பெருமானன்றிப் பரதெய்வம் பிறிதொன்றுமில்லை’ என்று துணிந்து * பண்ணார் பாடலின் கவிகளைச் சொல்லிப் பாடி ஆடுகின்றனராம்; அவர்களோடு கூட வானவர்களும் ‘பூமண்டலத்தில் இதுபோன்ற திவ்யதேசம் வேறொன்றில்லை’ என்று புகழ்ந்துகொண்டு திரண்டு வாழ்கின்றனராம். ஆகவிப்படி முனிவருமமரரும் தொழுதேத்தி இறைஞ்சுமிடமான நந்திபுரவிண்ணகரத்தை மனமே! நண்ணு என்றாராயிற்று.

[நினைவு எய்தி.] ‘எய்தி’ என்பது வினையெச்சமன்று; பெயர்ச்சொல்; எய்து—பகுதி; இ—பெயர்விகுதி. எய்துமவன் என்கை. (நினைப்பாருடைய) நினைவுகளை எய்துமவன்—த்யானத்திற்கு விஷயமாயிருக்குமவன் என்றபடி. இனி ‘எய்தி’ என்றவிதனை வினையெச்சமாகக்கொண்டு முரைக்கலாம்; **எண் இல்**-கணக்கில்லாத [அளவிறந்த], நினைவு—எண்ணங்களை **எய்தி**—அடைந்து, ‘முனியாளர் கீதமொடுபாடி’ என்றதோடு அந்வயம். மஹர்ஷிகள் ‘எம்பெருமானைத் தொழவேணும், துதிக்கவேணும், திருவாராதனம் செய்யவேணும்’ என்றிங்ஙனே பலபல பாரிப்புகள் கொண்டு பாடியாட என்றவாறு. .... (அ)

வங்கமலி பௌவமது மாமுகடினுச்சிபுக, மிக்க பெருநீர் *
அங்கமழியாரவனதாணை தலைசூடுமடியா ரறிதியேல் *
பொங்குபுன லுந்துமணி கங்குலிருள் சீறுமொளி யெங்குமுளதால் *
நங்கள்பெருமானுறையும் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே!. (கூ)

| | |
|---|---|
| மனமே | நெஞ்சமே!, |
| அவனது ஆணை | அப்பெருமானுடைய திருவாணையை |
| தலை சூடும் அடியார் | சிரஸா வஹிக்கின்ற பக்தர்கள், |
| வங்கம் மலி பௌவம் அது | மரக்கலங்கள் நிறைந்த ஸமுத்ரமானது |
| மா முகடின் உச்சி புக | உயர்ந்துள்ள அண்ட பித்தியினுடைய தலையளவுஞ் சென்று வியாபிக்கும்படி |

| | |
|---|---|
| மிக்க | பொங்கிக்கிளர்ந்த |
| பெரு நீர் | (ஊழிப்) பெரு வெள்ளத்திலும் |
| அங்கம் அழியார் | சரீர நாசத்தை அடைய மாட்டார்கள்; |
| அறிதி எல் | (நீ இதை) அறிவாயேல், |
| பொங்கு புனல் உந்தும் மணி | பெருகாநின்ற ஜலமானது தள்ளிக்கொண்டு வருகின்ற நவமணிகளின் |
| கங்குல் இருள் சீறும் ஒளி | இராவிருளைப் போக்குகின்ற பிரகாசமானது |
| எங்கும் உளது | எங்கும் வியாபித்திருக்கப் பெற்றதாய் |
| நங்கள் பெருமான் உறையும் | எம்பெருமான் நித்ய வாஸம் பண்ணுமிடமான |

நந்திபுரவிண்ணகரம், நண்ணு—.

* * *—பகவத்கீதையில் (14—2.) $ ஐ௨ஂஜ௺நஃவாஶ்ரித்ய ஃஃ ஸாய ஃர்௺ஶதா꞉। ஸஹெ்ஷி ெநாபஜாயஜெ ஹூவெநவ்யதிவ = இதம் ஜ்ஞாநமுபாச்ரித்ய மம ஸாதர்ம்ய மாகதாः, ஸர்க்கேபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச" என்றுற்போலே அருளிச்செய்வன முன்னடிகள். நெஞ்சமே! எம்பெருமானுடைய ஆஜ்ஞையாகிய வேதம்முதலிய சாஸ்த்ரங்களைச் சிரமேற்கொண்டு அவற்றின்படியே நடக்குமவர்கள் ஒருகாலும் கெடுதலடையமாட்டார்கள்; ஊழிப்பெரு வெள்ளத்திலும் (மார்க்கண்டேயனைப் போலே) அழியாதிருப்பர்கள் என்பது உனக்குத் தெரியுமாயின் நீயும் அவர்களைப்போலேயாக விரும்பி நந்திபுரவிண்ணகரத்தை நண்ணுவாயாக என்கிறார்.

பிரளயகாலத்தில் கடல்கிளர்ந்து மேலே அண்டபித்தியளவுஞ் சென்று தூக்கினும் அழியமாட்டார்களென்றது—பிறப்பதும் இறப்புதுமாகிற விகாரங்களுக்கு ஆளாகாமல் * பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்து பல்லாண்டேத்தப் பெறுவர் என்றவாறு.

அவனது ஆணை="ஶ்ருதிஃஸ்ம்ருதிஃமமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்ய வர்த்ததே। ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவஃ = ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்ய வர்த்ததே ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவஃ" என்ற பகவத்வாக்யம் இங்கு அறியத்தக்கது. (இதன் பொருள்—வேதங்களும் வேதாங்கங்களும் என்னுடைய ஆணையேயாம்; இவ்வாணையைமீறி நடப்பவன் என்னை த்ரோஹம் பண்ணினவனாவன்; அவன் என்னிடத்தில் பக்தி பண்ணுமவனாயினும் அவைஷ்ணவனே யாவன் என்கை.

[பொங்குபுனல் இத்யாதி.] இத்தலம் நல்ல நீர்வாய்ப்பு அமைந்தது; அந்நீர்ப் பெருக்கில் பலபல மணிகள் கொழிக்கப்பட்டுவரும்; அவற்றின் ஒளி எங்கும்பரவி எப்போதும் பகல்போலவே யிருக்குமாம். "உளதால்" என்றவிடத்து ஆல்—அசை. .... .... .... .... (௯)

நறைசெய்பொழில் மழைதவழும் நந்திபுரவிண்ணகரம் நண்ணியுறையும் *
உறைகொள்புகராழி சுரிசங்கமவை அங்கையுடையானை * ஒளிசேர்
கறைவளரும் வேல்வல்ல கலியனொலிமாலையிவை யைந்துமைந்தும் *
முறையிலிவைபயிலவல வடியவர்கள் கொடுவினைகள் முழுதகலுமே. (௰)

$ மேலே சொல்லப்போகிற ஜ்ஞாநயோகத்தைக் கைப்பற்றி என்னோடு ஸாம்ய மடைந்தவர்கள் ஸ்ருஷ்டியிலும் ஸம்ஹாரத்திலுமகப்பட்டு வருந்தமாட்டார்களென்று பகவானுடைய வாக்கியம்.

| | |
|---|---|
| நறை செய் பொழில்மழை தவழும் | தேன்மிக்க சோலைகளில் மேகங்கள் வந்து சேரப்பெற்ற |
| நந்திபுர விண்ணகரம் | நந்திபுரவிண்ணகர மென்னுந்திருப்பதியை |
| நண்ணி | அடைந்து |
| உறையும் | அங்கே நித்யவாஸம் பண்ணுமிடத்து |
| உறை கொள் புகர் ஆழி | உறையிலிடப்பட்டுத் தேஜஸ்ஸு மிகுந்த திருவாழியையும் |
| சுரி சங்கம் | வலம்புரிச் சங்கத்தையும் |
| அவை | மற்றுமுள்ள திவ்யாயுதங்களையும் |
| அம் கை உடையானை | அழகிய திருக்கையி லுடையனான எம் பெருமானைக் குறித்து, |
| கறை வளரும் | ரக்தக்கறை மிக்கிருப்பதும் |
| ஒளி சேர் | ஒளிபொருந்தியதுமான |
| வேல் | வேற்படையை |
| வல்ல | ஆளவல்ல |
| கலியன் ஒலி | திருமங்கையாழ்வார் அருளிச்செய்த |
| இவை மாலை | இத்திவ்யப்ரபந்தத்தினுள் |
| இவை ஐந்தும் ஐந்தும் | இப்பத்துப் பாசுரங்களையும் |
| முறையில் | க்ரமப்படியே |
| பயில வல | அதிகரிக்கவல்ல |
| அடியவர்கள் | பக்தர்களுடைய |
| கொடு வினைகள் முழுது | பாவங்களெல்லாம் |
| அகலும் | நீங்கியொழியும். |

* * *—தேன்மிக்க சோலைகளில் மேகங்கள் வந்து உலாவப்பெற்ற நந்திபுர விண்ணகரில் நித்யவாஸம் செய்தருள்பவனான நாதன் விஷயமாகத் திருமங்கையாழ்வாரருளிச்செய்த இத்திருமொழியை முறைவழுவாது ஓதவல்ல அடியவர்களின் பாவங்களெல்லாம் ஒழிந்துபோமென்று இத்திருமொழி கற்றார்க்குப் பயனருளிச் செய்து தலைக்கட்டினாராயிற்று.

"உறைகொள் புகராழி" என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்யும் ஸ்ரீஸூக்தி காண்மின்:—"விரோதி நிரஸநத்துக்குத் திருமங்கையாழ்வார் கையில் வேலுண்டானபின்பு திருவாழி உறையிட்டிருக்குங்காண்" என்று. கறைவளரும் வேல்வல்லவனான கலியனே விரோதிகளை வென்று உலகத்தை யாள்கின்றமையால் எம்பெருமானுடைய திருவாழிப் படைக்குக் காரியமொன்றுமில்லையாக, உறையிலிட வேண்டிற்றாயிற்றென்க. ஆழ்வாருடைய வேல் அப்படி உறையில் கிடக்கமுடியாது; சத்ருநிரஸநம்பண்ணின கறை கழுவுதற்கும் அவகாசமின்றியே வியாபரிக்குமாம். .... .... .... (௧௦)

**அடிவரவு:**—தீது உய்யும் உம்பர் பிறை மூள தம்பியொடு தந்தை எண்ணில் வங்கம் நறைசெய் வண்டு.

**பத்தாந்திருமொழி உரை முற்றிற்று.**

ஜீயர் திருவடிகளே சரணம்.

**பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்**
**அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிச்செய்த**
**திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்**
**பெரிய திருமொழி ஐந்தாம்பத்து உரை**
**முற்றுப்பெற்றது.**

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

பெரிய திருமொழியின் 3, 4, 5 பத்துக்களில்

ஆழ்வார் அநுஸந்தித்தருளின

# இதிஹாஸ புராண கதைகளின் அடைவும். அக்கதைகள் அமைந்த பாசுரங்களின் தலைப்பும்.

| | [பாசுரங்களின் தலைப்புக் குறிப்பு.] |
|---|---|
| 1. திருமால் மீனாய்த் திருவவதரித்தது விவரணப்பக்கம் 351. | கெண்டையுங்குறளும். ஏனமீனாமையோடு. |
| 2. அன்னமாய்த் திருவவதரித்தது. வி—ப. 693. | கெண்டையுங்குறளும். துன்னிமண்ணும் விண்ணாடும். முன்னிவ்வேழுலகு. மன்னுமாநிலனும். |
| 3. ஆமையாய்த் திருவவதரித்தது. வி—ப. 650. | பொங்குநீண்முடி. ஏனமீனாமையோடு. |
| 4. கடல்கடைந்து அமுதங்கொடுத்தது. வி—ப. 694. | சலங்கொண்ட விரணியனது. வென்றிமிகுநரகனுரம். மாயிருங்குன்றமொன்று. |
| 5. பன்றியாகிப் பாரகங் கீண்டது. வி—ப. 366. | இருந்தண்மாநில மேனமதாய். வெம்புஞ்சினத்துப் புனக்கேழல். வையணைந்தநுதிக்கோட்டு. சிலம்பினிடைச்சிறுபரல்போல். கெண்டையுங்குறளும் புள்ளும். மண்ணிடந்தேனமாகி. வாராகமதாகி. பண்டு முனேனமாகி. மானவேலொண்கண். ஏனமீனாமையோடு. ஏனாகியுலகிடந்து. |
| 6. நரசிங்கவுருக் கொண்டதும் இரணிய னகலம் பிளந்ததும். வி—ப. 42. | மாறுகொண்டுடன்று. பொங்கியமரிலொருகால். பஞ்சிய மெல்லடிப்பின்னை. சலங்கொண்ட விரணியனது. திண்ணியதோரரியுருவாய். ஓடாதவாளரியின். உளையவொண்டிறல். கெண்டையுங் குறளும். முடியுடையமரர்க்கு. ஏனமீனாமையோடு. வளர்ந்தவனைத் தடங்கடலுள். எங்ஙனேயுய்வர். வக்கரன்வாய் முன்கீண்ட. |
| 7. மாவலிபக்கல் மண்ணிரந்தளந்தது. வி—ப. 407. | ஆங்கு மாவலி வேள்வியில். அருமாநிலமன்றளப்பான். ஒருகுறளாயிருநிலம். வாளாயகண்பனிப்ப. கொண்டரவத்திரையுலவு. கண்டவர்தம் மனம்மகிழ. அங்கையாலடிமூன்று. வசையறுகுறளாய். பொங்கிலங்கு புரிநூலும். மண்ணிடந்தேனமாகி. பேசுகின்றதிதுவே. ஆய்ச்சியரழைப்ப. ஒள்ளிய கருமஞ் செய்வன். கள்ளக்குறளாய். பண்டிவ்வையமளப்பான். வளர்ந்தவனைத் தடங்கடலுள். சிந்தனையைத்தவநெறியை. |

| | |
|---|---|
| 8. பரசுராமாவதாரம். வி—ப. 384. | கோமங்கலங்கக்கடல். தெவ்வாய மறமன்னர். வென்றிமாமழுவேந்தி. ஆயிரங்குன்றம் சென்று |
| 9. (கார்த்த வீரியனைக் கொன்றொழித்தது.) வி—ப. 697. | ஆயிரங்குன்றஞ்சென்று. |
| 10. இராமபிரான் வில்லை முறித்தது. வி—ப. 375. | விரைகமழ்ந்த மென்கருங்குழல். வாராருமிளங்கொங்கை மைதிலியை. |
| 11. இராமபிரான் வநவாஸஞ் சென்றது. | கூனுலாவிய மடந்தைதன். தம்பியொடு தாமொருவர். |
| 12. குஹப்பெருமாளுக்கு அருள்செய்தது. வி—ப. 704. | ஏழையேதலன் கீழ்மகன். |
| 13. விராதனைக்கொன்றது. வி—ப.422. | பைங்கண் விறல்செம்முகத்து. |
| 14. சூர்ப்பணகையை அங்கபங்கஞ்செய்தது. வி—ப. 464. | அஞ்சுவன் வெஞ்சொல். கலையிலங்குமகலல்குலரக்கர்குலக். கருமகளிலங்கையாட்டி. |
| 15. கவந்தனைக் கொன்றது. வி—ப. 421. | பைங்கண்விறல் |
| 16. மராமரமேழெய்தது. வி—ப. 336. | நீடுபன்மலர். நிலையாளா நின்வணங்க. கலையா ளாவகலல்குல். |
| 17. வாலியைக்கொன்றது. வி—ப. 419. | பைங்கண்விறல். உருத்தெழு வாலிமார்வில். |
| 18. கடலில் அணைகட்டினது. வி—ப. 387. | நெய்வாயழலம்பு. மல்லைமாமுந்நீர். கல்லால் கடலை. ஆநிரைமேய்த்து. சுரிகுழல்கனிவாய். விலங்கலால்கடல். |
| 19. இராவணனை முடித்தது வி—ப. 527. | மின்னில்நுண்ணிடை. பொருவில் வலம்புரி. மின்னனையநுண் மருங்குல். வாணெடுங்கண்மலர். கம்பமா கடலடைத்து. தான்போலுமென்று. முனைமுகத்தரக்கன். மேவாவரக்கர்தென். ஆறினோடொரு. வம்புலாங்கூந்தல். விலங்கலால்கடல். |
| 20. அனுமனோட்டுண்டது. வி—ப. 709. | வாதமாமகன்மற்கடம். |
| 21. கிருஷ்ணனாய்த் திருவவதரித்தது. வி—ப. 749. | தந்தை மனமுந்துயர். |
| 22. பேய்முலையுண்டது. வி—ப. 396. | பேய்மகள் கொங்கை. இழையாடு கொங்கை. பண்ணேர்மொழி. பெண்மைமிகுவடிவு. தீமனத்தான் கஞ்சனது. வஞ்சனையால் வந்தவள்தன். பொற்றொடித் தோள்மட. கவ்வைவாளெயிற்று. கஞ்சன்விட்ட வெஞ்சினத்த. ஆய்ச்சியரழைப்ப. கலையுடுத்தவசலல்குல். தாய்வாயில் சொற்கேளான். பேயினார் முலையூண். |

| | |
|---|---|
| 23. சகடு முறித்தது.<br>வி—ப. 532. | பெண்மைமிகுவடிவுகொடு. சாடுபோய் விழத்தாள்.<br>கஞ்சனெஞ்சும். வளர்ந்தவனைத்தடங். |
| 24. மருதமரம் முறித்தது.<br>வி—ப. 394. | வாடமருதிடைபோகி. பண்டிவன் வெண்ணெய்.<br>பெண்மை மிகுவடிவு. மாத்தொழில் மடங்க.<br>ஆய்ச்சியரழைப்ப. மேவாவரக்கர். |
| 25. காளியனுச்சியில்<br>நட்டம் பாய்ந்தது.<br>வி—ப. 398. | வளைக்கை நெடுங்கண். தளைக்கட்டவிழ்தாமரை.<br>பல்லவந்திகழ். படவரவுச்சிதன்மேல்.<br>கடுவிடமுடைய. கற்றுமறித்துக்காளியன்தன். |
| 26. கேசியைக்கொன்றது.<br>வி—ப. 389. | மாவாயினங்கம். வாடமருதிடைபோகி.<br>தெவ்வாய மறமன்னர். உளையவொண்டிறல்.<br>மாத்தொழில் மடங்க. மேவாவரக்கர்தென். |
| 27. தேநுகாஸுரவதம்.<br>வி—ப. 512. | தீமனத்தான் கஞ்சனது. |
| 28. கொக்கின் வாயைக்<br>கிழித்தெறிந்தது.<br>வி—ப. 131. | தாங்கருஞ்சினத்து. |
| 29. விளங்கனி வீழ்த்தது.<br>வி—ப. 481. | இழையாடு கொங்கை. விளங்கனியை யிளங்கன்று.<br>கன்றதனால் விளவெறிந்து. |
| 30. குருந்தொசித்தது.<br>வி—ப. 481. | இழையாடு கொங்கை. தாங்கருஞ்சினத்து. |
| 31. குன்றெடுத்துக்<br>கோநிரை காத்தது.<br>வி—ப. 375. | விரைகமழ்ந்தமென். மாவாயினங்கம். வாடமருதிடை<br>போகி. எய்யச்சிதைந்தது. வாளாயகண்பனிப்ப.<br>கன்றதனால் விளவெறிந்து. அண்டரானவர் வானவர்.<br>தூம்புடைப்பனைக்கை. குன்றால் குளிர்மாரி.<br>குடையாவிலங்கல். கைம்மான மழகளிற்றை. |
| 32. ஆய்ச்சியரது துகில்<br>களைக்கொண்டது.<br>வி—ப. 487. | துளையார்கருமென். |
| 33. குடக்கூத்தாடினது.<br>வி—ப. 260. | குயிலாலும் வளர்பொழில். கன்றதனால் விளவெறிந்து.<br>தாதாடுவனமாலை. தீதறுநிலத்தொடு. |
| 34. ஏழ்விடை செற்றது.<br>வி—ப. 40. | ஆங்கு மாவலிவேள்வியில். பருவக் கருமுகிலொத்து.<br>பஞ்சிய மெல்லடிப்பின்னை. விடையோடவென்றாய்ச்சி.<br>சென்று சினவிடையேழும். வாராரும்<br>முலைமடவாள். மாத்தொழில் மடங்க.<br>தாங்கருஞ்சினத்து. மின்னினன்னநுண்மருங்குல்.<br>செறுந்திண்டிமில். அம்பொனுருலகமேழும். |
| 35. குவலயாபீட யானை<br>யைக்கொன்றது.<br>வி—ப. 402 | ஆவரிவை செய்தறிவார். தெவ்வாய மறமன்னர்.<br>தாராயதண்டுளவ. உம்பருமிவ் வேழுலகும்.<br>கும்பமிகு மதயானை. பருங்கையானையின்.<br>தூம்புடைப்பனைக்கை. தாங்கருஞ்சினத்து.<br>வெஞ்சினக்களிறும். மூத்தவர்க்கரசுவேண்டி.<br>கானார் கரிகொம்பது. கவளயானை கொம்பு.<br>கஞ்சன் விட்டவெஞ். |
| 36. மல்லர்களை மடித்தது.<br>வி—ப. 395. | வாடமருதிடைபோகி. பருங்கை யானையின்.<br>வெஞ்சினக்களிறும். மல்லரை யட்டுமாள. மேவாவரக்<br>கர் தென்னிலங்கை. கஞ்சனெஞ்சுங்கடுமல்லரும். |

| | |
|---|---|
| 37. கஞ்சனது வில்விழவைச் செற்றது. | வெஞ்சினக்களிறும். |
| 38. கஞ்சனைக்கொன்றது. | உம்பருமிவ்வேழுலகும். வஞ்சனையால் வந்தவள்தன். பருங்கையானையின். வெஞ்சினக்களிறும். மல்லரை யட்டுமாள. கறவைமுன்காத்து. கஞ்சனெஞ்சும். தஞ்சினத்தைத்தவிர்த்து. |
| 39. வாணன் திண்டோள் துணித்தது. வி—ப. 415 | வையணைந்தநுதிக்கோட்டு. சாடுபோய்விழத்தாள். அன்றிய வாணனாயிரம். குடையாவிலங்கல்கொண்டு. |
| 40. சிவனை ஓடச்செய்தது. வி—ப. 686. | தஞ்சினத்தைத்தவிர்த்து. |
| 41. நரகாசுரனை நாசஞ் செய்தது. வி—ப. 500. | ஆருதசினத்தின்மிகு. வென்றிமிகு நரகனுரம். |
| 42. ஸத்யபாமைக்காகக் கற்பகத்தரு கொணர்ந்தது. வி—ப. 425. | பட்டரவேரகலல்குல். ஏவிளங்கன்னிக்காகி. |
| 43. வக்கரன்வாய் கீண்டது. வி—ப. 736. | வக்கரன்வாய் முன்கீண்ட. |
| 44. பாண்டவர்க்குத் தூதனானது. | ஏதவன் தொல்பிறப்பு. மூத்தவர்க்கரசுவேண்டி. கறையார் நெடுவேல். தாந்தம் பெருமை. தாதாடுவனமாலை. |
| 45. பார்த்தன் தேரில் பாகனாயிருந்தது. | வேல்கொள் கைத்தலத்து. பாரினையுண்டு. வாராளுமிளங் கொங்கைவண்ணம். |
| 46. ஆழியால் இரவியை மறைத்தது. வி—ப. 700. | ஊழியாயோமத்து. |
| 47. ஸாந்தீபிநி புத்திரனை மீட்டுக் கொடுத்தது. வி—ப. 723. | ஓதுவாய்மையும். |
| 48. வைதிகன் பிள்ளைகளைக் கொணர்ந்து தந்தது. வி—ப. 725. | வேதவாய்மொழி யந்தணன். |
| 49. மார்க்கண்டேயனுக்கு நீண்ட வாழ்ச்சிதந்தது. வி—ப. 720. | மன்னுநான்மறை மாமுனி. |
| 50. கஜேந்திரனைக் காத்தருளியது. வி—ப. 711. | முதலைத் தனிமாமுரண். கொலைப்புண்டலை. தாவளந்துலகமுற்றும். கள்ளக்குறளாய். ஊழியாயோமத்துச்சி. கடிகொள் பூம்பொழில். |

| | |
|---|---|
| 51. உரோமசனால் நான்முகன் செருக்கை நீக்கியது. வி—ப. 411 | நான்முகனுள் மிகைத்தருக்கை. |
| 52. கோவிந்தஸ்வாமிக்குக் கருத்தறிந்து காரியஞ்செய்தது. வி—ப. 716 | மாகமாநிலம் முழுதும். |
| 53. ஸுமுகனுக்கு அபய மளித்தது. வி—ப. 713 | நஞ்சுசோர்வதோர். |
| 54. அரனது சாபத்தை அகற்றினது. வி—ப. 413 | நான்முகனுள் மிகைத்தருக்கை. அண்டமுமிவ் வுலகடலும். வாளையார் தடங்கண். கறையார் நெடுவேல். ஒருவனையுந்திப் பூமேல். ஊனமர் தலையொன்றேந்தி. |
| 55. நரநாராயணனாய் அவதரித்தது. | நந்தாவிளக்கே. |
| 56. சிவன் முதலியோர்க் குத் திருமேனியில் கூறு கொடுத்தது. வி—ப. 427 | பிறைதங்கு சடையானை. ஆருதசினத்தின் மிகு. |
| 57. தொண்டை மன்னவ னுக் கருள்செய்தது. வி—ப. 727 | துளங்குநீண் முடியரசர்தம். |
| 58. ஹயக்ரீவாவதாரம் செய்தது. வி—ப. 646 | கெண்டையுங் குறளும். வசையில் நான்மறை. |
| 59. உலகமுண்டதும் ஆலிலைத்துயின்றதும். | உம்பருலகேழு கடல். உய்யும் வகையுண்டு. அண்டமுமிவ்வுலகடல். உம்பருமிவ்வேழுலகும். ஏழுலகுந்தாழ்வரையும். ஞாலமுற்றுமுண்டுமிழ். ஆய்ச்சியராழைப்ப. பாரினையுண்டுபாரினை. கருந்தண்கடலும். வையமுண்டாலிலை. வையமேழுமுண்டாலிலை. போரானைக்குறுங்குடி. தஞ்சினத்தைத் தவிர்த்து. பேயினார் முலையூண். வங்கமார்கடல்களேழும். |
| 60. சிவபிரான் தக்கன் வேள்வியைத்தகர்த்தது. வி—ப. 639 | தக்கன்வேள்வி தகர்த்த தலைவன். |

கதைக் குறிப்பு முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

## பெரியதிருமொழி—மூன்று, நான்கு, ஐந்தாம்பத்துக்களின்

# செய்யுளகராதி.

செய்யுளகராதி முற்றிற்று.



PRINTED AT THE MODEL PRESS, RATTAN BAZAAR ROAD, P.T., MADRAS.